The name of Śrī Pūrṇāditya, incised on a pillar in the temple of Rājīvalōchana at Rājim, is in a highly ornamental type of letters (C. *ASR*, vol. XVII, plate X). The letters are so obscured by the peculiar decorative pattern added that it is rather difficult to make them out; but they can be easily made out by comparing them with the same name in plain letters given with it by Cunningham.

In the Kurgod inscription of the Western Chāḷukya ruler Sōmēś-vara IV, the *anusvāras* are represented by stars arranged above the letters and the letters are shaped like animals and birds. Thus one of them is shaped like a swan and another like a peacock (*IA*, vol. XV, p. 364).

The so called shell characters from Central India offer another variety of ornamental type producing amusing letter-shapes, some-times presenting great difficulty in decipherment (*JBORS*, vol. XX, p. 10-12). Similar shell characters occur even in distant Java (*EI*, vol. XXII).

*Pagination*: Numbering of pages was necessary to ensure the sequence of the contents of a document, where it contained more than one sheet. There was no necessity to number in the case of lithic records and single-plate documents. The practice was to number only the sheets (*pattra*) and not the pages as is obtaining now. This was followed not only in the case of the palm-leaf manuscripts, but also of copper-plates, though not quite regularly in the case of the latter. In the South, the usual practice was to place the number in the first page of the sheet on the left margin or very near the hole through which the ring or the string holding the leaves together passes. But in some of the north Indian manuscripts the pagination is found on the second page (*śāṅka-prishṭha*). Occasionally, in some of the stone inscriptions we find the lines of the record also are numbered.

*Language*: Inscriptions also form an important link in the study of the growth of the various languages in this country. We have already mentioned that many of the composers of inscriptions were poets of great merit. The Aihoḷe inscription of Pulikēśin II was composed by Ravikīrti, "who by his poetic skill has attained to the fame of Kālidāsa and Bhāravi." (*EI*, vol. VI). Many of the inscriptions, sometimes, contain quotations from classical literature. An inscription of the Western Chāḷukya monarch Vikramāditya VI at Huli contains the opening verse of the *Raghuvamśa* of Kālidāsa as its invocation. (*EI*, vol. XVIII). Similarly the *maṅgalaślōka* of the *Abhijñāna-Śākuntalam* occurs as an invocatory verse in an inscrip-tion from Rājaputana (*Ibid*, vol. XI, p. 65).

An inscription in Tamiḻ from Śrīvilliputtūr in the Rāmanātha-puram District (No. 138 of this collection) of the time of the Bāṇa chief Uṟaṅgāvillidāsan contains, as already mentioned, extracts from the *Nālāyira-p-prabandham.* Another copper-plate grant from Tiru-maḻuvāḍi in the Tiruchirapalli District dated Śaka 1662 contains similarly extracts from the *Tēvāram* (No. 693 of this collection).

We have already mentioned that the inscriptions of a locality are generally found in the local language or in Sanskrit or in both the languages. Occasionally we have records in other foreign languages also. From Śrīraṅgam has been obtained an inscription (No. 204 of 1942) in the Kannaḍa language and script dated the 29th regnal year Kulōttuṅga Chōḷa I registering the gift of two lamps by an officer of the Western Chāḷukya king Vikramāditya VI, the *Kannaḍa-Sandhivigrahin* and *Daṇḍanāyaka,* who seems to have constructed of brick and mortar the shrine of Vishvaksēna in the temple. After the advent of rule of the Vijayanagara empire this practice seems to have increased and inscriptions in the Telugu and Kannaḍa languages seem to have increased in number. We have already referred to the Mahratti inscription of Mahāraja Śarabhōji in the Brihadīśvara temple at Tañjāvūr. Such instances show the languages of the donors or authors of these records as also the high position they occupied.

Sometimes inscriptions in one language are found engraved in quite a different script. An inscription of the time of the Vijaya-nagara ruler Krishṇadēvarāya from Tirupparuttikkuṉṟam near Kāñchīpuram (No 458 of this collection) in the Kannaḍa language is found engraved in the Tamiḻ script. Another record of the time of Rājēndra Chōḻa I mentioning his general Araiyan Rājarājan *alias* Vikrama Chōḷa Śōḻiyavaraiyan (*SII*, vol. IX, No. 300) from Kotta-sīvaram in the Anantapur District in the Tamiḻ language is incised in the Kannaḍa script. At Śrīraṅgam we have a Tamiḻ inscription written in the Nāgari characters. There is also a Telugu record of the Kākatiya king Gaṇapatidēva inscribed in the Grantha characters. Similarly, an epigraph dated in the Kali year 4068 equivalent to 968 A.D. of the Aḷupa king Kundavarma of the Tuḷu country written in the Grantha characters is found engraved on the pedestal of the image of Lōkēśvara in the Mañjunātha temple at Kadiri near Mangalore. (*Ibid*, vol. VII, No. 191). Similar instances are also available in other parts of the country.

When Tamiḻ kings were powerful, we find Tamiḻ records in far distant places and this fact clearly testifies to the influence of the

Tamiḻs in those lands. At Bhuvanēśvara in Orissa, we have a Tamiḻ inscription dated in the twelfth regnal year of Narasimha (IV), the Gajapati ruler of the place. (*JRASB*, 1924. The text given there is very faulty. A revised reading of it was given by me four years ago in the *Amudhasurabhi*).

A Tamiḻ inscription (*JRAS*, 1913 ; *EI*, vol. XVIII) in characters of the tenth century has been recovered even from Siam.

The above study will clearly show how important the inscriptions, whether official or private and whatever may be their contents, are for the reconstruction of our past history in all its phases. But many of them have been irretrievably lost due to vandalism and occasionally due to good and pious intentions. When the Śiva temple at Tiruviḍai-marudūr in the Tañjāvūr District was renovated fifty years ago, all the inscriptions on the outer walls of the temple were lost and only those engraved on the central shrine were copied. Even they have been lost since. A typical case as to how an inscription was damaged, its value not being known, is the inscribed Eran pillar which was transformed into a *Śiva liṅga* by a pious devotee.

An inscription on a stone slab at Pandharpur called *Chōraśi Śilā* has almost disappeared being constantly rubbed away by pilgrims rubbing their back on the slab, supposing that thereby they would be free from the eighty-four lakhs of rebirths. This is a typical instance of how inscriptions are damaged by actions done quite innocently or sometimes made in good faith.

## List of Abbreviations

| | |
|---|---|
| *ABORI* | Annals of the Bhandarkar Oriental Research Institute, Poona |
| *ARSIE* | Annual Report on South Indian Epigraphy |
| *ASIAR* | Archaeological Survey of India, Annual Report |
| *ASSI* | Reports of the Archaeological Survey of Southern India |
| *ASWI* | Reports of the Archaeological Survey of Western India |
| *C. ASR* | Reports of the Archaeological Survey of India, Cunningham's Series |
| *CII* | Corpus Inscriptionum Indicarum |
| *EC* | Epigraphia Carnatica |
| *EI* | Epigraphia Indica |
| *ESIP* | Elements of South Indian Palaeography by Dr. A. C. Burnell, 2nd Edition, 1878 |
| *GI* | Gupta Inscriptions, edited by J. F. Fleet, being vol. III of the *Corpus Inscriptionum Indicarum* |
| *IA* | Indian Antiquary |
| *JASB* | Journal of the Asiatic Society of Bengal |
| *JBBRAS* | Journal of the Bombay Branch of the Royal Asiatic Society |
| *JOR* | Journal of Oriental Research, Madras |
| *JRAS* | Journal of the Royal Asiatic Society, London |
| *JRASB. L* | Journal of the Royal Asiatic Society of Bengal, Letters |
| *MAR* | Mysore Archaeological Survey Reports |
| *PSI* | Inscriptions of the Pudukkottai State |
| *SII* | South Indian Inscriptions |
| *TAS* | Travancore Archaeological Series |

# சரித்திரக் குறிப்புகள்

(முதற் பகுதியின் clxxxviii – ஆம் பக்கத் தொடர்ச்சி)

சோழர்களுடைய சரித்திரம் முதலாம் இராஜராஜ சோழனுடைய ஆட்சிக் காலத்திலிருந்து தெளிவாக இருக்கிறதெனக் கொள்ளலாம். எனினும், இன்னும் நன்கு விளங்காத பகுதி பல இருக்கத்தான் செய்கின்றன.

**முதலாம் இராஜராஜன்**

இந்தத் தொகுப்பிலே முதலாம் இராஜராஜ சோழனுடைய சாசனங்கள் சுமார் பதினைந்து உள்ளன. அவை அவனுடைய ஆட்சியின் இருபத்தேழாம் ஆண்டுவரையில் உள்ள காலத்தைச் சார்ந்தவை.

இம் மன்னனுடைய சாசனங்களில் பெரும்பாலானவை 'திருமகள்போல' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியுடனே காணப்படும். அவ்விதம் மெய்க்கீர்த்தி இல்லாதனவற்றுள் அரசனுடைய பெயர் 'காந்தளூர்ச்சாலைக் கலமறுத்தருளிய இராஜகேசரிவர்மன்' என்றோ 'சாலைக் கலமறுத்தருளிய இராஜகேசரிவர்மன்' என்றோ சுருக்கமான அடைமொழியுடன் காணப்படும். 'திருமகள்போல' என்னும் மெய்க்கீர்த்தி அவனுடைய ஆட்சியின் எட்டாம் ஆண்டிலிருந்தே காணப்படுவதாயினும் 'காந்தளூர்ச் சாலைக் கலமறுத்தருளிய' என்னும் அடைமொழி இம் மன்னனுடைய நான்காம் ஆண்டுச் சாசனங்களிலேயே உள்ளன. இதுவே அவனுடைய ஆட்சியில் கிடைத்த முதல் வெற்றிபோலும். அன்றி, இவன் இந்த நிகழ்ச்சியைத் தன்னுடைய வெற்றிகளுள் முக்கியமானதாகவும் கருதியிருத்தல் வேண்டும்.

இந் நிகழ்ச்சி எதைக் குறிப்பதாகும் என்பதைப்பற்றி ஆசிரியர்களுக்கிடையே பலத்த விவாதம் நடந்திருக்கிறது. ஆரம்பத்திலே இந்தத் தொடர், 'அரசன் காந்தளூரிலே

மணிமண்டபம் ஒன்றை எழுப்பினன்' என்பதைத் தெரிவிப்பதாகக்கொண்டு மொழிபெயர்க்கப்பட்டது. (தென் இந்திய சாசனங்கள், முதல் வால்யூம், பக்கம் 65). அப்பால் இது, 'மன்னன் காந்தளூரிலே ஒரு கலத்தைத் துண்டாக்கினன்' என்ற பொருள்பட மொழிபெயர்க்கப்பட்டது. (ஷை இரண்டாம் வால்யூம், பக்கங்கள் 35, 47). கடைசியாக, இத் தொடர், 'அரசன் காந்தளூர்த் துறைமுகத்துச் சாலையில் கப்பல்(மரக்கலங்)களை அழித்தான்' என்று திருத்தப்பெற்றது. (ஷை பக்கங்கள் 241, 247). இந்தப் பொருளே இப்போது பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டு வருகிறது.

காந்தளூரிலே இருந்த அறச்சாலை, அதாவது போஜனசாலையைப் பற்றியதாகவே இந்தத் தொடரைக் கொள்ள வேண்டுமென்ற மற்றோர் அபிப்பிராயமும் உள்ளது. காந்தளூர் அறச்சாலையில் சோறு அட்டுவதை அரசன் நிறுத்திய செய்தியைக் குறிப்பதாகவே இதைக் கொண்டார் காலஞ்சென்ற ஆராய்ச்சியாளர் து. அ. கோபிநாதராவ் (திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் ஸீரீஸ், இரண்டாம் வால்யூம், பக்கங்கள் 3, 4). கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களோ 'அரசன் காந்தளூர்ச் சோற்றுச்சாலையில் உணவு அளிக்கவேண்டியமுறையை நிர்ணயித்துத் திட்டம் செய்தான்' என்று கூறுவர். (கேரளா ஸோஸைட்டி பேப்பர்கள், இரண்டாம் தொகுதி, பக்கம் 100-க்கு மேல்; காந்தளூர்ச்சாலை என்று அவர் தனியாக வெளியிட்ட சிறு நூலையும் பார்க்க). போஜனசாலையைக் குறிப்பதாகக் கொண்ட இந்தக் கொள்கையை அதீதமான கற்பனை யென்று ஆராய்ச்சியாளர்கள் ஒதுக்கிவிட்டார்கள்.

காந்தளூரிலே சோழமன்னன் மேற்கொண்ட நடவடிக்கை எதுவாக இருப்பினும் அதன் புகழை முதலாம் இராஜராஜ சோழன்மட்டுமே கொண்டான் என்பதில்லை. தொடர்ந்து, அவன் மகன் முதலாம் இராஜேந்திரன், பெயரன் முதலாம் இராஜாதிராஜன், இன்னும் முதலாம் குலோத்துங்க சோழன், பாண்டியர்களிலே ஜடாவர்மன் பராந்தக பாண்டியன் ஆகியவர்களும் இந்தப் புகழைத் தங்களுக்கு ஏற்றிக் கூறிக்கொள்ளுகிறார்கள். புதுச்சேரிக்குப் பக்கத்தில் உள்ள திருவாண்டார்கோயிலிலிருந்து முதலாம் இராஜேந்

திர சோழனுடைய ஆட்சியின் பத்தாம் ஆண்டு கொண்ட கல்வெட்டு ஒன்று கிடைத்திருக்கிறது. (1917-ஆம் ஆண்டின் 363 நெ. சாசனம்). 'திருமன்னிவளர' என்று தொடங்கும் அவனுடைய மெய்க்கீர்த்தியோடு ஆரம்பமாகும் அந்தச் சாசனத்தில் அரசன் பெயர் தண்டாற் சாலைக் கலமறுத்த கோப் பரகேசரி வர்மன் என்று குறிக்கப்பெற்றிருக்கிறது. 'பாரது நிகழப் பாண்டியமண்டலத்து மதுரையில் மாளிகை எடுப் பித்து, தன் மகன் சோழபாண்டியன் என்றபிஷேகம் செய்து' என்று காணப்படுவதைத் தொடர்ந்து சாலைக் கலமறுத்த செய்தி காணப்படுகிறது. (சாசன இலாக்காவின்1918-ஆம் ஆண்டு அறிக்கை, பக்கம் 144; க. அ. நீலகண்ட சாஸ்திரிகள் எழுதிய சோழர்கள், முதல் வால்யூம், பக்கம் 552).

'திங்களேர் தரு' என்று தொடங்கும் முதலாம் இராஜாதி ராஜனுடைய மெய்க்கீர்த்தியில் மன்னன் 'வேலைகெழு காந்த ளூர்ச் சாலைக் கலமறுத்த' செய்தியும் இடம்பெற்றிருக்கிறது. (தெ. இ. சாசனங்கள், மூன்றாம் வால்யூம், பக்கம். 56).

"விக்கிரமன்சோழன் உலா"விலே முதற் குலோத்துங்க னைப்பற்றிக் கூறுமிடத்தில்,

> "—மேவலர்தம்
> சேலைத் துரந்து சிலையைத் தடிந்திருகால்
> சாலைக் கலமறுத்த தண்டினான்"
>
> (கண்ணி 24)

என்று கூறப்பட்டுள்ளது. இதே செய்தி கலிங்கத்துப்பரணியில் கலிங்க மன்னனான அனந்தவர்மனிடம் அவனுடைய மந்திரி ஒருவன் கூறுவதாக,

> 'வேலை கொண்ட விழிஞ மழித்ததும்
> சாலை கொண்டதும் தண்டுகொண் டல்லவோ'
>
> (தாழிசை 370)

என்று முதற் குலோத்துங்க சோழனுடைய பெருமை எடுத் துரைக்குமிடத்தில் காண்கிறது.

'திருவளரச் செயம்வளர' என்று தொடங்கும் மெய்க் கீர்த்தியையுடைய பாண்டிய மன்னனான ஜடாவர்மன் பாரந்தக பாண்டியனுடைய கன்னியாகுமரிக் கல்வெட்டில் அவன் 'கன்னிப்போர் செய்து காந்தளூர்ச்சாலைக் கலமறுத்த' செய்தியும் குறிக்கப்பட்டுள்ளது. (திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் ஸீரீஸ், முதல் வால்யூம், பக்கம் 18 முதல்). அவன் விக்கிரம சோழனுடைய ஆட்சிக் காலத்தில் சோழர்களுடைய ஆட்சிக்கு உட்பட்டவனாக அரசு புரிந்தான் என்று கருதப்படுகிறது. ஆதலின், அவன் கொண்ட வெற்றியும் பேரரசர்களான சோழர்களுடைய சார்பில் கொண்டதாகவே இருத்தல் வேண்டும்.

மேலே எடுத்துக் காட்டியவற்றைக் கவனிக்கும்போது காந்தளூர்ச் சாலைக் கலமறுத்த சம்பவம் எதைக் குறிப்பதாக இருப்பினும், சுமார் ஒன்றரை நூற்றாண்டுக் காலத்துக்கு ஒருவர் பின் ஒருவராகச் சோழ மன்னர்கள் பலராலும் மேற்கொள்ளப்பட்ட தென்பதும், ஒவ்வொரு தடவையும் படைவலிகொண்டே அவர்கள் அதைச் செய்து முடிக்க வேண்டியிருந்தது என்பதும் விளங்கும்.

தஞ்சைச் சோழ மன்னர்களின் ஆட்சி ஆரம்பமாவதற்கு முற்பட்ட காலத்திலிருந்தே காந்தளூர் ஒரு முக்கியமான இடமாக விளங்கி வந்திருக்கிறது. கி. பி. எட்டாம் நூற்றாண்டில் பல்லவ அரசனான நந்திவர்மன் பல்லவமல்லனுக்குச் சமகாலத்தவனாகவும் (அவனுக்குக் கீழ்ப்பட்ட சிற்றரசனாகவும்) விளங்கிய முத்தரைய மன்னன் சுவரன் மாறன் என்பான் காந்தளூரில் நடத்திய போரில் பெருவெற்றி கொண்டான் என்பதை,

> " செருவ[ல ரா]னதனாற் சிந்தியார் போலும்
> மருவலராய் வாண்மாறன் சீறக்—கருவளை
> கண்டோற்ற வண்டரவங் கார்தோற்றுங் காந்தளூர்
> மண்தோற்ற வேந்தர் மனம் "

என்று அவனுடைய செந்தலைக் கல்வெட்டுப் பாடல் கூறுகிறது. (எபிகிராபியா இந்திகா, பதின்மூன்றாம் வால்யூம், பக்கம் 146.)

'காந்தளூர்ச் சாலைக் கலமறுத்தருளி' என்ற சிறுதொடரில் காந்தளூர், சாலை, கலம், அறுத்தல் ஆகிய நான்கு சொற்கள் உள்ளன. எனினும், காந்தளூர் என்ற இடத்தைக் குறிக்கும் முதற் சொல்லைத் தவிர மற்ற மூன்றில் ஒவ்வொன்றும் தனித்தனியே ஒன்றுக்கு மேற்பட்ட பொருளைக் கொடுக்க வல்லது. ஆயினும் ஒரு விஷயத்தை நாம் நினைவில் கொள்ள வேண்டும். அந்தக் காலத்துச் சாசனங்களில், 'சாலை' என்பதும் 'கலம்' என்பதும் முறையே உணவுச் சாலையையும் உண் கலத்தையுமே குறிப்பனவாகக் காணப்படுகின்றன; 'துறைமுகப் பெருவழி' என்ற பொருளிலே சாலை என்னும் சொல் ஆளப்பட்டிருப்பதாக வேறு எந்த இடத்திலும் காணவில்லை. காந்தளூர் என்பது இப்போது திருவனந்தபுரம் என்று வழங்கப்பெறும் நகரத்தின் ஒரு பகுதியான 'வலிய சாலை'யே ஆகும் என்று ஆராய்ச்சியாளர்கள் நிர்ணயித்து முடிவுகட்டி யிருக்கிறார்கள்.

இந்தச் சிறுதொடர் குறிக்கும் சம்பவம் எதுவாக இருக்கலாம் என்பதை யறிய வேறு ஒரு சாசனம் உதவிபுரிவதாக உள்ளது. கி. பி. 868-ஆம் ஆண்டில் வேணாட்டு ஆய்குல வேந்தனான கருநந்தடக்கன் என்பான் காந்தளூரில் உள்ள சாலையை மாதிரியாகக் கொண்டு அதைப் பின்பற்றிப் பார்த்திவசேகரபுரம் என்னும் இடத்தில் ஒரு சாலை நிறுவியதைத் தெரிவிக்கும் செப்பேட்டுச் சாசனமே அது. (ஹுஸூர் ஆபீஸ்ச் சேப்பேடுகள், திருவா. ஆர்க்கி. ஸீரீஸ், முதல் வால்யூம், பக்கங்கள் 1-14). அந்தச் சாசனம் பொறிக்கப்பட்டிருந்த செப்பேடுகளிலே நடுநடுவே சில ஏடுகள் காணாமல்போய் இப்போது ஐந்து செப்பேடுகளே கிடைத்துள்ளன. சாசனம் பூர்த்தியாகக் கிடைக்காமையாலும், சாசன வாசகம் பரிபாஷைச் சொற்கள் நிரம்பிக் கடினமான நடையில் அமைந்திருப்பதாலும், அதன் முக்கியத்துவத்தை இதுகாறும் சரிவர மதிப்பிட முடியவில்லை.

காந்தளூரில் உள்ள சாலையை மாதிரியாகக்கொண்டு அதைப் பின்பற்றிப் பார்த்திவசேகரபுரத்தில் ஒரு சாலை அமைக்கப்பட்டது என்று கூறப்பட்டிருப்பதிலிருந்தே காந்த

ளூரில் ஒரு சாலை இருந்ததென்பதும், அந்தக் காலத்தில் அது மிகவும் பிரசித்திபெற்று விளங்கியது என்பதும், அதை இலட்சியமாகக்கொண்டு வேறு ஊர்களிலும் சாலைகளை அமைத்து வந்தார்கள் என்பதும் பெறப்படும். இன்னும், காந்தளூரில் இருந்த சாலையைப்பற்றிய விவரங்கள் நமக்குக் கிடைக்காவிட்டாலும், அதைப்போல் அமைக்கப்பெற்ற வேறு ஒரு சாலையைப் பற்றிய விவரங்கள் நமக்குக் கிடைத்துள்ளனவென்பதும் முக்கியமானது.

பார்த்திவசேகரபுரம் சாசனத்தில் பின்வரும் விஷயம் காணப்படுகிறது: அரசன் சிறிது சிறிதாக மின்சிறை என்னும் ஊர்ச் சபையாரிடமிருந்து வேறு நிலங்களைக் கொடுத்து விளை நிலங்களைப் பரிவர்த்தனை மூலம் பெற்று அவற்றின் எல்லைகளை நிர்ணயித்துப் பார்த்திவசேகரபுரம் என்ற பெயருடன் ஓர் ஊரை நிர்மாணித்தான். அதிலே விஷ்ணு பட்டாரகருக்கு ஒரு கோயிலை எழுப்பினான். அப்பால் 'காந்தளூர் மர்யாதியால் தொண்ணூற்று ஐவர் சட்டர்க்கு ஒரு சாலையுஞ் செய்தான் கோக் கருநந்தடக்கன்.' அவ்விதம் அவன் ஏற்படுத்திய சாலையைப்பற்றி அந்தச் சாசனத்திலே காணப்பெறும் விவரங்களே நமக்கு முக்கியமானவை.

"இச்சாலைக்குப் பெய்த கலத்தில் பவிழிய சரணத்தார் உடைய கலம் நாற்பத்தைந்து; தயித்திரியச் சரணத்தார் உடைய கலம் முப்பத்தாறு; தலவகார சரணத்தார் உடைய கலம் பதினன்கு. இனி வருங்கல[ம்*] மூன்று சரணத்தார்க்கும் ஒப்பது." சாலைக்கு நிர்ணயிக்கப் பெற்ற தொண்ணூற்றைந்து சட்டர் ஸ்தானங்களில் எந்த எந்தச் சரணத்தாருக்கு எத்தனை எத்தனை அளிக்கப்பெறவேண்டும் என்பதைக் கூறுகிறது.

"ப்ரவேசக்கஞ் செய்யும் பரிசு. 'வையாகரண மீமாயப் புரோஹிதப் புண்பாய்ப் புவினும் இலன். த்ரைராஜ்ய வ்யவஹாரத்துக்கு வேண்டும் ஒத்துடையன். இது ஸத்யம்' என்று ஐவர் சட்டரைக் கொண்டு பஞ்சக்கஞ் செய்தான் புகவு பெறுவான்.

"வாரம் ஓதும் பரிசு. சூத்திரத்திலுஞ் சூத்திராரணத்திலுந் துருச்சொல்லி ஒன்பது புகவினில் இரண்டு கிரம வாரம் அடுத்தோதுவது. சாகையிலும் கற்பத்திலும் கணத்திலுந் துருச்சொல்லி ஒன்பது புகவினில் இரண்டு வாரம் அடுத்தோதுவது. நாலு பாதத்திலுந் துருச்சொல்லி ஒன்பது புகவினில் அகத்தூஹத்தில் இரண்டு வாரம் அடுத்தோதுவது." இவ்விதம் சட்டர்கள் தாங்கள் கற்றது மறந்துபோகாமல் வாரம் சொல்லி அதை நினைப்பில்கொண்டு வரவேண்டும் என்பதையும் நிர்ணயிக்கிறது சாசனம்.

"மூக்கால் வட்டத்து வைத்து ஒரு சட்டனை ஒரு சட்டன் பிழைக்கப் பேசுவானாயில் பெருமக்களுக்கு அஞ்சு காணம் பொன் றண்டம் இட்டுச் சாலை உண்பது. குட்டுவானாயில் ஒரு காசு தண்டம் இட்டு சாலை உண்பது. குட்டுண்டானும் அஞ்சுகாணம் பொன்றண்டம் இட்டு சாலை உண்பது. படைக்கலத்தால் புண்செய்தான் அறத்துக்குப் புறத்தனாவது. சட்டர் படைக்கலம் பிடித்துக் கூட்டத்துக்குச் செல்லப் பெறார்....

"........யிலகப்பட்ட எச்சூது மூக்கால் வட்டத்திலிருந்து பொரப் பெறார். பொருவார் அற்றைக் கலம் இழப்பது. சட்டர் வெள்ளாட்டிகளை மடத்தில் வைத்துக்கொள்ளப் பெறார். சாலாபோகமுந் தேவதானமும் சத்திமுகம் இன்றி விலக்கப் பெறார். விலக்குவார் மெயவெற்று வகை ஐங்கழைந்து பொன் தண்டம் இட்டன்றிச் சாலை உண்ணப்பெறார். சாலாபோகத்திலும் தேவதானத்திலும் குடியை வலியக்கொண்ட முதல் ஒன்றுக்குப் பத்தாகக் குடுப்பது. சபைக் கடமை கடவார் பக்கல் மூன்று சரணத்திலும் மூவர் சென்று புக்கது பாடாவது. பாடுப்போகில் ஐம்பத்துநாலு காணம் பொன் தண்டமும் பட்டு, கடமையும் குடுப்பது. தேவர் சென்னடையும் பதினாழிச் சாலையும் எவ்வழக்குச் சொல்லியும் விலக்கப் பெறார். விலக்குவார் நியதி கழஞ்சு பொன் தண்டம் இட்டன்றிச் சாலை உண்ணப்பெறார். பணி மக்கள் சட்டரைப் பிழைக்கப்பேசுவார் ஒரு காசு தண்டப்படுவது."

இதிலிருந்து பார்த்திவசேகரபுரத்தில் நிறுவிய சாலை—அதற்கு முன்மாதிரியாக அமைந்திருந்த காந்தளூர்ச்சாலையும் கூட—ஒரு வகையான பாடசாலை தான் என்பது தெரியவரும். மாணவர்கள் அவ்விடத்திலேயே தங்கி உணவு கொண்டு படித்து வந்திருக்கிறார்கள். அந்தச் சாலைக்கெனத் தனியாக வேண்டிய சொத்து இருந்திருக்கிறது. அதன் நிர்வாகம் முழுவதும் அந்தச் சாலைக்கென நிர்ணயிக்கப்பட்ட சட்டர்கள் வசம் இருந்தது. பிறர் யாருடைய தலையீடும் இல்லாமல் சுயேச்சை வாய்ந்த ஸ்தாபனமாக அது விளங்கியது. தற்காலத்துப் பல்கலைக் கழகங்களை அவற்றுக்கு ஓரளவு ஒப்பாகக் காட்டலாம்.

சட்டர் என்னும் சொல்லைச் சாத்ரர் என்னும் ஸம்ஸ்கிருதச் சொல்லிலிருந்து பெறப்பட்டதாகக் கொண்டு மாணவனைக் குறிப்பதாகவே கொள்ளுவர். (தமிழ் லெக்ஸிகனில் சட்டன் என்ற சொல்லைப் பார்க்க.) ஆயினும் நாம் மேலே காட்டிய சாசன வாசகத்தைக் கவனிக்கும்போது வெறும் மாணவனை மட்டுமே அந்தச் சொல் குறிப்பதாகத் தோற்றவில்லை. இந்தச் சாலையின் சட்டர் அவர் அவர்களுக்கு உரிய வேதத்தில் மட்டுமல்லாமல் மீமாம்சை, வியாகரணம், பௌரோஹித்தியம் ஆகிய பிரிவுகளிலும் பூர்ணமான பாண்டித்தியம் பெற்றிருக்கக் காண்கிறோம்; அன்றி, சாலாபோகத்துக்கு விடப்பெற்ற சொத்துக்களே யன்றி, அந்தச் சாலையோடு சேர்ந்ததாக இருந்த கோயிலுக்குச் சொந்தமான தேவதான நிலங்களும், கோயில் நிர்வாகமும் அவர்கள் வசமே இருந்திருக்கின்றன. ஆதலின், சட்டரை வெறும் மாணவர்களாகக் கொள்வதற்குப் பதிலாகப் பாடசாலையின் நிர்வாகத்தை வகித்துவந்த ஆசிரியர்களாகவே கொள்ள வேண்டும் என்று தோற்றும்.

தென்ஆர்க்ககாடு ஜில்லா எண்ணாயிரம் என்னுமிடத்திலிருந்து கிடைக்கும் முதலாம் இராஜேந்திர சோழனுடைய காலத்துக் கல்வெட்டு ஒன்று இதே போன்ற பொருளைக் கொடுப்பதாகக் காண்கிறது. (1917-ஆம் ஆண்டு 333-நெ.) சாசனம் அரசனே திட்டம் வகுத்து அளித்த உத்தரவை ஒட்டி இராஜராஜச் சதுர்வேதிமங்கலத்துச் சபையார் அந்த

இடத்தில் இருந்த பெரிய கலாசாலையில் பயிலும் மாணவர் களுக்கும் பாடம் சொல்லும் உபாத்தியாயர்களுக்கும் உணவு அளிக்கச் செய்த ஏற்பாடுகளைத் தெரிவிக்கிறது. அந்தக் கலா சாலை இருநூற்று எழுபது பிரம்மசாரிகளையும், எழுபது சாத்திரர்களையும், பதினான்கு ஆசிரியர்களையும் கொண் டிருந்தது. ஒவ்வொரு பிரம்மசாரிக்கும் நாள் ஒன்றுக்கு ஆறு நாழி வீதம் நெல் அளிக்கப்பட்டது. ஆனால் சாத் திரருக்கோ நாள் ஒன்றுக்குப் பத்து நாழி வீதம் நெல் நிர்ணயிக்கப்பட்டது. (பார்த்திவசேகரபுரம் சாசனத்திலும் ஒவ்வொரு சட்டருக்கும் நாள்தோறும் பத்து நாழி வீதம் கணக்கிடப்பட்டிருப்பது கவனிக்கத் தக்கது; 'பதினாழிச் சாலை' என்றே குறிக்கவும் படுகிறது.) பாடம் சொல்லும் ஆசிரியர்களிலே வேதாந்தபாடம் சொல்பவருக்கே நாள் ஒன்றுக்கு ஒரு கலம் முக்குருணி நெல் அளிக்கப்பட்டது. அந்தத் திட்டத்திலே மிகவும் அதிகப்படியாகத் தானியமாகக் கொடுக்கப்படுவது அவருக்குத்தான். மீமாம்ஸை, வியாகரணம் ஆகியவற்றைப் பாடம் சொல்லும் நம்பிகளில் ஒவ்வொருவரும் நாள் ஒன்றுக்கு ஒரு கலம் வீதம் பெற்றுவந்தனர். மற்றவர் களுக்கு நாள்தோறும் முக்குருணி நெல் வீதம் கணக்கிடப் பட்டது. இவ்விதம் நாள்தோறும் அளிக்கப்பெறும் தானி யத்தைத் தவிர, பாடம் சொல்லுவதற்குப் பிரதிப் பிரயோஜன மாக ஆசிரியர்களுக்கும் சாத்திரர்களுக்கும் பொன்னும் தனியாக அளிக்கப்பட்டு வந்தது. வேதாந்த பாடம் சொல் லும் ஆசிரியருக்கு மட்டும் அவ்விதம் பொன் அளிக்கப்பட வில்லை. (பணம் வாங்கிக்கொண்டு வேதாந்த பாடம் சொல்லக் கூடாது என்பது மரபு. அதனாலே போலும் அவருக்குப் பொன் அளிக்கப்படவில்லை. மற்றவர்களைக் காட்டிலும் அவ ருக்கு அதிகமாக நெல் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்த தற்கும் அதுவே காரணமாகும்போலும்.) வியாகரணம், மீமாம்ஸை ஆகிய இரண்டிலும் பாடம் சொல்லும் ஒவ்வோர் அத்தியாயத்துக்கும் ஒரு கழஞ்சு வீதம் பொன் அளிக்கப்பட்டு வந்தது. அதனால், அந்த அந்தச் சாஸ்திரங்களை ஒருதரம் முழுவதும் பாடம் சொன்னால் வியாகரண ஆசிரியர் எட்டுக் கழஞ்சும் மீமாம்ஸை ஆசிரியர் பன்னிரு கழஞ்சும் பெறுவர். மற்றவர்களுக்குத் தலைக்கு ஆண்டுதோறும் அரைக் கழஞ்சு

B

பொன் என்ற திட்டம். (சாசன இலாக்காவின் 1918-ஆம் ஆண்டு அறிக்கை, பாரா 23). இதனுல் சாத்திரரும் பாடசாலையில் பாடம் சொல்லி அதற்கான பொன்னைப் பெற்றுவந்தனர் என்பது விளங்கும்.

சற்றேறக்குறையப் பார்த்திவசேகரபுரம் சாசனத்தின் காலத்தையே சார்ந்த மற்ருெரு சாசனமும் இதனையே வலியுறுத்துவதாகக் காண்கிறது. வட ஆர்க்காடு ஜில்லாவில் உள்ள காவேரிப்பாக்கம் என்னுமிடத்திலிருந்து கிடைக்கும் அக் கல்வெட்டு பல்லவ அரசனை நிருபதுங்கவர்மனுடைய ஆட்சியின் இருபத்தைந்தாம் ஆண்டு (சுமார் கி. பி. 886) கொண்டது. அவ்வூர்க் கோயிலிலே விளக்கு எரிக்க எண்ணெய் அட்டுவதற்குப் பொன் அளித்து அந்தத் தர்மத்தை மடத்துச் சட்டப் பெருமக்கள் பொறுப்பிலே விட்ட செய்தியைக் கூறுகிறது அந்தக்கல்வெட்டு. (தெ.இ. சாசனங்கள், பன்னிரண்டாம் வால்யூம், 79 நெ.) இதிலிருந்து சட்டர்களுடைய நிலை ஒருவகையில் தெரியவரும். அவர்கள் சாதாரணமான மாணவர்களாக மட்டும் இருந்தறில்லை. அவர்கள் மடத்தில் வசித்து வந்தார்கள். பார்த்திவசேகரபுரம் சாசனமும் இவ்விதமே தான் எடுத்துக் கூறுகிறது. வடமொழி நிகண்டான அமர கோசத்திலும், 'மடஸ் சாத்ராதி நிலயஃ' அதாவது 'மடம் என்பது சாத்திரர் போன்றோர் இருக்குமிடம்' என்று காணப்படுகிறது. ஆகவே, சட்டர் என்பாரை ஆசிரியராகவே கொள்ளவேண்டும் போலும்.

இவற்றைக் கவனிக்கும்போது சட்டர் என்பார் உலக பந்தம் வேறு ஏதும் இல்லாமல் வித்தை ஒன்றையே பிரதானமாகக்கொண்டு அதைக் கற்பதிலும் பிறருக்குக் கற்பிப்பதிலும் ஆயுட்காலத்தைச் செலவிடும் நைஷ்டிகப் பிரம்மசாரியாவர் என்று கருதலாம். மகாகவி காளிதாசன் தன்னுடைய நாடகமான சாகுந்தலத்தில் சித்திரித்திருக்கும் கண்வ மகரிஷியின் குண சித்திரம் சட்டருடைய நிலையை எடுத்துக் காட்டுவதாகக் கொள்ளலாம். கண்வர் ஒரு குலபதி. அவருடைய ஆசிரமத்திலே மாணவர்கள் அநேகர் தங்கி அவரிடம் கல்விகற்று வந்தனர். அங்கேதான் துஷ்யந்தன் சகுந்தலையைக் கண்டது. அவள் யார் என்று அவன் விசாரித்த

போது அவளுடைய தோழி அவளைக் கண்வ மகரிஷியின் மகள் என்று கூறி அரசனுக்குப் பதில் உரைத்தாள். இந்தப் பதில் மன்னனை வியப்புக்குள்ளாக்கியது. ஆயுள்முடியப் பிரம்மசரிய விரதத்தை மேற் கொண்டிருந்த கண்வ முனிவருக்கு அவள் எவ்விதம் மகளாக இருக்க முடியும் என்றே அரசன் ஆச்சரியத்துடன் வினவுகிறான்.

அந்நாளிலே தமிழ் நாட்டில் இவ்விதம் பல துறைகளிலும் உயர்தரக் கல்வி பயிலுவதற்கென ஆசிரியர்களும் மாணவர்களும் ஒரே கட்டிடத்தில் தங்கி வாசித்துவந்த பெரிய கலாசாலைகளைத் தவிர, சிறுபாடசாலைகளும் அங்கங்கே ஏராளமாக இருந்து வந்தன. தனிப்பட்ட ஆசிரியர்களிடம் குருகுலவாசம் செய்து தங்கள் தகுதிக்கு ஏற்ப விரும்பிய துறைகளில் பயின்றுவந்த மாணவர்கள் மிகுதியாக இருந்தனர். அத்தகையவர்களுக்கு உணவு அளிப்பதற்கான இறையிலி நிலங்களும் அங்கங்கே ஏராளமாக இருந்துவந்திருக்கின்றன. கல்வெட்டுக்களை ஊன்றிக் கவனித்தால், அவற்றுள் சாலை, சாலாபோகம் என்று வரும் இடங்களிலே அந்தச் சொற்கள் முறையே சாதாரண அன்னசத்திரங்களையும் அவற்றுக்கு விடப்பெற்ற நிலங்களையும் குறிப்பனவாகக் காணமாட்டா; மாணவர்கள் கல்விபயிலுவதற்கு ஏற்பட்ட பாடசாலைகளைச் சேர்ந்தனவாகவே இருக்கும்.

பார்த்திவசேகரபுரம் சாசனத்திலிருந்து பல அரிய விவரங்கள் நமக்குத் தெரியவருகின்றன. (உண்மையில் அந்தச் சாசனம் நல்லமுறையில் விளக்கத்தோடு மறுபடியும் பதிப்பிக்கப்பெறுதல் அவசியம்.) ஆயினும் நாம் இவ்விடத்திலே இரு விஷயங்களை முக்கியமாகக் கருதவேண்டும்: (1) சட்டர்கள் திரைராஜ்ய விவஹாரத்துக்கு, அதாவது (தமிழ்க வழக்குப்படி முடியுடை வேந்தர் மூவரான சேர சோழ பாண்டியர் ஆகிய மன்னர்களின்) மூன்று ராஜ்யங்களது விவகாரங்களை நிர்வகிப்பதற்கு வேண்டிய பயிற்சியும் அறிவும் (ஒத்து) உடையவராக இருத்தல் வேண்டும். (2) குறிப்பிட்ட கட்டுப்பாடுகள் சிலவற்றுக்கு உட்பட்டு அவர்கள் படைக்கலம் தாங்குவதற்கும் கையாளுவதற்கும் அனுமதிக்கப்பட்டிருந்தனர். வேதங்களையும் அவற்றின் அங்கங்களான வியாகரணம்,

பௌரோஹித்யம் முதலிய சாத்திரங்களையும் நன்கு கற்றுத் தேர்ச்சிபெற்ற அந்தணன், ராஜ்ய நிர்வாக விஷயங்களை அறிந்திருந்ததோடு தர்ப்பைப் புல் ஏந்தவேண்டிய கரத்தில் படைக்கலம் பிடிக்கவேண்டி யிருந்ததையும் நாம் கவனிக்க வேண்டும். இவற்றிலிருந்து, நாட்டின் நிர்வாகம், போர் முறை ஆகிய இரண்டையும் புத்தக வாயிலாக மட்டுமல்லாமல் நடை முறை வழியாகவும் கற்பித்து வந்த ஒரு கலாசாலையாகவே அது இருத்தல் வேண்டும் என்பதை எளிதில் உணரலாம். இப்போது உள்ளதைப்போல அந்நாளிலே நாட்டின் அரசிய லமைப்பில் அன்றாட நிர்வாகப் பகுதி (ஸிவில் இலாகாக் கள்), ராணுவப் பகுதி ஆகிய இரண்டும் தனித் தனியாகத் தலைவர்களைக்கொண்டு தனிப் பிரிவுகளாக இருக்கவில்லை; இந்த இருவகைப் பொறுப்புக்களையும் ஒரே நிர்வாகியே ஏற்று வந்திருக்கிறார். அதுமட்டுமல்ல; ராணுவ விஷயமான அறிவும் அனுபவமும் பெறாத நிர்வாக அதிகாரி எவருமே அந்தக் காலத்தில் இல்லையென்று சொல்லலாம். அதனால் பார்த்திவ சேகரபுரம் சாலையும், அதேபோலக் காந்தளூரிலே இருந்த சாலையும், நாட்டு நிர்வாகத்தின் பல துறைகளிலும் புத்தகப் படிப்புடன் நடைமுறைவழியிலும் பாடம் போதித்து வந்தன வென்பது போதரும். இப்போது நடைபெற்றுவரும் அதி காரிகள் கல்லூரி, நிர்வாகப் பயிற்சி நிலயம் என்பன போன்ற வற்றை ஒப்ப அந்தச் சாலைகளைக் கொள்ளலாம். ஆனால் அந்தச் சாலைகள் எந்த அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்கு உட் பட்டோ உதவியை எதிர்பார்த்தோ நடந்தனவாகத் தோன்ற வில்லை; வேண்டிய அளவுக்குச் செல்வநிலையையும் பூமிகளையும் பெற்றுப் பிறருடைய தலையீடு ஏதுமின்றிச் சுயேச்சையாக நடந்துவந்தனவென்றே தெரிகிறது.

காஞ்சீபுரத்திலே கடிகை ஒன்று இருந்தது. அதைப் பற்றிய குறிப்புகள் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் மத்தி வரையில் கிடைக்கின்றன. அங்கேயும் இதேபோலப் படைக் கலங்கள் உள்படப் பலதுறைகளிலும் பயிற்சி அளிக்கப்பட்டு வந்ததென்று தெரிகிறது. கதம்ப ராஜவமிசத்தை ஸ்தா பித்த மயூரசர்மன் பிரவசனம் முழுவதையும் பயில்வதற் காகத் தார்க்குகனாகத் தன் ஆசிரியன் வீரசர்மனோடு அந்தக் கடிகையை அடைந்து அதில் சேர்ந்தான், பல்லவர்களுடைய

'குதிரை வீரன்' ஒருவனோடு விரோதித்துக் கொண்டதால் நிகழ்ந்த கலகத்திலே, அவன் தர்ப்பைப் புல்லையும் இதர வேள்விப் பொருள்களையும் ஏந்திய கையிலே வாள்போன்ற படைக் கலங்களை ஏந்திப் போரிட்டுத் தனக்கெனத் தனி ராஜ்யம் ஒன்றையும் அமைத்துக் கொண்டான். இதிலிருந்து கடிகையும் அதேபோல உயர்தரப் படிப்பும் போர்ப் பயிற்சியும் அளித்து வந்ததென்பது நன்கு விளங்கும். (எபிகிராபியா கர்நாடிகா, ஏழாம் வால்யூம், ஷிகார்பூர் 176 நெ. சாசனம்; எபிகிராபியா இந்திகா, எட்டாம் வால்யூம், நெ. 5.)

நாம் மேலே எடுத்துக் காட்டிய விதமே பொருள் கொள்ள வேண்டும் என்பதை வலியுறுத்தும் வேறு ஆதாரங்களும் உண்டு. அனந்தபுரம் என்னும் திருவனந்தபுரத்தின் பழம் பெருமையையும் புனிதத் தன்மையையும் விவரித்துக் கூறுவதாக அனந்தபுர வர்ணனம் என்னும் மலையாள நூல் ஒன்று உண்டு. கி. பி. பதினான்காம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாகக் கருதப்படும் அந்நூலிலே அனந்தபுரத்தின் ஒரு பகுதியான காந்தளூரில் வேதங்களில் பாண்டித்தியம் பெற்றவர்களுடைய பாடசாலை இருந்துவந்ததென்பதும் அந்தப் பாடசாலையில் இருந்தவர்கள் படைக்கலப் பயிற்சியிலே திறமை வாய்ந்தவர்கள் என்பதும் குறிக்கப் பட்டுள்ளன.[1] (திருவாங்கூர்ப் பல்கலைக் கழகம் பாஷா பிரசுரம், 81 நெ. 106 பாடல் முதல்).

கேரளத்திலே இன்றைக்கும் சாத்திரக்களி என்ற பெயருடன் ஓர் ஆட்டம் நடைபெற்று வருகிறது. அதிலே நடிகர்கள் கத்திகேடயம் கொண்டு தங்கள் வாள்வீச்சுத் திறமையைக் காட்டுவது பிரதான அம்சம். குறிப்பிட்ட சில நம்பூத்திரிக் குடும்பத்தவர்களே அதில் ஈடுபடுவார்களாம். நிகழ்ச்சியின் ஆரம்பப் பகுதியிலே அந்தக் களியை நடத்திக் காட்டுவோர் நாலுபாதம் என்ற பெயருடன் சில பாடல்களை ஸாமவேதம் ஓதும் முறையிலே பாடுவார்களாம். பார்த்திவசேகரபுரம் சாசனத்திலும் சட்டர்கள் வாரம் ஓதும் பரிசைக் கூறுமிடத்

---

1. சென்னைப் பல்கலைக் கழகத்து மலையாளத் துறையில் உள்ள ஸ்ரீ கே. என். எழுத்தச்சன் அவர்கள் இதை எனக்கு அறிவித்தார்கள்.

தில் நாலுபாதம், ஸாமவேதத்தின் அஹாத்தூஹம் ஆகிய பெயர்கள் காணப்படுகின்றன[2]

இதுகாறும் நாம் கூறியவாற்றால், காந்தளூரில் இருந்த சாலையை ஒருவகைப் பாடசாலை யென்றும், முன்னதாகவே சில குறிப்பிட்ட துறைகளில் பாண்டித்தியம் பெற்றிருந்தவர்களே அதிலே இடம் பெற்றனர் என்றும், அங்கே பல்வேறு விஷயங்களோடு அரசியல் நிர்வாகம், போர் முறை ஆகியவை போதிக்கப் பெற்றுவந்தன வென்றும் கொள்வது தவறாகாது. அரசியல் நிர்வாகம், போர் முறை ஆகியவற்றைப் போதித்து வந்த கலாசாலையாகவே அதைக் கொள்ளலாம். சாசனங்களிலே திரை ராஜ்ய கடிக மத்தியஸ்தர் என்பது போன்ற பெயரையுடையவர்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுவது (சாசன இலாகாவின் 1916-ஆம் ஆண்டு அறிக்கை, பாரா 8) இத்தகைய கலாசாலைகள் இருந்துவந்தன வென்பதை நன்கு எடுத்துக் காட்டும்.

அப்படியானால் காந்தளூரில் சோழ மன்னன் கொண்ட வெற்றி எத்தன்மையது என்பதை யறியவேண்டும். இந்தச் சந்தர்ப்பத்தில், ஏறக்குறைய இதே காலத்தைச் சேர்ந்த ஒரு கல்வெட்டில் வேறு ஒரு சந்தர்ப்பத்தில் கலமறுத்த என்னும் சொல் ஆளப்பட்டிருப்பதையும் கவனிக்கவேண்டும். தஞ்சாவூர் ஜில்லாவில் கோயில் தேவராயன்பேட்டை என்னுமிடத்திலிருந்து கிடைக்கும் அந்தச் சாசனம் இராஜகேசரிவர்மன் என்பானுடைய ஆட்சியின் பதினன்காம் ஆண்டுகொண்டது. (தெ. இ. சாசனங்கள், பதின்மூன்றாம் வால்யூம், நெ. 250.) ஒவ்வொரு வருஷமும் மார்கழி மாதம் திருவாதிரை நாள் இரவு திருச்சேலூர் மகாதேவர் முன்பு 'ஜைமினிகள் சாமவேதத்து மேற்பாதத்து ஒரு துருவும் கீழ்ப்பாதத்து ஒரு துருவும் கரைப்

---

2. சென்னைப் பல்கலைக் கழகத்து மலையாளத் துறைத் தலைவர் டாக்டர் எஸ். கே. நாயர் அவர்கள் இதை எனக்கு அறிவித்தார்கள். கேரளத்தின் கிராமிய நாடகங்கள் என்ற பெயரில் அவர் எழுதியுள்ள நூலின் பிரதியையும் நான் படித்துப் பார்க்கக் கொடுத்தார்கள். அது இன்னும் வெளியாகவில்லை. அதிலே இந்த ஆட்டம் நன்கு விவரிக்கப்பட்டுள்ளது.

பறிச்சு பட்டம் கடத்துப் பிழையாமே சொன்னார்க்குப் பரிசு அளிக்க ஒருவன் இருபது காசு பொன் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது அந்தக் கல்வெட்டு. அவன் வைத்த அந்த இருபது காசு முதலுக்கு ஆண்டுதோறும் கிடைக்கும் பலிசை மூன்று காசையும் 'ஒருகாற் கொண்டார் அல்லாதாரை மெய்க் காட்டுத் தீட்டினார் எல்லாரும் தம்மில் அஞ்சுபுரியிலுஞ் சொல்லிக் கலமறுத்து நல்லாரானார் ஒருவர்க்கு' எம்பெருமானே அருளவேண்டும் என்பது ஏற்பாடு. இதனால் முன் ஆண்டு களில் பரிசு பெற்றவர் பின் ஆண்டுகளில் போட்டியிட முடியாது என்பது தெளிவு. போட்டியில் வெற்றி பெற்றவர் 'கலமறுத்து நல்லார் ஆனார் ஒருவர்' என்று சாசனத்திலே குறிக்கப் பெற்றிருக்கிறார். இவ்விடத்திலே கலமறுத்து என்ற சொல்லுக்குச் 'சாசனத்தால் அல்லது ஓலையால் நிர்ணயிக்கப் பெற்ற' என்ற பொருளே கொள்ளவேண்டும்.

இதைக் கொண்டு, இராஜராஜ சோழனும் காந்தளூரில் இருந்த பாடசாலையிலே நடந்த சாஸ்திரப் போட்டியிலே ஈடுபட்டுத் தன் திறமையை வெளிப்படுத்தி வெற்றிகொண்டு பரிசையும் அடைந்தான் என்று பொருள் கொள்ளத் தோன்றுவது சகஜமே. இது நடக்க முடியாததும் அல்ல; கூடாததும் அல்ல. சோழர்கள் தங்களைச் சூரிய வமிசத்தைச் சேர்ந்த க்ஷத்திரியர்கள் என்று கூறிவந்திருக்கிறார்கள். இராஜராஜனுடைய பெயரனான முதலாம் இராஜாதிராஜன் அசுவமேத யாகமும் செய்திருக்கிறான். அதனால் அவர்கள் வேதாத்தியயனம் செய்ய உரிமை பூண்டவர்களே. ஆயினும், கல்வெட்டுக்களிலே காந்தளூரில் சோழர்கள் படை வலிமை கொண்டே வெற்றி யடைந்தனர் என்று காணப்படுவதை நாம் முன்னரே எடுத்துக் காட்டியிருக்கிறோம். அதனால் அவ்விதம் பொருள்கொள்வது தவறாகும்.

அவ்விதமாயின் சோழமன்னன் படைவலிமைகொண்டு காந்தளூரிலே இருந்த சாலையில்கொண்ட வெற்றி எத்தன்மை யது என்பதை அறியவேண்டுவது அவசியமாகிறது. சாலை யின் தன்மையே அந்த வெற்றி எவ்விதம் இருந்திருக்க வேண்டுமென்பதை எடுத்துக் காட்டுவதாகக் கொள்ளலாம்.

இராஜராஜன் தன் ஆட்சியின் துவக்கத்திலேயே சோழ நாட்டின்எல்லையை விஸ்தரித்துப் பரந்த ஒரு ஸாம்ராஜ்யத்தை நிறுவவேண்டும் என்று திட்டமிட்டு அதற்கான செயல்களை நடைமுறைப்படுத்தவும் முற்பட்டான் என்று தெரிகிறது. ஆரம்பம் முதலே மன்னனுக்கும் காந்தளூர்ச்சாலை நிர்வாகி களுக்கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டிருத்தல் கூடும். அந் தச் சாலை தன்னுடைய ஆதிக்கியத்தில் இருந்து, தன்னுடைய கட்டுத்திட்டங்களை நிறைவேற்றிவைக்கக் கூடியதாக இருந் தால்தான் தன் கனவு நனவாகும் என்று அவன் எண்ணி யிருத்தல் சாத்தியமே. பிறருடைய தயவை எதிர்பார்க்காமல் சுயேச்சையாக விளங்கக்கூடிய செல்வநிலை யிருந்தபடியால் அது சுலபத்தில் அரசனுக்கு அடங்கிப்போயிருக்காது. அதற்கு மாறாகத் தன்னுடைய சொந்த நிர்வாகத்தில் பிறர் தலையிட முடியாதபடி அது மிகத் தீவிரமாக எதிர்த்தே வந்திருக்கும். அதனாலேயே மன்னன் அதன் நிர்வாகத்தைத் தன் ஆதிக்கி யத்தில் கொணர்வதற்குப் படைவலியை உபயோகிக்கவேண்டி வந்தது போலும்.

காஞ்சீபுரத்திலிருந்த கடிகையின் நிர்வாகத்திலும் பல்லவ மன்னர்கள் இதேபோல் சில சமயங்களில் தலையிட்டுத் தங்கள் இஷ்டப்படிக் காரியங்களைச் சாதித்துக்கொண்டிருக்கிறார்கள் என்று தெரிகிறது. காஞ்சீபுரத்துப் பல்லவ அரச பரம்பரை யை நிறுவிய முதல் அரசனை வீரகூர்ச்சனுடைய பெய ரனை ஸ்கந்தசிஷ்யன் என்பான் ஸத்யஸேனனிடமிருந்து கடிகையைக் கைப்பற்றினான் என்று வேலூர்ப் பாளைம் செப் பேடுகளில் கூறப்பட்டிருக்கிறது.'ஸ்கந்த சிஷ்யஸ் ததோ பவத் த்விஜாநாம் கடிகாம் ராஜ்ஞஃ ஸத்யஸேநஃ ஜஹார யஃ' (தே. இ. சாசனங்கள், இரண்டாம் வால்யூம், பக்கம் 508, வரிகள் 11-13.) என்று வரும் அந்தப்பகுதியில் ஜஹார என்னும் வினைச்சொல் லைக் கொண்டு பல்லவ மன்னன் கடிகையைப் படை வலி கொண்டே கைப்பற்றினான் எனக் கொள்ளலாம். அதே சாச னத்தில் மேலும் ராஜஸிம்ஹன் என்பான் 'இரு பிறப்பாள ரின் கடிகையைச் சீர்திருத்திப் புனர் நிர்மாணம் செய்தான்' (தத்புத்ர ஸூநுர் நரஸிம்மவர்ம்மா புனர்வ்யாதாத்யோ கடி காம் த்விஜாநாம்) என்று கூறப்பட்டிருக்கிறது. (ஷை வரிகள்

19 - 20). தாளகுண்டாக் கல்வெட்டிலிருந்து மயூரசர்மன் தனக்கு நேரிட்ட கஷ்டத்துக்குப் பல்லவ மன்னனையே பொறுப்பாக்கி அவன்மீதே கோபப்பட்டான் என்று தெரிகிறது. அதைக்கொண்டு கவனிக்கும்போதும் காஞ்சீபுரத்துக் கடிகையின் நிர்வாகத்தில் பல்லவமன்னனுக்கும் ஏதோ ஒரு விதமான ஆதிக்கியம் இருந்துவந்ததென்பது பெறப்படும்.

தவிர, கடிகையாருக்கும் நாட்டின் நிர்வாகத்தோடு ஏதோ ஒருவகையில் தொடர்பு இருந்துவந்ததாகவும் தெரிகிறது. காஞ்சீபுரம் வைகுண்டப் பெருமாள் கோயிலில் உள்ள கல்வெட்டிலிருந்து இது தெரிய வருகிறது. இரண்டாம் பரமேசுவரவர்மன் இறந்துபோன பிறகு பல்லவ சிங்காதனம் ஏறுவதற்குத் தகுதியான இராஜகுமாரன் யாரும் இல்லாததால் இளைய பரம்பரையைச் சேர்ந்த ஹிரண்யவர்மனை அணுகி அவன் மகனான நந்திவர்மன் பல்லவ மன்னனை முடிசூட்டிக்கொள்ள அனுமதிக்க வேண்டுமென்று வேண்டிக்கொள்ளச் சென்ற கோஷ்டியில் கடிகையாரும் சேர்ந்திருந்தனர் என்று அந்தக் கல்வெட்டுக் கூறுகிறது. (தெ. இ. சாசனங்கள், நாலாம் வால்யூம், பக்கம் 10. இன்னும் டாக்டர் ஸி. மீனாக்ஷி எழுதிய வைகுண்டப்பெருமாள் கோயிலின் சரித்திர சிற்பங்கள், பக்கம். 33 பார்க்க).

இது சம்பந்தமாக மற்றொரு விஷயத்தையும் நாம் நினைவில் கொள்ளவேண்டும். வேணாட்டு ஆய்குல மன்னன் கருநந்தடக்கன் பார்த்திவசேகரபுரத்தில் சாலை நிறுவியது கி. பி. 868-ஆம் ஆண்டு என்று அந்தச் செப்பேடு கூறுகிறது. அந்தச் செய்தியையும் அந்தச் சாலையின் நிர்வாகத் திட்டங்களையும் தெரிவிப்பனவாக உள்ள செப்பேடுகள் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துக்கள் கி. பி. 868-க்குப் பிற்பட்ட காலத்தைச் சார்ந்தனவாக உள்ளன. எழுத்துக்களின் வடிவம் சோழ மன்னனான முதலாம் இராஜராஜ சோழன் காலத்து வடிவத்தை ஒத்திருக்கிறது. அன்றி, அந்தச் சாசனம் தமிழ் எழுத்துக்களிலே பொறிக்கப்பட்டிருக்கிறது. அவ்வகை எழுத்துக்கள் அந்தப் பகுதியில் சோழர்களுடைய ஆதிக்கியம் ஏற்பட்டபிறகே வழக்கில் வந்தன. அதற்கு முன்பு வட்டெழுத்து வடிவமே வழக்கில் இருந்தது. அதனால் ஆய்குல வேந்தனான

கருநந்தடக்கன் காலத்திலே பொறிக்கப்பட்ட சாசனமாக இருக்குமானுல் அது வட்டெழுத்திலே பொறிக்கப்பட்டிருக்க வேண்டும். இன்னும் சாசனத்தின் ஆரம்பத்தில் சாலையை நிறுவிய மன்னன் சபையாரிடமிருந்து நிலங்களைப் பரிவர்த்தனை பெற்று ஊரை நிர்மாணித்து, கோயிலை எழுப்பிச் சாலையை அமைத்துச் சாலையும் கோயிலும் சரிவர நடப்பதற்கு ஏற்ற திட்டங்கள் வகுத்ததைக் கூறுமிடத்தில் தான புருஷனுகிய அரசன் பெயர், மற்றச் சாசனங்களில் காணப்படுவதுபோல், 'செய்தானேன் கோக் கருநந்தடக்கன்' என்று தன்மையில் காணப்படவில்லை; 'செய்தான் கோக் கருநந்தடக்கன்' என்று படர்க்கையில் காணப்படுகிறது. சாசன வாசகமும் ஏதோ பழைய சம்பவத்தை எடுத்துக் கூறுவது போலவே தோன்றுகிறது.

சாலையை நிறுவிய வேணுட்டு வேந்தனுக்கு ஸ்ரீவல்லபன் என்றபெயரும் இருந்ததாகத் தெரிகிறது. அந்நாளில் அதே பெயரைக்கொண்டு ஆண்டுவந்த பாண்டிய மன்னன் கீழ்ச் சிற்றரசனுக அரசு செலுத்திய ஆய் மன்னன் தன் பேரரசன் பெயரையும் தரித்துவந்தான். ஆய் மன்னனுக்கு ஸ்ரீவல்லபன் என்ற பெயர் இருந்ததென்பது, அரசனுக்கும் விஷ்ணுவுக்கும் சிலேடையாக அமைந்து சாசனத்தின் கடைசியில் உள்ள மங்கள சுலோகத்திலிருந்து தெளிவாகும். அன்றி, அதே மன்னனுடைய திருப்பரப்புச் செப்பேட்டை எழுதியவன் பெயர் 'ஸ்ரீ கோக் கருநந்தடக்கற்கு ஆயுதங்கள் செய்வான் விழிஞத்து ஸ்ரீவல்லபப் பெரும்பணைகனுயின அவியலன் றடக்கன்' என்று காணப்படுவதிலிருந்து அரசனுக்கு ஸ்ரீவல்லபன் என்ற பெயர் இருந்தது தெரியவரும்.

கன்யாகுமரியிலிருந்து கிடைக்கும் சோழ மன்னனை முதலாம் இராஜாதிராஜனுடைய ஆட்சியின் முப்பதாம் ஆண்டு கொண்ட கல்வெட்டு ஒன்று, ஸ்ரீவல்லபப் பெருஞ் சாலையைப் பற்றிக் கூறுகிறது. பார்த்திவசேகரபுரத்தில் ஸ்ரீவல்லபன் ஏற்படுத்திய சாலையையே அது குறிக்கிறது போலும். பெருஞ் சாலை என்பது மஹாசாலை என்பதன் வேறு வடிவமேயாகும். வேத சாஸ்திரங்களில் ஓர் அளவு பாண்டித்தியம் பெற்றவர்களுக்கு மேலும் பாடம் சொல்லும்

பாடசாலையே மஹாசாலையாகும். (இந்திய இலக்கியத்தில் சிராவஸ்தி நகரம் என்னும் நூல் - இந்தியப் புதைபொருள் இலாகா மெமாயர் வெளியீடு - பக்கங்கள் 14-15.) அந்தக் கல்வெட்டிலேயே அச் சாலை 'ஸ்ரீவல்லபப் பெருஞ் சாலையான ராஜ ராஜப் பெருஞ்சாலை' என்று குறிக்கப்பட்டிருக்கிறது. முதலில் ஸ்ரீவல்லபன் பெயரைப் பெற்றிருந்த அந்தச் சாலை பின்னால் இராஜராஜன் பெயரைக் கொண்டும் வழங்கலாயிற்று. அதனால் இராஜராஜனுக்கும் அந்தச் சாலைக்கும் ஏதோ ஒரு வகையான தொடர்பு இருந்திருக்கவேண்டும். இவ்விடம் குறிக்கப்பட்ட இராஜராஜன் சோழ மன்னனே போலும். மன்னன் அந்தச் சாலையைத் தன் ஆதிக்கியத்தில் ஏற்றுச் சீர் திருத்திப் புதிய சாசனம் வழங்கினான் என்று கொள்ளலாம்.

பார்த்திவசேகரபுரத்திலிருந்த சாலையைப் போலவே, அதற்கு முன் மாதிரியாக நின்ற காந்தளூர்ச் சாலையையும் இராஜ ராஜ சோழன் தன்னுடைய ஆதிக்கியத்தின் கீழ்க் கொண்டு அதன் நிர்வாகிகள் வகித்திருந்த ராணுவச் செல்வாக்கைக் குறைத்துச் சாலையின் நடைமுறையிலே பெருத்த மாறுதல்களைச் செய்து புனர் நிர்மாணம் செய்திருத்தல் வேண்டும். இதுவே அவனுடைய மெய்க்கீர்த்தியில் 'காந்தளூர்ச் சாலைக் கலமறுத்தருளிய' என்று குறிக்கப்பட்டிருப்பது போலும். [1]

---

1. 'கலம்' என்ற சொல்லுக்கு எத்தனையோ பொருள்கள் உள்ளன வென்பதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். 'சாலை' என்ற சொல் துறைமுகத்துப் பெருவழி என்ற பொருளில் அந்நாளில் வழங்கிவரவில்லை யாயினும், 'கலம்' என்ற சொல் கப்பல், அதாவது மரக்கலம் என்ற பொருளில் வழங்கிவந்திருக்கிறது. முதலாம் இராஜேந்திர சோழனுடைய மெய்க்கீர்த்தியிலே அவனுடைய கடாரப்படையெடுப்பின்போது அவன் கடலிலே படைகளை ஏற்றிச் சென்று கடலைக் கடக்கக் கப்பல்களை உபயோகித்தது **அலைகடல் நடுவுள் பலகலம் செலுத்தி** என்று குறிக்கப்பட்டுள்ளது. அவ்விடத்திலே 'கலம்' என்பது மரக்கலத்தையே குறிக்கும். சோழமன்னர்கள் திறமை வாய்ந்த கடற்படை ஒன்றை அமைத்திருந்தனர் என்பதும் அதைக்கொண்டு அவர்கள் கடல்கடந்த பிரதேசங்கள் பலவற்றைக் கைப்பற்றி ஆண்டுவந்திருக்கிறார்கள் என்பதும் பிரசித்தமானவை. தஞ்சாவூர் ஜில்லாவிலே திருத்துறைப் பூண்டித் தாலூகாவில் **மரக்கலக்கோரையாறு** என்ற பெயருடன் ஒரு கால்

திருக்கோவலூர்க்குப் பக்கத்தில் கீழுரில் உள்ள வீரட்டானேசுவரர் கோயிலிலிருந்து முதலாம் இராஜராஜ சோழனுடைய ஆட்சியின் இருபத்தேழாம் ஆண்டு கொண்ட கல்வெட்டு ஒன்று கிடைத்திருக்கிறது. (தெ. இ. சாசனங்கள், ஏழாம் வால்யூம், 863 நெ.; செந்தமிழ், நாலாம் தொகுதி, பக்கம் 231.) அதிலே அவன் நரபதி, அசுவபதி, கஜபதி ஆகிய விருதுகளைக் கொண்டிருக்கிறான். கஜபதி என்பது கலிங்கநாட்டு மன்னர்களுக்கே உரித்தான விருதாகும். பிற்காலத்திலே விஜயநகர

---

வாய் இருக்கிறது. கடற்கரையை ஒட்டி நிலப்பகுதியிலே அமைந்திருக்கும் கடல்நீர்த் தேக்கத்திலிருந்து உள்நாட்டிலே சுமார் பத்துமைல் தூரம் சென்று நின்றுவிடுகிறது அந்தக் கால்வாய். அதன் பெயரிலிருந்து அந்நாளிலே அக்கால்வாய் மரக்கலங்களை நிறுத்திவைப்பதற்காக உபயோகப்பட்டுவந்த துறைமுகப்பகுதி யென்பது தெரியவரும்.

**குலோத்துங்கசோழன் பிள்ளைத்தமிழில்** காண்பதைக்கொண்டு அந்நாளிலே காந்தளூரில் முத்துக்குளித்து வந்தார்கள் என்றும் எண்ணவேண்டியிருக்கிறது.

> " தண்டில் விழிஞத் தெயில் தகர்த்துடைய முத்துச்
> சலாபமுழுதும் பொறையன் சாலையொடு கொண்டாய் "

(பாடல் 91)

இதிலிருந்து மேலைக்கடற்கரையிலும் அந்நாளில் முத்துக்குளித்துவந்தார்கள் என்பது தெரியவரும். இந்தப் பழக்கம் கி. பி. பதினேழாம் நூற்றாண்டு வரையிலும் நீடித்திருப்பதாக, நம் நாட்டுக்கு வந்துபோன ஆங்கிலப் பிரயாணியான ஜான் பிரையர் என்பார் எழுதிவைத்திருப்பதிலிருந்து தெரிகிறது.

" அவை (அதாவது முத்துக்கள்) நான் முன்னரே சொல்லியிருக்கிறபிரகாரம் குமரிமுனைக்கும் சிலோனு(இலங்கை)க்கும் இடையிலும் இருக்கின்றன. ஆனாலும் அவற்றைப் பாரசீக முத்துக்களுடன் ஒப்பிட முடியாது. பாரசீக முத்துக்களே உண்மையான கீழை நாட்டு முத்துக்கள். சுமத்திராத் தீவுகளிலும் அவை கிடைக்கின்றன. பொன்மயமான செரோனீஸை ஜாவாவில் உள்ளதாகவே கொள்ளுவர். வேறு சிலர் பழைய தாப்ரோபேன் என்பர். இவ்விதம் விசால ஜாவாவுக்கும் இந்தியாவுக்கும் இடையில் அதிகம் உள்ளன. பனுனுவுக்கும் கொச்சிக்கும் இடையில் வேண்டிய அளவு உள்ளது. இன்னும்

மன்னர்கள் நரபதி என்ற விருதைத் தரித்து வந்திருப்பதை நாம் அறிவோம். அவர்களுக்கு முன், கல்யாணபுரத்திலிருந்து அரசு செலுத்திய மேலைச் சாளுக்கிய மன்னர்கள் அந்த விருதைத் தரித்து வந்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. (நாகாய் கல்வெட்டுகள் - ஹைதராபாத் ஆர்க்கியலாஜிகல் ஸீரீஸ், நெ. 8 - பக்கம் 6.) மூன்றாவதான அசுவபதி என்னும் விருதைத் தேவகிரியிலிருந்து அரசு செலுத்திய சேவுணர்கள் தரித்து வந்தனர் என்பதை நாம் முன்னரே (முதற்பகுதி, பக்கம் lii) எடுத்துக்காட்டியிருக்கிறோம்.

இராஜராஜ சோழன் நரபதி, கஜபதி ஆகிய இரண்டு விருதுகளையும் தரித்துக் கொள்வதற்கு உரிமைபெற, அந்த விருதுகளை முன்னம் தங்கள் உரிமையாகப் பெற்றிருந்த மேலைச் சாளுக்கிய மன்னர்களையும் கலிங்க வேந்தர்களையும் வெற்றி கொண்டிருக்கிறான் என்பதை நாம் அறிவோம்.

---

மலையாளக் கரையோரமாக நெடுகிலும் கொஞ்சமாகக் கிடைக்கிறது.' (ஹக்லுயத் ஸொஸைட்டி வெளியிட்ட ஜான் பிரையரின் **கிழக்கிந்திய, பாரசீக யாத்திரைகள்.** இரண்டாம் பாகம், இரண்டாம் ஸீரீஸ், இருபதாம் வால்யூம் - பக்கம் 355).

மேலைக் கடற்கரையோரமாகச் சேர மன்னர்கள் முத்துக்குளித்தலை இராஜராஜ சோழன் விரும்பவில்லைபோலும். பாண்டியர்களே கிழக்குக்கரையில் அதை நடத்தவேண்டும் என்று தீர்மானித்திருக்கலாம். அல்லது மேலைக் கடற்கரையிலே முத்துக்குளிப்பதற்கு உபயோகப்பட்டு வந்த மரக்கலங்கள் மிகப் பெருகி அரபுக்கடல்வழியாக நடந்துவந்த வியாபாரத்தைப் பெரிதும் பாதித்திருத்தலும் கூடும். அந் நாளிலே அந்தப் பகுதியில் கடற்கொள்ளைக்காரர்கள் நிறைந்திருந்தனர் என்பதையும் நாம் அறிவோம். ஆயினும் சாலை என்ற சொல் காணப்படுவதிலிருந்து இத்தகைய நிலையாக இருக்குமென்று நாம் சொல்லமுடியாது. எவ்விதமாயினும்,இராஜராஜசோழன் ஆட்சிக் காலத்திலே அவ்விதம் இருத்தற்கில்லை. ஒருகால் பிற்காலத்தில் அத்தகைய நிலை ஏற்பட்டிருத்தல் கூடும். ஏனெனில், அந்தச் சந்தர்ப்பங்களில் கலம் என்ற சொல் காணப்பெறவில்லை; அதனோடு காந்தளூர்ச்சாலை என்பதற்குப் பதிலாகச் சாலை என்றுமட்டுமே காணப்படுகிறது. இதைக்கொண்டு காந்தளூர்ச் சாலையையே யல்லாமல் காந்தளூரையும் சாலை என்ற சொல் குறித்து வந்தது எனவும் கொள்ளலாம். அதனாலேதான் போலும் 'சாலைகொண்டது' என்று பொதுவாகக் குறிக்கப்பட்டிருக்கிறது.

அசுவபதி என்ற விருதையும் அவன் தரித்துக் கொண்டிருப்தால் அவ்விதமே அந்த விருதுக்கு உரியவர்களான மாளவ அரசர்களை அவன் வென்ஞே அல்லது அவர்கள்மீது ஆதிக்கியம் செலுத்தியோ இருத்தல் வேண்டும் என்று கொள்வது தவருகாது. மாளவ தேசத்துப் பரமார மன்னர்களின் புகழை எடுத்துக்கூறும் உதயபூர்ப் பிரசஸ்தியில் போஜராஜனுடைய பெரியப்பனும் இரண்டாம் வாக்பதியுமான முஞ்சராஜன் சோழ மன்னனை வெற்றிகொண்டான் என்ற செய்தி கூறப்பட்டிருக்கிறது.

கர்ஞட லாட கேரள சோள சிரோ ரத்ந ராகி பத கமலஃ
யஸ் ச ப்ரணயி கணர்த்தித தாதா கல்பத்ரும ப்ரக்யஃ

"கர்நாடர், லாடர், கேரளர், சோழர் ஆகிய மன்னர்கள் சதா வணங்குவதால் அவர்களுடைய தலையில் உள்ள மணிகளால் அலங்கரிக்கப் பெற்ற பாதங்களையுடைய அவன் யாசித்து வந்தவர்களுக்கு அவர்கள் விரும்பிய பொருளை யளிப்பதால் கற்பக விருக்ஷம் என்னும் கீர்த்தியைப் பெற்றிருந்தான்".

(எபிகிராபியா இந்திகா, முதல் வால்யூம், பக்கம் 237, சுலோகம் 14.)

வாக்பதி மன்னன் சுமார் கி.பி. 975-ஆம் ஆண்டில் சிங்காதனம் ஏறினன். அவன் மேலைச் சாளுக்கிய அரசனை தைலபனை ஆறு தடவைகள் தோற்கடித்தானும். ஆனல், ஏழாம் முறையில் அவனைத் தைலபன் சிறைப்படுத்திச் சிரச்சேதம் செய்தானும். சோழ வேந்தனை இராஜராஜனுக்கும் மேலைச் சாளுக்கியர்கள் பரம விரோதிகள். ஆகவே, அவர்களை இருபுறங்களிலும் தாக்கி முறியடிக்க இம் மன்னன் மாளவ தேசத்து அரசனுடன் நட்புக்கொண்டு ஒத்துழைத்திருப்பது சகஜமே. இராஜராஜசோழன் நர்மதைக் கரையிலே வெற்றி கொண்டான் என்று கோங்கு தேச ராஜாக்கள் சரித்திரம் கூறுவது இதனை இன்னும் வலியுறுத்தும்.

"அதின் பிறகு சோழ ராசா சேனதிபதியானவன் தங்கள் துரை உத்தாரப்படிக்கு அங்கே அகப்பட்ட திரவியங்களை சிவாலயத்தோடே கூடியிருக்கிற கணவாய் ஸ்தலத்திலே நிக்ஷேபம் பண்ணி பச்சிம திக்கு செயஸ்தம்பம் நட்டு லோகத்திலே வெகு கீர்த்திவைத்தான்.

"அதின் பிறகு, பீமராயனென்கிறவன் இந்த சமாசாரங் கேட்டு சண்டைக்கு வந்தவனை யுத்தம் பண்ணி செயித்து அவன் மகனையுங் கொன்றுபோட்டு அதற்குமேல் கலிங்க தேசத்துக்கு யுத்தத்துக்குப்போய் அவனிடத்திலே கப்பம் வாங்கிக்கொண்டு அங்கேயிருந்து நிற்மதா (நர்மதா) தடத்துக்குப்போய் அந்த தேசங்களிலே அநேக ராசாக்களை செயம்பண்ணி, (நிற்மதா) நர்மதா தடத்திலே செயஸ்தம்பம் நட்டு தெக்ஷிண திக்குக்கும் மஹேந்திரகிரி பர்வதத்திலே வியாக்கிர அடையாளத்துடனே செயஸ்தம்பம் நட்டு அப்போது வைதும்பராயன், காமாற்ணவராயன், தானபால்லிய பீமராயன், அம்மராயன் முதலான இராசாக்களை செயித்து அநேகம் ஆபரணம் திரவியம் அந்தப்புர ஸ்திரீ முதலானதும் கப்பம் வாங்கிக்கொண்டு சுவற்ணைத்துமமா யிருக்கிற பீமராயனுடைய பாவபிரதிமை வாங்கிக்கொண்டு சேனைகளுடனே கூட வந்து இராசாவைக் கண்டு..............."

(கோங்கு தேச ராசாக்கள்-சென்னை சர்க்கார் ஓரியண்டல் ஸீரீஸ்,

நெ. 6, பக்கங்கள் 12-13).

இவ்விடம் குறிக்கப்பட்ட பீமராயன் என்பான் தெலுங்குச் சோட. வேந்தனை ஜடா சோட பீமனாகவே இருத்தல் வேண்டும். அதேபோலக் காமார்ணவன் என்பான் கலிங்க நாட்டை ஆண்டுவந்த கீழைக்கங்க குலத்து மன்னனாவான்.

இராஜராஜ சோழனுக்குப் பின் சிங்காதனம் ஏறிய அவன் மகன் முதலாம் இராஜேந்திர சோழனும் மேலைச் சாளுக்கியர்களோடு நிகழ்த்திய போரில் மாளவ தேசத்து அரசனை போஜராஜனோடு நட்புரிமை பாராட்டிக் கூட்டாகப் போரை நடத்தினான் என்று தெரிகிறது. அதைப் பின்னால் விளக்குவோம்.

**முதலாம் இராஜேந்திர சோழன்**

இந்தத் தொகுப்பிலே இம்மன்னனுடைய சாசனங்கள் சுமார் இருபது உள்ளன. அவை அரசனுடைய ஆட்சியின் மூன்றாம் ஆண்டிலிருந்து முப்பத்தொன்றாம் ஆண்டு வரையில்

உள்ள காலத்தைச் சார்ந்தவை. அவனுடைய கல்வெட்டு களில் சில 'திருமன்னி வளர' என்று தொடங்கும் மெய்க் கீர்த்தியுடன் ஆரம்பமாகின்றன. அத்தகைய மெய்க்கீர்த்தி கள் இல்லாதவற்றுள் சில பூர்வ தேசமும் கங்கையும் கடாரமும் கொண்ட கோப் பரகேசரிவர்மன் என்று தொடங்கும். இவ்விதம் சிறு அடைமொழி கொண்ட சாசனங்கள் இந்தத் தொகுப்பில் ஒன்றும் இல்லை.

எனினும், மன்னனுடைய இந்த விருதிலிருந்து அவன் தண்டு எடுத்து வடநாடு சென்று கங்காவிஜயம் செய்து வெற்றி கொண்டது அவனுடைய ஆட்சியின் முக்கியமான சம்பவம் என்பது விளங்கும். இச்செய்தி முதல் முதல் அவனுடைய ஆட்சியின் பதினோராம் ஆண்டுக் கல்வெட்டிலேதான் குறிக் கப்படுகிறது. எனினும், அவ்வெற்றியின் முழு விவரம் பன் னிரண்டாம் ஆண்டுச் சாசனங்களில்தான் காணப்படுகிறது. இவ்வெற்றியைக் கூறும் கல்வெட்டுக்களைக் கவனிக்கும்போது இந்தப் படையெடுப்பு முடிய இரண்டு ஆண்டுகளாவது பிடித் திருக்கும் எனத் தோன்றுகிறது. இவ்விஜயத்தைப் பற்றித் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் பின்வருமாறு கூறுகின்றன:

"சோழ குல விளக்கான இம்மன்னன் இராஜேந்திரன், தன் தவ வலியால் கங்கையைப் பூமிக்குக் கொணர்ந்த பகீர தனைப் பரிகசிப்பதேபோலத் தன் தோள் வலியால் அந்நதி யின் நீரை இவ்விடம் கொணர்ந்து நாட்டைப் புனிதமாக்க முற்பட்டான்." (தெ. இ. சாசனங்கள், மூன்றும் வால்யூம், செ. 205, சுலோகம் 109).

இந்தப் படையெடுப்பின் முடிவில் அவன் தன் தலைநக ரிலே சோழ கங்கை என்ற பெயரில் 'ஜலமயமான ஜயஸ்தம் பம்' ஒன்றை நிறுவினான் என்றும் அதே சாசனம் கூறு கிறது. இன்னும் அவன் கங்கை கொண்ட சோழன் என்ற பட் டத்தைத் தரித்துக் கொண்டதோடு கங்கை கொண்ட சோழ புரம் என்ற ஒரு நகரையும் புதிதாக நிர்மாணித்தான். அதற் குப் பிறகு சுமார் இரு நூற்றாண்டுகளுக்கு அந்நகரம்தான் சோழ மன்னர்களுக்குத் தலைநகராக விளங்கியிருக்கிறது.

இராஜேந்திர சோழனுடைய இந்தப் படையெடுப்பு வெறும் தீர்த்த யாத்திரையாக மட்டும் அமையவில்லை; பழைய காலத்து மன்னர்கள் நிகழ்த்திய திக்குவிஜயத்தைப்போலவும், வடநாட்டு மன்னர்களுக்குத் தமிழ் நாட்டு அரசின் வலிமையையும் சோழ ஸாம்ராஜ்யத்தின் பெருமையையும் எடுத்துக் காட்டுவதே போலவும் அமைந்தது என்று பொதுவாகக் கருதப்பட்டு வருகிறது.

ஆனால் இம்மன்னன் வெற்றி அவ்வளவோடு நின்று விடவில்லை. அதன் உண்மையான பெருமையையும் அதனால் ஏற்பட்ட சாதனைகளையும் நன்றாக அறியவேண்டுமானால் அந்தப் படையெடுப்பு நடத்தப்பெற்ற காலம், அதை மேற்கொண்ட முறை ஆகியவற்றையும், ராஜேந்திர சோழனுடைய மெய்க்கீர்த்தியிலேயன்றி அவனுக்குப் பின் சிங்காதானம் ஏறி நாட்டை ஆண்ட அவனுடைய குமாரர்களின் மெய்க்கீர்த்திகளிலும் வடநாட்டு வெற்றிகளைப் பற்றிக் காணப் பெறும் குறிப்புகளையும் நாம் கவனிக்க வேண்டுவது அவசியம்.

இதே சமயத்தில்தான் வடநாட்டில், அப்கானிஸ்தானத்து முஸ்லிம் மன்னனான மம்மூத் அடிக்கடி, ஏன் வருஷந் தோறும், படையெடுத்து வந்து சூறையாடிக் கொண்டிருந்தான். அவனுடைய பிரம்மாண்டமான படைகள், நூறாயிரம் குதிரைகள், ஏராளமான யானைகள், கணக்கற்ற காலாட்படைகள் கொண்டு காட்டாறுபோல ஹிந்துஸ்தானத்தின் மீது ஆண்டுதோறும் பாய்ந்துவந்தன. 'காபிரிகளை வென்று' இஸ்லாம் மதத்தைப் பரப்புவது அவனுடைய நோக்கம் அல்ல. நாட்டைக் கொள்ளைகொண்டு எவ்வளவு தூரம் முடியுமோ அவ்வளவு பொன்னையும் மணியையும் திரட்டி எடுத்துச் செல்வதிலேயே அவன் கண்ணாக இருந்தான். வடநாட்டு மன்னர்களிலே அவன் படையெடுப்பினால் நேரடியாகப் பாதிக்கப்பட்டவர்களும், படையெடுத்து வரக்கூடும் என்று அஞ்சியவர்களும் ஒன்று சேர்ந்து அவனை எதிர்த்துப் போரில் முறியடித்து மீண்டும் அவன் படையெடுத்து வராமல் தடுத்து நிறுத்த முயன்றார்கள். ஆனால் அவர்களுடைய எதிர்ப்பு போதிய பலம் வாய்ந்ததாக இல்லை. அவர்களால் அவனைத் தடுத்து நிறுத்தமுடியவில்லை. அன்றி அவன் ஒவ்

வொரு வருஷமும் வெவ்வேறு பகுதியைக் குறிவைத்துப் படைகளை நடத்தி வந்தான். முக்கியமாக முன் படையெடுப்புகளில் அவனை எதிர்த்த வேற்று நாடுகளையே அவன் அவ்விதம் குறிவைத்தான் என்றும் சொல்லலாம்.

கன்னோசி என்றும் கன்யாகுப்ஜம் என்றும் வழங்கப் பெற்று வந்த பிரதேசத்தை அந் நாளிலே ராஜ்யபாலன் என்பான் ஆண்டு வந்தான். அவனும் பக்கத்து நாட்டு அரசர்களோடு சேர்ந்துகொண்டு முஸ்லிம் படையெடுப்பை எதிர்த்துப் போராடியிருந்தான் என்று தெரிகிறது. அதனால் கி. பி. 1018-ஆம் ஆண்டில் அவனுடைய நாட்டை மம்மூது தன் படையுடன் தாக்கினான். முஸ்லிம் சேனை கன்யாகுப்ஜ நகரத்தின் தலைவாசலுக்கு வந்தவுடனே ராஜ்யபாலன் பீதியடைந்தான். அவன் தலைநகரம் நல்ல அரண்வலி கொண்டதாக இருந்தாலும் அதைப் பொருட்படுத்தாமல் பயத்தால் செத்துத் தீவிரமாகப் போர்புரியாமல் நகரத்தைக் கைவிட்டுக் கங்கையைக் கடந்து பாரி என்னும் இடத்துக்கு ஓடிவிட்டான். அதன்மீது எதிர்ப்பு ஏதும் இல்லாதபடியால், முஸ்லிம் மன்னன் ராஜ்யம் முழுவதையும் ஒரே நாளில் கைக்கொண்டு நாட்டைச் சூரையாடுவதற்கும் தன் சேனைக்கு அனுமதி அளித்தான். கோயில்கள் இடித்துத் தரைமட்டமாக்கப்பட்டன. குடிமக்கள் பலர் கொன்று குவிக்கப்பெற்றனர். படையெடுப்பின் முடிவில் மம்மூது கஜ்னி(கஜ்ன)க்குத் திரும்பும்போது ஏராளமான பொன்னும் மணியும் கொள்ளைப் பொருள்களும் கொண்டு போனான்.

ராஜ்யபாலன் இவ்விதம் கோழைத்தனமாக நடந்து கொண்டது பக்கத்து நாட்டு மன்னர்களுக்குப் பெரிதும் ஆத்திரம் மூட்டியது. அதனால் படையெடுத்துவந்தவன் திரும்பிப் போனவுடன் அவர்கள் ஒன்று சேர்ந்து ராஜ்யபாலனைத் தண்டிக்க முற்பட்டனர். அந்தக் கோஷ்டிக்குத் தலைவனாக இருந்தவன் பெயர் முஸ்லிம் சரித்திரங்களில் எழுதியிருப்பதைக் கண்டன், நந்தன் அல்லது விதன் என்று பலவிதமாகப் படிக்க முடியும். அவன் காலஞ்சர நகரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த சந்தெல்லர் என்னும் சந்த்ராத்ரேய

வமிசத்து மன்னனுன வித்தியாதரன் ஆவன் என ஆராய்ச்சி யாளர் நிர்ணயித்திருக்கிறூர்கள். (டாக்டர் எச். ஸி. ராய் எழுதிய வட இந்தியாவின் ராஜ வமிச சரித்திரம், இரண்டாம் வால்யூம், பக்கம் 688). அந்தக் கூட்டில் இன்னும் யார் யார் சேர்ந்திருந்தார்கள் என்பது எந்த இடத்திலும் குறிக்கப்பெறவில்லை.

இந்தக் கூட்டுக்குத் தலைமை தாங்கிய வித்தியாதரன் தன்னிடம் ஒப்படைக்கப்பெற்ற காரியத்தைச் செய்து முடிப்பதிலே வெற்றி பெற்ருன். ராஜ்யபாலன் போரிலே உயிர் இழந்தான். அவன் மகன் திரிலோசன பாலனைச் சிங்காதனத்தில் அவர்கள் அமர்த்தினர். இந்தச் செய்தியைக் கேள்வியுற்ற மம்மூது கனல் பறக்கக் கோபித்தான். தன்னை அவமதிக்கத் துணிந்த அம் மன்னர்களுக்குப் புத்தி கற்பிக்கத் தீர்மானித்தான். அதனுல் அவன் அடுத்த வருஷம், அதாவது கி. பி. 1019-ஆம் ஆண்டு, கன்னேசியின்மீது படையெடுத்து வந்தான். திரிலோசனபாலன் தன் தந்தையைப் போல எதிரிக்குப் பணிந்து போய்விடவில்லை; எதிர்த்து நின்று போராடினுன். ஆனுலும் வெற்றி கொள்ளமுடியவில்லை. ஒரு சமயம் திடீரெனத் தாக்குண்டதால் அவன் தோல்வியுற நேரிட்டது. ஆகவே அவன் அதுகாறும் தலைநகராக விளங்கிய பாரியையும் துறந்து ஓடிவிட்டான்.

அதன்மீது மம்மூது தன் பெரும் படையுடன் இவ்வளவுக்கும் காரணமாகக் கருதப்பட்ட வித்தியாதரனைத் தாக்கப் போர்க்கோலம் பூண்டு வந்தான். வித்தியாதரன் பயந்து போய், "தன்னுடைய மூட்டை முடிச்சுகளையெல்லாம் போட்டவை போட்டபடியே விட்டுவிட்டு, உடன் கூட்டத்தாரான பரிவாரத்தோடு" ஓடிவிட்டான் என்று முஸ்லிம் சரித்திரங்கள் கூறுகின்றன.

ஆனுல் அந்தப் போர் யாருக்கும் வெற்றி தோல்வி கிட்டாமல் முடிவடைந்ததென்றே எண்ணவேண்டியிருக்கிறது. கி.பி. 1021-22-ஆம் ஆண்டில் மம்மூது மறுபடியும் காலஞ்சர நகரத்தின் மீது படையெடுத்து வந்தான். வித்தியாதரன் "அதன் மீது சுல்தானைப் புகழ்ந்து ஹிந்து மொழியில் சில பாடல்களை

இயற்றி அவற்றைச் சுல்தானுக்கு அனுப்பிவைத்தான். சுல்தான் அவற்றை ஹிந்துஸ்தானத்தின் பெரிய வித்துவான்களிடமும் தன் சபையிலிருந்த வேறு புலவர்களிடமும் காண்பித்தான். அவர்கள் எல்லோரும் அந்தக் கவிதைகளைப் பெரிதும் பாராட்டினார்கள். அதன்மீது சுல்தான் தன்னுடைய பாராட்டுதலைத் தெரிவித்து, பதிலாகப் பதினைந்து கோட்டைகளின் அதிபதிப் பதவியையும் வேறு பல பரிசுகளையும் அனுப்பிவைத்தான். நந்தாவும் (அதாவது வித்தியாதரனும்) சுல்தானுக்குப் பொன்னும் மணியும் காணிக்கை அனுப்பிவைத்தான்." (பிப்ளியோதகா இந்திகா தொகுதியில் பி. டே என்பார் மொழிபெயர்த்து வெளியிட்ட தபகத்-ஈ-அக்பரீ, பக்கம் 14.)

முஸ்லிம் ஆசிரியர்கள் பலபடியாகப் புகழ்ந்து கூறும் அவர்களுடைய சரித்திரங்களை ஊன்றிக் கவனித்தால், எவ்வளவுதான் முயன்றும் மம்மூதினால் காலஞ்சர நகரத்தைக் கைப்பற்ற முடியவில்லை யென்றும் கடைசியில் யாருக்கும் வெற்றி தோல்வி இல்லாமல் பரஸ்பரம் பரிசுகளைப் பரிமாறிக் கொண்டதோடு போர் முடிவடைந்தது என்றும் எண்ண வேண்டியிருக்கிறது. (கூர்ஜ்ஜர தேசத்தின் பழம் பெருமை என்ற பெயரில் ஸ்ரீ கே. எம். முன்ஷி எழுதிய நூலின் மூன்றும் பாகமான கூர்ஜ்ஜர ஸாம்ராஜ்யம், பக்கங்கள் 134-5). இந்தச் சம்பவத்தோடு முஸ்லிம் மன்னன் கங்கைச் சமவெளியைக் கைக்கொள்ள வேண்டுமென்ற தன் ஆசையை அறவே ஒழித்துவிட்டு, வேறு பகுதிகளில் தன் கவனத்தைச் செலுத்த நேர்ந்தது. (இந்தியன் ஆண்டிகுவரி, முப்பத்தேழாம் வால்யூம், பக்கம் 142.) இவ்விதம் கிழக்குப் பகுதியில் தன் எண்ணம் ஈடேற முடியாமல் போனதால் மம்மூது கூர்ஜ்ஜரத்தின் மீது படையெடுத்துச் சென்றான். அதன் முடிவுதான் சோமநாதபுர ஆலயக் கொள்ளை.

இந்த நிலையில், வடக்கே வித்தியாதரனைத் தண்டிப்பதற்காக மம்மூது காலஞ்சர நகரத்தின்மீது படையெடுத்து வந்து வெற்றி காணமல் திரும்பிச் சென்ற அதே ஆண்டுதான் இராஜேந்திர சோழனுடைய கங்கா விஜயமும் நிகழ்ந்தது. அந்தப் படையெடுப்பைப்பற்றி அவன் மெய்க்கீர்த்தி கூறுவது:

"விக்கிரம வீரர் சக்கரக் கோட்டமு
முதிர்பட வல்லை மதுரை மண்டலமும்
காமிடை வளை இய நாமணைக் கோணமும்
வெஞ்சின வீரர் பஞ்சப் பள்ளியும்
பாசடைப் பழன மாசுணி தேசமும்
அயர்வில்வண் கீர்த்தி யாதிநக ரகவையிற்
சந்திரன் தொல்குலத் திந்திர ரதனை
விளையமர்க் களத்துக் கிளையொடும் பிடித்தும்
பலதனத் தொடுநிறை குலதனக் குவையும்
கிட்டருஞ் செறிமிளை ஒட்ட விஷயமும்
பூசுரர் சேருநற் கோசலை நாடும்
தன்ம பாலனை வெம்முனை யழித்து
வண்டுறை சோலைத் தண்ட புத்தியும்
இரண சூரனை முரணறத் தாக்கித்
திக்கணை கீர்த்தித் தக்கண லாடமும்
கோவிந்த சந்தன் மாவிழிந் தோடத்
தங்காத சாரல் வங்காள தேசமும்
தொடுகழற் சங்குகொ டடல்மகி பாலனை
வெஞ்சமர் வளாகத் தஞ்சுவித் தருளி
ஒண்டிறல் யானையும் பெண்டிர்பண் டாரமும்
நித்தில நெடுங்கட லுத்தர லாடமும்
வெறிமலர்த் தீர்த்தத் தெறிபுனற் கங்கையும்"

தாரா நகரத்திலிருந்து அரசு செலுத்திய பரமார குல மன்னனுன போஜராஜன் இந்திரரதன் என்பான் ஒருவனை வெற்றிக் கொண்டான் என்று உதயபூர்ச் சாசனம் கூறுகிறது. (எபி. இந்திகா, முதல் வால்யூம், பக்கங்கள் 223-38). இராஜேந்திரசோழன் ஆதி நகரில் முறியடித்தான் என்று கூறப்பெறும் சந்திர குலத்து இந்திரரதனும் அவனே போலும். மேலைச் சாளுக்கிய மன்னனுன ஜயஸிம்ஹனுடைய காலத்தில், கி. பி. 1028-ஆம் கொண்டதாகக் குலேநூர் என்னுமிடத்திலிருந்து கிடைக்கும் கல்வெட்டு ஒன்றிலிருந்து அவன் சோழ மன்னன், காங்கேயன், போஜராஜன் ஆகியோர்களுடைய யானைப் படையை அழித்தான் என்பது தெரியவருகிறது. ஜயஸிம்ஹனுடைய படைத் தலைவனுன

குந்திகன் என்பானைப் புகழ்ந்துரைக்கும் பின்வரும் கன்னடச் செய்யுள் அந்தச் சாசனத்திலே உள்ளது.

> மொனெயொள் குந்திக நிந்நநெந்து பெற
> ரிந்நெ வண்ணிபர்த்தா தூர்த்
> திந மத்தேபதிநட்டு பெத்து ரணதோள்
> பெந்நித்து தந்தாஹவக்
> கிநிசுந்நில்லதெ தூழ்து போத பயதிம்
> பெந்நித்து பாய்விட்டு சோ
> ழந காங்கேயந போஜராஜந கஜா
> நீகங்களெம் பேலவே.

"ஏ குந்திகா! போர் முனையில் காட்டும் சௌரியத்துக்கு உதாரணமாக உன்னை அவர்கள் குறிக்கும்போது, மற்றவர்கள் உனக்கு அதிகப்படியாக வேறு என்ன புகழை அளிக்க முடியும்? சோழ மன்னன், காங்கேயன், போஜராஜன் ஆகியவர்களுடைய யானைப் படையைச் சேர்ந்தவர்கள், உன்னுடைய யானைகள் கன்னங்களில் வழியும் மதத்துடன் போரிலே அவர்களைத் தாக்கியபோது, பயங்கொண்டு தாங்கள் திருப்பித் தாக்குவதற்கும் காத்திருக்காமல், திறந்த வாயை மூடாமல் ஓடும்போது இதைத்தானே சொன்னார்கள்!" (ஷை. பதினைந்தாம் வால்யூம், பக்கம் 333).

கி.பி. 1019-ஆம் ஆண்டு கொண்ட அம் மன்னனுடைய மற்றொரு சாசனம் அவனைப் 'போஜராஜனாகிய தாமரைக்குச் சந்திரன் போன்றவன்' என்று வருணிக்கிறது. (இந்தியன் ஆண்டிகுவரி, ஐந்தாம் வால்யூம், பக்கம் 17). இன்னும் அவன் 'மாளவ அரசனுடன் கூடியிருந்தவர்களையும் தேடிப் பிடித்துப் பின்தொடர்ந்து முறியடித்துத் துரத்தினான்' என்று அதே சாசனம் கூறுகிறது. இவ்விதம் போஜராஜனோடும் காங்கேயனோடும் சேர்ந்துகொண்டு மேலைச் சாளுக்கிய மன்னனை ஜயஸிம்ஹனுடன் போரிட்டிருக்கக் கூடிய சோழ வேந்தன் முதலாம் இராஜேந்திரனாகவே இருத்தல் வேண்டும். கி. பி. 1020-ஆம் ஆண்டு கொண்ட போஜராஜனுடைய பன்ஸ்வாராச் செப்பேடுகள் (எபி. இந்திகா, பதினோராம் வால்

லூம், பக்கம் 182) பேத்மாச் செப்பேடுகள் (ஷை பதினெட்டாம் வால்லூம், பக்கம் 320) ஆகிய இரண்டிலிருந்தும் அவன் கொங்கணத்தை அடிப்படுத்தி அந்த வெற்றி (கொங்கண கிரஹண விஜய பர்வணி)யைப் பெரியதொரு விழாவாகக் கொண்டாடினன் என்பது தெரியவருகிறது. இராஜேந்திர சோழனுடைய மெய்க்கீர்த்தியிலிருந்து அவன் முயங்கியில் போர் நடத்தியதும் இரட்டபாடி ஏழரை யிலக்கம் கைக் கொண்டதும் அதே சமயத்தில் நிகழ்ந்தவை என்பது தெரிய வரும்.

அவர்கள் கூட்டிலே சேர்ந்திருந்த மூன்றும் அரசன் சேதி நாட்டுத் திரிபுரீ நகரத்திலிருந்து அரசு செலுத்தி வந்த ஹைஹயர் எனப்பெறும் கலசூரி வமிசத்தைச் சேர்ந்த காங்கேய விக்கிரமாதித்தியன் ஆவான்.

போஜராஜன், காங்கேயன் ஆகிய இருவரும் முஸ்லிம்களை எதிர்த்துப் போர் நிகழ்த்தியிருக்கிறார்கள். மாளவ தேசத்து மன்னர்களுடைய புகழைக் கூறும் உதயபூர்ப் பிரசஸ்தி என்னும் சாசனத்திலே போஜனைப் பற்றிப் பின்வரும் சுலோகம் காணப்படுகிறது.

> சேதீச்வ ரேந்திரரத[தொக்க]ல [பீமமு]க்யான்
> கர்ணாட லாடபதி கூர்ஜ்ஜர ராட் துருஷ்க்கான்
> யத்ப்ருத்ய மாத்ர விஜிதாந் அவலோ[க்ய]மௌலா
> தோஷ்ணாம் வ(ப)லாநி கலயந்தி ந[யோத்த்ர்]லோ[காந்]

"கர்நாடர், லாடபதி, கூர்ஜ்ஜர அரசன், துருஷ்க்கர்கள் இன்னும், சேதீச்வரன், இந்திரரதன், தொக்கலன், பீமன் ஆகியவர்களை முக்கியமாகக் கொண்ட மன்னர்களை இவ்வரசனுடைய வேலைக்காரர்களான கூலிப் படையே தோற்கடித்ததைக் கண்டு இவனுடைய நிலைப்படையான சேனை போர்ப் படையின் தொகைப் பெருக்கத்தைக் கருதாமல் தங்கள் தோள் வலிமையையே கொண்டு பெருமிதம் அடைந்தார்கள்." (எபி. இந்திகா, முதல் வால்லூம், பக்கம் 235, சுலோகம் 19).

முஸ்லிம் சரித்திர ஆசிரியரான பிரிஷ்டா பின்வருமாறு எழுதியிருக்கிறார்: "ஹிஜ்ரி 399 (கி. பி. 1008)-ஆம் ஆண்டில்

மம்மூது மறுபடியும் ஹிந்துஸ்தானத்தின்மீது படையெடுத்து, முன் மூல்தான்மீது படையெடுத்துச் சென்ற காலத்தில் தன்னிடம் மிகுந்த அலட்சிய புத்தியைக் காண்பித்து அகம் பாவமாக நடந்துகொண்ட அனந்தபாலனைத் தண்டிக்க வேண்டுமென்று தீர்மானித்துப் படைகளைத் திரட்டினான். இவன் அவ்விதம் செய்வதைக் கேள்வியுற்ற அனந்தபாலன் தன்னுடைய தூதர்களைப் பலதிசைகளிலும் அனுப்பி ஹிந்துஸ்தானத்து மற்ற அரசர்களைத் தனக்குத் துணைபுரிய வேண்டினான். முகம்மதியர்களை இந்தியாவிலிருந்து துரத்துவதைத் தர்மமாக, புனித கைங்கரியமாக, ஹிந்துஸ்தான மன்னர்கள் இப்போது கருதினார்கள். அவ்விதமே உஜ்ஜைன், குவாலியர், காலிஞ்சர், கன்னௌஜ், தில்லி, அஜ்மீர் அரசர்கள் ஒன்றாகச் சேர்ந்து தங்கள் படையைத் திரட்டிப் பஞ்சாபை நோக்கி முன்னேறினார்கள்." (எல்லியட் என்பவர் மொழிபெயர்த்து டௌஸன் என்பார் பதிப்பித்த 'இந்திய சரித்திரம்—மூல ஆசிரியர்கள் கூறியவிதம்' என்ற நூலின் இரண்டாம் வால்யூம், 406 பக்கம் முதல்). அந்நாளிலே மாளவ தேசத்துக்கு உஜ்ஜியினியே தலைநகரமாக இருந்தது. அதனால் பிரிஷ்டா குறிப்பிட்ட உஜ்ஜைன் அரசன் போஜராஜனாகவே இருத்தல் வேண்டும்.

போஜராஜன், இராஜேந்திர சோழன் ஆகிய இருவருடன் சேர்ந்திருந்த மூன்றாம் மன்னனை சேதி நாட்டுக் கலசூரி அரசன் காங்கேய விக்கிரமாதித்தியனும் வலிமை வாய்ந்தவனே. அவனுடைய ஆட்சி கி. பி. 1019-ஆம் ஆண்டிலே நடைபெற்று வந்திருக்கிறதென்று தெரிகிறது. (வங்காளத்து ஏஷ்யாடிக் ஸோஸைட்டி ஜர்னல், 1903-ஆம் ஆண்டு, முதல்பாகம், பக்கம் 18). அது கி. பி. 1042-ஆம் ஆண்டுக்குச் சற்று முன்னதாக முடிவடைந்திருக்க வேண்டும். (எபி. இந்திகா, இரண்டாம் வால்யூம், பக்கம் 297). சந்தெல்லர் அல்லது சந்திராத்ரேயர்களுடைய புகழைக் கூறுவதாக மஹோபா என்னுமிடத்திலிருந்து கிடைத்துள்ள கல்வெட்டில், கன்னோசி வேந்தனை ராஜ்யபாலனைப் பழிவாங்கிய வித்தியாதரனைப் பற்றிப் பின்வருவது காணப்படுகிறது :

"விஹித கந்யாகுப்ஜ பூபால பங்கம்
ஸமரகுரும் உபாஸத ப்ரௌடபீஸ் தல்ப பாஜம்
ஸஹ கலசூரி சந்த்ரஃ சிஷ்யவத் போஜ தேவஃ"

"கன்யாகுப்ஜத்துப் பூபாலனைப் பங்கப்படுத்தியவனும் போர்க்கலை அரசனுமான [வித்தியாதரனைப்] போஜராஜனும் கலசூரி சந்திரனும் ஆசிரியனாகக் கொண்டு பயபக்தியோடு தொழுது நின்றார்கள்." (ஷை முதல் வால்யூம், பக்கங்கள் 221-22, சுலோகம் 22). இதிலிருந்து கி.பி. 1019-ஆம் ஆண்டில் கன்யாகுப்ஜத்து அரசனான ராஜ்யபாலனுக்கு விரோதமாக வித்தியாதரனோடு ஒன்று சேர்ந்திருந்த மன்னர்களில் போஜ ராஜனும் காங்கேய விக்ரமாதித்தியனும் கூடியிருந்து வித்தியாதரனைப் பின்பற்றிச் சென்றனர் என்பது விளங்கும்.

இதுகாறும் கூறியவற்றைக் கவனிக்கும்போது, குலே னூர்க் கல்வெட்டின்படிச் சற்றேறக்குறைய இதே காலத்தில் போஜராஜனோடும் காங்கேயனோடும் நட்புக்கொண்டு கூட்டா கப் போர்களை நிகழ்த்திய இராஜேந்திர சோழனும் கி. பி. 1021-22-ஆம் ஆண்டிலே காலஞ்சர நகரத்தின்மீது முஸ்லிம் படையெடுப்பு நடந்த காலத்தில் சந்தெல்ல மன்னனான வித்தி யாதரனுக்கு உதவுவதற்காக அவர்களோடு சேர்ந்துகொண் டிருத்தல் கூடும் என்று எண்ணுவது இயற்கையே.

இராஜேந்திரன் வெற்றி கொண்டனவாக அவனுடைய மெய்க்கீர்த்தியில் காணப்படும் ஊர்ப் பெயர்களைக் கவனித்தா லும் இது ஓர் அளவு ஊர்ஜிதமாகும்.

சக்கரக்கோட்டத்தைக் கைப்பற்றிய பிறகு இராஜேந்திர சோழன் மதுரை மண்டலம், நாமணைக்கோணம், பஞ்சப் பள்ளி, மாசுணி தேசம் ஆகிய இடங்களைக் கைப்பற்றினன் என்று மெய்க்கீர்த்தி கூறுகிறது. சக்கரக்கோட்டம் என்பது மத்தியப் பிரதேசத்தைச் சேர்ந்த பஸ்தர் ராஜ்யத்தில் உள்ள சித்ரகூட் என்னும் ஊராகும். கி. பி. 1065-ஆம் ஆண்டு கொண்டதாக ராஜாபுரத்திலிருந்து கிடைத்த நாகவம்ச அரசனான மதுராந்தகனுடைய செப்பேட்டுச் சாசனத்தில் இது சக்ரகோட்யம் என்று காணப்படுகிறது. (எபி. இந்திகா, ஒன்பதாம் வால்யூம், பக்கம் 178-9).

ராஜாபுரம் செப்பேடுகளை வழங்கிய சிந்தகர்கள் நாகவமி சத்தைச் சேர்ந்தவர்கள்; தங்களை நாகவம்சோத்பவர்கள் என்றும் போகவதீபுரவரேச்வரர்கள் என்றும் கூறிக்கொள்ளுகிறார்கள். மாசுணிதேசம் என்றால் 'பாம்புகளின் நாடு' எனப் பொருள் படும்; அதனால் அது சிந்தகர்களுடைய ஆட்சிப் பிரதேசமே யாகும் எனக் கொண்டுள்ளார்கள். இந்த முடிவின்படி 'மதுரை மண்டலம், நாமணைக்கோணம், பஞ்சப்பள்ளி ஆகியவை மாசுணி தேசத்தின் பகுதிகளாகின்றன.'' மாசுணி தேசமே சக்கரக்கோட்டப் பகுதியில் சேர்ந்திருத்தல் வேண்டும். இவ்விதம் மேலே குறிக்கப்பட்ட பிரதேசங்கள் எல்லாம் ஒரு சிறு பகுதியிலே அடங்கியிருந்தனவென்று கொண்டிருக்கிறார்கள். (க. அ. நீலகண்ட சாஸ்திரிகள் எழுதிய சோழர்கள், முதல் வால்யூம், பக்கம் 250).

ஆனால் ஒரு விஷயத்தை நாம் கவனிக்கவேண்டும். மெய்க்கீர்த்தியில் காணும் ஊர்ப் பெயர்களை அதே பொருளைத் தரக்கூடிய வேறு இரண்டு மூன்று சொற்களால் மொழிபெயர்த்துக் கொடுப்பது இல்லை. இதேபோல நடந்திருப்பதாக வேறு உதாரணம் எதுவும் காட்டமுடியாது. அதனால் மாசுணி தேசம் நாக நாடாக, அதாவது நாகர்கள் ஆட்சிக்குப்பட்டிருந்த பகுதியாக, இருந்திருக்கமுடியாது. அதே பெயரைக் கொண்ட ஒரு பிரதேசமாகவே இருத்தல் வேண்டும்.

அத்தகைய பிரதேசம் ஒன்று ஸிந்துவின் வட பகுதியிலே இருந்திருக்கிறது. கிரேக்க அரசனை அலெக்சாண்டருடைய படையெடுப்பைப்பற்றி எழுதும் கிரேக்க சரித்திர ஆசிரியரான டயடோரஸ், அம்மன்னன் பஞ்சாபில் நதிசங்கமங்களைக் கடந்து சிந்து நதியின் வழியே படகில் வந்ததை விவரிக்கும்போது பின்வருமாறு எழுதுகிறார்: "ஆற்றிலே நீரோட்டத்தின் வழியே படகைச் செலுத்திச் செல்லுகையில் மன்னன் நதியின் இருகரையிலும் எதிர் எதிராக வாழ்ந்த ஸோத்ரே, (அல்லது சோத்ரி) மாசணி (அல்லது மாசணே) ஆகிய இரண்டு வகுப்பாருடைய சரணாகதியை ஏற்றுக்கொண்டான்.'' (கன்னிங்ஹாம் எழுதிய புராதான இந்தியாவின் பூகோளம், சுரேந்திரநாத் மஜூம்தார் சாஸ்திரியின் பதிப்பு, பக்கம் 290)

இந்த ஓர் இடத்தைத் தவிர இந்தியா முழுவதிலும் இதே போன்ற பெயரையுடைய பிரதேசம் வேறு எங்கும் இல்லை; இது ஒன்றுதான். சோழர்களுக்குத் துணைவனாக இருந்த பரமார மன்னனான போஜராஜன் ஸிந்து நாட்டிலே முஸ்லிம்களை வெற்றி கொண்டதாகப் புகழ்ப்பெறுகிறான். (கே. எம். முன்ஷி எழுதிய கூர்ஜ்ஜர ஸாம்ராஜ்யம், பக்கம் 139; அனுபந்தம் எப், பக்கங்கள் 280-81; டி. ஸி. கங்கூலி எழுதிய பரமார வமிச சரித்திரம், பக்கங்கள் 99-101). ஆகவே, இராஜேந்திரன் கைக் கொண்டதாக அவனுடைய மெய்க்கீர்த்தியிலே குறிக்கப் பெறும் மாசுணி தேசம் ஸிந்துநதி தீரப் பிரதேசமே யாகும் எனக் கொள்வது தவறாகாது.

மதுரை மண்டலம் என்பது யமுனை நதிக்கரையில் உள்ள மதுரா நகரத்தைச் சுற்றிய பிரதேசமே போலும். தமிழ் நாட்டிலே இரண்டு மதுரைகள் மட்டுமே பிரசித்தம். ஒன்று பாண்டியர்களின் தலைநகரான தென் மதுரை. மற்றொன்று கிருஷ்ண பகவான் பிறந்து விளையாடியதாகப் புராணப் பிரசித்திபெற்ற வட மதுரை. இராஜேந்திர சோழன் காலத்திலும் வட மதுரை புகழ்பெற்று விளங்கியது. கஜ்னியின் சுல்தானான மம்மூது கொள்ளையிட்ட நகரங்களின் பெயர்களிலே இந்நகரின் பெயரும் முக்கியமானதாகக் காணப்படுகிறது. அன்றி, நதூல தேசத்து அரசன் மஹேந்திர ராஜனுடைய சகோதரியான துர்லபதேவியை அனஹில பாடக நகரத்து அரசனான துர்லபராஜன் (கி. பி. 1010-முதல் 1022-வரையில் அரசு செலுத்தியவன்) மணந்து கொண்ட சமயம் நடந்த சுயம்வரத்துக்கு அங்கதேசம், காசிதேசம், அவந்தி (உஜ்ஜயினி), சேதிதேசம், குருதேசம், ஹூண தேசம், மதுராதேசம், விந்தியதேசம் போன்ற நாட்டு மன்னர்களும் வந்திருந்தார்கள் என்று ஹேமசந்திரர் தம்முடைய துவயாச்ரயம் என்னும் நூலில் எழுதியிருக்கிறார். (ஏழாம் சர்க்கம், 547-பக்கம் முதல்.) குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழும் வடமதுரை, அதாவது யமுனைக் கரையில் உள்ள மதுரா நகரம், சோழர்களைச் சேர்ந்ததென்றும் அவர்களுடைய ஆட்சி அங்கே நிலவியிருந்தது என்றும் பொருள் படுமாறு,

“ வட மது ரையிலொரு புடையிடை வனிதையர்
மெய்க்கவின் மைக்காவின்
வயிறற மணியுக வரிவளை யுடனணி
பொற்றொடி சிற்றுடை
கொடிமறு கடையவு மொளிபெற வருமுகில்
கொட்டுக சப்பாணி ”

(பாடல் 34)

எனவும்,

“ மருக்கமழும் வடமதுரை வளநகர்க்கும் பழையோம் ”

(சிறுதேர்ப்பருவம்-பாடல் 95)

எனவும், கூறுகிறது.

இவ்விதம் கொண்டு மெய்க்கீர்த்தியை மேலெழுந்தவாரியாகக் கவனித்தாலும் அரசன் சக்கரக் கோட்டத்தை விட்டுக் கிளம்பிக் கங்கைக் கரையை அடைவதற்கு முன்னதாக, இடைப்பட்டுள்ள பிரதேசத்து நாடுகளைப்பற்றிய பிரஸ்தாபமே இல்லை யென்பதை அறியலாம். இதிலே வியப்புறுவதற்கு ஏதும் இல்லை. இடைப்பட்ட நாடுகள் அவனுடைய நேசக் கட்சியைச் சேர்ந்த போஜன், காங்கேயன், வித்தியாதரன் ஆகியவர்களுடைய ஆளுகைக்கு உட்பட்டவை. அவற்றின் வழியாக அவன் தன் படைகளை நடத்திச் சென்றானே ஒழிய, போரிட்டு அந்தப் பகுதிகளைக் கைக்கொள்ளவில்லை. அதனாலேயே அந்த இடைப்பிரதேசத்தை அவன் தன்னுடைய வெற்றியாக மெய்க்கீர்த்தியில் குறிப்பிடவில்லை.

சோழ மன்னன் வென்று அடிப்படுத்தியதாகக் கூறிக் கொள்ளும் பிரதேசங்களையே போஜராஜன், காங்கேயன் ஆகிய இருவரும் வெற்றி கொண்டதாகக் குறிப்பிடுவதையும் நாம் கவனிக்கவேண்டும். போஜராஜன் கௌட தேசம், தக்ஷிணபதம் உள்படப் பரந்த பிரதேசத்தை ஆண்டு வந்தான் என்பதை,

பஞ்சாசத் பஞ்ச வர்ஷாணி மாஸா: ஸப்த தின த்ரயம்
போக்தவ்யம் போஜராஜேந ஸ கௌடம் தக்ஷிணபதம்

என மேருதுங்கர் தம்முடைய பிரபந்த சிந்தாமணியில் முஞ்சப் பிரபந்தத்தில் (பக்கம் 57) கூறுகிறார். இந்திரரதனைப் போஜ

ராஜன், இராஜேந்திர சோழன் ஆகிய இருவரும் அடிப்படுத்தி யிருக்கிறார்கள். சேதி மன்னனான காங்கேயன் அங்க நாட்டு அரசனை ஜயித்திருக்கிறான். (லக்ஷ்மீ-கர்ணனுடைய கோஹார் வாச் செப்பேடுகள், எபி. இந்திகா, பதினோராம் வால்யூம், பக்கம் 143, சுலோகம் 17.) கி. பி. 1038-ஆம் ஆண்டு கொண்ட அவனு டைய பியாவன் மலைக் கல்வெட்டிலிருந்து அவனுடைய ஆட்சி மேற்கே ரேவா வரையிலும் பரவியிருந்ததென்று தெரியவரு கிறது. (இந்தச் சாசனம் கன்னிங்ஹாம் அவர்களால் ஆர்க்கிய லாஜிகல் ஸர்வே ரிபோர்ட், இருபத்தோராம் வால்யூம், 112-13-ஆம் பக்கங்களில் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது).

காசி நகரமும் காங்கேயனுடைய ஆட்சிக்கு உட்பட்டிருந் ததாகத் தெரிகிறது. கி. பி. 1033-ஆம் ஆண்டு அளவில் அந் நகரம் காங்கேயனுடைய ராஜ்யத்தில் சேர்ந்திருந்ததாகப் பைஹகி என்னும் முஸ்லிம் சரித்திர ஆசிரியர் கூறுகிறார். (எல்லியட்டும் டௌஸனும் வெளியிட்ட 'இந்திய சரித்திரம்-அந் நாட்டுச் சரித்திர ஆசிரியர்கள் கூறியபடியே', இரண்டாம் வால் யூம், தரீக்-ஈ-பைஹகி, பக்கம் 213).

அப்போது பஞ்சாபிலே அஹ்மத் நியால்திகீன் என் னும் முஸ்லிம் கவர்னராக இருந்தான். அவன் யமினீ அரச னை முதலாம் மஸஊதின் தளகர்த்தனுமாவன். தன்னுடைய அரசனை கஜ்னி சுல்தான் பிடிப்பிலிருந்து தன்னை விடு விடுத்துக் கொள்வதற்காகத் தான் திட்டமிட்ட சூழ்ச்சிகளை நிறைவேற்றுவதற்கு வேண்டிய பொன்னையும் மணியையும் பெறுவதற்காக அவன் கன்யாகுப்ஜத்தின்மீது படையெடுத்து வந்து காசியையும் அடைந்தானாம். அதற்கு முன் அந் நக ரத்துக்கு முஸ்லிம் அரசன் யாரும் வந்ததில்லை. ஆகவே அவ னுக்கு அங்கே ஏராளமான கொள்ளை கிட்டியது. அவற்றைத் திரட்டிக்கொண்டு அவன் திரும்பவும் கன்னோசி வழியாகவே தன் நாட்டை அடைந்தான்.

தாரா நகரத்துப் போஜராஜன் மகா வித்துவான் என் றும், வித்துவான்களை ஆதரித்தவன் என்றும் கூறுவார்கள். அதேபோல இராஜேந்திர சோழனும் விளங்கினான் என்பது பண்டித சோழன் என்னும் அவனுடைய விருதிலிருந்து தெரிய

வரும். இன்னும் அவன் கொண்டிருந்த மற்றொரு விருதான கங்கைகொண்ட சோழன் என்பதைப்போன்றதே சேதி நாட்டு மன்னனான விக்கிரமாதித்தியனுடைய காங்கேயன் என்னும் விருதுமாகும்.

[இந்த நிலையில் ஒரு விஷயத்தை நாம் மறக்கக்கூடாது. காங்கேயனுடைய ஆட்சிக்காலம் கி. பி. 1019-ஆம் ஆண்டி லிருந்தே நடந்துவந்ததாக நாம் மேலே குறிப்பிட்டிருக்கிறோம். அவ்விதமாயின் கங்காவிஜயத்து வெற்றியின் பயனாக அவன் அந்த விருதைத் தரித்துக்கொண்டான் என்று கூறுவது பொருந்தாததாகும். நேபாளத்திலிருந்து கிடைத்த ஒரு ராமா யணப் பிரதியின் முடிவில் அது பிரதி செய்யப்பெற்ற காலம் பின் வருமாறு எழுதப்பட்டிருக்கிறது. "ஸம்வத் 1076 ஆஷாட வதி 4 மஹா ராஜாதி ராஜ புண்யாவலோக ஸோம வம்சோத் பவ கௌட (கருட)த்வஜ ஸ்ரீமத் கங்காய தேவ பூஜ்யமாநே தீரபுக்தௌ கல்யாண விஜயராஜ்யே...." அதில் குறிக்கப்பட்ட வருஷத்தை விக்கிரம ஆண்டாகக் கொண்டு கி.பி. 1019 எனக் கணக்கிட்டிருக்கிறார்கள். அந்த வருஷம் சகாப்தத்தையே குறிப்பதாகும் என்றும், அதனால் அதன் காலம் கி. பி. 1154 ஆகும் என்றும், அதிலே குறிக்கப்பட்டவன் மிதிலையில் ஆண்டு வந்த கர்நாட வமிசத்தரசனான கங்காதேவன் என்றும், அவன் காலத்துக்கு அது சரியாக வருகிறதென்றும் (பண்டார்க்கர் ஓரி யண்டல் ரிஸர்ச் இன்ஸ்டிடியூட் பத்திரிகையின் வெள்ளிவிழா மல ரில் 299-301-ஆம் பக்கங்கள்) மகா மகோபாத்யாய வி. வி. மிராஷி கருதுகிறார். (அதே ஸ்தாபனத்துப் பத்திரிகையின் முப்பத்தைந்தாம் வால்யூம், (1954) 102-106-ஆம் பக்கங்களை யும் பார்க்க).]

உதயபூர்ப் பிரசஸ்தியிலே பரமார மன்னனான போஜ னுடைய ஆட்சி "கைலாசம் வரையிலும், மலயபர்வதம் வரையி லும் உதயகிரி, அஸ்தமயகிரி ஆகிய இரு மலை வரையிலும் உள்ள பூமியில் பரந்து நிலவியது' என்று புகழ்ந்து கூறப்பட் டுள்ளது. (எபி. இந்திகா, முதல் வால்யூம், 233-38 பக்கங்கள், சுலோகம் 17). மலய பர்வதம் சோழ மன்னனான இராஜேந்திர னுடைய ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. ஆகவே அதை அவன் கைக்கொண்டிருத்தற்கில்லை. நேச மன்னனான சோழ

னுடைய நாட்டிலும் அவனுடைய ஆதிக்கியம் இருந்துவந்தது எனக் கொண்டே பிரசஸ்திகாரர் இவ்விதம் புகழ்ந்திருத்தல் வேண்டும். [சோழ மெய்க்கீர்த்தி அவ்விதம் வீண் புகழ்ச்சி கொள்ளாமல் உள்ள நிலையையே எடுத்துக் கூறுவது இங்கே கவனிக்கத்தக்கது.]

இவற்றையெல்லாம் கவனிக்கும்போது இராஜேந்திர சோழன் தன் படையை வடக்கே நடத்திச்சென்று கங்கா விஜயம் செய்தது, போஜராஜன், காங்கேயன், மற்றும் வட நாட்டு மன்னர்கள் ஆகியவர்களோடு கூடிக் கஜ்னியின் முஸ்லிம் அரசனை மம்மூது நடத்திய படையெடுப்புகளைத் தடுப்பதற்காகவே யாகும் என்று எண்ணத் தோன்றுவது இயற்கையே. இவனுக்குப்பின் சோழ சிங்காதனம் ஏறிய இவனுடைய குமாரர்கள் தமிழ் நாட்டுக்கு வெகுதூரம் வடக்கே யுள்ள கங்கைக் கரைப் பிரதேசங்களுக்குச் சோழ இராஜ குமாரர்களைச் சக்கரவர்த்தியின் பிரதிநிதிகளாகவும் அனுப்பி வந்திருப்பது இதனை மேலும் வலிபுறுத்தும்.

**இராஜேந்திரனை யடுத்துப் பட்டம் பெற்றவர்கள்**

முதலாம் இராஜேந்திரன் காலத்திலேயே முடிசூட்டப் பெற்ற அவனுடைய மகன் முதலாம் இராஜாதிராஜனுடைய 'திங்களேர் தரு' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியில் இராஜகுமாரர்களை நாட்டின் பல பகுதிகளுக்கும் பிரதிநிதி களாக அனுப்பிய செய்தி பின்வருமாறு காணப்படுகிறது:

> " தன்சிறிய தாதை யுந்திருத் தமையனுங்
> குறிகொள்தன் இளங்கோக் கிளையு நெறியுணர்
> தன்திருப் புதல்வர் தம்மையுந் துன்றெழில்
> வானவன் வில்லவன் மீனவன் கங்கன்
> இலங்கையர்க் கிறைவன் பொலங்கழற் பல்லவன்
> கன்னகுச் சியர்கா வலனெனப் பொன்னணி
> சுடர்மணி மகுடஞ் சூட்டிப் படர்புகழ்
> ஆங்கவர்க் கவர்நா டருளி "

இந்தச் செய்தி மெய்க்கீர்த்தியின் ஆரம்பப் பகுதியிலே கூறப் பட்டுள்ளது. ஆயினும் அம்மன்னனுடைய மெய்க்கீர்த்திகள்

அவனுடைய இருபத்தாறும் ஆண்டுச் சாசனங்களிலிருந்து தான் காணப்படுகின்றன. 'திங்களேர் தரு' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியோ இருபத்தேழாம் ஆண்டுச் சாசனத்தில் தான் முதல்முதலாகக் கிடைத்துள்ளது.

சோழ ஸாம்ராஜ்யத்தின் வெவ்வேறு பகுதிகளை ஆண்டு வருவதற்காக இராஜகுமாரர்களைப் பிரதிநிதிகளாக நியமிக்கும் பழக்கம் முதலாம் இராஜேந்திரனுடைய ஆட்சிக் காலத்திலேயே ஆரம்பமாகிவிட்டது. பாண்டிய நாட்டுக்கும் சேர நாட்டுக்கும் அவ்விதம் பிரதிநிதிகளாக அனுப்பப் பெற்றிருந்த இராஜகுமாரர்கள் முறையே சோழ பாண்டியன், சோழ கேரளன் என்ற விருதுகளுடன் ஆண்டுவந்திருக்கிறார்கள். அந்நாட்களில் அவர்கள் அளித்த சாசனங்களும் கிடைத்துள்ளன. அம்மாதிரியே முதலாம் இராஜாதிராஜனும் பல பகுதிகளுக்கும் ராஜப் பிரதிநிதிகளை நியமித்திருக்கிறான். அவ்விதம் நியமிக்கப்பட்டவர்களுள் கன்யாகுப்ஜ நாட்டை ஆளுவதற்காக நியமிக்கப்பட்ட இராஜகுமாரன் ஒருவனும் காணப்படுவதை நாம் கவனிக்கவேண்டும்.

இராஜாதிராஜனைப் போலவே அவனுக்குப் பின் சோழ சிங்காதனம் ஏறிய அவன் தம்பி இரண்டாம் இராஜேந்திரனும் இம்மாதிரியே இராஜ குமாரர்களைப் பிரதிநிதிகளாக நியமித்திருக்கிறான். இந்தச் செய்தியும் 'திருமாது புவியெனும்' என்று தொடங்கும் அவனுடைய மெய்க்கீர்த்தியில் கூறப்பட்டிருக்கிறது.

"தன்
சிறிய தாதை யாகிய வெறும்வலிக்
கங்கை கொண்ட சோழனைப் பொங்கிகல்
இருமுடிச் சோழ னென்றும் பெருமுரட்
டன்திருத் தம்பியர் தம்முள் வென்றிகொள்
மும்முடிச் சோழனைத் தெம்முனை யடுதிறற்
சோழ பாண்டிய னென்றுங் கோழிமன்
தொடுகழல் வீரசோழனைப் படிப்புகழ்
கரிகால சோழ னென்றும் பொருதொழில்
வாள்வலித் தடக்கை மதுராந் தகனைச்
சோழ கங்க னென்றுந் தோள்வலி

மேவிகல் பராந்தக தேவனைச் சோழ
அயோத்திய ராச னென்றும்
இருதயத் தன்பொடு கருது காதலருள்
இத்த லம்புக ழிராசசேந்திர சோழனை
உத்தம சோழ னென்றுந் தொத்தணி
முகையவி ழலங்கன் முடிகொண்ட சோழனை
இகல்விச யாலய னென்றும் புகர்முகத்
தெழுயர் களிற்றுச் சோழ கேரளனை
வார்சிலைச் சோழ கேரள னென்றுந்
திண்டிறற் கடாரங் கொண்ட சோழனைத்
தினகரன் குலத்துச் சிறப்பமர் சோழ
சனக ராச னென்றுங் கனைகடற்
படிகொண்ட பல்புகழ் முடிகொண்ட சோழனைச்
சுந்தர சோழ னென்றுஞ் செந்தமிழ்ப்
பிடிகளிற் றிரட்ட பாடி கொண்ட
சோழனைத் தொல்புவி யாளுடைச் சோழ
கன்னகுச் சியராச னென்றும் பின்னுந்தன்
காதலர் காதலர் தம்முள் மேதகு
கதிராங் கனைகழல் மதுராந் தகனை
வெல்படைச் சோழ வல்லப னென்றும்
மானச் சிலைக்கையோ ரானைச்சே வகனை
நிருபேந்திர சோழ னென்றும் பருமணிச்
சுடர்மணி மகுடஞ் சூட்டி"

மேலே கொடுக்கப்பட்டுள்ள மெய்க்கீர்த்திப் பகுதி இம் மன்னனுடைய நான்காம் ஆண்டு கொண்டதாக மணிமங் கலத்திலிருந்து கிடைக்கப்பெறும் கல்வெட்டில் காண்ப தாகும். இதிலே அவன் தன்னுடைய சிறிய தாதை ஒருவர், நான்கு தம்பிகள், ஆறு பிள்ளைகள், இரண்டு பேரப் பிள்ளை கள் ஆகப் பதின்மூன்று பேர்களை இவ்விதம் பிரதிநிதிகளாக அனுப்பினான் என்று கூறப்படுகிறது. ஆனால் ஆட்சியின் பிற் பகுதியில் காணும் மெய்க்கீர்த்தியில் இந்தப் பட்டியல் குறுகி விடுகிறது;

"திருக்காதலனான ஓதலர் தருங்கால்
கங்கை கொண்ட சோழனையும்

ஆங்கவன் திருமகனுன இருநிலங் காவலன்
ஆளவந்த பெருமானையும்
வென்றிகொள் தன்திருத் தம்பியர் தம்முள்
வன்றிறல் வளவன் முடிமுடிச் சோழனையும்
களப்படை வீர சோழனையும்
வெல்படை மதுராந்த கனையும்
பார்அணி திரள்தோள் தன்திரு மகன்
இராஜேந்திர சோழனையும் தராபதி
இருமுடிச் சோழன் ராஜாதிராஜன்
சுருதிமென் குணருஞ் சோழ பாண்டியன் [கங்கன்
வார்சிலைத் தானைக் கரிகால சோழனென்றும் சோழ
தொடுகழல் உத்தம சோழனென்றும்
சுடர்நறு மணிபுனைத் திருமுடி சூட்டித்
தென்னவர் முதலியர் நிருபரைத் தாங்கவர்
இருநில மான நிலம்அவர்க் கருளி"

அதிலே ஆறு பெயர்களே காணப்படுகின்றன. அவர்கள் மேலே குறித்த சிறிய தாதை, அந்தச் சிறிய தாதையின் மகன் (இவன் பெயர் புதியதாகச் சேர்க்கப்பெற்றிருப்பது), நான்கு தம்பிகளில் மூன்று தம்பிகள், இன்னும் அரசனுடைய மகன் ஆக அறுவர். இவற்றை நோக்கும்போது இவ்விதம் இராஜ குமாரர்களை வெளி நாடுகளுக்குப் பிரதிநிதிகளாக அனுப்பி யதில், அவர்கள் அந்த அந்த இடங்களிலேயே நிரந்தரமாக இருந்து ஆண்டு வரவில்லை யென்பதும், சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி அவர்களை அடிக்கடி மாற்றி வந்திருக்கிறார்கள் என்பதும் தெளிவாகும். [மெய்க்கீர்த்தியில் அளிக்கப்பெற் றனவாகக் காணப்பெறும் இந்தப் பதவிகளை வெறும் பட்டப் பெயர்களாகவே கொள்ள வேண்டுமென்று ஓர் ஆசிரியர் கருதுவர். அவ்விதம் அல்லவென்பதை இது எடுத்துக் காட்டு கிறது. அன்றி, இம் மெய்க்கீர்த்தியிலே அதற்குமுன் சோழ கேரளனாக இருந்தவனை இம் மன்னன் திரும்பவும் அதே பத வியில் அமர்த்தினான் என்றும் கூறப்பட்டுள்ளது. இன்னும் 'ஆங்கு அவர்க்கு அவர் நாடு அருளி' என்று இராஜாதிராஜன் மெய்க்கீர்த்தியில் காணப்படுவதையும் கவனிக்க.]

இரண்டாம் இராஜேந்திரனுக்குப் பிறகு சோழ சிங்காத னம் ஏறிய அவன் தம்பி வீரராஜேந்திரனும் 'திருவளர் திரள்

புயத்து' என்று ஆரம்பிக்கும் தன்னுடைய மெய்க்கீர்த்தியிலே இவ்விதம் இராஜ குமாரர்கள் சிலருக்குப் பதவி யளித்ததைப் பற்றிக் கூறிக்கொள்கிறன்.

"முறைமையில்
அரும்பெறல் தமையன் ஆளவந் தானை
இரும்புவி புகழி ராஜாதி ராஜனென்றும்
ஒளிமணி முடிசூட்டித் தன் திருப்
புதல்வனுகிய மதுராந்தகனை
வாளேந்து தானைச் சோழேந்திர னென்று
எண்டிசை நிகழ வெழில்முடி சூட்டித்
தொண்டை மண்டலம் கொடுத்தருளித்
திண்டிறல் மைந்தனுகிய கங்கைகொண்ட சோழன்
ஏழுயரி யானைச் சோழ பாண்டிய னெனத்
திண்டுயர் மணிமுடி இசைபெறச் சூட்டிப்
பாண்டி மண்டலங் கொடுத்தருளி ஆண்டகை
வடிகொண்ட கதிர்வேல் முடிகொண்ட சோழனைச்
சுந்தர சோழனென்று சுடர்முடி சூட்டி
அந்தமில் பெருஞ்சிறப் பருளித் தன்கிளை
எவ்வெ ருலகத்த வர்க்குரிய வகலிடம்
வேறு வேறு அருளி"

இது அவனுடைய ஆட்சியின் ஆரம்ப காலத்திலேதான் காணப்படுகிறது. ஆட்சியின் பிற்பகுதியில் காணும் மெய்க்கீர்த்தியில் இந்தச் செய்தி குறிக்கப்பெறவில்லை. அன்றி, அதிலே வடஇந்தியப் பிரதேசங்களுக்கு அவன் அவ்விதம் பிரதிநிதிகளை அனுப்பினுன் என்பதைப் பற்றிய பிரஸ்தாபமும் இல்லை. ஆயினும், 'வீரமே துணையாகவும்' என்று தொடங்கும் அவனுடைய மற்றொரு மெய்க்கீர்த்தியில் கன்னகுச்சி மீட்டு என்பது காணப்படுகிறது. (தெ. இ. சாசனங்கள், மூன்றும் வால்யூம், நெ. 83, பக்கங்கள் 201-4.)

இவ்விதம் மெய்க்கீர்த்திகளிலே தெளிவாகச் சொல்லப்பட்டிருப்பனவற்றை அந்த மெய்க்கீர்த்திகளை இயற்றிய கவிகளின் கற்பனையென்றே மிகைப்படக் கூறப்பட்டவையென்றே ஒதுக்கித் தள்ளிவிடமுடியாது. சோழ மன்னர்

களையும் அவ்விதம் வீண் பெருமையிலே திளைத்திருந்தவர்கள் என்று நாம் கொள்ளமுடியாது. அவர்கள் இராஜகுமாரர்களுக்கு உண்மையிலே அத்தகைய பதவிகளை அளித்திருக்காவிட்டால் இவ்விதம் அவைகளைப்பற்றிப் பெருமையாக மெய்க்கீர்த்திகளில் கூறிக்கொண்டிருக்கமாட்டார்கள். அன்றி, அந்த அந்த நாடுகள் சோழர்களுடைய ஆதிக்கியத்துக்கு உட்பட்டிருக்காவிட்டால் மன்னர்கள் அவ்விதம் அந்நாடுகளுக்குத் தங்கள் பிரதிநிதிகளை நியமித்திருக்கமாட்டார்கள்.

மற்றொரு விஷயத்தையும் நாம் கவனிக்கவேண்டும். இந்த மன்னர்கள் எந்த இடத்திலும் தாங்கள் வடநாட்டை வெற்றி கொண்டதாகக் கூறிக்கொள்ளவில்லை. எனினும், முதலாம் இராஜாதிராஜனுடைய 'திங்களேர் தரு' என்று ஆரம்பிக்கும் மெய்க்கீர்த்தியில் அவன்,

" இளக்கமில்
வில்லவர் மீனவர் வேள்குலச் சளுக்கியர்
வல்லவர் கௌசலர் வங்கணர் கொங்கணர்
சிந்துரர் ஐயணர் சிங்களர் பங்களர்
அந்திரர் முதலிய வரைசரிடு திறைகளும் "

பெற்றுக்கொண்டான் என்ற செய்தி காணப்படுகிறது. அவன் தனியரசு செலுத்த ஆரம்பித்த காலத்திலிருந்தே மெய்க்கீர்த்தியில் இந்தச் செய்தி காணப்படுவதால், இவ்விடம் குறிக்கப்பெற்ற மன்னர்கள் யாவரும் இவன் தந்தையான இராஜேந்திர சோழன் ஆட்சிக் காலத்திலேயே வெற்றி கொள்ளப் பெற்றுச் சோழர்களுடைய ஆதிக்கியத்தை ஏற்றுக் கொண்டிருத்தல் வேண்டும்.

வித்தியாதரனும் மற்றவர்களுமாகச் சேர்ந்து கி. பி. 1019-ஆம் ஆண்டில் கன்யாகுப்ஜ சிங்காதனத்தில் அமர்த்திய திரலோசனபாலன் முஸ்லிம் படையெடுப்பினால் நாடிழந்து போய்விடவில்லை யென்றே தெரிகிறது. அதற்குப் பிறகும் அவன் அல்லஹாபாத் உட்பட்ட பிரதேசத்தை ஆண்டு வந்திருக்கிறான். இது அல்லஹாபாத் நகரத்துக்கு எதிராகக் கங்கையின் மறு கரையில் உள்ள ஜூஸி என்னுமிடத்தி

லிருந்து கிடைத்துள்ள அவனுடைய சாசனத்திலிருந்து தெரியவருகிறது. (இந்தியன் ஆண்டிகுவரி, பதினெட்டாம் வால்யூம், 33-35 பக்கங்கள்.) கி.பி. 1027-ஆம் ஆண்டு கொண்ட அந்தச் சாசனம் அரசன் தக்ஷிணாயன ஸங்கிராந்தி தினத்தில் கங்கையில் நீராடி ஒரு கிராமத்தைப் பிராமணர் சிலருக்குத் தானம் அளித்த செய்தியைக் கூறுகிறது. ஆயினும் சிறிது காலத்துக்குப் பிறகு இதே பிரதேசம் கலசூரி மன்னனான காங்கேயதேவனுடைய ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. கி. பி. 1038-ஆம் ஆண்டில் பொறிக்கப்பட்ட அவனுடைய சாசனம்கொண்ட பியாவன் மலை அங்கரத்துக்கு ஐம்பது மைல் தொலைவில்தான் உள்ளது. (ஆர்க்கி. ஸர்வே ரிபோர்ட், இருபத்தோராம் வால்யூம், 112-13 பக்கங்கள்). கலசூரி வமிசத்துச் சாசனங்களிலே அம்மன்னன் பிரயாகையிலே புனிதமான வட விருக்ஷத்தின் அடியில் தன் வாசஸ்தலத்தை அமைத்துக் கொண்டான் என்று கூறப்பட்டுள்ளது. அவனுடைய மகனான லக்ஷ்மீ-கர்ணனுடைய கோஹர்வாச் செப்பேடுகளிலே காங்கேயன் கங்கரா பள்ளத்தாக்கில் உள்ள கீரா என்னும் இடத்து அரசனைச் சிறைப்படுத்தினான் என்று புகழப்பட்டுள்ளான்.(எச்.ஸி. ராய் எழுதிய வட இந்தியாவின் ராஜ வமிச சரித்திரம், இரண்டாம் பாகம், 775 பக்கம்). [கீரா என்னும் வடமொழிச் சொல் கிளியைக் குறிக்கும். கீரா மன்னனைச் சிறைப்படுத்தினான் என்பதைச் சிலேடையாகக் கிளியைக் கூட்டிலே அடைத்தான் எனச் சாசனங்களில் மொழிவது சகஜம்.] அன்றி அவன் "பிரயாகையிலே தன்னுடைய மனைவிகள் (கிருஹிணிகள்) நூறு பேர்களுடன் முக்தி அடைந்தான்" என்றும் தெரிகிறது. (எபி. இந்திகா, இரண்டாம் வால்யூம், பக்கம் 4, சுலோகம் 12).

கன்யாகுப்ஜப் பிரதேசத்தைக் காங்கேயன் அடைந்தது காலஞ்சர நகரத்தின்மீது முஸ்லிம்கள் படையெடுத்து வந்ததன் முடிவாகவும் விளைவாகவும் இருக்கலாம். கஜ்னி சுல்தான் மம்மூதுக்கு எதிராக நின்ற ஹிந்துஸ்தானத்து மன்னர்களில் பிரதானமாக விளங்கிய சந்தேல்ல மன்னனான வித்தியாதரன் புகழ் அந்தப் படையெடுப்புக்குப் பிறகு ஒளி வீசவில்லை; மங்கிப்போய் விட்டதாகவே காண்கிறது. அந்தப் படையெடுப்பிலே வித்தியாதரன் முழுதும் தோற்று

விடவில்லை. ஆயினும், அது அவனுடைய வலிமையையும் செல்வாக்கையும் பெரிதும் பாதித்தே இருக்கும். அதற்குப் பிறகு சுமார் ஒரு நூறு வருஷங்களுக்குச் சந்தெல்லர்கள் மறுபடியும் தலைதூக்கவில்லை.

போஜராஜனும் கன்யாகுப்ஜத்தை ஆண்டு வந்தான் என்று கூறப்படுகிறது. கி. பி. 1104-ஆம் ஆண்டு கொண்ட தான, கன்னேசி நாட்டுக் காகடவால வமிசத்து அரசனை கோவிந்த சந்திரனுடைய பஸஹிச் செப்பேடுகளிலே பின் வரும் சுலோகங்கள் காணப்படுகின்றன.

யாதே ஸ்ரீபோஜ பூபே விவு(பு)த வர வதூ
நேத்ர ஸீமா திதித்வம்
ஸ்ரீகர்ண்ணே கீர்த்தி சேஷம் கதவதி ச ந்ருபே
க்ஷ்மாத்யயே ஜாயமாநே
பர்த்தாரம் யம் வ[த]ரித்ரீ த்ரிதிவ விபுநிபம்
ப்ரீதி யோகாத் உபேதா
த்ராதா விச்வாஸ பூர்வ்வம் ஸமபவதிஹ ஸ
க்ஷ்மாப திஸ் சந்த்ரதேவ꞉॥

த்விஷத் க்ஷிதிப்ருத꞉ ஸர்வ்வான் விதாய விவசாந் வஸே
கந்யாகுப்ஜே'கரோத் ராஜா ராஜதாநீம் அநிந்திதாம்॥

“ போஜன், கர்ணன் ஆகியவர்கள் இறந்த பிறகு பூமி பலவித சங்கடங்களுக்கு உட்பட்டபோது காகடவால வமிசத்தைச் சேர்ந்த மஹியாலன் என்னும் அரசனுடைய மகனை சந்திர தேவன் பூமியை மீட்டு அரசனுகிக் கன்யாகுப்ஜத்தைத் தன் தலைநகராக்கிக் கொண்டான் ” என்று அது தெரிவிக்கிறது. (இந்தியன் ஆண்டிகுவரி, பதினன்காம் வால்யூம், பக்கம் 103). மேருதுங்கரும் தம்முடைய பிரபந்த சிந்தாமணியில், போஜன் திக்குவிஜயத்துக்குக் கிளம்பியபோது, அதை யறிந்த கன்யாகுப்ஜ மன்னன் குனிந்து வணங்கினன் என்று கூறியிருப்பதும் (பக்கம் 44) இதனையே வலியுறுத்துகிறது.

தாரா நகரத்துப் போஜ சாலையில் உள்ள கற்களில் பொறிக்கப்பட்ட ஒரு நாடகத்தின் பகுதிகள் கிடைத் துள்ளன. அர்ஜுனவர்மன் என்னும் அரசனுடைய ஆசிரிய

ரான மதனன் எழுதிய அந் நாடகத்துக்குப் பாரிஜாதமஞ்சரீ அல்லது விஜயஸ்ரீ என்று பெயர். அதிலே, "காங்கேயனைத் தோற்கடித்ததைப் போஜன் தன் மனோரதம் பூர்த்தியான வெற்றி விழாவாகக் கண்டான்" என்பது,

"தூர்ணணம் பூர்ண்ணமனோரதஸ் சிரமபூத்
காங்கேய பங்கோத்ஸவே"

எனக் காணப்படுகிறது. (எபி. இந்திகா, எட்டாம் வால்யூம், பக்கம் 101, சுலோகம் 3.) ஆரம்ப முதல் போஜன் கன்யா குப்ஜப் பிரதேசம் தனக்கு வேண்டுமென்று விரும்பினான் போலும். அந்நாளிலே உத்தராபதத்திற்கு (பின்னால் ஹிந்துஸ்தான் என்று பொதுவாக வழங்கப்பட்டு வந்த பகுதி) கன்யாகுப்ஜமே கேந்திர ஸ்தானமாகக் கருதப்பட்டு வந்தது. அதன் அரசனாக இருப்பவனுக்குச் சார்வபௌமப் பதவி அளிக்கப்பட்டது. அதன் பெருமைகளை அவன் அடைந்து அனுபவித்தான். அதனால் போஜன் அதைப் பெரிதும் விரும்பினான் போலும். ஆனால் முஸ்லிம்கள் திரும்பிச் சென்றவுடன் அந்தப் பிரதேசத்தைக் காங்கேயன் கைப்பற்றிக் கொண்டான். இது போஜனுக்குப் பொறுக்க வில்லை. அதைத் தான் கைப்பற்றித் தன்னுடைய ஆட்சியின் கீழ்க் கொணர்வதற்குப் போஜன் சமயம் பார்த்துக்கொண் டிருந்தான். அத்தகைய சந்தர்ப்பம் அவர்களுடைய வாழ்க் கையின் இறுதியிலேதான் கிட்டியது.

காங்கேயன் கி.பி. 1041-ஆம் ஆண்டில் இறந்துபோனான் என்று தெரிகிறது. (எபி. இந்திகா, இரண்டாம் வால்யூம், 297-310 பக்கங்கள்.) அவன் இறந்தது அவ்வாண்டு ஜனவரி மாதம் 22-ஆம் தேதியாகும் என்று டாக்டர் பிளீட் கணக்கிட் டிருக்கிறார். (ஷை பன்னிரண்டாம் வால்யூம், 206-ஆம் பக்கத்தின் கீழ்க்குறிப்பு). அவனுக்குப்பின் பட்ட மெய்திய கர்ணன் அல்லது லக்ஷ்மீ-கர்ணனுடைய சாசனங்களுள் காலத்தால் முற்பட்ட காசிச் செப்பேடுகள் கி. பி. 1042-ஆம் கொண்டவை. அதிலே இறந்த மன்னனுடைய ஸம்வத்ஸர ச்ராத்தம் அப்போது நடந்ததாகக் குறிக்கப்பட்டுள்ளது. சேதி மன்னனான காங்கேயன் பிரயாகை க்ஷேத்திரத்தில் தன் தேவிகள் நூறுபேர்களோடு முக்தியடைந்தான் என்று

சாசனங்களில் கூறப்பட்டிருக்கிறது. அவனுடைய நண்பனும் கூட்டாளியுமான மேலைச் சாளுக்கிய அரசன் சோமேச்வரன் சில வருஷங்களுக்குப் பிறகு துங்கபத்திரை நதியில் ஜல சமாதி கொண்டதைப்போலே இவனும் கங்கை நதியில் ஜல சமாதி அடைந்து உயிரைவிட்டான் போலும்.

சற்றேறக்குறைய இதே சமயம் கன்யாகுப்ஜப் பிரதேசம் போஜராஜனுடைய ஆளுகைக்கு வந்திருந்ததென்பதை மற்ருேர் ஆதாரத்திலிருந்தும் அறியலாகும். பிரிஷ்டா பின்வருமாறு எழுதுகிறார்: 'ஹிஜ்ரி 435 (கி. பி. 1043)-ஆம் ஆண்டில் தில்லி அரசன் மற்றரசர்களோடு கூடிக்கொண்டு ஹன்ஸி, தானேசுர், அவற்றுக்கு அடங்கிய மற்றப் பிரதேசங்கள் ஆகியவற்றை மதூத் நியமித்து ஒப்படைத்திருந்த கவர்னரிடமிருந்து திரும்பவும் கைப்பற்றிக் கொண்டான். அங்கிருந்து ஹிந்துக்கள் புறப்பட்டு நக்ர கோட்டே என்னுமிடத்தையடைந்து அதை நான்கு மாத காலம் முற்றுகையிட்டார்கள். கோட்டைக்குள் இருந்தவர்களுக்கு உணவுப் பொருள்கள் கிடைக்கவில்லை. கையிருப்பு செலவாகிவிட்டது. லாஹூரிலிருந்து வரவேண்டியவை வரவில்லை. அதனுல் அவர்கள் சரணுகதியடையவேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது.' ('இந்தியாவில் முகம்மதிய ஆட்சி எழுந்த வரலாறு' என்ற பெயரில் பிரிக்ஸ் மொழி பெயர்த்து வெளியிட்ட தரீக்-ஈ-பிரிஷ்டா, முதல் பாகம், பக்கம் 118.) நாகர்கோட் என்பது இப்போது பஞ்சாபிலே ராவி, பியாஸ் ஆகிய இரு நதிகளுக்குமிடையில் கங்கரா ஜில்லாவின் பிரதான நகரான கோட்-கங்கரா என்பதாகும். மத்தியகாலத்திலே சம்பா என்றும், திரிகர்த்தம் என்றும் வழங்கப்பெற்ற பிரதேசங்கள் அடங்கிய பகுதி அதுதான். கி. பி. 1047-ஆம் ஆண்டு கொண்டதான போஜராஜனுடைய திலக்வாடாச் செப்பேடுகள், அவனுடைய சேனுதிபதியான சுராதித்தியன் என்பான் ஸாஹவாஹனனேயும் மற்றவர்களையும் போரில் வென்று போஜராஜனுடைய ராஜ்யஸ்ரீயை நிலைநிறுத்தினுன் என்று கூறுகின்றன.

ஸாஹவாஹந ஸங்க்ராமே
அங்யேஷாமபி பூபுஜாம்
ஹத்வா யோதாம்(ங்)ஸ்திரம் லக்ஷ்மீம்
போஜதேவே சகார யঃ

(1919-ஆம் ஆண்டில் பூனநகரத்தில் நடந்த(முதல்) கீழ்த்திசை ஆராய்ச்சியாளர் மகாநாட்டு நடவடிக்கைகளும் முடிவுகளும், பக்கம் 324). இவ்விடம் குறிக்கப்பட்ட ஸாஹவாஹனன் என்பான் சம்பா நாட்டில் அரசு செலுத்திய ஸாலவாஹன தேவனேயாவன் (இந்தியன் ஆண்டிகுவரி, பதினேழாம் வால்யூம், 8-9 பக்கங்கள்) என்று நிர்ணயித்திருக்கிறார்கள். அவன் ஸாஹில்லதேவன் என்றும் ஸாஹஸாங்கன் என்றும் குறிக்கப்பெறுவான். கீரா நாட்டுச் சேனை, துர்கா நாட்டு மன்னன், துருஷ்கர்கள் ஆகியோர்களை அவன் வெற்றிகொண்டான் என்றும், குலூத மன்னன் அடிபணிந்து அளித்த காணிக்கையை ஏற்றுக்கொண்டான் என்றும், அவனுடைய தோழமையைத் திரிகர்த்த நாட்டு மன்னனும் விழைந்தான் என்றும் கூறப்படுகிறது. (டி. ஸி. கங்கூலி எழுதிய பரமார வமிச சரித்திரம், பக்கம் 110).

கல்ஹணர் எழுதிய ராஜதரங்கிணியிலிருந்து காஷ்மீர தேசத்துக்கும் போஜராஜனுக்கும் ஒருவகையில் தொடர்பு இருந்து வந்ததென்று தெரிகிறது. அந்நாளிலே காச்மீரத்தை அநந்தன் என்பான் ஆண்டுவந்தான். பத்மராஜன் என்ற வெளிநாட்டு வியாபாரி ஒருவன் அம்மன்னனுக்கு ஏராளமான பொன்னைக் கடனாகக் கொடுத்திருந்தான். அரசனுடைய முடியே ஒரு சமயம் கடனுக்கு அடைமானமாயிருந்ததாம். அந்த வியாபாரி மூலம் போஜராஜன் தினந்தோறும் காச்மீரத்துக் கபோடேச்வரத்தில் உள்ள ஊற்றிலிருந்து ஒரு குடம் புனித நீரை மாளவ தேசத்துக்கு அனுப்ப ஏற்பாடு செய்தானும். அந்நாளில் போஜராஜனுக்குக் காச்மீரத்திலே ஓர் அளவு செல்வாக்கு இருந்ததென்பதையே இது குறிக்கும்.

இவற்றைக் கொண்டு கி. பி. 1040-41-ஆம் ஆண்டுக்கு அணித்ததாகப் போஜன் கன்யாகுப்ஜத்தைக் கைக்கொண்டிருத்தல்வேண்டும் என்று எண்ணுவது தவறாகாது.

இந்தச் சமயத்திலும் போஜனுக்குச் சோழ மன்னர்கள் உதவியாகச் சென்று போர்புரிந்திருக்கிறார்கள் என்றே தெரிகிறது. அவனுக்கு எதிரியான சேதிமன்னனுக்கும் வழக்கம் போல மேலைச் சாளுக்கிய அரசனுடைய உதவி கிட்டியது.

இராஜாதிராஜனுடைய மெய்க்கீர்த்தியில் மேலைச் சாளுக்கியர்களுடன் நடந்ததாகக் கூறப்படும் முதற் போர் இந்தக் காலத்திலேதான் நடந்திருக்கவேண்டும் என்பதை ஓர் அளவு குறிப்பாகத் தெரிவிக்கும் ஆதாரங்களும் உள்ளன. (க. அ. நீலகண்ட சாஸ்திரிகள் எழுதிய சோழர்கள், முதல் வால்யூம், 273-77 பக்கங்கள்; டாக்டர் என். வேங்கடரமணய்யா எழுதிய வேங்கி நாட்டுக் கீழைச் சாளுக்கியர்கள், 230-31 பக்கங்கள்.) இராஜாதிராஜனுடைய தனியாட்சியின் ஆரம்பகாலமான கி. பி. 1044-க்கு முன்னதாக வடதிசையில் அவன் கொண்டனவாகக் குறிக்கப்பெறும் வெற்றிகளும், கன்யாகுப்ஜம் போன்ற நாடுகளை ஆள அவன் பிரதிநிதிகளை நியமித்ததும் இந்தப் படையெடுப்பின் விளைவுகளே போலும்.

இன்னும், இதே காலத்தில் கன்யாகுப்ஜத்து அரச பரம்பரையைச் சேர்ந்தவர்கள் சிலரும் தென்னாட்டில் இருந்திருக்கிறார்கள். இராஜாதிராஜனுடைய ஆட்சியின் ஆரம்ப காலச் சாசனங்கள் சிலவற்றில் பின்வருவது காணப்படுகிறது:

"இலங்கைக் கரைசையும் அலங்கல் வல்லவனையுங்
கன்னக் குச்சியர் காவலனையும் பொன்னணி
முடிதலைத் தடிந்து."

இதே சம்பவம் பிற்பட்ட ஆண்டுச் சாசனங்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

"ஒருதனித் தண்டாற் பொருகட லிங்கையர்
கோமான் விக்கிரம பாகுவின் மகுடமும்
முன்றனக் குடைந்த தென்தமிழ் மண்டலம்
முழுவது மிழந்து எழுகட லீழம்
புக்கவிலங் கேச னாகிய விக்கிரம
பாண்டியன் பருமணி மகுடமும் காண்டகு
தன்ன வாக்கித்தன் கன்னக்குச் சியிலும்
ஆர்கலி ஈழஞ் சீரிதென் றெண்ணி
உளங்கொளந் நாடுதன் னுறவொடும் புகுந்து
விளங்குமுடி கவித்த வீரசலா மேகன்
போர்க்களத் தஞ்சித்தன் கார்க்களி றிழந்து
கலவையுற் றோடக் காதலி யொடுந்தன்

தவ்வையைப் பிடித்துத் தாயை மூக்கரிய
ஆங்கவ மானம் நீங்குதற் காக
மீட்டும் வந்து வாள்தொழில் புரிந்து
வெங்களத் துலந்தவச் சிங்களத் தரைசன்
பொன்னணி முடியுங் கன்னரன் வழிவந்
துரைகொ ளீழத் தரைச னாகியசீர்
வல்லவன் மதன ராஜன் மெல்லொளித்
தடமணி முடியுங் கொண்டு"

மெய்க்கீர்த்தியிலே கூறப்பட்டுள்ள இவ்வரலாறு இலங்கைச் சரித்திரமான மகாவமிசத்திலிருந்தும் ஊர்ஜிதம் பெறுகிறது. (சூளவமிசம், ஐம்பத்தாரும் அத்தியாயம்). முதலாம் இராஜேந்திர சோழன் தன்னுடைய ஆட்சியின் ஐந்தாம் ஆண்டிலே (கி.பி. 1017-ஆம் ஆண்டு) ஈழ மண்டலம் முழுவதையும் கைக்கொண்ட செய்தி அவனுடைய மெய்க்கீர்த்தியிலே காணப்படுகிறது. இலங்கை மன்னனான ஐந்தாம் மஹிந்தனைச் சிறைப்படுத்தி அவனைச் சோழ நாட்டுக்கு அனுப்பிவைத்தான். அவன் இங்கே பன்னிரண்டு ஆண்டுகள் இருந்து பின் இறந்தான். அப்பால், அவனுடைய மகனான கஸ்ஸபன் இலங்கையைச் சோழர்கள் ஆளுவதைப் பொறாமல் அவர்களுக்கு விரோதமாகக் கிளம்பி இலங்கையின் தென் கிழக்குப் பகுதியான ரோஹண நாட்டை, விக்கிரம பாஹு என்ற அபிஷேக நாமத்துடன், அரசாளத் துவங்கினான். இது சுமார் கி.பி. 1029-ஆம் ஆண்டில் நிகழ்ந்ததாகும். அவன் திரும்பவும் சோழர்களோடு போர் நடத்துவதற்கான ஏற்பாடுகளைப் பெருத்த அளவில் செய்து கொண்டிருக்கையில் திடீரென்று தன்னுடைய ஆட்சியின் பன்னிரண்டாம் ஆண்டில் (சுமார் கி.பி.1040)நோய்வாய்ப்பட்டு இறந்துபோனான். அரசாங்கத்தில் அதிகாரியாக இருந்த கித்தி என்பான் எட்டு நாள் ஆண்டபிறகு, 'பலவானான மஹாலானகித்தி' என்பான் அரசனானான். மூன்றாம் ஆண்டிலே அவன் சோழர்களுடன் நிகழ்த்திய போரில் உயிர் இழந்தான். மஹாலானகித்தியின் ஒரே மகனான விக்கம பண்டு பயத்தினால் நாட்டைத் துறந்து துளுதேசத்திலே சிறிது காலம் வசித்திருந்தான். தந்தைக்கு நேரிட்ட கதியைக் கேள்வியுற்ற அவன் ரோஹணத்துக்குத்

திரும்பி வந்து அரசியலை மேற்கொண்டான். சிறிது காலத்துக்கெல்லாம் ஜகதீபாலனுடன் நிகழ்த்திய போரில் அவன் கொல்லப்பட்டான். ஜகதீபாலன் மகாவமிசத்திலே 'ராமனுடைய வழியில் தோன்றிய வீரம் மிகுந்த ராஜகுமாரன்' என்றும், 'அயொஜ்ஜ (அயோத்யா) நகரத்திலிருந்து வந்த அரசனுடைய மகன்' என்றும் குறிக்கப்பட்டிருக்கிறான். "அவனையும் சோழர்கள் போரிலே கொன்றுபோட்டு அவனுடைய மஹேஸியையும் மகளையும் சிறைப்பிடித்து விலையுயர்ந்த பொருள்களுடன் சோழ நாட்டுக்கு அனுப்பிவைத்தார்கள். (ஜகதீபாலனுடைய மனைவியும் மகள் லீலாவதியும் பின்னால் தாங்கள் இருந்த சிறையிலிருந்து தப்பிச் சோழ நாட்டை விட்டு இலங்கைக்குத் திரும்பவும் ஓடிவிட்டார்கள். லீலாவதி அங்கே முதலாம் விஜயபாஹு மன்னனை மணந்து அவனுடைய மஹேஸி, அதாவது பட்டத்தரசியாக விளங்கியிருக்கிறாள்). பண்டு மன்னனுடைய மகனான பராக்கம வேந்தன் இரண்டு ஆண்டுகள் அரசு புரிந்தான். சோழர்கள் அவனோடும் போரிட்டுச் சண்டையில் அவனைக் கொன்றார்கள்." அதற்குப் பிறகு லோகன் அல்லது லோகேச்வரன் எனப் பெறும் சேனைத் தலைவன் அரசைக் கைக்கொண்டான். அவன் ஆறு வருஷ காலம் நிர்வாகம் நடத்தினான். அப்பால், 'கேஸதாது'க்களின் தலைவனான மற்றோர் அதிகாரி, கஸ்ஸபன் என்ற பெயரையுடையவன், அதிகாரத்தை மேற்கொண்டான். அவன் ஆதிக்கியம் அதிக நாள் நீடிக்கவில்லை; ஆறு மாத காலமே ஓடியது. விக்கிரமபாஹுவின் பெயரனான கித்தி என்னும் அரசிளங்குமரன், பதினேழு வயது உடையவனேயாயினும், இலங்கைத் தீவைச் சோழர்களுடைய ஆதிக்கியத்தினின்றும் விடுவித்துப் பிதிரார்ஜித நாட்டை அடைவதற்கு உரிய முயற்சிகளை மேற்கொண்டான். விஜயபாஹு என்ற அபிஷேக நாமத்துடன் அவன் ரோஹண நாட்டுக்கு அரசனாக முடிசூட்டப் பெற்றான். இது நடந்தது கி. பி. 1055-ஆம் ஆண்டு என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

விக்கிரம பாஹுவுக்கும் அவன் பெயரனான விஜய பாஹுவுக்கும் இடைப்பட்ட காலத்தில் இலங்கையை ஆண்டவர்களையெல்லாம் மஹாவம்சம் இலங்கை அரசுக்கு உரிமை

யில்லாமல் அதைக் கைப்பற்றியவர்கள் என்று தெளிவாகக் கூறுகிறது. சோழ மெய்க்கீர்த்தியில் குறிக்கப்பெறும் விக்கிரம பாண்டியன் மஹாவமிசத்தில் குறிக்கப்பெற்ற விக்கம பண்டுவே ஆகவேண்டும். மஹாவமிசத்தில் அவன் மஹாலானகித்தியின் ஒரே மகன் என்றும், தந்தை யிறந்த காலத்தில் அவன் பயத்தினல் நாட்டைத் துறந்து துளு தேசத்தில் வாழ்ந்து வந்தான் என்றும் காணப்படுகிறது. சோழ மெய்க்கீர்த்தியிலோ அவன்,

> " முன்றனக் குடைந்த தென்றமிழ் மண்டல
> முழுவது மிழந்து எழுகடல் ஈழம்
> புக்கவிலங் கேச ஞகிய விக்கிரம
> பாண்டியன் "

என்று குறிக்கப்படுவதிலிருந்து அவன் முதலில் பாண்டிய நாடு முழுவதையும் ஆண்டு வந்தான் என்பதும், அப்பால் அவன் இராஜாதிராஜனல் தென் தமிழ் நாட்டிலிருந்து துரத்தப்பட்டு இலங்கையை அடைந்து அங்கே அரசுரிமையை ஏற்ருன் என்பதும் தெரியவரும். இதிலிருந்து அவன் பாண்டிய ராஜகுமாரனே யாவன் என்பது பெறப்படும். துளு தேசம் என்று மகாவமிசத்தில் குறிக்கப்பட்டிருப்பது மேலைக் கடற்கரையோரமாக ஆளுபர்களுடைய ஆட்சிக்கு உட்பட்டிருந்த துளுநாடே ஆகும்போலும். பாண்டிய மன்னர்களுக்கு இலங்கை அரச வமிசத்தோடு நெருங்கிய மணவினை உறவு இருந்ததுபோல, ஆளுபர்களோடும் உறவு இருந்து வந்தது. சிங்கள மன்னர்கள் தந்தைக்குப் பின் மகன் என்ற வழியையே பின்பற்றி நாட்டை ஆண்டுவந்திருக்கிருர்கள். எனினும், மாமனுக்குப் பின் மருமகன் என்ற தாய் வழித் தாயமுறையையும் பின்பற்றி இருக்கிருர்கள். அந்த வழியிலேயும் சில மன்னர்கள் அரசுரிமை ஏற்றிருக்கிருர்கள். அதேபோல ஆளுபர்களும் சில சமயங்களில் தாய் வழித் தாயமுறையை அனுசரித்திருக்கிருர்கள். ஆளுப அரசர்களில் பலர் 'பாண்டியன்' என்ற பட்டப்பெயரைத் தரித்திருக்கிருர்கள். இதனல் விக்கிரம பாண்டியன் மேலைக் கடற்கரையில் உள்ள துளு நாட்டிலே தான் தங்கியிருந்தான் என்று கொள்வது தவருகாது. (தமிழ் நாட்டுப் பாண்டியர்களுக்கும்

துளு நாட்டுப் பாண்டியர்களுக்கும் உள்ள தொடர்பைப் பற்றிப் பின்னல் விவரித்திருக்கிறோம்.)

சோழ மெய்க்கீர்த்தியில் குறிக்கப்பெற்ற வீரசலாமேகனும் இலங்கைச் சரித்திரத்தில் காணும் ஜகதீபாலனும் ஒருவரே யாவர். இவர்கள் இருவருக்கும் சொந்தமான ஊர் வெவ்வேறாகக் கூறப்பட்டிருப்பதால் அவர்கள் வேறு வேறானவர்களாகவே இருக்கவேண்டும் என்று கருதப்படுவது உண்டு. சோழ சாசனங்களில் கன்னகுச்சி அவனுக்கு உரியதென்று கூறப்பட்டுள்ளது. அதனல் அவன் கன்யாகுப்ஜ அரச பரம்பரையைச் சேர்ந்தவனென்று ஆகும். மகாவமிசத்தில் அவன் ராமபிரானுடைய வமிசத்தைச் சேர்ந்தவன் என்றும், அயோத்தியிலிருந்து வந்தவன் என்றும் கூறப்பட்டிருக்கிறது. ஆயினும், பின்னல் அவர்களுக்கு நேரிட்டதாகக் கூறப்பெறும் பரிபவம் இரண்டிலும் ஒன்று போலவே உள்ளது. சோழ மன்னர்கள் இராஜகேசரிவர்மன், பரகேசரிவர்மன் ஆகிய விருதுகளை மாறிமாறித் தரித்து வந்ததுபோல இலங்கை மன்னர்கள் சலாமேகன் அல்லது சிலாமேக வண்ணன் (சாசனங்களில் பொதுவாக இது சலமேவன் என்றே காணப்படும்), சங்கபோதி (சாசனங்களில் ஸிரி ஸங்க்போ என்றே காணப்படும்) ஆகிய இரண்டு விருதுகளையும் மாறிமாறித் தரித்து வந்திருக்கிறார்கள். (சூளவமிசம்: வில்லியம் கீகர் என்பாருடைய மொழிபெயர்ப்பு, முதல் பாகம், பக்கம் 185, கீழ்க்குறிப்பு 5). அதனல், சோழ மெய்க்கீர்த்தியில் காணப்பெறும் சலாமேகன் என்பதை அரசனுடைய உண்மைப் பெயராக நாம் கொள்ளமுடியாது. அவனுடைய அரச விருதே அது. அதனல் ஜகதீபாலன் என்பதை அவன் உண்மைப் பெயராகவும் சலாமேகன் என்பதை அவனுடைய பட்டப் பெயராகவும் கொள்வதில் தவறு ஒன்றுமில்லை.ஜகதீபாலன் ரோஹண நாட்டுச் சிங்காதனத்தில் கி. பி. 1045-ஆம் ஆண்டு அரசனாக அமர்ந்தான் என்று இலங்கைச் சரித்திர ஆசிரியர்கள் கருதுகிறார்கள். (ஜி. ஸி. மெண்டிஸ் எழுதிய இலங்கையின் பழைய சரித்திரம், 1940-இல் வெளியான நான்காம் பதிப்பு, பக்கங்கள் 153-54). சோழ சாசனங்களிலே வீரசலாமேகனுடைய முடிவைபற்றிக் கி. பி. 1046-ஆம் ஆண்டின் கடைசியிலேதான் (டிஸம்பர் 3-ஆம்

தேதி) காணப்படுகிறது. (தே. இ. சாசனங்கள், மூன்றும் வால்யூம், பக்கம் 53).

மற்றொரு விஷயத்தையும் நாம் கவனிக்கவேண்டும். அந்நாளிலே கன்யாகுப்ஜ நாட்டை ஆண்டுவந்த பிரதிஹார வமிசத்து மன்னர்களும் தங்களை ரகுவின் வம்சத்தவர்கள் என்று கூறிக் கொண்டிருக்கிறார்கள். கஜ்னி மம்மூதுக்குப் பணிந்துபோன ராஜ்யபாலனுடைய பாட்டனை மஹீபாலனை அவனுடைய ஆஸ்தான கவியான இராஜசேகரர் தம்முடைய பாலபாரதத்தில் 'தேந (மஹிபாலேந) ச ரகுவம்ச முக்தாமணிநா' (பக்கம் 2) என்று குறிப்பிடுகிறார். அந்த மஹீபாலனுடைய தந்தையான மஹேந்திரபாலனை அதே நூலில், 'தேவோ யஸ்ய மஹேந்திரபால ந்ருபதிঃ சிஷ்யோ ரகுராமணிঃ' (ஷை) என்று குறிப்பிடுகிறார். அன்றி அதே கவி வித்தசாலபஞ்சிகா என்னும் மற்றொரு நூலில் 'ரகுகுல திலகோ மஹேந்த்ரபாலঃ' (I. 6) என்று அவனைப் புகழ்கிறார். இம் மஹேந்திரபாலனுடைய தந்தையான (கன்னோசி அரசன்) முதலாம் போஜராஜனுடைய குவாலியர்ச் சாசனத்தில் அவர்கள் ராமபிரானுடைய தம்பியான லக்ஷ்மணனுடைய வழி வந்தவர்கள் என்று இவ் விஷயம் இன்னும் தெளிவாகக் காணப்படுகிறது. "இந்திரனுடைய செருக்கை அழித்த மேகநாதனோடு நடத்திய போரில் எதிரிகளை ஒடுக்கி, வாயிற்காப்போன் (ப்ரதீஹாரன்) ஆக விளங்கியவனும் அவனுடைய (அதாவது இராமனுடைய) தம்பியுமான ஸௌமித்ரீ (அதாவது ஸுமித்திரையின் மகன் லக்ஷ்மணன்)" அவர்களுடைய குல முதல்வன் என்று கூறுகிறது அச் சாசனம். (எபி. இந்திகா, பதினெட்டாம் வால்யூம், பக்கம் 106, சுலோகம் 3). ஆகவே இரண்டு இடங்களிலும் இரு வேறு பெயர்களால் குறிக்கப்பட்டிருப்பினும் அவன் ஒருவனே யாவன் என்று கொள்வதில் தவறில்லை.[1]

---

1. முஸ்லிம் படையெடுப்பின்போது கன்யாகுப்ஜத்தைத் துறந்து அரசன் பாரி என்னும் நகரத்துக்கு ஓடிவிட்டான். அதுவே பின்னால் தலைநகராக விளங்கியது. அப்பால் அதையும் துறந்து வெளியேற நேர்ந்துவிட்டது. அதற்குப் பிறகு எந்த நகரம் தலைநகராக விளங்கியது என்பதை நிச்சயமாகக் கூறமுடியாது. அவர்கள் அயோத்திக்குச் சென்றிருத்தலும் கூடும். அயோத்தியிலிருந்து அந்நாளிலே ஆண்டுவந்த அரசவமிசத்தைப் பற்றி ஏதுவும் தெரியவில்லை.

மெய்க்கீர்த்தியில் காணும் கடைசிப் பெயரான ஸ்ரீவல்லபன் மதனராஜன், அதாவது கன்னரன் வழிவந்த வல்லபனான மதனராஜன் என்பான், மஹாவமிசத்தில் காணும் பண்டு அரசன் மகனான பராக்கிரமனே யாவான் என்று டாக்டர் ஹூல்ஷ் முடிவு செய்திருக்கிறார். (ராயல் ஏஷ்யாடிக் ஸோஸைட்டி ஜர்னல், 1913-ஆம் ஆண்டு, 519-21 பக்கங்கள்.) ஒருகால் அவன் பெண் வழியாக அரசுரிமை பெற்று வந்த துளு பாண்டிய இராஜ பரம்பரையைச் சேர்ந்தவனாக இருத்தல்கூடும். மஹாவமிசம் அவ்விதம் குறிக்கச் சோழ சாசனங்களில் அவன் தகப்பன் வழியைக் கொண்டவனாகக் கன்னரன் வழிவந்தவன் என்று குறிப்பிட்டிருத்தல் கூடும்.

மேலே கூறியதிலிருந்து வட நாட்டிலே முஸ்லிம் படையெடுப்பின் பயனாக அவ்விடத்தின் நிலை சீர்குலைந்திருந்த சமயம் கன்யாகுப்ஜத்திலிருந்து அரச வமிசத்தைச் சேர்ந்த ராஜகுமாரர்கள் சிலர் சோழ நாட்டுக்கு வந்திருந்தார்கள் என்பதும் அவ்விதம் வந்தவர்களுக்குச் சோழ மன்னர்கள் புகலிடம் அளித்திருந்தார்கள் என்பதும் தெளிவாகும்.

---

1. இராஜாதிராஜனுக்குப் பிறகு சோழ சிங்காதனம் ஏறிய இரண்டாம் இராஜேந்திரனுடைய 'திருமாது புவியேனும்' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியில் அவன் இலங்கை யரசனான வீரசலாமேகன் என்பானுடன் போரிட்டான் என்பது பின்வருமாறு கூறப்பட்டுள்ளது:

> "தென் றிசைவயிற்
> போர்ப்படை நடாத்திக் கார்க்கட லிலங்கையில்
> விறற்படைக் கலிங்கர்மன் வீரசலா மேகனைக்
> கடற்களிற் றொடுபடக் கதிர்முடி கடிவித்
> திலங்கையர்க் கிறைவன் மானா பரணன்
> காதல ரிருவரைக் களத்திடைப் பிடித்து"

இந்தச் செய்தி முதன் முதலாக அவனுடைய ஆட்சியின் நான்காம் ஆண்டிலே (கி.பி. 1055-ஆம் ஆண்டு) தான் காணப்படுகிறது. பிற்பட்ட ஆண்டுகளில் வரும் மெய்க்கீர்த்தியோ (உதாரணமாக, ஒன்பதாம் ஆண்டு கொண்ட 1895-ஆம் ஆண்டு 87 நெ. சாசனம்) வீரசலாமேகன் பெயரை மட்டுமே கொடுக்கிறது. இவன் 'விறற்படைக் கலிங்கர்மன்' என்று குறிக்கப்பட்டிருப்பினும், இராஜாதிராஜனுடைய மெய்க்கீர்த்தியில் காணும் கன்னகுச்சியர் காவலனினின்றும் இவனை வேறாக எண்ணவேண்டிய அவசியம் இல்லையென்று

ஜகதீபாலனும் அவர்களிலே ஒருவன் போலும். அவனுக்கு ஏதேனும் பதவி அளிக்க வேண்டுமென்பதற்காகச் சோழர்கள் அவனை இலங்கைக்குத் தங்கள் பிரதிநிதியாக அனுப்பி வைத்திருக்கலாம்.

இவ்விதம் போஜனும் இராஜாதிராஜனும் சேர்ந்து வடநாட்டில் கொண்ட வெற்றிகளை நீண்ட காலம் அனுபவிக்க முடியவில்லை. காங்கேயனுக்குப் பிறகு சேதி நாட்டு அரசனாகக் கி.பி. 1041-ஆம் ஆண்டில் சிங்காதனம் ஏறிய அவன் மகன் கர்ணன் சும்மா இருக்கவில்லை. தங்களைத் தோற்கடித்துத் தந்தையின் மரணத்துக்குக் காரணமாக இருந்த போஜன்மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ள விரும்பினான். பெரு முயற்சியால் அவன் தாங்கள் இழந்த நாடுகளைத் திரும்பவும் அடைந்ததோடு போஜனையும் தாக்கி அவன் செருக்கை ஒழித்தான். இதிலே அவனுக்கு மேலைச் சாளுக்கிய மன்னனான ஆஹவமல்ல சோமேச்வரனும், அணஹிலபாடக நகரத்துச் சௌளுக்ய வேந்தனான பீமனும் துணையாக நின்றார்கள். ஆஹவமல்லன் மாளவ தேசத்திலே பரமார வமிசத்து மன்னர்களின் தலைநகரான 'தாரா நகரத்தைத் தாக்கிப் போஜனை அவ்விடத்திலிருந்து ஓடச் செய்தான்' என்று விக்கிரமாங்க தேவ சரிதம் கூறுகிறது. (முதல் சர்க்கம், 91-96 சுலோகங்கள்; இன்னும் இந்தி. ஆண்டிகுவரி, ஐந்தாம் வால்யூம், 319 பக்கம்). சோமேச்வரன் அந் நகரத்தைக் கைப்பற்றிச் சூரையாடிக் கொள்ளையடித்தான். இந்தச் செய்தி அவனுடைய சாசனங்களிலும் காணப்படுகிறது. 'பூர்வ அரசர்களால் அணுக முடியாதபடிக்

---

கருதி இருவரையும் ஒருவராகவே கொள்ளுவர் சிலர். வீரசலாமேகன் என்பது இலங்கை மன்னர்களுடைய பட்டப்பெயர்களுள் ஒன்று என்பதையும் அதை அரசனுடைய பெயராகக் கொள்ளமுடியா தென்பதையும் நாம் மேலே காட்டியுள்ளோம். மெய்க்கீர்த்திகளும் ஒருவனைக் கன்யாகுப்ஜத்து அரசுக்கு உரியவென்றும், மற்றவனைக் கலிங்க தேசத்து அரசன் என்றும் வேறுபடுத்தியே கூறுகின்றன. ஆகவே அவர்களை வேறு வேறானவர்களாகவே கொள்ளவேண்டும். இரண்டாம் இராஜேந்திர சோழனுடைய மெய்க்கீர்த்தியில் குறிக்கப்பட்ட வீரசலாமேகன் கி.பி. 1055-ஆம் ஆண்டு இலங்கைச் சிங்காதனம் ஏறிய முதலாம் விஜயபாஹுவுக்கு முன்னதாக அரசு செலுத்தியவனாக இருத்தல்வேண்டும் போலும்.

கம்பீரமாக நின்ற' தாரா நகரத்தையும் அவன் தாக்கி அடிப் படுத்தினன் என்று ஒரு சாசனம் (மைசூர் ஆர்க்கியலாஜிகல் இலாகாவின் 1928-ஆம் ஆண்டு அறிக்கை, 72 பக்கம்) தெரிவிக் கிறது. கி.பி. 1058-ஆம் ஆண்டு கொண்டதாக ஹைதராபாத் ராஜ்யத்தில் நாகை என்னுமிடத்திலிருந்து கிடைத்துள்ள அவ னுடைய சாசனம் ஒன்று மன்னன் தாராநகரத்தையும் உஜ்ஜ யினியையும் செந்தழல் கொளுத்தியதாகக் கூறுகிறது. (நாகாயி லிருந்து கிடைத்த சாசனங்கள், ஹைதராபாத் ஆர்க்கியலாஜிகல் ஸீரீஸ், 8 தெ). அவன்கீழ் அதிகாரியாக இருந்த மாதுவன் என் பான் இந்தப் படையெடுப்பிலே ஈடுபட்டிருந்தான் என்றும் தாரா நகரத்தைக் கைவிடப் போஜனைத் துரத்தியவன் அவனே என்றும் அது கூறுகிறது. கி.பி. 1060-ஆம் ஆண்டு கொண்ட மற்றொரு சாசனம் (மைசூர் ஆர்க்கியலாஜிகல் இலாகா வின் 1929-ஆம் ஆண்டு அறிக்கை, 68-69 பக்கங்கள்)மன்னனை 'நர்மதையின் இரு கரைகளிலும் விளையாடிய ராஜஹம்ஸம்' என்றும், 'மாளவ தேசத்து மக்களுக்குத் தூமகேது போன்ற வன்' என்றும், 'மண்டெவ (மாண்டு என்று இப்போது வழங் கப்பெறும்) கோட்டையைக் கைப்பற்றியவன்' என்றும், தாரா நகரத்தில் அவன் கௌரவிக்கப்பட்டு வந்தான் என் றும் கூறுகிறது. பிரபந்த சிந்தாமணி (பக்கங்கள்36-37) பின்வரு மாறு கூறுகிறது: டாஹல வேந்தன் (அதாவது சேதி நாட்டு அரசனை) கர்ணன் நூற்றுமுப்பத்தாறு மன்னர்களையும் தன்னுடன் சேர்த்துக்கொண்டு போஜராஜன் மீது படை யெடுத்து வந்தான். "அதே சமயம் மாளவத்தைப் பின் புறத்திலிருந்து தாக்கும்படி அவன் பீமனையும் அழைத்தான்; அவ்விதம் செய்தால் போஜனுடைய நாட்டின் ஒரு பாதியை அவனுக்கு அளித்துவிடுவதாகவும் ஆசை காட்டினன். இவ் விதம் இருவராலும் தாக்குண்ட போஜராஜன் மந்திரத்தால் கட்டுண்ட பாம்பு தன் விஷத்தை இழப்பதுபோலத் தன்னு டைய கீர்த்தியை இழந்தான். அப்பால் திடீரென்று அவ னுக்கு ஏதோ ஒரு தேக உபாதி கண்டு போஜன் உயிர்துறந் தான். அதன்மீது கர்ணன் கோட்டையைப் பிளந்து உள்ளே புகுந்து போஜனுடைய செல்வம் அனைத்தையும் கைக்கொண் டான்." மாளவத்திலே வெற்றி கிட்டிய பிறகு, கைப்பற்றிய நாட்டைத் தங்களுக்குள் கூறுபோட்டுக் கொள்வதிலே

கர்ணனுக்கும் பீமனுக்கு மிடையே நகராறு ஏற்பட்டது என்று மேருதுங்கர் கூறுகிறார். (பிரபந்த சிந்தாமணி, பக்கங்கள் 74-75). இதையே ஹேமசந்திரரும் தம்முடைய துவயாச்ரயத் தில் குறிப்பிடுகிறார் (ஒன்பதாம் சர்க்கம், சுலோகம் 57, பக்கம் 692).

"போஜன் இந்திரனுடைய தோழனைச் சென்றதும் அவனுடைய ராஜ்யம் (குல்யாகுலம்-பிரமுகர்கள் நிரம்பிய) வெள்ளத்திலே மிதந்து, அதன் அரசனும் அவ்வெள்ளத்திலே மூழ்கியபோது, போஜனுடைய (பந்து) உறவினனை உதயா தித்தியன் தோன்றி அரசனுன். கர்நாடர்களால் கைக்கொள் ளப்பட்டு, பல அரசர்களால் துன்புறுத்தப்பட்ட பூமியைச் சமுத்திரம்போல விளங்கிய அதிலிருந்து அம்மன்னன் வரா ஹம்போல் தோன்றி மீட்டான்" என்று விஷ்ணு வராஹ அவதாரம் எடுத்துப் பூமியை அசுரர்களிடமிருந்து மீட்டதற்கு ஒப்பிட்டுக் கூறுகிறது, மாளவ தேசத்துப் பரமார மன்னர்க ளின் புகழைக்கூறுவதாகக் கி.பி. 1104-ஆம் ஆண்டுகொண்ட நாகபூர்ப் பிரசஸ்தி (எபி. இந்திகா, இரண்டாம் வால்யூம், 192 பக் கம், சுலோகம் 32). ஒரு சமயம் போஜன் தாரா நகரத்தின் நகர்ப்புறத்திலே இருந்த தன் குலதேவதையை வழிப்படுவ தற்காகப் போனபோது அவனைக் கூர்ஜ்ஜர வீரர்கள் சிறைப் பிடிக்கும் தறுவாயில் இருந்தார்கள் என்றும், அவ்விதம் ஆபத்தில் சிக்கிக்கொண்ட அவன் மயிரிழையில் உயிர் தப்பி ஞன் என்றும் ஒரு சம்பவத்தை மேருதுங்கர் பிரபந்த சிந்தா மணியில் (பக்கங்கள் 73-75) கூறுகிறார்.

போஜராஜன் எதிரிகளைத் துரத்தித் தன் நாட்டை மீட்டுக் கொள்வதற்காகப் படை திரட்டி ஏற்பாடுகளைச் செய்துவந்த சமயம் திடீரென்று நோய்வாய்ப்பட்டு இறந்து போனன் என்று கூறப்படுகிறது. இது கி. பி. 1050-51-ஆம் ஆண்டு நிகழ்ந்ததாகச் சோழ சாசனங்களிலிருந்து தெரிகிறது. 'திங்களேர் தரு' என்று தொடங்கும் முதலாம் இராஜாதி ராஜனுடைய மெய்க்கீர்த்தியிலே பின்வரும் பகுதி காணப் படுகிறது.

"கூர்ச்சரன் உப்பலன் கொய்மலர்ப் பசுந்தலைத்
தார்தைலபன் தடிந்துமுன் கொண்டு தகைவன்

தப்பைமுன் தைப்ப அப்பகை செகுத்து
உப்பலன் வழியிற் தப்பியபல் லரைசர்
ஆங்கது மீட்கமாட் டாதுதன் பூங்கழல்
சரணெனப் புகுந்த வரணவர்க் கருளித்
தடமுடி மீட்டுக் கொடுத்துத்.
தடமுடிக் கிடங்கொடுத் திருந்த தகைவன்
தப்பையைப் பறித்துக் கொண்டு போந்தபின்"

இது முதல் முதலாக அவனுடைய ஆட்சியின் முப்பத்து மூன்றும் ஆண்டுச் சாசனங்களிலேதான் (கி. பி. 1050-51) காணப்படுகிறது. மெய்க்கீர்த்தியிலே குறிக்கப் பெற்ற கூர்ஜ்ஜர உப்பலன் என்பான் போஜனுடைய பெரியப்ப னை இரண்டாம் வாக்பதி முஞ்சனை உத்பலனே யாவன்.

இதிலிருந்து போஜனுக்கு எதிராக மேலைச் சாளுக்கிய வேந்தன் சோமேச்வரன், கலசூரி மன்னன் கர்ணன், அணஹிலபாடக நகரத்துச் சௌளுக்கிய அரசன் பீமன் ஆகியவர்கள் ஒன்று சேர்ந்து நடத்திய போரில் தஞ்சைச் சோழ மன்னனும் போஜனுக்கு உதவியாக நின்றிருந்தான் என்று தெரிகிறது. சண்டையின் போக்கும் மற்ற விவ ரங்களும் இப்போது நமக்குக் கிடைக்கவில்லை. எதிரிகளின் கூட்டுப் படைக்குமுன் நிற்கமுடியாமல் போஜன் தோல்வி யுற்று நாட்டையும் இழந்தான்; அதைத் திரும்பக் கைப்பற்ற அவன் படை திரட்டிய காலத்தில் திடீரென்று நோய்வாய்ப் பட்டு இறந்தான் என்ற அளவுதான் தெரிகிறது. எதிரிகளின் கை மிகவும் ஓங்கியிருந்தபடியால் மாளவ சிங்காதனத்துக்கு உரியவர்கள் சோழர்களிடம் அடைக்கலம் புகுந்தனர் போலும். சோழர்களுடைய உதவியோடு அவர்கள் மறுபடி யும் படைதிரட்டித் தங்கள் பிதிரார்ஜிதத்தை அடையும் வரை யில் அவர்கள் சோழர்களின் ஆதரவிலே தங்கியிருந்தார்கள் போலும்.

இந்தக் காலத்து மாளவ தேச சரித்திரமும் தெளிவாக இல்லை. போஜனுக்குப் பின் அவனுடைய மகன் ஜயஸிம் ஹன் மாளவ தேசத்தை ஆண்டு வந்திருக்கிறான். அவன் கி. பி. 1055-ஆம் ஆண்டில் அரசனாக இருந்தான் என்று அவ்

வாண்டில் அளிக்கப்பெற்ற மாந்தாதாச் செப்பேடுகளினின்றும் தெரிகிறது. கி.பி. 1059-ஆம் ஆண்டுகொண்ட பன்ஹேராச் சாசனத்திலிருந்தும் அப்போது ஜயஸிம்ஹன் அரசனுக இருந்தது விளங்குகிறது. பரமார வமிசத்து வேறொரு கிளையைச் சேர்ந்த மண்டலிகன் என்பான் வாகடப் பகுதியை ஜயஸிம்ஹன் கீழ்ச் சிற்றரசனுக ஆண்டுவந்தான். அவன் போரிலே கன்ஹன் என்னும் சேனுதிபதியை யானை குதிரைகளோடு பிடித்துத் தன் பேரரசன் ஜயஸிம்ஹனிடம் ஒப்படைத்ததாக அந்தச் சாசனம் கூறுகிறது. கன்ஹன் யார் என்பது விளங்கவில்லை. ஆயினும் ஜயஸிம்ஹனுடைய ஆட்சி அமைதியாக நடைபெறவில்லை யென்றும், எதிரிகள் இருந்தனர் என்றும் அந்தச் சாசனத்திலிருந்து தெரியவருகிறது.

ஆஹவமல்ல சோமேச்வரனுடைய ஆட்சிக் காலத்தில் அவன் மகன் விக்கிரமாதித்தன், 'புகலிடம் வேண்டித் தன்னையண்டின மாளவ அரசனுக்குத் தன் உதவி அளித்து அவனுடைய நாட்டை அவன் அடையச் செய்தான்' என்பதைப் பில்ஹணர் விக்கிரமாங்கதேவ சரிதத்தில்,

> ஸ மாலவேந்த்ரம் சரணம் ப்ரவிஷ்டம்
> அகண்டகே ஸ்தாபயிதி ஸ்ம ராஜ்யே ।
> கந்யா ப்ரதாநச் சலதஃ க்ஷிதீசஃ
> ஸர்வஸ்வ தானம் பஹவோ'ஸ்ய சக்ருஃ ॥

(மூன்ரும் சர்க்கம், 67 சுலோகம்)

எனக் கூறுகிருர். சாளுக்கிய மன்னனுல் உதவியளிக்கப் பெற்ற மாளவ அரசனுடைய பெயர் தெரியவில்லை. மாளவ தேசத்துப் பரமாரர்களும் மேலைச்சாளுக்கியர்களும் பரம்பரை விரோதிகள் என்பதையும், ஆரம்பம் முதலே தலைமுறை தலைமுறையாக அவர்கள் சதா தங்களுக்குள் போரிட்டு வந்திருக்கிருர்கள் என்பதையும் நாம் அறிவோம். அவ்விதம் இருக்க, குடும்ப கௌரவம், பழைய விரோதம் ஆகியவற்றை அறவே புறக்கணித்துத் தங்கள் குல விரோதியான சோமேச்வரனுடைய உதவியையே நாடிய மாளவ ராஜகுமாரன், சோழர்களுடைய உதவியை நாடி அவர்களால் சிங்காதனத்தில் அமர்த்தப்பெற்றவனுக இருக்கமுடியாது. அவன் சோழர்

களுக்கு விரோதமாக, அவர்களால் முடிசூட்டப் பெற்றவனுக்குப் போட்டியாகச் சாளுக்கியர்களுடைய உதவியால் அரசைக் கைப்பற்ற முயன்றவன் போலும்.

கி.பி. 1011-ஆம் ஆண்டு கொண்ட போஜனுடைய ஸோடாஸாச் செப்பேட்டிலிருந்து அந்தத் தானம் வழங்கிய மஹாராஜபுத்ர வத்ஸராஜன் என்பான் மோஹடவாஸக எழுநூற்றைம்பதுப் பகுதியை ஆண்டு வந்ததாகத் தெரிகிறது. (பாரதீய வித்யா, ஆங்கிலப் பத்திரிகை, ஆறும் வால்யூம், பிற்சேர்க்கை, பக்கங்கள் 37-40). அவன் போஜனுடைய மகனே போலும்.[1] ஆயினும் அவன் போஜனுக்குப் பின் சிங்காதனம் ஏறியவனாகக் கருதப்படும் ஜயஸிம்ஹனோ அல்லது வேறு ஒருவனோ என்பது தெரியாது. நாகபூர்ப் பிரசஸ்தியில் போஜராஜனுக்குப் பிறகு "நாட்டிலே ராஜகுலத்தைச் சேர்ந்த பலர் வெள்ளம் போல் திரண்டு அரசுப் பதவியை மூழ்கடித்து விட்டனர்" என்று காணப்படுவதனின்றும், சிங்காதனத்துக்கு உரியவர்களாகப் பலர் போட்டியிட்டு வந்தனர் என்பதை யறியலாம். (எபி. இந்திகா, இரண்டாம் வால்யூம், பக்கம் 192). அவ்விதம் போட்டியிட்டவர்களுள் ஒருவனுக்குச் சோழர்கள் உதவிபுரிந்தனர் என்பதையும் நாம் மேலே கண்டோம்.

நாகபூர்ப் பிரசஸ்தியில் ஜயஸிம்ஹன் பெயரே காணப் பெறவில்லை. சீர்குலைந்திருந்த நிலைமையின் முடிவில் உதயாதித்தன் தோன்றி அரசை நிலை நிறுத்தினான் என்று பொதுவாகக் கூறப்பட்டுள்ளது. இந்த உதயாதித்தியனே சோழர்களுடைய உதவியைப் பெற்றவன் என்றும் (ஜர்னல் ஆப் ஓரியண்டல் ரிஸர்ச், பதினாறும் வால்யூம், 147-48பக்கங்கள்),அவனுக்குப் போட்டியாக இருந்த ஜயஸிம்ஹனே மேலைச் சாளுக்கியர்களால் உதவப்பெற்றவன் என்றும் (பரமார வமிச சரித்திரம், 123-ஆம் பக்கம்) கருதப்படுகிறது. ஆனால் நிலையைக் கவனித்தால் இதற்கு நேர்மாறாகத் தோன்றுகிறது.

---

1. மஹாராஜபுத்ர என்னும் சொல்லை அரசாங்க அதிகாரியின் பட்டப் பெயராகவும் கொள்வர் சிலர். (இந்தியன் ஆண்டிகுவரி, பதினெட்டாம் வால்யூம், 212-ஆம் பக்கம், கீழ்க்குறிப்பு 3).

உதயாதித்தன் கி.பி. 1080-81-ஆம் ஆண்டு ஆட்சிபுரிந்து வந்தான் என்பது அவனுடைய உதயபூர்க் கல்வெட்டாலும் (இந்தியன் ஆண்டிகுவரி, இருபதாம் வால்யூம், பக்கம் 83) கி.பி. 1086-87-ஆம் ஆண்டிலே அரசுபுரிந்திருக்கிறான் என்பது ஜல்ரபடன் கல்வெட்டாலும் (வங்காளத்து ஏஷியாடிக் ஸொஸைட்டியின் ஜர்னலும் புரோஸீடிங்க்ஸும், பத்தாம் வால்யூம், 241-ஆம் பக்கம் முதல்) தெளிவாகத் தெரிகிறது. அன்றி, குவாலியரில் உள்ள உதயபூரிலிருந்து கிடைத்துள்ளதும் பிரதேச மொழியில் உள்ளதுமான சமீப காலத்து (கி.பி. 1560-ஆம் ஆண்டு கொண்ட) சாசனம் ஒன்று உதயாதித்தியன் (விக்கிரம) ஸம்வத் 1116, சகாப்தம் 981 (அதாவது கி.பி. 1059-60) கொண்ட ஆண்டில் அங்கே சிவபெருமானுக்கு ஒரு கோயில் எழுப்பினான் என்ற செய்தியைத் தெரிவிக்கிறது. (வங்காளத்து ஏஷியாடிக் ஸொஸைட்டி ஜர்னல், ஒன்பதாம் வால்யூம், 545-50 பக்கங்கள்.) இவற்றைக் கவனிக்கும்போது மாளவ சிங்காதனத்திலிருந்து ஜயஸிம்ஹனைத் துரத்தியவன் உதயாதித்தியனே என்பது போதரும்.

மேலைச் சாளுக்கிய மன்னன் தன்னிடம் அடைக்கலம் புகுந்த மாளவ தேசத்து ராஜகுமாரனுக்கு அந்த நாட்டு அரசுப் பதவியை அளித்ததோடு மட்டுமல்லாமல், கன்யா தானம் என்னும் சாக்கைக்கொண்டு எல்லாப் பரிசுகளையும் வழங்கினான் என்று பில்ஹணர் கூறுகிறார். இதனால் அந்த மாளவ இராஜகுமாரன் சாளுக்கிய இராஜகுமாரி ஒருத்தியை மணந்து கொண்டான் என்பது தெரியவரும். கூர்ஜ்ஜர தேசத்துக் கர்ண பரம்பரைச் சரித்திரமான ராஸ் மாலாவிலும் உதயாதித்தியனைப் பற்றிக் கூறப்பட்டிருப்பது இதனை வலியுறுத்துவதாகக் காணப்படுகிறது. ராஸ் மாலா என்பது சென்ற நூற்றாண்டின் மத்தியில் ஸர் கின்லக் போர்ப்ஸ் என்பவரால் அவருக்குக் கிடைத்த சில ஜைனப் பிரபந்தங்களையும், கவி தல்பத்ராம் என்பார் நாடோடியாக வழங்கிய பாடல்களைத் திரட்டித் தொகுத்ததையும் கொண்டு எழுதப்பட்டது. உதயாதித்தியனைப் பற்றி அது பின்வருமாறு கூறுகிறது :

"உதயாதித்தியனுக்கு இரண்டு மனைவிகள் இருந்தனர். ஒருத்தி ஸோலங்கி குலத்தைச் சேர்ந்தவள். மற்றொருத்தி

வாகேல வமிசத்தில் வந்தவள். ஸோலங்கி குலத்து அரசியிடம் அவனுக்கு ஜக்தேவ் (ஜகத்தேவன்) என்ற பிள்ளை பிறந்தான். வாகேல வமிசத்து அரசியிடம் ரிந்துவால் (ரணதவளன்) என்ற பிள்ளை பிறந்தான். வாகேல வமிசத்து அரசியே உதயாதித்தியனுக்குப் பிரியமானவள். அதனல் அவளுடைய பேச்சைக்கேட்டு அவன் தன் மகன் ரிந்துவாலை இளவரசனாக முடிசூட்டினன். மாற்ருந் தாயின் கொடுமையால் ஜக்தேவ் செல்வத்தை இழந்து ஏழையானன். ஆகவே அவன் ஜீவனத்துக்கு வழிதேடி மாளவத்தை விட்டு வெளியேறி, குஜராத் மன்னனை ஸித்ராஜனுடைய சேனையில் சேவகம் ஏற்ருன்." (போர்ப்ஸ் எழுதிய ராஸ் மாலா, 1924-ஆம் ஆண்டில், எச். ஜி. ராலின்ஸன் வெளியிட்ட பதிப்பு, முதல் வால்யூம், 117-ஆம் பக்கம் முதல்). ஜகத்தேவன் குந்தள நாட்டு மன்னனை பரமர்த்தி (பெருமானடிகள் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே இது; மேலைச் சாளுக்கிய அரசனை ஆருும் விக்கிரமாதித்தியனுடைய விருதுகள் ஒன்று) என்பானுடைய சேனையில் உத்தியோகம் வகித்து வந்தான் என்றும், கூர்ஜ்ஜர நாட்டுச் சௌளுக்ய வேந்தனை ஸித்தராஜ-ஜயஸிம்ஹன் அவனைப் பெரிதும் கௌரவித்துப் போற்றி வந்தான் என்றும் மேருதுங்கர் கூறுகிருர். (பிரபந்த சிந்தாமணி, 186 பக்கம்; இன்னும் சோமேச்வரருடைய கீர்த்தி கௌமுதி, இரண்டாம் சர்க்கம், 99 சுலோகம் பார்க்க). சாளுக்கியர் என்பதே சௌளுக்யர் என மாறியது. சௌளுக்கியர்களே பின்னல் ஸோலங்கிகள் எனப் பெயர்பெற்றவர். அதனல் ராஸ் மாலாவில் உதயாதித்தியன் ஸோலங்கி குலத்து அரசியை மணந்தான் என்று கூறப்பட்டிருப்பது, அவன் பில்ஹணர் தெரிவித்திருக்கிறபடி மேலைச் சாளுக்கிய இராஜகுமாரி ஒருத்தியை மணந்ததையே குறிக்கிறது போலும். அவ்விதமானல் அவர்களுக்குப் பிறந்த ஜகத்தேவன் தன் தாய் மாமனை விக்கிரமாதித்தியனுடைய ராஜ சபையில் இடம் பெற்றதும், அவனுடைய போர்ப் படையில் உத்தியோகம் வகித்துப் போர்புரிந்ததும் இயற்கையே. அன்றி ஜகத்தேவன் நீண்ட காலம் ஆருும் விக்கிரமாதித்தியன்கீழ்க் கொள்ளிப்பாக்கை (இப்போது ஹைதராபாத் ராஜ்யத்தில் உள்ள கூல்பாக்)ப் பிரதேசத்தை ஆண்டு வந்தான்

என்பதைத் தெலுங்கானாவில் கிடைக்கும் சாசனங்கள் தெரிவிக்கின்றன.

தவிர, உதயாதித்தியன் பரமார வமிசத்தின் இளைய பரம்பரையைச் சேர்ந்தவன்; வாக்பதி, போஜராஜன் ஆகியோர்கள் வந்த மூத்த பரம்பரையைச் சேர்ந்தவனல்லன். அவனுடைய பரம்பரையைப் பற்றிய விவரங்கள் பில்ஸாவில் உள்ள உதயபூரில் கிடைக்கும் ஒரு சாசனத்திலிருந்து நமக்குக் கிடைத்துள்ளன. (வங்காளத்து ஏஷ்யாடிக் ஸொஸைட்டியின் ஜர்னல், ஒன்பதாம் வால்யூம், 547-ஆம் பக்கம்). அதிலே அவன் பாவர அதாவது பரமார குலத்து ஸௌரவீரன் (சூரவீரன்) என்பானுடைய கொள்பெயரன் என்றும் கோந்தலன் என்பானுடைய பெயரன் என்றும் குறிக்கப்படுகிறான். அவன் தந்தையின் பெயர் க்யாதா (ஜ்ஞாதா) என்பதாகும். அவன் முதலில் மாளவதேசத்தின் கீழைப் பகுதியில் அரசு புரிந்துவந்தானும். அதற்குப்பிறகு அவனுடைய முன்னோர்கள் அரசு செலுத்தி வந்த நடுப்பகுதியை அடைந்தானும். ('மாலவ மத்ய தேசம் கத்வா ஸ்தாநம் ப்ரஸித்திஃ' என்று அந்தச் சாசனம் கூறுகிறது). ஆகவே அவன் சோழ மெய்க்கீர்த்தியில் அவர்களால் உதவப்பெற்று மாளவ சிங்காதனத்தில் அமர்த்தப்பட்டவன் என்று குறிக்கப்பட்ட உத்பலன் வழி வந்தவர்களுள் ஒருவனாக இருக்கமுடியாது.

இவ்விதம் சோழர்களால் அரசுரிமை அடைந்த ராஜகுமாரன் ஒருவனேயல்லாமல் வேறு சில மாளவ இராஜகுமாரர்களும் சோழர்களின் கீழ் அதிகாரிகளாகப் பதவியேற்று அமர்ந்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. இதேபோல வேறு சிலர் மேலைச் சாளுக்கியர்களின் கீழும் அதிகாரிகளாக இருந்து வந்திருக்கிறார்கள். திருவளர் திரள்புயத்து என்று தொடங்கும் வீரராஜேந்திரனுடைய மெய்க்கீர்த்தியில் பின்வரும் பகுதி காணப்படுகிறது :

" வீரசிங் காதனம் பார்தொழ வேறி
எழிறர வுலக முழுதுடை யாளொடும்
விசையமணி மகுட மேய்ந்து எழில்கொள்
தத்துமாப் புரவிப் பொத்தப்பி வேந்தனை

வாரணை[1] வன்கழற் கேரளன் றன்னைத்
தார்சன நாதன் தம்பியைப் போர்க்களத்
தலங்கல்சூழ் பசுந்தலை யரிந்து"

இது முதல் முதலாக அவனுடைய ஆட்சியின் மூன்றும் ஆண்டுக்கு எதிராம் ஆண்டான நான்காம் ஆண்டு கொண்ட கருவூர்ப் பசுபதீச்வரர் கோயில் கல்வெட்டிலே தான் காணப் படுகிறது. (தே. இ. சாசனங்கள், மூன்றும் வால்யூம், 20 நெ.) ஜனநாதன் என்ற பெயர் சில பாடங்களிலே 'தாரா ஜனநாதன்' அதாவது தாரா நகரத்துப் பரமார குலத்தைச் சேர்ந்த ஜனநாதன் என்று காணப்படுகிறது. வீரராஜேந்திரன் தன்னுடைய ஆட்சியின் ஐந்தாம் ஆண்டிலே வேங்கியின்மீது இரண்டாம் முறையாகப் படையெடுத்துச் சென்றான். அப்போது விஜயவாடைக் கடுத்த பேராறு (கிருஷ்ணவின்) கரையில் நிகழ்ந்த பெரும் போரில் அவன் ஜனநாதன், ராஜமய்யன் முதலியோர் நடத்தி வந்த மேலைச் சாளுக்கியப் படையைத் தோற்கடித்து அவர்களைக் காட்டுக்கு ஓடச்செய்தான். இந்தச் செய்தியும் அதே மெய்க்கீர்த்தியில் பின்வருமாறு காணப்படுகிறது:

"எல்லையங்
கடுத்தவத் தானை எழில் விசய வாடையோ
டடுத்த பேராற்றில் வந்து தடுத்த
சனநா தனையுந் தண்டநா யகனும்
இனமார் கடக்களிற் றிராசமய் யனையும்
திப்பர சனையு முதலாக வுடைய
வப்பெருஞ் சேனையை அடவியிற் பாய்ச்சி"

இரண்டு இடங்களிலும் குறிக்கப்பெற்ற ஜனநாதன் ஒருவனே போலும். அவ்விதமானல் ஜனநாதன், அவன் தம்பி

---

1. 'வாரனை' என்னும் பாடம் கொண்டு இந்தப் பகுதி, 'பெரிய கழல்களைப்பூண்ட கேரள அரசனை வாரனை வென்றான்' என்று மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. 'வாரணை' என்பதே பாடம். ஆகவே 'வார் அணைந்த பெரிய கழல்' என்றே பொருள்படும். வாரன் என்ற பெயருள்ள அரசன் யாரும் இல்லை.

ஆகிய இருவரும் மாளவ நாட்டுப் பரமார குலத்து இராஜ குமாரர்களே யாவர். அவர்கள் மேலைச் சாளுக்கியர்களோடு சேர்ந்துகொண்டு சோழர்களுக்கு விரோதமாகப் போர் புரிந்தார்கள் என்பது தெளிவாகும். ஆயினும், ஜனநாதன் என்ற பெயர் முதலாம் இராஜராஜ சோழனுடைய விருது களுள் ஒன்றாகும். பின்னால் வந்த மன்னர்கள் சிலரும் அதை விருதாகச் சூட்டிக் கொண்டிருந்தார்கள் என்று தெரிகிறது. அதனால் அந்தப் பெயரைக் கவனித்தால் அதைத் தரித்திருந் தவன் அதைச் சோழர்களிடமிருந்தே பெற்றிருக்க வேண்டும் என்பது தெளிவாகும். அதனால் அவன் முதலில் சோழர் களின் கீழ் அதிகாரியாகக் கிருஷ்ணா நதிக்கரைப் பிரதேசத் தில் இருந்துவந்தான் என்றும், பின்னால் அந்தப் பகுதியை மேலைச் சாளுக்கியர்கள் கைக்கொண்டவுடனே அவனும் அவர்களுக்கு அடங்கியவனாகச் சேவகம் பார்த்துவந்தான் என்றும், அதனாலேயே தனக்கு முன்னர் எஜமானராக இருந்த சோழர்களோடு அவன் போர் நிகழ்த்த வேண்டி யிருந்ததென்றும் கொள்ளலாம்.

பேரரசனான மேலைச் சாளுக்கிய மன்னன் ஆஹவமல்ல சோமேச்வரன், அவன் மகன் பெருவீரன் விக்கிரமாதித்தி யன் ஆகியோர்களுடைய முயற்சியால் அவர்களுடைய வலிமை யும் செல்வாக்கும் பெருகி வந்தன. அவற்றால் விரிந்து பரந்த சோழ ஸாம்ராஜ்யத்துக்கு நெருக்கடி தோன்றி அங்கங்கே தொல்லைகள் கிளம்பின. இவ்விரு ராஜ்யங்களுக் கும் இடையில் ஏற்பட்ட போட்டி தக்ஷிணத்தோடு நின்று விடவில்லை. இன்னும் வடக்கேயும் பரவியது. மாளவ தேசத்துச் சிங்காதனத்துக்குப் போட்டி அரசர்களை நியமித்து அவரவர்க்கு அரசை அளிக்கமுற்பட்ட அதே நாடகம் சக்கரக் கோட்டப் பகுதியிலும் நடைபெற்றதாகத் தெரிகிறது.

இப்போது மத்தியப் பிரதேசம் என வழங்கப்பெறும் ராஜ்யத்தில் முன்னாள் பஸ்தர் ஸம்ஸ்தானப் பகுதியான சக்கரக் கோட்டத்தைச் சிந்தகர் எனப்பெறும் நாக வமிச மன்னர்கள் ஆண்டு வந்தனர் என்பதை முன்னரே குறிப் பிட்டிருக்கிறோம். அவர்கள் அனந்தப்பூர், பெல்லாரி, ராய்ச் சூர் ஆகிய ஜில்லாக்களின் பகுதிகள் அடங்கிய ஸிந்தவாடிப்

பிரதேசத்தை ஆண்டு வந்த ஸிந்தர்கள் வகுப்பைச் சேர்ந்த வர்களே. சிந்தக-நாக வமிச அரசர்களுடைய சாசனங்களிலே கிடைப்பவற்றுள் காலத்தால் முற்பட்டது பஸ்தர் ஸம்ஸ்தானத் தலைநகரான ஜகதால்பூருக்குப் பத்து மைல் தூரத்தில் உள்ள எர்ரகாட் என்னுமிடத்திலிருந்து கிடைப்பதாகும். கி.பி. 1023-ஆம் ஆண்டுக்குச் சரியான சகாப்தம் 945 கொண்ட அந்தச் சாசனம் பூர்த்தியாக இல்லை. அரசன் பெயரும் சிதைந்து காணப்படுகிறது. அதிலே 'திபூஷண' என்ற பகுதியே வாசிக்க முடிகிறது. அதை 'நிருபதி பூஷண' அல்லது 'க்ஷிதிபூஷண' என்று பூர்த்தி செய்யலாம். (தெ. இ. சாசனங்கள், (மூலம் மட்டும்), பத்தாம் வால்யூம், 643 நெ; இன்னும் ஹிராலால் தொகுத்த மத்திய மாகாணங்களிலும் பீராரிலும் உள்ள சாசனங்களின் பட்டியல் (இரண்டாம் பதிப்பு) நெ. 285.) இந்தச் சாசனத்தின் காலத்தைக் கொண்டு, சிந்தக-நாகர்கள், கி.பி. 1023-ஆம் ஆண்டுக்குச் சிறிது முன்னதாக நடைபெற்ற இராஜேந்திர சோழனுடைய கங்கா விஜயத்தின் போது அவனுடைய படையோடு பஸ்தர்ப் பகுதிக்கு வந்து தங்கியவர்களாகவே இருக்கவேண்டும் என்று கருதப்படுகிறது. (குவார்டர்லி ஜர்னல் ஆப் தி மிதிக் ஸோஸைட்டி, நாற்பத்து நான்காம் வால்யூம், பக்கம் 2, டாக்டர் திநேஷ் சந்திர சர்க்கார் எழுதிய கட்டுரை). அதே பகுதியில் நாகர்களுக்கு அடங்கியவர்களாகத் தெலுங்குச் சோழரின் ஒரு கிளையினரும் காணப்படுகிறார்கள். அந்நாளிலே அந்தப் பகுதிக்குத் தலைநகராக விளங்கிப் பாரஸீரு (இப்போது பார்ஸூர் என்று வழங்கப் பெறுவது) என்னுமிடத்திலிருந்து கிடைத்த கி. பி. 1060-ஆம் ஆண்டு கொண்ட சாசனம் ஒன்றிலிருந்து அப்போது தாரா வர்ஷன் என்று மறுபெயரைப் பெற்றிருந்த மஹாராஜா ஜகதேகபூஷணன் என்ற சிந்தக-நாக அரசன் அந்நாட்டை ஆண்டு வந்தான் என்று தெரிகிறது. அப்போது அவனுடைய சிற்றரசனும் அம்மகாம என்னும் ஊரின் அதிபதியுமான தெலுங்குச் சோட மஹாமண்டலேச்வரன் சந்திராதித்திய மஹாராஜா என்பான் பாரஸீருவில் தான் தோண்டிய குளக்கரையில் சிவனுக்கு ஒரு கோயில் எழுப்பிய செய்தியைத் தெரிவிக்கிறது அந்தச் சாசனம். (ஹிராலால் தொகுத்த ஷை சாசனப் பட்டியல், நெ 269).

'திருமன்னி விளங்கும்' என்று தொடங்கும் முதற் குலோத்துங்க சோழனுடைய மெய்க்கீர்த்தியிலே பின்வருவது காணப்படுகிறது :

"கேளலர்
வஞ்சனை கடந்து வயிரா கரத்துக்
குஞ்சரக் குழாம்பல வாரி யெஞ்சலில்
சக்கரக் கோட்டத்துத் தாரா வரசனைத்
திக்கு நிகழத் திறைகொண் டருளி"

இதிலிருந்து அவன் சக்கரக் கோட்டத்து அரசனை தாரா வர்ஷனை வெற்றிகொண்ட செய்தி தெரியவரும். இந்நிகழ்ச்சி அவன் அரசனாக முடிசூட்டப் பெறுவதற்கு முன், அதாவது அவனுடைய இளங்கோப் பருவத்தில், நிகழ்ந்ததென்பது அதே அரசனுடைய 'புகழ்சூழ்ந்த புணரி' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியில்,

"விளங்குசய மகளை யிளங்கோப் பருவத்துச்
சக்கரக் கோட்டத்து விக்ரமத் தொழிலாற்
புதுமணம் புணர்ந்து மதவரை யீட்டம்
வயிரா கரத்து வாரி அயிர்முனைக்
கொந்தள வரசர் தந்தள மிரிய
வாளுறை கழித்துத் தோள்வலி காட்டிப்
போர்ப்பரி நடாத்திக் கீர்த்தியை நிறுத்தி
வடதிசை வாகை சூடி"

எனக் காணப்படுவதிலிருந்து தெளிவாகும். இவ்விதம் குலோத்துங்கனால் வெற்றி கொள்ளப்பட்ட தாராவர்ஷனும், சிந்தக-நாக மஹாராஜனான ஜகதேகபூஷண தாராவர்ஷனும் ஒருவனே போலும். சில வருஷங்களுக்குள்ளாகவே, அதாவது கி.பி. 1065-ஆம் ஆண்டில், அந்தப் பிரதேசம் அவ் வமிசத்தைச் சேர்ந்த மதுராந்தகன் என்பவனுடைய ஆட்சியில் இருக்கக் காணப்பெறுகிறது. (மதுராந்தகனுடைய ராஜாபுரச் செப்பேடுகள், எபி. இந்திகா, ஒன்பதாம் வால்யூம், 174 பக்கம் முதல்). ஆயினும் மறுபடியும் வெகு சீக்கிரம் அதே பிரதேசம் தாராவர்ஷ ஜகதேகபூஷணனுடைய மகன் சோமேச்வரனுடைய ஆளுகைக்கு மாறியிருக்கிறது. இந்தச்

சோமேச்வரனுடைய சாசனங்கள் பல கிடைத்துள்ளன. கி. பி. 1069-ஆம் ஆண்டு கொண்டதாகக் குருஸ்பால் என்னுமிடத்திலிருந்து கிடைத்ததே அவனுடைய சாசனங்களில் காலத்தால் முற்பட்டது. (எபி. இந்திகா, பத்தாம் வால்யூம், பக்கம் 31.) அதே இடத்திலிருந்து கிடைக்கும் அவனுடைய மற்றொரு கல்வெட்டில், அவன் சக்கரக்கோட்டத்து அரசுக்கு உரிமை பெற்றவன் என்றும், பலம் பொருந்திய மதுராந்தகனைக் கொன்று வெற்றிகொண்டவன் என்றும் குறிக்கப் பெற்றிருக்கிறான் (ஷை பக்கம் 25). அவன் வெற்றிகொண்ட மதுராந்தகனும், ராஜாபுரச் செப்பேடுகளை அளித்த மதுராந்தகனும் ஒருவனே போலும். இவ்விதம் குலோத்துங்க சோழன் வெற்றிகொண்ட தாராவர்ஷன் அரசாண்டதாகக் காணும் கி. பி. 1060-ஆம் ஆண்டுக்கும், அவன் மகன் சோமேச்வரன் அரசுபுரிந்ததாகக் காணும் கி. பி. 1069-ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில், கி. பி. 1065-ஆம் ஆண்டில் மதுராந்தகன் என்பான் ஒருவன் அந்த நாட்டை ஆட்சி புரிந்திருக்கிறான். அவனைக் கொன்று வெற்றிகொண்டதாலேயே சோமேச்வரன் தன் பிஜிரார்ஜிதமான நாட்டை அடையவேண்டி யிருந்தது. இவ்விதம் சக்கரக் கோட்டப் பிரதேச அரசுக்குப் போட்டியிட்ட சிந்தக நாகர்களான மதுராந்தகன், சோமேச்வரன் ஆகியோருடைய பெயர்களிலிருந்து மதுராந்தகனைச் சோழர்களுடைய உதவியைப் பெற்று அவர்களுக்கு அடங்கியவனாகவும், சோமேச்வரனை அதேபோல மேலைச் சாளுக்கியர்களுடைய உதவிபெற்றவனாகவும் கொள்ளலாம்.

இவ்விதம் சோழர்களும், சாளுக்கியர்களும் தக்ஷிணத்திலே கடுமையாகப் போட்டியிட்டு வந்த சமயத்திலே சாளுக்கியர்களுக்கு முன்னாளில் துணைவனாக நின்ற கலசூரி வேந்தனான கர்ணன் வடக்கே தன்னுடைய நிலைமையை ஸ்திரப்படுத்திக் கொள்வதில் முனைந்திருந்தான். அதில் அவன் ஓர் அளவு வெற்றியும் கண்டான். அவனுடைய சாசனங்கள் கிடைக்குமிடங்களையும் அவன் தரித்துக்கொண்ட திரிகலிங்காதிபதி (ஷை இரண்டாம் வால்யூம், 297-310 பக்கங்கள்) என்னும் விருதையும் கொண்டு, "அவன் ஆட்சி மேற்கே பனாஸ், மஹி ஆகிய நதிகளின் உற்பத்தி ஸ்தானங்களி

லிருந்து கிழக்கே ஹூக்ளி சங்கமம் வரையிலும், வடக்கே கங்கை - யமுனைப் பள்ளத்தாக்கிலிருந்து தெற்கே மஹாநதி, வைன்கங்கா, வர்தா, தப்தி நதிகளின் மேல் பகுதி வரையிலும்" பரந்திருந்ததென்று கொள்ளலாம். (எச். ஸி. ராய் எழுதிய வட இந்தியாவின் ராஜ வமிச சரித்திரம், இரண்டாம் வால்யூம், பக்கம் 779). அவன் காசி க்ஷேத்திரத்திலே கர்ண மேரு என்ற பெயருடன் மேரு எனப்படும் வகையிலே ஒரு கோயிலை எழுப்பி யிருக்கிறான். (மேரு எனப்படுவது நான்கு வாசல்களையும், வித விதமான பலகணிகளையும் கொண்டு பன்னிரண்டு அடுக்குகளுடன் ஆறு பட்டையாக அமைந்துள்ள கோயிற் கட்டட வகை என்று பிரஹத்ஸம்ஹிதை தெரிவிக்கிறது. கர்ணனுடைய தகப்பனான காங்கேயனும் காசியிலே மேரு வகையில் ஒரு கோயில் எழுப்பியுள்ளான். அதனின்றும் வேறுபடுத்திக் காட்டவே இதற்குத் தன் பெயரால் கர்ணமேரு என்று பெயரிட்டான் போலும். எபி. இந்திகா, இரண்டாம் வால்யூம், பக்கம் 4, சுலோகம் 14). இன்னும் அவனுடைய கொள்பெயரனான ஜயஸிம்ஹனுடைய சாசனத்தில், சோழ, குங்க, ஹூண, கௌட, கூர்ஜ்ஜர, கீர தேசத்து மன்னர்கள் கர்ணனுடைய தயவுக்குக் காத்திருந்தார்கள் என்ற செய்தி காணப்படுகிறது. (இந்தியன் ஆண்டிகுவரி, பதினெட்டாம் வால்யூம், பக்கங்கள் 215-17). அதே போல அவனுடைய பெயரனான கயா-கர்ணனுடைய மஹிஷி அல்ஹணதேவியின் பேராகட் சாசனத்தில், "ஒப்புவமையில்லாத புகழையுடைய இம் மன்னன் (லக்ஷ்மீ-கர்ணன்) தன் பராக்கிரமம் முழுவதையும் காண்பித்தபோது, பாண்டியன் சண்டையைத் துறந்தான்; முரளன் தன் அகம் பாவத்தை ஒழித்தான்; குங்கன் நல்ல மார்க்கத்தில் செல்ல ஆரம்பித்தான்; கலிங்கனோடு வங்கன் நடுங்கினான்; கூண்டுக் கிளிபோலக் கீரன் தன் நாட்டிலே தங்கினான்; ஹூணன் தன்னுடைய உல்லாஸத்தைத் துறந்தான்" என்று கூறப்பட்டுள்ளது. (எபி. இந்திகா, இரண்டாம் வால்யூம், பக்கம் 11.) முரளர் என்பார் வட கொங்கணத்தில் உள்ள முரள என்னும் ஆற்றங்கரைப் பிரதேசத்திலே வாழும் மக்கள் என்பர். (டாக்டர் என். வேங்கடரமணய்யா எழுதிய வேமுலவாடாச் சாளுக்கியர்கள், பக்கம் 67). குங்கர் என்பாரைக் கொங்கு

நாட்டார்கள் என்றே கொள்வர். (எச். ஸி. ராய், எழுதிய வட இந்திய ராஜ வமிச சரித்திரம், இரண்டாம் வால்யூம், பக்கம் 778). இவர்களோடு சோழ பாண்டியர்களுடைய பெயர்களும் காணப்படுவதிலிருந்து லக்ஷ்மீ - கர்ணன் தென்னாட்டிற்கும் வந்து போர்புரிந்திருக்கிறான் என்றே கொள்வர். மேலைச் சாளுக்கியர்களுடன் சேர்ந்துகொண்டு அவன் சோழர்களோடு நடத்திய போர்களின் விளைவுகளே இப் புகழ்ச்சிபோலும். ஆயினும் ஒன்று மட்டில் நிச்சயமாகத் தெரிகிறது. கர்ணன் வடக்கிலே தன்னுடைய பிடிப்பை இறுக்கிக் கொண்டான். கன்யாகுப்ஜமும் அவனுடைய ஆளுகைக்குள் வந்தது. இது கன்யாகுப்ஜத்துக் காஹடவால அரசனான கோவிந்த சந்திரனுடைய பஸஹிச் செப்பேடுகளிலிருந்து தெளிவாகிறது. அதிலே, அவனுடைய வமிசத்தவர்கள் அரசை ஏற்பதற்கு முன் போஜன், கர்ணன் ஆகியோர் கன்யாகுப்ஜத்தை ஆண்டு வந்தனர் என்று கூறப்பட்டுள்ளது.

எனினும் சோழர்கள் தங்களுக்கு வடக்கே செல்வாக்குக் குறைவு நேரிட்டதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருந்திருக்கமாட்டார்கள். தங்களுடைய பழைய நிலையை மீண்டும் அடைவதற்கு நிச்சயம் பெரிதும் முயன்றிருப்பர். 'வீரமே துணையாகவும்' என்று தொடங்கும் வீரராஜேந்திரனுடைய மெய்க்கீர்த்தியிலே அவன் கன்னகுச்சியை மீட்ட செய்தி காணப்படுகிறது. (தெ. இ. சாசனங்கள், மூன்றாம் வால்யூம், நெ. 83). மெய்க்கீர்த்தியின்படி, இவ் வெற்றி இரண்டாம் சோமேச்வரன் தன் கண்டிகை அவிழ்ப்பதன் முன்னதாகவே (அதாவது அவன் தந்தை இறந்த கி. பி. 1068-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 30-ஆம் தேதிக்குப் பிறகு அதே ஆண்டு ஏப்ரல் மாதம் 11-ஆம் தேதி முடிசூட்டிக் கொள்வதற்குமுன்) அடைந்த வெற்றிக்குப் பிறகு, சக்கரக் கோட்டத்துக்குத் தன் படைகளை நடத்திச் சென்றதன் விளைவாகவே ஏற்பட்டிருத்தல் வேண்டும். அதன் முடிவில் அவன் 'எல்லை கெடாது நிலையிட்டு', 'வடதிசை இமயத்தொடுங் கிடந்த சேது வாம்பாகச் செங்கோல் செலுத்தி'னான் என்று கூறப்பட்டிருக்கிறது. ('எல்லை கடந்து நிலையிட்டு' என்ற பாடமும் உண்டு.)

இந்தப் போர்களிலே வீரராஜேந்திரனுக்கு முதற் குலோத்துங்கன் உதவியாக இருந்திருக்கிறான் என்றே

தெரிகிறது. அப்போது குலோத்துங்கன் அரசனாகவில்லை. அவனுடைய பிதிரார்ஜிதமான வேங்கி நாடு அவன் சிற்றப்பன் விஜயாதித்தியன் ஆட்சியில் இருந்தது. கீழைச் சாளுக்கிய வமிசத்தைச் சேர்ந்த அவன் நாட்டை இழந்தபடியால் தன் மாமனான வீரராஜேந்திரனோடு சோழ நாட்டில் தங்கிவந்தான். இராஜேந்திரன் என்றே பெயர் பெற்றிருந்தான். அரசனாக முடி சூடுவதற்குமுன் அவன் நிகழ்த்திய வெற்றிகளை அவன் இளங்கோப் பருவத்தில் கொண்டனவாக அவனுடைய மெய்க்கீர்த்திகள் கூறுகின்றன. அவற்றின் சில பகுதிகளையும் நாம் முன்னரே கொடுத்திருக்கிறோம். சக்கரக் கோட்டப் பகுதியில் அவன் கொண்ட வெற்றிகள் மிகவும் சுருக்கமாகவே காணப்படுகின்றன. கலிங்கத்துப் பரணியிலே,

> கடித ழிந்துபோர் மிதிலை யிற்படும்
> கரிம ருப்பினைத் திரள்து லாமெனும்
> படிப ரப்பியப் பரும யானையின்
> பழுவெ லும்பினில் பாவ டுக்கியே
>
> (பண்டித அ. கோபாலையர் பதிப்பு, தாழிசை 87)

என்று காணப்படுவதிலிருந்து அவன் மிதிலையில் நடந்த போரில் அநேகம் யானைகளைக் கொன்று வெற்றிகொண்டான் என்பது தெரிகிறது. அவனுக்கு ஏழெட்டு மெய்க்கீர்த்திகளும் ஒவ்வொன்றிலும் பல பாடங்களும் காணப்படுகின்றன. (க. அ. நீலகண்ட சாஸ்திரிகள் எழுதிய சோழர்கள், இரண்டாம் வால்யூம், பக்கம் 2.) எனினும் அவற்றுள்ளே இம் மிதிலைப் போர் எங்கும் குறிக்கப் பெறவில்லை. அதனாலே இதுவும் அவனுடைய இளங்கோப் பருவத்தில், வீரராஜேந்திரன் ஆட்சிக் காலத்திலே, நடந்த நிகழ்ச்சிகளுள் ஒன்றாகும் போலும்.

மேலைச் சாளுக்கிய மன்னனான ஆஹவமல்லனுடைய ஆட்சிக் காலத்தின் கடைசியில் அவன் மகன் விக்கிரமாதித்தியன் திக்குவிஜயம் செய்து கொண்டிருந்தான் என்றும் அந்தச் சமயம் அவனுடைய சேனை கௌட காமரூப தேசங்களையும் வெற்றிகொண்டது என்றும் பில்ஹணருடைய விக்கிரமாங்க தேவ சரிதம் கூறுகிறது. (இந்தியன் ஆண்டிகுவரி

J

ஐந்தாம் வால்யூம், பக்கம் 319). அவனுடைய தந்தை இறந்த செய்தி அவனுக்கு எட்டிய சமயம் அவன் வெற்றிவீரனாகத் திரும்பிவரும் வழியில் கிருஷ்ணா நதிக்கரையில் தங்கியிருந் தான். (விக்கிரமாங்க தேவ சரித்திரம், ஆறாம் சர்க்கம், 36 சுலோ கம்.) அப்பால் தந்தை இறந்ததால் ஏற்பட்ட நிலைமையைக் கவனிப்பதில், இரண்டாம் சோமேசுவரன், விக்கிரமாதித்தியன் ஆகிய சகோதரர்கள் இருவரும் ஈடுபட்டிருக்கும்போது, வீர ராஜேந்திரன் வடக்கே தன் படைகளை நடத்திச் சென்று, அதற்குமுன் விக்கிரமாதித்தியன் திக்கு விஜயத்தால் சோழர் கள் இழந்த பகுதிகளை மீட்டுக்கொண்டான் போலும். கன் யாகுப்ஜத்தை அவன் மீட்டுக்கொண்டதும் அதே சமயம்தான் போலும்.

இதுகாறும் கூறியவற்றால், முதலாம் இராஜேந்திர சோழன் போர்ப்படை நடாத்திக் கங்காவிஜயம் செய்த காலத் தில் வடநாட்டிலே சோழர்களுக்கு ஏற்பட்ட ஆதிக்கியத்தை யும் செல்வாக்கையும், நடுவிலே அவர்களுக்கும் மேலைச் சாளுக்கியர்களுக்கும் ஏற்பட்ட கடும் போட்டியின் விளைவாக அவை சிறிது மங்கியிருந்தாலும், வீரராஜேந்திரன் ஆட்சியின் முடிவு வரையில் கொஞ்சமும் குறைய விடாமல் அவர்கள் காப்பாற்றி வந்திருக்கிறார்கள் என்பது விளங்கும்.

இவ்விரண்டு பேரரசுகளுக்கும் இடையில் இருந்த விரோதபாவத்திலே ஆஹவமல்ல சோமேச்வரன் இறந்ததி லிருந்து ஒரு மாறுதல் ஏற்பட்டது. இரண்டு ஆண்டுகள் கழித்து வீரராஜேந்திரன் இறந்த பிறகு மற்றும் ஒரு மாறு தல் நேர்ந்தது.

ஆஹவமல்லன் இறந்து அவன் மூத்தமகனான இரண் டாம் சோமேச்வரன் மேலைச் சாளுக்கிய அரசனாக முடிசூட் டிக் கொண்டதன்பின் அவனுக்கும் அவன் தம்பி விக்கிரமா தித்தனுக்கும் இடையில் பிளவு ஏற்பட்டது. அந்தப் பிளவு சிறிது நாளிலே முற்றியதால் விக்கிரமாதித்தியன் தன் தம்பி ஜயஸிம்ஹனையும் உடன் அழைத்துக்கொண்டு கல்யாண புரத்திலிருந்து வெளியேறிவிட்டான். அவர்களால் தனக்குக் கெடுதல் ஏற்படக் கூடும் என்று தீர்மானித்த சோமேச்வரன்

அவர்களைச் சும்மா விட்டுவிடவில்லை; அவர்களைத் தொடர்ந்து தன் படைகளை ஏவினான். எனினும், விக்கிரமாதித்தியன் அந்தப் படைகளை முறியடித்து, துங்கபத்திரை நதிக்கரையை அடைந்து, அவ்விடத்திலே சிறிது காலம் தங்கியிருந்தான். (விக்கிரமாங்க தேவ சரித்திரம், நான்காம் சர்க்கம், 67-ஆம் சுலோகம் முதல் ஐந்தாம் சர்க்கம், பத்தாம் சுலோகம் வரை.) வீரராஜேந்திரனுடைய மெய்க்கீர்த்தியிலே பின்வருவது காணப்படுகிறது:

" சோமேச்வரனைக்
கன்னட தேசங் கைவிடத் துரத்தித்
தன்னடியடைந்த சளுக்கி விக்கிரமாதித்தனை
எண்டிசை நிகழக் கண்டிகை கட்டி
இரட்ட பாடி ஏழரை இலக்கமும்
எறிந்து கொடுத்தருளி "

இதிலிருந்து விக்கிரமாதித்தியன் தன் தமையனுக்கு எதிராகச் சோழ மன்னன் வீரராஜேந்திரனுடைய உதவியை வேண்டினான் என்பதும், சோழனும் அவனுக்கு உதவியளித்தான் என்பதும் தெரியவரும். இதே சமயம் மேலைக் கடற்கரையில் உள்ள (கோவா) கோபகா பட்டினத்தை ஆண்டு வந்த கதம்ப குல மன்னனான ஜயகேசி என்பான், மேலைச் சாளுக்கிய அரசனை அவனுடைய ஸ்திர சிம்மாசனத்தில் இருத்தியவன் என்றும், சாளுக்கியர்களையும் சோழர்களையும் காஞ்சி மாநகரத்தில் ஒன்று சேர்த்து நட்புரிமை கொள்ளச் செய்தவன் என்றும் கதம்ப சாசனங்களில் புகழப்படுகிறான். (ராயல் ஏஷியாடிக் ஸொஸைட்டி பம்பாய்க் கிளையின் பத்திரிகை, ஒன்பதாம் வால்யூம், பக்கம் 282; இன்னும் பம்பாய் கெஜட்டியர், முதல் வால்யூம், இரண்டாம் பாகம், பக்கம் 367.) வீரராஜேந்திரன் தன் மகளை விக்கிரமாதித்தியனுக்கு மணம் செய்து இந்தத் தோழமையைப் பலப்படுத்திக் கொண்டான் என்று பில்ஹணர் கூறுகிறார். (விக்கிரமாங்க தேவ சரிதம், ஐந்தாம் சர்க்கம், 28-ஆம் சுலோகம் முதல் ஆறாம் சர்க்கம், மூன்றாம் சுலோகம் வரை.) இவ்விதம் சாளுக்கியர்களுடைய விவகாரத்திலே சோழ மன்னன் தீவிரமாகத் தலையிட நேர்ந்ததால் சோமேச்வரன் அதற்கு மேல் ஏதும் செய்ய வகையில்லாமல் தன்னுடைய

ராஜ்யத்தில் ஒரு பாதியைப் பிரித்து விக்கிரமாதித்தியனுக்கு அளிக்கவேண்டிய நிர்ப்பந்தம் உண்டாகியது. அதுவும் அவன் சிங்காதனம் ஏறியவுடனேயே நடந்தபடியால் அவன் விட்டுக் கொடுக்க நேரிட்டதுபோலும். இவ்விதம் மேலைச் சாளுக்கிய ராஜ்யம் இரண்டாகப் பிரிந்தது. விக்கிரமாதித்திய னுக்குத் தென்பகுதி கிடைத்தது. அதை அவன் திரைலோக்கிய மல்லன் என்ற விருதுடன் அரசாளத் தொடங்கினன். வடபகுதி சோமேச்வரன் ஆட்சியில் அடங்கியிருந்தது. சோழ-சாளுக்கியர்களின் பலப்பரீக்ஷைப் போட்டியில் ஒரு கட்டம் இதனோடு முடிந்தது என்று சொல்லலாம். வீரராஜேந்திரன் இந்தச் சமாதானம் ஏற்பட்ட பிறகு நீண்ட நாள் ஜீவித்திருக்கவில்லை. இரண்டு வருஷங்களுக்குள்ளாகவே இறந்து விட்டான். அவன் இன்னும் சிறிதுகாலம் உயிருடன் இருந்திருப்பானயின் சரித்திரத்தின் போக்கே வேறுவிதமாக மாறியிருக்கக் கூடும்.

### அதிராஜேந்திரனும் முதற் குலோத்துங்கனுடைய முடிசூட்டும்.

வீரராஜேந்திரனுடைய ஆட்சியின் எட்டாம் ஆண்டைப் பற்றிய குறிப்பு அவனுக்குப் பின் சோழ சிங்காதனம் ஏறிய அவன் மகன் அதிராஜேந்திரனுடைய சாசனத்தில் காணப்படுகிறது. அதனுல் அவன் கி. பி. 1070-ஆம் ஆண்டின் முற்பகுதியில் இறந்திருக்கவேண்டும். தஞ்சாவூர் ஜில்லாவில் முத்துப்பேட்டைக்குச் சமீபம் உள்ள சித்தமல்லி என்னும் கிராமத்தில் அதிராஜேந்திரனுடைய கல்வெட்டு ஒன்றை நான் 1944-ஆம் ஆண்டில் கண்டு பிடித்தேன்.[1] அவனுடைய ஆட்சியின் மூன்ரும் ஆண்டு முந்நூற்றிருபத்தொன்பதாம் நாள் கொண்ட அந்தக் கல்வெட்டில், அந்தச் சாசனம் அளிக்கப்பட்ட நாளின் பஞ்சாங்கக் குறிப்புகள் உள்ளன. ரிஷப மாதம் சுக்கிலபக்ஷப் பிரதமையும் செவ்வாய்க்கிழமையும் கொண்ட ரோஹிணி நாளான அது கி. பி. 1071-ஆம் ஆண்டு மே

---

1. சாசன இலாகாவினரும் இதைப் பின்னல் பிரதி செய்திருக்கிருர்கள். 1945-46-ஆம் ஆண்டின் நெ. 5. கொண்ட இக்கல்வெட்டு எபிகிராபியா இந்திகா பத்திரிகையில் வெளியாவதற்காகப் பேராசிரியர் க. அ. நீலகண்ட சாஸ்திரிகள் அவர்களோடு கூட்டாக என்னல் பதிப்பிக்கப்பட்டு வருகிறது.

மாதம் மூன்றாம் தேதியாகும். இதைக்கொண்டு கணித்தால் அவனது ஆட்சி 1068-ஆம் ஆண்டு ஜுன் மாதம் ஒன்பதாம் தேதி ஆரம்பமாயிற்று என்பது தெரியவரும்.

அதிராஜேந்திரனுடைய ஆட்சிக் காலம் ஏதோ சில நாட்களோ வாரங்களோ கொண்டதாகவே இருந்தது என்றும், அதன் முடிவில் அவன் இறந்து நாட்டிலே அரசுரிமைக்கு உரிய பிள்ளைகள் இல்லாமையாலும் அராஜகம் தாண்டவமாடியதாலும், குலோத்துங்கன் சோழ சிங்காதனம் அடைந்தான் என்றும், அவ்விதம் அவன் சோழ மன்னனாக முடிசூட்டப்பெற்ற காலம் கி. பி. 1070-ஆம் ஆண்டு ஜுன் மாதம் ஒன்பதாம் தேதியாகும் என்றும் பொதுவாக இதுவரையில் கருதி வந்திருக்கிறார்கள். (தெ. இ. சாசனங்கள், மூன்றாம் வால்யூம், பக்கம் 127). ஆயினும் குலோத்துங்கன் சோழ சிங்காதனம் ஏறியதாகக் கருதப்படும் நாளுக்குப் பிறகு பதினொரு மாத காலம் அதிராஜேந்திரன் உயிரோடு வாழ்ந்து நாட்டை ஆண்டு வந்திருக்கிறான் என்பதை நாம் மேலே கண்டோம். ஆகவே முதற் குலோத்துங்க சோழன் சோழநாட்டின் அரசுரிமையை அடைய நேர்ந்த சந்தர்ப்பத்தை நாம் மறுபடியும் ஆராயவேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது.

குலோத்துங்கனுடைய ஆட்சியின் பிற்பகுதியில் அளிக்கப்பட்ட சாசனங்களில் பல—அவற்றுள்ளும் முக்கியமாக ஆட்சியின் ஆண்டு, சகாப்தம் ஆகிய இரண்டையும் கொடுப்பனவாகத் தெலுங்கு நாட்டிலிருந்து கிடைப்பவை—கி. பி. 1070-ஆம் ஆண்டையே அவனுடைய ஆட்சியின் ஆரம்பகாலமாகக் காட்டுகின்றன. வேங்கிநாடு நீண்ட நாளுக்கு முன்னதாகவே அவனுக்குக் கிட்டாமல் அவன் கையிலிருந்து நழுவி விட்டபடியால் அந்தத் தேதியை அவன் வேங்கி நாட்டுக்கு அரசனாக முடிசூட்டப்பெற்ற காலமாகவும் கொள்ள முடியாதென்பர்.

குலோத்துங்கன் தந்தையான இராஜ ராஜ நரேந்திரனுடைய ஆட்சிக் காலத்திலிருந்தே வேங்கிநாடு தாயாதிச் சண்டையின் போர்க்களமாக விளங்கியது. இந்தப் போர் அவன் ஆட்சி முழுவதும் நிகழ்ந்த வண்ணம் இருந்தபடியால் நரேந்திரனால் நாட்டை அமைதியாக ஆளமுடியவில்லை.

அவன் சோழ சக்கரவர்த்தி முதலாம் இராஜராஜன் மகள் குந்தவைக்கும் அவளை மணந்துகொண்ட கீழைச் சாளுக்கிய மன்னன் விமலாதித்தியனுக்கும் பிறந்தவன். கீழைச் சாளுக்கியர்கள் தங்கள் நாட்டை இழந்து சோழநாட்டில் அடைக்கலம் புகுந்திருந்த காலத்தில் அந்தத் திருமணம் நடந்தது. விமலாதித்தியன் கி. பி. 1011-ஆம் ஆண்டு மே மாதம் பத்தாம் தேதி வேங்கிக்கு அரசனாக முடிசூட்டப் பெற்றவன். (எபி. இந்திகா, ஆறாம் வால்யூம், பக்கம் 359.) அவன் ஏழு வருஷ காலம் ஆட்சி புரிந்தான் என்று கூறப்பட்டுள்ளது. (அவன் மகன் இராஜராஜ நரேந்திரனுடைய கோருமெல்லிச் சாசனம்: இந்தியன் ஆண்டிகுவரி, பதினான்காம் வால்யூம், பக்கம் 53.) எனினும் ரணஸ்தி பூண்டிச் சாசனம் (எபி. இந்திகா, ஆறாம் வால்யூம், பக்கம் 359) அவனுடைய ஆட்சியின் எட்டாம் ஆண்டில் அளிக்கப்பட்டது. அதனால் அவன் தன்னுடைய ஆட்சியின் எட்டாம் ஆண்டு ஆரம்பத்தில், கி. பி. 1018-ஆம் ஆண்டின் பிற்பகுதியில், காலம் ஆகியிருத்தல் வேண்டும். ராஜ ராஜ நரேந்திரனுடைய ஆட்சியின் ஆண்டோடு சகாப்தத்தையும் சேர்த்துத் தெரிவிக்கும் சாசனங்களில் சில அவனுடைய ஆட்சி இந்தக் காலத்தில்ஆரம்பமாயிற்றென்பதைக் காட்டுகின்றன.[1] ஆனாலும் அவனுடைய மகுடாபிஷேகம் அப்போது நடைபெறவில்லை; நான்கு ஆண்டுகளுக்குப் பிறகே கி.பி. 1022-ஆம் ஆண்டில் நடந்தது. அவனுடைய கோருமெல்லிச் சாசனத்திலிருந்து அந்த மகுடாபிஷேகம் 1022-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பதினாறாம் தேதி வியாழக்கிழமை நடந்ததென்று தெரிகிறது.(இந்தியன் ஆண்டிகுவரி, பதினான்காம் வால்யூம், பக்கம் 53) இவ்விதம் அவன் அரசுக்கு உரியவன் ஆனதற்கும் முடிசூட்டப் பெற்றதற்கும் நடுவில் நான்கு ஆண்டு இடைவெளி இருந்திருக்கிறது. எதனால் இப்படியாயிற்று என்பது நன்கு விளக்கப்பெறவில்லை.

இராஜராஜ நரேந்திரனுக்குக் குந்தவையைத் தவிர, மேளமா அல்லது மேடமா என்ற பெயரையுடைய தேவி ஒருத்

---

1. இதே போல இவனுடைய ஆட்சிக் காலத்தைக் கி. பி. 1022-ஆம் ஆண்டு முதலே கணக்கிட்டுக் காட்டும் சாசனங்களும் கிடைக்கின்றன.

தியும் இருந்திருக்கிருள். அவளும் சோட குலத்தில் பிறந்த வளே. தெலுங்குச் சோடவமிசம் போலும். அவள் வயிற்றில் பிறந்த விஜயாதித்தியன் என்ற இளவரசன் ஒருவனும் உண்டு. தந்தை இறந்ததும் அவனே வேங்கி நாட்டுச் சிங்காதனத்தை மேலைச் சாளுக்கியர்களுடைய உதவியோடு கைப்பற்றியிருத்தல் வேண்டும் என்று எண்ணவேண்டியிருக்கிறது. அதனுலேயே இந்த இடைவெளி ஏற்பட்டதுபோலும். இந்த இடைவெளிக்காலத்தில் வேங்கி நாட்டை விஜயாதித்தியனே ஆண்டு வந்தான். அதனுல் ராஜ ராஜ நரேந்திரன் தன் மாமனுன முதலாம் இராஜேந்திர சோழனுடைய உதவியை நாடவேண்டியதாயிற்று. இராஜேந்திரன் அவனுக்குத் தாய் மாமன் மட்டுமல்ல; தன் மகளான அம்மங்கதேவியையும் அவனுக்கு மணம் செய்து கொடுத்திருந்தான்.

இராஜேந்திர சோழனும் தன்னுடைய ஆட்சியின் பத்தாம் ஆண்டில் வேங்கி நாட்டின்மீது படையெடுத்துச் சென்றிருக்கிருன். அனந்தபூர் ஜில்லாவில் மதகசிரா தாலுகாவில் உள்ள மதகசிரா, கொத்தசீவரம் கிராமங்களில் கிடைக்கும் தமிழ்ச் சாசனங்களிலிருந்து இது தெரியவருகிறது. (1917-ஆம் ஆண்டு 23, 24, 30, 31, 751, 752 நெ. சாசனங்கள்.) அரசனுடைய ஆணைப்படி சாமந்தாபரணனும் சேனுதிபதியுமான அரையன் ராஜராஜனுன விக்கிரம சோழச் சோழிய வரையன் என்பான் அந்தப் படைகளுக்குத் தலைமை தாங்கிப் போரை நடத்தினுன் எனத் தெரிகிறது.

அந்தச் சாசனங்களிலிருந்து அவன் வேங்கி நாட்டு அரசனை அந் நாட்டிலிருந்து வெளியே துரத்தினுன் என்றும், ஜயசிங்கன் குலத்தை அழித்தான் என்றும், கலிங்கர், தெலுங்கர், குலிங்கர், ஒட்டர் ஆகியோரைப் போரில் வென்ருன் என்றும் தெரியவருகிறது. இதிலிருந்து சோழனுல் வேங்கியிலிருந்து துரத்தப்பட்டவன், ஜயஸிம்ஹன் குலத்தைச் சேர்ந்த மேலைச் சாளுக்கியர்களோடு நட்புரிமை பூண்டிருந்தான் என்பதும் விளங்கும்.

"போயினுன் போர்ச்சளுக்கி பொற்சோ ழியவரசை
ஏவினுன் கோச்சென்னி என்னவே—வாயினுற்

"கோல்வேங்கை பின்தொடரக் கோள்வேங்கை சூழ்
புறவில்
தொல்வேங்கை மண்டலமுந் தோற்று"

என்னும் பாடலால் வேங்கியிலிருந்து ஓடிய மன்னன் சாளுக்கிய குலத்தைச் சேர்ந்தவனே என்பதும் அந் நாட்டு அரசுக்கு உரிமை உள்ளவன்தான் என்பதும் தெளிவாகும். எனினும் அவன் ராஜ ராஜ நரேந்திரனாக இருத்தற்கில்லை. சோழர்களுக்கும் அவனுக்கும் உள்ள நெருங்கிய உறவு ஒருபுறம் இருக்க, இந்தப் படையெடுப்பின் முடிவில்தான் அவன் வேங்கி நாட்டு அரசனாக முடிசூட்டப் பெற்றிருக்கிறான் என்பதையும் நாம் கவனிக்கவேண்டும். அவன் ஆட்சி முழுவதிலும் அவனுக்குச் சோழர்களோடு சுமுகமான உறவு இருந்திருக்கிறது. அன்றி, விஜயாதித்தியனுடைய வாழ்க்கையைப் பார்த்தாலும் இது விளங்கும். இராஜேந்திர சோழன் வேங்கி விவகாரத்தில் தலையிட்டு விஜயாதித்தியனை அங்கிருந்து துரத்தித் தன் மருமகன் ராஜ ராஜ நரேந்திரனுக்கு நாட்டை மீட்டுக் கொடுத்து மகுடாபிஷேகமும் செய்துவைத்தான்.

அதற்குப் பிறகும் நரேந்திரன் ஆட்சி அமைதியாக நடைபெறவில்லை. மறுபடியும் விஜயாதித்தியன் தன் மாற்றாந் தாய்ச் சகோதரனைத் துரத்தி வேங்கியைக் கைக்கொண்டு, கி. பி. 1031-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 27-ஆம் தேதி அரசனாக முடிசூட்டிக்கொண்டான். அவனுடைய பாமுலவாகச் செப்பேடுகளிலிருந்து இது தெரிகிறது. (ஆந்திர சரித்திர ஆராய்ச்சிக் கழகத்தின் பத்திரிகை, இரண்டாம் வால்யூம், பக்கம் 257.) அவன் மேலைச் சாளுக்கியர்களுக்கு அடங்கியவனாக அவர்களின் கீழ் அதிகாரியாக இருந்துவந்தான். அதனால் இந்த முயற்சியிலே அவனுக்குப் பேரரசர்களான மேலைச் சாளுக்கியர்களுடைய உதவியும் இருந்து வந்தது. திரும்பவும் சோழர்கள் வேங்கி விவகாரத்தில் தலையிட்டு விஜயாதித்தியனை வெளியேற்றி நாட்டை மீட்டு நரேந்திரனுக்கு அளிக்கவேண்டியதாயிற்று. இவ்விதம் வேங்கிநாடு, இரு சகோதரர்களுக்குள் ஏற்பட்ட தாயாதிச் சண்டைக்குக் காரணமாக மட்டுமல்லாமல், அவரவர்க்கு வேண்டிய அரசர்களை ஆதரித்து நின்றதால்

சோழர்களுக்கும் மேலைச்சாளுக்கியர்களுக்கும் இடையில் சது ரங்கக் காயாக அகப்பட்டுத் திண்டாடியது.

ஆஹவமல்ல சோமேச்வரன் கி. பி. 1042-ஆம் ஆண்டு மேலைச் சாளுக்கிய மன்னனாகச் சிங்காதனம் ஏறினான். அதன் பின் இரண்டு ஆண்டுகளிலே இராஜேந்திர சோழனும் இறந் தானாதலால் அவன் மகன் இராஜாதிராஜன் சக்கரவர்த்தி யானான். அப்பால் வேங்கிநாட்டு அரசியலிலும், ராஜராஜ நரேந்திரனுடைய நிலைமையிலும் மறுபடியும் மாறுதல் ஏற் பட்டது. வேங்கியையும், அதனோடு ஒருபாகமாக இணைந்திருந்த கலிங்கத்தையும் சோழர்களிடமிருந்து மேலைச் சாளுக்கியர்கள் கைப்பற்றி, அவ்விடங்களில் தங்கள் அரசை நிலை நிறுத்தினார் கள். இராஜாதிராஜனும் அவனுக்குப் பின் சோழ சிங்காதனம் ஏறிய இரண்டாம் இராஜேந்திர சோழனும் வேங்கியைச் சோமேச்வரன் பிடியிலிருந்து மீட்கச் செய்த முயற்சிகள் அனைத்தும் வீணாயின. (டாக்டர் என். வேங்கடரமணய்யா எழுதிய வேங்கி நாட்டுக் கீழைச் சாளுக்கியர் சரித்திரம், பக்கம் 231 முதல்). இந்த நிலை சோழ சாசனங்களிலிருந்தும் தெளிவாகத் தெரிகிறது. வீர ராஜேந்திரனுடைய சாராலச் செப்பேடு களில் (எபி. இந்திகா, இருபத்தைந்தாம் வால்யூம், நெ. 15.) பின் வரும் சுலோகம் காணப்படுகிறது.

ப்ராத்ருப்யாம் சமுபேக்ஷிதம் ஜநபதம்
வம்சக்ரமாப்யாகதம்
க்ராந்தம் வைரி மஹீச்வரைரதிபலைர்-வ்
வேங்கீங் கலிங்காநபி ।
ஜித்வா சத்ரு பரம் பரா மதிபலாம்
பித்வா ச துர்க்கான் பஹூந்
ஸ்ரீமாந் வல்லப வல்லபஃ க்ஷிதிபதிஃ
க்ஷேமேண தாம் ஸோந் வஸாத் ॥

(சுலோகம் 77)

இதே பிரசஸ்தியும் சுலோகமும் அவனுடைய கன்யா குமரிக் கல்வெட்டிலும் காணப்படுகின்றன. (திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் ஸீரீஸ், மூன்றாம் வால்யூம்). "சகோதரர் கள் இருவரால் வமிச பரம்பரையாக வந்து அடையப்பெற்றும்

அவர்கள் சரியாகக் கவனிக்காமையால் மிகுந்த பலம் பொருந்திய எதிரிகள் கைப்பற்றிய வேங்கி நாட்டையும் கலிங்க தேசத்தையும் அதிபலம் பொருந்திய அந்த எதிரிகளை வென்று அநேக கோட்டைகளை அழித்து ஸ்ரீமான் வல்லப வல்லபனை (அதாவது வல்லபர்கள் என்று பொதுவாகக் குறிக்கப் பெறும் மேலைச் சாளுக்கியர்களுக்கு வல்லவனை) இம் மன்னன் மீட்டு அவற்றுக்கு நன்மை நல்கினான்."

இம்மீட்சி வீரராஜேந்திரன் காலத்தில்தான் நடந்தது. இடையில் வேங்கிநாடு சுமார் இருபது ஆண்டுகளுக்கு மேலைச் சாளுக்கியர்கள் வசம் இருந்தது. அப்போது இராஜராஜ நரேந்திரன் வேறு வழியில்லாமல் அவர்களுடைய ஆதிக்கியத்தை ஏற்று அவர்களுக்கு அடங்கியவனாக அரசுபுரிய நேர்ந்தது. இல்லாவிட்டால், அவன் தன் நாட்டைத் துறந்து பழைய படியே சோழநாட்டில் அடைக்கலம் புகுந்திருக்க வேண்டும். அதைக் காட்டிலும் இதுவே சந்தர்ப்பத்திற்கு ஏற்றது என அவன் நினைத்தான்.

மேலைச் சாளுக்கியர்களுடைய விருதுகள் சிலவற்றை அவன் தரித்துக்கொண்டான். அன்றி, அவர்களுடைய பிரதிநிதி ஒருவனையும் தன்னுடைய சபையிலே அங்கம் வகிக்க ஒப்புக்கொண்டான். சோமேச்வரனுடைய பிரதானிகளுள் ஒருவரான நாராயண பட்டர் என்பார் அவ்விதம் இருந்திருப்பது தெரிகிறது. "அவர் ராஜராஜநரேந்திரனுடைய ஆஸ்தான கவியும் ஆந்திர மஹாபாரதம் இயற்றிய மகா கவியுமான நன்னய பட்டருடைய சகபாடி. அவரும் சிறந்த கவிஞரே. நன்னயபட்டர் ஆந்திர மஹாபாரதம் இயற்றியதற்கு அவர் பெரிதும் உதவியிருக்கிறார். அதைப் பாராட்டி மன்னன் அவருக்கு நந்தமபூண்டி என்னும் கிராமத்தைக் கி.பி. 1051-52-ஆம் ஆண்டில் தானமாக அளித்திருக்கிறான்." இன்னும் திராக்ஷாராமத்திலிருந்து கிடைக்கும் கி. பி. 1055-56-ஆம் ஆண்டு கொண்ட ஒரு கல்வெட்டிலும் அவர் பெயர் காணப்படுகிறது. (தெ. இ. சாசனங்கள், நான்காம் வால்யூம், பக்கம் 1010).

இராஜ ராஜ நரேந்திரன் நாற்பத்தோராண்டுகள் அரசு புரிந்தான். அதன் முடிவில் அவனுடைய மாற்றாந்தாய் வயிற்றுச் சகோதரனான விஜயாதித்தியன் மறுபடியும் வேங்கியைக்

க்கைப்பற்றிக்கொண்டான். இது அவனுடைய ரியாலச் செப் பேடுகளால் தெரிகிறது. (ஆந்திர சரித்திர ஆராய்ச்சிக் கழகப் பத்திரிகை, ஒன்பதாம் வால்யூம், பக்கம் 31).

பரோக்ஷே ராஜராஜஸ்ய ப்ராதுர் த்வைமாதுரஸ்ய யஃ।
பர்யக்ரஹீத் மஹாராஜ்ய ஸ்ரீயம் வீரஸ்ரீயா யுதஃ॥

"மாற்றாந்தாய் மகனான ராஜராஜன் காணப்படாத சமயம் [இம்மன்னன்] வீர லக்ஷ்மியுடன் பெரிய ராஜ்யலக்ஷ்மியைக் கைப்பற்றினான்" என்று கூறும் அந்தச் சுலோகத்தில், பரோக்ஷம் அதாவது 'காணப்படாதபோது' என்ற சொல்லாட்சியைக் கவனிக்கவேண்டும். அதனால் இராஜ ராஜ நரேந்திரன் இயற்கை முடிவு எய்தும் வரையில் விஜயாதித்தியன் காத்திருந்தானா அல்லது இடையிலேயே நாட்டைக் கைபற்றிக் கொண்டானா என்ற சந்தேகம் உண்டாகிறது. எவ்விதமாயினும், அவன் இவ்வளவு ஆர்வத்துடன் கைப்பற்றிய நாட்டைத் தானே நேரிடையாக ஆளவில்லை; தன் மகன் இரண்டாம் சக்திவர்மனுக்கு முடிசூட்டி வைத்தான். இம் மகுடாபிஷேகம் கி. பி. 1061-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 18-ஆம் தேதி வியாழக்கிழமை நடந்ததாகும். அவனும் ஒரு வருஷ காலமே ஆட்சிபுரிந்தான். அதன் முடிவில் அவன் 'அபிமன்யுபோல்' சுவர்க்கத்திற்குச் சென்றான். இந்த உபமானத்திலிருந்து சக்திவர்மனும் கடும்போரிட்டுப் போரிலே உயிர் துறந்தான் என்று எண்ணவேண்டியிருக்கிறது. விஜயாதித்தியனையும் அதைப் போலவே சந்திரகுலத்து அர்ஜுனனுக்கு ஒப்பிட்டுக் கூறுகிறது சாசனம். இவ்வளவு கஷ்டங்கள் நேர்ந்தபோதிலும் கடமையையே பிரதானமாகக் கருதிய விஜயாதித்தியன் வேங்கியின் அரசபாரத்தை வகிக்க முற்பட்டான். இது திராக்ஷாராமத்தில் கிடைக்கும் அவனுடைய மகளான ஸோவல தேவியின் சகாப்தம் 987 (கி. பி. 1065-ஆம் ஆண்டு) கொண்ட சாசனத்திலிருந்து ஊர்ஜிதமாகிறது. (தெ. இ. சாஸனங்கள், நான்காம் வால்யூம், 1007 நெ.) இவற்றிலிருந்து விஜயாதித்தியன் ஆரம்பமுதலே தன் மாற்றாந்தாய்வயிற்றுச் சகோதரன் ராஜராஜ நரேந்திரனோடு விரோதம் பாராட்டியதுமட்டுமல்லாமல் அவன் மகனும் குலோத்துங்கன் எனப் பின்னால் பிரசித்தியான இராஜகுமாரன் இராஜேந்திரனுடன் சுமுகமான உறவு

கொண்டிருக்கவில்லை யென்பதும் விளங்கும். அவன் வேங்கி யைப் பதினைந்து ஆண்டுகள் அரசுபுரிந்திருக்கிறான்.

சோழ ஸாம்ராஜ்யத்தின் பகுதிகளாக விளங்கிய வேங் கியையும் கலிங்கத்தையும் திரும்பவும் கைப்பற்றிவிடவேண்டு மென்பதை வீரராஜேந்திரன் விரதமாகக்கொண்டிருந்தான். அதற்காக அவன் வேங்கியின்மீது இருமுறை படையெடுத்துச் சென்றான். [முதல் படையெடுப்பு அவன் சோழ சிங்காதனம் ஏறியவுடனே, கி. பி. 1063-ஆம் ஆண்டில், நடைபெற்றதாகத் தெரிகிறது. அதிலே அவன் ஆஹவமல்லனையே முக்கியமாக எதிர்த்துப் போரிட்டான். சாமுண்ட ராஜன் போன்ற சாளுக் கிய தண்ட நாயகர்களைக் கொன்றதல்லாமல் அந்தப் படை யெடுப்பிலே பெரு வெற்றி ஏதும் நிகழ்ந்து விடவில்லை. (எபி. இந்திகா, இருபத்தைந்தாம் வால்யூம், 248, 251-ஆம் பக்கங்கள்). இரண்டாம் சக்திவர்மன் உயிர் துறந்ததும் இந்தப் படை யெடுப்பின்போதேயாகும் போலும். வீரராஜேந்திரனுடைய ஐந்தாம் ஆண்டிலேயே பொறிக்கப்பட்ட திருமுக்கூடல் கல் வெட்டிலிருந்து (ஷை இருபத்தோராம் வால்யூம், பக்கம் 232) அவன் கி. பி. 1068-ஆம் ஆண்டிலே மூன்றாம் முறையும் வேங் கிமீது படையெடுத்துச் சென்றான் எனவும் கொள்ளலாம். இந்தச் செய்தியைத் தெரிவிக்கும் மெய்க்கீர்த்திப்பகுதி சிதில மாக இருக்கிறது. முன்தடவையைக் காட்டிலும் இருமடங்கு போர்ப் படையுடன் வந்த அச்சளுக்கியை எதிர்த்தே மன்னன் போரிட்டான் என்றும், வேங்கியே போர்க்களமாக விளங் கியது என்றுமே அதிலிருந்து தெரிகிறது.] இந்த இரண்டாம் படையெடுப்பின் போதுதான் விஜயாதித்தியனைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. (தெ. இ. சாசனங்கள், மூன்றாம் வால் யூம், நெ 30, பக்கம் 67). சோழ மன்னன் வேங்கியை வெற்றிகொண்டு தன்னை அடிபணிந்த விஜயாதித்தியனுக்கு அந்த நாட்டைத் திரும்பவும் அளித்தான் என்று அவனுடைய மெய்க்கீர்த்தி கூறுகிறது. அந்நாளிலே இராஜேந்திரன் என்ற பெயரைக் கொண்டிருந்த முதற் குலோத்துங்கனைப் பற்றிய பேச்சே இல்லை.

இதனால் கி. பி. 1070-ஆம் ஆண்டு ஜூன் மாதம் ஒன்ப தாம் தேதி முதற் குலோத்துங்க சோழனுக்கு முடிசூட்டப்

பெற்றது வேங்கி நாட்டுக்கு அரசனாக இருந்திருக்க முடியாது என்றும் சோழநாட்டுக்கு அரசனாகவே இருத்தல் வேண்டும் என்றும் பொதுவாகக் கருதப்பட்டு வருகிறது. அதிராஜேந்திரனுடைய சித்தமல்லிக் கல்வெட்டிலிருந்து அம் மகுடாபிஷேகம் சோழ நாட்டுக்கு அரசனாகவும் நடந்திருக்க முடியாதென்பதை நாம் மேலே கண்டோம். குலோத்துங்கனுடைய மகுடாபிஷேகத்துக்குப் பிறகும் அதிராஜேந்திரன் பதினொரு மாதகாலம் அரசுபுரிந்திருப்பதிலிருந்து இது தெளிவாகும்.

அவ்விதமாயின் அவனுக்கு அம் மகுடாபிஷேகம் எந்த நாட்டுக்கு அரசனாக நடைபெற்றது என்ற கேள்வி எழுவது சகஜமே. இதை நிர்ணயிப்பதற்கு வீரராஜேந்திரன் காலமான சமயத்தை ஒட்டியும், குலோத்துங்கனுடைய ஆட்சியின் ஆரம்ப ஆண்டுகளிலும் சோழ நாட்டில் நிகழ்ந்த சம்பவங்களை நாம் தெளிவாக அறிய வேண்டுவது அவசியம்.

பில்ஹணர் தம்முடைய விக்கிரமாங்கதேவ சரிதத்தில் இதைப் பின்வருமாறு கூறுகிறார்: விக்கிரமாதித்தியனுக்குத் திருமணம் நடந்த சிறிது காலத்துக்கெல்லாம் அவன் மாமனாரான சோழ மன்னன் இறந்தான். அதனால் சோழ நாட்டிலே அராஜகம் ஏற்பட்டது. இதைக் கேள்வியுற்ற மன்னன் இறந்துபோன வேந்தன் மகனான தன்னுடைய மைத்துனனுக்கு உதவியளித்து அவனுடைய அரசை நிலைநிறுத்த வேண்டுமென்ற நோக்கம் ஒன்றையே கொண்டு உடனே புறப்பட்டுக் காஞ்சீபுரத்தை விரைந்து அடைந்தான். காஞ்சீபுரத்திலே சில நாட்கள் தங்கித் துஷ்டவர்க்கத்தை அடிபணிய வைத்தான். பிறகு கங்காகுண்ட (அதாவது கங்கை கொண்ட சோழபுர)த்துக்குச்சென்று எதிரியின் பலத்தை அழித்துச் சோழ ராஜகுமாரனுடைய அரசை ஸ்திரமாக்கினான். அப்பால் ஒரு மாதகாலம் அவன் அவ்விடத்திலே தங்கியிருந்து நிலைமையை ஒழுங்கு செய்தான். அமைதி ஏற்பட்டு விட்டதென்று திருப்தியடைந்த விக்கிரமாதித்தியன் திரும்பித் துங்கபத்திரைக் கரையை அடைந்தான்.

"சில நாட்களே ஆனபின், சோழமன்னன் (அதிராஜேந்திர சோழன்) அவனுடைய குடிமக்கள் திரும்பவும் செய்த கலகத்தில் கொல்லப்பட்டதும் வேங்கிநாட்டு வேந்தனான ராஜிகன்

என்பான் திருவின் அருளும் கூடியதால் சிங்காதனத்தைக் கைப்பற்றினன். குடிலமனமுள்ள அவன் தனக்கு இவனால் (விக்கிரமாதித்தியனல்) அபாயம் நேரிடக்கூடுமெனச் சந்தேகித்து, பின்புறத்திலிருந்து இவன் கவனத்தை வேறு வழியில் திருப்புவதற்காக இவனுடைய இயற்கை விரோதியான சோமதேவனோடு (இரண்டாம் சோமேசுவரனோடு) நட்புரிமை பூண்டு சீர் செய்துகொண்டான்..............இவனுக்கு (விக்கிரமாதித்தியனுக்கு)த் தீங்கு விளைவிக்கவேண்டும் என்ற நோக்கத்துடனே குலவிரோதியான சோழன் ராஜிகனோடு கூட்டுச் சேரும்படியாகத் தன் அண்ணனுக்கு பரந்த பெருமனம் படைத்த இவன் (விக்கிரமாதித்தன்) என்ன செய்துவிட்டான்? அரசநெறியில்லாத ராஜிகனைக் கடிந்து தண்டிப்பதற்காக ராஜகுமாரன் (விக்கிரமாதித்தியன்) தண்டு எடுத்துக் கிளம்பிய போது சோமதேவன் (இரண்டாம் சோமேசுவரன்) தன் முழுப்பலத்தோடும் வெகுவேகமாக இவன் பின்னாலே துரத்திச் சென்றான். .........திராவிடசேனையின் கூட்டம் தயாள மனம் படைத்த ராஜகுமாரனை (விக்ரமாதித்தியனை) அணுகியதும் கடைசியாக அவனுக்குக் கெடுதி செய்யும் சந்தர்ப்பம் வாய்த்து அவனை இம்மன்னன் (சோமேச்வரனும்) நெருங்கினன்." (பேராசிரியர் க. அ. நீலகண்ட சாஸ்திரிகள் எழுதிய சோழர்கள், இரண்டாம் வால்யூம், 8-9-பக்கங்கள்.) போரும் நடந்தது. ஆயினும் விக்கிரமாதித்தியனே வெற்றியடைந்தான். ராஜிகன் ஓடிப்போனான்; சோமேச்வரன் சிறைப்பட்டான். இதன் பயனாகச் சோமேச்வரன் சிங்காதனத்தை இழந்தான். சிறிதுகாலம் சென்றவுடன் விக்கிரமாதித்தியன் தக்கிணத்து அரசனாக முடி சூட்டிக்கொண்டு அரசாளத் தொடங்கினன் என்று அந்தக் காவியம் கூறுகிறது. (இந்தியன் ஆண்டிகுவரி, இருபதாம் வால்யூம், 281-ஆம் பக்கம்.)

இவ்வரலாற்றிலே ராஜிகன் என்று பில்ஹணர் குறிப்பிட்டிருப்பது முதற் குலோத்துங்கனுடைய பழம்பெயரான ராஜேந்திரன் என்பதேயாகும். சோழ நாட்டிலே திரும்பவும் ஏற்பட்ட கலகத்தின் விளைவாக அதிராஜேந்திரன் உயிர் இழந்ததால் அவன் சோழ சிங்காதனத்தைக் கைப்பற்றிய செய்தியைக் கூறும் பில்ஹணர் அவனை 'வேங்கியின் மன்

னன்' என்றே குறிக்கிறார். அவன் சோழ சிங்காதனம் ஏறுவதற்கு உரிமை இல்லாதவன் என்பதை எடுத்துக் காட்டுவதற்காகவே அவர் அவ்விதம் கூறுவதாக இருக்கலாம். ஆயினும், அந்தச் சமயத்தில் உண்மையாகவே அவன் வேங்கி நாட்டை ஆண்டு வந்தவனாகவும் இருத்தல் கூடும். பில்ஹணர் விக்கிரமாதித்தியனுடைய அவைக்களத்திலே புலவராக இருந்தவர். வேங்கியை ஆண்டு வந்த விஜயாதித்தியனோ மேலைச் சாளுக்கியர்களுக்கு நம்பிக்கை வாய்ந்த சாமந்தன். அதனால், ஆஸ்தானக் கவிஞருக்குத் திட்டமான விவரங்கள் நிச்சயம் தெரிந்திருக்கு மென்று தான் நாம் கொள்ள வேண்டும். ஆகவே அந்தச் சமயத்தில் வாஸ்தவமாகவே ராஜிகன் வேங்கி நாட்டு அரசனாக இருந்திரா விட்டால் அவர் அவனை அவ்விதம் குறித்திருக்க மாட்டார். அன்றி அதே சர்க்கத்தில் சில சுலோகங்களுக்கு அப்பால் கவிஞர் ராஜிகனைச் சோழன் என்று குறிப்பிடுவதையும் அப்போது அவன் உண்மையாகவே சோழ நாட்டை ஆண்டு வந்தான் என்பதையும் நாம் கவனிக்க வேண்டும். ஆகவே, பில்ஹணர் அவனை முதலில் வேங்கி நாட்டு அரசன் என்று குறித்திருப்பதை நாம் சந்தேகப்பட வேண்டிய அவசியமே இல்லை.

சித்தமல்லிக் கல்வெட்டு பொறிக்கப்பட்ட காலத்தில் அதிராஜேந்திரன் உயிருடன் இருந்திருக்கிறான். அதனால் அவனுடைய மரணம் அந்தக் கல்வெட்டின் காலமான கி. பி. 1071-ஆம் ஆண்டு மே மாதம் மூன்றாம் தேதிக்கு முன்னதாக இருக்கமுடியாது. அவன் மரணமடைந்த காலத்தையும் சற்றேறக் குறைய நிச்சயமாக நிர்ணயித்தலும் கூடும். 'புகழ் சூழ்ந்த புணரி' என்னும் மெய்க்கீர்த்தியுடன் தொடங்கும் இராஜகேசரிவர்மன் சக்கரவர்த்தி (முதலாம்) குலோத்துங்கனுடைய பதினோராம் ஆண்டு நொண்டதாக ஸ்ரீரங்கத்திலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டு இது பற்றிய முக்கியமான செய்தியைத் தெரிவிக்கிறது. (1937-ஆம் ஆண்டின் 31-நெ.) இராஜமஹேந்திர சதுர்வேதிமங்கலத்துச் சபையார் அவ்வூர் மும்முடி சோழ விண்ணகர ஆழ்வார் கோயிலுக்குச் சொந்தமான நிலங்களை எழுபது கழஞ்சு பொன் கொண்டு இறையிலியாக்கிய செய்தியைக் கூறுவதாகும் அந்தக் கல்வெட்டு.

அவ்விதம் செய்ய வேண்டிய சந்தர்ப்பம் எப்படி ஏற்பட்ட தென்பதும் பின்வருமாறு விளக்கப் பட்டிருக்கிறது. "மன்ன னுடைய ஆட்சியின் இரண்டாம் ஆண்டில் வலங்கை இடங் கைச் சமூகத்தார்களுக்குள் ஒரு பெருங்கலகம் நடந்தது. அதிலே கிராமம் சுட்டு எரிக்கப்பட்டது. கோயில்கள், புண் ணிய ஸ்தலங்கள் பாழாயின. கோயில் விக்கிரங்களும் கோயில் பண்டாரமும் கள்வர்களால் சூறையாடப் பட்டன. அவர்களு டைய கொள்ளைக்குத் தப்பிய பொருள்களையும் கோயிலிலே பாதுகாக்க முடிய வில்லை. கிராமத்தைப் புணர் நிர்மாணம் செய்து குடியேற்றி, கோயில்களை ஜீர்ணோத்தாரணம் செய்து, பிராகாரங்களுக்குப் புதிய மதில்களை எழுப்பிப் புதிதாய்ப் பிரதிஷ்டை செய்யவேண்டி நேர்ந்தது. அதற்காகச் சபை யினர் கோயில் பண்டாரத்திலிருந்து இராஜேந்திர சோழன் மாடைக்கு அரை மாற்றுக் குறைவாக உள்ள ஐம்பது கழஞ்சு பொன்னைக் கடனாகப் பெற்றனர். அதன் வட்டி இருபத் தைந்து கழஞ்சு ஆகியது. மொத்தம் கூடுதலான பொன் எழு பத்தைந்து கழஞ்சில் மூன்றாம் ஆண்டில் கோயில் ஜீர்ணோத் தாரணத்துக்கும் புதிய பிரதிஷ்டைக்குமாக ஐந்து கழஞ்சு செலவாகியது. மீதமுள்ள எழுபது கழஞ்சு பொன்னைக் கொண்டு கோயிலின் நித்த நிபந்தங்களுக்காகச் சில நிலங் களை வாங்கி இறையிலியாக்கிவிடச் சபையார் முன்வந்தார் கள். (சாசன இலகாகாவின் 1936-37-ஆம் ஆண்டு அறிக்கை, இரண்டாம் பாகம், 27-ஆம் பாரா.) கல்லிலே இந்தக் கல் வெட்டின் (மார்ஜினில்) பக்கத்தில், "இந்தக் கல்வெட்டு இராஜ மஹேந்திர சதுர்வேதிமங்கலத்துக்கு உரியது" என்றும் குறிக்கப்பட்டுள்ளது. இவ்வூர் நித்த விநோத வளநாட்டுக் காந்தார நாட்டைச் சேர்ந்ததென்று கூறப்பட்டிருக்கிறது. இப்போது பாபநாசம், நன்னிலம் தாலூகாக்கள் கொண்ட பிரதேசமே நித்த விநோத வளநாடு என்பது ஆகும். தஞ்சாவூருக்குக் கிழக்கே சுமார் ஐந்து மைல் தூரத்தில் உள்ள நெல்லித் தோப்பு (பாபநாசம் தாலூகா) என்னும் கிராமத் திலிருந்து கிடைத்துள்ள ஒரு கல்வெட்டிலிருந்து (1921-ஆம் ஆண்டு 537-நெ.) இராஜமஹேந்திர சதுர்வேதி மங்கலம் என்பது அதற்குப் பக்கத்திலேயே இருந்திருத்தல் வேண்டும் என்பது விளங்கும். இவ்வூரைப்பற்றிய இந்தக் கல்வெட்டு

உள்ளூர்க் கோயில் சுவர்களில் பொறிக்கப்படாமல் சுமார் நாற்பது மைல் தொலைவில் உள்ள ஸ்ரீரங்கம் கோவில் சுவர் களில் பொறிக்கவேண்டிய காரணம் என்ன என்பது விளங்கவில்லை.

ஆயினும் இந்தச் சாசனத்திலிருந்து ஒரு விஷயம் தெளி வாகிறது. முதற் குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் இரண்டாம் ஆண்டில் தஞ்சாவூரைச் சுற்றியுள்ள பிரதேசத் திலே பெருங் கலகமும் குழப்பமும் நடைபெற்றன. அதிலே சொத்துக்களுக்கும் பெருஞ்சேதம் ஏற்பட்டது. கோயில் சொத்துக்களும் தப்பவில்லை. கல்வெட்டிலே இந்தக் கலகம் ஆனி மாதம் நடந்ததாகக் குறிக்கப்பட்டுள்ளது.[1] அவ்வித மாயின் அது கி. பி. 1071-ஆம் வருஷம் ஜூன் மாதம் ஆகும்.

'திருமன்னி விளங்கும்' என்று தொடங்கும் மெய்க்கீர்த் தியை யுடைய இராஜகேசரிவர்மனை இராஜேந்திர சோழ னுடைய ஆட்சியின் இரண்டாம் ஆண்டு கொண்ட கல்வெட்டு ஒன்று தென் ஆர்க்காடு ஜில்லாவில் கொள்ளிடத்தின் வட கரையில் உள்ள கண்டமங்கலத்திலிருந்து கிடைத்துள்ளது. (1917-ஆம் ஆண்டு 358-நெ). 'பூமருவிய திருமடந்தையும்' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய சக்கரவர்த்தி இராஜேந்திரனுடைய கல்வெட்டு ஒன்று அதே ஆண்டு கொண்டதாகத் தஞ்சாவூர் ஜில்லாவில் வழுவூரிலிருந்து கிடைக் கிறது. அந்தக் கல்வெட்டில் காணும் பஞ்சாங்கக் குறிப்புகளைக் கொண்டு அது கி. பி. 1071-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் இரு பத்தொன்பதாம் தேதி கொண்டதெனக் கணக்கிடப்பட்டிருக் கிறது. (சாசன இலாகாவின் 1914-ஆம் ஆண்டு அறிக்கை: 'டி' அனுபந்தம்.) இவற்றால் 1071-ஆம் ஆண்டு நவம்பர் மாதத் தில் சோழ நாட்டின் முக்கியமான மத்தியபாகம் குலோத்துங் கனுடைய ஆளுகைக்கு உட்பட்டிருந்ததென்பது தெரிய வரும். அதனால் அதிராஜேந்திரன் மரணமும் அதற்கு முற்பட்ட தாகவே சம்பவித்திருத்தல் வேண்டும். ஆகவே கி. பி. 1071-

1. சாசன இலாகாவின் அறிக்கையில் ஆனிமாதம் என்பது குறிக்கப் பெறவில்லை. கல்வெட்டின் மசிப்படத்திலிருந்தே இதை அறிய முடிந்தது. அதைப் பார்க்க எனக்கு அன்புடன் அனுமதியளித்த சாசன இலாகாவின் தலை வருக்கு என் நன்றி.

ஆம் ஆண்டு ஜூன் மாதம் அதாவது அதிராஜேந்திரனுடைய ஆட்சியின் நான்காம் ஆண்டுத் தொடக்கத்தில் நடைபெற்ற கலகத்தையே அதிராஜேந்திரன் உயிரிழப்பதற்குக் காரணமாக இருந்த கலகமென்று கொள்வதில் தவறு இல்லை.

இன்னும் அந்தக் காலத்தில் குலோத்துங்கன் என்னும் இராஜேந்திரன் வேங்கி நாட்டு அரசனாகவே இருந்திருத்தல் கூடும். கலிங்கதேசத்து அரசனான இராஜராஜ தேவேந்திர வர்மன் என்பான் "முதலில் திரமிளர் (தமிழர்)களுடன் நடத்திய போரில் ஜயமகளை மணந்து பிறகு சோடமன்னன் மகளான இராஜசுந்தரியையும் மணந்துகொண்டான். வேங்கி அரசனான விஜயாதித்தியன் முதுமையடைந்து வானமண்டலத்தை விட்டு வெளியேறும் (அதாவது அஸ்தமனமாகும்) சூரியனைப்போல வெளியேறி, சோடர்களாகிய சமுத்திரத்தில் முழுகிப் போகும் சமயத்தில், கஷ்டப்படுகிறவர்களுக்குப் புகலிடமான இராஜராஜன் அவனைக் கைதூக்கிச் சிறிது காலம் மேற்கு நாடுகளில் ஸௌபாக்கியத்தை அனுபவிக்கச் செய்தான்" என்று அவனுடைய மகன் அநந்தவர்மன் சோடகங்கனுடைய கோர்ணீச் செப்பேடுகளும் (ஆந்திர சரித்திர ஆராய்ச்சிக் கழகத்தின் பத்திரிகை-ஜர்னல் ஆப் தி ஹிஸ்டாரிகல் ஸொஸைட்டி, முதல் வால்யூம், பக்கம் 106-முதல்) விசாகப் பட்டினம் செப்பேடுகளும் (இந்தியன் ஆண்டிகுவரி, பதினெட்டாம் வால்யூம், பக்கங்கள் 166-9) தெரிவிக்கின்றன. கீழைக் கங்க வமிசத்து அரசனான இராஜராஜ தேவேந்திரவர்மன் கி. பி. 1070-ஆம் ஆண்டு மே மாதம் இருபதாம் தேதி கலிங்க நாட்டுச் சிங்காதனம் ஏறியவன். அதனால் அவன் கொண்ட வெற்றிகளும் விஜயாதித்தியனுக்கு உதவியதும் அந்த நாளுக்குப் பிறகே நடந்திருக்கவேண்டும்.

இவ்விதம் வேங்கியிலிருந்து வெளியேறிய விஜயாதித்தியன் திரும்பவும் அந்நாட்டு அரசைப் பெற்றது கி. பி. 1072-ஆம் ஆண்டுக்கு முன்னதாகவே நடந்திருத்தல் வேண்டும். இது அவனுடைய ஆட்சியின் பன்னிரண்டு, பதின்மூன்றும் ஆண்டுகளைக் கொண்ட கல்வெட்டுகள் கிடைப்பதிலிருந்து தெரியவருகிறது. (1924-25-ஆம் வருஷத்து 8, 9-எண்கள் கொண்ட செப்பேட்டுச் சாசனங்கள் ; தெ. இ. சாசனங்கள், ஆறும் வால்யூம்,

1011-ல். ஜர்னல் ஆப் தி ஆந்திரா ஹிஸ்டாரிகல் ரிஸர்ச் ஸோஸைட்டி, ஏழாம் வால்யூம், 177-8-பக்கங்கள்). எனினும், அதற்கு முன்னதாக நான்கு ஆண்டுகளுக்கு அவனுடைய சாசனங்கள் கிடைக்க வில்லை யென்பதும் குறிப்பிடத்தக்கது. கி. பி. 1075-ஆம் ஆண்டில் அளிக்கப்பட்டதும் கலிங்க மன்னனை இராஜராஜன் சேனைத்தலைவன் வனபதி என்பவனுடையதுமான தீர்காஸிச் சாசனத்தில் அவன் தன் எஜமானனுக்காகச் சோழ சைனியத்தோடு போரிட்டுப் பெருவெற்றிகள் கொண்டான் என்பது விவரமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. (எபி. இந்திகா, ஏழாம் வால்யூம், 317-பக்கம்).

மற்றொரு விஷயமும் கவனிக்கவேண்டும். விஜயாதித்தியன் மேலைச் சாளுக்கியர்களிடம் விசுவாசமாக நீண்டகாலம் சேவை புரிந்தவன். அப்படியிருந்தும் இந்தத் தடவை அவன் வேங்கியிலிருந்து விரட்டப்பட்டபோது அவன் முன் தடவைகளைப்போல அவர்களிடம் செல்லவில்லை. அதற்குப் பதிலாகக் கலிங்க நாட்டிலே அடைக்கலம் புகுந்தான். இதிலிருந்து அவன் மேலைச் சாளுக்கிய வேந்தனுடைய ஆதரவை இழந்து விட்டான் என்றே கருதவேண்டியிருக்கிறது. மேலைச் சாளுக்கியர்கள் விஜயாதித்தியனுக்கு விரோதியாக இருந்தவனையே ஆதரித்து நின்றார்கள் எனக் கொள்ளலாம். அவர்கள் நாடே அப்போது இரண்டாகப் பிளவு பட்டிருந்தது. தென்பகுதியை விக்கிரமாதித்தியனும் வடபகுதியைச் சோமேச்வரனும் ஆண்டுவந்தார்கள். ஆகவே விஜயாதித்தியன் அவர்களிடம் அடைக்கலம் புகுவதாக இருந்தால் சோமேச்வரனையே அண்டியிருத்தல் வேண்டும். சோமேச்வரனோ விஜயாதித்தியனுக்கு உதவுவதாக இல்லை; பதிலாக அவனை வேங்கியிலிருந்து துரத்தியவனையே ஆதரித்து நின்றான்போலும். அதற்குச் சிறிது காலத்துக்கு முன்னதாக விக்கிரமாதித்தியனும் அவன் மாமனான சோழமன்னன் வீரராஜேந்திரனும் ஒன்றுசேர்ந்து மேலைச் சாளுக்கிய ஸாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியை அடைவதற்குச் செய்த முயற்சியில், விஜயாதித்தியன் அவர்களுக்கு உதவியாக நின்றான் என எண்ணுவதற்கு இடமிருக்கிறது. அது சோமேச்வரனுக்குப் பெரிதும் ஆத்திரம் மூட்டியிருக்கும். அந்த நிலையிலே வேங்கி நாட்டிலிருந்து விஜயாதித்தியனைத் துரத்தி அதைக் கைப்பற்றக் கூடியவன் குலோத்துங்கன்

ஒருவனே ஆவன். பின்னால் அதிராஜேந்திர சோழன் இறந்த போது குலோத்துங்கன் சோழநாட்டைக் கைப்பற்றிய வுடனே அவனைக் கடிந்து அவன் எண்ணத்தை முறியடிக்க விக்கிரமாதித்தியன் சோழநாட்டின்மீது படையெடுத்துவந்த காலத்தில், இரண்டாம் சோமேச்வரன் குலோத்துங்கனுக்குத் துணையாக நின்று பெரிதும் உதவியிருக்கிறான் என்பதை நாம் அறிவோம். அப்போது அவர்களுக்குள்ளே காணப் பெறும் இந்நட்பு இன்னும் முன்னதாகவே, அதாவது விக் கிரமாதித்தியனுக்கும் சோமேச்வரனுக்கும் பிளவு ஏற்பட்ட வுடனேயே, ஆரம்பித்ததுபோலும்.

அப்பொழுதிருந்த சூழ்நிலையும் ஏறக்குறைய அம்மாதிரி யேதான் குலோத்துங்கனுக்குத் தோற்றியதுபோலும். தன் பிதிரார்ஜிதமான வேங்கி அரசை அவன் துணிந்து கைப் பற்ற அப்போது முயலாவிட்டால், ஒருகால் எப்போதுமே அவனுக்கு அது கிட்டாமல் போய்விடுமோ என்ற சந்தேக மும் ஏற்பட்டிருக்க வேண்டும். அத்தகைய முயற்சிக்கும் அதுவே உற்ற காலமாக அவனுக்குப்பட்டது போலும். வீர ராஜேந்திரன் ஒன்றிரண்டு ஆண்டுகளுக்கு முன்னே வேங்கி யை விஜயாதித்தியனிடமிருந்து வெற்றி கொண்டு கைப்பற்றி னான். ஆயினும் அதை அவன் தன் மருமகனும் வேங்கி நாட்டு அரசுக்கு உரியவனுமான குலோத்துங்கனுக்கு அளிக்க வில்லை. திரும்பவும் விஜயாதித்தியனிடமே கொடுத்துவிட்டான். இவ்விதம் அவன் செய்ததற்கு மேலைச் சாளுக்கியர்களுடைய நிர்ப்பந்தமே முக்கிய காரணமாயிருந்திருக்கலாம். விஜயாதித் தியன் அவர்கள் சாமந்தன் அன்றோ? ஆனால் மேலைச்சாளுக் கிய ஸாம்ராஜ்யமே இப்பொழுது பிளவுபட்டிருந்தது. ஒரு வருக்கு ஒருவர் பரம விரோதிகளான சகோதரர்கள் இரு பகுதிகளைத் தனித்தனியாக ஆண்டுவந்தார்கள். எனினும் வீர ராஜேந்திரன் இப்போது இறந்துவிட்டான். அவனுக்குப் பின் சோழ சிங்காதனம் ஏறிய அதிராஜேந்திரனிடமும் குலோத்துங்கனுக்குச் சுமுகமான உறவு இருந்திருக்கவில்லை. தவிர, அவனுக்கு விக்கிரமாதித்தியன் உதவியும் கிட்டுமே.

ஒருகால் குலோத்துங்கனுக்கு ஆரம்ப முதலே சோழ சிங்காதனத்தின் மீது ஒரு கண் இருந்திருக்கவும் கூடும். இந்த ஆசையை மேலும் சோமேச்வரன் தூண்டிவிட்டிருத்தல்

கூடும். அதிராஜேந்திரனும் விக்கிரமாதித்தியனும் ஒன்று சேர்ந்துவிட்டால் அந்தக் கூட்டு மிகவும் பலம்பொருந்தியதாக ஆகிவிடும். அவ்விதம் நேராமல் தடுத்துவிடவேண்டும். ஆயினும் அதற்காக வெளிப்படையாகச் சோழர்களிடம் விரோதம் பாராட்டுவதோ அந்நாட்டின் மீது படையெடுத்துச் செல்வதோ முடியாத காரியம். அதனாலே குலோத்துங்கன் இம்முறையைப் பின்பற்றியிருக்கலாம். இதற்காக அவன் உள்நாட்டிலே கலகத்தைக் கிளப்பிவிட்டுக் கிளர்ச்சி செய்ய மக்களைத் தூண்டியிருக்கலாம். இதற்கு ஓர்அளவு சோமேச்வரன் உதவியும் கிட்டியிருத்தல் கூடும்.

மேலே குறிப்பிட்ட ஸ்ரீரங்கம் கல்வெட்டிலிருந்து மற்றொரு விவரமும் தெரியவருகிறது. அப்போது நடைபெற்ற கலகம் வலங்கை-இடங்கையாக நடந்ததென்று காணப்படுகிறது. இவ் விரு பிரிவினருக்கும் இடையில் உள்ள விரோதம் நீண்டகாலமாக இருந்துவந்ததாகத் தெரிகிறது. அதன் ஆணிவேர் மிகவும் ஆழமாக ஓடியிருந்தது. பிற்காலத்தில் அந்தக் கலகங்கள் கோரமான விசுவரூபமெடுத்து ஆடியிருக்கின்றன. கிழக்கிந்தியக் கம்பெனியார் நாளிலே சென்னைத் தெருக்களில் ரத்தப்பெருக் கெடுத்துவிடுமோ என்ற நிலை பல சமயங்களில் ஏற்பட்டிருக்கிறது. காஞ்சீபுரத்திலே இவ்விரு பிரிவினர்களும் ஒரே கோயிலில் வழிபட மாட்டார்களாம். அதே போல, முக்கியமான வைதிகச் சடங்குகள் முதலியவற்றுக்கு ஒரே மண்டபத்தையும் உபயோகிக்கமாட்டார்களாம். (சாசன இலாகாவின் 1921-ஆம் ஆண்டு அறிக்கை, 47 பாரா.) இந்தச் சண்டைகள் எல்லாம் பெரும்பாலும் சமூக வாழ்க்கையில் அவர் அவர்களுக்கு உள்ள சில உரிமைகளைப் பற்றியனவே எனத் தெரிகிறது. சில சமயங்களில் அவர்களுக்குள்ளே சமாதானம் நிலவி ஒப்பந்தங்களும் ஏற்பட்டிருக்கின்றன. அவ்விதம் ஏற்பட்ட விவஸ்தைகள் பெரும்பாலும் எந்த எந்த வகுப்பார் எந்த எந்த உரிமைகளை அனுபவிக்கலாம் என்பதை நிர்ணயிப்பனவாகவே காண்கின்றன.

நாட்டிலே பலவகைச் சமூகத்தாரிடையிலும் இவ்விதம் இரு பெரும் பிரிவு நீண்டகாலமாக இருந்து வந்திருக்கிறதென்று தெரிகிறது. ஆனால் அந்தப் பிரிவு எதைக் குறிக்

கிறது என்ற விவரம்தான் தெரியாது. இந்தப் பிரிவு எப்படித் தோன்றியது என்ற விவரம் எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னதாகவே மறந்துபோய்விட்டது. இது திருச்சிராப்பள்ளி ஜில்லா ஊற்றத்தூரிலிருந்து கிடைத்த ஒரு கல்வெட்டிலிருந்து தெரியலாகிறது. (1912-ஆம் ஆண்டு 489-ஆம் செ.) மூன்றாம் குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் நாற்பதாம் ஆண்டு கொண்ட அக் கல்வெட்டு இடங்கைப் பிரிவினர் தாங்கள் எப்படித் தோன்றினார்கள் என்பதைப்பற்றி அப்போது கொண்டிருந்த வரலாற்றைக் கூறுகிறது. “அவர்கள் கச்யப முனிவரின் யாகத்தை ஸம்ரக்ஷிப்பதற்காக அக்னி குண்டலத்திலிருந்து தோன்றியவர்களாம். அவர்கள் அரிந்தம சக்கரவர்த்தியின் நாளில் சோழ நாட்டுக்கு வந்து தங்கினார்களாம். அந்தச் சக்கரவர்த்தி அந்தர்வேதி (கங்கா-யமுனைப் பிரதேசம்) பூமியிலிருந்து அழைத்து வந்த பிராம்மண சிரேஷ்டர்களுடன் அவர்களுடைய பாதரக்ஷையையும் குடையும் தாங்கிக் கொண்டு வந்தார்களாம், இடங்கைச் சாதியினர். ஐந்து கிராமங்களிலே அவர்களுக்கு நிலம் அளிக்கப்பட்டதாம். அவ் ஐந்து ஊர்களும் இப்போது திருச்சிராப்பள்ளி ஜில்லாவிலே உள்ளன. தங்கள் பூர்வோத்தரத்தைப் பற்றிய விவரங்கள் அவர்களுக்கு நீண்டகாலம் தெரியாமல் மறந்துபோயிருந்தனவாம்.” அப்பால் அதை அவர்கள் கண்டுபிடித்தார்களாம். (சாசன இலாகாவின் 1913-ஆம் ஆண்டு அறிக்கை, பாரா 39). அதன்மேல் அவர்கள் ஒன்றுகூடி ஒரே வயிற்றில் பிறந்த சகோதரர்கள் போல ஒற்றுமையாக வாழவேண்டுமென்று தங்களுக்குள் தீர்மானித்துக்கொண்டார்களாம். இதைக் கவனித்தால் அந்தப் பிரிவுகள் எப்படி ஏற்பட்டது என்ற விவரம் அந்நாளிலேயே அவர்களுக்குத் தெரியவில்லை என்பதும், ஆகவே ஒரு புராணக் கதையைச் சிருஷ்டித்துக்கொள்ள வேண்டிய நிலை அவர்களுக்குள்ளே கருதிமான்களுக்கு ஏற்பட்டது என்பதும் விளங்கும்.

வலங்கை என்பது சோழ மன்னனான முதலாம் இராஜராஜனுடைய காலத்திலிருந்தே, வலங்கைப் பழம் படைகளிலார், பெருந்தனத்து வலங்கைப் பழம்படைகள், அழகிய சோழத் தெரிந்த வலங்கை வேளைக்காரப்படைகள், இராஜ

ராஜத் தெரிந்த வலங்கை வேளைக்காரர் என்பன போலச் சோழர் படையின் பிரிவுகளிலே காணப்படுகிறது. (தே. இ. சாசனங்கள், இரண்டாம் வால்யூம், முன்னுரை, பக்கம் 9). வலங்கை வேளைக்காரர் என்ற பிரிவைப் பல படைகளிலும் காண்கிறோம். ராஜ சேவகத்தில் நிரந்தரமாகவும் எந்தச் சமயத்திலும் சேவைக்குத் தயாராகவும் இருந்த படையினர் என்று அவர்களைப் பொதுவாகக் கொள்வர்.

எனினும், இடங்கையைப் பற்றி யாதொரு விவரமும் தெரியவில்லை. இடங்கைப் பிரிவின் பெயர் சாசனங்களில் காணப்படாமல் இல்லை. ஏதோ சிற்சில இடங்களிலே தான் காணப்படுகின்றது. ஆனால் அப்படி உள்ள இடங்களில் எல்லாம் பெரும்பாலும் அது வலங்கையுடன் சேர்ந்தே காணப்படுகிறது. தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ள திருவெண்காட்டிலிருந்து கிடைக்கும் வீரராஜேந்திரனுடைய இரண்டாம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று (தே. இ. சாசனங்கள், ஐந்தாம் வால்யூம், 976-ெந.) அவ்வூர்க் கோயிலுக்குப் பல கிராமங்களிலிருந்து வசூலாகும் வரிகள் சிலவற்றை அளித்த செய்தியைக் கூறுகிறது. அந்த வரிகளிலே வலங்கை-இடங்கை மகன்மை என்பதும் ஒன்றாகும். வடஆர்க்காடு ஜில்லாவில் உள்ள திருவல்லத்திலிருந்து கிடைக்கும் அதிராஜேந்திரனுடைய மூன்றாம் ஆண்டும் இருநூறும் நாளும் கொண்ட கல்வெட்டு ஒன்றிலும் (ஷை மூன்றாம் வால்யூம், பக்கம் 115) இதே வரி குறிக்கப்பட்டுள்ளது. வலங்கை, இடங்கை ஆகிய இருபிரிவுகளிலும் படைக்கலம் ஏந்திப் போர் புரியும் திறமை வாய்ந்தவர்கள் அனைவரும் செலுத்த வேண்டிய தலைவரி என்றே இதைக் கொள்வர். இதனால் இடங்கையும் போர்ப் படையோடு ஏதோ ஒரு வகையில் தொடர்பு கொண்டதெனக் கொள்ளலாம். ஆயினும் இடங்கைப் பிரிவிலே அடங்கியுள்ள சாதிப் பெயர்களைக் கவனிக்கும்போது அவை யாவும் வாணிகம் செய்வோரையும் தச்சன் கருமான் போன்ற தொழிலாளர்களையுமே கொண்டனவாக உள்ளன.

இலங்கை மன்னன் விஜயபாஹுவின் ஆட்சியின் கடைசிக் காலத்தில் பொறிக்கப்பட்டதாக இலங்கையில் பொலந்நறுவையிலிருந்து கிடைக்கும் தமிழ்க் கல்வெட்டு ஒன்று இவ்

விஷயத்தில் உதவியாகக் காண்கிறது. புத்த பகவானுடைய புனிதச் சின்னமான பல்லை வைத்து அதன் மீது அம் மன்னன் எழுப்பிய பள்ளிக்கு மூன்றுகைத் திருவேளைக்காரன் தல தாயப் பெரும் பள்ளி என்று பெயரிட்டு வேளைக்காரர் பாதுகாப் பிலே அதை விட்ட செய்தியைத் தெரிவிக்கிறது அந்தக் கல் வெட்டு. (எபி. இந்திகா. பதினெட்டாம் வால்யூம், 338-பக்கம்) வேளைக்காரர்கள் அந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்வதற்கு முன் தங்கள் மகாசபையைக் கூட்டி விவாதித்து முடிவு செய்த தைத் தெரிவிக்குமிடத்தில் கல்வெட்டு பின்வருமாறு கூறு கிறது: "மா தந்திரத்தோங் கூடி எங்களுக்கு மூதாதைகளா யுள்ள வளஞ்செயரையும் எங்களோடு கூடிவரும் நகரத்தார் உள்ளிட்டாரையும் கூட்டி மூன்று கைத் திருவேளைக் காரன் தலதாயப் பெரும்பள்ளி யென்று......." கடைசியிலே அதற்கு ஒப்புக்கொண்டு அந்தக் கல்வெட்டிலே கையொப்ப மிட்டவர்களெனக் காணும் பகுதி, "வலங்கை இடங்கை சிறு தனம் பிள்ளைகள் தனம் வடுகர் மலையாளர் பரிவாரக் கொந்தம் பலகலனையுள்ளிட்ட திருவேளைக்காரரோம்" என்பதாகும்.

மா தந்திரத்தாருக்கு, அதாவது மஹா தந்திரத்தாருக்கு மூதாதையாரான வளஞ்சியரும் மஹா தந்திரத்தாரோடு கூடி உடன் வருகிற நகரத்தாரும் வாணிகம் நடத்துபவர்கள் என்பதை நாம் அறிவோம். ஆனல் வளஞ்சியத்தாருக்கும் நகரத்தாருக்கும் உள்ள வித்தியாசம் தெரியவில்லை. வளஞ் சியத்தாரை அவர்களுடைய மூதாதையர் எனக் குறிப்பதால் அவர்கள் அந்த ஸ்தாபனத்தின் மூலஸ்தானத்தைச் சேர்ந்த வர்களாக இருத்தல் வேண்டும். பம்பாய் ராஜ்யத்தின் பிஜாப் பூர் ஜில்லாவில் இப்போது ஐஹொளே என்று வழங்கப் பெறும் அய்யாவழி அல்லது அய்யபொழிலைத் தலைமை ஸ்தானமாகக் கொண்டு பல நாடுகளிலும் வியாபாரம் செய்த நானுதேசி திசையாயிரத்து ஐந்நூற்றுவரை அது குறிக்கும் போலும். நகரத்தார் என்பது அந்த அந்த இடங்களிலே தங்கி வாணிகம் செய்பவர்களின் ஸ்தாபனத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம். தந்திரம் என்ற சொல்லுக்குப் பல பொருள்கள் இருந்தாலும் சந்தர்ப்பத்தை ஒட்டிப் பார்த்தால் இந்த இடத்திலே அது போர்ப்படையைப் பற்றிய பொருளைக் கொடுப்பதாகவே கொள்ள வேண்டும் என்பது விளங்கும்.

ஆகவே மஹாதந்திரத்தார் என்போர் படைத் தலைமையின் நிர்வாகக் குழுவினர் என்றே பொருள்படும். அப்படியானால் இந்தச் சாசனத்திலே குறிக்கப்பட்டுள்ள வேளைக்காரர் என்னும் சேனைவீரர்கள் வாணிபத் துறையோடு ஏதோ ஒரு வகையான சம்பந்தம் கொண்டவர்கள் என்பது தெளிவாகும்.

இன்னும் தாங்கள் ஏற்றுக் கொண்ட காரியம் சரிவர நடைபெறுவதற்காக மஹாதந்திரத்தார் ஒவ்வொரு படையிலிருந்தும் ஒரு சேவகரையும் ஒவ்வொருவருக்கும் ஒரு வேலி வீதம் நிலமும் அளித்துக் கோயில் ஊழியத்துக்கு அளித்திருக்கிறார்கள்.

இவ்விதம் கோயில்களைச் சைனியத்தாரின் பாதுகாப்பிலே ஒப்படைக்கும் பழக்கம் அந்நாளிலே தென்னிந்தியாவிலும் இருந்ததாகத் தெரிகிறது. திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள சேரன்மாதேவி பக்தவத்ஸல சுவாமி கோயிலிலிருந்து கிடைத்திருக்கும் முதற் குலோத்துங்க சோழனுடைய காலத்துக் கல்வெட்டு ஒன்று (1895-ஆம் ஆண்டு 189-நெ.) அந்தக் கோயிலுக்கு அளிக்கப்பெற்ற சில தர்மங்களைப் பாதுகாக்கும் பொறுப்பை மூன்றுகை மஹாஸேனையார் ஏற்றுக் கொண்ட செய்தியைத் தெரிவிக்கிறது. அதே ஜில்லாவில் உள்ள திருவாலீச்வரத்திலிருந்து கிடைக்கும் மற்றொரு கல்வெட்டு (1909-ஆம் ஆண்டு 167-நெ.) அவ்வூர்க் கோயிலையும் அதன் ஸ்ரீபண்டாரத்தையும் கோயிலைச் சேர்ந்த தேவகன்மிகளையும் சோழஸாம்ராஜ்யத்தின் படையான மூன்றுகை மஹாசேனையின் பாதுகாப்பிலே விட்ட செய்தியை எடுத்துக் கூறுகிறது. இதே போல, கோயம்புத்தூர் ஜில்லாவில் உள்ள சங்கராமநல்லூரிலிருந்து கிடைத்த சாசனம் ஒன்றும் (1925-ஆம் ஆண்டு 183-நெ.) காணப்படுகிறது. அந்நாளிலே அவ்வூர் கோட்டை கொத்தளங்களுடன் படைநிலையமாக விளங்கியது போலும். அவ்விடத்திலிருந்த படைவீரர்கள் கோயில், அதன் கோபுரம், கோயிலைச் சார்ந்த மற்ற இடங்கள் ஆகியவற்றைப் பாதுகாக்க வேண்டும் என்று அது கூறுகிறது. (1905-ஆம் ஆண்டு 120-நெ; இன்னும் சாசன இலாகாவின் 1936-ஆண்டு அறிக்கை, பக்கம் 77.) தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ள புஞ்சை என்னும் இடத்திலிருந்து கிடைக்கும் ஒரு சாசனத்திலிருந்து

தேவதான நிலங்களில் சில அவ்வூர்க் கோயிலுக்கே உரியன என்பதை நிரூபிப்பதற்காகத் திருச்சூல வேளைக்காரர் சிலர் தீக் குளித்துத் தங்கள் உயிரைத் தியாகம்செய்து உரிமையை நிலை நிறுத்தினர் என்ற செய்தி தெரியவருகிறது. இதிலிருந்து கோயில்களும் வேளைக்காரர்களைக் கொண்டிருந்தனவென் பது விளங்கும். திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள உக்கிரன் கோட்டையிலிருந்து, முதற் பராந்தக சோழனோடு சமகாலத் தவன் என்று கருதப்பெறும் ராஜஸிம்ஹன் என்னும் பாண் டிய அரசன் காலத்தைச் சார்ந்த கல்வெட்டு ஒன்று கிடைத் துள்ளது. கரவந்தபுரம் என்று அந்நாளிலே வழங்கப்பட்டு வந்த அவ்வூரின் கோயிலை மதிட்சேவகர் பாதுகாப்பிலே விட்ட செய்தியை உரைக்கிறது அந்தக் கல்வெட்டு. (எபி.இந்திகா, இருபத்துமூன்றும் வால்யூம், பக்கம்2?5.)

இராமநாதபுரம் ஜில்லாவில் உள்ள ஸ்ரீவில்லிபுத்தூரி லிருந்து கிடைக்கும் சாசனம் ஒன்று அவ்வூர் விஷ்ணு கோயி லான வடபெருங் கோயிலுடையான் ஆலயத்தின் திருவாசல் அவ்வூரில் இருப்பவர்களுக்கும் மற்றும் பக்கத்திலே உள்ள வேறு சில ஊர்களில் உள்ளவர்களுக்கும் அபயம் எனக் கருதப் படவேண்டுமென்பதைத் தெரிவிக்கிறது. (1926-ஆம் ஆண்டு நெ. 587 ; சாசன இலாகாவின் 1927-ஆம் ஆண்டு அறிக்கை, பாரா. 54). அஞ்சினன் புகலிடம் என்று வேறு இடங்களில் குறிக்கப்பட்டிருப்பதே இவ்விடம் அபயம் என்று காணப் படுகிறதுபோலும். துரிதங்கள் நேரிட்ட காலத்தில் எதிரிகளிட மிருந்து தப்புவதற்காகக் கஷ்டத்துக்குள்ளானவர்கள் அடைக் கலம் புகுமிடம் என்பதையே அது தெரிவிப்பது. இன்னும் கோயில் ஊழியர்களில் வீரமுஷ்டி என்றும் வீரபத்திரர் என்றும் பெயர் பெற்ற வீரர்கள் இருந்ததும் தெரியவருகிறது. (சாசன இலாகாவின் 1917-ஆம் ஆண்டு அறிக்கை, பாரா 36.) இவற் றைக் கவனிக்கும்போது அந்நாளிலே சில கோயில்களேனும் தங்களுக்கெனத் தனியாகச் சேனை வீரர்களைக் கொண்டிருந்த தென்று கொள்வதில் தவறு இல்லை.

மேலே குறிப்பிட்ட பொலந்நறுவைச் சாசனம் வேளைக் காரரை 'மூன்றுகை வேளைக்காரர்' என்று கூறுகிறது. இதேபோல மூன்றுகை மஹாசேனை என்று தென்னிந்தியச்

ச்சாசனங்களிலும் போர்ப்படையினர் குறிக்கப்பட்டுள்ளார்கள். வலங்கையும் இடங்கையும் போர்ப் படையின் இரு கைகள் போலும். மூன்ருவது கை என்னவென்பது எவ்விடத்திலும் கூறப்படவில்லை. இவற்றைக் கவனிக்கும்போது வலங்கை என்பது ஸாம்ராஜ்யத்தின் நிலையான படைப் பிரிவையும் இடங்கை என்பது வணிகர்களின் போர்ப்படைப் பிரிவை குறிப்பதாகக் கொள்ளலாம். மூன்ருவது கை கோயில் நிர்வாகத்தினர் நிறுவியிருந்த படைப்பிரிவேபோலும்.[1]

அந்நாளிலே வாணிபத் துறையில் பெருமையோடு விளங்கிய சிலரும் அரசாங்கத்தில் உயர்ந்த பதவி வகித்து வந்திருக்கிருர்கள் என்பது தெளிவாகத் தெரிகிறது. முதற் குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் நாற்பத்தொன்பதாம் ஆண்டு எழுபதாம்நாள் கொண்டு திராக்ஷாராமத்தில் கிடைக்கும் தமிழ்க் கல்வெட்டு ஒன்று, இலங்கை மன்னஞன விக்கிரம பாஹுவின் பிரதானியான உய்யவந்தான் திருவண்ணுமலையன் விஜயபாஹு மாசாத்துநாயன் என்பான் தானம் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. (தே. இ. சாசனங்கள், நான்காம் வால்யூம், நெ. 1227.) மதுரை ஜில்லாவில் உள்ள விக்கிரமங்கலத்திலிருந்து கிடைக்கும் மாறவர்மன் பராக்கிரம பாண்டியன் என்னும் பாண்டிய மன்னனுடைய சாசனம் ஒன்றிலே பராக்கிரம பாண்டிய மாசாத்துவாயன் என்னும் அதிகாரி கையெழுத்திட்டிருக்கிருன். (ஜேம்ஸ் பர்ஜஸ், பண்டித நடேச சாஸ்திரி ஆகியோர் பதிப்பித்த தமிழ், ஸமஸ்கிருத சாசனங்கள், பக்கம் 14). மாசாத்துநாயன் என்ற அவர்களுடைய சிறப்புப் பெயரிலிருந்து அவர்களை வாணிபத் துறைத் தலைவர்களாகவே நாம் கொள்ளவேண்டும்.

இதுகாறும் கூறியவற்ருல், குலோத்துங்கனுடைய ஆட்சியின் இரண்டாம் ஆண்டிலே வலங்கை-இடங்கையாக நடந்ததென்று ஸ்ரீரங்கம் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள கலகம் சோழர்களுடைய ஸாம்ராஜ்யப் படைக்கும் வாணிபத்துறை

---

1. 'மூன்றுகை மஹாசேனை' என்பதை யானைப் படை, குதிரைப் படை, காலாட்படை என்னும் மூன்று பிரிவுகளைத் தன்னுள் அடக்கியசேனையாகக் கொள்ளவும் கூடும்.

யாரின் படைக்கும் இடையே நடந்த கலகம் எனக் கொள்ள லாம். கிழக்கிந்தியக் கம்பெனியார் நாளிலே 'அரசர்படை' என்றும் 'கும்பினிப்படை' என்றும் தனித் தனிப் பிரிவுகள் இருந்துவந்த விவரம் இந்தச் சமயத்திலே குறிப்பிடத் தக்கது.

அந்தக் கலகத்துக்குக் காரணம், அது எவ்விதம் நிகழ்ந்தது என்பன போன்ற விவரங்கள் இப்போது தெரியவில்லை. திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் உள்ள ஆடுதுறையிலிருந்து கிடைக்கும் கல்வெட்டு ஒன்று, அரசாங்க அதிகாரிகளுடைய ஆதரவுடன் வன்னியக் குடிமக்களும் வேளாளர் பிராமணர் போன்ற நிலச்சொந்தக்காரர்களும் சேர்ந்து இடங்கைப் பிரிவில் அடங்கிய தொண்ணூற்றெட்டுச் சாதியினருக்கு இழைத்த அநீதிகளைக் கூறுகிறது. (1913-ஆம் ஆண்டு 34-நெ. சாசனம்.) இதே போல இடங்கை வகுப்பார் அந்த அந்தக் காலங்களில் பட்ட கஷ்டங்களையும் ஏற்க வேண்டி வந்த வரிச்சுமைகளையும் தெரிவிக்கும் கல்வெட்டுகள் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் கிடைத்துள்ளன. இந்தச் சந்தர்ப்பத்தில் மைசூர் ராஜ்யத்து ஆவணியிலிருந்து கிடைத்துள்ள முதற்குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் மூன்றும் ஆண்டுக் கல்வெட்டு முக்கியமானது. அரசனுடைய ஆணைக்கிணங்கவே கூடிய பெரிய விஷயத்தாரின் முடிவைத் தெரிவிப்பது அந்தக் கல்வெட்டு. (1911-ஆம் ஆண்டு 461-நெ; எபி. கர்நாடிகா, பத்தாம் வால்யூம், முளுபாகல் 49-a. அன்றி அதே வால்யூம், முன்னுரை, xxviii-ஆம் பக்கமும் பார்க்க). நிகரிலிசோழ மண்டலத்து எழுபத்தெட்டு நாடுகளும் ஜயங்கொண்டசோழ மண்டலத்தின் நாற்பத்தெண்ணாயிரம் பூமியும், பெரும்படை வலங்கை மஹாஸேனைக்கு வழங்கப் பெற்ற இராஜேந்திர சோழப் பதினெண் பூமியும் உள்ளிட்ட நாடுகளில் சோழ வமிசம் தோன்றின நாள் முதலே பசு எருமைகளுக்கு என்றுமே வரி விதிக்கப் பட்டதில்லையென்றும், அதனால் அதிகாரிகள் சோழ மூவேந்தவேளான் புதிதாக விதித்த இவ் வரிகளைக் கொடுக்க வேண்டியதில்லை என்றும் அந்த விஷயத்தார் முடிவு கட்டினார்கள். அன்றி, பதினெட்டு விஷயங்களிலும் உள்ளவர்கள் கொடுக்க வேண்டிய வரி விகிதங்களையும் அவர்கள் நிச்சயத்து நிர்ணயித்தார்கள். இதே சாசனத்தின் பிரதி ஒன்று உத்தனூரிலிருந்தும் கிடைத்

துள்ளது. (1911-ஆம் ஆண்டு 458-நெ. எபி. கர்நாடிகா, பத்தாம் வால்யூம்; முளுபாகல் 119; இன்னும் கோலார் 42-யும் பார்க்க. மைசூர் ஆர்க்கியலாஜிகல் ரிபோர்டு, 1909-10-ஆண்டு, பக்கம் 29).

இடங்கை வகையைச் சேர்ந்த வணிகக் குழுவினரைத் திருப்திசெய்து உற்சாகப்படுத்தவே இம்மன்னன் சுங்கத்தை எடுத்து விட்டான். 'சுங்கம் தவிர்த்து இருணீக்கி உலகாண்டவன்' என்று இம்மன்னன் வடஆர்க்காடு ஜில்லாவில் உள்ள மருதாடு என்னுமிடத்திலிருந்து கிடைத்துள்ள ஒரு சாசனத்தில் குறிக்கப்பட்டிருக்கிறான். (1912-ஆம் ஆண்டு 408-நெ.)

குலோத்துங்கன் சோழ உலாவிலே

"புவிராச ராசர் மநுமுதலோர் நாளில்
தவிராத சுங்கம் தவிர்த்தோன்"

(கண்ணி—26

என்று காணப்படுகிறது. இதைக் கவனிக்கும்போது இவன் வணிகர்களுக்கு எவ்வளவு தூரம் சலுகைகள் வழங்கி இருக்கிறான் என்பதும் அவர்களுடைய நல்லெண்ணத்தையும் ஆதரவையும் பெற்று நிலைநிறுத்திக் கொள்ள அவன் எவ்வளவு தூரம் முயன்றிருக்கிறான் என்பதும் தெளிவாகும். சோழநாட்டிலே உள்நாட்டுக் கலகத்தைக் கிளப்பி அதிலே அதிராஜேந்திரன் உயிர்துறக்குமாறு செய்து அராஜகத்தை உண்டாக்கிச் சோழ சிங்காதானத்தைக் குலோத்துங்கன் கைப்பற்றுவதற்கு வழிகோலிய இடங்கை வகுப்பாரான வாணிபச் சங்கத்தார் செய்த உதவிக்குப் பிரதிப்பிரயோஜனமாக இம்மன்னன் அவ்விதம் வரிகளை நீக்கிக் கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது போலும்.

குலோத்துங்க மன்னனுடைய ஆஸ்தானக் கவிஞராக இருந்த ஜயங்கொண்டார் தம்முடைய கலிங்கத்துப்பரணியில் அதிராஜேந்திரனைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவே இல்லை. இராஜேந்திரனுடைய பிள்ளைப்பருவத்தைப் பற்றிய சம்பிரதாயமான வருணனைக்குப் பிறகு அபயன் அவனுக்கு இளவரசுப் பட்டம் கட்டினான் என்று கூறிவிட்டு அவனுடைய திக்கு விஜயத்தை வருணிக்க ஆரம்பிக்கிறார் கவிஞர். திக்கு விஜயத்திலும் வடநாட்டிலே வயிராகரம் சக்கரக்கோட்டம் ஆகிய

இடங்களிலே கொண்ட வெற்றியே முக்கியமாக இடம் பெற்றுள்ளது. 'சோழமன்னன் இறந்த சமயம் இராஜேந்திரனுகிய குலோத்துங்கன் வடக்கேதான் இருந்தான். அரசன் மரணத்தையொட்டிச் சோழநாட்டிலே அராஜகம் ஏற்பட்டது. குலோத்துங்கன் தென்னுடு போந்து அரசியலை மேற்கொண்டு அராஜகத்தைப் போக்கி நாட்டில் அமைதியைநிலைநாட்டினன். இதைக் கவிஞர் வெகு அழகாகவும் தத்ரூபமாகவும் சித்திரித்திருக்கிருர். ஆனல் விக்கிரமசோழன் உலாவிலோ வீரராஜேந்திரனுக்குப் பிறகு குலோத்துங்கன் சிங்காதனம் ஏறியதற்கு முன்னதாக வேறு ஒரு சோழஅரசன் நாட்டை ஆண்டு வந்திருக்கிருன் என்பது,

—'அங்கவன்பின்
காவல்புரிந் தவனி காத்தோனும்'
(கண்ணி—22)

என்று தெளிவாகக் காணப்படுகிறது. 'வீரமே துணையாகவும்' என்று தொடங்கும் வீரராஜேந்திரன் மெய்க்கீர்த்தியைப் 'புகழ்மாது விளங்க' என்று ஆரம்பமாகும் தன்னுடைய மெய்க்கீர்த்தியுடன் குலோத்துங்கன் இணைத்து ஒன்ருக்கியது, ஒருகால் வீரராஜேந்திரனுக்குப் பிறகு தானே உரிமையால் முறைப்படி சோழ சிங்காதானம் ஏறியவன் என்பதைக் காண்பிப்பதற்காகவேபோலும். (சாசன இலாகாவின் 1913-ஆம் ஆண்டு அறிக்கை பாரா 33.)

வேங்கி அரசைக் கைக்கொண்டிருந்தவனும் குலோத்துங்கனுடைய சிற்றப்பனுமான விஜயாதித்தியன் காலமான பிறகு குலோத்துங்கன் அந்நாட்டு அரசை மேற்கொண்டு தன் குமாரர்களை ஒருவன் பின் ஒருவனை அங்கே பிரதிநிதியாக ஆட்சி நடத்துவதற்கு அனுப்பிவைத்தான். அவ்விதம் முதல் முதலாகத் தன் மகன் மும்முடிச்சோழனை அனுப்பியபோது அவனுக்கு வேங்கி அரசியலைப்பற்றிய பழைய சம்பவங்களை எடுத்துக் கூறியிருக்கிருன். அவ்விதம் பிரதிநிதிகளாகச் சென்றிருந்த ராஜராஜ சோடகங்கனுடைய டேக்கிச் செப்பேடுகள் (குலோத்துங்கன் ஆட்சியின் பதினேழாம் ஆண்டில் அளிக்கப்பட்டவை. எபி. இண்டிகா, ஆறும் வால்யூம், நெ. 35; வீர சோடனுடைய செல்லூர்ச் செப்பேடுகள் (தந்தை ஆட்சி

யின் இருபத்தோராம் ஆண்டு கொண்டவை: தே. இ. சாசனங்கள், முதல் வால்யூம், நெ. 39; இன்னும் இந்தியன் ஆண்டிகுவரி, பத்தொன்பதாம் வால்யூம், பக்கம் 427) பிட்டபுரம் செப்பேடுகள் (இருபத்து மூன்றாம் ஆண்டு கொண்டவை; எபி. இந்திகா, ஐந்தாம் வால்யூம், நெ. 10) ஆகிய சாசனங்களில் இந்த வரலாறு ஒரேவிதமாக உள்ளது.

“இராஜராஜநரேந்திரன் நாற்பத்தோராண்டுகள் அரசு செலுத்திய பிறகு இறந்து போனதும் இராஜேந்திரன் முதலில் வேங்கிநாட்டுக்கு அரசனாக முடிசூட்டப் பெற்றுப் பெரும்புகழ் எய்தினன். அப்பால் அவன் தேவேந்திரப் பதவிக்குக் கொஞ்சமும் குறைவில்லாத சோழராஜ்யத்தின் அரசனாக முடிசூட்டப் பெற்றான். சோழவமிச திலகமான இராஜேந்திர தேவனாகிய சமுத்திரத்திலிருந்து தோன்றிய இலக்ஷ்மியான மதுராந்தகியை அவன் மணம் புரிந்து கொண்டான். அவளிடம் அம்மன்னனுக்கு ஏழு குமாரர்கள் பிறந்தார்கள். அவர்களுள் ஒருவனான இராஜராஜனுக்கு மன்னன், ‘குழந்தாய், திக்கு விஜயம் செய்ய வேண்டும் என்ற ஆசையினால் (இந்தப் பகுதி செல்லூர்ச் செப்பேடுகளிலே ‘சோழராஜ்யத்தை அடைய வேண்டும் என்று நான் ஆசைகொண்டதால்’ என்று காணப்படுகிறது.) வேங்கி என்னும் பேரரசை நான் முன்னாளிலே என் சிற்றப்பன் விஜயாதித்திய ராஜாவின் நிர்வாகத்திலே விட்டு வைத்தேன். பலத்திலே சிங்கத்தை நிகர்த்த அவரும் பதினைந்து ஆண்டுகள் ராஜ்யத்தை ஆண்டு தெய்வம்போன்ற அவர் சுவர்க்கத்தை அடைந்தார்’ என்று தெரிவித்தான்.”

வேங்கியைவிட்டு வெளியேறிய விஜயாதித்தியனைக் கீழைக் கலிங்க அரசனான இராஜராஜ தேவேந்திரவர்மன் மீண்டும் சிங்காதானத்தில் அமர்த்திய சமயத்தில் குலோத்துங்கன் சோழநாட்டு விவகாரத்திலே ஈடுபட்டு அதை ஒரு நிலைக்குக் கொணர முயன்று கொண்டிருந்தான். அப்போது விஜயாதித்தியனுக்கு உதவுவதற்காகக் குலோத்துங்கன்மீது கலிங்கமன்னன் நடத்திய படையெடுப்பிலே டாஹல தேசத்து (அதாவது சேதிநாட்டு) வேந்தனான யசக்கர்ணனும் ஈடுபட்டிருந்தான் என்று தெரிகிறது. கலசூரி அப்தம் 823 (அதாவது

கி. பி. 1073-ஆம் ஆண்டு) கொண்ட அவனுடைய கைராச் செப்பேடுகளிலே, "யுத்ததந்திரத்திலும் ஆயுதவீச்சிலும் எவ்விதக் குறையும் இல்லாதிருந்தும் ஆந்திர மன்னனை அவன் சுலபமாகவெற்றி கொண்டு, அலைகளையே அழகியபுருவங்களாகவும் தன்னுடைய ஏழுகிளைகளில் பாயும் நீரின் சலசலப்பால் கிளம்புவதும் மதங்கொண்ட வண்டுகளின் ரீங்காரத் தொனிபோல இனிமையானதுமான சப்தஸ்வரங்களில் புகழ்ந்துபாடிச் செல்லும் கோதாவரி நதியால் சூழப்பெற்ற பீமேச்வரதேவருக்குப் பல ஆபரணங்களை அளித்து அவரை வழிப்பட்டான்" என்று கூறப்பட்டுள்ளது. (எபி. இந்திகா, பன்னிரண்டாம் வால்யூம், பக்கம் 213, சுலோகம்23.) இவ்விடம் குறிக்கப்பட்ட பீமேச்வரர் திராக்ஷாராமத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் பீமேச்வரரே ஆவர். குலோத்துங்கனுடைய ஆட்சிக் காலத்திலே வேங்கிநாட்டில் அரசு செலுத்தப் பிரதிநிதிகளாக அனுப்பப்பெற்ற சோழ ராஜகுமாரர்கள் திராக்ஷாராமத்திலே தான் தங்கியிருந்திருக்கிறார்கள். ஒரு நூற்றாண்டுக்குப் பிறகு சோழசிங்காதானத்துக்குப் போட்டியிட்டு வெற்றி கொண்ட மூன்றாம் குலோத்துங்கனால் விரட்டப்பட்ட இரண்டாம் இராஜாதிராஜன் வேங்கியில் தஞ்சம் புகுந்த காலத்தில் இவ்வூரிலேதான் தங்கிப் பெயரளவில் அரசனாக விளங்கி அரசமரியாதைகளை அனுபவித்து வந்திருக்கிறான். இவற்றைக் கவனித்தால் விஜயாதித்தியன் ஆட்சிக் காலத்திலும் இவ்வூரே தலைநகராக விளங்கியது எனக் கொள்ளலாம். ஆகவே கீழைக் கலிங்க மன்னன் இராஜராஜ தேவேந்திரவர்மனும் சேதி வேந்தன் யசக்கர்ணனும் சேர்ந்து விஜயாதித்தியனுக்கு உதவ வந்த சமயம் வேங்கியின் தலைநகரை அவர்கள் கைப்பற்றியே தங்கள் காரியத்தை முடித்தார்கள் எனக் கொள்ளலாம். இதிலிருந்து குலோத்துங்கன் அடைந்த தோல்வியின் பரிமாணம் ஓர் அளவு விளங்கும். விஜயாதித்தியனை வேங்கியிலிருந்து வெளியேற்ற முடியாதென்பதை உணர்ந்த குலோத்துங்கன் சமரசத்துக்கு வரவேண்டியதாயிற்று. அந்தச் சமயத்திலே அவன் சோழசிங்காதானத்தைக் கைப்பற்றி அங்கே தன் ஆட்சியை நிறுவிவிட்டபடியாலும், விஜயாதித்தியனுடைய முதுமையை உத்தேசித்தும் தன் சிற்றப்பன் பெயரளவிலாவது சோழர்களுடைய பேரரசை ஏற்று அதற்கு

அடங்கி நடப்பதாக ஒப்புக்கொண்டால் அவனே வேங்கியில் அரசு புரிந்து வருவதை அனுமதித்திருக்கவும் கூடும்.

இதுகாறும் கூறியவற்றால் குலோத்துங்கன் ராஜ்யபாரத்தை ஏற்றது பற்றிக் கல்வெட்டுக்களிலும் இலக்கியத்திலும் கூறப்படுவன எல்லாம் அந்த அந்த அளவுக்கு உண்மை என்பதும், ஆனால் அவை முழுவிவரங்களையும் கொடுக்காமல் அந்த அந்தச் சந்தர்ப்பத்துக்கு வேண்டிய மட்டிலே தெரிவிக்கின்றன என்பதும், அவை எல்லாவற்றையும் ஒருங்கே திரட்டிச் சேர்த்தே முழு உருவம் அளித்துச் சித்திரத்தைப் பூர்த்தி செய்யவேண்டும் என்பதும் நன்கு விளங்கும்.

### முதற்குலோத்துங்க சோழன்

சோழராஜ்யத்தை முதற் குலோத்துங்கன் ஆண்டுவந்த காலத்தில் மேலைச் சாளுக்கிய ராஜ்யத்தை ஆறாம் விக்கிரமாதித்தியன் அரசுபுரிந்து வந்தான். இருவரும் பலம் பொருந்தியவர்கள்; நீண்டகாலம், அதாவது ஐம்பதாண்டுகள், ஆட்சி செய்திருக்கிறார்கள். அவர்கள் காலத்திலே சோழ-சாளுக்கியர் உறவு எந்த நிலையில் இருந்தது என்பது கவனிக்கத் தக்கது. ஆரம்பத்தில் அவர்களுக்கிடையே இருந்த விரோதம் நீடித்து நின்றதா என்பதும் ஆராயத்தக்கது.

கங்கை கொண்ட சோழ புரத்துக் கோயிலின் சுவரிலே அகுண்டோத் கண்ட என்று தொடங்கும் காஹடவால வமிசத்துப் பிரசஸ்தியின் பெரும்பகுதி பொறிக்கப்பட்டுள்ளது.(1908-ஆம் ஆண்டு, 29 தெ. சாசனம். அதே ஆண்டின் சாசன இலாகா அறிக்கை, 58-60-ஆம் பாராக்களையும் பார்க்க).சாசனம் முதலிலே குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் நாற்பத்தொன்றாம் (கி. பி. 1110-11) ஆண்டைக் கொடுத்து விட்டு மேலே பிரசஸ்தியை எழுத ஆரம்பிக்கிறது. ஆயினும் சந்திரதேவனைப் பற்றிய சுலோகத்தோடு திடீரென்று நின்றுவிடுகிறது. அதனால் சாசனகாலத்தில் அரசு செலுத்திய அரசன் பெயரையோ, சாசனம் கல்லில் வெட்டப்பட வேண்டிய சந்தர்ப்பத்தையோ, அது தெரிவிக்க வேண்டிய விவரத்தையோ காணவில்லை. காஹடவால மன்னர்களான மதனபாலனும் அவன் மகன் கோவிந்த சந்திரனும் அந்நாளிலே சோழமன்னனை குலோத்துங்கனுக்குச் சமகாலத்தவர்களாக ஆட்சி செய்தவர்

கள். இதுகாறும் கிடைத்துள்ள சாசனங்களில் மதனபால னுடைய ஆட்சியைச் சேர்ந்ததாகக் கி. பி. 1109-ஆம் ஆண்டு கொண்ட ரஹன் செப்பேடுகளே காலத்தால் பிற்பட்டவை. (இந்தியன் ஆண்டிகுவரி, பதினெட்டாம் வால்யூம், 14-9 பக்கங் கள்). அதேபோல அவனுக்குப்பின் சிங்காதனம் ஏறிய கோவிந்த சந்திரனுடைய சாசனங்களிலே காலத்தால் முற் பட்டது கி.பி. 1114-ஆம் ஆண்டு கொண்டதாகும் (எபி. இந்திகா, நான்காம் வால்யூம், 101-103 பக்கங்கள்). எனினும் தந்தையின் ஆட்சிக் காலத்திலேயே மகனும் தந்தையோடு சேர்ந்து ராஜ்ய பாரத்தை வகித்து வந்திருக்கிறான். ஆகவே இந்தச் சாச னத்தை அளித்தவன் கோவிந்த சந்திரன் என்றே கொள்ள லாம்.

கோவிந்த சந்திரன் ஆட்சிக் காலத்திலே கி.பி. 1129-ஆம் ஆண்டு கொண்டதாக உள்ள செப்பேட்டுச் சாசனம் (ஷை பதினோராம் வால்யூம், நெ. 3) ஒன்றில் உத்கல தேசத்துச் சாக் கிய ரக்ஷிதர் சிஷ்யரும் சோட (சோழ) தேசத்துவருமான ஸௌகத பரிவ்ராஜக மஹாபண்டிதர் வாகீச்வர ரக்ஷிதர் என்னும் புத்தமதப் பெரியார் குறிக்கப்பட்டுள்ளார். இன்னும் தஞ்சா வூர் ஜில்லாவில் சூரியனார் கோவில் என்னும் ஊரிலே குலோத் துங்கன் தன் பெயரில் குலோத்துங்க சோழ மார்த்தாண்டால யம் என்று சூரிய பகவானுக்கு ஒரு கோயில் எடுப்பித்திருக் கிறான். (சாசன இலாகாவின் 1927-ஆம் ஆண்டு அறிக்கை, 19-21 பாராக்கள்). காஹடவால மன்னர்கள் சூரிய வழிபாட்டிலே சிறந்து விளங்கியவர்கள். சூரியனார்கோயிலிலே விசுவேச்வர சுவாமி, விசாலாக்ஷி அம்மன் ஆகியோரும் பிரதிஷ்டை செய் யப்பெற்றிருக்கிறார்கள். அவர்கள் இன்றைக்கும் காசி க்ஷேத் திரத்தில் கோயில் கொண்டு எழுந்தருளி யிருப்பதை யாவரும் அறிவர்.

காசி க்ஷேத்திரமும் காஹடவாலர்களுடைய ஆட்சியில் அடங்கியிருந்தது. ஆகவே குலோத்துங்கன் மார்த்தாண் டாலயமான சூரியன் கோவில் எழுப்பியது அவனுக்குக் காஹ டவாலர்களுடன் இருந்த தொடர்பின் விளைவே எனக் கொள் வதில் தவறு ஒன்றும் இல்லை. இவற்றால் இராஜேந்திர சோழன் காலம் முதலே வடநாட்டில், முக்கியமாகக் கன்யா

குப்ஜ தேசத்தின் மீது, சோழர்களுக்கு இருந்த ஆதிக்கியம் குலோத்துங்கன் காலத்திலும் குறையாமல் இருந்தது என்பது விளங்கும்

காஹடவாலர்களே கன்யாகுப்ஜப் பிரதேசத்தைச் சமீப காலத்தில் தான் அரசு செலுத்த ஆரம்பித்தார்கள். அந்த வமிசத்தின் முதல் அரசனான சந்திரதேவன் தான் 'தன்னுடைய புஜபல பராக்கிரமத்தால் கன்யாகுப்ஜத்தின் புகழ் பெற்ற அரசுரிமையை அடைந்தான்". (நிஜ புஜோ பார்ஜித் கன்யாகுப்ஜாதிபத்ய ஸ்ரீசந்த்ரதேவ ஃ- இந்தியன் ஆண்டிகுவரி, பதினெட்டாம் வால்யூம், பக்கம் 18). அவனுடைய சாசனங்களிலே காலத்தில் முற்பட்டது கி.பி. 1090-ஆம் ஆண்டு கொண்டதாகும். (எபி. இந்திகா, ஒன்பதாம் வால்யூம், 302-305 பக்கங்கள்.) பிற்பட்டது கி. பி. 1100-ஆம் ஆண்டு கொண்டதாகும். (ஷை பதினன்காம் வால்யூம், 197-200 பக்கங்கள்.) அவன் தன்னுடைய வலிமையால் நரபதி, கஜபதி, திரிசங்குபதி, கிரிபதி ஆகியோர்களை வெற்றிகொண்டான்.[1] (ஷை பக்கம்193.) அன்றி 'காசி, குசிகம், உத்தரகோசலம், இந்திரஸ்தானம்

---

1. இந் நான்கு பெயர்களில் திரிசங்குபதி, கிரிபதி ஆகிய இரண்டும் வேறு இடங்களிலே காணப்பெறவில்லை. அவை இரண்டும் யாரைக் குறிப்பிடுவன என்பதும் தெரியவில்லை. கிரிபதி என்பது பெரும்பாலும் மலைப் பிரதேசமாக அமைந்த ஒரு நாட்டு அரசனைக் குறிப்பதாகக் கொள்ளலாம். எனினும் திரிசங்குபதி யாரைக் குறிக்குமென்பது தெரியவில்லை. நேபாளத்தின் மூன்று முக்கிய நகரங்களுள் சங்கு என்பதும் ஒன்று. (மற்ற இரண்டும் கட்மண்டுவும் பட்டணமும் ஆகும்). முதலாம் இராஜேந்திரனுடைய வடநாட்டுப் படையெடுப்பின் போது அவன் 'சங்கோட்டல் மஹீபாலனை வெற்றி' கொண்டான் என்று அவன் மெய்க்கீர்த்தியில் காணப்படுவதிலிருந்து சங்கு என்பான் ஒருவன் பெயர் தெரிகிறது. திரிசங்குபதிக்கும் இந்த இரு பெயர்களிலே ஏதாவது ஒன்றுக்கும் சம்பந்தம் உண்டா என்பது தெரியாது. இன்னும் புராணப் பிரசித்தியுடையவனும் விச்வாமித்திரரால் ஆதரிக்கப்பெற்றவனுமான திரிசங்கு வேறு இருக்கிறான். அவனுக்காக முனிவர் புதிய உலகம் ஒன்றையே சிருஷ்டித்தாரே. ஸி-யு-கீ என்னும் சீன நூலிலே ஜம்பூத்வீபம் முழுவதையும் ஒருகுடைக் கீழ் ஆளும் ஏகசக்கராதிபதி இல்லாத சமயங்களில் அதன் தெற்குப் பகுதியைக் கஜபதியும் மேற்குப் பகுதியைச் சத்திரபதியும், வடபாகத்தை அசுவபதியும் கிழக்குப் பாகத்தை நரபதியும் ஆண்டுவருவார்கள் என்று குறிக்கப்பட்டுள்ளது. (பீல் என்பாரின் பதிப்பு, முதல் பாகம்,பக்கம் 13, குறிப்பு.)

ஆகிய புண்ணிய தீர்த்தங்களைக் கைக்கொண்டு பரி பாலனம் செய்துவந்தான். (இந்தியன் ஆண்டிகுவரி, பதினைன் காம் வால்யூம், பக்கம் 7-8 - தீர்த்தானி காசி குசி கோத்தர கோசல லேந்த்ரஸ்தாநீயகாநி பரிபாலய தாதிகம்ய). காசி க்ஷேத் திரம் யாவரும் அறிந்ததே. குசிகம் என்பது கன்யாகுப்ஜத் தையே குறிக்கும். உத்தரகோசலம் என்பது அயோத்தியைச் சுற்றியுள்ள பிரதேசமாகும். இந்திரஸ்தானம் என்பது இந்தி ரப்ரஸ்தம் அதாவது முற்காலத்திய தில்லி நகரம் ஆகும் எனக் கொள்வார். (ஷை பதினெட்டாம் வால்யூம், பக்கம் 13, கீழ்க் குறிப்பு 33.) இதைக் கவனித்தால், இப்போது உத்தரப்பிர தேசம் என்று வழங்கப்பெறும் பகுதி முழுவதும் சந்திரதேவ னுடைய அரசில் அடங்கியிருந்த தென்பது விளங்கும்.

அவனும் முஸ்லிம்களோடு போரிட வேண்டிய சந்தர்ப் பம் நேர்ந்திருக்கின்றதென்றே தெரிகிறது. ஹிந்துஸ்தானத் தின்மீது படையெடுத்துவந்த மம்மூதின் பெயரனும் முதலாம் மஸூதின் மகனுமான இப்ராஹீம் கி. பி. 1059-ஆம் ஆண்டு கஜ்னியிலே சிங்காதனம் ஏறிக் கி.பி. 1099-ஆம் ஆண்டு வரையில் ஆட்சி புரிந்தான். தன் அரசிலே அடங்கியிருந்த இந்தியப் பிரதேசங்களுக்கு அவன் தன் மகன் மம்மூதைக் கி. பி. 1075-ஆம் ஆண்டில் பிரதிநிதியாக நியமித்தான். மம்மூ தும் ஹிந்துஸ்தானத்தின் பல பகுதிகள்மீதும் படைநடத்திச் சென்றான். அவன் படைசென்ற இடமெல்லாம் வெற்றி தானும். 'அவன் வாள்வீச்சைத் தாங்கமுடியாமல் ஆக்ரா நகரம் கீழ்ப்படிந்தது. ஹிந்து மன்னர்கள் அநேகர் அவனுக்கு அடி பணிந்தனர். சுற்றுப்பிரதேசத்திலிருந்த அரசர்கள் அவனு க்கு அளித்த காணிக்கைகளில் ஏராளமான யானைகளும் இருந் தன. அந்த யானைகளைக் கட்டிவைப்பதற்காகக் கன்யாகுப்ஜ நகரில் யானைச்சாலைகளை அமைத்து அவற்றைப் பராமரிக்கும் பொறுப்பை ஏற்கச் சந்த்ராய் நியமிக்கப்பட்டான்.' (எலியட் டும் டௌஸனும் மொழிபெயர்த்து வெளியிட்ட இந்தியதேச சரித் திரம் மூலநூலாசிரியர்கள் கூறியபடியே; நான்காம் வால்யூம், 524-ஆம் பக்கம்). இந்தச் சந்த்ராய் என்பானைக் காஹடவால மன்னனை சந்திரதேவன் என்றே ஆராய்ச்சியாளர்கள் கொள்வர்.

கன்யாகுப்ஜத்தை வெற்றிகொண்ட மம்மூது தன் கவனத்தை மாளவத்தின் மீது திருப்பினுன். அந்தப் படையெடுப்பைப் பற்றி ஸல்மான் என்னும் பாரசீகக் கவிஞர் குறிப்பிட்டிருக்கிருர். ஸுல்தான் இப்ரஹீம், மம்மூத் ஆகியவர்கள் காலத்தில் இருந்த அந்தக் கவிஞர் மஹமூத் இபன் சாத் இபன் ஸல்மான் எனப்படுவார். பொதுவாக ஸல்மான் என்றே குறிக்கப் பெறுவர். மம்மூதுக்கு எழுதிய ஒரு மனுவிலே இந்தப் படையெடுப்பைப் பற்றிக் கவிஞர் பின்வருமாறு எழுதுகிருர்: "நீ-படை பதைக்கும் வெய்யில் கொளுத்தும் கோடைக்காலத்திலே ஒவ்வொரு மாகாணத்திலும் மிக்க மனோரம்யமான இடங்களிலே பாடியிறங்கியிருந்தாய். அந்தப் படையெடுப்பிலே உன் சேனை விக்கிர ஆராதனை புரியும் ஆயிரம் கோயில்களை அழித்தது. அரண்வலிகொண்ட நூற்றுக்கு மேற்பட்ட கோட்டை கொத்தளங்களை உன்னுடைய யானைகள் மிதித்து நசுக்கின. உன் படை உஜ்ஜயினுக்குச் சென்றது. உன்னைக் கண்டு நடுங்கி மாளவன் ஓடிப்போனுன்" (ஷை. பக்கம் 525). அந்நாளிலே லக்ஷ்மதேவன் மாளவ நாட்டு அரசனுக இருந்தானெனத் தெரிகிறது. நாகபூர் பிரசஸ்தியின்படி (எபி. இந்திகா, இரண்டாம் வால்யூம், 185-195 பக்கங்கள்) உதயாதித்தியனுக்குப் பிறகு அவனுடைய குமாரர்களான இம்மன்னனும் இவன் தம்பி நரவர்மனும் ஒருவன் பின் ஒருவனுக நாட்டை ஆண்டுவந்தார்கள். லக்ஷ்மதேவன் 'துருஷ்கர்களைச் சுலபமாக அழித்தான்' என்றும் (கங்கையின் ஒரு சிறு கிளையான) வங்க்ஷும் என்னும் நதி தீரத்தில் பாடியிறங்கியிருந்த காலத்தில் துருஷ்கர்கள் அவனுக்குத் துடி துடிப்புள்ள அநேக குதிரைகளைக் காணிக்கை செலுத்தினுர்கள் என்றும் அந்தச் சாசனம் கூறுகிறது.

அந்நாளிலே மாளவதேசத்துக்கும் கன்யாகுப்ஜத்துக்கும் ஏதோ ஒருவிதத்தில் தொடர்பு இருந்ததென்று தெரிகிறது. மூன்ரும் மஸூதின் ஆட்சிக் காலத்தில் (சுமார் கி. பி. 1099-1115 ஆண்டு) கங்கை-யமுனைப் பிரதேசத்தில் இதே போன்ற மற்ருெரு முஸ்லிம் படையெடுப்பு நடைபெற்றதென்று தபகாத்-ஈ-நாஷிரீ என்னும் நூல் கூறுகிறது. "ஹிந்துஸ்தானத்திலே புனிதயுத்தம் புரிவதற்காக ஹாஜிப் துஜாதிகீன் கங் நதியைக் கடந்து, ஸுல்தான் மம்மூதைத் தவிர

வேறு யாரும் அதற்குமுன் படையோடு சென்றறியாத ஓர் இடத்தைச் சென்றடைந்தான்.'' (ராவெர்ட்டியின் மொழி பெயர்ப்பு, முதல் வால்யூம், பக்கம் 107). இந்தப் படையெடுப்பைப் பற்றிய விவரங்கள் சில மேலே குறிப்பிட்ட கவிஞர் ஸல்மான் இயற்றிய பாடல்களில் காணப்படுகின்றனபோலும். கன்யாகுப்ஜத்தை "இந்தியாவின் தலைநகரம், ஷாமன்களுடைய காபா அல்லது காபிரிகளின் கிப்லா போன்றது" என்று அவர் குறிப்பிடுகிறார். "சிற்றாறுகள் எல்லாம் பெரிய நதியிலே விழுந்து கலப்பதுபோல இந்தியாவின் செல்வம் முழுவதும் இந்நகரத்துக்கு வந்து சேருகின்றன. அங்கே யானைப்படை, போர்க் களங்கள் ஆகியவை நிறைந்து செல்வம் கொழிக்கிறது.'' அதன் அரசன் மல்ஹி அல்லது மல்ஹிரா எனப்படுபவன் வலிமை மிக்கவன். 'கொடும்புலிபோன்ற கோபம் வாய்ந்தவன்.' இவ்வளவு வீரமும் செல்வமும் பெற்றிருந்தானுயினும் அவனை மூன்றும் மஸூது வென்று சிறைப் படுத்தி விட்டனும். பெருந் தொகையை மீட்சி பணமாகக் கொடுத்து அவன் தன்னை மீட்டுக்கொள்ளவேண்டிய தாயிற்றும். (எல்லியட், டௌஸன் ஆகியோர் மொழிபெயர்த்து வெளியிட்ட இந்தியதேச சரித்திரம், நான்காம் வால்யூம், 526-27 பக்கங்கள்).

இவ்விடம் குறிக்கப்பட்டுள்ள அரசன் மல்ஹி அல்லது மல்ஹிரா என்பான் யார் என்பது தெளிவாகத் தெரியவில்லை. கன்யாகுப்ஜத்தை ஆண்ட காஹடவால மன்னன் மதனபாலனுகவே அவன் இருத்தல் வேண்டும் என்று ஆராச்சியாளர் கருதுவர். (டாக்டர் எச். ஸி. ராய் எழுதிய வடஇந்தியாவின் வமிசவாரி சரித்திரம், முதல் வால்யூம், 515-ஆம் பக்கம்). உதயாதித்தியனுடைய மற்றொரு மகனை ஜகத்தேவனுடைய ஜைனுத் கல்வெட்டிலிருந்து (எபி. இந்திகா, இருபத்திரண்டாம் வால்யூம், செ.11) அவன் தோரசமுத்திரத்திலே (அதாவது துவாரசமுத்திரத்திலே) மலஹரன் என்னும் அரசனுடைய போர் வீரர்கள் பலரைக் கொன்று வெற்றி கொண்டான் என்ற செய்தி தெரியவருகிறது.

மத்யே தோர ஸமுத்ர மத்ரி சிகரா
காரம் கபாலவலி

மாலோக்ய த்விரதேந்த்ரத தந்த மூஸல
ப்ராந்தஸ்ப்ரிசம் ப்ரேயஸாம் ।
ஸாக்ரந்தைః ப்ரதி மந்திரம் மலஹர
க்ஷோணீச சித்தோதரே
சூலம் பல்லவயாந்தி வாஷ்ப ஸலிலைர்
யத்வைரிணாம் வல்லபாः ॥

"எதிரிகளுடைய யானைகளின் உலக்கைபோன்ற தந்தங்களால் தாக்குண்டு போரில் இறந்தவர்களின் மண்டையோடுகள் மலைச்சிகரம் போலக் குவிந்துகிடப்பதைக் கண்டு தோர சமுத்திரத்தில் ஒவ்வொரு வீட்டிலும் அழும் விதவைகளின் துக்கக்குரல் மலஹர க்ஷோணீசன் (அதாவது மலஹர மன்னன்) னுடைய சித்தத்திலே பெருந்துக்கத்தை உண்டாக்குகிறது."

"சுலோகத்திலே மலஹரக்ஷோணீச என்று வரும் சொல் ஹொய்சள மன்னர்கள் தரித்துவந்த மலபரோள் கண்ட என்னும் கன்னடவிருதின் மொழிபெயர்ப்பாகவே காண்கிறது. மலப அல்லது மலஹ என்பது ஹொய்சளர்களுடைய மூதாதையரான ஏதோ சமூகத்தாரின் பெயர் என்று கருதப்படுகிறது. (எபி. கர்நாடிகா, ஆறாம் வால்யூம், முன்னுரை பக்கம்-14). இது அவர்களையே குறிக்கும்." (எபி. இந்திகா, இருபத்திரண்டாம் வால்யூம், பக்கம் 58-கீழ்க்குறிப்பு 5). அந்நாளிலே ஹொய்சளர்கள் மேலைச்சாளுக்கிய அரசனை ஆறாம் விக்கிரமாதித்தியன் கீழ்ச் சிற்றரசர்களாக விளங்கியவர்கள். மாளவ தேசமும் அந்நாளிலே விக்கிரமாதித்தியனுடைய ஆட்சியில் அடங்கியிருந்தது. இது நாகபூருக்கு ஆறு மைல் கிழக்கே உள்ள சீதபல்டி என்னுமிடத்திலிருந்து கிடைத்துள்ள அவனுடைய கி. பி. 1087-ஆம் ஆண்டு கொண்ட சாசனத்தால் (ஷை மூன்றாம் வால்யூம், பக்கம்-304) நன்கு தெரியவரும்.

அந்நாளிலே மாளவதேசத்துக்கும் ஹொய்சள மன்னர்களுக்கும் ஏதோவொருவகையில் சம்பந்தம் இருந்துவந்ததென்பது பின்வருவதால் விளங்கும். அணஹிலபாடக நகரத்தைத் தலைநகராகக்கொண்டு அரசு செலுத்திய கூர்ஜ்ஜர நாட்டுச் சௌளுக்கிய மன்னன் குமாரபாலன் (கி.பி. 1144ஆம் ஆண்டு

முதல் 1173-ஆண்டு வரையில் அரசு செலுத்தியவன்) மாலவ நாட்டு மன்னனை பல்லாளன் என்பானை வெற்றி கொண்டதாகப் புகழ்ப்பெறுகிறான். அன்னன், அதாவது ஸபாதலக்ஷம் எனவும் சாகாம்பரீ எனவும் குறிக்கப்படும் பிரதேசத்தை ஆட்சிபுரிந்துவந்த அர்ணோராஜன் என்பானைக் குமாரபாலன் வெற்றி கொண்டதும், அவன் பல்லாளனையும் வென்று அடிப்படுத்திப் புகழ்பெற வேண்டும் என்று அவனுடைய மந்திரிகள் ஆலோசனை கூறினார்களாம். த்வயாசிரயம் என்னும் நூல் இவ்விதம் கூறுகிறது. அவன் எதற்காகப் பல்லாளன் மீது படையெடுத்துச் செல்ல வேண்டுமென்று அவர்கள் கூறின காரணத்தை ஹேமசந்திரர் மற்றோர் இடத்திலே தெரிவித்திருக்கிறார். அர்ணோராஜன் தான் கூர்ஜ்ஜரத்தின் எல்லையை மீறி உள்ளே நுழைவதற்கு முன்னதாக அவந்தி மன்னனை பல்லாளனுடன் தோழமை பூண்டு ஒப்பந்தம் செய்துகொண்டானாம். அதன்படி இருவரும் சௌளுக்கிய ராஜ்யத்தை வடக்கிலிருந்தும் கிழக்கிலிருந்தும் ஒரே சமயத்தில் தாக்க வேண்டுமாம். (இந்தியன் ஆண்டிகுவரி, நான்காம் வால்யூம், பக்கம் 268).

அரசனை குமாரபாலன் பட்டணத்துக்குத் திரும்பிவந்த பிறகு அவனுக்குப் பின்வரும் செய்தி எட்டியது. "அர்ணோராஜன்மீது மன்னன் படைநடத்திச்சென்ற சமயம் பல்லாளனை எதிர்ப்பதற்காக அவன் அனுப்பிய சாமந்தர்களான விஜயன், கிருஷ்ணன் ஆகிய இருவரும் உஜ்ஜயினி அரசனோடு (அதாவது பல்லாளனோடு) சேர்ந்து கொண்டு விட்டனர். அம் மன்னனும் கூர்ஜ்ஜர தேசத்துக்குள்ளே புகுந்து அணஹில்லபுரத்தை நோக்கித் தன் படைகளுடன் வந்து கொண்டிருந்தான்." இதைக் கேள்வியுற்ற குமாரபாலன் தன் படைகளைத் திரட்டிப் பல்லாளனை எதிர்த்துப் போர்புரிந்து அவனைத் தோற்கடித்து யானையின் மீதிருந்து கீழே தள்ளினான். இவ்விடம் குறிக்கப்பட்ட அர்ணோராஜன் என்பவன் கூர்ஜ்ஜர தேசத்தைக் குமாரபாலனுக்கு முன்னதாக அரசாண்ட சித்தராஜ-ஜயஸிம்ஹனுடைய மருமகனும் நம்பிக்கை வாய்ந்த சிற்றரசனும் ஆவான். குமாரபாலனோ சித்தராஜ-ஜய ஸிம்ஹனுடைய மகன் அல்ல; தாயத்தாரில் ஒருவன். அவன் இறந்த அரசனுடைய ஸ்வீகார குமாரனை விரட்டிவிட்டுச் சிங்கா

தனத்தைக் கைப்பற்றிக் கொண்டான். ஆகவே அர்ணோ ராஜன்மீது குமாரபாலன் படையெடுத்துச் சென்றது அங்கே ஏற்பட்ட தாயாதிச்சண்டையின் விளைவே என்பது தெளிவாகும்.

குமாரபாலன் தன்னுடைய தண்டநாயகனும் கூர்ஜ்ஜர பிரம்மசேநானி என்று புகழப் பெற்றவனுமான கர்க்கன் அல்லது காகன் என்பவன் வசம் பெரும் படையை மாளவத்துக்கு அனுப்பினான். கர்க்கன் அப்போது நந்தபுரியிலே லாடதேசத்துப் படையை நிர்வகித்து வந்தவன். அபு மலைப் பிரதேசமான அத்புத மண்டலத்துப் பரமாரவமிசக் கிளையைச் சேர்ந்த அரசன் யசோதவளனும் அந்தப் படையெடுப்பிலே முக்கியமான தண்ட நாயகனாக விளங்கியிருக்கிறான். இது அபூ மலையிலிருந்து கிடைக்கும் தேஜப்பாலனுடைய பிரசஸ்தியிலிருந்து தெரியவரும்:

> ரோத: கம்தரவர்த்தி கீர்த்தி லஹரீ
> லிப்தாம்ரிதாம்சு த்யுதேர்
> அப்ரத்யும்ந வசோ யசோதவல இத்
> யாஸீத் தநூஜஸ் தத: |
> யச் சௌலுக்ய குமாரபால ந்ரிபதி
> ப்ரத்யார்த்திதா மாகதம்
> மத்வா ஸத்வர மேவ மாலவபதிம்
> பல்லாள மாலப்தவான் ||

மாலவ பதியான பல்லாளன் "சௌலுக்கிய மன்னனை குமாரபாலனுக்கு விரோதமாகப் போய்விட்டான் என்ற செய்தியைக் கேட்டவுடனே அவனை யசோதவளன் விரைவில் கொன்றான்" என்று அது கூறுகிறது. (எபி. இந்திகா, எட்டாம் வால்யூம், 210-16-ஆம் பக்கங்கள் சுலோகம் 35.) பல்லாளனுக்கு எதிராக இந்தப் படையெடுப்புக்குத் தலைமை தாங்கிச் சென்ற கர்க்கனுக்கும் வெற்றி சுலபத்தில் கிட்டுவதாக இல்லை. குமாரபாலனுடைய சாமந்தர்களான விஜயன், கிருஷ்ணன் ஆகிய இருவரும் பகிரங்கமாகவே பல்லாளனுடன் சேர்ந்துகொண்டனர். "சேனைத் தலைவர்கள் எவ்வளவோ தூண்டியும் ஒரு சமயம் கூர்ஜ்ஜர சேனை பின்வாங்கத் தொடங்கியது. எனினும் தலை

வன் மிகுந்த உற்சாகத்துடன் ஊக்கியதால் உணர்ச்சி யெழுந்த படையினர் மும்முரமாகத் தாக்கி, பல்லாளனை அவன் ஏறி யிருந்த யானையின் மீதிருந்து கீழே இறக்கிக் கூர்ஜ்ஜர பிரம்ம சேனானியின் முன்னதாகக் கொன்றார்கள்.' (இந்தியன் ஆண்டி குவரி, நான்காம் வால்யூம், பக்கம் 268); த்வயாச்ரயம், பதினான் காம் அத்தியாயம், 22-23 சுலோகங்கள்; பிரபந்த சிந்தாமணி, பக்கம் 95; வஸந்தவிலாசம், மூன்றாம் அங்கம், 29 சுலோகம்).

இவ்விதம் மாலவதேசமன்னனை பல்லாளன்மீது குமார பாலன் கொண்ட வெற்றி பாவபிரஹஸ்பதியின் வேராவல் (வீரதவளபட்டணம்) பிரசஸ்தியினின்றும் தெரியவருகிறது. அதிலே பாவபிரஹஸ்பதியின் தலைவனான் குமாரபாலன் "தாரா அரசனான பல்லாளன்போன்ற மத்தகஜங்களின் தலை யிலே தாவிக்குதிக்கும் சிங்கம்" என்று புகழப்பட்டிருக்கிறான். (ராயல் ஏஷியாடிக் ஸோஸைட்டி, பம்பாய்க் கிளையின் பத்திரிகை, எட் டாம் வால்யூம், 59-ஆம் பக்கம் முதல்). அதேபோல வாடநகர் பிரசஸ்தியிலும் அவன் மாலவமன்னன் தலையைவெட்டிக் கொணர்ந்து தொங்கவிட்டுச் சண்டிதேவியை வழிபட்டு அவள் உள்ளத்தைக் குளிர்வித்தான் என்று கூறப்பட்டுள்ளது. (எபி. இந்திகா, முதல் வால்யூம், பக்கம் 302, சுலோகம் 15.)

இவ்விதம் பல்லாளன் எல்லா இடங்களிலும் தாரா நகரத்தைத் தலைநகராகக் கொண்டு அரசு செலுத்திய மாலவ தேசத்து அரசன் என்றே குறிக்கப்பட்டுள்ளான். அந்தப் பெயர் ஹொய்சளர்களிடையே தான் சகஜமாகக் காணப்படு வது. அவர்கள் கல்யாணபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த மேலைச்சாளுக்கியர்களுக்கு அடங்கிய சிற்றரசர் களாக ஆட்சி புரிந்தவர்கள். மாலவதேசத்துப் பரமாரர்களும் அவ்விதம் இருந்தவர்களே. சுமார் கி. பி. 1100-ஆம் ஆண்டு முதல் 1150-ஆம் ஆண்டு வரையில் அரசு செலுத்திய ஹொய் சள மன்னனான விஷ்ணுவர்த்தனனுக்குப் பல்லாளன் என்ற மகன் ஒருவன் இருந்திருக்கிறான். கி. பி. 1130-ஆம் ஆண்டு கொண்ட ஒரு சாசனத்திலே அவன் ஸ்ரீமத் திரிபுவனமல்ல குமார'பல்லாள தேவன் என்றும், விஷ்ணுவர்த்தனனுடைய (அக்ரதனுஜ) மூத்தகுமாரன் என்றும், அப்போது ராஜ்ய பாரத்தை நிர்வகித்து வந்தான் என்றும் கூறப்பட்டுள்ளது,

(எபி. கர்நாடிகா, ஆறும் வால்யூம், மூத்கெரெ 22). குமார பாலன் வெற்றிகொண்ட மாலவாதிபதியான பல்லாளன் இவனே போலும்.

இவற்றைக் கொண்டு கவனித்தால், அந்நாளிலே மேலைச் சாளுக்கிய மன்னர்கள் தங்களுடைய ஸாம்ராஜ்யத்தின் வட பகுதியிலே மாளவம்போன்ற தேசங்களை நிர்வகிப்பதற்காக ஹொய்சள இராஜகுமாரர்கள் சிலரைப் பிரதிநிதிகளாக அனுப்பிவைத்திருந்தார்கள் .என்பதும், பல்லாளன் அவர்களிலே ஒருவன் என்பதும், அவ்விதம் அனுப்பப்பெற்ற பிரதிநிதிகள் கன்யாகுப்ஜப் பிரதேசத்தையும் தங்கள் மேற்பார்வையிலே கொண்டிருந்தார்கள் என்பதும் பெறப்படும்.

அதே சமயம் கன்யாகுப்ஜப் பிரதேசத்திலே ராஷ்டிரகூட வமிசத்தைச் சேர்ந்த இராஜகுமாரர்கள் சிலரும் ஆண்டு வந்திருக்கிறார்களெனத் தெரிகிறது. விக்கிரம சம்வத்ஸரம் 1176, அதாவது கி. பி. 1119-20 ஆம் ஆண்டு கொண்ட ஸேத்-மாஹேத் புத்தமதக் கல்வெட்டு ஒன்றிலே காதீபுராதிபர்களான கோபாலன், அவன் மகன் மதனன் ஆகியோர்களுடைய பெயர்கள் காணப்படுகின்றன. (இந்தியன் ஆண்டிகுவரி, பதினேழாம் வால்யூம், பக்கங்கள் 61-64). காதீபுரம் என்பது கன்யாகுப்ஜத்தின் மறுபெயரே. லக்கணபாலனுடைய புதாவுன் செப்பேடுகளிலே (எபி. இந்திகா, முதல் வால்யூம், 61-66 பக்கங்கள்) காணும் ராஷ்டிரகூட அரசர்களுடைய வமிசாவளியிலே அதே பெயர்களைக் கொண்டு வரும் அரசர்களே யாவர் போலும், அவர்கள். (ஜர்னல் ஆப் தி ஏஷ்யாடிக் ஸொஸைட்டி ஆப் பெங்கால், 1925, பக்கம் 105 முதல்). சோழர், சாளுக்கியர் ஆகிய இருவரும் வடநாட்டிலே தங்களுக்கிருந்த ஆதிக்கியத்தை நிலைநிறுத்திக் கொள்வதற்காகப் பெரிதும் முயன்று வந்தார்கள் என்றும், அதன் பயனாக ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் பிரதிநிதிகளை அங்கே நிறுவியிருந்தார்கள் என்றும் கொள்ளக்கூடும்.

ஆனால் இது சாத்தியமாவதற்கு அந்தப் பேரரசுகள் இரண்டும் தங்களுக்குள் இருந்த நீண்டகாலப் பகையை மறந்து ஏதோவொருவகையான சமாதானத்துக்குத் தற்காலிகமாக

வாவது வந்திருக்கவேண்டும். ஸ்ரீரங்கம் ரங்கநாதர் ஆலயத்திலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டிலிருந்து (1942-ஆம் ஆண்டு 204 நெ.) இவ்வித நிலை அப்போது இருந்து வந்த தென்று தெரிகிறது. முதற் குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் இருபத்தொன்பதாம் ஆண்டிலே மேலைச் சாளுக்கிய மன்னனான ஆறும் விக்கிரமாதித்தியனுடைய கன்னட ஸந்தி விக்கிரஹியும் தண்டநாயகனுமான அதிகாரி ஒருவன் இரண்டு விளக்கு எரிப்பதற்கான நிபந்தங்களை அளித்த செய்தியைக் கூறுகிறது அந்தக் கல்வெட்டு. இன்னும், அவன் அந்த ஆலயத்திலே ஸேநாபதிக்கு அதாவது விஷ்வக்ஸேன ருக்குச் செங்கல்லும் சுண்ணும்பும் கொண்டு ஒரு கோயில் எழுப்பினன் என்றும் தெரியவருகிறது. அந்த இரண்டு அரசர்களுக்கிடையிலும் ஒரு விதமான சமாதானம் நிலவியிருந்ததென்பதை இது தெரிவிக்கிறது.

பழம் பகையை மறந்து சமாதானமாகப் போவதே நல்லது என்று எண்ணவேண்டிய சந்தர்ப்பமும் சோழமன்னனுக்கு இப்போது ஏற்பட்டிருத்தல் வேண்டும்.

கர்னல் மக்கென்ஸி சேகரித்து வைத்துள்ள நூல்களில் பாண்டியர் வரலாறு என்பதும் ஒன்று. அதிலே கி. பி. 1323-ஆம் ஆண்டு மே-ஜூன் மாதகாலத்தில் முஸலிம்கள் மதுரையைப் பிடித்துக்கொண்டு அவ்விடம் ஒரு படையை நிலையாக வைத்த செய்தி பின்வருமாறு குறிக்கப்பட்டுள்ளது: "பிறகு, சாலிவாகன சகாப்தம் ஆயிரதது இருநூற்று நாற்பத்தாறுக்குச் சரியான கொல்லம் அழிந்த ஆண்டு இருநூற்று இருபத்தேழு ருதிரோத்காரி வருஷம் ஆனி மாதம் பராக்கிரம பாண்டியன் ஆண்டுவந்த நாளையில் தில்லியிலிருந்து ஆதி சுல்தான் மூல்க்கும் நேமி என்பவனும் வந்து", நாட்டைப் பிடித்துக்கொண்டார்கள். (ஹிஸ்டாரிகல் மானுஸ்க்ரிப்டஸ் - சரித்திர சம்பந்தமான ஏட்டுச் சுவடி நூல்கள்-என்ற பெயரில் டெய்லர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்ட நூல், முதல் பாகம், பக்கம் 203).

மதுரையை முஸ்லிம்கள் கைப்பற்றிய தேதி அந்நூலிலே இரண்டுவிதமாகக் குறிக்கப்பட்டுள்ளது. ஒன்று சகாப்தம்

1246, ருதிரோத்காரி வருஷம் ஆனிமாதம். இது கி. பி. 1323, மே-ஜூன் ஆகும். மற்றொன்று கொல்லம் அழிந்தது முதல் கணக்கிடப்படும் வேறு ஓர் அப்தத்தின் 227-ஆம் ஆண்டு. கி. பி. 824-ஆம் ஆண்டு முதல் கணக்கிடப்பட்டுப் பொதுவாக வழக்கில் உள்ள கொல்லம் தோன்றிய காலத்தினின்றும் இது வேறானது. கொல்லம் தோன்றியது முதல் ஆரம்பித்த ஆண்டுக்கு சுமார் இருநூற்று எழுபது ஆண்டுகளுக்குப் பிறகு, கி. பி. 1096-ஆம் ஆண்டில், கொல்லம் அழிந்த நாளிலிருந்து தோன்றிய புது அப்தமாகும் (டாக்டர் என். வேங்கடரமணய்யா எழுதிய தென் இந்தியாவிலே முஸ்லிம் ஆட்சி பரவியதன் ஆரம்பகால வரலாறு, 71-3 பக்கங்கள்).

புதிய அப்தம் தோன்றிய காலத்திலே மேலைக் கடற்கரையோரப் பிரதேசத்திலே வேணாட்டில் ஏதோ குழப்பம் இருந்ததென்றும், அதற்காகக் குலோத்துங்கன் தன் சேனைத் தலைவன் நரலோக வீரனை அனுப்பினான் என்றும் தெரிய வருகிறது. அப்போது நரலோகவீரன் கொல்லத்தை அழித்திருக்கிறான். நரலோகவீரன் புகழ்ச்சியைப் பலபடியும் விதந்து ஓதும் சாசனங்களிலே இவ்வெற்றி கூறப்பட்டுள்ளது. (சோழர் சரித்திரம், ஆட்சிமுறை ஆகியவற்றில் சிற்றாராய்ச்சி என்ற தலைப்பில் ஸ்ரீ க. அ. நீலகண்ட சாஸ்திரி எழுதிய நூல், பக்கம் 191. இன்னும் இந்தத் தொகுப்பிலே உள்ள 1271-3 நெ. சாசனங்கள்).

இந்த ஆண்டுக்கணக்கு வேறு எந்த இடத்திலும் குறிக்கப் பெறவில்லை. அவ்விதம் இருக்க, இவ்வரலாற்றிலே இந்த ஆண்டைக் குறிக்கவேண்டிய சந்தர்ப்பம் என்ன என்பது நோக்கற்குரியது. கி. பி. 824-ஆம் ஆண்டு முதல் கணக்கிடப்படும் முதல் கொல்லம் ஆண்டே பாண்டி நாட்டில் வழக்கில் இல்லை. ஆகவே மதுரையை முஸ்லிம்கள் கைப்பற்றிய செய்தியைக் கூறுமிடத்தில் புதியதானதும் கொல்லம் அழிவுநாள் முதல் தோன்றியதுமான ஆண்டுக்கணக்கை உபயோகித்திருப்பதைக் கவனிக்கவேண்டும். ஆயினும் ஒரு விஷயத்தை நாம் மறக்கலாகாது. இவ்வரலாற்றை எழுதிய ஆசிரியர் கொல்லம் அழிவு ஆண்டுக் கணக்கை மட்டும் கூறினால் போதாது, விபரம் தெரி

யாது என்று நினைத்தே சகாப்தத்தையும் சேர்த்துக் காட்டியிருக்கிறார். சகாப்தக் கணக்கு இல்லாவிட்டால் முஸ்லிம்கள் மதுரையைக் கைப்பற்றிய ஆண்டை நாம் நிச்சயமாக நிர்ணயிக்க முடியாது. ஆகவே அவர் கொல்லம் அழிவு ஆண்டுக் கணக்கை வேண்டுமென்றே ஏதோ ஒரு காரணத்தால் இவ்விடம் சேர்த்திருத்தல் வேண்டும்.

ஒருகால் கி. பி. 1096-ஆம் ஆண்டு நடந்த கொல்லம் அழிவுக்கும் முஸ்லிம்களுக்கும் ஏதாவது தொடர்பு இருக்கவேண்டும் போலும். ஆனால் அதைப்பற்றிய விவரம் ஒன்றும் இப்போது தெரியவில்லை. சிதம்பரத்திலே கிடைக்கும் முதற் குலோத்துங்கனுடைய வடமொழிக் கல்வெட்டு ஒன்று, அவன் மேலைக் கடற்கரை ஓரமாக ஸஹ்ய மலையிலே ஜயஸ்தம்பம் நிறுவினான் என்றும், சமுத்திரத்தின் மறுகரையில் உள்ள பாரசீக நாட்டு யுவதிகள் அவன் புகழைப் பாடினார்கள் என்றும் கூறுகிறது. (எபி. இந்தகா, ஐந்தாம் வால்யூம், 103-4 பக்கங்கள்; இன்னும் இந்தத் தொகுதியில் உள்ள 1270 நெ. சாசனம்.) அது எதைக் குறிக்கிறதென்பது தெரியவில்லை. ஆயினும் அதைக்கொண்டு முதற் குலோத்துங்கன் முஸ்லிம்கள்மீது ஏதோவொரு வெற்றி கொண்டான் என்று எண்ண இடம் ஏற்படுகிறது.

இதே சமயம் ஆண்டுவந்த மேலைச் சாளுக்கிய அரசன் ஆறாம் விக்கிரமாதித்தியனும் ஹொய்சள மன்னன் விஷ்ணுவர்த்தனனும் துருக்கர்களை வெற்றி கொண்டதாகக் கூறிக் கொள்ளுகிறார்கள். தங்களுக்குப் பொதுவான எதிரியை முறியடிக்கவேண்டிக் குலோத்துங்கனும் விக்கிரமாதித்தியனும் தங்களுக்குள்ளே இருந்த பகையைத் துறந்து முஸ்லிம்களை வெற்றி கொள்ள ஒன்று சேர்ந்திருக்கக் கூடும்.

இலங்கை விவகாரம்

முதற் குலோத்துங்க சோழன் தன் ஆட்சியின் ஆரம்பத்திலே இலங்கையின் ஆதிபத்தியத்தை இழந்துவிட்டான் என்றும், அதற்குப்பிறகு அதைத் திரும்பவும் அடைய அவன் செய்த முயற்சிகள் கைகூடவில்லை யென்றும் பொதுவாகக் கொள்ளப்பட்டுவருகிறது.

சிங்கள ராஜவமிசத்து அரசகுமாரனை கித்தி என்பான் விஜயபாஹு என்னும் அபிஷேக நாமத்துடன் கி. பி. 1055-ஆம் ஆண்டில் தன்னுடைய பதினேழாம் வயதிலேயே இலங்கையின் தென்கிழக்குப் பகுதியான மலைநாட்டில் அரசுரிமையை ஏற்றான். (சூளவமிசம், ஐம்பத்தேழாம் அத்தியாயம், சுலோகங்கள் 65-66; எபிகிராபியா ஸைலானிகா, இரண்டாம் வால்யூம், பக்கம் 507.) இதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். அவன் ஐம்பத்தைந்து வருஷகாலம், அதாவது தன்னுடைய எழுபத்துமூன்றாம் வயது வரையில், அரசு புரிந்திருக்கிறான். அவன் தன்னுடைய ஆட்சியின் பதினைந்தாம் ஆண்டு (சுமார் கி. பி. 1070-ஆம் ஆண்டு) அநுராதபுரத்தையடைந்து அகில இலங்கைக்கும் அரசன் ஆனான். இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அதற்குரிய அபிஷேகமும் நடந்தது. (டாக்டர் மெண்டிஸ் எழுதிய இலங்கையின் பழைய வரலாறு என்னும் ஆங்கில நூலின் நான்காம் பதிப்பு, 86-90. 154 பக்கங்களில் அனுஷ்டித்த கால முறையே இவ்விடம் கொள்ளப்பட்டுள்ளது. எபிகிராபியா ஸைலானிகா, ஐந்தாம் வால்யூம் முதல் பாகத்தில் காணும் திருத்தங்களையும் கவனிக்க). இதனால் அந்தத் தீவிலே அதுகாறும் நிலைத்திருந்த சோழர்களுடைய ஆதிக்கியம் முடிவடைந்தது. கி. பி. 991-ஆம் ஆண்டு முதல், முதலாம் இராஜராஜ சோழன் காலத்திலிருந்தே அந்தத் தீவின் வடபகுதியிலே சோழர்கள் ஆட்சி நிலவி வந்தது. கி. பி. 1017-18-ஆம் ஆண்டிலிருந்து, ஏதோ மூலை முடுக்குகளிலே உள்ள சிற்சில பிரதேசங்கள் நீங்கலாகத் தீவு முழுவதுமே சோழர்களுடைய ஆளுகைக்கு உட்பட்டிருந்தது. இவ்வளவுதூரம் வேரூன்றியிருந்த அந்த ஆதிக்கியத்தைத் தகர்த்தெறிவதற்கு விஜயபாஹு முயற்சி எடுத்துக்கொண்டதற்கான சமயமும் ஏற்றதாக இருந்தது. சோழநாட்டிலே அப்போதுதான் வீரராஜேந்திரன் இறந்துபோயிருந்தான். அவனுக்குப்பின் சிங்காதனம் ஏறிய அதிராஜேந்திரனே அமைதியாக நாட்டை ஆளமுடியவில்லை. அவனுக்குக் கடுமையான எதிர்ப்பு இருந்தது. உள்நாட்டுக் கலகத்தில் அதிராஜேந்திரன் இறந்துபோகவே முதற் குலோத்துங்கன் அரசியலைக் கைப்பற்றி ஆளத் துவங்கினான். இந்தச் சமயம் தான் விஜயபாஹு தன்னுடைய சுதந்திரத்தை நிலை நிறுத்

திக் கொண்டது. மற்றொரு விஷயத்தையும் நாம் கவனிக்க வேண்டும். அதிராஜேந்திரதேவனுடைய மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டும் இலங்கையில் கிடைத்துள்ளது.(தெ.இ. சாசனங்கள், நான்காம் வால்யூம், நெ. 1388). ஆனால் அப்பால் குலோத் துங்க சோழனுடைய சாசனங்களோ அவனுக்குப் பின் வந்த வர்களுடைய சாசனங்களோ இலங்கையில் கிடைக்கவில்லை.

இவ்விதம் விஜயபாஹு அடைந்த வெற்றி குலோத்துங்க னுடைய உள்ளத்தைச் சதா உறுத்திக்கொண்டே இருத்தல் வேண்டும்! அதற்காக அவன் உற்ற சமயத்தை எதிர்பார்த் துக் காத்திருந்தான் போலும். குலோத்துங்கன் இலங்கை யைத் திரும்பவும் கைப்பற்ற எடுத்துக் கொண்ட நடவடிக்கை களைப் பற்றியோ அவற்றின் விளைவுகளைப்பற்றியோ சோழ சாசனங்கள் ஏதும் தெரிவிக்கவில்லை. எனினும், இலங்கைச் சரித்திரமான மஹாவம்சத்திலே இரண்டு சம்பவங்கள் குறிக்கப் பட்டுள்ளன. முதற் சம்பவம் விஜயபாஹுவின் ஆட்சியிலே முப்பதாம் ஆண்டு, அதாவது சுமார் கி. பி. 1085-ஆம் ஆண்டு, நடந்தது.

—கண்ணடை (கர்நாடக) வேந்தனும் சோழமன்னனும் அனுப்பிவைத்த தூதுவர்கள் விலையுயர்ந்த பரிசுகளைக் கொண்டு இவ்விடம் வந்தார்கள். அவர்கள் அரசனைப் பேட்டி கண்டார்கள். மன்னனும் பெரிதும் மகிழ்வுற்று இரண்டு தூதுகோஷ்டிகளுக்கும் அவர் அவர்க்கு உரிய மரியாதைகளை வழங்கினான். அப்பால் முதலில் கண்ணடை நாட்டுத் தூதுவர் களோடு தன் தூதுவர்களையும் சேர்த்துப் பொறுக்கி எடுத்த பரிசுகளுடன் கண்ணடை தேசத்துக்கு அனுப்பி வைத்தான். ஆனால் அவர்கள் சோழ நாட்டு எல்லையில் நுழைந்தபோது ஸிம்ஹளர்களுடைய காதையும் மூக்கையும் சோழர்கள் கொடூர மாக அரிந்துவிட்டார்கள். இவ்விதம் உருக்குலைந்த தூது வர்கள் சென்ற வழியே திரும்பி இவ்விடம் வந்து தங்களுக்குச் சோழமன்னன் இழைத்த பரிபவம் எல்லாவற்றையும் அரச னிடம் முறையிட்டார்கள். கனன்று எரியும் கோபம் கொண்ட விஜயபாஹு வேந்தனும் (மந்திரி பிரதானிகள்) புடை சூழ்ந் திருக்கும் சபை நடுவே தமிளத் தூதுவர்களை அழைப்பித்துச் சோழ அரசனிடம் பின்வரும் செய்தியைத் தெரிவிக்குமாறு

கூறினன். "'நடுச் சமுத்திரத்திலே ஒற்றைத் தீவிலே நாம் இருவரும் நம்முடைய புஜவலிமையைப் போட்டியிட்டுப் பரீக்ஷித்துக் கொள்ளலாம். இல்லை, நீயே தேர்ந்தெடுக்கும் ஓர் இடத்தில் உன்னுடைய படைப்பலம் முழுவதையும் திரட்டி என் படைகளோடு போரிட்டு வெற்றி கொள்ளலாம்.' நான் கூறியது போலவே இதை உன் யஜமானனிடம் தெரிவி." இதைக் கூறிய மன்னன் அந்தத்தூதுவனுக்குப் பெண்ணுடை அணிவித்துச் சோழ அரசனிடம் அனுப்பி வைத்தான்.[1] அவனும் அநுராதபுரத்தை அடைந்து அங்கே தன் படையுடன் தங்கியிருந்தான். சோழநாட்டை அடைந்து போரைத் துவக்கும்படி அவன் தன்னுடைய படைத்தலைவர்கள் இருவரை மத்திகாவாடதித்த, மஹாதித்த ஆகிய துறைமுகங்களுக்கு அனுப்பிவைத்தான். சோழநாட்டுக்குப் படைகளை அனுப்புவதற்காகக் கப்பல்களையும் இதரத் தளவாடங்களையும் அவர்கள் சேகரித்துவைத்தார்கள். அப்போது (மன்னனுடைய ஆட்சியின்)முப்பதாம் வருஷத்திலே வேளைக்காரப் படைப்பிரிவினர் அவ்விடம் செல்ல இஷ்டப்படாமல் கலகம் செய்தார்கள். தண்டநாயகர்கள் இருவரையும் அவர்கள் கொன்று, கட்டுக்கடங்காமல் செல்லும் மதயானைகளைப்போலப் புலத்திநகரத்தைச் சுற்றியுள்ள பிரதேசங்களைச் சூறையாடினார்கள். அரசனுடைய தங்கையையும் அவளுடைய மூன்று பிள்ளைகளோடு சிறைப்பிடித்து, அரசனுடைய அரண்மனையையும் மூர்க்கமாக எரியூட்டினார்கள். அரசனும் நகரத்தை விடுத்துத் தக்கிண தேசத்துக்கு விரைந்தான். விலையுயர்ந்த பொருள்களை வாதகிரிக் குகையில் ஒளித்துவைத்துவிட்டு, சிங்கத்தின் வீறுகொண்ட உபராஜ வீரபாஹுவோடுகூடப் பெரும்படை நடத்திப் புலத்தி நகரத்தை அடைந்தான். அங்கே தீரமான சண்டையின் முடிவில் படைகளைப் புறமுதுகு காட்டி ஓடச்செய்தான்.

---

1. இதுவும் இந்தப் போர் நிகழ்ச்சிபற்றி மகாவமிசத்திலே காணும் இதர சம்பவங்களும் அதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்னதாக நடந்த சோழ-சாளுக்கிய யுத்தசமயத்தில் நடந்த சம்பவங்கள் சிலவற்றை நினைப்பூட்டுவனவாக உள்ளன. சாளுக்கியர்களுக்குச் சோழர்கள் இழைத்த அவமானங்களுக்குப் பிரதியாக இலங்கை வேந்தன் சோழர்களை இவ்வாறு அவமானம் செய்தானு அல்லது இவையெல்லாம் அந்தக் காலத்துப் போர்முறையிலே சகஜமாகக் காணப்படுபவைகளா என்பது நிச்சயமாகத் தெரியாது.

கொலையுண்ட தன்னுடைய தண்டநாயகர்கள் இருவருடைய உடலையும் வைத்துக் கட்டிய பாடையைச் சுற்றி அவர்களை நிறுத்தி, கலகப்படைத் தலைவர்களின் கைகளைப் பின்புறம் இழுத்துக் கட்டியபடியே கழுமரங்களோடு பிணைத்துவைத்துத் தீயிட்டு எரிக்கச் செய்தான். இவ்விதம் அரசன் அங்கே கலகத்தலைவர்களை அழித்து இலங்கை மண் முழுவதிலும் (கலகப்) பூண்டு இல்லாமல் செய்தான்."

இவ்விடம் குறிக்கப்பட்ட வேளைக்காரப் படைப்பிரிவு தமிழ் நாட்டு வீரர்களால் அமைக்கப்பட்டது போலும். இந்தக் கலகம் அடக்கப்பட்டதற்குச் சில ஆண்டுகளுக்குப் பிறகு, கி. பி. 1114-ஆம் வருஷம், இந்த விஜயபாஹுவிற்குப் பின் சிங்காதனம் ஏறிய அவன் தம்பி ஜயபாஹுவின் வேளைக்காரனுகச் சேதராயனை மலைமண்டல நாயகன் என்பான் இருந்த செய்தி அவ்வாண்டு கொண்ட ஒரு கல்வெட்டிலிருந்து தெரிகிறது. (இலங்கைச் சாசனம் 509 நெ., ஸிலோன் ஜர்னல் ஆப் ஸயன்ஸ், ஜி பிரிவு, இரண்டாம் வால்யூம், பக்கம் 122). தமிழ் நாட்டுச் சாசனங்களிலே வேளைக்காரர் பெயர் அதிகமாகக் காணப்படுகிறது. சேனையிலே அவர்கள் நம்பிக்கை வாய்ந்த நிலையான பிரிவினர் என்று கருதப்படுகிறது. இலங்கைத் தீவிலே சோழர்களுடைய ஆட்சி நிலவியிருந்த காலத்தில் அவர்கள் அவ்விடம் சேர்ந்தவர்கள், சோழர்களது ஆட்சி மறைந்தபிறகும் அங்கே தங்கியிருந்தனர் போலும்.

மஹாவமிசத்திலே கண்ணுடர் என்று குறிக்கப்பட்டவர் கல்யாண புரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த மேலைச் சாளுக்கியர்களே யாவர். அந்நாளிலே அவர்களுக்கும் இலங்கைத் தீவுக்கும் ஏதோ ஒருவகைத் தொடர்பு இருந்ததென்று கொள்ளலாம். பரமாரவமிசத்துப் புகழ்பாடும் நாகபூர்ப் பிரசஸ்தியில் உதயாதித்தியனுக்குப் பின் பட்டத்துக்கு வந்த அவன் மகன் லக்ஷ்மதேவனைப் பற்றி இருபது சுலோகங்கள்(35-முதல் 54-வரையில்) உள்ளன. (எபி. இந்திகா, இரண்டாம் வால்யூம், 193-4 பக்கங்கள்.) அந்தப் பிரசஸ்தியிலேயே அவன் புகழைக் கூறும் பகுதிதான் மிகப் பெரியது. அவன் கௌட, திரிபுர (சேதி தேசம்), அங்க, கலிங்க நாடுகளை வெற்றி கொண்டானும். இன்னும்;

"கும்பத்திற் பிறந்த முனிவரான அகஸ்தியரைப்போல அவன் தென் திசையை நோக்கிக் கிளம்பியபோது சோழர்களும் மற்றைக் குலத்தாரும் அவனைத் தாழ்ந்து வணங்கி விந்திய மலையாக மாறினார்கள். (46)

"தாமிரவருணி நதியிலே அவனுடைய படையில் இருந்த சாமந்த அரசர்களின் மனைவிகள் விளையாடிக் குளித்த சமயம் அவர்களுடைய இடையிலிருந்த ஒட்டியாணத்திலிருந்து தெறித்து ஆற்றில் சிதறி விழுந்த முத்துக்கள் உலகப்பிரசித்தி பெற்று இன்றைக்கும் பாண்டிய மன்னனுக்கு ஜீவனோபாயத்துக்கு வழிசெய்கின்றன. (47)

"விந்தியபர்வதம் வளர்ந்ததுபோல அவன் எதிரே தோன்றிய அணை, மாருதி கொணர்ந்த மலைச்சிகரங்கள் பலவற்றைக் கொண்டு இராமன் கட்டிய சேது என்று மக்கள் பணிவுடன் கூறியதை அவன் கவனமாகக் கேட்டான். ஆயினும், அலட்சியமாக அவன் தன் படையின் யானைகள்மீதே ஏறி அதைக் கடந்து எதிர்க்கரையை அடைந்தான்."(48)

இதற்குமேல் விவரம் ஏதும் கிடைக்கவில்லை. வேளைக்காரப் படையின் கலகம் சோழர்களுடைய தூண்டுதலாலே நிகழ்ந்ததுபோலும். குலோத்துங்கனுக்கு அதில் ஓர் அளவு சம்பந்தம் இருக்க வேண்டும். ஆனால் முயற்சி பலிக்கவில்லை.

மற்ற முயற்சி பதினைந்து வருடங்களுக்குப் பிறகு, அதாவது விஜயபாஹுவின் ஆட்சியின் நாற்பத்தைந்தாம் ஆண்டு (கி. பி. 1100-ஆம் ஆண்டு) நடந்தது. மஹாவமிசம் அதைப் பின்வருமாறு வருணிக்கிறது. "சோழ (வேந்த)னோடு போர் தொடுக்க வேண்டுமென்று தான் கொண்ட தீர்மானத்தை அரசன் மறக்கவே இல்லை. (தன் ஆட்சியின்) நாற்பத்தைந்தாம் ஆண்டு அவன் யுத்தசன்னதமாகப் படையுடன் கடற்கரைத் துறைமுகப் பட்டினத்தை அடைந்து எதிரியின் வரவை எதிர்பார்த்து அங்கே காத்திருந்தான். ஆனால் சோழ(மன்னன்) வரவில்லை. ஆகவே அரசன் அவனுடைய (அதாவது சோழனுடைய) தூதுவர்களைத் திருப்பி அனுப்பிவிட்டுப் புலத்தி நகரத்துக்குத் திரும்பி அங்கே நீண்ட காலம் வசித்தான்."

மேலேகூறிய இரண்டு சம்பவங்களும் நிகழ்வதற்கான சந்தர்ப்பம், அவற்றின் போக்கு ஆகிய விவரங்கள் நமக்கு இப்போது கிடைக்கவில்லை. ஆயினும் ஒரு விஷயம் மட்டும் தெளிவாகத் தெரிகிறது. சோழர்கள் தங்களுக்கு ஏற்பட்ட தோல்வியையும் அதனுல் நாடு இழந்ததையும் கண்டு சும்மா இருந்து விடவில்லை. பழைய நிலையை மீண்டும் அடைவதற்கு அவர்கள் அவ்வப்போது சந்தர்ப்பம் கிட்டிய போதெல்லாம் முயன்றிருக்கிருர்கள். எனினும், விஜயபாஹு உயிருடன் இருந்த வரையில் அவர்கள் முயற்சி கைகூடி லக்ஷ்யம் சித்திக்க வில்லை. ஆனல் சுமார் கி. பி. 1110-11 ஆம் ஆண்டிலே விஜய பாஹு இறந்ததும் சிங்கள நாட்டுச் சிங்காதனத்தை அடை வதில் போட்டி ஏற்பட்டுத் தாயாதிச் சண்டை உண்டாயிற்று. அப்போது தான் குலோத்துங்கன் எண்ணம் ஈடேறிற்று போலும்.

மஹாவமிசத்தில் காணும் வரலாற்றின்படி, விஜய பாஹு ஐம்பத்தைந்து ஆண்டு ராஜ்யபாரம் தாங்கிய பிறகு இறந்துபோனுன். அப்போது அவன் மகன் விக்கிரமபாஹு தந்தையின் பக்கத்தில் இல்லை. வெகுதூரத்துக்கு அப்பால், தென்கிழக்கில் உள்ள ரோகண நாட்டை ஆண்டு வந்தான். தந்தை இறந்த செய்தி மகனுக்கு எட்டவில்லை. அதை ரகசிய மாகவே வைத்துவிட்டு இறந்த மன்னன் தம்பியான ஜய பாஹு தானே அரசனென்று முடிசூட்டிக் கொண்டான். தன் சகோதரி மகனும் பாண்டிய குலத்தைச் சேர்ந்தவனு மான மானுபரணன் என்பவனை இளவரசனுகவும் நியமித் தான். விக்கிரமாபாஹு இந்த நிலையை ஏற்றுக் கொள்ள வில்லை. சிங்காதானத்தைக் கைப்பற்றத் தன் சிற்றப்பன் ஜய பாஹுவோடு போர்புரிந்தான். இரண்டு ஆண்டுகள் கழித்து அவன் வெற்றி கொண்டு அரசனுனுன் எனப்படுகிறது.

விக்கிரமபாஹுவோ தந்தை உயிருடன் இருந்த காலத் திலேயே ராஜ்யத்தின் ஒரு பகுதியை ஆண்டு வந்திருக்கிருன். அன்றி, பட்டத்துக்குரிய இளவரசன் எனவும் அங்கீகரிக்கப் பட்டிருக்கிருன். இது இலங்கையிலே திருக்கோணமலை ஜில்லா வில் கந்தளாய்க்குப் பக்கத்தில் உள்ள பாலமோட்டை என்னு மிடத்திலிருந்து கிடைத்த ஒரு தமிழ்க் கல்வெட்டால் விளங்கு

கிறது. அரசர் விஜயபாஹு ஆட்சியின் நாற்பத்திரண்டாம் ஆண்டு கொண்ட அக் கல்வெட்டு கந்தளாயான விஜயராஜ சதுர்வேதி மங்கலத்து விஜயராஜ ஈச்வரம் என்னும் சிவன் கோயிலுக்குப் பிராமண ஸ்திரீ ஒருத்தி இறந்துபோன தன் கணவன் ஞாபகார்த்தமாகச் செய்த நிவந்தங்களைத் தெரிவிக்கிறது. அதை ஸ்ரீவிக்கிரம சலாமேகத் தெரிந்த வேளைக்காரர் என்ற பெயரால் அவர்கள் பாதுகாப்பிலே விட்டதாக அந்தக் கல்வெட்டு கூறுகிறது. (எபி. ஸைலாநிகா, நான்காம் வால்யூம், நெ. 24). சலாமேகன் என்பது அரசனது பட்டப் பெயரைக் குறிப்பது என்பதை நாம் அறிவோம். ஆகவே, அப்போதே விக்கிரமபாஹு இளவரசனாக நியமிக்கப்பட்டு விட்டான். இதனால் தந்தைக்குப் பிறகு அவன் சிங்காதனத்தை அடைவதற்காக எடுத்துக் கொண்ட முயற்சியிலே அவனுக்கு நாட்டு மக்களிடையிலும் பெருத்த ஆதரவு இருந்திருத்தல் வேண்டும்.

அதேசமயம் ஜயபாஹுவுக்கும் தன்னுடைய நிலைமையை ஸ்திரப்படுத்திக் கொள்வதற்கு வேண்டிய ஆதரவும் இருந்திருக்கும். அவனோடு வீரதேவன் என்பான் ஒருவன் இலங்கைக்குத் தன் படைகளோடு வந்து போர்புரிந்திருக்கிறான். மகாவம்சத்திலே அவன் ஆர்யதேசீச (ஆர்யதேசத்து ஈசன், அதாவது ஆர்யதேசம் எனப்படும் இந்தியாவிலிருந்து வந்த அரசன் ஒருவன்) என்றும், பலந்தீபம் என்னும் பிரதேசத்தின் ஏகசத்திராதிபதி என்றும் குறிக்கப்பட்டிருக்கிறான். பலந்தீபம் என்பது முதலாம் இராஜராஜன் வெற்றி கொண்டதாக அவனுடைய மெய்க்கீர்த்தியில் காணும் 'முன்னீர்ப் பழந்தீவு பன்னீராயிரம்' அதாவது மால்தீவு என்னும் மலையத்தீவுகளை நமக்கு ஞாபகமூட்டுகின்றன. இதே பிரதேசம் முதலாம் இராஜேந்திர சோழனுடைய மெய்க்கீர்த்தியிலே 'சங்கதிர் வேலைத் தொல் பெருங்காவல் பல்பழந்தீவு' என்று காணப்படுகிறது. இந்தத் தீவுகள் அந்நாளிலே ஒரு தனிப்பிரதேசமாகக் கருதப்பட்டு வந்திருக்கிறது. கொடுந்தமிழ் பேசப்படும் பிரதேசங்களைத் தெரிவிக்கும் பழம் பாடல் ஒன்று நன்னூல் மயிலைநாதர் உரையில் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. அதில் 'கன்னித் தென்கரைக்கட் பழந்தீவம்' என்று இந்தப் பிரதேசம் குறிக்கப்பட்டுள்ளது. இலங்கை

யிலே புதமுத்தாவா என்னும் இடத்திலிருந்து கிடைத்த மற்றொரு தமிழ்க் கல்வெட்டு (எபி. ஸைலாநிகா, மூன்றும் வால்யூம், 302-12 பக்கங்கள்) ஒன்றிலிருந்து ஜயபாஹு ஆட்சியின் எட்டாம் ஆண்டில் மஹாகலாஆன விக்கிரம சலாமேகபுரத்திலே கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் விக்கிரம சலாமேக ஈச்வரமுடையார் கோயிலிலே ஒரு விளக்கு எரிக்கக் குலோத்துங்க சோழன் திருமகளும் பாண்டியன் வீரப்பெருமாள் தேவியுமான சுத்தமல்லியார் நிவந்தம் அளித்த செய்தி தெரியவருகிறது.

முதற் குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் நாற்பத்தொன்பதாம் ஆண்டு எழுபதாம் நாள் கொண்ட தமிழ்ச் சாசனம் ஒன்று மேற்கு கோதாவரி ஜில்லா திராக்ஷாராமத்திலிருந்து கிடைத்துள்ளது. (தெ. இ. சாசனங்கள், நான்காம் வால்யூம், 1227, 1225 நெ. ஆகிய இரண்டும் சேர்ந்தது). இலங்கை அரசனான விக்கிரமபாஹுவின் பிரதானியான உய்யவந்தான் திருவண்ணாமலையன் விஜயபாஹு மாசாத்துநாயன் என்பான் திராக்ஷாராமத்திலே தான் எடுபித்த மஹேச்வரமடத்தில் நாள்தோறும் பதினைந்து தபஸ்விகள் உண்ணுவதற்கு வேண்டிய நிவந்தங்களைச் சூரியகிரகண காலத்தில் அளித்த செய்தியைக் கூறுகிறது, அந்தக் கல்வெட்டு. அதிலே குறிக்கப்பட்ட மடம் அவனால் குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் நாற்பத்து மூன்றாம் ஆண்டிலே அவ்வூரில் நிர்மாணிக்கப்பட்டது. (ஷை 1246 நெ. சாசனம்). அப்போது அவன் அம்மடத்திலே நாள்தோறும் முப்பது தபஸ்விகள் உண்ண வேண்டும் என்று நிர்ணயித்துப் பதினைந்து பேர் உணவுக்கு வேண்டிய நிலங்களை அளித்தான். பாக்கியிருந்த பதினைந்து பேர் உணவுக்கு வேண்டியவற்றை இப்போது அவன் அளித்தான். இந்தத் தர்மத்தைச் செய்தவன் தமிழ் நாட்டைச் சேர்ந்த ஒரு தமிழன். இலங்கை அரசனுடைய பிரதானி. அப்போது இலங்கையில் அரசனாயிருந்தவனுடைய தந்தையின் காலம் முதலே அவன் இலங்கை அரசியலில் ஈடுபட்டிருந்தான். அவன் தெலுங்கு நாட்டுத் திராக்ஷாராமத்திலே சிவதர்மங்கள் பலவற்றைச் செய்திருக்கிறான். அந்நாளிலே திராக்ஷாராமம் வேங்கியை ஆண்டு வந்த சோழமன்னருடைய

பிரதிநிதிகளுக்குத் தலைநகராக இருந்ததென்பதையும் நாம் மறக்கலாகாது. அந்த நிலையில் இலங்கை அதிகாரி அங்கே வந்து தங்கியிருந்த சம்பவம் முக்கியத்துவம் பெறும்.

அவன் அங்கே தங்கியிருந்த சமயத்தையும் நாம் கவனிக்க வேண்டும். முதற் குலோத்துங்கனுடைய குமாரர்களான விக்கிரம சோழனும் பராந்தகனும் அப்போது சோழசிங்காதனத்துக்காகத் தங்களுக்குள் சண்டைபோட்டுக் கொண்டிருந்தார்கள்.(இதை விவரமாகப் பின்னால் கூறுவோம்).ஹொய்சளர், மேலைச்சாளுக்கியர் ஆகியவர்களுடைய ஆதரவோடு போர் புரிந்து வந்த விக்கிரம சோழனுக்கு எதிராகப் போரை நடத்தி வந்த முதற் குலோத்துங்கனுக்கும் அவன் மகன் பராந்தகனுக்கும் உதவுவதற்காகவே அவன் அவ்விடம் வந்திருந்தான்போலும். இலங்கை வேந்தன் சோழமன்னனுக்கு அப்போது அடங்கியவனாக இருந்தால்தான் இந்த நிலை சாத்தியமாகும். அந்தத் தீவின் ஆட்சியை அன்னியரின் ஆதிக்கியத்திலிருந்து விடுவித்த விஜயபாஹுவின் மரணத்துக்குப் பிறகு அவ்விடம் ஏற்பட்ட தாயாதிப்பூசலைக் கவனித்தால் அப்போது சோழர்கள் மறுபடியும் இலங்கை விவகாரத்தில் தலையிட்டு அதனைத் தங்கள் ஆளுகைக்குள் கொணர்ந்து விட்டார்கள் என்று கொள்வது தவறாகாது.

விஜயபாஹுவின் மரணத்துக்குப் பிறகு, கொஞ்சகாலம் இலங்கைத் தீவு அன்னிய ஆதிக்கியத்தின் கீழ் இருந்ததென்பது பராக்கிரமபாஹுவின் தேவனகலக் கல்வெட்டால் விளங்குகிறது. "என் பாட்டனார் விஜயபாஹு மன்னர் சுவர்க்கலோகவாசியானதன் பிறகு நாற்பத்திரண்டு வருஷகாலம் அழிவுற்றுக் கிடந்த அரசையும் மதத்தையும் மறுபடியும் மலரச் செய்வதென்று நான் உறுதிபூண்டிருக்கிறேன்." (எபி. ஸைலாநிகா, மூன்றாம் வால்யூம், பக்கம் 324). இதிலிருந்து விஜயபாஹுவின் காலத்துக்குப் பிறகு நாற்பத்திரண்டு ஆண்டுகள் இலங்கைத்தீவின் அரசியலும் புத்தமதமும் இலங்கை மக்களுக்கு அனுகூலமாக நடைபெறவில்லை என்று பராக்கிரமபாஹு கருதினான் என்பது தெளிவாகும்.

இதே பராக்கிரமபாஹு தான் சில வருஷங்களுக்குப் பிறகு பாண்டியர்களுக்குள்ளே ஏற்பட்ட தாயாதிச் சண்டையில் பராக்கிரம பாண்டியனுடைய கட்சியை ஆதரித்துத்

தமிழ் நாட்டின்மீது படையெடுத்து வந்தவன். தேவனகலச் சாசனத்தில் குறிப்பாகக் காண்பதைக் கொண்டு சோழர்கள் திரும்பவும் இலங்கை அரசியலைக் கைப்பற்றியிருந்தனர் என்று தீர்மானிக்கலாம்போலும். 'பூமருவிய பொழிலேழும்' என்று தொடங்கும் இரண்டாம் குலோத்துங்க சோழன் மெய்க்கீர்த்தியில் அவன் வீணைக்கோடிச் சிங்களவரிடமிருந்து திறை பெற்று வந்தான் என்று காணப்படுகிறது. (தே. இ. சாசனங்கள், ஐந்தாம் வால்யூம்,நெ. 645). அவனுடைய ஆசிரியரும் ஆஸ்தான கவிஞருமான ஒட்டக்கூத்தர் அவன்மீது இயற்றிய குலோத்துங்கன் பிள்ளைத்தமிழிலும் இதேசெய்தி(64-ஆம் பாடலில்) குறிக்கப்பட்டுள்ளது. இராமாயணகாலத்துத் தென் இலங்கை வேந்தனான இராவணன் வீணைக்கொடியைக் கொண்டிருந்தான் என்றும், அவனை வீணைக்கொடியோன் என்றும் கம்பநாடர் தம் இராமாயணத்தில் கூறிச் செல்கிறார். இராவணனுக்கு வீணைக்கொடி என்னும் விவரம் வால்மீகி எழுதிய ராமாயணத்தில் காணப் பெறவில்லை என்பதும் இவ்விடம் குறிப்பிடத்தக்கது. தன்னுடைய காலத்திலே சிங்களவர்களுக்கு வீணைக்கொடியிருந்ததை மனத்தில் கொண்டே கம்பர் தம்முடைய காவியத்தில் அவ்விதம் கூறிச் சென்றார்போலும்.

மூன்றும் பராந்தகனும் விக்கிரம சோழனும்

முதற் குலோத்துங்க சோழன் பஞ்சத் திராவிடங்களோடு ஆந்திர தேசத்தையும் சேர்த்து ஐம்பது ஆண்டுகள் அரசு புரிந்துவந்தான் என்று பிற்காலத்துச் சாசனங்கள் கூறுகின்றன. (மல்லபதேவனுடைய பிட்டாபுரம் சாசனம்: எபி.இந்திகா, நான்காம் வால்யூம், 33 நெ. 22-24 சுலோகங்கள்). அவனுடைய ஆட்சியின் நாற்பத்தொன்பதாம் ஆண்டு முந்நூற்று முப்பத்து மூன்றும் நாள் கொண்ட கல்வெட்டும், ஐம்பதாம் ஆண்டு கொண்ட கல்வெட்டுகளும் கிடைத்துள்ளன. (1923-ஆம் ஆண்டு 284 நெ, 1920-ஆம் ஆண்டு 520நெ : தே. இ. சாசனங்கள், ஏழாம் வால்யூம், 763 நெ.) பழைய புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்தில் உள்ள இடையாத்தூரிலிருந்து அவனுடைய ஆட்சியின் ஐம்பத்திரண்டாம் ஆண்டு கொண்ட கல்வெட்டு ஒன்றும் (புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்துச் சாசனங்கள், நெ. 127) கிடைத்துள்ளது. சோழ சிங்காதனத்துக்குப் போட்டியிட்டு அரசைக்

கைப்பற்றிய அவனுடைய ஆட்சியின் முடிவிலும் அதே போன்ற மற்றொரு போட்டி நடைபெற்றது. ஆனால், இந்தத் தடவை அவ்விதம் போட்டியிட்டவர்கள் அவனுடைய குமாரர்களேயாவர்.

அவன் சோழமன்னனான இரண்டாம் இராஜேந்திர சோழனுடைய மகள் மதுராந்தகியை மணந்திருந்தான். அவளே பட்டமகிஷிகளுள் மூத்தவள். அவள்மூலம் அவனுக்கு ஏழு பிள்ளைகள் பிறந்தனர். (எபி. இந்திகா, ஆறாம் வால்யூம், 335-ஆம் பக்கம்.) கி. பி. 1076-77-ஆம் ஆண்டில் விஜயாதித்தியன் இறந்த பிறகு அந்த இராஜகுமாரர்கள் ஒருவன் பின் மற்றொருவனாக வேங்கி நாட்டிலே தந்தைக்குப் பிரதிநிதியாக அரசு செலுத்திவந்திருக்கிறார்கள். அவர்களுள் பராந்தகன் எனப்பட்டவனும் ஒருவன். சகாப்தம் 1033, அதாவது கி. பி. 1111-12-ஆம் ஆண்டில் குலோத்துங்கன் அவனைப் பட்டத்துக்கு உரியவனாகக் கருதிப் பரகேசரிவர்மன் என்ற விருதுடன் அவனுக்கு முடிசூட்டி நாட்டின் நிர்வாகத்திலும் அவனை ஈடுபடுத்தினான். பூமங்கைவளர அல்லது புவிமங்கைவளர என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய அவன் சாசனங்கள் கிடைத்துள்ளன. அவை அவனுடைய ஆட்சியின் ஒன்பதாம் ஆண்டுவரையில் கிடைக்கின்றன. தமிழ்நாட்டில் கிடைப்பன அதிகம் இல்லை. ஆயினும், தெலுங்கு நாட்டிலே அதிகமாக உள்ளன. இதனால் அவனும் தன் தந்தை முதற் குலோத்துங்கனுடைய ஆட்சியின் கடைசி ஆண்டான கி. பி. 1119-20 ஆம் ஆண்டுவரையில் அரசு புரிந்திருக்கிறான் என்பது தெளிவாகும். (இந்த விஷயங்கள் சோழ பராந்தகதேவனுடைய ஒன்பதாம் ஆண்டு கொண்ட இரண்டு கல்வெட்டுகள் என்ற கட்டுரையில் விரிவாக ஆராயப்பட்டுள்ளன. ஸ்ரீ. க. அ. நீலகண்ட சாஸ்திரிகளோடு கூட்டாக எழுதப்பெற்ற அக்கட்டுரை எபிகிராபியா இந்திகாவில் வெளியாகும்).

ஆனால் குலோத்துங்கனுக்குப் பிறகு சோழ சிங்காதனத்திலே அவனுடைய மற்றொரு மகனான விக்கிரம சோழனே அமர்ந்து அரசாண்டான். இந்தப் பராந்தகன் அரசாளவில்லை. விக்கிரம சோழன் கி. பி. 1118-ஆம் ஆண்டு ஜூன் மாதம் இருபத்தொன்பதாம் தேதியை ஒட்டிச் சோழ

சிங்காதனம் ஏறியதாகக் கொண்டு தன் ஆட்சியின் ஆண்டு களைக் கணக்கிட்டிருக்கிறான். ஆனால் சகாப்தம் 1033, அதாவது கி. பி. 1111-12-ஆம் ஆண்டில் சோழ சிங்காதனம் ஏறிய பராந்தகனே விக்கிரமசோழன் சிங்காதனம் ஏறியதாகக் கணக்கிடும் கி. பி. 1118-ஆம் ஆண்டுக்குப் பின்னும், ராஜ்யத் தைத் தன்னுடைய ஆட்சியின் ஒன்பதாம் ஆண்டிலே, அதா வது கி. பி. 1119-20-ஆம் வருஷத்திலே, அரசு புரிந்திருக் கிறான். இவ்விதம் குலோத்துங்கனுடைய ஆட்சியின் கடைசி இரண்டு வருஷங்களிலே அவனுடைய குமாரர்களான விக் கிரம சோழனும் பராந்தகனும் பரகேசரிவர்மன் என்ற பட் டப் பெயருடன் சோழ ராஜ்யத்தை அரசுபுரிந்தனர் என்ப பதைக் காண்கிறோம்.

இந் நிலை அசாதாரணமானது. அதை ஒரே ஒரு வழியில் தான் விளக்கிக் கூறமுடியும். பராந்தகனைப் பட்டத்துக்கு உரியவனாகக் கொண்டு தந்தை முடிசூட்டியதை விக்கிரம சோழன் ஒப்புக்கொள்ளவில்லை. முறைப்படி அந்த உரிமை தனக்கேயாகும் என்று அவன் கொண்டான். அவ்விதமாயின் அவன் தன் உரிமையைச் சுலபமாக ஸ்தாபித்துச் சமாதான மான வழிகளில் தன் லட்சியத்தை அடைந்து வெற்றி கொண்டிருக்க முடியாது. சகோதரர்கள் இருவருக்கிடையே நிச்சயம் சோழ சிங்காதனத்துக்காகத் தாயாதிச் சண்டை நிகழ்ந்திருத்தல் வேண்டும்.

இந்தச் சண்டையின் பயனாக நாட்டின் அமைதியான வாழ்க்கை நிலை குலைந்ததென்பது கொங்கு நாட்டுத் தலைநகரங் களுள் ஒன்றான கருவூரிலிருந்து கிடைக்கும் சாசனத்திலிருந்து தெளிவாகிறது. விக்கிரம சோழனுடைய ஆட்சியின் மூன்றாம் ஆண்டு, அதாவது கி. பி. 1120-21-ஆம் வருஷம், கொண்ட அக் கல்வெட்டு, வீர சோழ மண்டலத்து வெங்கால நாட்டுக் கருவூர் திருவானிலை யாளுடைய நாயனார் கோயிலிலிருந்த கூத்தர் (அதாவது நடராசர்) திருமேனி (விக்கிரகம்) கலகத்தில் சேமந் தப்பினமையில் அக்கோயில் காணியுடைய சிவப்பிராமணர் கள் ஆராய்ந்து தேடி அத் திருமேனியைத் திரும்பவும் கண்டு பிடித்துக் கோயிலில் பிரதிஷ்டை செய்து அதன் வழிபாட்டுக் குரிய ஏற்பாடுகளைச் செய்த விவரத்தைத் தெரிவிப்பதாகும்.

(தே. இ. சாசனங்கள், நான்காம் வால்யூம், 387-நெ. இந்தத் தொகுதியின் 703-நெ. சாசனம்). இன்னும் தஞ்சாவூர் ஜில்லாவிலே முதற் குலோத்துங்கனுடைய ஆட்சியின் நாற்பத்தேழு, நாற்பத்தொன்பதாம் ஆண்டுகள் கொண்ட கல்வெட்டுகள் சிலவற்றிலிருந்து (உதாரணமாகத் திருச்சேறை, கோனேரிராஜபுரம் ஆகிய இடங்களிலிருந்து கிடைத்து முறையே 1909-ஆம் ஆண்டு 620, 647 நெ. கொண்ட சாசனங்கள். ஸ்ரீ.வி. ரங்காசாரியார் தொகுத்த சென்னை ராஜதானியில் கிடைத்த சாசனங்களின் கிராமவாரி அட்டவணையில் தஞ்சாவூர் நெ. 74, 1219-ஆகியவற்றையும் காண்க) இரண்டு வருஷங்களுக்கு மேலாக வரி செலுத்த முடியாமல் கிராமங்களைத் துறந்து வெளியேறிய குடிமக்களின் நிலங்களைக் கைப்பற்றிக் கோயில்களுக்கு விற்றுக் கொடுத்த செய்தியும் தெரியவருகிறது.

இத்தச் சந்தர்ப்பத்தில் திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் உள்ள பெரம்பலூர் தாலூகா ஆடுதுறையிலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டு முக்கியமானது (1913-ஆம் ஆண்டு நெ-35). பராக்கிரம பாண்டியன் என்பானுடைய ஆட்சியின் நான்காம் ஆண்டு கொண்ட அக் கல்வெட்டு, விக்கிரம சோழனுடைய ஆட்சியின் நான்காம் ஆண்டில் அந்தக் கிராமத்துக் குடிமக்களான பள்ளிகளுக்கு விசேஷ சந்தர்ப்பம் ஒன்றில் அளிக்கப்பட்ட சில உரிமைகளோடு வேறு சிலவற்றையும் சேர்த்து ஊர்ஜிதம் செய்த விவரத்தை எடுத்துக் கூறுகிறது.

'பெரியவடுகன் போர் நடந்த சமயம் தேவதைகள், நாயன்மார் ஆகியோர்களுடைய திருமேனிகளை (விக்கிரகங்களை)த் தோரசமுத்திரத்துக்கு (அதாவது மைசூர் ராஜ்யத்தில் உள்ள ஹளெபீடு என்னும் துவாரசமுத்திரத்துக்கு)க் கொண்டு போகும் போது (பள்ளிகள்) இடைமறித்து அந்த விக்கிரகங்களை மீட்டுக் கோயிலிலே திரும்பவும் பிரதிஷ்டைசெய்து அவற்றின் வழிபாட்டுக்கு வேண்டிய செலவுகளை ஏற்றுக் கொண்டு ஏற்பாடுகளைச் செய்தார்கள். தங்கள் சமூகப்பொறுப்பாக அதை மேற்கொண்ட அவர்களுக்குக் கைம்மாறாக அந்தச் சமூகத்தைச் சேர்ந்தவர்களுக்குச் சந்நிதியிலே பட்டுப்பரிவட்டம் சாத்தி அருளப்பாடு செய்து மரியாதை வழங்கவேண்டும் என்று நிர்ணயிக்கப்பட்டதாம்.' (சாசன இலாகாவின் 1913-ஆம்

ஆண்டு அறிக்கை, 46-7 பாராக்கள்.) இந்த ஏற்பாட்டைப் பெருமாள் குலோத்துங்க சோழதேவர் அங்கீகரித்து அனுமதித்தார் என்ற செய்தியும் காணப்படுகிறது. இதனால் விக்கிரகங்கள் அகற்றப் பெற்றதற்குப் பிறகு வெகு சீக்கிரமாகவே குலோத்துங்க சோழனுடைய ஆட்சிக் காலத்துக்கு உள்ளாகவே மீட்கப்பட்டனவென்பது தெரியவரும்.

சோழநாட்டிலே வந்து போர் புரிந்த பெரியவடுகன் யார் என்பது சாசனத்திலிருந்து தெளிவாகத் தெரியவில்லை. ஆயினும் தோரசமுத்திரத்தின் பெயர் காணப்படுவதிலிருந்து ஹொய்சளர்களும் அந்தப் படையெடுப்பிலே சம்பந்தப் பட்டிருந்தார்கள் என்பது தெரிகிறது. அப்போது ஹொய்சள மன்னனாக இருந்த பிட்டிகதேவன் விஷ்ணுவர்த்தன் 'தலைக்காடு கொண்டவன்' என்ற விருதைப் பெற்றிருந்தான். முதல் முதலாக அது அவனுடைய சாசனங்களில் கி. பி. 1117-ஆம் ஆண்டுதான் காணப்படுகிறது. (எபி. கர்நாடிகா, மூன்றாம் வால்யூம், மளவல்லி 31; நான்காம் வால்யூம், எடதொரெ 6-சாசனங்கள்). அதே ஆண்டில் அவன் கொங்குவரையில் கங்கவாடி தொண்ணூற்றாறாயிரத்தையும் தலைக்காடு, குவலாலம் (கோலார்) ஆகிய இடங்களிலிருந்து அரசு செலுத்தி வந்தான் என்றும் வருணிக்கப்படுகிறான் (ஷை நான்காம் வால்யூம், சாம்ராஜ்நகர் 83). கங்கவாடி அதற்கு முன்னதாகச் சோழர்களுடைய ஆட்சியில் அடங்கிச் சோழஸாம்ராஜ்யத்தின் ஒரு மண்டலமாக நிர்வகிக்கப்பட்டு வந்திருக்கிறது. அதை ஹொய்சளருக்காக அவர்களுடைய தண்டநாயகனான கங்கராஜன் என்பான் தாக்கி வெற்றி கொண்டு கைப்பற்றியிருக்கிறான். இது ஹொய்சள சாசனங்களிலே விரிவாக வருணிக்கப்பட்டுள்ளது. (ஷை மூன்றாம் வால்யூம், சிரவணபெளெகொள 240 - பழைய எண் 90.)

கங்கவாடியில் அடைந்த வெற்றியோடு ஹொய்சளர்கள் நின்று விடவில்லை. அதன் எல்லையைத் தாண்டி அப்பாலும் படைநடத்திச் சென்றார்கள். அந்தக் காலத்து ஹொய்சள சாசனங்களிலே விஷ்ணுவர்த்தனன் ஆட்சிக்குட்பட்ட பிரதேசத்தின் தென்பகுதி கொங்கு, சேரம், ஆனைமலை ஆகியவைகளை உள்ளடக்கியிருந்ததெனக் கூறப்பட்டுள்ளது. விஷ்ணு

வர்த்தனன் மதுரையைத் தன் உள்ளங்கையிலே வைத்துக் கசக்கினனும். (ஷை ஆரும் வால்யூம், சிக்மகளூர் 160.) அவனுடைய வெற்றிப்படை இராமேச்வரம் வரையில் கூடச் சென்றதாம். (சாசன இலாகாவின் 1913-ஆம் ஆண்டு அறிக்கை, 47 பாரா.)

இவ்விதம் ஹொய்சளர்கள் சோழநாட்டுள் புகுந்து போரிட்டுச் சூறையிட்டது தென்பகுதியோடு நின்று விடவில்லை. கிழக்கு முகமாகவும் அவர்கள் தங்கள் போர்ப்படையை நடத்திச் சென்றிருக்கிறார்கள். அதன் பயனாகத் தேரேயூர், கோயத்தூர் (இப்போது சித்தூர் ஜில்லாவில் உள்ள லட்டிகம் ஆகும்) ஆகிய இடங்கள் விஷ்ணுவர்த்தனன் ஆட்சிக்குட்பட்டன. அவன் காஞ்சீபுரத்தையும் கைப்பற்றி அதைக் கொண்டாடுவதற்காகக் காஞ்சிகோண்டவன் என்ற விருதையும் தரித்துக் கொண்டான். அவன் 'காஞ்சிபுரத்தையும் மதுரையையும் கைப்பற்றிய பிறகு ஜனநாதபுரத்தையும் சுட்டு எரித்தான்' என்று அவனுடைய சாசனங்கள் கூறுகின்றன. (எபி. கர்நாடிகா, ஆறும் வால்யூம், சிக்மகளூர் 160). அன்றி, அவன் ஆந்திர அரசன் ஒருவனைக் கொன்றதாகவும் புகழப்படுகிறான். (மைசூர் சாசனங்கள், பக்கம் 123). அவன் எரியூட்டிய ஜனநாதபுரம் என்பது வேங்கி நாட்டின் தலைநகராக விளங்கிய திராக்ஷாராமத்தின் மறுபெயரேயாகும்.

திராக்ஷாராமத்திலிருந்து பராந்தகனுடைய ஆட்சியைச் சேர்ந்தனவாகச் சுமார் அரை டஜன் சாசனங்கள் கிடைத்துள்ளன. (தெ. இ. சாசனங்கள், நான்காம் வால்யூம், நெ. 1270-1274. இன்னும் 1275-A). அவற்றிலே இவனுடைய ஆட்சியின் ஆண்டு குறிக்கப்படவில்லை. பராந்தக தேவனுக்கு விசுவாசமாக இருப்பதாகச் சிலர் ஆணையிட்டு உறுதி கூறிய விவரத்தை எடுத்துரைக்கின்றன, அந்தக் கல்வெட்டுகள். அவர்கள் அவ்விதம் ஆணையிட்டுச் சபதம் எடுத்துக் கொள்ளவேண்டிய சந்தர்ப்பம் என்னவென்பது குறிக்கப்பெறவில்லை. எனினும், அவற்றில் ஒரு விஷயம் கவனிக்கத்தக்கது. அவர்கள் பராந்தக தேவனுக்கு விசுவாசமாக இருப்பதாகக் கூறுகிறார்களேயல்லாமல் சோழ ஸாம்ராஜ்யத்துக்கோ சிங்காதனத்துக்கோ அல்லது சாளுக்கிய ராஜ்யத்துக்கோ சிங்காதனத்துக்கோ அவ்விதம் விசுவாசமாக இருப்பதாகத் தெரிவிக்கவில்லை.

இவற்றைக் கவனிக்கும்போது அந்நாளிலே பராந்தகனுக்கு உள்ள உரிமைகளைப்போன்ற சம உரிமைகள் பெற்ற வேறு ஒருவன் இருந்தானென்றும், ஆயினும் இவ்விதம் விசுவாசப் பிரதிஜ்ஞை எடுத்துக்கொண்டவர்கள் அவனுக்கு எதிராகப் பராந்தகனையே ஆதரித்து நின்றவர்கள் என்றும் கொள்ளக் கூடும்.

இன்னும், காஞ்சீபுரத்தைக் கைப்பற்றி ஜனநாதபுரத்தைச் செந்தழல் கொளுத்திய புகழை ஹொய்சள மன்னனை விஷ்ணுவர்த்தனனுடைய தண்டநாயகர்களேயன்றி, அதே காலத்தில் கல்யாணபுரத்திலிருந்து அரசு செலுத்திய அரசனை ஆறும் விக்கிரமாதித்தியனுடைய தண்டநாயகர்களும் பகிர்ந்து கொள்ளுகிறார்கள். ஆரம்ப காலத்திலிருந்தே ஹொய்சளர்கள் மேலைச்சாளுக்கியர்களுடைய ஆதிக்கியத்துக்கு அடங்கிய சிற்றரசர்களாக இருந்துவந்தார்கள். இப்போதும் அப்படியேதான் இருந்தார்கள். ஆகவே அவர்கள் நடத்திய போர் தங்களுடைய பேரரசர்களான மேலைச் சாளுக்கியர்களுடைய ஆதரவிலும் மேற்பார்வையிலும் நடைபெற்றதாக இருத்தல் வேண்டும்.

இதைக்கொண்டு கவனித்தால் தமிழ் நாட்டின் மத்திய பாகத்திலே போர் புரிந்ததாக ஆடுதுறைக் கல்வெட்டில் குறிக்கப் பெற்றிருக்கும் பெரியவடுகன் மேலைச் சாளுக்கிய மன்னனை ஆறும் விக்கிரமாதித்தியனாகவே இருத்தல் வேண்டும் என்பது தெளிவாகும்.

இந்தக் காலத்திலே சோழ ஸாம்ராஜ்யத்தின் வட பகுதியில் நடந்த போரின் விவரம் நமக்குக் கிடைக்கவில்லை. ஆயினும் ஒன்று தெரிகிறது. அந்தப் போரின் பயனாக அதன் முடிவில் தெலுங்கு நாடு முழுவதும் விக்கிரமாதித்தியன் வசம் ஆகியது. இது அந்நாட்டிலே கிடைக்கும் அவனுடைய கல்வெட்டுக்களினின்றும் தெளிவாகிறது.

இவ்விதம் சாளுக்கிய விக்கிரமாதித்தியனும் அவன் சிற்றரசனை ஹொய்சள விஷ்ணுவர்த்தனனும் தங்களுக்குள்ளாகவே நிர்ணயித்துக் கொண்டு வடக்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் படையெடுத்து வந்து சோழ நாடு முழுவதையும் விஜயம் செய்தார்கள்.

இதே சமயத்தில் தான் விக்கிரம சோழன் சிங்காதனம் தனக்கே உரியதென்று கூறி அதை அடைவதற்காகத் தன் சகோதரனும் மாற்றாந்தாய் வயிற்றில் பிறந்தவனுமான பராந்தகனோடு போரிட்டுக் கொண்டிருந்தான். தானே பட்டத்துக்கு வாரிசு என்று அவன் அறிவித்த பிறகே இந்தப் படையெடுப்புகள் நடந்தனவென்றும் கூறலாம். குண்டூர் ஜில்லாவில் உள்ள நிடுப்ரோலுவில் சோமேச்வர ஆலயத்தின் முன்னே காணும் ஒரு தூணில் விக்கிரம சோழனுடைய கல்வெட்டு ஒன்று (தே. இ. சாசனங்கள், ஆறாம் வால்யூம், 123 நெ.) பொறிக்கப்பட்டுள்ளது. திரிபுவன சக்கரவர்த்தி விக்கிரம சோழனுடைய ஆட்சியின் பதினேழாம் ஆண்டுக்குச் சரியான சகாப்தம் 1054-ல் வெலநாண்டி கோங்காவின் மாதுலனும் தண்டாதிபனுமான மாராய பண்டன் என்பான் இக்ஷுப்பள்ளியில் எழுந்தருளியிருக்கும் கோங்கேச்வரர் ஆலயத்துக்கு விளக்கு எரிக்கவும் வேறு நிவந்தங்களுக்கும் தானம் அளித்த செய்தியைக் கூறுகிறது. அதன்படி விக்கிரம சோழன் சகாப்தம் 1038அதாவது கி.பி. 1115-16-ஆம் ஆண்டு பட்டத்துக்கு வந்தவன் என்பது ஆகும். இது அவன் ஆட்சியின் ஆரம்பகாலமாகப் பொதுவாகக் கொள்ளப்பட்டுவரும் 1118-ஆம் வருஷத்துக்கு மூன்று ஆண்டுகள் முற்பட்டதாகும்.

சோழ சிங்காதனத்துக்காக இவ்விதம் பிள்ளைகள் இருவரும் சண்டை போட்டு வந்த சமயம் குலோத்துங்கனும் உயிரோடு இருந்திருக்கிறான். இரு குமாரர்களுள் அவன் யாரை ஆதரித்தான் என்பது வெளிப்படையாகத் தெரியவில்லை. ஆயினும் அவன் ஏற்கெனவே இளவரசுப் பட்டம் கட்டி இராஜ்யபாரத்தில் ஈடுபடுத்திய பராந்தகனை ஆதரித்து நின்றிருப்பான் என்று கொள்வதே இயற்கை. பராந்தகனுடைய சாசனங்களும் இந்நிலையையே தெளிவாக எடுத்துணர்த்துகின்றன. அவ்விதமாயின் விக்கிரம சோழன் தன் லட்சியம் பூர்த்திபெறுவதற்குச் சகோதரன் பராந்தகனோடு மட்டுமல்லாமல் தந்தையான குலோத்துங்க சோழனோடும் போரிட்டிருத்தல் வேண்டும். தந்தையின் ஜீவதசையிலேயே அவன் வெற்றி கொண்டதை நோக்கினால் அவனுக்கு நாட்டிலே பலம் பொருந்தியவர்களும் நல்ல செல்வாக்குள்ளவர்களுமான ஒரு

சாரரின் ஆதரவோடு மட்டுமல்லாமல் சோழர்களுக்குச் சம மான அல்லது அவர்களைக் காட்டிலும் அதிகப்பலம் வாய்ந்த வேற்றரசு ஒன்றன் ஆதரவும் கிட்டியிருத்தல் அவசியம் எனக் கொள்ளலாம். அவன் குலோத்துங்கனுக்குச் சோழ ராஜ குமாரியான மதுராந்தகியின் வயிற்றில் பிறந்த மகன் அல்ல; ஹொய்சள அரசிளங்குமரி ஒருத்தியின் வயிற்றில் பிறந்தவன். இது குலோத்துங்கசோழன் உலாவிலிருந்து தெரிகிறது. (இரண்டாம் இராஜாதிராஜனுடைய பல்லவராயன்பேட்டைக் கல்வெட்டைப் பற்றிய ஒரு குறிப்பு என்ற கட்டுரையில் விவரமாக ஆராயப் பட்டுள்ளது. ஸ்ரீ க. அ. நீலகண்ட சாஸ்திரிகளுடன் கூட்டாக எழுதப்பெற்ற அக்கட்டுரை எபி. இந்திகாவில் வெளிவரும்.)

"வேற்றார்
விரும்பரணில் வெங்களத்தீ வேட்டுக் கலிங்கப்
பெரும்பரணி கொண்ட பெருமான்—தரும் புதல்வன்
கொற்றக் குலோத்துங்க சோழன் குவலயங்கள்
முற்றப் புரக்கு முகில்வண்ணன்—போற்றுவரை
இந்து மரபில் இருக்குந் திருக்குலத்து
வந்து மனுகுலத்தை வாழ்வித்த—பைந்தளிர்க்கை
மாதர்ப் பிடிபெற்ற வாரணம்அவ் வாரணத்தின்
காதற் பெயரன் களகளபன்"

(கண்ணிகள் 28-31)

அதனால் விக்கிரம சோழன் சிங்காதனம் ஏறியதாகக் கணக்கிடப்படும் நாளுக்குச் சிறிது முன்னதாக, ஹொய்சள மன்னனை விஷ்ணுவர்த்தனன் தன் பேரரசனும் முதற் குலோத்துங்க சோழனுடைய பரம வைரியுமான மேலைச் சாளுக்கிய வேந்தன் ஆறும் விக்கிரமாதித்தியனுடைய ஆதரவும் உதவியும் பெற்றுச் சோழநாட்டின் தென்பகுதி வடபகுதி போன்ற பல இடங்களிலும் பிரதானமாக நின்று போரிட்டு வெற்றி கொண்டது, விக்கிரம சோழனைச் சிங்காதனத்தில் அமர்த்துவதற்காகவே போலும். அதுவும் உறவு முறையால் உந்தப்பட்டதாக இருக்கலாம். இன்னும், இந்தப் போரின் பயனைச் சோழர்கள் மேற்கே கங்கவாடியையும் வடக்கே வேங்கியையும் இழந்தனர். அவற்றை முறையே ஹொய்சளர் களுக்கும் மேலைச்சாளுக்கியர்களுக்கும் அவர்கள் தனக்கு

உதவியதற்காக விக்கிரம சோழன் கொடுக்க வேண்டி நேர்ந்தது போலும்.

தென்திருவாங்கூர்ப் பகுதியில் பின்வரும் தமிழ்ப் பாடல் ஒன்று சாதாரணமாக வழங்கிவருகிறது.

எத்திசையும் புகழ்படைத்த கொல்லம் தோன்றி
இருநூற்றுத் தொண்ணூற் றிரண்டாம் ஆண்டு
* * *
தத்திவிழும் பறளியாறு அணையும் தள்ளித்
தமிழ்ப்பாண்டி ராஜசிங்கம் தனையும் வென்று
கொத்தவரும் பூஞ்சோலை நாஞ்சில் நாடும்
கோட்டாறும் கூபகர்கோன் கொண்டநாளே"

(டாக்டர் கே. கே. பிள்ளை, எழுதிய சூசீந்திரம் கோயில், பக்கம் 30)

கொல்லம் இருநூற்றுத்தொண்ணூற்றிரண்டாம் ஆண்டில் கூபக அரசன் ஒருவன் பாண்டிய ராஜஸிம்ஹனை வெற்றி கொண்டு நாஞ்சில் நாட்டையும் கோட்டாற்றையும் கைப் பற்றினான் என்று கூறுகிறது இந்தப் பாடல். கோட்டாற்றுக் கோட்டையைக் குலோத்துங்கன் பலப்படுத்தி அவ்விடத்திலே ஒரு நிலைப்படையை நிறுவினான் என்பதை நாம் அறிவோம். பாண்டிய மன்னனான ஜடாவர்மன் பராந்தக பாண்டியன் என்பான் விக்கிரம சோழனோடு தெலுங்கவீமனுடைய குளம் (அதாவது இப்போது கொல்லேறு ஏரிக்குப் பக்கத்தில் ஏலூரு என்று வழங்கப்பெறும் கொலனு) என்னும் இடத்தையும் தென்கலிங்கத்தையும் வென்று அடிப்படுத்தினான் என்று அவனுடைய மெய்க்கீர்த்தி தெரிவிக்கிறது. (திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் ஸீரீஸ், முதல் வால்யூம், 15-பக்கம்). அவன் கூபகர்கோன் மகளை மணந்து கொண்டவன் என்பதும் அம்மெய்க்கீர்த்தியிலிருந்தே தெரியவருகிறது. குலோத்துங்கன் அமைத்த வலிமையான பாதுகாப்பையும் மீறிக் கூபகர்கோன் சுதந்திரத்தை நிலைநிறுத்த முயன்றது விக்கிரம சோழனுடைய கிளர்ச்சியின் ஒரு பகுதியே போலும்.

## இரண்டாம் குலோத்துங்கனும் இரண்டாம் இராஜராஜனும்

விக்கிரம சோழனுக்குப் பிறகு இரண்டாம் குலோத்துங்கன் சிங்காதனம் ஏறினான். பொதுவாக அவனை விக்கிரம

சோழன் மகன் என்றே கொள்வர். அவனுடைய செல்லூர்ச் செப்பேடுகளும் அப்படியே கூறுகின்றன. (தே.இ. சாசனங்கள், முதல் வால்யூம், 39நெ; இந்தியன் ஆண்டிகுவரி, பத்தொன்பதாம் வால்யூம், பக்கம் 427). ஆயினும் உண்மையில் அவன் விக்கிரம சோழனுடைய பெயரனே. பெண் வயிற்றுப் பேரன். 'புத்திரீகா புத்திரன்' என்றபடி பின்னல் மகனுக ஸ்வீகரிக்கப்பட்டவன் போலும். இது இரண்டாம் இராஜாதிராஜன் காலத்தைச் சார்ந்த பல்லவராயன்பேட்டைக் கல்வெட்டிலிருந்து நன்கு விளங்குகிறது. (இக் கல்வெட்டு பற்றி மேலே குறித்துள்ள கட்டுரையில் இது விவாதிக்கப்பட்டுள்ளது). 'விக்கிரம சோழன் பெயரனுர் நெறியுடைப் பெருமாள் திருமகனுர் எதிரிலிப் பெருமாள்' என்று சாசனத்தில் குறிக்கப்பட்டிருப்பவன் இரண்டாம் குலோத்துங்கனே யாவன். அவன் மகுடாபிஷேகமே இராஜாதிராஜன் முடிசூட்டுக்கு ஓர் உதாரணமாக அமைந்திருந்தது என்பது 'முன்னுளிலே காரியம் இருந்தபடி வி[சாரணை] செய்து' என்று சாசனத்தில் வரும் பகுதியால் விளங்கும்.

குமார குலோத்துங்கன் என்று தமிழ் இலக்கியங்களில் குறிக்கப்படுபவனும் இரண்டாம் குலோத்துங்கனே போலும். அவன் தன் இளமைப்பருவம் முதல் பாட்டன் விக்கிரம சோழனிடத்திலேயே வளர்ந்து, ஆஸ்தானக் கவிஞரான ஒட்டக்கூத்தரிடம் மாணவனுக இருந்துவந்தான்.

> " ஆடுங் கடைமணி நாவசை
>     யாமல் அகிலமெல்லாம்
> நீடுங் குடையிற் றரித்த
>     பிரானென்று நித்தநவம்
> பாடுங் கவிப்பெருமா ளெட்டக்
>     கூத்தன் பதாம்புயத்தைச்
> சூடுங் குலோத்துங்க சோழனென்
>     றேயெனைச் சொல்லுவரே "

என்று முற்பகுதி கவிஞராலும் பிற்பகுதி அரசனுலும் பாடப் பெற்றதாகத் தமிழ் நாவலர் சரிதையில் உள்ள பாடல் (132) இதை நன்கு விளக்கும்.

தஞ்சாவூர் ஜில்லாவிலே திருமயானத்திலிருந்து கிடைக்கும் மூன்றும் குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் ஒன்பதாம் ஆண்டு கொண்ட கல்வெட்டு ஒன்று (1925-ஆம் ஆண்டு 259 நெ.) பெரியதேவர் நாளையிலே மூன்றும் ஆண்டு கொமர குலோத்துங்க சோழச்சதுர்வேதி மங்கலத்திலே விலை கொண்டு திருக்கடவூர்த் திருமயானம் உடையாருக்கு விட்ட நிலத்தின் மீது உள்ள கடமை குடிமை வரிகளை நீக்கி மணல்குடியான உத்தம சோழச் சதுர்வேதி மங்கலத்துப் பெருங்குறிப் பெருமக்கள் அளித்த உத்தரவைத் தெரிவிப்பது. அதிலே பெரிய தேவர் என்று குறிக்கப்பெற்றிருப்பவன் அவனுக்கு முன் அரசாண்ட இரண்டாம் இராஜாதிராஜனுகவே இருத்தல் வேண்டும். அதே ஜில்லா திருவீழிமிழலையில் கிடைக்கும் இராஜகேசரிவர்மனுன திரிபுவன சக்கரவர்த்திகள் என்பானுடைய சிதிலமான கல்வெட்டு (1908-ஆம் ஆண்டு 420 நெ.) ஒன்று கொமரன் குலோத்துங்க சோழச் சதுர்வேதி மங்கலத்தைப் பற்றிக் குறிக்கிறது. அந்தச் சாசனத்தை அளித்த இராஜகேசரிவர்மனும் இரண்டாம் இராஜாதிராஜனே என்பர். இவற்றுல் இரண்டாம் இராஜாதிராஜன் ஆட்சியிலேயே குமார குலோத்துங்க சோழச் சதுர்வேதி மங்கலம் என்னும் கிராமம் இருந்து வந்ததென்பதும், அதனுல் அந்தக் கிராமத்துக்குப் பெயரை அளித்த குமார குலோத்துங்கனும் அதற்கு முற்பட்டவனுக இருத்தல் வேண்டுமென்பதும் தெளிவாகும்.

இரண்டாம் குலோத்துங்கன், அவனுக்குப் பின் பட்டத்துக்கு வந்த அவன் மகன் இரண்டாம் இராஜராஜன் ஆகியோருடைய ஆட்சிக்காலம் சண்டை சச்சரவு எதுவும் இல்லாமல் அமைதியாகவும் சுபிக்ஷமாகவும் நடைபெற்றதெனவே கொள்வர். அவர்களுடைய மெய்க்கீர்த்திகள் பல கிடைத்துள்ளன. எனினும் அவற்றிலே அவர்களுடைய வெற்றிச் செய்திகள் ஏதும் காணப்பெறவில்லை.

ஆயினும் இலக்கியங்களிலே இரண்டு வெற்றிகள் இரண்டாம் இராஜராஜனுக்கு ஏற்றிக் கூறப்படுகின்றன. ஒன்று காவிரியாற்றுக்கு நடுவே ஏற்பட்ட அடைப்பை நீக்கி வழி

கண்டது. இச்செய்தி அவன் ஆஸ்தானப் புலவரும் ஆசிரியப் பெருமானுமான ஒட்டக்கூத்தராலே தக்க யாகப் பரணியில்,

> "அலைகொன்று வருகங்கை வாராமன் மேன்மேல்
> அடைகின்ற குன்றூ டறுக்கின்ற பூதம்
> மலைகொன்று போன்னிக்கு வழிகண்ட கண்டன்
> வரராசன் ராசன்கை வாளென்ன வந்தே"
>
> (தாழிசை-549)

என்றும், இராஜராஜ சோழன் உலாவிலே,

> "சுழியிட்ட காவிரிக்குச் சோணாடு வாழ
> வழியிட்ட வாள்காண வாரீர்"
>
> (கண்ணி-85)

என்றும் குறிக்கப்பட்டிருக்கிறது. தொல்காப்பியம் நச்சினார்க்கினியர் உரையில் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பெற்ற பழம் பாடல் ஒன்றிலும்,

> —"சைய
> மலைச்சிறைதீர் வாட்கண்டன் வெள்ளணிநாள் வாழ்த்திக்
> கொலைச்சிறைதீர் வேந்துக் குழாம்"
>
> (பொருள், புறத்திணை, சூத்திரம் 36.)

என்று இது குறிக்கப்பெற்றுள்ளது. காவிரியின் குறுக்கே அணைபோட்டு நீரை வேறு வழியில் திருப்பியதைப் பற்றிச் சரித்திர பூர்வமாக நமக்குக் கிடைக்கும் முதற் குறிப்பு இதுவேயாகும். இவ்விதம் அணைபோட்டு நீரைத் திருப்பியவன் ஹொய்சள மன்னனுகவே இருத்தல் வேண்டும். அதனுல் சோழனும் ஹொய்சளர்மீது போர்தொடுத்தே அணையை உடைத்து நீரைச் சோழநாட்டுக்குக் கொணர்ந்திருத்தல் வேண்டும். இரண்டாம் குலோத்துங்கன் காலத்திலே இயற்றப்பெற்ற பெரியபுராணத்திலே அதன் ஆசிரியர் சேக்கிழார் தம்மை ஆதரித்த சோழன் அநபாயனைப் பற்றி,

> "பொன்மலைப் புலிநின் ரோங்கப்
> புதுமலை யிடித்துப் போற்றும்
> அந்நெறி வழியே யாக
> அயல்வழி யடைத்த சோழன்
> மன்னிய அனபா யன்சீர்
> மரபின்மா நகர மாகும்

தொன்னெடுங் கருவூ ரென்னுஞ்
சுடர்மணி வீதி மூதூர் "
(எறிபத்த நாயனார் புராணம், பாடல் 2)

என்று பாடியிருக்கிறார். இந்தப் பாடலும் இதே செய்தியைக் குறிப்பதுபோலும். அவ்விதமானால் ஒட்டக்கூத்தர் இப்புகழை இரண்டாம் இராஜராஜனுக்கு ஏற்றிக் கூறும்போது அதையே சேக்கிழார் அவன் தந்தையான இரண்டாம் குலோத்துங்கன் புகழாகக் கொள்கிறார். இவற்றால், இவ்விருவரும் இதே புகழுக்கு உரியர் என்பது பெறப்படும். கி. பி. 1145-ஆம் ஆண்டு முதல் கி. பி. 1150-ஆம் ஆண்டு வரையில் தந்தை, மகன் ஆகிய இருவரும் சேர்ந்து அரசு புரிந்திருக்கிறார்கள் என்பதை நாம் அறிவோம். ஆகவே இந் நிகழ்ச்சி இந்த இடைக் காலத்தில், அதாவது தந்தை குலோத்துங்கனுடைய ஜீவதசையிலே மகன் இராஜராஜன் தலைமையில் நடந்தது எனக் கொள்ளலாம்.

மற்றொன்று, அவன் கல்யாண புரத்துச் சிங்காதனத்திலே மேலைச் சாளுக்கிய அரசன் ஒருவனை அமர்த்தியது. தக்கயாக பரணியின் கடைசியில் உள்ளதான வாழ்த்துப் பகுதியிலே ஆசிரியர் ஒட்டக்கூத்தர் இரண்டாம் இராஜராஜனைப் பின்வருமாறு வாழ்த்துகிறார்.

"பிரட்டனை யேபட்டங் கட்டழித்துப்
பேரே ழரையிலக் கம்புரக்க
இரட்டனை யேபட்டங் கட்டிவிட்ட
இராசகம் பீரனை வாழ்த்தினவே "
(தாழிசை—774)

இவ்விடத்தில் இரட்டன் என்று குறிப்பிடப் பெறுபவன் இரட்டபாடி ஏழரையிலக்கம் என்னும் பூமிக்கு உரியவனான மேலைச் சாளுக்கியனே ஆவன். தமிழ் நாவலர் சரிதையில் இச் சோழ மன்னனைப் பற்றிப் பின் வரும் பாடல் காண்கிறது.

"கரத்துஞ் சிரத்துங் களிக்குங்
களிறுடைக் கண்டன் வந்தான்
இரத்துங் கபாட மினித்திறப்
பாய்பண் டிவண ணங்கே

உரத்துஞ் சிரத்துங் கபாடந்
திறந்திட்ட துண்டி லங்கா
புரத்துங் கபாட புரத்துங்கல்
யாண புரத்தி னுமே"

(பாடல்-128)

பாண்டியர் தலைநகரான மதுரை, இலங்கைத் தலைநகரான லங்காபுரம் ஆகியவற்றைப்போல மேலைச் சாளுக்கியர் தலைநகரான கல்யாணபுரம் அவனுக்கு எப்போதும் வாயில் திறந்திருந்ததாம், அதாவது அவன் ஆணைக்கு அடங்கியிருந்தது என்று கூறுகிறது இந்தப் பாடல்.

அந்நாளிலே மேலைச் சாளுக்கிய நாட்டிலே பெருத்த மாறுதல்கள் நடைபெற்று வந்தன வென்பதை நாம் அறிவோம். சாளுக்கிய அரசனாக இருந்த மூன்றாம் தைலபனுக்குக் கீழ்ப்பட்டிருந்த கலசூரி வமிசத்துப் பிஜ்ஜலன் கொஞ்சம் கொஞ்சமாக அதிகாரத்தைக் கைப்பற்றிச் சிறிது காலத்திலே அரசு முழுவதையும் கைக்கொண்டு தன் பேரரசனையே துரத்திவிட்டான். அரசையும் சிங்காதனத்தையும் இழந்த தைலபன் எல்லைப்புற மாகாணங்களை அடைந்து அவ்விடங்களிலிருந்த விசுவாசமான சிற்றரசர்கள் ஆதரவோடும் உதவியோடும் அரசு புரிந்துவந்தான். சுமார் கி. பி. 1163-ஆம் ஆண்டில் அவன் இறந்ததாகத் தெரிகிறது. அதேசமயம் (மூன்றாம்) ஜகதேகமல்லன் மேலைச் சாளுக்கிய விருதுகள் எல்லாவற்றையும் தாங்கி அரசு புரிய ஆரம்பித்திருக்கிறான். இந்த ஜகதேகமல்லனைச் சிங்காதனத்தில் அமர்த்துவதற்காகவே இரண்டாம் இராஜராஜன் மேலைச் சாளுக்கிய ராஜ்ய விவகாரத்தில் தலையிட நேர்ந்தது போலும். இப்போது உள்ள நிலையிலே நமக்கு முழு விவரங்கள் கிடைக்கவில்லை. ஆகவே அது எந்த வகையில் கைகூடியது என்பதை நாம் நிச்சயமாகக் கூறமுடியாது.

இந்த இரு சம்பவங்களும் மெய்க்கீர்த்திகளில் காணப்படவில்லையென்பதை நாம் முன்னரே கூறியிருக்கிறோம். எனினும் மெய்க்கீர்த்திகளிலிருந்தும் சில விவரங்கள் நமக்குத் தெரியவருகின்றன.

'பூமன்னு பதுமம்' என்று தொடங்கும் இரண்டாம் குலோத்துங்கனுடைய மெய்க்கீர்த்தியிலே பின்வரும் பகுதியும் உள்ளது:

—" பல்லவர்
தெலுங்கர் மாளுவர் கலிங்கர் கோசலர்
கன்னடர் கடாரர் தென்னவர் சேரலர்
சிங்கணர் கொங்கணர் சேதிபர் திரிகர்த்தர்
வங்கர் அங்கர் வத்தவர் மத்திரர்
கங்கர் சோனகர் கைகையர் சீனரென்
றறைகழல் வேந்தரும் எல்லா வரைசரும்
முறைமையில் வருந்தித் திறைகொணர்ந் திறைஞ்ச"

குலோத்துங்கன் பிள்ளைத்தமிழிலே பாட்டுடைத் தலைவனை இரண்டாம் குலோத்துங்கன் மகரக் கொடியை யுடைய அரசன் ஒருவனிடம் திறைகொண்டான் என்ற செய்தி காணப்படுகிறது (பாடல் 56). கடாரம் எனப்படும் ஸ்ரீவிஜய நாட்டு மன்னர்களான சைலேந்திரர்களுக்கு மகரக் கொடி இருந்ததென்பது லீடன் (பெரிய) பட்டயங்களிலிருந்து தெரிகிறது. (எபி. இந்திகா,இருபத்திரண்டாம் வால்யூம், 242-257பக்கங்கள்.) அதிலே அவன் மகரத்வஜம் கொண்டவன் என்று குறிக்கப் பெறுகிறான். இதைக்கொண்டு கவனித்தால் மெய்க்கீர்த்தியிலே கடாரர் என்று குறிக்கப்பெறுபவர் ஸ்ரீவிஜய நாட்டுச் சைலேந்திர மன்னர்களே என்பதும் இரண்டாம் குலோத்துங்கன் காலத்திலும் அவர்கள் சோழர்களுக்கு அடங்கியிருந்தனர் என்பதும் தெளிவாகும். இதிலிருந்து கடல் கடந்த பிரதேசங்களில் சோழர்களுக்கு ஆதிக்கியம் இப்போதும் குறையாமல் பழையபடியே இருந்து வந்ததென்று கொள்ளலாம்.

இன்னும் மெய்க்கீர்த்தியிலே திரிகர்த்தர், மத்திரர் ஆகியோர் பெயர்களும் காணப்படுகின்றன. திரிகர்த்தர் என்பார் பஞ்சாபிலே காங்க்ரா பள்ளத்தாக்கு என்னும் பிரதேசத்தில் அரசுபுரிந்தவர்கள். இதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். மத்திரர் என்பாரும் பஞ்சாப் பிரதேசத்தில் இருந்தவர்களே. விக்கிரம சோழன் உலாவிலே அம்மன்னனுடைய தண்டநாயகர்களுள் திகத்தன் என்பான் ஒருவனும் இருந்தான் என்று கூறப்பட்டுள்ளது.

—"கோட்டரணக்
கொங்கைக் குலைத்துக் குடகக் குவடடித்த
செங்கைக் களிற்றுத் திகத்தனும்"

(கண்ணி-88)

அவன் திரிகர்த்த தேசத்திலிருந்து வந்தவனாகவோ அந் நாட்டு அரசகுடும்பத்தைச் சேர்ந்தவனாகவோ இருத்தல் வேண்டும். அவ்விதம் இல்லாமல், சோழ மன்னனால் வெறும் பட்டம் அளிக்கப்பெற்றவனே அவன் என்று கொள்வதாக இருந்தாலும், வெகுதொலைவுக்கு அப்பால் உள்ள அந்நாட்டுக்கும் சோழர்களுக்கும் அந்நாளிலே ஏதாவது ஒருவகையில் தொடர்பு இருந்திருத்தல் வேண்டும்.

இதேபோல், 'பூமருவிய பொழிலேழும்' என்று தொடங்கும் இரண்டாம் இராஜராஜனுடைய மெய்க்கீர்த்தியிலும் பின் வரும் பகுதி காணப்படுகிறது.

"கன்னடருங் கலிங்கருந் தெற்றவருந் சிங்களருங்
கைகயருங் கொங்கணருங் கூபகருங் காசிகருங்
காம்போதருங் கோசலருங் கொந்தளரும் கப்பளரும்
பப்பளரும் பாஞ்சாலரும் பொப்பளரும் பூலுவரும்
மத்திரரும் மாராட்டரும் வத்தவரும் மாகதரும்
கொடிதுடங்கு கனககோபுரக் கொற்றவாசலில்
[வந்தீண்டி"

மெய்க்கீர்த்திகளில் வந்துள்ள இவ்விருபகுதிகளைச் சம்பிரதாய மான வெறும் புகழ்ச்சியேயென்றும் அவற்றுக்குப் பிரா தான்யம் ஏதும் அளிக்கக் கூடாது என்றும் ஆராய்ச்சியாளர் கள் பொதுவாகக் கொள்வர். ஆனாலும் நாடு முழுவதும் ஒவ் வொருசாசனத்திலும் காணப்பெறுவதற்காக அரசர்களுடைய ஆஸ்தானப்புலவர் இயற்றி, அரசாங்க முத்திரையுடன் கூடிய மெய்க்கீர்த்திகளில் காணப்பெறுவன இவை என்பதை நாம் மறக்கலாகாது. அன்றி, இத்தகைய புகழ்ச்சிகள் இவ்விருவரு க்கு முன்னால் ஆண்ட அரசர்கள், பின்னால் வந்த மன்னர்கள் ஆகியோருடைய மெய்க்கீர்த்திகளில் காணப்பெறவில்லையென் பதையும் நாம் கவனிக்கவேண்டும். இன்னும் இதேபோன்ற புகழ்ச்சி அந்தக் காலத்தில் அரசுபுரிந்த மேலைச் சாளுக்கியர் களுக்கும் ஏற்றிக் கூறப்படுகிறது,

மேலைச் சாளுக்கிய மன்னனை ஆறும் விக்கிரமாதித்திய னுக்குப் பின் அவன் மகன் மூன்ரும் சோமேச்வரன் பட்டம் எய்தினன். பூலோகமல்லன், சர்வஜ்ஞ பூபன், சர்வஜ்ஞ சக்கர வர்த்தி என்ற விருதுகளைத் தாங்கிய அவன் "ஆந்திர, திரவிள, மகத, நேபாளர்கள் முடிமேல் அடிவைத்தான்; அறிஞர்கள் பலராலும் கொண்டாடப் பட்டான்" என்று வருணிக்கப் பெற்றுள்ளான். (ராயல் ஏஷ்யாடிக் ஸோஸைட்டி பம்பாய்க் கிளையின் பத்திரிகை, பதினோராம் வால்யூம், 268 பக்கம்). அவன் மகன் மூன்ரும் தைலபனிடமிருந்து அரசைக் கைப்பற்றியவனும் அதற்குமுன் சாளுக்கியர்களுக்கு அடங்கிய சிற்றரசனுக இருந்தவனுமான பிஜ்ஜலனும் ஒரு சாசனத்திலே, 'நேபா ளத்தை நிலைகுலையச் செய்தவன்' என்று குறிக்கப்பெறு கிருன். (எபி. இந்திகா, ஐந்தாம் வால்யூம், 29, 149 பக்கங்கள்.) இதே சமயம் நேபாளத்தின் எல்லைப்புறத்திலே, தீர்ஹுத் (தீரபுக்தி), மிதிலா என்னும் இடங்களைக் கர்நாடகத்திலிருந்து சென்ற அரசர்கள் ஆண்டு வந்திருக்கிருர்கள் என்பதையும் நாம் அறிவோம். அந்த வமிசத்தை நிறுவிய முதல் அரசனை நான்யதேவன் என்பான் நேபாளத்தைக் கைப்பற்றினன் என்று நேபாள தேசத்துக் கர்ணபரம்பரையில் கூறப்படு கிறது. இது கி. பி. 1141-ஆம் ஆண்டு நிகழ்ந்ததெனக் கணக் கிட்டிருக்கிருர்கள். (பண்டார்கார் ஓரியண்டல் ரிஸர்ச் இன்ஸ்டிடி யூட்டின் பத்திரிகை, 1954-ஆம் ஆண்டு, பக்கம் 18). இதே சமயம் நேபாள இராஜகுமாரன் ஒருவனுக்குச் சோமேச்வரன் என்ற பெயரும் காணப்படுகிறது. நேபாளத்து இராஜ பரம்பரையில் காணும் பெயர்களிலே இந்தப் பெயர் அபூர்வமானது. அன்றி அந்தப்பெயர் அதே காலத்தில் நேபாளத்தை வெற்றி கொண் டதாகக் கூறிக்கொள்ளும் மேலைச் சாளுக்கிய அரசன் பெய ராகவும் இருக்கிறது.

மேலைச் சாளுக்கிய அரசனை ஆறும் விக்கிரமாதித்திய னுடைய ஆதரவு பெற்று விக்கிரமசோழன் சோழ இராஜ் யத்தை அடைந்து சிங்காதனம் ஏறிய பிறகு, அந்த இரண்டு பேரரசுகளுக்குமிடையில் பெருத்த விரோதம் ஏதும் ஏற்பட்ட தாகத்தெரியவில்லை. அதற்கு மாருக அவ்விருவருக்குமிடையே ஒருவகைச் சமாதானமே நிலவியதெனக் கொள்ளலாம். இன்

னும் இரண்டாம் இராஜராஜன் மேலைச் சாளுக்கியச் சிங்கா தனத்திலிருந்து பிரட்டன் ஒருவனை விரட்டியடித்து இரட்டனுக்கு முடி சூட்டியிருக்கிறான் என்பதையும் நாம் மேலே கண்டோம். இவற்றைக் கவனிக்கும்போது வட நாட்டுப் போரி லும் சோழர் சாளுக்கியர் இருவரும் சேர்ந்து ஒன்றாக ஈடு பட்டிருத்தல் கூடும் என்று முடிவு செய்யலாம். குலோத்துங்கன் பிள்ளைத்தமிழிலே,

> "கருநடர் துருக்கர் வடகவுசலர் குருத்தர்விடு
> கவுரியர்ம கதத்தர் பிறர்சூழ்
> கடலெனவ ளைத்தமரர் ககனதல முட்டவொலி
> களிபெருக ளத்தி னிடையே"

(பாடல்-52)

என்று காணப்படுவதிலிருந்து இரண்டாம் குலோத்துங்கன் துருக்கர், வட கோசலர் முதலியோருடன் போர் புரிந்தான் என்று கொள்ளலாம். அதேபோல, அந்தக் காலத்தில் ஆண்ட ஹொய்சள மன்னனான விஷ்ணுவர்த்தனனும் துருக்கர்களை வெற்றிகொண்டதாகக் கூறிக்கொள்கிறான். 'பொய்சள தேவன் கைவாள் ஆன பல்ல போர்க்கடேயின் விசுவாசமான ஊழியன் கொலேவூர் பிட்டி என்பான் அநேகம் துருக்கர் களைக் கொன்று தானும் இறந்தான் என்னும் செய்தியை ஒரு கல்வெட்டு (எபி. கர்நாடிகா, ஆறாம் வால்யூம், முத்ரகரெ. 3,) எடுத்துக் கூறுகிறது.

இரண்டாம் இராஜாதிராஜனும் மூன்றாம் குலோத்துங்கனும்

அநந்தபூர் ஜில்லா மடகசிரா தாலூகாவில் ஹேமவதியி லிருந்து கிடைத்துள்ள தமிழ்ச் சாசனம் ஒன்று திரிபுவன சக்கரவர்த்தி குலோத்துங்க சோழதேவனுடைய ஆட்சியின் இரண்டாம் ஆண்டும் விய வருஷமும் கொண்டு காணப்படு கிறது. வட்டவிவஹாரியும் தேசிமுக்கியருமான சிக்கில் உடைய செட்டியார் என்பார், நிகரிலிசோழமண்டலத்துச் சிரை நாட் டுப் பெருஞ்செறுவில் எழுந்தருளியிருக்கும் மங்கேச்வர தேவ ருக்குச் சில நிவந்தங்களுக்காக நிலம் அளித்த செய்தியைக் கூறுகிறது அந்தக் கல்வெட்டு. (தெ. இ. சாசனங்கள், ஆறாம் வால்யூம், 553 நெ. இந்தச் சாசனம் எபி. இந்திகாவில் வெளி

யிடப் பெறுவதாக ஸ்ரீ க. அ. நீலகண்ட சாஸ்திரிகளுடன் கூட்டாகப் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.) அவன் அந்தத் தானத்தை அளிக்க ஸ்ரீமான் மகாமண்டலேச்வர உறையூர் புரவராதீச்வர ஸ்ரீமாஹேச்வரன் திரிபுவனமல்ல மல்லிதேவ சோழ மஹாராஜாவின் அங்கீகாரத்தைப் பெற்று அரசர் திருக்கை மலரிலே நீர் வார்த்துக் கொடுத்தான் என்றும் கூறுகிறது அந்தச் சாசனம். சாசனத்தில் காணப்பெறும் திரிபுவனமல்ல மல்லிதேவ சோழ மகாராஜா அந்தப் பகுதியிலே கிடைக்கும் வேறு சாசனங்களிலும் காணப்படுகிறான். ஹெஞ்சேறு (அதாவது பெருஞ்செறு என்பதன் கன்னடப் பெயரே) நகரைத் தலைமையிடமாகக் கொண்டு சிரைநாட்டுப் பகுதியை ஆண்டு வந்த நிடுகல் சோழர் எனப் பெறும் தெலுங்குச் சோழர் வமிசத்தைச் சேர்ந்தவன். அவனுடைய சாசனங்கள் கி. பி. 1162 முதல் கி. பி. 1179 வரையில் கிடைக்கின்றன. (ஷை ஒன்பதாம் வால்யூம், 208, 273. செ. சாசனங்கள்.) ஆகவே ஹேமவதிச் சாசனத்தில் காணும் வியய வருஷம், சகாப்தம் 1088-க்குச் சரியான கி. பி. 1166-67-ஆம் ஆண்டு வருவதே ஆகும். அது குலோத்துங்கனுடைய ஆட்சியின் இரண்டாம் ஆண்டு ஆகுமானால் அவன் சிங்காதனம் ஏறியது அதற்குமுதல் வருஷமான கி. பி. 1165-66 ஆம் ஆண்டு ஆகும். குலோத்துங்கனுடைய ஆட்சியின் ஆரம்ப காலம் இதுவல்ல. சோழர்களிலே வேறு எந்த அரசனும் இவ்வாண்டிலே சிங்காதனம் ஏறியதாகக் கொள்ளவில்லை. ஆனால், இரண்டாம் இராஜாதிராஜனுடைய ஆட்சி ஆண்டுகளில் ஒருவகைக் கணக்கில் அடங்கியவை கி. பி. 1166-ஆம் ஆண்டு ஏதோ ஒரு தேதியிலிருந்து கணக்கிடப்படுவதை நாம் அறிவோம்.

பல்லவராயன்பேட்டைக் கல்வெட்டிலிருந்து (எபி. இந்திகா, இருபத்தோராம் வால்யூம், பக்கங்கள் 184-93) இரண்டாம் இராஜராஜன் தனக்குப்பின் சிங்காதனம் ஏறப் பட்டத்துக்கு உரிய பிள்ளைகள் இல்லாமையைக் கண்டு இராஜாதிராஜன் என்பானைத் தேர்ந்து எடுத்து முடிசூட்டிய விவரம் தெரியவருகிறது. இதற்காக அவன் கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்து இராஜ குமாரர்கள் சிலரைப் பிரயாணம் பண்ணுவித்துக் கொணர்ந்தான். அவர்களிலே இராஜாதிராஜன் தேர்ந்தெடுக்கப்பட்டான். அவ்விதம் வந்து தேர்ந்

தெடுக்கப்பெருமல் ஏமாற்றம் அடைந்து திரும்பியவர்களுள் குலோத்துங்கனும் ஒருவன் போலும். இராஜாதிராஜனைத் தேர்ந்தெடுத்து முடி சூட்டியதில் அரசனுக்கு ஒரேமுகமான ஆதரவு இருக்கவில்லை யென்றும் மிகவும் சிரமப்பட்டே அந்த எதிர்ப்புக்களை ஒரு வழியாக அவன் சமாளிக்க வேண்டி யிருந்ததென்றும் சாசன வாசகம் தெளிவாக எடுத்துக் காட்டு கிறது. குலோத்துங்கன் தான் தேர்ந்தெடுக்கப்படாவிட்டா லும் இராஜாதிராஜனைப் பொறுக்கி எடுத்தது சரியில்லை யென்றும், தனக்கே அந்த உரிமை கிட்டவேண்டுமென்றும் நினைத்திருக்கலாம். அதன் பயனுகவே அவன் தன்னை முறைப் படி அரசனுகப் பிரகடனம் செய்துகொண்டான்.

அதை அவன் சோழநாட்டிலிருந்து செய்யமுடியாது. ஆகவே கன்னடப் பிரதேசத்துக்குப் போய் அவ்விடம் பிரகட னம் செய்துகொண்டான். அதற்குத் தேவையான உதவியை அளிக்கக் கூடியவர்களும் அங்கே தான் இருந்தார்கள். எனி னும் இம் முயற்சி அப்போது வெற்றிபெறவில்லை. சோழநாட் டிலே ஸ்திரமான, குடிமக்களின் அன்புக்குப் பாத்திரமான அரசு இருந்தது. அன்றி குலோத்துங்கனுக்கும் நாட்டு மக்க ளிடையே பெருத்த ஆதரவு இருந்ததாகவும் தெரியவில்லை. குலோத்துங்கன் இவ்விதம் தன்னை அரசனுகப் பிரகடனம் செய்துகொண்டதும், பாண்டி நாட்டிலே சிங்காதனத்தை அடைவதாகக் கிளம்பிய தாயாதிச் சண்டையும் ஒன்றுசேர் ந்து, கி.பி. 1163-ம் ஆண்டு மார்ச் மாதம் பட்டத்துக்குரியவ னுகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இரண்டாம் இராஜாதிராஜன் னுடைய முடி சூட்டு விழாவை நாலாம் திருநக்ஷத்திரத்திலே, கி. பி. 1166-ஆம் ஆண்டிலே, செய்யவேண்டிய அவசரத்தை ஏற்படுத்தின போலும்.

அரசன் அதாவது மூன்ரும் குலோத்துங்கன் திருக்கை மல ரிலே நீர்வார்த்துத் தானம் வழங்கியதாக ஹேமவதித் தமிழ்க் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள சிக்கல் உடைய செட்டியார் வட்டவியவஹாரி தேசிமுக்யர் என்று விவரிக்கப்பட்டுள்ளான். கர்நாடக தேசத்துச் சாசனங்களிலே 'ஸ்ரீமான் மகாபட்டு வியாபாரி உபய நாநாதேசிக்கு முக்கியமான' என்று தமிழி லும்(எபி. கர்நாடிகா,பத்தாம் வால்யூம்,கோலார் 71 நெ.சாசனம்)

"ஸ்ரீமன் மஹாபட்டவ்யவஹாரி உபய நாநாதேசியரகா மஹா பிரபு முக்யரப்ப' என்று கன்னடத்திலும் (ஷை 72, 73 நெ.) காணப்படுவதையே இந்த விருது குறிக்கும். இதிலிருந்து அவன் பம்பாய் ராஜ்யம் அய்யாவழி என்னும் ஐஹொளெயைத் தலைநகராகக்கொண்டு நானாதேசிகள் என்றும் ஐந்நூற்றுவர் என்றும் குறிக்கப்பெற்று நாடு முழுவதும் பரவியிருந்த வியாபாரக் குழுவைச் சேர்ந்தவனாகவே இருத்தல் வேண்டும் போலும்.

இராமநாதபுரம் ஜில்லா பிரான்மலையிலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டிலே (தே. இ. சாசனங்கள், எட்டாம் வால்யூம், 442 நெ.) இந்தக் குழுவினரின் மெய்க்கீர்த்தி காணப்படுகிறது. அதிலிருந்து இவர்களுக்கும் சித்திரமேழிப் பெரிய நாட்டவர் என்னும் மற்றொரு குழுவினருக்கும் ஏதோ ஒரு வகையான தொடர்பு இருந்து வந்தது என்று தெரிகிறது. தென்னார்க்காடு ஜில்லா திருக்கோவலூரிலிருந்து சித்திரமேழிப்பெரிய நாட்டவர் என்பாருடைய தருமங்கள் சிலவற்றைத் தெரிவிப்பதாகக் கிடைக்கும் ஒரு கல்வெட்டிலே (ஷை ஆறாம் வால்யூம், 129-நெ.) இம் மெய்க்கீர்த்தியின் பெரும்பகுதி காணப்படுகிறது. அதே ஜில்லாவில் திட்டக்குடியிலிருந்து கிடைத்த இரண்டாம் இராஜாதிராஜனுடைய நான்காம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று (ஷை ஏழாம் வால்யூம், 291) எழுபத்தொன்பது நாட்டுச் சித்திர மேழிப் பெரியநாட்டாரும் திசை திசை விளங்கும் திசை ஆயிரத்து ஐந்நூற்றுவரும் சேர்ந்து அவ்வூர்க் கோயிலுக்கு அளித்த சில நிவந்தங்களைக் கூறுகிறது. சித்திரமேழிப் பெரியநாடு, திசை ஆயிரத்து ஐந்நூற்றுவர் ஆகிய இரண்டும் நானாதேசி என்னும் மூலஸ்தாபனத்தின் இரு பிரிவுகளே போலும். கன்னட நாட்டுச் சாசனங்களிலே உபயநானாதேசி என்று காணப்படுவது இந்த இரு பிரிவுகளையே குறிக்கும்.

சித்திரமேழிப் பெரியநாட்டவர் பல சமயங்களிலே பெரிய நாட்டவர் என்றே பொதுவாகச் சாசனங்களில் குறிக்கப்படுவர். 'அழகிய கலப்பை' என்ற பெயரை உடைய அந்த ஸ்தாபனம் விவசாயிகளே நிரம்பியது போலும். இந்த ஸ்தாபனம் சற்றேறக்குறைய இந்தக் காலத்தில் தான் தோன்றியிருக்க

வேண்டும். மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சியிலே அது சோழ ஸாம்ராஜ்யம் முழுவதும் பரவிப் பற்பல கிளைகளுடன் தழைத்து விளங்கியது. ஆந்திர ராஜ்யம் நெல்லூரிலே அவன் காலத்தில் கட்டப்பட்டதாகக் கருதப்படும் விஷ்ணு ஆலயம் திருப்பாற் கடல் பள்ளி கொண்ட பெருமாள் சித்திரமேழி விண்ணகரம் என்று பெயர் கொண்டது.(இந்தத் தொகுப்பின் 938-939 நெ. சாசனங்களைப் பார்க்க. இன்னும் தே. இ. சாசனங்கள், ஐந் தாம் வால்யூம், 496, 493 நெ. நெல்லூர் ஜில்லாச் சாசனங்கள், நெல்லூர் 61,62 பார்க்க.) கடப்பை ஜில்லா அத்திரால என்னும் ஊரில் சித்திரமேழி மண்டபம் ஒன்று இருந்திருக்கிறது. (1914-ஆம் ஆண்டு 404 நெ.)கோயம்புத்தூர் ஜில்லாவில் அந்நாளிலே கோயிற்பூசை செய்தோன் ஒருவன் சித்திரமேழி பட்டன் என்ற பெயரைக் கொண்டிருந்தான்.(1920 ஆம் ஆண்டு 258 நெ. சாசனம்.) அதே ஜில்லாவில் விஜயமங்கலத்தில் உள்ள கரிய மாணிக்கர் என்னும் விஷ்ணுவின் கோயிலுக்குச் சித்திரமேழி விண்ணகரம் என்ற பெயர் சாசனங்களிலே காணப்படுகிறது. (இந்தத் தொகுப்பின் 270, 271 நெ. சாசனங்கள். 1905-ஆம் ஆண்டு 544 நெ. சாசனமும் பார்க்க).

இந்த ஸ்தாபனத்துக்கெனத் தனியாக மெய்க்கீர்த்தியும் இலச்சினையும் இருந்தன. இவர்களுடைய பிற்காலத்துச் சாசனங்களிலே சில புயல் வாய்த்து என்று முதலில் எழுதப் பெற்று அப்பால் அதைத் தொடர்ந்து சாசனங்கள் எழுதப் பெற்றுக் காண்கின்றன. (தே. இ. சாசனங்கள், ஆறாம் வால்யூம், 40, 41 நெ). புயல் வாய்த்து என்பது மூன்றாம் குலோத்துங்கன் சாசனங்கள் பலவற்றிலே காணப்படும் அவனுடைய மெய்க் கீர்த்தியின் ஆரம்பமாகும். மூன்றாம் குலோத்துங்கனுடைய புயல் வாய்த்து என்று தொடங்கும் மெய்க்கீர்த்திக்கும் சித்திர மேழிப் பெரிய நாட்டவர் மெய்க்கீர்த்திக்கும் சொல்லாட்சி யிலே மிகுந்த ஒற்றுமை காணப்படுகிறது. புயல் வாய்த்து என்று ஆரம்பமாகும் மெய்க்கீர்த்தியையே பெரியநாட்டவர் பிற்காலத் தில் தங்களுக்கு ஸ்வீகரித்துக் கொண்டுவிட்டார்கள். ஆகவே அவர்களுடைய பிற்காலத்துச் சாசனங்களிலே காணும் 'புயல் வாய்த்து' என்பது அந்த மெய்க்கீர்த்தி முழுவதையும் கொடுப் பதற்குப் பதிலாக அதன் ஆரம்பத் தொடரை மட்டும் கொடுப்

பதாகும். இதைக் கவனித்தால், இந்த ஸ்தாபனத்தை மூன்றாம் குலோத்துங்கனே சோழ சிங்காதனத்தைக் கைப்பற்றுவதற்குச்செய்த தன்னுடைய முதல் முயற்சித் தோற்றுப்போனவுடன் சிருஷ்டித்தான் என்று சொல்லலாம். நாடுமுழுவதும் பல கிளைகளுடன் பரவி நன்கு வேரூன்றிய அந்த ஸ்தாபனத்தின் உதவியாலேயே சிறிது காலத்திற்கெல்லாம் அவன் தன்னுடைய முயற்சியிலே வெற்றி கொள்ளமுடிந்தது.

தஞ்சாவூர் ஜில்லா செம்பொனார் கோயிலிலிருந்து கிடைக்கும் மூன்றாம் குலோத்துங்கனுடைய ஆட்சியின் ஆறாம் ஆண்டு கொண்ட கல்வெட்டு ஒன்றிலிருந்து இரண்டாம் இராஜாதிராஜனுடைய ஆட்சியின் பதினோராம் ஆண்டிலே சோழ நாட்டின் மீது வேற்றூர்படையெடுப்பு ஏதோஒன்று(துரித காலமாய்ப் படைஏற) நடந்தது'என்றும் தெரிகிறது.[1] அந்தப்படையெடுப்பு மூன்றாம் குலோத்துங்கன் நடத்தியதாகவே இருத்தல் வேண்டும்.

### பாண்டியர் தாயாதிச் சண்டை

பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தென்னிந்திய சரித்திரத்திலேயே முக்கியமான சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. பாண்டி நாட்டிலே இராஜகுமாரர்களிடையே முப்பது வருஷ காலத்துக்கு அதிகமாக இரண்டு தலைமுறைகளுக்கு இழுத்துச் சென்ற அப்போர் அந்தக் காலத்தில் தென்னாட்டையே ஒரு கலக்குக் கலக்கி விட்டதென்னலாம். இருசாராரிலே ஒருவன் இலங்கை அரசனுடைய உதவியை நாடினான். மற்றவன் சோழ மன்னனை அண்டினான். இவ்விதம் அந்தப் போர் பாண்டியர்களோடு நின்று விடவில்லை. சோழர்களையும் சிங்களர்களையும்

---

1. 1925-ஆம் ஆண்டு 171 ரெ. சாசனம். சாசன இலாகாவின் 1925-ஆம் ஆண்டு அறிக்கையின் 22 பாராவில் இந்தப் படையெடுப்பு பாண்டிய நாட்டில் நடைபெற்றுவந்த தாயாதிச் சண்டையுடன் சம்பந்தப்பட்டதாக இருக்குமோவென்று கருதப்பட்டுள்ளது. ஆனால் பாண்டி நாட்டுத் தாயாதிச் சண்டையில் சோழர்கள் தீவிரமாக ஈடுபட்டுப் போர் நடத்திவந்தாலும் அந்தப் போர் பாண்டிய நாட்டு எல்லையைக் கடந்து சோழ நாட்டுக்குள் பரவியதாகத் தெரியவில்லை.

போரில் இழுத்து விட்டது. பழைய பகை புது உருவத்தில் கிளம்பிப் போரிட்டது.

இந்தத் தாயாதிச் சண்டையின் ஆரம்பப்பகுதி இலங்கைச் சரித்திரமான மகாவமிசத்தில் விரிவாக வருணிக்கப் பட்டுள்ளது. பின்னுல் நடந்ததை மூன்று அல்லது நான்கு சோழசாசனங்களிலிருந்து சிறிது சிறிதாக அறிய வேண்டி வருகிறது. இவ்விதம் இரண்டையும் சேர்த்தால் தான் சித்திரம் பூர்த்தியாகும். அப்படியும் சில விவரங்கள் கிடைக்காமல் தான் இருக்கும்.

மஹாவமிசத்தில் காணும் விவரமே இலங்கை அரசன் உதவியைப் பராக்கிரம பாண்டியன் வேண்டிக் கொள்வதிலிருந்து தான் ஆரம்பமாகிறது.

மதுரையிலே பராக்கிரம பாண்டியன் அரசனுக அமர்ந்திருந்தான். அதைக் கைப்பற்றுவதற்காகக் குலசேகரன் படையெடுத்துவந்து அந்நகரை முற்றுகையிட்டிருந்தான். வந்த எதிரியைத் துரத்தித் தன் நிலையை ஸ்திரமாக்கிக் கொள்ளுவதற்கு வேண்டிய பலம் கிட்டாத பராக்கிரமன் தனக்கு உதவிசெய்ய வேண்டுமென்று இலங்கை மன்னனை பராக்கிரம பாஹுவை வேண்டிக் கொண்டான். இதிலிருந்து தான் ஆரம்பிக்கிறது மஹாவமிசத்திலே காணும் இந்தப் போரைப்பற்றிய விவரம். இலங்கை வேந்தனும் தன் சேனுபதி லங்காபுர தண்டநாயகன் தலைமையில் ஒரு படையை அனுப்பி உதவினுன். ஆனுல் சிங்களப்படை தமிழ் நாட்டை அடைவதற்கு முன்னதாகவே பாண்டிய நாட்டில் சம்பவங்கள் துரிதமாக நடந்து விட்டன. குலசேகரன் மதுரையைக் கைப்பற்றிக் கொண்டு பராக்கிரமன், அவன் மனைவி மக்கள் ஆகியோரைத் திருமலக்கே என்னுமிடத்தில் படுகொலை செய்து விட்டான். இதைக் கேள்வியுற்ற பராக்கிரம பாஹு, குலசேகரனிடமிருந்து மதுரை அரசைத் திரும்பவும் மீட்டுப் பராக்கிரமனின் வமிசத்து அரசகுமாரன் ஒருவன்வசம் அளிக்கப்படும் வரைப் போரைத் தொடர்ந்து நடத்துமாறு உத்தரவு அனுப்பினுன். இராமேசுவரத்துக்கு அருகில் மிகுந்த எதிர்ப்புகளுக்கிடையே லங்காபுரன் தன் படைகளுடன் கரையிறங்கி

இராமேசுவரம் செல்லும் வழியில் குண்டுகலா என்னுமிடத்தில் தன் படைகளை ஸ்திரப் படுத்திக் கொண்டான்.

இப்படையெடுப்பிலே நிகழ்ந்த சண்டைகள் பலவற்றையும் பாண்டியர் பக்கத்தில் சேர்ந்து போரிட்ட அதிகாரிகள் தண்டநாயகர்கள் ஆகியோர் பலரின் பெயர்களையும் மகாவமிசம் விரிவாகக் கூறுகிறது.

இந்தப் போரிலே ஈடுபட்டிருந்த அதிகாரிகள் யார் யார் என்பதையும் போர் நடந்த இடங்கள் எவை எவை என்பதையும் நன்ருக நிர்ணயித்து விடமுடியும். ஆனல் அது மிகவும் நீண்டுவிடும். அதை இவ்விடம் ஆராய முடியாது. (சாசன இலாகாவின் 1899-ஆம் ஆண்டு அறிக்கையில் 23 முதல் 38-வரையில் உள்ள பாராக்களில் இந்தப் போர் பற்றி விரிவாக ஆராயப்பெற்றுள்ளது.)

மஹாவமிசத்திலே காணும் சிறு விவரங்களை விட்டு விட்டு மேலெழுந்த வாரியாகப் பார்த்தாலே லங்காபுர தண்டநாயகன் நினைத்தபடி சுலபமாக வெற்றி கொள்ள முடியவில்லையென்பது நன்கு விளங்கும். போரின் உக்கிரம் அதிகமாக அதிகமாகக் கொடூரமும் அதிகரித்தது. லங்காபுரன் கையில் சிக்கிய தமிழ் நாட்டுப் படை வீரர்கள் ஒன்று கொல்லப் பட்டார்கள், அல்லது இலங்கைக்குக் கைதிகளாக அனுப்பிவைக்கப் பட்டார்கள். தமிழர்கள் இலங்கையை ஆண்ட நாளிலே சேதமுற்ற புத்த விஹாரங்களைப் புதுப்பிக்கும் புனிதத் திருப்பணியிலே கூலிகளாக வேலை செய்வதற்குத் தான். குலசேகரனும் மூச்சைப் பிடித்துக் கொண்டுதான் லங்காபுரனை எதிர்த்து நின்ருன்.

லங்காபுரன் உதவிக்காக மேலும் படைகள் இலங்கையிலிருந்து தண்டநாயகன் ஜகத்விஜயன் என்பவன் தலைமையில் அனுப்பப்பட்டன. அவனுடைய பெயர் சோழ சாசனங்களில் ஜயத்ரதன் எனக் காணப்படுகிறது. பராக்கிரம பாண்டியனுடைய குமாரனை வீரபாண்டியன் என்பவன் குலசேகரன் செய்த படுகொலையிலிருந்து தப்பிச் சென்று மலய நாட்டில் வசிப்பதாகக் கேள்விப்பட்ட லங்காபுர தண்டநாயகன் அவனைத் தன்னிடம் வரவழைத்தான். முடிவில் குலசேகரனை ராஜ்யத்திலிருந்து விரட்டிவிட்டு, வீரபாண்டியனை அரசனுக முடி சூட்டிவைத்தான்.

T

பாண்டிய அரசுக்குப் போட்டியிட்ட குலசேகரனுடைய மாமனே கொங்கு நாட்டுச் சோழ அரசன் முதலாம் குலோத்துங்கன். அவனும் தன் மருமகனுக்கு உதவுவதற்காக இந்தப் போரில் ஈடுபடநேர்ந்தது. இந்த விவரம் மகாவமிசத்திலும் குறிக்கப்பட்டுள்ளது. திருச்சிராப்பள்ளி ஜில்லாவிலே உள்ள நெரூர் என்னுமிடத்திலிருந்து கிடைக்கும் இக் கொங்கு மன்னன் குலோத்துங்கனுடைய சாசனம் ஒன்றும் இதை வலியுறுத்துகிறது. (1928-ஆம் ஆண்டு 336 நெ. இந்தத் தொகுப்பின் 716 நெ. சாசனம்.) அவனுடைய பதினேழாம் ஆண்டு கொண்ட அக் கல்வெட்டு, அவன் தன்னுடைய மருமகனார் குலசேகரனுக்கு மதுரை அரசை எறிந்து கொடுக்கக் கிளம்புவதற்கு முன்னதாகத் தன்னுடைய புரோகிதருக்கு ஒரு கிராமத்தை யாத்திரதானமாக அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. இம் மன்னன் சக வருஷம் 1072-ல்(கி.பி. 1150-51)சிங்காதனம் ஏறியவன். இது, கோயம்புத்தூர் ஜில்லா விஜயமங்கலத்திலிருந்து கிடைக்கும் அவனுடைய மற்றொரு சாசனம், அவனுடைய ஆட்சியின் பதின்மூன்றும் ஆண்டுக்கு எதிராம் ஆண்டும் சகவருஷம் 1085-ம் கொண்டிருப்பதிலிருந்து பெறப்படும். (1905-ஆம்ஆண்டு598 நெ.)இதிலிருந்து நெரூர்க் கல்வெட்டின் காலம் கி. பி. 1166-67 எனக் கொள்ளலாம். அப்படியானல் பாண்டிய நாட்டுத் தாயாதிச் சண்டை அதற்கு முன்னதாகவே கிளம்பி இரண்டாம் கட்டத்தை அடைந்துவிட்டது என்றாகும்.

இராமநாதபுரம் ஜில்லாவில் உள்ள திருப்புத்தூரிலிருந்து கிடைக்கும் (1908-ஆம் ஆண்டு 101 நெ.) பாண்டிய மன்னன் திரிபுவன சக்கரவர்த்திகள் குலசேகர தேவனுடைய ஆட்சியின் நான்காம் ஆண்டுக்கெதிராம் ஆண்டு கொண்ட ஒரு சாசனத்தில் காணும் பஞ்சாங்கக் குறிப்புகளைக் கொண்டு அது கொடுக்கப்பட்ட காலம் கி. பி. 1166-ஆம் வருஷம் ஜூலை மாதம் 23-ம் தேதிக்குச் சரியானதாகுமெனக் கொள்ளலாம். (இந்தியன் ஆண்டிகுவரி, நாற்பத்து நான்காம் வால்யூம், பக்கம் 255). இதிலிருந்து இந்தக் குலசேகரன் சிங்காதனம் ஏறியது கி. பி.1161-62-ஆம் ஆண்டாகும் எனக் கொள்ளலாம். அந்தச் சாசனம் மேலும் முக்கியமான செய்திகள் சிலவற்றை அறிவிக்கிறது. 'பெருமாள் குலசேகர தேவரைத் திருவடித்தொழ மதுரை ஏறப்போகைக்கு ஸ்ரீமதுதிரவியம் வேண்டினமையில்,'

அவ்வூர் மூலபரிஷத் மகாசபையார் கிராமத்தில் திருத்தளி ஆண்ட நாயனார் கோயிலில் ஆயிரத்தெழுநூற்றுவன் திரு மண்டபத்தில் கூடி, கோயிலுக்குச் சொந்தமான சில நிலங்களில் பயிரிடும் உரிமையை இருநூறு சோழிய நற்பழங்காசுக்கு விற்றுக்கொடுத்த செய்தியைத் தெரிவிக்கிறது.[1]

நாட்டிலே புதிய அரசன் முடி சூட்டப்பெற்றால் அதையொட்டி நாட்டில் உள்ள பிரமுகர்கள் எல்லோரும் அரசனை நேரில் கண்டு காணிக்கை செலுத்தித் தங்கள் விசுவாசத்தைத் தெரிவித்து வருவது வழக்கம். இவ்விதம் குலசேகரனுக்குத் திருப்புத்தூர் மூலபரிஷத் மஹாசபையார் அபிஷேகக் காணிக்கை செலுத்த நேர்ந்த சம்பவத்தையே இக் கல்வெட்டு எடுத்துரைக்கிறது போலும். ஆகவே குலசேகரன் கி. பி. 1166-ஆம் ஆண்டு ஜூலை மாதத்திற்குச் சிறிது காலம் முன்னதாக, அதாவது ஒன்றிரண்டு வருஷங்களுக்குள்ளாக, மதுரையைக் கைப்பற்றித் தன் எதிரியான பராக்கிரம பாண்டியனைக் கொன்றிருத்தல் வேண்டும். ஆதலால் அவன் கி. பி. 1165-ஆம் ஆண்டில் மதுரையைக் கைப்பற்றினன் என்று கொள்ளலாம்.

மதுரையைவிட்டுக் குலசேகரனை வெளியேற்றி, வீரபாண்டியனுக்கு முடிசூட்டிவிட்டுச் சிங்கள படைத்தலைவர்களான இலங்காபுர தண்டநாயகனும் ஜகத்விஜயனும், இலங்கைக்குத் திரும்பியதும் அங்கே அரசன் பராக்கிரமபாஹு இவ்வெற்றியின் ஞாபகார்த்தமாகப் பாண்டுவிஜயகம் என்ற பெயரில் ஒரு நகரை நிர்மாணித்து விழாக் கொண்டாடியதோடு மஹா வமிசத்தில் காணப்படும் விபரம் முடிவடைகிறது.

ஆனல் தாயாதிச் சண்டை இதனோடு முடியவில்லை. நாடிழந்த குலசேகரன் தனக்கு உதவும்படி சோழ மன்னன் இரண்டாம் இராஜாதிராஜனை அணுகினன். சோழனும் அவனை வரவேற்று, இவ்விடம் இருக்கும் நாளில் தகுந்த மரியாதையுடன்

---

1. இராமநாதபுரம் ஜில்லா குன்றக்குடியில் உள்ள திருவண்ணாமலை ஆதீனத்தைச்சார்ந்த கோயில்களில் காணும் சாசனங்களைப் பிரதிசெய்வோனாக நான் பணியாற்றிய காலும் இந்தச் சாசனமும் பிரதிசெய்யப்பெற்றது. அதிலிருந்தே நான் மேற்கோள் கொடுத்துள்ளேன்.

உபசரித்து அவனை மறுபடியும் பாண்டிய சிங்காதனத்தில் அமர்த்துமாறு தன்னுடைய அதிகாரிகளுக்கு உத்தரவிட்டான். பல்லவராயன் ஆகிய திருச்சிற்றம்பலம் உடையான் பெருமானம்பி என்பவன் இந்தப் பொறுப்பை ஏற்று இலங்காபுர தண்டநாயகன் முதலியோர் தலையைக் கொய்து மதுரைக் கோட்டை வாசலில் ஆணி அடித்து அரசன் ஆணையை நிறைவேற்றினான். குலசேகரன் மறுபடியும் பாண்டிய அரசனானான். இவ்விவரங்கள் செங்கற்பட்டு ஜில்லா ஆர்ப்பாக்கம் கிராமத்திலிருந்து கிடைக்கும் ஒரு சாசனத்தாலும் தஞ்சாவூர் ஜில்லா பல்லவராயன்பேட்டையிலிருந்து கிடைக்கும் மற்றொரு சாசனத்தாலும் அறியப்படுகின்றன. இராஜதிராஜனுடைய ஆட்சியின் ஐந்தாம் ஆண்டு கொண்ட ஆர்ப்பாக்கத்துச் சாசனம் (தெ. இ. சாசனங்கள், ஆறும் வால்யூம், நெ. 456) பாண்டிய நாட்டிலே ஈழத்துப் படை புகுந்து செய்த அக்கிரமங்களையும், சோழ சைன்னியம் அவர்களைத் தோற்கடித்ததையும் கூறுவதோடு நின்றுவிடுகிறது. மற்ற விவரங்கள் எட்டாம் ஆண்டில் பொறிக்கப்பட்ட பல்லவராயன் பேட்டைச் சாசனத்திலிருந்து (எபி. இந்திகா, இருபத்தோராம் வால்யூம், 184-193 பக்கங்கள்) தெரியவருகின்றன.

அப்போதும் சண்டை முடியவில்லை. மேலும் தொடர்ந்து நடந்துவந்தது. இது இராஜாதிராஜனுடைய ஆட்சியின் பன்னிரண்டாம் ஆண்டில் பொறிக்கப்பட்ட திருவாலங்காட்டுக் கல்வெட்டிலிருந்து காணப்படுகிறது. இலங்கை வேந்தனான பராக்கிரமபாஹு திரும்பவும் படையெடுத்து வருவதற்கான ஏற்பாடுகளைச் செய்துவந்தான். இதையறிந்த சோழமன்னன் அம்முயற்சியை முளையிலேயே கிள்ளி எறிந்துவிட விரும்பினான். அப்போது பராக்கிரமபாஹுவின் மருமகனும் பாண்டிய மானாபரணனுடைய மகனுமான ஸ்ரீவல்லபன் என்னும் பாண்டியஇராஜகுமாரன் மருமக்கள்தாயமுறைப்படிஇலங்கை அரசுக்கு உரிமை கொண்டாடிவந்தான். அவன் தன் முயற்சி பலிக்காமல் அப்போது தமிழ் நாட்டிலே தங்கியிருந்தான். அவன் தன் உரிமையை வற்புறுத்தி இலங்கை அரசைக் கைப்பற்றுவதற்காக வேண்டிய உதவியை அளிப்பதற்குச் சோழ மன்னன் முன்வந்தான். அவ்விதம் ஸ்ரீவல்லபனை முன்னிட்டுக் கொண்டு இலங்கை சென்ற சோழர் சைன்னியம் அங்கே

பெரு வெற்றிகளை அடைந்து, பராக்கிரம பாஹுவின் எண்ணம் ஈடேருதபடி செய்துவிட்டது.

சோழர்கள் இவ்விதம் செய்த சூழ்ச்சிக்குப் பதிலாகப் பராக்கிரம பாஹுவும் சூழ்ச்சியில் இறங்கினன். இராஜாதிராஜனுடைய பிடிப்பிலிருந்து குலசேகரனை வீடுவித்து வெளிக்கொணர்ந்துவிடத் தீர்மானித்தான். அதற்காக அவன் குலசேகரனையே பாண்டிய மன்னனுக அங்கீகரித்து அவனோடு சம்பந்தம் செய்யவும் முற்பட்டான். குலசேகரன் ஈழத்தானுடன் சேர்ந்து கொண்டான் என்பதை யறிந்த சோழன் அவனை மதுரையிலிருந்து விரட்டிவிட்டுப் பாண்டி நாட்டுத் தாயாதிச் சண்டையின் ஆரம்பகாலத்திலிருந்த பராக்கிரம பாண்டியன் மகனை வீரபாண்டியனை மறுபடியும் அரசனுக முடி சூட்டிவைத்தான்.

இரண்டாம் இராஜாதிராஜனுடைய ஆட்சியின் பன்னிரண்டாம் ஆண்டில் பொறிக்கப்பட்ட திருவாலங்காட்டுக் கல்வெட்டிலிருந்து அறியப்படுவது இந்த நிலை. (எபி. இந்திகா, இருபத்திரண்டாம் வால்யூம், 86-92 பக்கங்கள்.) இராஜாதிராஜனுடைய ஆட்சிக் காலமும் இறுதிக்கட்டத்தை எட்டிவிட்டது அதற்குப்பிறகு அவன் நீண்ட காலம் சோழ நாட்டை ஆளவில்லை. ஆரம்பக் காலத்திலிருந்தே அவனுடைய விரோதியாக விளங்கிய குலோத்துங்கன் அவனைத் தமிழ் நாட்டிலிருந்து துரத்திவிட்டு அரசைக் கைக்கொண்டான். குலோத்துங்கனுடைய ஆட்சி கி. பி. 1178-ஆம் ஆண்டு ஜூலை மாதம் ஆறும் தேதிக்கும் எட்டாம் தேதிக்கும் இடைப்பட்ட காலத்தில் ஆரம்பமாயிற்று என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

இராஜாதிராஜன் பாண்டிய குலசேகரன்மீது விரோதம் கொண்டதற்கு அவன் ஈழத்தானுடன் சேர்ந்துகொண்டது மட்டுமே காரணமாக இருந்தற்கில்லை. சோழசிங்காதனத்துக்குப் போட்டியிட்ட குலோத்துங்கனுடன் பாண்டிய குலசேகரன் சேர்ந்துவிட்டான் என்று எண்ண வேண்டியிருக்கிறது. அதுவே முக்கிய காரணமாகவும் இருந்ததுபோலும். இராஜாதிராஜனுடைய ஆட்சியின் பதினேராம் ஆண்டிலே, அதாவது திருவாலங்காட்டுக் கல்வெட்டுப்படி குலசேகரனைப் பாண்டிய

சிங்காதனத்திலிருந்து நீக்கியதற்குச் சிறிது முன்னதாக, சோழநாட்டின்மீது வெளியார் படையெடுப்பு ஒன்றுநடந்திருந்தது என்று செம்பொனூர் கோயிலிலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டால் விளங்குகிறது என்பதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். அந்தப் படையெடுப்பும் குலோத்துங்கன் நடத்தியதே ஆகும். குலோத்துங்கனுக்கும் பாண்டிய குலசேகரனுக்கும் ஏதோ ஒருவகைத் தொடர்பு இருந்துவந்திருத்தல் வேண்டும் என்பது குலோத்துங்கன் சோழநாட்டின் அரசுரிமையைப் பெற்றவுடனே, திரும்பவும் பாண்டிய நாட்டு அரசுப் பதவியில் மாறுதல் ஏற்பட்டது என்பதிலிருந்து நன்கு விளங்கும்.

குலோத்துங்கனுடைய ஆட்சியின் ஒன்பதாம் ஆண்டிலே பொறிக்கப்பட்ட சிதம்பரம் கல்வெட்டில் பின் வரும் பகுதி காணப்படுகிறது :

"விக்கிரம பாண்டியன் வேண்ட விட்டதண்டால்
வீரபாண்டியன் மகன்பட ஏழகம்பட
மறப்படை படச் சிங்களப்படை
மூக்கறுப்புண்டு அலைகடல்புக
வீரபாண்டியன் முதுகிடும்படிதாக்கி
மதுரையும் அரசும் கைக்கொண்டு"

இதிலிருந்து விக்கிரம பாண்டியன் வேண்டிக் கொண்டதால் அவன் தன் படையை ஏவி வீரபாண்டியனைத் துரத்தி மதுரையையும் அரசையும் கைப்பற்றி விக்கிரம பாண்டியனுக்கு அளித்தான் என்று தெரிகிறது. விக்கிரம பாண்டியன் என்பான் குலசேகரன் மகனே போலும். இடைக்காலத்தில் குலசேகரன் இறந்துவிட்டான் போலும். அதனாலேயே குலோத்துங்கன் வீரபாண்டியனைத் துரத்திக் குலசேகரன் மகனைப் பாண்டிய சிங்காதனத்தில் அமர்த்தினான் எனக் கொள்ள வேண்டும் போலும்.

இந்த வெற்றியின் முடிவில் அவன் 'மதுரையும் பாண்டியன் முடித்தலையும் கொண்டருளிய' என்னும் விருதைத் தரித்துக் கொண்டான். இவ்விருது அவனுடைய சாசனங்களிலே நான்காம் ஆண்டு முதல் காணப்படுவதால் இவ்வெற்றி அவனுடைய ஆட்சியின் ஆரம்பக் காலத்திலேயே அதாவது

அவன் பட்டத்துக்கு வந்த சிறிது காலத்திற்குள்ளாகவே நடந்திருத்தல் வேண்டும் என்று கொள்ளலாம். இந்தக் கட்டத்திலும் ஈழத்துப்படை சண்டையில் ஈடுபட்டிருந்தது என்று தெரிகிறது.

குலோத்துங்கனால் இவ்விதம் தோல்வியுற்ற வீரபாண்டியன் கொல்லத்திலே அடைக்கலம் புகுந்தான். அங்கிருந்து தன் படைகளைத் திரட்டிக் கொண்டு தான் இழந்த நாட்டையும் பதவியையும் மீட்டுக் கொள்வதற்காக மறுமுறையும் சோழனோடு யுத்தத்திற்கு வந்தான். ஆனால் திரும்பவும் அவன் தோல்வியுற்றான். சோழ மெய்க்கீர்த்தியிலிருந்து அவன், அப்பால் 'மீனவனும் வீரகேரளனோடு' குலோத்துங்கனிடம் சரண் புகுந்தான் என்றும், சோழ மன்னன் அவனுக்குப் படியும் முடியும் வழங்கினான் என்றும் தெரிகிறது.

இலங்கையில் பராக்கிரம பாஹு இறந்து போனான். அவனுக்குப் பிறகு நாட்கணக்கு மாதக் கணக்கிலே அரசு புரிந்த இருவருக்குப் பிறகு நிஸ்ஸங்க மல்லன் என்பவன் அரசனானான். அவன் முடி சூட்டிக் கொண்டது கி. பி. 1187-ஆம் ஆண்டு ஆகும் எனக் கணக்கிட்டிருக்கிறார்கள். அவன் பாண்டிய நாட்டின்மீது மூன்று தடவைகள் படையெடுத்து வந்ததாகவும் இராமேச்வரத்திலே ஒரு கோயிலைப் புதுப்பித்ததாகவும் தன்னுடைய சாசனங்களிலே கூறிக் கொள்ளுகிறான். இராமேச்வரத்திலே அவன் புதுப்பித்த கோயில் நிச்சங்கமல்லேச்வரம் எனப்படும்.

குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் முப்பத்தொன்றாவது, முப்பத்து நான்காவது ஆண்டுகள் கொண்டனவாகப் பழைய புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்திலிருந்து கிடைக்கும் இரண்டு கல்வெட்டுக்களிலிருந்து அம்மன்னன் மறுபடியும் ஒரு முறை பாண்டிய நாட்டு விவகாரத்திலே தலையிட வேண்டி இருந்ததென்று தெரிகிறது. அதன் முடிவிலே தான் அவன் மதுரையிலே வீராபிஷேகம் செய்து கொண்டது. இந்த அபிஷேக விவரம் அவனுடைய சாசனங்களிலே 29-ஆம் ஆண்டு அளவில் தான் காணப்படுகிறது. ஆகவே இந்தப் படையெடுப்பு கி. பி. 1205-ம் ஆண்டுக்கு அணித்தாக நடந்திருக்க வேண்டும். அவன் வெற்றி கொண்ட பாண்டிய அரசன் பெயர் எவ்விடத்திலும் காணப்படவில்லை. ஆயினும் கி. பி.

1190-ல் பாண்டிய சிங்காதனம் ஏறிய ஜடாவர்மன் குலசேகர பாண்டியன் என்பவன் அப்போது இருந்திருக்கிறான். ஆகவே இந்தப் படையெடுப்பு அவன்மீதே நடத்திருத்தல் வேண்டும் என்று கொள்வர்.

இந்த படையெடுப்பைப் பற்றிய மற்ற விவரங்கள் கிடைக்க வில்லை. ஆகவே இது தாயாதிச் சண்டையின் தொடர்பாக நடந்த சம்பவமா அல்லது வேறு ஒன்ரு என்பதையும் நிச்சய மாகக் கூற இயலாது.

இந்தச் சண்டையிலே நாம் ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும். ஆரம்ப முதலே பாண்டியர்களில் இருசாராரும் வேற்ருர் யாரே ஒருவருடைய தயவை எதிர்பார்த்தே நின்ருர் கள். அவ்விதம் உதவி செய்த வெளியாரும் பாண்டிய நாட் டிலே தங்களுடைய உரிமைகளை ஸ்தாபித்துக் கொள்ள முயன்றனர். ஆயினும் சண்டையின் முடிவில் சிறிது காலத்திற் கெல்லாம் புத்துயிர் பெற்ற பாண்டிய அரசாங்கம் ஒன்றை நாம் காண்கிரேம். தாயாதிச் சண்டையில் பாண்டியர்கள் பக்கத்திலே அவ்வப்போது உதவியாகப் போரிட்டு வந்த சோழர், சிங்களவர் ஆகிய இருவரையுமே விழுங்கிவிட்டு அப்புதிய அரசாங்கம் மிகுந்த பலத்துடன் விளங்கியிருக்கிறது. இது எங்ஙனம் சாத்தியமாகும்? தாயாதிச் சண்டைக் காலத்தி லும் அதற்குப் பிறகும் பாண்டியர்களுக்கு ஏழகத்தார் என்பார் ஒருவருடைய உதவி இருந்திருக்கிறது. சோழ சாசனங்களிலே ஏழகத்தார் பெயர் எப்போதும் மறவர் பெயருடன் சேர்ந்தே காணப்படுகிறது.

இராஜாதிராஜனுடைய திருவாலங்காட்டுக் கல்வெட்டிலே தான் முதல் முதலாக ஏழகத்தார் பெயர் காணப்படுகிறது. அந்தப் பகுதி பின்வருமாறு: "பாண்டியனூர் குலசேகரர் தமக்கு முன்பு செய்த நன்மைகளும் பாராதே ஏழத்தா னுடனே ஸம்பந்தம் பண்ணம் இவனும் இருவருங் கூடா நின்று சோழ ராஜ்யத்துக்கு விரோதமாயிருப்பன செய்யவுங் கடவதாக நிச்சயித்து இதுக்கு உறுப்பாகப் பாண்டி நாட்டு ஏழகத்தாரிலும் மறச்சாமந்தரிலும் நமக்குச் சேர்வுபட்டு நின்று பணி செய்கிற இராஜராஜக் கற்குடியராயனும் இராஜ கம்பீர அஞ்சுகோட்டை நாடாழ்வானும் உள்ளிட்டாரை

அத் துறைகளில் நின்றும் வெள்ளாற்றுக்கு வடகரையிலே போதப் பண்ணி..."[1]

அடுத்தபடியாக உள்ளது மூன்றும் குலோத்துங்கனுடைய சிதம்பரம் கல்வெட்டு. அதன் பகுதி பின்வருமாறு :

"விக்கிரம பாண்டியன் வேண்ட விட்ட தண்டால்
வீரபாண்டியன் மகன்பட ஏழகம்பட[2]
மறப்படைப்படச் சிங்களப் படை
மூக்கறுப் புண்டு அலைகடல் புக"

கடைசியாக உள்ளவை புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்துச் சாசனங்கள். அவற்றிலே வரும் பகுதி "மறப்படையுடன் ஏழகப்படை சிறைப்பட்டு விழத்தடிந்து" என்பதாகும்.

இந்தச் சாசனங்களிலே காணப்படும் ஏழகத்தார் யார் என்பது நிர்ணயிக்கப்பட வில்லை. ஏழகத்தார் என்னும் சொல் ஏழகத்து மக்கள் எனப் பொருள்படும். ஏழகம் என்பது மதுரை ஜில்லாவில் உள்ள ஏடகம் (திருவேடகம்) என்னும் ஊராக இருக்குமோவென்று டாக்டர் ஹுல்ஷ் சந்தேகப்பட்டார். (தே. இ. சாசனங்கள், மூன்றும் வால்யூம், பக்கம் 212, கீழ்க்குறிப்பு.) தேவாரத்திலும் அவ்வூர் ஏடகம் என்றேதான் காண்கிறது. ஸ்ரீ கே. ஆர். ஸ்ரீநிவாஸன் அவர்கள் காரைக்குடிக்குப் பக்கத்தில் உள்ள கழனிவாசல் என்பதே ஏழகமாக இருக்க வேண்டும் என்று கருதுகிறார். (புதுக்கோட்டை ஸம்ஸ்தானச் சாசனங்கள், ஆங்கில மொழிபெயர்ப்பு, இரண்டாம் பாகம், பக்கம் 141, கீழ்க்குறிப்பு 62). எனினும், திருவாலங்காட்டுக் கல்வெட்டிலே பாண்டி நாட்டு ஏழகத்தார் என்று காண்பது கவனிக்

---

1. எபி, இந்திகா, இருபத்திரண்டாம் வால்யூம், பக்கம் 90. அதிலே வெளியாகியுள்ள பாடம் 'சேர்வுபட்டு நின்றுடன் செய்கிற' என்பதாகும். ஆயினும் அவ்விடம் வெளியாகியிருக்கும் மசிப்படத்தைக் கவனித்தால் 'சேர்வுபட்டு நின்று பணிசெய்கிற' என வாசிக்கலாம் என்றே தோன்றுகிறது.

2. இந்தப் பகுதியை 'ஏழக[ப்]ப[டை*]ட மறப்படை பட' எனவும் கொள்ள முடியும்.

U

கத்தக்கது. ஏழகத்தார் பாண்டி நாட்டில் மட்டுமல்லாமல் வேறு இடங்களிலும் இருந்து வந்தனர் என்பது அதிலிருந்து நன்கு விளங்கும்.

ஏழகத்தார் ஏதோ ஒரு நாட்டு அரசுரிமை பெற்றவர்கள் என்பதும் கல்வெட்டுக்களிலிருந்து தெரிகிறது. புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்திலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டில் வீரபாண்டியபுரமான ஏழகச்சக்கரவர்த்திப் பெருந்தெரு என்னும் ஊர் கீழ்க்குண்டாற்றுப் பகுதியிலே அடங்கியதாகக் குறிக்கப்பட்டுள்ளது. (புதுக்கோட்டை ஸம்ஸ்தானச் சாசனங்கள், 450). மற்றொரு சாசனத்தில் வீரபாண்டிய புரமான ஏழகப் பெருந்தெருவில் உள்ள கழனிவாசல் குறிக்கப் பெற்றுள்ளது. (தே. இ. சாசனங்கள், எட்டாம் வால்யூம், 183 நெ). கழனிவாசலை இப்போது காரைக்குடிக்குப் பக்கத்தில் உள்ள ஊராகக் கொள்ளலாம். புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்து நெய்வாசலிலிருந்து கிடைக்கும் முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனுடைய ஆட்சியின் ஐந்தாம் ஆண்டு கொண்ட ஒரு கல்வெட்டு அவ்வூர்க் குளத்திலிருந்து நீர் பாய்ச்சிக் கொள்ளும் உரிமையைக் கோயிலுக்கு விற்றுக் கொடுத்த ஊர்ச்சபையார் வரிவிலக்கு அளித்த சந்தர்ப்பதைக் கூறும்போது, "எப்பேற்பட்ட...றவதரங்களிலும் நீரிலும் இராஜ கோயிற்றமத்திலும் ஏழகத்தார் கோயிற்றமத்திலும் இறை குடிமை எச்சோறு..." என்ற பகுதி காணப்படுகிறது. (புதுக்கோட்டைச் சாசனங்கள், 259). இவற்றால் ஏழகத்தாருக்கு அரண்மனை, படை, கஜானா முதலிய ராஜ சின்னங்கள் பலவும் இருந்தமை தெளிவாகும்.

இந்தப் போரைப்பற்றி மஹாவமிசத்தில் காணும் விவரத்திலே பாண்டியர்களுடைய பக்கத்திலே போரிட்ட அதிகாரிகள், தண்டநாயகர்கள் ஆகியவர்களுடைய பெயர்கள் விவரமாகக் கொடுக்கப்பட்டிருப்பதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். அவர்களிலே நிஷதராஜன் (நிகழ்தராஜன்), மாளவச்சக்கரவர்த்தி ஆகியோர் பெயர்களும் காணப்படுகின்றன. நிஷதராஜன், மாளவச்சக்கரவர்த்தி ஆகிய பெயர்களைத் தாங்கிய சிற்றரசர்கள் இப்போது செட்டிநாட்டுப் பிரதேசம் என்று வழங்கப்படும் பகுதியில் கிடைக்கும் சாசனங்களிலே மிகுதியும் காணப்படுகின்றனர். ஆனால் ஏழகத்தா

ருடைய பெயர் மஹாவமிசத்திலே காணப்படவில்லை. சோழ சாசனங்களிலே அவர்கள் தனியாகக் குறிக்கப்பட்டிருக் கையில் மஹாவமிசத்திலே அவர்கள் பெயரே காணப்படாமல் இருப்பது ஆச்சரியம் தான். மற்றவர்களைத் தனித்தனியாகப் பிரித்துக் கூறிய மஹாவமிசத்தின் ஆசிரியர் ஏழகத்தாரின் பெயரை அவ்விதம் தனியாகக் கொடுக்க வேண்டும் என்று நினைக்க வில்லை போலும். அவர்களைப் பாண்டியர்களில் ஒரு பிரிவினராகவே அந்நூல் ஆசிரியர் கொண்டிருத்தல் வேண் டும். அதைக் கவனிக்கும்போது ஏழகத்தார் பாண்டியர்களிலே ஒரு பிரிவினர் என்றும், அவர்கள் பாண்டிய நாட்டு எல்லைக்கு அப்பால் உள்ள ஓரிடத்திலே இருந்து வந்தனர் என்றும், பாண்டிய சிங்காதனத்துக்காகத் தாயாதிச் சண்டை நடந்து வந்த இச்சமயத்தில் அவர்களில் சிலர் தங்கள் பூர்வதேசத் துக்கு வந்து தங்கித் தாயாதிகளுக்கு உதவிபுரிந்து வந்தனர் என்றும் கொள்ளலாம்.

அவர்கள் யார் என்பதை அறிவதற்குக் கொங்கு நாட்டுச் சாசனங்கள் சில உதவியாக உள்ளன. மதுரை ஜில்லா பழனிக்குப் பக்கத்தில் உள்ள கீரனூர் என்னும் கொழுமம் கொண்ட சோழ நல்லூர் அந்நாளிலே கொங்கு நாட்டுப் பகுதி யில் அடங்கியிருந்தது. அவ்வூரில் வாகீச்வரர் கோவிலிலே கொங்கு நாட்டு அரசனை திரிபுவன சக்கரவர்த்தி வீர ராஜேந்திர தேவனுடைய கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள் ளன. அவற்றுள் அவனுடைய ஆட்சியின் பதின்மூன்றும் ஆண்டு கொண்ட (தெ. இ. சாசனங்கள், ஐந்தாம் வால்யூம், 262-நெ.) ஒன்று கோயிலில் ஒரு சந்தி விளக்கு எரிக்க அமரபுஜங் கப் பல்லவரையன் என்பான் ஒரு கழஞ்சு பொன் அளித்த செய்தியைக் கூறுகிறது. அந்தப் பொன்னைக் கொண்டு விளக்கு எரிக்க ஒப்புக் கொண்டவன் அக்கோயிலில் காணி உடைய சிவப்பிராம்மணன் காசிபன் பாண்டிய தனஞ்சய சைவேச்வர முடையானை சைவசக்கரவர்த்தி என்றும் அது கூறுகிறது. அதே இடத்தில் அவ்வரசனுடைய பதினோராம் ஆண்டு கொண்ட மற்றொரு கல்வெட்டு (ஷை நெ. 264), அரை யன் சிறியனை வேந்த சூளாமணிப் பல்லவரையன் என்பான் அளித்த பொன்னைக் கோயில் சிவப்பிராம்மணன் பாண்டிய தனஞ்சய சுந்தனை குலோத்துங்க சோழ பட்டன் என்பவன்

கைக் கொண்ட செய்தியைத் தெரிவிக்கிறது. அவ்வரசனுடைய பன்னிரண்டாம் ஆண்டு கொண்ட ஒரு கல்வெட்டு (ஷை நெ. 265) குருளன் கூத்தன் ஆன உத்தமக்கோன் என்பான் சந்தியா தீபத்துக்காக அளித்தப் பொன்னை அக்கோயில் காணியுடைய சிவப்பிராம்மணர் காசிபன் பாண்டிய தனஞ் சய சைவேச்வர முடையானை சைவ சக்கரவர்த்தியும் பாண் டிய தனஞ்சய சுந்தனை குலோத்துங்க பட்டனும் ஆகிய இரு வரும் கைக் கொண்டனர் என்று கூறுகிறது.

இந்தச் சாசனங்களிலே கண்ட கொங்கு மன்னனை வீரராஜேந்திர தேவன் சகாப்தம் 1129 (அதாவது கி.பி. 1207-08) சிங்காதனம் ஏறினன். இது கோயம்பத்தூர் ஜில்லா உடு மலைப் பேட்டைத் தாலூகாவில் உள்ள குமரலிங்கம் என்னும் கிராமத்திலிருந்து கிடைக்கும் அவனுடைய சாசனம் (1909-ஆம் ஆண்டு 135 நெ.) ஒன்றால் விளங்குகிறது. அவ்வூரில் உள்ள கரிவரதராஜப் பெருமாள் கோயிலில் காணும் அந்தச் சாசனம் திரிபுவன சக்கரவர்த்திகள் கோனேரின்மை கொண்டான் வீரராஜேந்திர தேவனுடைய ஆட்சியின் இரு பத்து ஐந்தாம் ஆண்டும் சகாப்தம் 1153-ம் கொண்டது. பாண்டி மண்டலத்துக் கீழ் இரணியமுட்ட நாட்டுத் திருமாலி ருஞ்சோலை அழகர் கோயிலிலே வீரராஜேந்திரன் சந்திக் கும் பத்து ஆழ்வார்களுக்கு அமுதுபடி சாத்துப்படிக்குமாக நிலம் அளிக்கப்பட்ட செய்தியைத் தெரிவிக்கிறது. இதனால் கீரனூரிலிருந்து கிடைத்த மேற்கண்ட சாசனங்கள் கி. பி. 1217-க்கும் 1220-க்கும் இடைப்பட்ட காலத்தைச் சார்ந்தவை என்பது தெளிவாகும்.

இந்தச் சமயத்திலே தான் கி. பி. 1216-இல் பாண்டிய சிங்காதனம் ஏறிய மாறவர்மன் சுந்தர பாண்டியன் அது காறும் இருந்த நிலையைத் தலைகீழாக மாற்றிச் சோழர்களைத் தோற்கடித்துப் பெருவெற்றி கொண்டு தமிழ் நாடு முழுவதை யும் விஜயம் செய்தான். இவ்விதம் பாண்டியர்கள் வெற்றி யடைந்த காலத்தில் கொங்கு நாட்டுப் பகுதியிலே அரசுரிமை கொண்டிருந்த பாண்டியன் ஒருவனிடமிருந்து சிவப்பிராம் மணர்கள் பாண்டிய தனஞ்சயன் என்ற விருதைப் பெற்றிருத் தல் வேண்டும்.

ஆனல் மாறவர்மன் சுந்தர பாண்டியனே தனஞ்சயன் என்ற பெயரையோ பட்டத்தையோ கொண்டிருந்ததாகத் தெரியவில்லை. அதுமட்டுமல்ல. மதுரையிலிருந்து அரசுபுரிந்த பாண்டிய மன்னர்களில் எவருமே அதைத் தரித்திருந்ததாகத் தெரியவில்லை.

எனினும், ஸ்ரீ பாண்டிய தனஞ்ஜய என்று பெயர் பொறிக்கப்பட்ட தங்க நாணயங்கள் சில கிடைத்துள்ளன. இந் நாணயங்கள் ஒரு பக்கத்தில் வலதுபுறத்தைப் பார்க்கும் இரண்டு மீன்களும் இருபுறங்களிலும் பக்கத்துக்கு ஒன்ருகக் குத்து விளக்கும் மேலே ஆலவட்டக் குடையும் கீழே வில்லும் கொண்டு காணப்படுகின்றன. மறுபுறத்திலே அரசன் பெயர் கன்னடத்திலே எழுதப்பட்டுள்ளது. (தென்னிந்திய ஆர்க்கியலாஜிகல் ஸொஸைட்டியின் டிரான்ஸாக்ஷன்ஸ்,முதல் வால்யூம், 1955, பக்கங்கள் 28, 31).

இந்த நாணயத்திலே காணும் கன்னட எழுத்தைக் கொண்டு அது கன்னட மொழியைப் பேசும் பிரதேசத்தை ஆண்டு வந்த அரசன் ஒருவனுடையதாக இருக்க வேண்டும் என்று நிச்சயமாகக் கொள்ளலாம். பாண்டியன் என்றப் பட்டப் பெயர் தரித்து மேலைக் கடற்கரை ஓரமாகத் துளு நாட்டை ஆண்டு வந்த ஆளுப மன்னர்களிலே தனஞ்ஜயன் என்ற பெயர் சகஜமாகக் காணப்படுகிறது. அந்தப் பெயர் கொண்டவன் ஒருவன் அங்கே அந்நாளில் அரசுக்கட்டிலில் வீற்றிருந்திருக்கிறன். தென் கன்னடம் ஜில்லா கர்க்கல் தாலூகாவில் வராங்கா என்னுமிடத்திலிருந்து கிடைக்கும் ஒரு சாசனம் (1929-ஆம் ஆண்டு 526 ந.) கன்னட சுலோகங்களால் ஆனது குலசேகரன் என்னும் ஆளுப அரசன் ஒருவனுடைய தேவியான ஜாக்கலமாதேவி என்பவள் அளித்த தானத்தைத் தெரிவிக்கிறது அந்தக் கல்வெட்டு. அதிலே அவ்வரசனுக்குப் பண்டித பாண்டியன், பாண்டிய தனஞ்ஜயன் என்ற விருதுகள் அளிக்கப்பட்டுள்ளன. இந்தக் குலசேகரன் சகாப்தம் 1127, அதாவது கி. பி. 1205-06 ஆம் ஆண்டு, அரசு புரிந்திருக்கிறன்.

பாண்டியர்களுக்கும் துளு நாட்டுக்கும் உள்ள சம்பந்தத்தைப்பற்றி நாம் ஏற்கெனவே குறிப்பிட்டிருக்கிறேம். (மேலே

நுரு—நுச பக்கங்கள்) முதலாம் இராஜாதிராஜன் இலங்கையிலே கொண்ட வெற்றிகளை எடுத்துக் கூறும் மெய்க்கீர்த்திப் பகுதியையும் இலங்கைச் சரித்திரமான மஹாவமிசத்தில் காணும் பகுதியையும் ஒப்பிட்டுப் பார்த்திருக்கிறோம். மஹாலானகித்தி என்பானுடைய ஒரே மகனை விக்கிரம பாண்டியன் இராஜாதிராஜனிடம் அடைந்த பயத்தால் நாட்டைத் துறந்து, துளு தேசத்தில் இருந்துவந்தான் என்பதையும் அவன் தந்தை இறந்த செய்தியைக் கேட்டபிறகே அவன் துளு நாட்டிலிருந்து இலங்கை சென்றான் என்பதையும் குறிப்பிட்டிருக்கிறோம். கி. பி. 13-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆளுபநாட்டை ஆண்டு வந்த பல்லமஹாதேவி என்பவள் ஸோமகுலத்தில் மானுபரணேச்வர தேவர் வம்சத்திலே பிறந்தவள் என்று தென் கன்னடம் ஜில்லா உடுப்பித் தாலூகாவில் அம்மஞ்சி என்னும் இடத்திலிருந்து கிடைத்த ஒரு கல்வெட்டு தெரிவிக்கிறது. (1932-ஆம் ஆண்டு 336 நெ.)

கி. பி. 1251-ஆம் ஆண்டு பாண்டிய சிங்காதனம் ஏறிய ஜடாவர்மன் சுந்தர பாண்டியனுடைய சாசனம் ஒன்று ஸ்ரீரங்கம் (1939-ஆம் ஆண்டு 81 நெ.) ரங்கநாதருடைய ஆலயத்தில் கிடைத்துள்ளது. அதிலே அவன் கேரள, ஹொய்சள ராஜ்யங்களைத் தோற்கடித்தான் என்றும், தன் தம்பியான வீர பாண்டியனைக் கொங்கண ராஜ்யத்துக்கு அரசனாக முடிசூட்டினான் என்றும் கூறப்பட்டிருக்கிறது. கொங்கண ராஜ்யம் என்று அதிலே குறிக்கப்பட்டிருப்பது துளுநாடே போலும். அப்போது ஆளுப நாட்டை வீர பாண்டிய ஆளுபேந்திரன் என்பான் ஒருவன் ஆண்டுவந்த செய்தி தெரிகிறது. சகாப்தம் 1173, அதாவது கி. பி 1261-62 கொண்ட அவனுடைய சாசனம் ஒன்று மங்களூரில் கிடைத்திருக்கிறது. (1929-ஆம் ஆண்டு 370 நெ). அதேபோலக் கொங்கு நாட்டிலும் கி. பி. 1254-ஆம் ஆண்டில் சிங்காதனம் ஏறி, இரு கொங்குகளையும் வெற்றி கொண்ட வீர பாண்டியன் என்பான் ஒருவனும் இருந்திருக்கிறான். கொங்கு நாட்டுக்கும், கொங்கண ராஜ்யத்துக்கும் ஏதாவது தொடர்பு உண்டா என்பதை இப்போது நாம் நிச்சயமாகச் சொல்லமுடியாது. ஆயினும் பாண்டிய தனஞ்சயன் என்ற பட்டப்பெயர் கொண்ட ஆளுப அரசன் ஒருவன் கொங்கு நாட்டை ஆண்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

இதே சமயம் மதுரைப் பாண்டிய மன்னர்களிலும் ஜடா வர்மன் வீர பாண்டியன் என்பான் ஒருவன் இருந்திருக் கிறான். அவனும் கி.பி. 1253 அல்லது 1254-ஆம் ஆண்டிலே பாண்டிய சிங்காதனம் ஏறியவன். (இந்தியன் ஆண்டிகுவரி, நாற் பத்திரண்டாம் வால்யூம், நாற்பத்து நாலாம் வால்யூம் இரண் டும் பார்க்க). இப்போது உள்ள நிலையிலே மதுரைப் பாண்டியர், கொங்கு நாட்டரசர், துளு நாட்டு ஆளுபர் ஆகிய மூவரிடை யிலும் காணப்படும் வீரபாண்டியன் வெவ்வேறானவனா அல்லது ஒருவனே தானா என்பதை நாம் நிர்ணயிக்கமுடியாது. ஆயினும், மதுரை மன்னனான ஜடாவர்மன் வீர பாண்டிய னுடைய ஆட்சியின் பதினோராம் ஆண்டு கொண்ட ஒரு கல் வெட்டில் அவனுடைய சைன்னியத்தில் கன்னட தேசத்துக் குதிரைச் சேவகர்கள் இருந்தனர் என்பது காணப்படுகிறது. (1901 ஆம் ஆண்டு 134 செ.)

இவற்றால், மதுரைப் பாண்டியர்களுக்கும் துளுநாட்டுப் பாண்டியர்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்துவந்தது தெரியவரும். துளுநாட்டுப் பாண்டியர்கள் மருமக்கள் தாய முறையைச் சில சமயங்களில் அனுஷ்டித்து இருக்கிறார்கள். அதனால் மதுரைப் பாண்டியர்களில் சிலர் அங்கே அரசுரிமை அடைவது சாத்தியமாக இருந்திருக்கலாம்.

இதுவரையில் கூறியதைக் கொண்டு கவனித்தால், சோழ சாசனங்களிலே ஏழகத்தார் என்று குறிக்கப்பட்டிருக்கிறவர் கள் துளுநாட்டுப் பாண்டியர்களாகவே இருத்தல் வேண்டும் எனக் கொள்ளலாம். துளுநாடான கொண்கானமும் ஒருகாலத் திலே தமிழ் நாட்டுப் பகுதியாகத்தான் இருந்துவந்தது. துளு நாட்டுப் பகுதியைப் பற்றியும் கொண்கான மக்களைப் பற்றி யும் சங்கநூல்களிலே குறிப்புகள் காணப்படுகின்றன. (அக நானூறு, பாடல் 15; குறுந்தொகை, பாடல் 73). நற்றிணையில் ஒரு பாடலிலே பின்வரும் பகுதி காணப்படுகிறது:

“பொன்படு கோண்கான நன்ன னன்னாட்(டு)
ஏழிற் குன்றம் பெறினும் பொருள்வயின்
யாரோ பிரிகிற் பவரே”

—(நற்றிணை, பாடல் 391)

இதிலிருந்து கொண்கானம் பொன் விளையும் பூமி என்றும் நன்னன் என்னும் தலைவனுக்கு உரியது என்றும் ஏழில் குன்றம் என்னும் மலை அங்கே இருந்தது என்றும் தெரிகிறது. மத்திய காலத்திலே சோழ சாசனங்களில் காணப்படும் ஏழகம் என்பது சங்க இலக்கியங்களில் காணும் ஏழில் என்பதே போலும். இரண்டும் ஒரே பொருளைக் கொடுப்பன. கொண்கானம் அல்லது கொங்கணமும் ஏழு பிரிவுகளாக அமைந்தது; அதனாலேயே சப்த-கொங்கணம் என்ற பெயரைப் பெற்றது. ஆகவே ஏழகத்தார் என்பார் துளு நாட்டுப் பாண்டியர்களே என்று கொள்வதில் தவறு ஏதும் இருத்தற்கில்லை.

## தாயாதிச் சண்டையின் விளைவு

பாண்டிய நாட்டிலும், சோழ நாட்டிலும் சிங்காதனத்துக்காகப் போட்டி ஏற்பட்டு நடந்த சண்டைகள் பக்கத்து அரசர்களையும் சண்டையிலே ஈடுபடச் செய்து தென்னாடு முழுவதையுமே கலக்கிவிட்டன. இதன் பயனாக எதிர்பாராத விளைவுகள் பல தோன்றின. அண்டை அயல் அரசுகளுக்கிடையே இருந்த சுமுகமான உறவிலும் மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. இந்த நிலை போட்டியிலே சம்பந்தப்பட்ட மூல புருஷர்கள் உயிருடன் இருந்த வரையில் நீடித்திருக்கக் காணலாம்.

மூன்றாம் குலோத்துங்கனுடைய மெய்க்கீர்த்திகளைக் கவனித்தால் அவன் வாழ்நாள் முழுவதையும் ஒரு நாடு இல்லாவிட்டால் மற்றொரு நாடு என்று ஏதாவது ஒரு நாட்டுடன் சதா சண்டை போட்டுக் கொண்டே இருந்தான் என்பது தெரிய வரும். அவன் சோழ சிங்காதனத்திலிருந்து விரட்டிய இராஜாதிராஜன் சோழ சாம்ராஜ்யத்தின் வடபகுதியாக இருந்த வேங்கிக்குச் சென்று, அங்கே இருந்த சிற்றரசர்களுடைய உதவியோடு அவ்விடத்திலே தங்கிவிட்டான். அது குலோத்துங்கனுக்குத் தீராத தொல்லையாகப் போய்விட்டது போலும். வேங்கியில் இருந்த சிற்றரசர்கள் தங்களிடம் தஞ்சம் புகுந்த அரசனைக் கைவிடவில்லை. அவனையே பேரரசனாக மதித்து ஏற்றுக்கொண்டார்கள். அவ்விதம் செய்வதால் அவர்களுக்குச் சிரமம் ஏதும் இல்லை ; பொறுப்பும் இல்லை. அதற்குப் பதிலாக மூன்றாம் குலோத்துங்கனை உள்ளே நுழைய அனுமதித்தால்

நிலைமை அவர்களுக்கு விரோதமாகப் போய்விடும். பலம் பொருந்திய அவன் சிற்றரசர்களை ஓங்கவிடமாட்டான். அதனாலேயே அவர்கள் இராஜாதிராஜனை ஆதரித்துக் குலோத்துங்கனுக்கு விரோதமாக நின்றார்கள் போலும்.

## மூன்றாம் குலோத்துங்கன் வாரங்கல்மீது படையெடுத்துச் சென்றது.

முன்னாள் புதுக்கோட்டை ஸம்ஸ்தானப் பகுதியிலிருந்து கிடைத்துள்ள இம்மன்னனுடைய இரண்டு கல்வெட்டுக்களைப் பற்றி ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். புயல் வாய்த்து வளம் பெருக என்று தொடங்கும் அம் மெய்க்கீர்த்தி பல புதிய விஷயங்களைக் கூறுகின்றது. அதிலே அவன் தாங்கரும் போர் நடத்தி வடுகரை வெற்றிகொண்டு வேங்கி மண்டலத்தைத் தன்னதாக்கிக் கொண்டபின் பொன் மழை பெய்து உறங்கை என்னும் பொன்னகர் புக்கருளினான் என்று கூறப்பட்டிருக்கிறது (புதுக்கோட்டை ஸம்ஸ்தானச் சாசனங்கள், 163, 166-நெ.). உறங்கை என்று மெய்க்கீர்த்தியில் காண்பது காகதீயவமிசத்து அரசர்களுடைய தலைநகரான ஒருங்கல், அதாவது இப்போது வாரங்கல் என்று வழங்கப்பெறும் இடமாகும். இதிலிருந்து குலோத்துங்கன் காகதீய மன்னர்களோடு போர்புரிந்து வெற்றிகொண்டு பொன் மழை பெய்து அவர்கள் தலைநகரான வாரங்கல் நகரை அடைந்தான் என்று கொள்ளவேண்டும் என்பது தெளிவாகும். ஆனால் ஆராய்ச்சியாளர்கள் இதை மிகைபடக் கூறியதென்று கொள்வர்.

ஆயினும் காகதீயர்களுடைய தலைநகரிலே பொன் மழை பெய்ததென்ற சம்பவம் மற்றொரு சந்தர்ப்பத்திலும் கூறப்பட்டுள்ளது. இப்போது மத்தியப் பிரதேசம் என்று வழங்கப்பெறும் பிரதேசத்தில் பழைய பஸ்தர் ராஜ்யத்தில் உள்ள தந்தாவாரம் என்னும் கிராமத்தில் உள்ள தந்தேச்வரி ஆலயத்தின் ஸ்ரீபண்டாரத்திலே உள்ள கல்லில் பொறிக்கப்பட்டுக் காணும் ஒரு கல்வெட்டில்தான் (எபி. இந்திகா, பன்னிரண்டாம் வால்யூம், நெ. 30, பக்கங்கள் 242-50) அது குறிக்கப்பட்டுள்ளது. ஸம்ஸ்கிருதத்தில் ஒரு பாடமும், ஹிந்தியில் ஒரு பாடமும் கொண்ட அந்தக் கல்வெட்டு, விக்கிரம ஸம்வத்

ஸரம் 1760 (அதாவது கி. பி. 1703)-ல் திக்பாலதேவன் என்பான் தந்தாவாரத்துக்குக் குடும்ப யாத்திரை செய்து தன் குலதெய்வத்தை, அதாவது தந்தேச்வரி தேவியை, வழிபட்ட செய்தியைத் தெரிவிக்கிறது. அதிலே அவனுடைய வமிசாவளி கொடுக்கப்பட்டுள்ளது. பஸ்தர் ராஜ வமிசத்தைச் சேர்ந்த அவர்கள் வாரங்கல் நகரத்துக் காகதீய வமிசத்துப் பிரதாபருத்திரன் சகோதரனை அன்னமராஜன் வழி வந்தவர்களாம். பிரதாபருத்திரன் யவனர்களிடம், அதாவது முஸ்லிம்களிடம், தோல்வியுற்று நாட்டை இழந்தான் என்றும், பொன் மழை (கனகவர்ஷம்) பெய்ததால் உண்டான கலவரத்திலே அவன் உயிரை இழந்தான் என்றும், அதன்மீது பிரதாபருத்திரன் தம்பியான அன்னமராஜன் நாட்டைத் துறந்து வெளியேறி, பஸ்தர்ப் பகுதியை அடைந்து அங்கே தனக்கெனத் தனி ராஜ்யம் ஒன்று அமைத்துக் கொண்டான் என்றும் கூறப்பட்டிருக்கிறது. (சாசன இலாகாவின் 1909-ஆம் ஆண்டு அறிக்கை, பாரா. 66).

இந்தச் சாசனத்தில் காணும் பிரதாபருத்திரன் யார் என்பதைப்பற்றி ஆராய்ச்சியாளர் பற்பல விதமாகக் கருதுகிறார்கள். காகதீய அரசை முஸ்லிம்கள் கைப்பற்றிய சமயம் அரசுபுரிந்து வந்த கடைசி அரசனை பிரதாபருத்திரன் என்றே கொள்ளுவர் ஒரு சாரார். தில்லி சுல்தான் கையாஸ்-உத்-தீன் என்பானுடைய மூத்த மகனும் பட்டத்து இளவரசனுமான உலூக்கான் என்பான் நடத்திய இரண்டாவது 'திலிங்' படையெடுப்பில் இந்தப் பிரதாபருத்திரன் முஸ்லிம்களிடம் சிறைப்பட்டான். சிறைப்பிடித்த அவனை உற்றார் உறவினர்களோடு சேர்த்துத் தக்க காவலுடன் தில்லி நகருக்கு அனுப்பிவைத்தான் உலூக்கான். ஆனல் பிரதாபருத்திரன் தில்லி நகரம் போய்ச் சேரவில்லை. வழியில் விந்திய மலைப் பக்கத்தில் போய்க் கொண்டிருந்தபோது நர்மதா நதி தீரத்தில் அவன் தன் விருப்பப்படி உயிரைத் துறந்தான். இது கி. பி. 1323-ஆம் ஆண்டு நிகழ்ந்தது. (தென்னிந்தியாவில் முஸ்லிம்கள் ஆட்சி பரவிய ஆரம்பகால வரலாறு, பக்கங்கள் 118-120. இன்னும் டாக்டர் எம். ராமராவ் எழுதிய வாரங்கல் நகரத்துக் காகதீயர்களின் சரித்திரம், பக்கம் 98-பார்க்க). ஆயினும்

இந்தப் போர் சம்பந்தமாக எந்த இடத்திலும் பொன் மழை பெய்ததாகக் குறிக்கப் பெறவில்லை.

சாசனத்தில் கண்டுள்ள பிரதாபருத்திரன் இவனாக இருக்குமானால் அந்த வமிசத்தை நிறுவிய அவன் தம்பி அன்னமராஜனுக்கும் சாசனம் வழங்கிய திக்பாலதேவனுக்கும் இடையே சுமார் நானூறு ஆண்டுகள் இருக்கும். அன்னமராஜனுடைய பத்தாம் தலைமுறையில் வந்தவன் திக்பாலதேவன். அதனால் இந்த இடைவெளி மிகவும் அதிகமானது என்றும், பிரதாபருத்திரன் வேறு அரசனாக இருத்தல்வேண்டும் என்றும் சிலர் கொள்வர். பதினைந்தாம் நூற்றாண்டில் அரசு செலுத்திக் கி. பி. 1422-ஆம் ஆண்டில் அஹமத் ஷா பஹ்மனியால் வெற்றி கொள்ளப்பெற்ற அரசன் ஒருவனாக இருத்தல்வேண்டும் என்று ஓர் ஆசிரியர் கருதினர். (எபி· இந்திகா, பன்னிரண்டாம் வால்யூம், பக்கம் 243). ஒரிஸா, அதாவது உத்கல தேசத்துக் கஜபதி வமிசத்தைச் சேர்ந்த அரசன் ஒருவனாக இருக்கலாமென்று வேறு ஒருவர் நினைத்தார். (ஷை பக்கம் 244, கீழ்க்குறிப்பு),

ஆயினும் சாசனத்தின் வடமொழிப் பாடம், ஹிந்திப் பாடம் ஆகிய இரண்டையும் கவனித்தால் அதில் கூறப்பட்டிருக்கும் விவரம் கர்ண பரம்பரையாக வந்த இரண்டு மூன்று சம்பவங்களை ஒன்று சேர்த்து ஓர் உருவம் கொடுத்துப் பொறிக்கப்பட்டிருப்பதென்பது தெரியவரும். அவர்கள் குடும்பத்திலே வழங்கிவந்த கர்ண பரம்பரைச் செய்திகளைக் கொடுக்கும் அளவுக்குத்தான் அந்தச் சாசனம் உபயோகப்படும். முஸ்லிம்கள் காகதீய நாட்டைக் கொண்டது பிரசித்தமான சம்பவம். அப்போது பிரதாபருத்திரன் என்பான் காகதீய நாட்டை ஆண்டு வந்தான். அதேபோலப் பிரதாபருத்திரன் என்பான் ஒருவனுடைய காலத்தில் அவர்கள் தலைநகரிலே 'பொன் மழை' பெய்தது. அதன் பயனாக அப்போதும் அரசு நிலை குலைந்தது. பிரதாபருத்திரன் என்ற பெயர் கொண்ட ஒருவனை அதே பெயர்கொண்ட மற்றொருவனாக எண்ணி மயங்கி, இரண்டு சம்பவங்களையும் ஒன்று சேர்த்து ஒரே சம்பவமாகக் கொள்ளப்பட்டதென்றே எண்ண வேண்டியிருக்கிறது. பொன் மழை பெய்தது ஒரே ஒரு தடவைதான் நிகழ்ந்

திருத்தல் கூடும். இரண்டு தடவை இருக்காது. ஆகவே, இரண்டு இடங்களில் குறிக்கப்பட்டிருப்பதும் ஒரே சம்பவத்தைக் குறிப்பதாகவே கொள்ளவேண்டும்.

காகதீயர்களிலே ருத்திரன் என்ற பெயர்கொண்டு மூன்று அரசர்கள் இருந்தார்கள். நடுவில் உள்ளவர் பெண். ருத்திராம்பா என்ற பெயர் கொண்டவள். கடைசியான பிரதாப ருத்திரன் இந்த ருத்திராம்பாவின் பெயரன். அவளுக்குப் பின் சிங்காதனம் ஏறியவன். ருத்திரன் என்ற பெயரைக் கொண்ட முதல் அரசன் ருத்திராம்பாவின் தந்தையான கணபதியின் பெரிய தந்தை. கி. பி. 1151-ஆம் ஆண்டு முதல் கி. பி. 1196-ஆம் ஆண்டு வரையில் அவன் காகதீய நாட்டை அரசு புரிந்திருக்கிறான்.

இம்மன்னன் மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சிக் காலத்தில் அரசுபுரிந்திருக்கிறான். இவன் ஆட்சியின் முடிவிலும் காகதீய ராஜ்யத்துக்குப் பேராபத்து நேர்ந்திருக்கிறது. தேவகிரியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த சேவுணர் எனப்படும் யாதவ மன்னர்களிலே ஜைத்ரபாலன் என்பான் ருத்திர தேவனை வெற்றிகொண்டு போரிலே கொன்றான். இந்தச் செய்தி யாதவ மன்னர்களுடைய ராஜப் பிரசஸ்தியில் காணப்படுகிறது. ஹேமாத்ரி எழுதிய விரதகண்டத்தில் காணப்பெறும் அந்தப் பிரசஸ்தியில் பின்வரும் சுலோகம் உள்ளது.

> தீக்ஷித்வா ரணரங்கு தேவ யஜதே
> ப்ரோதஸ்த சஸ்த ச்ருவ:
> ச்ரோணீபிர் ஜகதீபதீந் ஹுதவதா
> யேந ப்ரதாபாநலே
> தைலங்காதிபதே: பசோர் விசஸநம்
> ருத்ரஸ்ய ரௌத்ராக்ருதே:
> க்ருத்வா பூருஷமேத யஜ்ஞவிதிநா
> லப்த த்ரிலோகீ ஜய:

" யுத்தபூமியிலே வேள்விக்கான தீக்ஷை செய்துகொண்டு ஆயுதங்களாகிய அகப்பைகளால் தன்னுடைய பிரதாபம் என்னும் நெருப்பிலே அநேக அரசர்களை அவிர்ப்பித்துத் தைலங்காதிபதியும் (அதாவது தெலுங்குதேச அரசனும்) ருத்திரனைப்

போன்ற தோற்றமுடையவனுமான ருத்திரனைப் பசுவாகக் கொண்டு புருஷமேதம் என்னும் வேள்வியைச் செய்து மூன்று உலகத்தையும் வென்றான்." (பம்பாய் கெஜட்டியர், முதல் வால்யூம், இரண்டாம் பாகம், பக்கங்கள் 238-9. இன்னும் 292-ம் பக்கத்தில் உள்ள 41-ஆம் சுலோகம்). அசுவமேதம் செய்வதால் பூலோகம் முழுவதையும் வென்ற பதவி கிட்டுவதுபோல, புருஷ மேதம் அல்லது நரமேதம் செய்வதால் மூன்று உலகத்தையும் வென்ற பதவி கிட்டுகிறதாம்.

ஜைதுகி என்றும் ஜைத்ரவர்மன் என்றும் வழங்கப் பெறும் ஜைத்ரபாலன் சேவுண தேசத்தைக் கி. பி. 1191-ஆம் ஆண்டுமுதல் கி.பி. 1210-ஆம் ஆண்டுவரையில் அரசு புரிந்திருக்கிறான். அவனுடைய இவ் வெற்றி அவ்வமிசத்தைச் சேர்ந்த ராமசந்திர தேவனுடைய (கி. பி. 1292-ஆம் ஆண்டு கொண்ட) பைட்டான் (அதாவது பிரதிஷ்டானபுரத்துச்) சாசனத்தில் குறிக்கப்பட்டுள்ளது. அதிலே ஜைத்ரபாலன் திரிகலிங்காதிபதியைப் போரில் கொன்று அவன் நாட்டைக் கைக்கொண்டான் என்று காணப்படுகிறது. இன்னும், "கருணைசாகரமான அம்மன்னன் கணபதியைச் சிறையிலிருந்து வெளிக்கொணர்ந்து அவனை அரசனாக முடிசூட்டினான்" என்றும் அது கூறுகிறது. (இந்தியன் ஆண்டிகுவரி, பதினான்காம் வால்யூம், 316-பக்கம். இன்னும் இருபத்தோராம் வால்யூம், 197-பக்கம்). ஜைத்ரபாலன் மகனான சிங்கணனுடைய காலத்துச் சாசனம் ஒன்று பாஹல் என்னுமிடத்திலிருந்து கிடைத்துள்ளது. அதிலே ஜைத்ரபாலன் கணபதியை ஆந்திரநாட்டுக்கு அரசனாக முடிசூட்டிவைத்தான் என்னும் செய்தி காணப்படுகிறது.

கணபதியின் ஆட்சியிலே அவன்கீழ்ச் சிற்றரசனாக ரேசர்லா என்னுமிடத்திலிருந்து ஆண்ட ருத்திரன் என்பானுடைய பாலம்பேட்டைக் கல்வெட்டிலே பின்வரும் செய்தி காணப்படுகிறது. (ஹைதராபாத் ஆர்க்கியலாஜிகல் ஸீரிஸ், நெ.3, சுலோகங்கள் 21-24). கி. பி. 1213-ஆம் ஆண்டுகொண்ட அச்சாசனம், "காகதீய மன்னனை ருத்திரதேவன் இறந்தவுடனே காகதீய நாட்டைக் கவர்ந்து கொள்ளும் நோக்கத்துடன் விரோதிகள் பலர் அந்நாட்டின்மீது படையெடுத்து வந்தனர்.

ருத்திரன் அந்த விரோதிகளை எதிர்த்தான். அவர்களிலே ஒருவன் தலையைக் கொய்து ஈட்டியிலே செருகினன். இதைக் கண்ட நாகதி அரசன்போன்ற படையெடுப்பாளர்கள் தங்கள் உயிருக்குப் பயந்து ஓடினர்கள். இவ்விதம் காகதீய ராஜ்ய லக்ஷ்மி முள்ளை மிதித்தவுடன் ருத்திரன் அவளைத் தூக்கி, முள்ளை அகற்றி அவளைத் திரும்பவும் பழைய ஸ்தானத்தில் நிலைநிறுத்தினன்" என்று கூறுகிறது.

காகதீய மன்னனன ருத்திரதேவனுக்குப் பிறகு சிங்காதனம் ஏறுவதற்கு உரியவனக அவனுக்குப் பிள்ளை யாரும் இல்லை யென்றே தெரிகிறது. உப்பரப்பள்ளிச் சாசனமும், (ஹைதராபாத் ஆர்க்கியலாஜிகல் ஸீரீஸ், நெ. 3) கர்ண பரம்பரைச் செய்திகளும் அவனுக்குப் பின் சிங்காதனத்திலமர்ந்த கணபதி தேவனை ருத்திரனுடைய மகன் என்றே குறிக்கின்றன. ஆயினும் சாசன இலக்கிய வழக்காறு முழுவதிலும் ருத்திர தேவனுடைய தம்பியான மகாதேவனுடைய மகனகவே கணபதி குறிக்கப்பட்டுள்ளான். (டாக்டர் எம். ராமராவ் எழுதிய வாரங்கல் காகதீயர்களின் சரித்திரம், பக்கம் 53). இன்னும், ருத்திரதேவனுடைய ஆட்சியின் கடைசிக் காலத்தில் ருத்திரதேவனுக்கும் அவன் தம்பி மஹாதேவனுக்கும் அரசுரிமை விஷயமாக மனவேற்றுமை ஏற்பட்டு இருவரும் சண்டைபோட்டுக் கொண்டார்கள் என்றும் ஒரு கதை உண்டு. (பிரதாப சரித்திரமு என்னும் தெலுங்கு நூல், 29-30-பக்கங்கள்). அவர்களுக்கு வேறு சகோதரர்களும் இருந்தார்கள் என்று தெரிகிறது.

அப்போது என்ன நடந்ததென்ற விவரம் நமக்கு நிச்சயமாகத் தெரியவில்லை. ஆயினும் அந்தச் சந்தர்ப்பத்தில் காகதீய ராஜ்யத்தின்மீது சேவுணர்கள் எனப்பெறும் யாதவர்களுடைய படையெடுப்பு ஒன்று நிகழ்ந்ததென்பது மட்டில் நிச்சயமாகத் தெரிகிறது. குலோத்துங்கனும் ஜைத்ரபாலனேடு இந்தப் படையெடுப்பிலே ஈடுபட்டிருந்தான் போலும். காகதீய ருத்திரனிடம் அவன் விரோதம் பாராட்டுவதற்குத் தகுந்த காரணங்களும் இருந்திருக்கவேண்டும்.

காகதீய அரசே மேலைச் சாளுக்கிய மன்னனான ஆரும் விக்கிரமாதித்தியன் காலத்தில் ஏற்பட்டது. அவன் பேடன் என்பானுக்கு அநுமகொண்டாப் பகுதியை வழங்கினான். அதுவே காகதீய அரசுக்கு அடிகோலியதாகும். அதன் பின் காகதீயர்கள் தங்கள் பேரரசர்களான மேலைச் சாளுக்கியர் களுக்கு விசுவாசமாக நடந்துகொண்டிருக்கிறார்கள். கலசூரி யர்கள் சாளுக்கிய ராஜ்யத்தை அபகரித்ததைக் காகதீயர்கள் எதிர்த்திருத்தல் இயற்கையே. ருத்திரதேவனுடைய ஹனுமக் கொண்டாக் கல்வெட்டில் அவன் மைலகிதேவன் என்பானை வெற்றிகொண்டதாகக் குறிக்கப்பட்டுள்ளது. (இந்தியன் ஆண்டி குவரி, பதினோராம் வால்யூம், 59-ம் பக்கம் முதல்). இம் மைலகி தேவனைச் சேவுண அரசனான மல்லுகிதேவன் என்றே சிலர் கருதுவர். அது சரியாகத் தோன்றவில்லை. ருத்திரன் வெற்றி கொண்ட மைலகிதேவன் என்பான் கலசூரி வமிசத்தைச் சேர்ந்தவனாகவே இருத்தல்வேண்டும். அந்தப் பெயர் கொண்ட கலசூரி ராஜகுமாரர்கள் அப்போது நாட்டின் சில பகுதி களிலே ஆண்டுவந்திருக்கிறார்கள்.

மூன்றாம் குலோத்துங்க சோழனுடைய திரிபுவனம் கல் வெட்டிலிருந்து அவன் ஆட்சி வடக்கே சக்கரம் அதாவது சக்கரக் கோட்டத்திலிருந்து தெற்கே இலங்கையில் உள்ள அநுராதபுரம் வரையில் பரவியிருந்ததென்று தெரிகிறது. (1907-ஆம் ஆண்டு 190-நெ. சாசனம். இதே தொகுப்பில் 1007-நெ. சாசனத்தையும் பார்க்க). அவன் மெய்க்கீர்த்தி யிலும் ‘ஆழிமண்டலமும் ஈழமண்டலமும்’ அவன் ஆட்சியில் அடங்கியிருந்ததாகக் காணப்படுகிறது. ஆழிமண்டலம் என் பது சக்கரக்கோட்டப் பகுதியே போலும். (ஆழி - சக்கரம்). இவற்றால் சக்கரக் கோட்டமும் அந்நாளிலே சோழர்களுடைய ஆதிக்கியத்தில் இருந்து வந்ததென்பது விளங்கும். பஸ்தார்ப் பிரதேசம் சக்கரக் கோட்டத்தில் அடங்கியதாகும். ஆகவே ருத்திரதேவனுடைய தம்பியான அன்னமராஜன் பஸ்தார்ப் பிரதேசத்திலே தனக்கென ஒரு அரசை நிறுவிக்கொண்ட தும் மூன்றாம் குலோத்துங்க சோழனுடைய ஆதரவையும், உதவியையும் கொண்டே இருத்தல் வேண்டும்.

## மூன்றும் குலோத்துங்க சோழனும் இரண்டாம் பல்லாள தேவனும்

இரண்டாம் இராஜராஜன் தனக்குப் பின் சோழ சிங்காதனம் ஏறுவதற்கு உரிமையுள்ளவனென்று இரண்டாம் இராஜாதிராஜனைத் தேர்ந்தெடுத்ததை ஒப்புக்கொள்ளாமல், தானே அந்த உரிமை பூண்டவன் என்று குலோத்துங்கன் முதல் முதலாகப் பிரகடனம் செய்துகொண்டபோது அவனுக்குக் கர்நாடக தேசத்து அரசுகளில் சில ஆதரவளித்து உதவியாக நின்றனவென்பதை முன்னரே நாம் குறிப்பிட்டிருக்கிறோம். குலோத்துங்கன்கோவையிலிருந்து அவன் தந்தையின் பெயர் சங்கமராஜன் என்பதும் அண்ணன் பெயர் நல்லமன் என்பதும் தெரியவருகின்றன. இந்தப் பெயர்களும் அவன் கர்நாடகப் பிரதேசத்தோடு தொடர்பு உடையவன் என்பதையே உணர்த்துகின்றன. கர்நாடகப் பகுதியில் அரசு செலுத்திய ராஜகுடும்பம் ஏதோ ஒன்றில் மணம் புரிந்துகொண்ட சோழ இராஜகுமாரி ஒருத்தியின் மகனாகவே அவன் இருத்தல்வேண்டும் போலும். இவ்விதம் சோழ சிங்காதனத்துக்குக் குலோத்துங்கன் உரிமை கொண்டாடியதைக் கர்நாடக அரசுகளில் சில ஆதரித்ததை, குந்தள ராஜ்ய விவகாரத்தில் இரண்டாம் இராஜராஜன் தலையிட்டுப் பிரட்டன் ஒருவனைத் துரத்தி மேலைச் சாளுக்கிய மன்னன் ஒருவனைக் கல்யாணபுரத்து அரசனாக முடிசூட்டியதற்கு எதிரிடையான நடவடிக்கையாகவே கருதவேண்டும் போலும். இது கி. பி. 1163-ஆம் ஆண்டுக்கு அணித்தாக நடைபெற்றிருத்தல் வேண்டும்.

கர்நாடக அரசுகள் சில ஒன்றுசேர்ந்து சோழ சிங்காதனத்துக்குப் போட்டியாக ஒருவனை நிறுத்தி அவனுக்கு ஊக்கம் அளித்ததைக் கண்டு இரண்டாம் இராஜராஜன் சும்மா இருந்திருக்கமாட்டான். அவர்களுக்கு விரோதமாக அவன் ஏதாவது நடவடிக்கை எடுத்திருப்பான். அதற்குச் சிறிதுகாலத்துக்கு முன்பாகத்தான் மேலைச் சாளுக்கிய அரசை அபகரித்த கலசூரி மன்னனான பிஜ்ஜலன் கி. பி. 1167-ஆம் ஆண்டில் பட்டத்தைத் துறந்தான் என்பதையும், அவனுக்குப் பின் அவன் மகன் ஸோவிதேவன் என்றும் ராயமுராரி

என்றும் வழங்கப்பெற்ற சோமேச்வரன் சிங்காதனம் ஏறினன் என்பதையும், பட்டத்தைத் துறந்த சிறிதுகாலத்திற்கெல்லாம் பிஜ்ஜலன் கொலையுண்டு இறந்தான் என்பதையும் நாம் அறிவோம். பிஜ்ஜலன் சிங்காதனத்தைத் துறந்ததற்கு அந்நாட்டு அரசியலிலே சோழமன்னன் தலையிட்டதே காரணமாகவும் இருத்தல் கூடும்.

அவ்விதம் கருதுவதற்கான ஆதாரங்களும் இல்லாமல் இல்லை. அந்நாளிலே நுளம்பபாடியை உச்சங்கிதுர்க்கத்தைத் தலைநகராகக் கொண்ட பாண்டியவமிசக் கிளையினர் ஆண்டு வந்தார்கள். அவர்களிலே காமதேவன் எனப்பெறும் விஜய பாண்டியன் என்பான் அப்போது அரசுசெலுத்தி வந்தான். அவன் கலசூரியர்களுக்கு உறுதுணையாக நின்றவர்களில் ஒருவன். அந்த விஜயபாண்டியனோடு இரண்டாம் இராஜராஜ சோழன் போர்புரிந்திருக்கிறான். இது ஹொய்சள வேந்தனை இரண்டாம் பல்லாள தேவனுடைய சாசனங்களிலிருந்து தெளிவாகிறது.

பல்லாளதேவன் கி. பி. 1177-78-ஆம் ஆண்டில் உச்சங்கிதுர்க்கம் கோட்டையைக் கைப்பற்றியதோடு அதன் அரசனை விஜய பாண்டியனையும் சிறைப்பிடித்தான் என்று புகழப் பெறுகிறான். (எபி. கர்நாடிகா, ஐந்தாம் வால்யூம், பேலூர் 137, 175-நெ. சாசனங்கள்). அந்தக் கோட்டை பிறர் நுழையமுடியாத அரண் வலிகொண்டதென்று கருதப்பட்டு வந்தது. "அதன் மதில்கள் மிகவும் உயரமாம். கருடனாலும் அதன் உச்சியை அடையமுடியாதாம். பாதாளம்வரை செல்லும் ஆழமான அகழி அதனைச் சுற்றியிருந்தது. இவ்விதம் எட்டுத் திக்குகளையும் அடையக்கூடியபடி விசாலமாகவும், வானளாவ உயர்ந்தும் இருபுறங்களிலும் பரந்திருந்த அக்கோட்டை மூவுலகத்திலும் புகழ் பெற்றிருந்தது," (ஷை பேலூர் 72 நெ. சாசனம்). "சோழ மன்னன் அதைக் கைப்பற்றுவதற்காகப் பன்னிரண்டு வருஷங்கள் அதை முற்றுகையிட்டும், வெற்றி பெறாமல் கடைசியில் அம் முயற்சியைக் கைவிடவேண்டி நேர்ந்தது" என்று கூறப்படுவதிலிருந்து அந்தக் கோட்டையின் அரண் வலி நன்கு விளங்கும். எனினும் பல்லாளதேவனே அந்தக் கோட்டையையும் அதன் மன்னனையும் வெகு சுலபமாகக்

கைப்பற்றிவிட்டானும். அப்பால், அவன் பாண்டிய மன்னனை விடுதலைசெய்து அவனைத் திரும்பவும் சிங்காதனத்தில் அமர்த்தினனும். இவ்வெற்றி அவனுக்கு ஒரு சனிக்கிழமையிலே கிட்டியதாம். அதனால் அவன் 'கிரிதுர்க்கமல்லன்', 'சனிவாரசித்தி' என்பனபோன்ற விருதுகளைத் தரித்துக்கொண்டானும். ஆனால் இந்த விருதுகளை அதற்கு முன்னதாகவே கலசூரி மன்னர்கள் தரித்து வந்திருக்கிறார்கள்.

உச்சங்கி துர்க்கம் கோட்டையைக் கைப்பற்றமுடியாமல் சோழர்கள் பன்னிரண்டு வருஷகாலம் அதை முற்றுகையிட்டிருந்தது கி.பி.1177-78-ஆம் ஆண்டில்பல்லாளதேவன் அதைக் கைப்பற்றியதற்கு முன்னதாக இருத்தல்வேண்டும். உச்சங்கி துர்க்கத்து அரசனான விஜய பாண்டியன் அப்போது கலசூரி மன்னர்களின்கீழ்ச் சிற்றரசனாக நுளம்பபாடியை ஆண்டுவந்தான். அவன் கி. பி. 1171-ஆம் ஆண்டிலேயே ராஜிக சோள மனோபங்கன் என்னும் விருதைத் தரித்துக்கொண்டிருக்கிறான். (எபி. கர்நாடிகா, பதினோராம் வால்யூம், தாவனகரை 32 நெ. சாசனம்.) இந்த விருதிலே காணப்படும் ராஜிகசோழன் என்னும் பெயர் இரண்டாம் இராஜராஜனையே குறிக்கும் போலும். விஜய பாண்டியனுக்கு முன்னதாக அந்த வமிசத்து மன்னனான திரிபுவன மல்ல பாண்டியன் என்பான் ஒருவனும் இதே விருதைக் கொண்டிருக்கிறான். (ஷை ஹோளலகரை 68 நெ. சாசனம்.) அவன் மேலைச் சாளுக்கிய அரசனான ஆறாம் விக்கிரமாதித்தியன்கீழ்ச் சிற்றரசனாக ஆட்சி புரிந்தவன். அப்போது ராஜிகன் எனப்படும் இராஜேந்திரனான முதற் குலோத்துங்க சோழனுடைய ஆசை நிறைவேறாதபடி அவன் தடுத்துவிட்டதைக் குறிப்பதாக இந்த விருதை உச்சங்கிப் பாண்டியன் தரித்துக்கொண்டான். ஆயினும் இந்த விருதை அவனுக்குப் பின்னால் வந்தவர்கள் தரித்துக்கொள்ளவில்லை. ஆகவே அதைப் பரம்பரை விருதாகக் கொள்ளமுடியாது. எனினும், விஜய பாண்டியன் இப்போது சந்தர்ப்பம் சரியாக இருந்ததையொட்டிப் புதிய விருது ஒன்று கொள்வதைவிடப் பழைய விருதே ஏற்றது என்று அதனைத் தரித்துக்கொண்டான் போலும். இதனால் இரண்டாம் இராஜராஜனுடைய எண்ணம் நிறைவேறவொட்டாமல் விஜய பாண்டியன் அதை முறியடித்து விட்டதாகப் பெருமைகொள்வது நன்கு விளங்

கும். ஆகவே பன்னிரண்டு வருஷகாலம் உச்சங்கி துர்க்கத்தை முற்றுகையிட்டவன் இரண்டாம் இராஜராஜனாகவே இருத்தல்வேண்டும். அவனுக்குப் பின் சோழ சிங்காதனம் ஏறிய இரண்டாம் இராஜாதிராஜனும் அந்த முற்றுகையைச் சிறிது காலம் தொடர்ந்து நடத்தியிருத்தலும் கூடும்.

மைசூர் ராஜ்யத்துக் கடூர் ஜில்லாவில் ஆஸந்தி என்னுமிடத்தில் உள்ள ஈசுவரன் கோவில் ரங்க மண்டபத்தில் ஹொய்சள மன்னனான இரண்டாம் பல்லாள தேவனுடைய கல்வெட்டு ஒன்று இருக்கிறது. (ஷை ஆறும் வால்யூம், கடூர் 156-ம். சாசனம்.) அவனிடம் சிற்றரசனாக இருந்த கங்கவம்சத்து நரஸிம்ஹன் என்பான் அளித்த தானங்களைப்பற்றிக் கூறும் அந்தக் கல்வெட்டிலே நரஸிம்ஹன் புகழை எடுத்து உரைக்கும் பின்வரும் கன்னடச் செய்யுள் ஒன்று காணப்படுகிறது.

> கரிபதியப்ப மாளவ மஹீபதி
> பண்டன லாள பூமிபம்
> துரக சயங்களிந்தெ ஸெவ கூர்ஜ்ஜர
> பூபதி சோள பூபுஜர்ந்
> நெரெ திராந்து தாகே ரணரங்கதோள்
> ஓர்வ்வநே காதி கெல்தான் ஈ
> நரபதி பல்ல பூபன பெஸம் படேத் ஈ
> நரஸிம்ஹபூபுஜம்.

"யானைகளின் தலைவனான மாலவ மன்னன், போர்வீரர்களோடுகூடிய லாள (அதாவது லாட) தேசத்தரசன், அநேகம் குதிரைவீரர்களுடன் விளங்கிய கூர்ஜ்ஜரவேந்தன், சோழ அரசன் ஆகியோர் ஒன்றுகூடி எதிர்த்துவந்தார்கள்; ஆயினும் நரஸிம்ஹ பூபுஜன் ஆகிய இம்மன்னன் பல்ல (அதாவது பல்லாள) வேந்தனுடைய உத்தரவை ஏற்றுப் போர்க்களத்திலே ஒருவனாக நின்று அவர்களை எதிர்த்துத் தாக்கி வெற்றி கொண்டான்." இதிலிருந்து ஹொய்சளர்களுக்கு எதிராக மாலவ, லாட, கூர்ஜ்ஜர, சோழ மன்னர்களுடைய கூட்டு ஒன்று இருந்ததென்பதும், பல்லாளன் அவர்களை வெற்றி கொண்டான் என்பதும் பெறப்படும்.

இந்தச் சாசனத்தில் அதன் காலம் குறிக்கப் பெறவில்லை. எனினும் கங்க மன்னனை நரஸிம்ஹனைப்பற்றிய செய்தி ஹொய்சள சாசனங்கள் வேறு பலவற்றிலும் காணலாம். அவை சுமார் கி. பி. 1190-ஆண்டு முதல் நாற்பது வருஷங்க ளுக்குக் காணப் பெறுகின்றன. அதனால் ஆஸந்திக் கல்வெட் டில் குறிக்கப் பெற்றுள்ள இப்போர் கி. பி. 1190 - ஆம் ஆண்டுக்கும் இரண்டாம் பல்லாள தேவனுடைய ஆட்சியின் கடைசி ஆண்டான கி. பி. 1220-ஆம் வருஷத்துக்கும் இடைப் பட்ட காலத்தில் நடைபெற்றிருத்தல் வேண்டும்.

மாளவர்களோடு பல்லாளதேவன் போரிட்டு வெற்றி கொண்டான் என்பது அவனுடைய ஆட்சியின் வேறு சாச னங்களிலும் காணப்படுகிறது. ஹாலியேரக் குறுநில மன் னன் மஹா சாமந்தன் கோவிதேவன் மகனை பல்லேய தேவன் என்பான், "சோழரையும் கலிங்கரையும் மிதித்து, மாலவ சேனையை விழச்செய்து, நேபாள சைனியத்தை அழித்து, பாண்டியர்களைக் கொள்ளை கொண்டு துரத்தினன்" என்று புகழப்படுகிறான். (எபி. கர்நாடிகா, பன்னிரண்டாம் வால்யூம், சிக்கநாயகன ஹள்ளி 17-நெ. சாசனம்).

மேலே குறித்த சாசனங்களில் காணும் கூட்டைப்பற்றி அறிந்துகொள்வதற்கு, பல்லாள தேவனுக்கும் சோழமன்ன னை குலோத்துங்கனுக்கும் இடையில் இருந்த நட்பு முறையை நாம் தெரிந்துகொள்ளவேண்டியது அவசியம்.

மைசூர் ராஜ்யத்திலே ஆவணியில் பல்லாள தேவனுடைய ஆட்சிக் காலத்தைச் சார்ந்த சாசனம் ஒன்றன் ஆரம்பப் பகுதி மட்டும் கிடைத்துள்ளது. சாசனம் பூர்த்தியாக இல்லாததால் முழு விவரமும் நமக்குக் கிடைக்கவில்லை. எனினும், கிடைத் துள்ளவரையில் அது முக்கியமான விஷயத்தைத் தெரிவிக் கிறது. தமிழில் உள்ள அந்தச் சாசனம் குலோத்துங்க சோழ னுடைய ஆட்சியின் பன்னிரண்டாம் ஆண்டான சகாப்தம் 1112, ஸௌம்ய வருஷம் பல்லாளதேவன் அரசுபுரிந்து வந் தான் என்பதை தெரிவிக்கிறது. இதிலிருந்து கி. பி. 1189-90-ஆம் ஆண்டு பல்லாள. தேவன் மூன்றாம் குலோத்துங்க சோழனுக்கு அடங்கியவனாக ஆட்சி புரிந்தான் என்பது விளங்கும். (ஷை பத்தாம் வால்யூம், முளுபாகல் 44-b).

ஆனல் அந்நிலையிலே அவன் நீண்டகாலம் நிலைத்திருந்ததாகத் தெரியவில்லை. அடுத்த ஆண்டிலேயே அவன் ஸார்வபௌமப் பதவி வகிப்பதை எடுத்துக் காட்டுவதான விருதுகளைத் தரித்துக்கொண்டிருப்பதைக் காண்கிறோம். (எபி. கர்நாடிகா, ஏழாம் வால்யூம், சன்னகிரி 64; எட்டாம் வால்யூம், ஸோரப் 140 நெ. சாசனங்கள்; மைசூர் ஆர்க்கியலாஜிகல் ரிபோர்ட், 1913-ஆம் ஆண்டு, பக்கம் 37). தன்னுடைய பேரரசுப் பதவியை எடுத்துக் காட்டுவதற்காகவே போலும் அவன் சகாப்தம் 1114, அதாவது கி. பி. 1191 - 92-ஆம் ஆண்டை ஆரம்ப வருஷமாகக் கொண்டு புதிய அப்தம் ஒன்றையும் நிறுவியிருக்கிறன். (மைசூர் சாசனங்கள், பக்கம் 137). இந்த நிலையை அவன் கி. பி. 1190-ஆம் ஆண்டு தேவகிரி யாதவ மன்னனை பில்லமனை ஸோரத்தூர் என்னும் இடத்தில் தோற்கடித்துப் பெருவெற்றி கொண்டதாலேயே அடைந்தான். அந்தச் சமயம் கல்யாணபுரத்திலிருந்து அரசுபுரிந்துவந்த மேலைச் சாளுக்கியர்கள் வலிகுன்றித் தங்கள் ஆதிக்கியத்தை இழந்து வந்தனர். பழைய சாளுக்கிய ராஜ்யத்தின் பகுதிகளை, முக்கியமாக அவர்களுடைய பூர்வீகமான குந்தள தேசத்தைக் கைப்பற்றிக் கொள்வதற்கு ஆசைப்பட்டு வடக்கிலிருந்து யாதவர்கள் என்னும் சேவுணர்களும் தெற்கிலிருந்து ஹொய்சளர்களும் முயன்றனர். யாதவர்களுக்கு இடம் கொடுக்காமல் பல்லாள தேவன் வெற்றி கொண்டான். அந்தப் போர் முடிவில் பில்லமனும் இறந்துபோனன். எனினும், பில்லமனுக்குப் பின் சிங்காதனம் ஏறிய அவன் மகன் ஜைத்ரபாலன் தன் தந்தைக்கு நேர்ந்த இழுக்கை மாற்றிப் பல்லாளன் மீது போர் தொடுத்து வெற்றி கொண்டான். குந்தள தேசத்தின் வடபகுதி அவன் வசமாயிற்று. இந்த ஜைத்ரபாலன் சோழ மன்னனை மூன்றும் குலோத்துங்கனேடு நட்புக்கொண்டிருந்தான் என்பதையும், அவர்கள் இருவரும் சேர்ந்து கி.பி. 1195-ஆம் ஆண்டில் காகதீய நாட்டைத் தாக்கி வெற்றி கொண்டார்கள் என்பதையும் நாம் முன்னரே கண்டோம். ஹொய்சள சாசனங்களிலே, 'பல்லாள தேவனுடைய வீரத்தின் தீப்பிழம்புகளால் சோளிகதேசம் கரியாகியது' என்று குறிக்கப்பட்டுள்ளது. (எபி. கர்நாடிகா, ஐந்தாம் வால்யூம், சென்னராயபட்டணம், 220-நெ. சாசனம்).

மேலே குறிப்பிட்ட ஹுலியேரச் சிற்றரசன் பல்லேயனுடைய சாசனத்திலிருந்து இந்தச் சண்டையிலே கலிங்கர்களும் ஈடுபட்டிருந்தனர் என்று தெரிகிறது. முதலாம் இராஜராஜ சோழன் ஆட்சிக் காலத்திலே சோழர்கள் ஸாம்ராஜ்ய மோகம் கொண்டு தங்கள் ஆதிக்கியத்தைப் பரப்ப ஆரம்பித்த நாளிலிருந்து கலிங்கதேசம் சோழ ஸாம்ராஜ்யத்தில் அடங்கிய பகுதியாக இருந்து வந்திருக்கிறது. நடுநடுவே சிற்சில சமயங்களில் அவர்கள் தனியரசாக விளங்க முயன்றது நீடித்துப் பயன் அளிக்கவில்லை. முதற் குலோத்துங்கன் அங்கே தன் ஆதிக்கியத்தை நிலை நிறுத்தியதோடு அல்லாமல் அந்நாட்டு நிர்வாகத்தையும் தன் பிடிப்பிலே கொள்ள முயன்றிருக்கிறான். அதிலிருந்து கலிங்கதேசத்துச் சரித்திரத்தின் போக்கிலே ஒரு மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. முதற் குலோத்துங்கனுக்குவிரோதமாக விஜயாதித்தியனுக்கு உதவிசெய்த கலிங்க நாட்டு மன்னன் இராஜராஜ தேவேந்திரவர்மனுடைய மகன் அனந்த வர்மன் என்பான் சோடகங்கன் என்னும் விருதைத் தரித்துவந்தான். அவனுடைய சொந்தப் பெயரைக் காட்டிலும் இந்த விருதே பிரபலமானதாக விளங்கியிருக்கிறது. அதே சமயம் முதற் குலோத்துங்கனுடைய பிள்ளைகளுள் ஒருவனை இராஜராஜனும் சோடகங்கன் என்னும் விருதைத் தரித்து வந்திருக்கிறான். அனந்தவர்மன் சிறுவனாக இருந்த காலத்தில் இராஜராஜ சோடகங்கன் கலிங்க தேசத்திலே சோழர்களுடைய பிரதிநிதியாக இருந்து அந்நாட்டு அரசியலை நிர்வகித்துவந்தான் போலும். அதுமுதல் இரண்டு நாடுகளுக்கும் இடையில் நெருங்கிய தொடர்பு இருந்திருக்கிறது.

பாண்டியர்களிடையே தாயாதிச் சண்டை நடந்த காலத்தில் இலங்காபுர தண்டநாதனுக்கு எதிராகச் சோழர்களுடைய ஆதரவோடு குலசேகர பாண்டியன் பக்கத்தில் நின்று போர் புரிந்தவர்களிலே சோழகங்கன் என்பவனும் ஒருவன் என்று மகாவம்சம் கூறுகிறது. (ஸ்ரீ கே. வி. சுப்பிரமணிய ஐயர் எழுதிய தக்காணத்தின் பழைய சரித்திரம், பக்கம் 156). இதற்குப் பிறகு சோடகங்கன் என்பான் ஒருவனும் அணீகங்கன் (அணியங்கன்) என்பான் ஒருவனும் தமிழர்களுடைய சேனையின் உதவிகொண்டு இலங்கை நாட்டைக் கைக் கொண்டு சிறிதுகாலம் ஆண்டு வந்திருக்கிறார்கள். அணீகங்கனுடைய

இலங்கைப் படையெடுப்பு அந்நாட்டை ஆண்டுவந்த கல்யாண வதி என்னும் அரசியின் ஆட்சியிலே எட்டாம் ஆண்டு நடை பெற்றதாம். அந்நாட்டிலே கிடைக்கும் ஒரு கல்வெட்டிலே இந்தப் படையெடுப்பு பின்வருமாறு வருணிக்கப்பட்டுள்ளது: "தமிழர்களின் பெருங்கூட்டம் இந்த இலங்கையில் வந்து இறங்கி, ஆதி என்னும் மந்திரியை நிர்மூலமாக்கி, மலையரண் கள், காட்டு அரண்கள் எல்லாவற்றையும் பொருட்படுத்தாமல், யுகத்தின் முடிவில் தோன்றும் பிரளயாக்கினிபோல இலங்கை முழுவதும் பரவிச் சமூக அமைப்பு, சமயநிலை ஆகிய எல்லா வற்றையும் அழித்துவிட்டது." (எபி. ஸைலானிகா, ஐந்தாம் வால்யூம், பக்கம் 120). இந்தச் சம்பவம் கி.பி. 1210-ஆம் ஆண்டு நிகழ்ந்ததென்று இலங்கைச் சரித்திர ஆசிரியர்கள் கூறுவர். அப்போது மூன்றும் குலோத்துங்கன் சோழமன்னனாக இருந் தான். ஆகவே அவனுடைய தீவிரமான உதவியுடனேதான் இந்தப் படையெடுப்பு நிகழ்ந்திருத்தல் வேண்டும்.

பழைய புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்தில் உள்ள பெரு மாநாடு என்னும் இடத்திலிருந்து பாண்டிய மன்னனான திரிபுவன சக்கரவர்த்திகள் சுந்தரபாண்டிய தேவனுடைய ஆட்சியின் பத்தாம் ஆண்டு கொண்ட சாசனம் ஒன்று கிடைத் துள்ளது. அது ஸ்ரீமநு மஹா ப்ரதானி மண்டலிக முராரி அணியெக [கெ] த்தய தண்டநாயகன் என்பான் அவ்வூர்க் கோயில் நித்த நிவந்தங்களுக்குப் பொன் அளித்து, விளக் கெரிக்க நெய் அட்டுவதற்கு ஏற்பாடு செய்த விவரத்தைத் தெரி விக்கின்றது. (புதுக்கோட்டை, ஸம்ஸ்தானக் கல்வெட்டுகள், 518 நெ. சாசனம்). அது 'தம் பிராட்டியார் திருக்கை மலரிலே நீர் வார்த்து' அளிக்கப் பெற்றதென்று கூறுகிறது அந்தச் சாச னம். அதனால் அவ்விதம் தானம் செய்தவன் ஓர் அரச குடும் பத்தைச் சேர்ந்தவன் என்பதும், அவன் தன்னுடைய அரசுப் பதவியை அப்போது வகித்து வந்தான் என்பதும் தெரியவரும். சாசனத்திலே அவன் பெயர் குறிக்கப் பெறும் முறையும் இதையே வலியுறுத்துகிறது. இந்த அரசனுடைய பெயர் அந்த ஸம்ஸ்தானத்திலே கிடைத்துள்ள வேறு இரண்டு சாசனங்களிலும் காணப் பெறுகிறது. பேரையூரி லிருந்து கிடைத்த ஒன்றில் அவன் பெயர் ஸ்ரீமநு மஹா சாகனி மெய்சத்ருகண்டன் சாமந்தன் என்றும், (ஷை 193-நெ,

சாசனம்) மேலத்தாலையத்திலிருந்து கிடைக்கும் மற்றொன்றில் ஸ்ரீமந் மஹாச்ராகயாணி மண்டலிகமுரா.........ய தண்ணயகன் என்றும் (ஷை 199-ம் நெ. சாசனம்) காணப்படுகிறது. அந்தப் பெயர் 'ஸ்ரீமங் மஹாப்ரதானி மண்டலிக முராரி அணியங்க ராகுத்தராய தண்டநாயகன்' என்றே இருத்தல் வேண்டும் போலும். அணியங்கன் என்பது கலிங்கமன்னன் பெயராகும். இலங்கைத் தீவிலே திரிகோணமலையி லிருந்து கிடைத்துள்ள ஒரு சாசனத்தில் காணும் வடமொழிச் சுலோகத்தின் குறைப் பகுதியிலிருந்து சோடகங்கன் என்பான் ஒருவன் அந்தத் தீவிலே தன் படைகளுடன் வந்திறங்கிய தேதி தெரியவருகிறது. (எபி. ஸைலாநிகா, ஐந்தாம் வால்யூம், 14-ம் நெ. சாசனம்). அந்நாள் கி. பி. 1223-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பதினொன்காம் தேதியாகும். இவற்றைக் கவனிக்கும் போது கலிங்க மன்னர்கள் தமிழ்நாட்டோடு, முக்கியமாகச் சோழ மன்னர்களோடு, அந்நாளிலே நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது விளங்கும்.

மேலே குறிப்பிட்ட ஆஸந்திக் கல்வெட்டில் பல்லாளனுக்கு விரோதமாகச் சேர்ந்திருந்தவர்கள் கூட்டைப்பற்றிக் கூறப்பட்டிருப்பதிலே ஒரு முக்கியமான விஷயத்தையும் நாம் கவனிக்கவேண்டும். சோழ மன்னனோடு மாளவ, லாட, கூர்ஜ்ஜர தேசத்து அரசர்களும் ஒன்றாகச்சேர்ந்திருந்தார்கள் என்று காணப்படுகிறது. ஆனால் அந்நாளிலே அவர்களுடைய ஆட்சிப் பிரதேசங்கள் சோழ நாட்டோடு ஒட்டியனவாக இல்லை. இடைப்பட்ட பகுதியிலே தேவகிரியைத் தலைநகராகக் கொண்ட யாதவர் எனப்படும் சேவுணர்களும், வாரங்கலைத் தலைநகராகக் கொண்ட காகதீயர்களும் ஆண்டு வந்திருக்கிறார்கள். மாளவ, லாட, கூர்ஜ்ஜர தேச மன்னர்கள் இவ்விரு தேசங்களையும் கடக்காமலும் அந்நாட்டு மன்னர்களான சேவுணர்களுடனே, காகதீயர்களுடனே பொருதாமலும் சோழ மன்னனோடு கூட்டுச் சேரவோ அவனுடன் கூடி ஹொய்சளர் நாட்டைத் தாக்கவோ அந்நாளில் சாத்தியமில்லை. ஆனால் அவ்விருநாட்டு மன்னர்களின் பெயர்கள் இந்தச் சாசனத்தில் காணப்பெறவில்லை.

ஹொய்சள மன்னனை இரண்டாம் பல்லாள தேவன் கலிங்கர்கள் மீது வெற்றிகொண்டான் என்று கூறப்படுவது போலவே அவன் மகன் வீரநரசிம்ஹனும் புகழப்படுகிறான்.

(எபி. கர்நாடிகா, ஐந்தாம் வால்யூம், சென்னராய பட்டணம் 203- நெ. சாசனம்). இரண்டும் தனித்தனியான வெற்றிகளைக் குறிப்பனவா அல்லது ஒரே வெற்றிதானா வென்பது தெரியாது. எனினும், இரண்டும் ஒரே வெற்றியைக் குறிக்கின்றனவாகக் கொள்ளலாம். அவ்விதமாயின், அந்த வெற்றி இரண்டாம் பல்லாள தேவனுடைய ஆட்சியின் கடைசி ஆண்டுகளிலே தந்தையும் மகனும் சேர்ந்து போரிட்டு அடைந்ததாகவே இருத்தல்வேண்டும்.

பெரு வெற்றிகள் பலவற்றைக் கண்ட மூன்றாம் குலோத்துங்கனுடைய ஆட்சி கடைசியிலே பெருத்த ஆபத்துக்கு உள்ளாகி நிலைகுலைய நேரிட்டதென்பதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். கி. பி. 1216-ஆம் ஆண்டில் மதுரைச் சிங்காதனம் ஏறிய மாறவர்மன் சுந்தர பாண்டியன் தன் நாட்டைச் சோழர்களுடைய ஆதிக்கியத்திலிருந்து மீட்டுக் கொண்டதோடு நில்லாமல் சோழநாட்டின் மீதும் படையெடுத்துச் சென்று ஒரு காலத்தில் பேரரசு செலுத்திய மன்னனையும் வெற்றிகொண்டு வாகை சூடினான். இது அவனுடைய மெய்க்கீர்த்தியிலே விவரமாகக் காணப்படுகிறது. (எபி. இந்திகா, இருபத்திரண்டாம் வால்யூம், 42-ஆம் பக்கம் முதல்).

'பொன்னிசூழ் நாட்டிற் புலியாணை போயகல' அவன் சோழநாட்டைக் கைக்கொண்டு, 'தஞ்சையும் உறந்தையும் செந்தழல் கொளுத்தி'னான். 'கூடமும் மாமதிலும் கோபுரமும் ஆடரங்கும் மாடமும் மாளிகையும் மண்டபமும் பலவிடித்' தான். 'செம்பியனைச் சினமிரியப் பொருது, சுரம்புக வோட்டிப் பைம்பொன் முடிபறித்துப் பாணருக்குக் கொடுத்தருளி'னான். 'ஆடகப் புரிசை ஆயிரத்தளியிற் சோழவளவன் அபிஷேக மண்டபத்து வீராபிஷேகம் செய்து'கொண்டான். தெய்வப் புலியூரை அடைந்து பொன்னம்பலத்தில் ஆடுவாரை வணங்கிப் பொன்னமராவதி திரும்பி, 'சோலைமலிபழனச் சோணாடும் தான் இழந்த மாலை முடியும் தர வருக' என்று சோழனை அழைத்தான். 'மானநிலை குலைய(ச் சக்கர)வாளகிரிக்கப்புறத்துப்போன வளவன் உரிமையோடும் புகுந்து பெற்ற புதல்வனை நின் பேர் என்று முன்காட்டித்' தொழுதான். பாண்டியன் அவனுக்குப் 'பண்டிழந்தசோளபதி என்னும் நாமமும் தொன்னகரும் மீள வழங்கித்' திருமுகமும் கொடுத்தான்.

இவ்விதம் மெய்க் கீர்த்தியில் புகழ்ந்து கூறப்பெற்ற சம்பவங்கள் வேறு சில கல்வெட்டுக்களிலும் குறிக்கப்பட்டு உறுதிபெறுகின்றன. முன்னளிலே கடியலூர் உருத்திரங் கண்ணனர் என்னும் புலவர் சோழன்மீது பாடிய பட்டினப் பாலை அரங்கேற்றப்பட்ட பதினறுகால் மண்டபம் ஒன்றைத் தவிர, சோழன் அரண்மனை முழுதும் சுந்தரபாண்டியனல் இடிக்கப் பெற்றது என்னும் செய்தியைத் திருச்சிராப்பள்ளி ஜில்லா திருவெள்ளறையில் காணும் சாசனப் பாடல் ஒன்று தெரிவிக்கிறது. (1939-ஆம் ஆண்டு 197-நெ. சாசனம்). வீர மாகதன் (அதாவது மகதநாட்டு மன்னன்) என்று குறிக்கப் பட்டுள்ள பாணபதிக்குச் சோழநாட்டைப் பாண்டியன் வழங் கிய செய்தி ஸ்ரீரங்கத்துக்குப் பக்கத்தில் உள்ள திருவானைக் காவிலிருந்து கிடைக்கும் இரண்டு சாசனங்களில் காணப்படு கிறது. (1908 - ஆம் ஆண்டு 481, 482 - நெ. சாசனங்கள்.) ஸ்ரீரங்கத்திலிருந்து கிடைக்கும் கல்வெட்டு ஒன்றே பாண்டி யன் காவிரிநாட்டை வளவனுக்கும் மாகதர்கோனுக்கும் (அதா வது மகதநாட்டுப் பாணனுக்கும்) பிரித்து வழங்கியதைக் கூறுகிறது. (1939-ஆம் ஆண்டு 196-நெ. சாசனம்.) மூன்ரும் குலோத்துங்கனுடைய ஆட்சியின் கடைசி இரண்டு, அதாவது முப்பத்தொன்பது, நாற்பதாம் வருஷத்துச் சாசனங்கள் வட ஆர்க்காடு, தென் ஆர்க்காடு, செங்கற்பட்டு ஜில்லாக்களில் கிடைக்கவில்லை யென்பதையும், காவிரி நாட்டில் மட்டுமே தான் கிடைக்கின்றன வென்பதையும் நாம் கவனித்துப் பார்த் தால், சோழநாடு அப்போது இரண்டாகப் பிரிக்கப்பட்டு ஒரு பகுதி சோழனுக்கும் மற்ெருரு பகுதி பாண அரசனுக்கும் கொடுக்கப்பட்டிருந்ததென்பதும் உறுதியாகும்.

சுந்தரபாண்டியன் தன்னுடைய ஆட்சியின் மூன்ரும் ஆண்டிலிருந்தே சோணுடு வழங்கியருளிய என்னும் விருதைத் தரித்து வந்திருக்கிருன். (1928-ஆம் ஆண்டு 322-நெ. சாசனம்; புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்துச் சாசனங்கள், 249-நெ. சாசனமும் பார்க்க). அவனுடைய ஆட்சியின் பதினைந்தாம் ஆண்டு கொண்ட மற்ெருரு சாசனம் (1926-ஆம் ஆண்டு 9-நெ. கொண் டது) அவன் குலோத்துங்க சோழனுக்கு மணிமுடியையும் முடிகொண்ட சோழபுரம் (அதாவது இராஜராஜபுரம் என்ற பெயர்பெற்று அந்நாளில் தலைநகராக விளங்கிய பழையாறை) என்னும் நகரத்தையும் வழங்கினன் என்று கூறுகிறது.

சுந்தர பாண்டியன் இவ்வெற்றிகளைக் கி. பி. 1216-ஆம் ஆண்டில் மதுரைச் சிங்காதனம் ஏறியதன்பின் சிறிதுகாலத் துக்குள்ளாகவே அடைந்திருத்தல் வேண்டும்.

'நின் பேர்' என்று பாண்டியனிடம் குலோத்துங்கன் அளித்த இராஜகுமாரன் யார் என்பது தெரியவில்லை. மெய்க் கீர்த்தியின் வாசகத்திலிருந்து அந்த இராஜகுமாரனும் சுந்தரன் என்ற பெயர் தாங்கி யிருந்தான் எனக் கொள்ள லாம். ஆயினும், அந்தப் பெயர் கொண்ட சோழ மன்னனோ அரசிளங்குமரனோ அப்போது யாரும் இருந்ததாகத் தெரிய வில்லை. மூன்றும் குலோத்துங்கனுக்குப் பின் சோழ சிங்கா தனத்தில் அமர்ந்தவன் மூன்றும் இராஜராஜன் ஆவன். அவர்கள் இருவருக்கும் உள்ள உறவுமுறை என்னவென்பது நிச்சயமாகத் தெரியாது. எனினும், மூன்றும் இராஜராஜனை அவனுக்கு முன் இருந்த குலோத்துங்கனுடைய மகன் என்றே ஆராய்ச்சியாளர் பொதுவாகக் கொள்வர்.

மூன்றும் இராஜராஜன் சோழ சிங்காதனம் ஏறியது கி. பி. 1216-ஆம் ஆண்டில் ஜூன் மாதம் இருபத்தேழாம் தேதிக்கும் ஜூலை மாதம் பத்தாம் தேதிக்கும் இடைப்பட்ட நாள் ஒன்றுகும் எனக் கணக்கிட்டிருக்கிறார்கள். (எபி. இந்திகா, எட்டாம் வால்யூம்,260-பக்கம் ; இன்னும்,1943-ஆம் வருஷத்து 160-ெ. சாசனம் அவனுடைய ஆட்சியின் இருபத்துநான்காம் ஆண்டும் சகாப்தம் 1162, அதாவது கி. பி. 1240-ஆம் ஆண்டும் கொண்டிருப்பது கவனிக்கத்தக்கது). அதே வருஷம் தான் சுந்தரபாண்டியனும் மதுரைச் சிங்காதனம் ஏறினன். அதற் குப் பிறகே சுந்தரபாண்டியன் சோழநாட்டின் மீது படை யெடுத்து வந்து அதைக் கைப்பற்றியதாகும். குலோத்துங்க னுடைய குமாரனுக இராஜராஜன் இருந்திருப்பானுகில், குலோத்துங்கனுல் 'நின் பேர்' என்று சுந்தரபாண்டியன் முன்னுல் கொணர்ந்து நிறுத்தப் பெற்ற அவன் குமாரன் இராஜராஜனுகவே இருத்தல் வேண்டும். ஆகவே குலோத் துங்கனுக்குப் பாண்டிய மன்னனுல் திருப்பி அளிக்கப்பெற்ற சோழநாட்டைப் பெற்று அனுபவித்தவனும் அந்த இராஜ ராஜனுகவே இருத்தல் வேண்டும்.

எனினும், ஹொய்சள சாசனங்களிலிருந்து மூன்றும் இராஜராஜன் சோழ சிங்காதனத்திலே ஹொய்சள மன்னர்

களான இரண்டாம் பல்லாள தேவன், அவன் மகன் வீர நரஸிம்ஹன் ஆகிய இருவர்களாலும் அமர்த்தப்பட்டவன் என்று தெரிகிறது. கி. பி. 1218-ஆம் ஆண்டு கொண்ட ஒரு சாசனத்திலே பல்லாளன் சோள ராஜ்ய ப்ரதிஷ்டாசாரியம், பாண்டிய கஜகேசரி என்ற விருதுகளைத் தரித்திருப்பதைக் காண்கிறோம். (எபி. கர்நாடிகா, நான்காம் வால்யூம், நெலமங்கலம் 29-நெ. சாசனம்). அதே சாசனத்தில் அவன் மகன் நரஸிம்ஹன் சோளகுல ஏகரக்ஷகன் மகதோர்வீபால நிர்மூலகன் (அதாவது மகதை மண்டலத்து அரசனான பாணனை நிர்மூலமாக்கினவன்) என்றும் புகழப்படுகின்றான். அதிலிருந்து அந்த ஆண்டின் ஆரம்பத்திலேயே பல்லாளன் இந்த விருதுகளைத் தரித்திருத்தல் வேண்டும் என்பது புலனாகும். மற்றொரு சாசனத்திலே பல்லாளன் உயிருடன் இருந்த காலத்திலேயே அவன் மகன் வீர நரஸிம்ஹன் தெற்கே ஸ்ரீரங்கத்தின்மீது படை நடத்திவந்த செய்தி காணப்படுகிறது. (ஹொய்சண ஸ்ரீ வீர வல்லாளதேவன மகம் வீர நரஸிம்ஹதேவனு தெங்கலு ரங்கன மேலே நடவந்து - எபி. கர்நாடிகா, ஆறும் வால்யூம், சிக்மகளூர் 56-நெ. சாசனம்). கன்னடமொழியிலே இயற்றப்பெற்ற சம்பூ காவியமான ஜகந்நாத விஜயம் என்னும் நூலிலே பல்லாள தேவனால் உதவி செய்யப் பெற்றுச் சோழ சிங்காதனத்திலே அமர்த்தப்பெற்றவன் இராஜராஜனே யாவான் என்று தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. (ராஜராஜ ப்ரதிஷ்டா நிரத்தம் - ஜர்னல் ஆப் இந்தியன் ஹிஸ்டரி, ஆறும் வால்யூம், பக்கம்-200). இவற்றிலிருந்து இரண்டாம் பல்லாள தேவன் பாண்டிய மன்னனையும் பாணர் அரசனையும் போரில் வெற்றிகொண்டு இராஜராஜனைச் சோழசிங்காதனத்தில் அமர்த்தினான் என்று நாம் கொள்ளலாம். குலோத்துங்கனுடைய பெயர் ஓர் இடத்திலும் பிரஸ்தாபிக்கப் பெறவில்லை யென்பதும் கவனிக்கத் தக்கது.

ஹொய்சள சாசனங்களில் கூறப்பட்டுள்ள சம்பவங்களைக் கவனித்தால், சுந்தரபாண்டியன் குலோத்துங்கனுக்கும் அவன் மகனுக்கும் சோழநாட்டைத் திரும்பவும் வழங்கியதாகப் பாண்டிய மெய்க்கீர்த்திகளில் காணும் சம்பவங்களாகத் தோன்றவில்லை; அவற்றினின்றும் வேறான ஒரு சம்பவத்தையே குறிப்பதாகத் தோற்றுகின்றது. இது மற்றோர் ஆதாரத்தாலும் உறுதியாவதாகக் கொள்ளலாம். மூன்றாம் இராஜராஜ சோழ

னுடைய ஆட்சியின் ஐந்தாம் ஆண்டிலே தஞ்சை ஜில்லாப் பகுதியில் பெருத்த கலவரங்கள் நடந்து நிலைமை சீர்குலைந்து விட்டதாகத் தெரிகிறது. திருவிளக்குடியிலிருந்து கிடைக்கும் அவனுடைய ஆட்சியின் பதினாறும் ஆண்டுக்கு எதிராமாண்டு கொண்ட ஒரு கல்வெட்டிலிருந்து, இராஜராஜ சோழனுடைய ஆட்சியின் ஐந்தாம் ஆண்டிலே நடந்த கலவரத்தில் திருவேள் விக்குடிக் கோயிலின் விக்கிரகங்களை வாணகோவரையர் பரி வாரத்தார் எடுத்துச் சென்று திருச்சத்திமுற்றம் கோயிலிலே வைத்துச்சென்றார்கள்என்றும்,பின்னால்அவ்விக்கிரகங்களைத் திருவேள்விக்குடிக் கிராமத்தவர் தேடிக் கண்டுபிடித்துப் பணம் கொடுத்து மீட்டு வந்து தங்கள் கோயிலிலே பழையபடி பிரதிஷ்டை செய்யுவேண்டி நேர்ந்தது என்றும் தெரிகிறது. (1926-ஆம் ஆண்டு 141-ெந. சாசனம்) ஆண்டு குறிக்கப்பெறா மல் உடையாளூரிலிருந்து கிடைக்கும் மற்றொரு கல்வெட்டிலி ருந்து அம்மன்னன் ஆட்சியின் ஐந்தாம் ஆண்டில் நிலவிய க்ஷோபத்திலே நிலங்களில் மூலபத்திரங்கள் அழிந்துபோன மையால் நான்காம் ஆண்டளவில் உள்ள அனுபோக முறைப் படி நிர்ணயிக்கப்பட வேண்டியதாயிற்று என்பது விளங்கு கிறது. (1927-ஆம் ஆண்டு 309-ெந. சாசனம்). பத்தொன் பதாம் ஆண்டுகொண்டதாகத் தலைச்சங்காட்டிலிருந்து கிடைக் கும் வேறொரு கல்வெட்டு அம்மன்னனுடைய ஆட்சியின் ஐந்தாம் ஆண்டிலே நாட்டில் நடந்த துரிதங்களிலே பழைய கணக்குகள் அழிந்துபோனமையால், அனுபோகப்பற் றொழுகை யொட்டி ஆதரவுச் சீட்டுகளைப் புதுப்பிக்கவேண்டி யிருந்தது என்னும் செய்தியைத் தெரிவிக்கிறது. (1925-ஆம் ஆண்டு 213-ெந. சாசனம்).

இவற்றைக் கவனித்தால் இக்கலவரங்கள் ஹொய்சள வேந்தர்களால் இராஜராஜன் சோழ சிங்காதனத்தில் அமர்த் தப் பெற்றதை ஒட்டியே நடந்திருத்தல் வேண்டும் என்பதும், அவற்றிலே பாண அரசனும் சம்பந்தப்பட்டிருந்தான் என் பதும் தெரியவரும். தான் முன்பு பாண்டியனிடமிருந்து பெற்ற சோழநாட்டுப் பகுதியைத் திரும்பவும் மீட்டுக் கொள்வதற் காகப் பாணன் செய்த இம்முயற்சியிலே பாண்டியனும் ஹொய் சளர்களுக்கு எதிராகப் பாணனுக்கு உதவியிருத்தல் கூடும். இந்தக் காலத்திலே ஹொய்சள நரஸிம்ஹன் முதலில் வடக்கே

சேவுணர்களோடு போரிட்டு வெற்றிகொண்டு, அப்பால் தெற்கே திரும்பி அதியமன், சேரன், பாண்டியன், மகரன் (மகதை மண்டலத்து வேந்தனுன பாணன்), பலம்பொருந்திய காடவன் ஆகியவர்களைக் கைப்பற்றிச் சோழமன்னனைச் சிங்காதனத்தில் இருத்தினன் என்று கல்வெட்டுகளிலே புகழப் படுகிறான். (எபி. கர்நாடிகா, ஐந்தாம் வால்யூம், சென்னராயப் பட்டணம் 203-நெ, பேலூர் 74-நெ. சாசனங்கள்). மூன்றும் இராஜராஜன் இப்போது நாம் கொண்டுள்ளபடி மூன்றும் குலோத்துங்கன் மகனுக இருந்து, சுந்தரபாண்டியன் வழங்கிய சோழநாட்டை ஏற்றுக்கொண்டவனுக இருப்பானுகில் சம்ப வங்கள் மேலே குறித்தபடி நடந்திருக்கா. ஆகவே 'நின்பேர்' என்று சுந்தரபாண்டியனிடம் குலோத்துங்கன் அளித்த அரசிளங்குமரனின்றும் இராஜராஜன் வேறுனவனுகவே இருத்தல் வேண்டும். குலோத்துங்கனுல் சோழநாட்டிலிருந்து துரத்தப்பட்ட இரண்டாம் இராஜாதிராஜனுடைய கிளையைச் சேர்ந்தவர்களுள் ஒருவனுக அவன் இருக்கலாம்.

மூன்றும் குலோத்துங்கனுல் விரட்டியடிக்கப்பட்ட இரா ஜாதிராஜன் தமிழ்நாட்டைத் துறந்து வடக்கே சென்று வேங்கி நாட்டில் தங்கியவன் சற்றேறக்குறையக் குலோத்துங் கன் ஆட்சிக் காலம் முழுவதும் அங்கே இருந்துவந்தான் என் பதையும் நாம்முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். அவனுடைய ஆட்சியின் நாற்பத்தொன்பதாம் ஆண்டுக்குச் சரியான சகாப் தம் 1137, அதாவது கி. பி. 1215-16-ஆம் ஆண்டு கொண்ட சாசனமும் கிடைத்துள்ளது. (தெ. இ. சாசனங்கள், நான்காம் வால்யூம், 1330-நெ. சாசனம்). அது குலோத்துங்கன் ஆட்சி யின் கடைசிக் காலமாகும். அதற்குப் பிறகு இரண்டாம் இராஜாதிராஜன் எவ்வளவு காலம் அரசுபுரிந்தான் என்பது தெரியாது. ஆயினும் அடுத்த ஆண்டான சகாப்தம் 1138, அதாவது கி. பி. 1216-17-ஆம் வருஷத்திலிருந்து அதே பெயர் கொண்டு திரிபுவன சக்கரவர்த்தி (மூன்றும்) இராஜாதிராஜன் என்பான் ஒருவன் வேங்கியிலே அரசனுக இருந்துவந்திருக் கிறான். அவனுடைய ஆட்சியின் எழுபத்தாறும் ஆண்டான சகாப்தம் 1215 (அல்லது கி. பி. 1293) வரைக்கும் அவனுடைய சாசனங்கள் கிடைக்கின்றன.

திராக்ஷாராமத்திலிருந்து கிடைத்தனவாகத் தேன் இந்திய சாசனங்களில் நான்காம் வால்யூமில் வெளியாகியுள்ள அவ னுடைய சாசனங்கள் பின்வருமாறு :

| சாசன எண் | ஆட்சி வருஷம் | சகாப்தம் | கி. பி. ஆண்டு |
|---|---|---|---|
| 1043 | 36 | 1174 | 1252-53 |
| 1178 | 36 | 1174 | 1252-53 |
| 1045 | 36 | 1175 | 1253-54 |
| 1371 | 37 | 1175 | 1253-54 |
| 1033 | 37 | 1175 | 1253-54 |
| 1230 | 38 | 1176 | 1254-55 |
| 1032-A | 43 | 1180 | 1258-59 |
| 1163 | 50 | 1188 | 1266-67 |
| 1373 | 59 | 1197 | 1275-76 |
| 1152 | 62 | 1200 | 1278-79 |
| 1019 | 72 | 121* | 1289 ? |
| 1038 | 72 | 1211 | 1289-90 |
| 1307 | 76 | 1215 | 1293-94 |

அவனுடைய ஆட்சியின் கடைசிக்காலத்திலே தமிழ் நாட்டில் சோழர்களுடைய ஆட்சி நிலை குலைந்துவிட்டது. அவர்களுடைய தனியரசு போய்விட்டது. தமிழ்நாட்டுச் சோழர்களிலே கடைசி வேந்தனை மூன்றும் இராஜேந்திரனுடைய ஆட்சியில் கடைசியாக நமக்குக் கிடைக்கும் சாசனம் கி. பி. 1279-ஆம் வருஷத்துக்குச் சரியான அவனுடைய ஆட்சியின் முப்பத்து மூன்றும் ஆண்டு கொண்டதாகும். (1901-ஆம் வருஷத்து 492-நெ. சாசனம்). அதற்குப் பிறகு அவன் எவ்வளவு காலம் அரசு புரிந்தான் என்பதும், அவனுக்குப்பின் யார் சோழ சிங்காதனம் ஏறினன் என்பதும் தெரியாது. ஆயினும், அதற்குப் பிறகும் சுமார் பதினைந்து ஆண்டுகள் சோழ வம்சம் தெலுங்கு நாட்டிலே நிலைத்திருந்த தென்பது தெளிவாகிறது. அந்த இராஜாதி ராஜனுடைய சாசனங்கள் சிலவற்றிலே காகதீய மன்னன் ருத்திரதேவன், அவன் அதிகாரிகள் முதலியோர் தானம் வழங்கிய செய்தியும் காணப்படுகிறது.

தமிழ்நாட்டிலே சோழர்களுடைய ஆதிக்கம் நிலைகுலைய ஆரம்பித்தது முதல் விஜயநகர ஸாம்ராஜ்யத்தின் நிர்வாகம் ஸ்திரமாக ஊன்றிய காலம் வரையில் உள்ள இடைக் காலத்தின் சரித்திரம் நன்ருக ஆராயப் பெறவில்லை. அதை ஆராய்ந்தால் பல புதிய விஷயங்கள் தெரியவரும். விரிவாகவும் ஆராய வேண்டும். ஏற்கெனவே இந்த ஆராய்ச்சிப் பகுதி மிகவும் நீண்டுவிட்டது. ஆகவே இதை வேருெரு சந்தர்ப்பத்தில் தான் செய்யவேண்டும். இதன் முதற்பகுதியிலே கொங்கு நாட்டு மன்னர்களின் சரித்திரத்தை இவ்விடம் கொடுப்பதாகக் குறிப்பிட்டிருந்தோம். இடமின்மை காரணமாக அதையும் வேருெரு சந்தர்ப்பத்திலே தான் ஆராயவேண்டும்.

# பொருட் குறிப்பகராதி

—(o)—

## அ



## ஆ

## இ

ஈ



உ



ஊ



எ



ஏ



ஐ



ஒ



க

### கா

## கி



## கீ



## கு

கூ



கே



கை



கொ



கோ



கௌ



க்



ச

## சே



## சை



## சோ



## சௌ



## ட



## த

## தா



## தி



## து

## நே



## நை



## ப



## பா

## பொ



## போ



## பௌ



## ம

மா



மி



மீ



மு



மூ



மெ

## ஜ



## ஜா



## ஜீ



## ஜை



## ஷா



## க்ஷ



## ஸ



## ஸா



## ஸி



## ஸே



## ஸோ



## ஸௌ

## ஸ்ரீ இராமாநுஜர் காலத்தைப்பற்றி ஒரு குறிப்பு.

விசிஷ்டாத்வைத மதத்தை நிறுவிய ஆசாரியரான ஸ்ரீ இராமாநுஜருடைய காலத்தைச் சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன் காலஞ்சென்ற து. அ. கோபிநாதராயர் ஆராய்ந்து நிர்ணயித்தார்கள். (சென்னைப் பல்கலைக் கழகத்தில் 1917-ஆம் ஆண்டில் "ஸர். சுப்பிரமணிய ஐயர் பேருரை" யாக அவர் செய்த பிரசங்கங்களின் பதிப்பு ஸ்ரீவைஷ்ணவர்கள் வரலாறு). அதற்குப் பிறகு, பொதுவாக ஆராய்ச்சியாளர்கள் அந்த முடிவுகளைப் புனராலோசனை செய்து மாற்றுவதற்குத் தக்க ஆதாரங்கள் இருந்தும் அவற்றைக் கவனியாமல் புறக்கணித்து அவர் கண்ட முடிவுகளையே ஏற்றுவருகிறார்கள்.

[உதாரணமாகப் பின் வருவதைக் கூறலாம். "சோழர்களுடைய ஆட்சியிலே மதத்துவேஷம் கொண்டு வேற்று மதத்தினரைத் துன்புறுத்தியதற்கு இராமாநுஜரையும் அவரைப் பின்பற்றியவர்களையும் சோழ அரசன் ஒருவன் நடத்திய விதத்தை முக்கியமானதாகக் கொள்ளலாம். அவ்வரசன் யார் என்பது சந்தேகமற முடிந்த முடிவு என்பதாகாது. இந்த மதவெறிச்செயல் நாட்டிலே மக்கள் எழுச்சியை உண்டாக்கியது என்றும், அந்தக் காலத்தில் விஜயாலய வமிசத்து ஆண் வழியின் கடைசி அரசனான அதிராஜேந்திரன் உயிரிழந்தான் என்றும் கருதுவதற்குப் போதிய காரணத்தை நாம் கண்டோம்" என்று பேராசிரியர் க. அ. நீலகண்ட சாஸ்திரிகள் தம் சோழர்கள் சரித்திரத்தில் (இரண்டாம் வால்யூம், பக்கம்-487) கூறுகிறார். இவ்விதம் செய்த மன்னனைக் கிருமிகண்ட சோழன் என்று வைஷ்ணவசம்பிரதாயநூல்கள் குறிக்கின்றன. "அவன் சிதம்பரம் நடராஜர் ஆலயத்தின் எதிரில் இருந்த கோவிந்தராஜர் விக்கிரகத்தைப் பிடுங்கிக் கடலில் எறிந்தான் என்று கூறப்படுகிறது. திவ்ய சூரி சரிதத்தில் இந்தச் சம்பவம் விஷ்ணு மதத்துக்கு விரோதமாக நடந்த கிளர்ச்சியின் ஆரம்பத்திலேயே கொடுக்கப் பட்டுள்ளது. (பதினெட்டாம் அத்தியாயம், சுலோகம் 72). இந்த விஷயம் மிகவும் பிற்காலத்து நூலான பிரபந்நாமிருதத்திலும் சொல்லப்பட்டுள்ளது. (புராதன இந்தியா என்ற தம் நூலில் பக்கம் 320-ல் டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் இந்தப்பகுதியை மேற்கோளாகக்கொடுத்திருக்கிறார்.)

இந்தச் சம்பவத்தை இரண்டாம் குலோத்துங்க சோழனுக்கு ஏற்றிக் கவிஞர் ஒட்டக்கூத்தர் கூறுகிறார். குலோத்துங்க சோழன் உலா வரிகள் 76-8; இராஜராஜ சோழன் உலா வரிகள் 64-6, இதிலே தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. தக்கயாகபரணி தாழிசை 777. ஆயினும் அதைக்கொண்டு இராமாநுஜரைத் துன்புறுத்தியவன் இரண்டாம் குலோத்துங்க சோழனே யாவான் என்று யாரும் கூறுவதற்குத் தயாராக இருப்பதாகத் தோன்றவில்லை. எனினும், இம்மன்னன் புதிய கட்டிடங்களை அமைத்து நடராஜர் ஆலயத்தை விஸ்தரித்துப் பொன்மயமாக்கியிருக்கிறான் என்பது தெரிந்த விஷயம். இவ்விவரத்தைக் கூறும் கவிஞர் அவ்வரசனுடைய முன்னோர்களில் ஒருவன் செய்த காரியத்தை அவனுக்கு ஏற்றிக் கூறியிருத்தல் கூடும்" என்று (முதல் வால்யூம், பக்கம் 355.) மேலும் அவர் கூறுகிறார்.]

குருபரம்பரைகளில் காணும் விவரங்களை ஸ்ரீ ராயர் தம்முடைய நூலில் திரட்டிக் கொடுத்திருக்கிறார். அவற்றின்படி ஸ்ரீ இராமாநுஜர் கலியப்தம் 4118, சகாப்தம் 939, பிங்கள வருஷம், சைத்ர மாதம், சுக்கிலபக்ஷத்துப் பஞ்சமி, வியாழக்கிழமை பெற்ற திருவாதிரை நாள் பிறந்தவர். சக வருஷத்தைக் கடபயாதி சங்கியையில் 'தீர்லப்தா' (ধীলব্ধা) என்று குறிப்பார்கள். இது கி. பி. 1017-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் நாலாம் தேதி வியாழக்கிழமை ஆகும். அன்றைத்தினம் சுக்கிலபக்ஷத்துப் பஞ்சமி உதயாதி ஒன்பது நாழிகை முப்பத்தாறு விநாடிவரையிலும், திருவாதிரை நக்ஷத்திரம் உதயாதி நாற்பத்தைந்து நாழிகை வரையிலும் இருந்தன. அவர் நூற்றிருபது ஆண்டு உயிர் வாழ்ந்திருந்தாராம். அதனால் அவருடைய மறைவு சகாப்தம், 1059 அல்லது கி. பி. 1137-38-ஆம் ஆண்டு நிகழ்ந்திருக்க வேண்டும். அவர் மறைந்த வருஷத்தையும் கடபயாதி சங்கியையில் 'தர்மோநஷ்டः' (ধর্মোনষ্টঃ) என்று குறிப்பர்.

குருபரம்பரைகளில் காணும் சம்பிரதாயமான கால நிர்ணயத்துக்கு ஒத்து வருவதற்காக இராமாநுஜர் ஸ்ரீ பாஷியம் எழுதிமுடித்த காலத்தைத் தெரிவிக்கும் தமிழ்ச் செய்யுள் ஒன்றில் காணும் வருஷத்தை முப்பதுவருஷம் குறைத்து ஸ்ரீ ராயர் கணக்கெடுத்துக் கொடுத்திருக்கிறார். அன்றி, அவ்வாசாரிய

ரைத் துன்புறுத்திய சோழ மன்னன் முதற் குலோத்துங்கனு கவே இருத்தல்வேண்டும் என்று, அவன் வைஷ்ணவ மதத் துக்கு விரோதமாக இருந்தான் எனக் கூறுவதற்கான ஆதாரம் சிறிதும் இல்லாமல் இருந்தும் நிர்ணயித்தார்.

இவ்வாசாரியாருடைய ஜனன நாளைக் குறிக்கும் அவதார சுலோகமும் தமிழ் உரைநடைப் பகுதியும் காஞ்சீபுரத்தி லிருந்து கர்னல் மக்கென்ஸியின் உதவியாளர்கள் பிரதி செய்து எழுதி வைத்தவை இந்தத் தொகுப்பிலே தனியாகக் கொடுக்கப்பட்டுள்ளன. (செ. 1292, 1293). அவற்றின்படி அவர் கலி வருஷம் 4126, சகாப்தம் 947, குரோதன ஆண்டில் பிறந்தார். இது குரு பரம்பரை சம்பிரதாயப்படி காணும் ஆண்டுக்கு எட்டு வருஷம் பிற்பட்டதாக இருக்கிறது. மற்றப் பஞ்சாங்க விவரங்களான சித்திரை மாதம், சுக்கில பக்ஷத்துப் பஞ்சமி, வியாழக்கிழமை, திருவாதிரை நக்ஷத்திரம் ஆகியவை இரண்டுக்கும் பொதுவாக உள்ளன. இவ்விடம் கொடுக்கப்பட் டுள்ள பஞ்சாங்கக் குறிப்பில் சித்திரை மாதத்தின் 14-ஆம் தேதி என்பது அதிகப்படியாகக் காண்பதாகும். இந்த விவரம் எப்படிக் கிடைத்ததென்பது தெரியவில்லை.

இந்தத் தொகுப்பில் காணும் விவரங்களைக் கொண்டு கணக்கிட்டால் அவர் பிறந்த நாள் கி. பி. 1025-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஐந்தாம் தேதியாகும். அன்றைக்குப் பஞ்சமி திதி உதயாதி முப்பது நாழிகை வரையில் இருந்திருக்கிறது. திருவாதிரை நக்ஷத்திரம் உதயாதி மூன்று நாழிகை முப்பத் தாறு விநாடிக்குமேல் வந்திருக்கிறது. ஆனால் அன்றைக்குத் திங்கட்கிழமை; சாசனத்தில் கண்டுள்ளபடி வியாழக்கிழமை அல்ல. இதேபோல, சம்பிரதாயப்படி காணும் பஞ்சாங்கக் குறிப்புகளுக்கு ஒத்து வரும் நாள் கி. பி. 1017-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் நான்காம் தேதி ஆகும். ஆனால் அன்றைக்குச் சித்திரை மாதம் பதின்மூன்றாம் தேதியாகும்; சாசனத்தில் கண்டுள்ளபடி பதினான்காம் தேதியாகாது.

இம்மாதிரியே, வைஷ்ணவ ஆசார்ய பரம்பரையில் இராமாநுஜருக்கு மூத்தவரான ஆளவந்தார் ஜனன காலத் தைப்பற்றியும் வேறுபாடு காணப்படுகிறது. சம்பிரதாயத்தை

ஒட்டி அவர் கலியப்தம் 4017-க்குச் சரியான தாது (கி. பி. 917)வருஷம், ஆடிமாதம், உத்திராட நக்ஷத்திரத்தில் பிறந்தார் எனக் கூறுவர். ஆனால் இவ்விடம் கொடுக்கப்பட்ட கணக்கிலே (சாசனங்கள் 1296-7) அது ஐம்பது ஆண்டு பிற்பட்டதாகக் காண்கிறது. அந்தச் சுலோகத்தின் கடபயாதி சங்கியைப்படி அது கலியப்தம் 4067, சகாப்தம் 888, அக்ஷய வருஷம் (கி. பி. 966-7) ஆகும்.

இன்னும், இராமாநுஜருடைய பெரிய தாயார் குமாரரும், அவருடன் ஒருசாலை மாணவரும், பின்னால் வைஷ்ணவ மதத்தைத் தழுவி, துறவம்பூண்டு எம்பார் என்ற பெயரிலே விளங்கியவருமான கோவிந்த பட்டர் என்பார் இராமாநுஜருக்கு எட்டு வருஷம் இளையவர் என்று குருபரம்பரைகள் கூறும். இராமாநுஜர் கலியப்தம் 4118, பிங்கள வருஷம் பிறந்தார். கோவிந்த பட்டர் கலியப்தம் 4126, குரோதன வருஷம் தைமாதம் புனர்ப்பூச நக்ஷத்திரத்தில் பிறந்தார். இராமாநுஜார்ய திவ்ய சரிதை என்னும் நூலும் சம்பிரதாயத்தை ஒட்டியே இராமாநுஜர் பிங்கள வருஷம் பிறந்தார் என்று கூறுகிறது. எனினும், கோவிந்தர் அதே ஆண்டு தை மாதம், பூர்ணமி, புனர்ப்பூச நக்ஷத்திரத்தில் பிறந்தார் என்று கூறுகிறது. இவ்விதம் இருவரும் ஒரே ஆண்டில் பிறந்தவர் என்பது அந்த நூலாசிரியர் கருத்து. இதை ஒட்டியே சம்பிரதாயமாகக் கோவிந்தர் பிறந்த வருஷமாகக் கொள்ளும் குரோதன ஆண்டிலேயே இராமாநுஜர் பிறந்தார் என்று இந்தத் தொகுப்பில் கொடுக்கப்பட்டுள்ள சாசனம் தெரிவிக்கிறது.

இவற்றைக் கவனிக்கும்போது குரு பரம்பரைகளும் சம்பிரதாயங்களும் இந்தக் கால முறையை ஒருமுகமாகக் கூறவில்லையென்பதும், அவற்றுள் வேறுபாடுகள் காணப்படுகின்றன வென்பதும் தெளிவாகும். ஆகவே சம்பிரதாய நூல்களில் காணும் காலவிவரத்தைத் தள்ளாமல் அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற நிர்ப்பந்தம் இல்லை. உண்மையில் அந்தச் சம்பிரதாயங்களே நீண்ட காலத்துக்குப் பிறகு உருவானவை. ஆதலின் இதர ஆதாரங்களைக் கொண்டு இராமாநுஜருடைய காலத்தைப் புனராலோசனை செய்வது முற்றிலும் பொருத்தமானதே.

இவ்வாசாரியரின் வாழ்க்கையில் நிகழ்ந்த முக்கியமான சம்பவம் சோழ மன்னனுடைய மதத் துவேஷத்தால் அவர் ஸ்ரீரங்கத்தைத் துறந்து மைசூர்ப் பிரதேசத்துக்கு ஓடிப் போனது ஆகும். மதத்துவேஷம் கொண்டு அவரைத் துன் புறுத்திய சோழமன்னன் யார் என்பது ஐயந்திரிபற நிச்சயிக் கப்பெறவில்லை. பொதுவாக அவனை முதலாம் குலோத்துங்கன் என்று கொள்வர். அவனுக்கு முன் அரசாண்ட அதிராஜேந் திர தேவனாகவோ அல்லது அவன் தந்தையான வீர ராஜேந் திரனாகவோ இருத்தல் வேண்டும் என்று கொள்வாரும் உளர். குருபரம்பரை நூல்களிலே அவன் கிருமிகண்டசோழன் என்று குறிக்கப்பெறுகிறான். ஓர் இடத்தில் குலோத்துங்கன் என்ற பெயரும் காணப்படுகிறது. சோழ மன்னன் வைஷ்ணவர் களுக்கு விரோதமாக மதத் துவேஷம் கொண்டிருந்தான் என் பதை எடுத்துக்காட்ட இரண்டு சம்பவங்கள் குறிக்கப்படு கின்றன; ஒன்று அவன் (தில்லைச் சிற்றம்பலத்தே) சித்திர கூடத்தில் எழுந்தருளியிருந்த கோவிந்தராஜப் பெருமான் விக்கிரகத்தைப் பிடுங்கிக் கடலில் எறிந்தது. மற்றொன்று சிவாத் பரதரம் நாஸ்தி (சிவனையன்றி வேறு பரம்பொருள் இல்லை) என்று எழுதிய ஓலையில் இராமாநுஜரைக் கையெழுத்துச் சாற்றவேண்டுமென்று அவன் நிர்ப்பந்தித்தது.

இராமாநுஜரைக் கையெழுத்திடும்படி சோழ மன்னன் நிர்ப்பந்தித்த வரலாற்றைக் குருபரம்பரைகள் பின் வருமாறு கூறுகின்றன.

இராமாநுஜரைக் கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்த இராஜசபைக்கு அழைத்துச் செல்வதற்காக அரசாங்க ஊழி யர்கள் ஸ்ரீரங்கத்துக்கு வந்தார்கள். இதையறிந்ததும், இராமா நுஜருடைய ஆசாரியர்களுள் ஒருவரான பெரியநம்பி என் பவர் தம் வெள்ளை ஆடையைக் களைந்து காஷாயம் பூண்டு தாமே இராமாநுஜர் என்று கூறிக்கொண்டு, கூரத்தாழ்வானு டன் சேவகர்களைப் பின்தொடர்ந்து இராஜசபைக்குச் சென் றார். இதனால் இராமாநுஜரும் காஷாயம் இல்லாமல் வெள்ளை ஆடை அணிந்து சோழநாட்டைத் துறந்து வெளியேறச் சிறிது அவகாசம் ஏற்பட்டது. அவரும் வெள்ளை ஆடை

உடுத்து வெளியேறி வழியிலே பல கஷ்டங்களை அனுபவித்துக் கடைசியாக ஹொய்சள தேசத்தைச் சென்றடைந்தார்.

அவருக்குப் பதிலாக, கூரத்தாழ்வானுடன் சோழராஜ சபைக்குச் சென்ற பெரியநம்பி அங்கே ஓலையில் கையெழுத்து இடவில்லை. அதற்குப் பதிலாகக் கூரத்தாழ்வான், ஓலையில் எழுதியிருந்த வாக்கியத்தின் அடியில் த்ரோணமஸ்தி ததஃ பரம் (அதற்குமேல் துரோணம் என்பது உண்டு) என்று எழுதினராம். சிவம், துரோணம் என்ற சொற்கள் இரண்டும் (குறுணி, முக்குறுணி போன்று) முகத்தலுக்கான வெவ்வேறு அளவுகளின் பெயர். இவ்விதம் இருபொருள் கொண்ட சொற்களால் அவர் எழுதியது வேண்டுமென்றே இராஜசபையை அவமானம் செய்ததாகக் கருதப்பட்டது. அதன்மீது பெரிய நம்பி, கூரத்தாழ்வான் ஆகிய இருவரும் தங்கள் கண்களைப் பறிகொடுக்க நேர்ந்ததாம்.

பெரியநம்பி முதுமையை அடைந்திருந்தபடியால் அதைப் பொறுக்காமல் வேதனைப்பட்டு, தலைநகரத்திலிருந்து திரும்பும் வழியிலே நடுவில் உயிர் நீத்தார். இந்தச் சம்பவம் காளயுக்தி ஆண்டு நடந்ததாகக் குருபரம்பரைகள் கூறும்.

கூரத்தாழ்வானே கங்கை கொண்ட சோழ புரத்தின் நகர்ப்புறத்தே அரண்மனை வேலைக்காரி ஒருத்தியின் வீட்டிலே தன்னுடைய கண்ணின் புண் குணமாகும் வரையில் தங்கியிருந்து புண் நீங்கிக் குணம் ஏற்பட்டதும் ஸ்ரீரங்கத்தை அடைந்தார். இராமாநுஜர் அதற்கு முன்னதாக அந் நகரைத் துறந்து வெளியேறிவிட்டார். குருடரான கூரத்தாழ்வாருக்கு அங்கே தங்கியிருக்க இடம் கிடைக்கவில்லை. அதனால் மனம் கசந்த அவர் அவ்வூரை விட்டுக் கிளம்பித் திருமாலிருஞ்சோலையை அடைந்தார். அங்கே அவர் பதினொரு வருஷங்கள் தங்கியிருந்தாராம். ஹொய்சள நாட்டினின்றும் இராமாநுஜர் திரும்பி வந்த பிறகு, பழையபடியே இருவரும் ஒன்றாகக் கூடினராம்.

பெரியநம்பி திருநாடு சென்ற காளயுக்தி வருஷத்தைக் கி. பி. 1078-79-க்குச் சரியாக வந்த ஆண்டாக்வே கொள்வர்.

அது முதற் குலோத்துங்க சோழன் ஆட்சிக் காலமாகும். அவர் சோழர் தலைநகரான கங்கை கொண்ட சோழபுரத்துக்கு வந்த சிறிது காலத்துக்குள்ளாகவே இறந்துபட்டாராதலின், இராமாநுஜரைச் சோழமன்னன் நிர்ப்பந்தப்படுத்தியதும், அதற்குப் பணியவிரும்பாமல் சோழ நாட்டைத் துறந்து இராமாநுஜர் ஹொய்சள தேசத்தை அடைந்ததும் அந்த வருஷமே நடைபெற்றிருத்தல் வேண்டும் எனவும் கொள்வர்.

இராமாநுஜர் ஹொய்சள நாட்டிலே பன்னிரண்டு ஆண்டுகள் தங்கியிருந்தாராம். அதன் பிறகு அவரைத் துன்புறுத்திய சோழ மன்னன் (அதாவது முதற் குலோத்துங்கன்) இறந்துவிட்டான் என்ற செய்திகேட்டு அவர் திரும்பவும் ஸ்ரீரங்கத்தை வந்தடைந்தாராம். அதற்குப் பிறகே அவர் தம் சிஷ்யரான கூரத்தாழ்வாரோடு சேர்ந்தது. அவர் ஹொய்சள தேசத்தில் இருந்த நாளில் அந்நாட்டு ஜைன மன்னனை பிட்டிகதேவனை வைஷ்ணவ மதத்துக்கு மாற்றித் 'தப்த முத்திரை' தரிக்கச்செய்து அவனுக்கு விஷ்ணுவர்த்தனன் என்ற பெயரையும் அளித்தாராம்.

குருபரம்பரை விவரப்படி பிட்டிகதேவன் முதலில் ஜைன மதத்தைப் பின்பற்றுபவனாக இருந்தான் என்றும் அவன் வைஷ்ணவ மதத்தையடைந்த பிறகு விஷ்ணுவர்த்தனன் என்ற பெயரைத் தரித்தான் என்றும் தெரியவருகிறது. ஆனால் சாசனங்களிலே அவனுடைய ஆட்சிக் காலத்தின் ஆரம்பத்திலிருந்தே, ஆட்சிக்காலம் முழுவதும் அவன் விஷ்ணுவர்த்தனன் என்று குறிக்கப் பெற்றிருப்பதைக் காணலாம். அன்றி, பிட்டி அல்லது பிட்டிகன் என்பதும் விஷ்ணு என்பதன் வேறு வடிவமே; பிராகிருதத்தின் வழியாக வந்ததாகும்.

இராமாநுஜர் தம்மைத் துன்புறுத்திய சோழ மன்னன் (அதாவது முதற் குலோத்துங்கன்) இறந்துபோன செய்தியைக் கேட்டபிறகே ஹொய்சள நாட்டிலிருந்து சோழதேசம் வந்தடைந்தார் என்பதனால் அவர் ஹொய்சள நாட்டில் தங்கியிருந்த காலம் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மேலாக வரும். அம்மன்னன் கி. பி. 1170 ஆண்டு சிங்காதனம் ஏறி ஐம்பது ஆண்டுகள் அரசுபுரிந்திருக்கிறான். அதனால் அவன் இறந்து

போனது கி.பி. 1120-ஆண்டாகும். கி.பி. 1078-9-ஆம் ஆண்டுக்குச் சரியான காளயுக்தியில் இராமாநுஜர் சோழ தேசத்தை விட்டுப் புறப்பட்டுப் போய், கி. பி. 1120-ஆம் ஆண்டுக்குப் பிறகு அவர் திரும்பி வந்தார் என்பாராயின், அவர் வெளி தேசத்திலே தங்கியகாலம் நாற்பது ஆண்டுகளுக்கு மேலாகும். ஆயினும் குருபரம்பரைகளோ அந்தக் காலம் பன்னிரண்டு ஆண்டுகளே என்று கூறுகின்றன.

இராமாநுஜருடைய வாழ்க்கை வரலாற்றைக் கூறுவதாகப் பிள்ளை லோகஞ்சீயர் என்பார் இராமாநுஜார்ய திவ்ய சரிதம் என்று தமிழிலே ஒரு நூல் எழுதியிருக்கிறார். அதிலே அவர் பழையநூல் ஏதோ ஒன்றிலிருந்து சில பாடல்களை மேற்கோளாக எடுத்து ஆண்டிருக்கிறார். அந்தப் பாடல்கள் எந்த நூலிலிருந்து எடுக்கப்பெற்றவை என்பதோ அந்த நூலை இயற்றியவர் யார் என்பதோ தெரியவில்லை. எனினும் அவை பழமை வாய்ந்தவை என்பது நிச்சயம்.

இராமாநுஜர் வேதாந்த சூத்திரங்கள் எனப்பெறும் பிரம்ம சூத்திரத்துக்குத் தாம் இயற்றிய ஸ்ரீ பாஷ்யத்தை எழுதப் பல தடவைகள் ஆரம்பித்திருக்கிறார். ஒவ்வொரு சமயமும் அது முற்றும் பூர்த்தியாகாமல் ஏதோ இடையூறுகளால் நின்றுவிட்டது. சோழ நாட்டைத் துறந்து அவர் ஹொய்சள தேசம் போன சமயம் அது மூன்றில் இரண்டு கூறே முடிந்திருந்தது; ஒரு கூறு பாக்கியிருந்தது. அந்த மூன்றில் ஒரு பகுதியை அவர் திரும்பவும் சோழ நாட்டை அடைந்து தம் சிஷ்யர் கூரத்தாழ்வாரோடு கூடி அரங்கமாநகரில் வசிக்கத் துவங்கிய பின்னரே எழுதி முடித்தாராம். இவ்விதம் அவர் ஸ்ரீபாஷியத்தை எழுதி முடித்தது சகாப்தம் 1077, அதாவது கி. பி. 1155-56-ஆம் ஆண்டாகும் என்று இராமாநுஜார்ய திவ்ய சரிதையில் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பெற்ற செய்யுள் ஒன்று தெரிவிக்கிறது.

> இன்ன வாறு திருப்பதிகள்
> எங்கும் வாழ்வித் தெதிராஜன்
> தன்ன தாக்கித் தரிசனமும்
> தரணி யெங்கும் விளங்குவித்து

முன்னம் உரைத்த பாடியத்தின்
முற்ற மூன்றத் தொருகூறு
தன்னைச் சென்றுண் டாயிரத்தாங்
கெழுபத் தேழில் சாத்தினன்.

(பக்கம்—243.)

குரு பரம்பரைகளில் காணும் சம்பிரதாயக் கணக்குப்படி அவர் சகாப்தம் 1059, அதாவது கி.பி. 1137-38-ஆம் ஆண்டில் பரமபதம் அடைந்தார். அப்படியானல் அவர் ஸ்ரீபாஷ்யத்தை எழுதிப் பூர்த்தி செய்தது அதற்கு முந்திய நிகழ்ச்சியாக இருத்தல் வேண்டும். ஆகவே அந்த ஆண்டு சகாப்தம் 1047 அதாவது கி.பி. 1125-26-ஆம் வருஷமாக இருத்தல் வேண்டும் என்று நிச்சயித்து, பாடலில் கண்ட சகாப்தத்தை முப்பது வருஷம் குறைத்துக் கணக்கிட்டார் ஸ்ரீ ராயர்.

எனினும் ஒரு விஷயத்தை நாம் முக்கியமாகக் கருதவேண்டும். இவ்வாசாரியப் பெருமானுடைய வாழ்க்கை வரலாற்றைத் தெரிவிக்கும் நூல்களிலே இம் மேற்கோள் செய்யுள்களில் காணும் சகாப்த வருஷமே காலமுறைப்படி மிகவும் பழமையான நூலைச் சேர்ந்ததாகும்; அன்றி, இவர் வாழ்க்கையின் இரு வேறு சம்பவங்களை எடுத்துக்கூறும் இடங்களில் அந் நூலிலே மேற்கோள் காட்டப்பெற்ற இரு வேறு செய்யுட்களில் குறிக்கப்பெறும் காலத்தை ஒத்ததாகவும் உள்ளது.

இராமாநுஜர் ஹொய்சள தேசத்திலிருந்து ஸ்ரீரங்கம் திரும்பிய வரலாறு வேறு ஒரு பாடலில் காணப்படுகிறது.

ஆய்ந்த சகாப்த மாயிரத்தைம்
பத்தொன்பதினீங்கி நின்றும்
போந்து பதினே ராண்டிங்ஙன்
புகழ்தான் வளர்ந்த பெரும்பூதூர்
வேந்தன் எண்ணி லாஅன்ப
ருடனும் அரங்க நகர்எய்திப்
பாந்த ளணை(யில்) துயில்பரமன்
பாதம் பணிந்தங் குறைந்திடுநாள்.

(பக்கம்—227.)

சகாப்தம் 1059-ஆம் ஆண்டில் ஸ்ரீரங்கத்தை விட்டுக் கிளம்பிய அவர் பதினேர் ஆண்டுகள் வெளி நாட்டிலே இருந்துவிட்டுத் திரும்பவும் அரங்கப் பெருநகரை அடைந்தார் என்று கூறுகிறது அந்தச் செய்யுள். அவர் ஹொய்சள தேசத்திலே தங்கியிருந்த காலம் பன்னிரண்டு ஆண்டுகள் என்று சம்பிரதாய நூல்கள் கூறுகின்றன. ஆனல் இந்தச் செய்யுளிலே அது பதினேராண்டுக் காலமே என்று தெளிவாகக் காணப்படுகிறது. இரண்டும் சரியானதாகத்தான் இருத்தல் வேண்டும். ஏதாவது ஒன்றைத் தவறெனத் தள்ள வேண்டியதில்லை. அவர் ஹொய்சள நாட்டிலே சென்றிருந்த இடத்தில் தங்கியது பதினேராண்டுகள் எனவும், மற்றும் ஓர் ஆண்டு ஸ்ரீரங்கத்திலிருந்து அவ்விடம் சென்றதிலும் மறுபடியும் திரும்பிவந்ததிலும் செலவழிந்த காலமாகவும் இருக்கலாம்.

இவ்விதமே இருத்தல் வேண்டும் என்பது அதே நூலில் மேற்கோளாக எடுத்தாளப்பட்ட மற்ெருரு செய்யுளிலிருந்து விளங்குகின்றது.

அன்றங் கிருந்த வருள்கூரத்
 தாழ்வா னரங்க நகரடைய
அன்றெதி ராச னடியார்
 தம்மை வாசல் விடாதிருப்பச்
சென்று திருமா லிருஞ்சோலைச்
 செல்வர் தம்மைத் தோத்திரம்செய்(து)
ஒன்றி யழகர் தம்பதியில்
 பதினே ராண்டு றைந்ததற்பின்.

(பக்கம்—229.)

கங்கை கொண்ட சோழபுரத்திலிருந்து திரும்பிய கூரத்தாழ்வானுக்கு அங்கே புகலிடம் கிடைக்காததால் அவர் திருமாலிருஞ்சோலையை அடைந்து அவ்விடத்திலே அழகரைப் பணிந்துகொண்டு பதினேராண்டுகள் வசித்தார் என்றும் அதற்குப் பிறகே தம் ஆசிரியரான இராமாநுஜரைச் சேர்ந்தார் என்றும் இந்தப் பாடல் கூறுகிறது. அவரும் தம் கண்ணை இழந்த பிறகு அந்தப் புண் ஆறுவதற்காகத் தலைநகரிலேயே நகர்ப் புறத்தில் அரண்மனைப் பணிப்பெண்

ஒருத்தியின் வீட்டில் சிறிது காலம் தங்கியிருந்தார். அதற்குப் பிறகே அவர் ஸ்ரீ ரங்கத்தை நோக்கிக் கிளம்பினர். இதனால் அவர் கங்கைகொண்ட சோழபுரத்தில் தம் கண்ணை இழந்த பின் திருமாலிருஞ்சோலையை அடைந்ததற்கு ஒரு வருஷ காலம் பிடித்திருக்கலாம் என்று கொள்வதில் தவறு இல்லை.

மேலே நாம் எடுத்துக்காட்டியுள்ள செய்யுளின்படி, இராமாநுஜர் சோழ நாட்டைவிட்டு மைசூர்ப் பகுதிக்குக் கிளம்பியது சகாப்தம் 1059 அதாவது கி.பி. 1137-38-ஆம் ஆண்டாகும். அவ்விதமாயின், பெரியநம்பி தம் கண்ணைப் பறிகொடுத்து அந்தக் கொடுமை தாங்கமாட்டாமல் உயிர் துறந்ததாகக் குறிக்கப்பெறும் காளயுக்தி ஆண்டு சகாப்தம் 1060 அல்லது கி.பி. 1139-39 ஆண்டுக்குச் சரியான காள யுக்தியே ஆகும். கண்ணைப் பிடுங்கிய உடனே பெரியநம்பி இறந்துபட்டார் என்று குறிக்கப் பெறவில்லை; சிறிது காலம் உயிர் தாங்கித் தலைநகரிலிருந்து ஊர் திரும்பும் வழியிலே ஓர் இடத்தில் உயிர் துறந்தார் என்று கூறப்படுகிறது. அன்றி, பெரியநம்பியும் கூரத்தாழ்வானும் இராஜ மனுஷ்யர்களுடன் ஸ்ரீ ரங்கத்தைவிட்டுக் கிளம்பிய வுடனே இராமாநுஜரும் அந்நகரத்தைத் துறந்து மைசூருக்குக் கிளம்பிவிட்டார். தலை நகருக்குக் கிளம்பிய பெரியநம்பியும் கூரத்தாழ்வானும் அதை அடைந்து, இராஜமனுஷர்களுடன் விவாதத்தில் ஈடுபட்டுப் பார்வை இழந்ததற்குச் சிறிது காலமாவது பிடித்திருக்கும். ஆகவே இராமாநுஜர் சோழநாட்டை விட்டுப் புறப்பட்டது சகாப்தம் 1059-இன் கடைசியிலும், பெரியநம்பிகள் இறந்தது அடுத்த சகாப்தம் 1060-இன் ஆரம்பத்திலும் நடைபெற் றிருத்தல் சாத்தியமே. அவ்விதமாயின் இந்தச் சம்பவங்கள் கி.பி. 1138-ஆம் ஆண்டில் நிகழ்த்திருத்தல் வேண்டும்.

பன்னிரண்டு ஆண்டுகள் கழித்து ஹொய்சள தேசத் திலிருந்து இராமாநுஜர் சோழ நாடு திரும்பியது, தம்மைத் துன்புறுத்திய சோழ மன்னன் இறந்துவிட்டான் என்ற செய்தியைக் கேட்ட பின்னரே ஆகும் என்பர். அவ்வித மாயின், அவர் சோழ நாடு திரும்பியதாகக் கொள்ளக்கூடிய கி.பி. 1150-ஆம் ஆண்டுக்கு அணித்தாகவே அவரைத் துன் புறுத்திய சோழ மன்னன் இறந்துபோயிருத்தல் வேண்டும்.

அந்நாளிலே சோழ சிங்காதனத்தில் அமர்ந்திருந்தவன் இரண்டாம் குலோத்துங்கன் ஆவான். அவன் கி. பி. 1133-ஆம் ஆண்டில் மே மாதத்துக்கும் ஜுலை மாதத்துக்கும் இடைப்பட்ட காலத்தில் முடிசூட்டப் பெற்ருன் என்று கணக்கிடப்பட்டுள்ளது. (எபி. இந்திகா, பத்தாம் வால்யூம், 135 பக்கம்; பதினேராம் வால்யூம், 287 பக்கம்). அவன் பதினறு வருஷங்களுக்கு மேல் அரசு செலுத்தியிருக்கிருன்: தெலுங்கு தேசத்திலே கிடைக்கும் அவனுடைய சாசனங்களிலே ஆட்சி ஆண்டோடு சகாப்தமும் சேர்ந்துக் காணப்படுகிறது. அதைக் கொண்டு கவனிக்கும்போது அவனுடைய ஆட்சியின் பதினருைம் ஆண்டு சகாப்தம் 1070-71 ஆகும் (தே. இ. சாசனங்கள், நான்காம் வால்யூம், 1044 நெ.; ஆரும் வால்யூம், 134 நெ.). அவனுடைய ஆட்சியின் பதினேழாம் (1908-ஆண்டு 6 நெ. சாசனம்.) ஆண்டுக்கு மேற்பட்ட ஆண்டைக் கொண்ட சாசனம் இதுவரையில் கிடைக்கவில்லை. ஆகவே அவனது ஆட்சி கி. பி. 1150-ஆம் ஆண்டிலே முடிவடைந்திருத்தல் வேண்டும் என்று கொள்ளலாம்.

இரண்டாம் குலோத்துங்கன் சிவபெருமானிடத்திலே அதீதமான பக்தி கொண்டவன் என்பதையும் நாம் அறிவோம். அவன் தில்லையில் நடம்புரியும் எம்பெருமான் கோயிலை விஸ்தாரமாக்கினன். அதற்கு இடையூருக இருந்த கோவிந்தராஜப் பெருமாளுகிய விஷ்ணுவின் விக்கிரகத்தைப் பெயர்த்து எடுத்து 'அவருடைய வாசஸ்தலமான கடலுக்கே' அனுப்பிவைத்தானும். இதை அவனுடைய ஆசிரிரும் ஆஸ்தானக் கவிஞருமான ஒட்டக்கூத்தர்,

"தில்லைத் திருமன்றின் முன்னிற் சிறுதெய்வத்
தொல்லைக் குறும்பு தொலைத் தெடுத்து"—
(கண்ணி-39)

என்று குலோத்துங்கசோழன் உலாவிலும்

"பொன்னிற் குயிற்றிப் புறம்பிற் குறும்பறுத்து
முன்னர்க் கடலகழின் மூழ்குவித்த—சென்னி"
(கண்ணி-33)

என்று இராஜராஜசோழன் உலாவிலும்

"முன்றிற் கிடந்த கருங்கடல் போய்
முன்னைக் கடல்புகப் பின்னைத் தில்லை
மன்றிற் கிடங்கண்ட கொண்டன் மைந்தன்
மரகத மேருவை வாழ்த்தினவே."

(தாழிசை 777)

என்று தக்கயாகப்பரணியிலும் தெளிவாக எடுத்துரைத்திருக்கிறார். தக்கயாகப்பரணியின் உரையாசிரியரும் இந்நிகழ்ச்சியைக் குலோத்துங்கன் புரிந்ததென்றே விளக்கமாகக் கூறுகிறார். அன்றி, இம்மன்னனுடைய ஆட்சியின் பதினொன்காம் ஆண்டு கொண்டதாகத் தஞ்சாவூர் ஜில்லா ஆடுதுறையிலிருந்து கிடைக்கும் கல்வெட்டு ஒன்றிலும் இந்தச் சம்பவம் குறிக்கப்பட்டிருக்கிறது. (1907-ஆம் வருஷத்தின் 363 நெ. சாசனம். இந்த விவரத்தைப் புகழ்ந்து உரைத்துக்கொண்டே இந்தக் கல்வெட்டு ஆரம்பமாவதாகத் தோற்றுகிறது. ஆயினும் அந்தப் பகுதி சிதிலமாக உள்ளது. அந்தக் கல்வெட்டின் மற்றப்பகுதி நல்ல நிலைமையில் இருப்பதைக் கவனிக்கும் போது இந்தப் பகுதி வேண்டுமென்றே சிதைக்கப் பெற்றிருத்தல் வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது.) இவ்விதம் சாசன வழக்கு, இலக்கிய வழக்கு ஆகிய இரண்டும் ஒருங்கே இதன் புகழை இரண்டாம் குலோத்துங்கனுக்கு ஏற்றிக்கூறுவது தெளிவாகும்.

[இவற்றைக் கவனிக்கும்போது இரண்டாம் குலோத்துங்க சோழன் தில்லையில் நடராஜப்பெருமான் ஆலயத்தை விஸ்தரித்து, திருப்பணி செய்த விவரத்தை எடுத்துக்கூறும் புலவர், 'அவனுடைய முன்னோர்களிலே ஒருவன் செய்த செயலை அம் மன்னனுக்கு ஏற்றிக் கூறுகிறார்' என்று கொள்ளமுடியாதென்பது தெளிவாக விளங்கும். இன்னும், அந்தக் கவிஞர் பெருமான் விக்கிரமசோழன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் இராஜராஜன் ஆகிய மூவருடைய அவைக்களத்தையும் அலங்கரித்தவர் என்பதையும், அம் மூவர் பேரிலும் தனித்தனியே உலாப் பிரபந்தம் பாடியுள்ளார் என்பதையும் நாம் அறிவோம். அவற்றுள் அவர் இந்தச் செயலை மற்றவர்களுக்கு ஏற்றிக் கூறாமல் இரண்டாம் குலோத்துங்கன் புகழாகவே உரைக்கிறார் என்பதையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.]

இவ்விதம் கோவிந்தராஜப் பெருமாள் விக்கிரகத்தைப் பிடுங்கிக் கடலில் எறிந்த சோழமன்னன் குலோத்துங்கனே யாவன் என்பதை வைஷ்ணவ சம்பிரதாய நூல்களும் தெரிவிக்கின்றன. இராமாநுஜார்ய திவ்ய சரிதையில் இதுபற்றிக் குறைப் பாடல் ஒன்று மேற்கோள் கொடுக்கப்பட்டுள்ளது.

"அம்பொற் குடைச் சகனுயிரத்
தோன்பதாம் வருஷத்துத் தென்பால்
சென்னி குலோத்துங்கன் சித்திரகூடச்
செங்கண்மால் தன்னை அலையெறி நாள்தான்"

(பக்கம்-226)

இதிலே அம்மன்னன் சென்னி குலோத்துங்கன் என்று தெளிவாக உள்ளது. [இந்தப் பாடலின்படி கோவிந்தராஜரைக் கடலில் எறிந்த ஆண்டு சகாப்தம் 1009 ஆகும். அப்படியானல் அது கி.பி. 1087-8-ஆம் ஆண்டில் முதற் குலோத்துங்க சோழன் ஆட்சியின் முற்பகுதியில் நிகழ்ந்திருத்தல் வேண்டும். ஆனல், இந்தச் சம்பவம் இரண்டாம் குலோத்துங்கன் ஆட்சிக் காலத்தே நிகழ்ந்த தென்பதை நாம் மேலே கண்டோம். ஆகவே இந்தப் பாடலில் உள்ள ஆண்டு இரண்டாம் குலோத்துங்கன் சிங்காதனம் ஏறிய சகாப்தம் 1055-க்கும், இந்தச் சம்பவம் குறிக்கப்பட்டிருக்கும் அவனுடைய ஆடுதுறைக் கல்வெட்டின் ஆண்டான அவனது ஆட்சியின் பதினன்காம் வருஷத்துக்குச் சரியான சகாப்தம் 1038-க்கும் இடைப்பட்டதாக இருத்தல் வேண்டும். அது 1059-ஆம் ஆண்டேபோலும். அவ்விடம் மேற்கோள் கொடுக்கப்பட்டிருக்கும் பாடல் குறையாக உள்ளது. அதன் முழு உருவம் கிடைக்கவில்லை. அது கிடைக்குமானல் ஆண்டு என்னவென்பதை நிச்சயமாகக் கூற முடியும்.] இவற்றைக் கவனிக்கும்போது இராமாநுஜர் காலத்தில் ஆண்ட சோழமன்னன், வைஷ்ணவ மதத்துக்கு விரோதமாக இருந்தான் என்பதை எடுத்துக்காட்டக் குருபரம்பரை நூல்கள் கூறும் இரண்டு சம்பவங்களுள் ஒன்று இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் நிகழ்ந்ததென்பது நன்கு விளங்கும். [இன்னும், குலோத்துங்கன் என்ற பெயரைப் பிற்காலத்துக் குருபரம்பரை நூல்கள் சோழர்களுடைய பொதுப் பெயராகக் கொண்டுள்ளன என்று கூறுவதும் ஏற்கக் கூடியதல்லவென்பது தெளிவாகும்].

இதே சம்பவம்பற்றிக் குருபரம்பரை நூல்கள் கூறும் மற்றொரு நிகழ்ச்சியும் இதே முடிவை உறுதிப் படுத்துகிறது. சிதம்பரத்திலே கோவிந்தராஜப் பெருமான் கோயில் அழிக்கப் பெற்றபின், வைஷ்ணவ அடியார்கள் சிலர் அவருடைய விக்கிரகத்தை மீட்டுத் திருப்பதி எடுத்துச் சென்று அங்கே தங்கள் வீட்டில் வைத்துப் பாதுகாத்து வந்தார்களாம். இதைக் கேள்வியுற்ற இராமாநுஜர் ஒதுங்கவும் கூரையில்லாமல் திண்டாடும் எம்பெருமானுக்குத் திருப்பதியிலே ஒரு கோயில் நிர்மாணித்து அதிலே அவரைப் பிரதிஷ்டைசெய்து வைத்தாராம். இந்தக் கைங்கரியத்தில் அவரால் வைஷ்ணவ மதத்துக்கு மாறிய கட்டிதேவ யாதவராயன் என்னும் வேந்தன் ஒருவன் அவருக்குப் பெரிதும் உதவியாக நின்றானும்.

திருப்பதியிலே இராமாநுஜர் தம் காரியத்தைச் செய்து முடிக்க உதவிய கட்டிதேவன் என்பான் அந்நாளிலே திருப்பதி, காளஹஸ்தி ஆகிய இடங்கள் கொண்ட பகுதியை ஆண்டுவந்த யாதவராயர் என்னும் குறுநிலமன்னர் வம்சத்தைச் சேர்ந்தவன். இரண்டாம் குலோத்துங்கனுடைய ஆட்சியின் ஆறாம் ஆண்டு கொண்டதாகக் காளஹஸ்தியிலிருந்து கிடைக்கும் சாசனம் ஒன்றில் கட்டிதேவனை குலோத்துங்கயாதவராயன் என்பான் பிராமணர்கள், தபஸ்விகள், மற்றும் இதரர் ஆகியோருக்குக் கோயிலிலே உணவு அளிப்பதற்காக வீரமங்கலம் என்னும் கிராமத்தைத் தானம் அளித்த செய்தி காணப்படுகிறது. (1922-ஆம் ஆண்டின் 83-ெ. சாசனம்). இராமாநுஜர் திருப்பதியிலே கோயில் எழுப்ப உதவி புரிந்த கட்டிதேவ யாதவராயன் இவனே போலும்.

இவ்வாசாரியர் வைஷ்ணவ மதத்தை நிலை நிறுத்திப் பரப்புவதற்காகச் செய்த கைங்கரியங்களுள் இதையே கடைசியானதாகச் சம்பிரதாய நூல்கள் கூறுகின்றன. அதற்குள்ளாகவே அவர் மிகவும் முதுமைப் பருவம் அடைந்து விட்டார். இந்தச் சம்பவம் இரண்டாம் குலோத்துங்க சோழன் இறந்த பிறகு, இராமாநுஜர் மைசூர் நாட்டிலிருந்து சோழநாடு திரும்பிய பின் நிகழ்ந்ததாகவே இருத்தல் வேண்டும்.

வைஷ்ணவ மதத்தைப் பின்பற்றுபவர்கள் அனைவரும் சிவனே பரதேய்வம் என்று தெரிவிக்கும் ஓலையில் கையெழுத்திடவேண்டும் என்று சோழமன்னன் நிர்ப்பந்தித்தான் என்று

வைஷ்ணவ குருபரம்பரைகள் கூறும் இந்த வரலாறு வேறு எந்த இடத்திலும் சொல்லப்பெறவில்லை. அதனால் இந்தச் சம்பவமே உண்மையாக நடந்ததுதானா அல்லது மதவிஷய மாக அதீதமான வைராக்கியம் கொண்ட சிலருடைய கற்பனை யாக இருக்குமா என்று சந்தேகிக்கவும் இடம் ஏற்பட்டுவிடு கிறது. எனினும், சேக்கிழார் எழுதிய திருத்தொண்டர் புராணம் என்னும் பெரியபுராணத்திலே காணும் ஒரு செய்யுள் இந்தச் சம்பவத்தைப் பிரதிபலிப்பதாக உள்ளது. அந்தப் புராணத் தில் வரும் திருஞானசம்பந்த சுவாமிகள் புராணத்தில் வரு கிறது அந்தச் செய்யுள். மதுரையிலே பாண்டிய மன்னன் முன்னிலையில் திருஞானசம்பந்தருக்கும் சமணர்களுக்கும் நடந்த மூன்றாவது பரீட்சையிலும் சம்பந்தப் பெருமான் வெற்றிகொண்ட வரலாற்றைக் கூறும் இடத்தில் ஆசிரியர் சேக்கிழார் பின்வருமாறு கூறுகிறார்.

'எம்பிரான் சிவனே எல்லாப்
பொருளும்'என் றெழுதும் ஏட்டில்
தம்பிரான் அருளால் வேந்தன்
தன்னைமுன் ஓங்கப் பாட
அம்புய மலராள் மார்பன்
அனபாயன் என்னுஞ் சீர்த்திச்
செம்பியன் செங்கோல் என்னத்
தென்னன்கூன் நிமிர்ந்த தன்றே.'

(செய்யுள்-847)

அந்த வரலாறு பின் வருமாறு: சம்பந்தர் பெருமானும் சமணர்களும் தங்கள் தங்கள் சமய உண்மைகளை ஓலையில் எழுதி அந்த ஓலைகளை வைகையில் இடவேண்டும். எந்த ஓலை வெள்ளத்தோடு அடித்துக்கொண்டு போகப் பெறாமல் வெள்ளத்தை எதிர்த்து முன்னேறிச் செல்கிறதோ அந்த ஓலை கூறும் சமயமே உண்மையானது என்றும் அந்த ஓலையை எழுதியவர்களே வாதத்தில் வெற்றி கொண்டவர்கள் என்றும் தீர்மானிக்கப்படும். இவ்விதம் செய்த முடிவை ஏற்றுச் சம்பந் தர் பெருமான் வாழ்க அந்தணர் என்று தொடங்கும் பதிகத்தை எழுதி அந்த ஓலையை ஆற்றில் இட்டார். சமணர்கள் அத்தி நாத்தி (அஸ்தி நாஸ்தி: உண்டு இல்லை) என்று தங்கள் சமய உண்மையை எழுதிய ஏட்டை அதேபோல வைகை ஆற்றில்

இட்டார்கள். சம்பந்தர் இட்ட ஏடு வெள்ளத்தோடு செல்லாமல் வெள்ளத்தை எதிர்த்து முன்னேறிச் சென்றது. சமணர்களுடைய ஏடோ வெள்ளத்தோடு போய்விட்டதாம். இவ்விதம் நடந்த விவாதப் பேட்டியிலே சம்பந்தர் வெற்றிகொண்டாராம்.

இதைக் கூறுமிடத்தில் தான் வருகிறது இந்தச் செய்யுள். 'எம்பிரான் சிவனே எல்லாப்பொருளும் என்று எழுதும் ஏட்டில் சம்பந்தர் பெருமான் வேந்தன் ஓங்க வேண்டும் என்று பாடியதால், பாண்டிய மன்னனுடைய கூன் நிமிர்ந்து சோழ மன்னனுடைய செங்கோல் போல நேராக ஆயிற்று' என்று உரைக்கிறார் ஆசிரியர் சேக்கிழார். பெரிய புராணத்திலே இந்தச் செய்யுளுக்கு முன்னுள்ள பாடல்களிலே சம்பந்தர் தம் பதிகத்திலே எந்த எந்த விஷயங்களைக் குறித்துப் பாடியிருக்கிறார் என்பது தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. வேந்தனும் ஓங்குக என்று அவர் பாடியிருக்கிறார். இது பதிகத்தின் முதற் பாட்டிலேயே காணப்படுகிறது. ஆயினும் 'எம்பிரான் சிவனே எல்லாப் பொருளும்' என்பது அந்தப் பதிகத்தில் எந்த இடத்திலும் காணப் பெறவில்லை. பதிகத்தில் காணப் பெறாத ஒரு தொடரை—சைவ சமயத்தின் உள்ளுறை உண்மையைத் தெளிவாக எடுத்துக் கூறும் அந்தத் தொடரை—சேக்கிழார் தம் புராணத்தில் உபயோகித்திருப்பது கவனிக்கத்தக்கது.

பெரிய புராணத்தின் பாயிரத்திலே,

'மேய விவ்வுரை கொண்டு விரும்புமாஞ்
சேய வன்றிருப் பேரம்பலஞ் செய்ய
தூய பொன்னணி சோழனீ டுழிபா
ராய சீரந பாய னரசவை'

(பாயிரம்-8)

என்று காணப்படுவதிலிருந்து அது பேரம்பலத்துக்குப் பொன்வேய்ந்த சோழ மன்னன் அநபாயன் நாளையிலே இயற்றப் பெற்றதென்பது தெளிவாகும். அதன் ஆசிரியர் சேக்கிழாருடைய வரலாற்றை எழுதிய உமாபதி சிவாசாரியார்,

நாடெங்குஞ் சோழன்முனந் தெரிந்தே யேற்று
நற்குடிநாற் பத்தெண் ணாயிரத்து வந்த
கூடல்கிழான் புரிசைகிழான் குலவுசீர் வெண்
குளப்பாக்கி ழான்வரிசைக் குளத்து ழான்முன்

தேடுபுக ழாரிவருஞ் சிறந்து வாழச்
சேக்கிழார் குடியிலிந்தத் தேச முய்யப்
பாடல்புரி யருண்மொழித்தே வரும்பி னந்தம்
பாலறு வாயரும்வந் துதித்து வாழ்ந்தார்

(சேக்கிழார் நாயனர் புராணம், செய்யுள்-12)

அத்தகைய புகழ்வேளாண் மரபிற் சேக்கி
ழார்குடியில் வந்தவருண் மொழித்தே வர்க்குத்
தத்துபரி வளவனுந்தன் செங்கோ லோச்சுந்
தலைமையளித் தவர்தமக்குத் தனது பேரும்
உத்தமச்சோ ழப்பல்ல வன்ற னென்று
முயர்பட்டங் கொடுத்திடவாங் கவர்நீர் நாட்டு
நித்தனுறை திருநாகே சுரத் திலன்பு
நிலைதலினுன் மறவாத நிலைமை மிக்கார்

(ஷை செய்யுள்-18)

என்று கூறிச்செல்கிறுர். இதிலிருந்து பெரிய புராண ஆசிரியர் குன்றத்தூரில் சேக்கிழார் மரபில் பிறந்தவர் என்பதும், அருண் மொழித்தேவர் என்ற பெயரைப் பெற்றவர் என்பதும், பாலறு வாயர் என்னும் தம்பியை உடையவர் என்பதும், உத்தம சோழப் பல்லவன் என்ற பட்டத்தோடு சோழ மன்னனுக்கு மந்திரியாக விளங்கியவர் என்பதும் தெரியவரும். இரண்டாம் குலோத்துங்கனுடைய ஆட்சியின் இரண்டாம் ஆண்டு கொண்டதாகத் தஞ்சாவூர் ஜில்லா கோட்டூரிலிருந்து கிடைக்கும் கல் வெட்டு ஒன்று குன்றத்தூர் சேக்கிழார் பாலறுவாயன் களப் பாளராயன் என்பான் ஒருவன் விளக்கெரிக்கப் பொன் கொடுத்த செய்தியைத் தெரிவிக்கிறது. (1912-ஆம் ஆண்டின் 445 செ. சாசனம்). பெரிய புராண ஆசிரியரின் தம்பியே போலும் இவ் வதிகாரி.

இவற்ருல் பெரிய புராணம் இயற்றிய சேக்கிழார் இரண்டாம் குலோத்துங்க சோழன் ஆட்சியில் அரசாங்கத்தே உயர் பதவி வகித்தார் என்பது தெளிவாகும். சைவ சமயத்துக்காக மன்னன் புரிந்த திருப்பணிகள் எல்லாவற்றையும் அவர் அறிந் திருப்பார். இந்நிலையை அறிந்து கவனித்துப் பார்த்தால் அவர் தம் புராணத்திலே இந்தப் பகுதியை எழுதும்போது சோழ மன்னன் 'சிவன் அன்றி வேறு பொருள் இல்லை' (சிவாத்

பரதரம் நாஸ்தி) என்று பிரமதத்தினர் அனைவரும்—முக்கிய மாக வைஷ்ணவ மதத்தைப் பின்பற்றுகிறவர்கள்—ஓலையில் எழுதிக் கையெழுத்திட வேண்டும் என்று வற்புறுத்திப் பெற்று வந்ததை மனத்தில் கொண்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால் சம்பந்தர் பதிகத்தில் காணாத இவ்வாக்கியத்தைப் புராணத்தே இந்தச் சந்தர்ப்பத்தில் உபயோகித்ததற்குப் பிரமேயமே இல்லை என்னலாம்.

இராமாநுஜருடைய வாழ்க்கையின் கடைசி நாட்கள் அதிகமான தொந்தரவுகள் ஏதும் இல்லாமல் அமைதியாகக் கழிந்தன வென்று தெரிகிறது. அந்நாளில் அரசு புரிந்த சோழ மன்னன் அவரை ஆதரித்து வந்தான் என்றும் வைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கூறுகின்றன. அவரும் முதுமை அடைந்து விட்டதால் தமக்குப் பிறகு தாம் மேற் கொண்ட சமயத் திருப்பணியை நடத்திச் செல்லக் கூரத்தாழ் வான் குமாரராகிய பராசர பட்டரை ஆசாரியராக நியமனம் செய்தார். பின்பழகிய பெருமாள் ஜீயர் இயற்றியதும் ஆறாயிரப் படி என்று பிரசித்தமாக வழங்கப் பெறுவதுமான குருபரம் பரையிலிருந்து பட்டருடைய நாளில் சோழ சிங்காதனத்தில் அமர்ந்திருந்தவன் திரிபுவனவீரதேவராயன் என்ற பெயர் கொண்டவன் என்று தெரிகிறது. திரிபுவனவீரன் என்பது மூன்றாம் குலோத்துங்கனுடைய விருதுகளுள் ஒன்றாகும். அவ னுடைய சாசனங்கள் பல அந்தப் பெயரையே குறிக்கின்றன. அவன் கி.பி. 1178-ஆம் ஆண்டு முதல் கி.பி. 1217-ஆம் ஆண்டு வரையில் நாற்பது வருஷங்கள் அரசு செலுத்தியிருக்கிறான்.

பட்டர் அதிகநாள் உயிரோடு இருக்கவில்லை யென்றும் சீக்கிரமாகவே திருநாடு அலங்கரிக்கச் சென்று விட்டார் என்றும் ஸ்ரீவைஷ்ணவர்கள் சொல்வர். இதை யொட்டியே அவர் தம்முடைய இருபத்தெட்டாம் வயதில் இறந்தார் என்று அண்ணா அப்பங்கார் தம்முடைய பழநடை விளக்கத்திலே கூறி யிருக்கிறார். (கோபிநாத ராயர் நூலில் 40-ஆம் பக்கம் பார்க்க). இருபத்தெட்டு என்பதை அவருடைய வயசாகக் கொள்ளாமல் ஆசாரிய பதவி வகித்த வருஷமாகக் கொள்வர் சிலர். எவ்வித மாயினும், இதைக் கொண்டு பட்டர் இராமாநுஜருக்குப் பிறகு நீண்ட காலம் ஆசாரியராக விளங்காமல் சீக்கிரமாகவே இறந்துவிட்டார் என்று கொள்ளலாம்.

பட்டருக்குப் பின் நஞ்சீயர் வந்தார். அவருக்குப் பிறகு நம்பூர் வரதராஜர் பட்டத்துக்கு வந்தார். அவர் நம்பிள்ளை எனப்படுவார்; பின்னல் லோகாசாரியர் என்றும் வழங்கப் பெற்றவர். சகாப்தம் 1175, அதாவது கி.பி. 1253-ஆம் ஆண்டு ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் ஸ்ரீரங்கம் கோயில் கர்ப்ப கிருகத்துக்குப் பொன் வேய்ந்த நாளில் நம்பிள்ளை ஜீவிய தசையில் இருந்தார் என்று கோயிலொழுகு தெரிவிக்கிறது. இவற்றைக் கவனித்தால் இராமாநுஜர் இரண்டாம் குலோத் துங்கன் காலத்தில் இருந்திருக்கவேண்டும் என்பது தெரிய வரும்.

சற்றேறக்குறைய இதே காலமுறையைத்தான் டாக்டர் எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்காரும் ஏற்றிருக்கிறார். சிதம்பரம் கோவிந்தராஜப் பெருமாளைப் பிடுங்கிக் கடலில் எறிந்த சோழ மன்னன் இரண்டாம் குலோத்துங்கனே யாவன் என்று அவர் கொண்டிருக்கிறார். அன்றி, இராமாநுஜருடைய கால வரையறையைப்பற்றி அவர் பின்வருமாறு எழுதுகிறார்: "கி. பி. 1119-ஆம் ஆண்டில் அவர் (அதாவது இராமாநுஜர்) நூற்றிரண்டு வயதானவராகில், அதற்கப்பால் அவர் பதி னெட்டு ஆண்டுகள் உயிர்வாழ்ந்திருத்தல் வேண்டும். ஆகவே அவர் கி. பி. 1139-ஆம் ஆண்டுக் கணித்தாகக் காலஞ்சென்றி ருக்கவேண்டும். ஆயினும் இரண்டாம் குலோத்துங்க சோழன் சிங்காதனம் ஏறிய காலம் நமக்கு நிச்சயமாகத் தெரியும். அதைக்கொண்டு பார்த்தால் இராமாநுஜர் கி. பி. 1139-ஆம் ஆண்டுக்கு அணித்தாகக் காலம் சென்றார் எனக் கொள்வது பொருந்தாது; அதற்குப் பிறகே நிகழ்ந்திருத்தல் வேண்டும். ஆயினும் நாம் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளபடி இவ்வாசாரி யருடைய வாழ்க்கைச் சம்பவங்கள் பதினைந்து பதினாறு வரு ஷங்கள் முன்னதாகக் கணக்கிடப்பட்டுள்ளனவென்று எடுத் துக்கொள்வோமானல், அவர் பரகதி அடைந்த ஆண்டு கி.பி. 1155-ஆம் வருஷமாகவே ஆகும். இதுவே சரியான காலமாக இருத்தல் கூடும்." (திருப்பதி வரலாறு, முதல் பாகம், 287-பக்கம்).

இந் நிலையிலே மற்றொரு விஷயத்தையும் நாம் கவனிக்க வேண்டும். இவ் விஷயத்தைப்பற்றி இதுகாறும் ஆராய்ந்த ஆசிரியர்கள் எல்லோரும் திவ்யசூரி சரிதம், யதிராஜ வைபவம்

ஆகிய இரண்டுமே இராமாநுஜருடைய வாழ்க்கை வரலாற்றைத் தெரிவிக்கும் நூல்களுள் மிகவும் பழமையானவை என்று எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அவற்றுள்ளும் திவ்ய சூரி சரிதம் என்பது இராமாநுஜர் உயிருடன் இருந்த காலத்திலேயே எழுதப்பட்டதென்றும் முடிவு செய்திருக்கிறார்கள். ஆயினும் சமீப காலத்திய ஆராய்ச்சிகளிலிருந்து அவை பிற்பட்டவை என்றே கொள்ளவேண்டியிருக்கிறது. (திவ்விய சூரி சரிதத்தின் காலத்தைப்பற்றி ஜர்னல் ஆப் இந்தியன் ஹிஸ்டரி, பதின்மூன்றாம் வால்யூம், இரண்டாம் பாகம் பார்க்க. மற்றதைப்பற்றி இந்தியன் ஆண்டிகுவரி, நாற்பதாம் வால்யூம், 152-ஆம் பக்கம் பார்க்க.)

இதுகாறும் நாம் கூறியவற்றிலிருந்து இராமாநுஜருடைய வாழ்க்கை வரலாறு பற்றிக் கிடைக்கும் ஆதாரங்களுள் இராமாநுஜார்ய திவ்ய சரிதையில் மேற்கோளாகக் காட்டப்பெற்ற தமிழ்ச் செய்யுள்களே மிகவும் பழமையானவை என்பதும், அவருடைய வாழ்க்கைச் சம்பவங்களைச் சரியான ஆண்டுக் கணக்கோடு எடுத்துக் கூறுபவை வென்பதும், அவருடைய வாழ்க்கைச் சம்பவங்களில் முக்கியமானவை சில நிகழ்ந்த ஆண்டுகள் பின்வருமாறு அமையும் என்பதும் தெளிவாகும்.

(1) இராமாநுஜர் காலத்திலே ஆட்சி புரிந்து வைஷ்ணவர்களுக்கு விரோதமான மதத் துவேஷத்தால் அவர்களைத் துன்புறுத்திய சோழ மன்னன் இரண்டாம் குலோத்துங்கன் ஆவான்.

(2) சோழ நாட்டைத் துறந்து இராமாநுஜர் ஹொய்சள தேசம் சென்றது கி. பி. 1138-ஆம் ஆண்டு ஆகும்.

(3) பன்னிரண்டு வருஷங்கள் கழித்து, தம்மைத் துன்புறுத்திய சோழ மன்னன் இறந்துவிட்டான் என்று கேட்ட பிறகு அவர் சோழ நாடு திரும்பியது கி. பி. 1150-ஆம் ஆண்டு ஆகும்.

(4) மைசூரிலிருந்து திரும்பிய பின் அவர் ஸ்ரீபாஷ்யத்தைப் பூர்த்தி செய்தது சகாப்தம் 1077, அதாவது கி. பி. 1155-56-ஆம் ஆண்டு ஆகும்.

---

## பிற் குறிப்பு:

I. திரிபுரி நகரத்தைத் தலைநகராகக்கொண்டு ஆண்டுவந்த சேதி மன்னனான காங்கேயன் என்பான் கி. பி. 1041-ஆம் ஆண்டு பிரயாகையில் தன்னுடைய தேவிமார் நூறுபேருடன் முக்தி பெற்றான் என்று கூறப்படுகிறது. அவன் அங்கே புண்ணிய தீர்த்தத்தில் மூழ்கி உயிர்துறந்திருத்தல் வேண்டும் என்பதையும், அவ்விதம் அவன் செய்ததற்குப் பரமார வேந்தனான போஜ ராஜனும் சோழமன்னனும் சேர்ந்து அவனைத் தாக்கிப் பெருவெற்றி கொண்டதே காரணமாக இருத்தல் வேண்டும் என்பதையும் நாம் மேலே சஎ, சஅ-ஆம் பக்கங்களில் குறிப்பிட்டிருக்கிறோம். திருநெல்வேலி ஜில்லா அம்பாசமுத்திரம் தாலூகாவில் உள்ள திருவாலீச்வரத்திலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டு (1905-ஆம் ஆண்டு 120-நெ. சாசனம்) இதனை வலியுறுத்துகிறது. மூன்றுகை மஹாசேனை என்னும் போர்ப்படையின் வரலாற்றைத் தெரிவிக்கும் அந்தக் கல்வெட்டிலே அந்தப் படையினர் காங்கேயனைக் கொன்றனர் என்று புகழப்படுகிறார்கள். "அந்த மஹா சேனையார் விஷ்ணுவையும், சிவபெருமானையும் சதா வழிபட்டு வருகிறவர்கள் என்றும், கன்னரனைத் தோற்கடித்து அவனைத் துரத்திச் சென்றவர்கள் என்றும், காங்கேயனைக் கொன்றவர்கள் என்றும், கல்மடத்தைக் கைப்பற்றிக் கடற்கரையில் உள்ள விழிஞத்தை அழித்தவர்கள் என்றும், கடல் கடந்து சென்று மறுகரையில் உள்ள மாதோட்டத்தைத் தரைமட்டமாக்கினவர்கள் என்றும், மலைநாடு கைக்கொண்டவர்கள் என்றும், சாலைக் கலமறுத்தவர்கள் என்றும், வல்லானை (சாளுக்கியனை) விரட்டி வனவாசியைக் கைப்பற்றியவர்கள் என்றும், இந்த அரிய செயல்களுக்காகக் காளஹஸ்தியில் உள்ள தமிழ்க் கவிஞர்களால் புகழ்மாலை சூடப் பெற்றவர்கள் என்றும் அந்தக் கல்வெட்டுக் கூறுகிறது." (க. அ. நீலகண்ட சாஸ்திரிகள் எழுதிய சோழர் சரித்திரம், இரண்டாம் பாகம், 226-ஆம் பக்கம்). அந்தச் சாசனத்தின் காலம் குறிக்கப் பெறவில்லை. எனினும் அது முதலாம் இராஜேந்திர சோழனுடைய மக்களின் ஆட்சிக் காலத்தைச் சார்ந்தது என்று நிச்சயமாகக் கூறலாம். இதிலிருந்து சோழர்கள் வடக்கே போர் நடத்திச் சேதி மன்னனான காங்கேயனை வெற்றி கொண்டு அவனை உயிர் துறக்கச் செய்தார்கள் என்பது உறுதியாகிறது.

II. இடங்கை வகுப்பாரைப்பற்றிக் கல்வெட்டுக்களிலே நீண்டகாலமாகக் குறிக்கப்பட்டிருப்பினும் அவர்கள் போர்ப் படையோடு தொடர்பு கொண்டதாகத் தெரிவிக்கும் கல்வெட்டு ஒன்றும் இதுவரையில் கிடைக்கவில்லையென்று மேலே கூ௫-ஆம் பக்கத்தில் குறிப்பிட்டிருந்தோம். எனினும் சித்தூர் ஜில்லாவில் வேலஞ்சேரியிலிருந்து கிடைத்துள்ள ஒரு கல்வெட்டு (1942-43-ஆம் ஆண்டு 115-நெ.) இடங்கை மகாசேனையைக் குறிப்பிடுகிறது. அவ்வூரிலிருந்தும் அதன் படாகைகளிலிருந்தும் வசூலாகும் இடங்கை வரியை வேளிறுஞ்சேரியில் உள்ள தக்ஷிணாமூர்த்தி, அழகியபெருமாள் ஆலயங்களின் ஜீர்ணோத்தாரணத்துக்குச் செலவிடுவதாக இடங்கை மகா சேனையார் முடிவு செய்ததை எடுத்துக்கூறுகிறது அந்தக் கல்வெட்டு.

# தமிழ்நாட்டுச் சாசனங்கள்

## 1. சாசனங்கள்

நம் நாடு மிகப் பழங்காலத்திலிருந்தே புண்ணியபூமி கர்மபூமி என்று குறிக்கப்பட்டுவருகிறது. உலகத்தில் உள்ள மற்ற எல்லா வகுப்பாரையும்விட நம் மக்கள் மதவுணர்ச்சியால் மிகவும் கட்டுப்பட்டவர்கள் என்பதை யாவரும் அறிவர். அதனால் இத்தகைய மதப்பற்று உள்ள நாட்டில் கோயில்கள் அதிகமாகக் காணப்படுவது அதிசயமன்று. அதிலும் வடநாட்டைக் காட்டிலும் தென் இந்தியாவில் கோயில்கள் அதிகம். வட இந்தியாவில் கோயில்கள் கட்டாமல் இல்லை. முன் காலத்தில் அங்கே பல கோயில்கள் இருந்தனவென்று தெரிகிறது. ஆயினும் பிற்காலத்தில் பிற நாட்டவர்களும், பிற மதத்தினரும் நம் நாட்டின் மீது அடிக்கடி படையெடுத்து வந்து அக் கோயில்களை அழித்துவிட்டனர். தென்னாட்டுக்கு அந்த விதமான துரதிர்ஷ்டம் நேரிடாமையால் இங்கே கட்டிய கோயில்கள் தப்பிப் பிழைத்தன.

'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்று ஒரு முதுமொழி உண்டு. தமிழ் நாட்டிலே உள்ள ஒவ்வொரு கிராமத்திலும் குறைந்தபக்ஷம் ஒரு கோயிலாவது பார்க்கலாம். ஒரு விஷ்ணு ஆலயமோ, ஒரு சிவன் கோயிலோ, ஒன்றும் இல்லாவிட்டால் ஒரு பிள்ளையார் கோயிலோ பிடாரி கோயிலோ ஏதாவது ஒன்று இருக்கும். 'கோயில்கள் நிறைந்த பிரதேசம்' என்று தென்னாட்டைக் கூறுவது மிகவும் பொருத்தமாகும்.

தமிழ் நாட்டில் உள்ள பெரிய கோயில்களில் பல பண்டைக் காலத்தே நம் நாட்டை ஆண்டுவந்த மன்னர்கள் கட்டியவையாகும். அவர்கள் அந்தக் கோயில்களுக்கும், கற்றறிந்த பண்டிதர்களுக்கும் பல தானங்களைச் செய்திருக்கிறார்கள். அவ்விதம் கொடுத்த தானத்தைப் பெற்றவர்கள் அவற்றை நீண்டகாலம் அனுபவிக்கவும் தங்களுக்குப் பின்னால்வரும் அரசர்கள் அந்தத் தானங்களைத் தவிர்க்காமல் இருக்கவும், அந்த அரசர்கள் அவற்றைப் பிரபலமான இடங்களில் கல்லிலே பொறித்து வைத்துச் சென்றார்கள்.

நம் நாட்டில் உள்ள விஷ்ணு ஆலயங்களும், சிவன் கோயில்களும் பெரும்பாலும் கருங்கற்களால் கட்டப்பட்டுள்ளன. அவ்விதமான கோயில்களின் சுவர்களில் நான்கு புறங்களிலும் அந்தக் காலத்து எழுத்துகளில் ஏதோ பொறிக்கப்பட்டிருப்பதை நாம் காண்கிறோம். அவற்றில் பெரும்பாலானவை அந்த அரசர்கள் வழங்கிய தானங்களைத் தெரிவிப்பனவேயாகும். அவை பொதுவாகச் சாசனம் என்ற பெயரால் குறிக்கப்படும்.

ஆனால் முன்னாளிலே கோயில்கள் பெரும்பாலும் செங்கல்லும் சுண்ணாம்பும் கொண்டே கட்டப்பட்டு வந்தன. அதனால் அந்தச் சாசனங்களை அந்நாளிலே தனிக் கருங்கற்களில் பொறித்து அந்தக் கற்களைக் கோயிற் சுவர்களில் பதித்தோ பிராகாரங்களில் நட்டோ வைத்து வந்தார்கள். பின்னால் அக்கோயிற்களைக் கற்றளிகளாக மாற்றியபோது அந்தச் சாசனங்களைக் கோயிற் சுவர்களில் பொறித்துவைத்தார்கள். பழைய கோயிலைப் புதுப்பிக்கும்போதும் அதன் சுவரில் காணப்படும் சாசனங்களுக்குப் படி எடுத்து வைத்திருந்து பின்னால் ஜீர்ணோத்தாரண வேலை முடிந்ததும் அவற்றைப் பழையபடியே சுவரில் பொறித்து விடுவார்கள்.

இத்தகைய சாஸனங்கள் கோயில் சுவர்களில் மட்டுமன்றித் தூண்களிலும், விக்கிரங்களின்மீதும், அவற்றின் பீடங்களிலும், ஊர்ப்புறத்தே நிறுவப்பட்ட விஜயஸ்தபங்களிலும், மற்றும் ஓங்கியுயர்ந்த பாறைகளிலும் பொறிக்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம். கருங்கல்லில் வெட்டப்பட்டுள்ள சாசனங்கள் கல்வெட்டு, சிலாசாசனம், சிலாலேகை, கல்லெழுத்து, சாசனம் என்பன போன்ற பல பெயர்களாலும் குறிக்கப்பட்டுள்ளன. சில சமயங்களில் பிரசஸ்தி என்றும் குறிக்கப் பெறும்.

கல்லில் பொறிக்கப்பட்டவற்றுள் தானம் அளித்த செய்தியைத் தெரிவிக்காமல் வழிபாட்டு முறையிலே உள்ளனவும் உண்டு. பெரும்பாலும் அவை புண்ணியஸ்தலங்கள் போன்ற இடங்களுக்குத் தாங்கள் வந்ததன் அறிகுறியாகவும் வழிபாடாகவும் யாத்திரிகர்கள் தங்கள் பெயரை வெட்டிச் சென்றதாகவே இருக்கும்; மற்றும் சில சமயங்களில் சிறு பலகைகளாகவும் உருவங்களாகவும் இருத்தல் உண்டு. விக்கிரகங்கள் சிற்பங்கள் ஆகியவற்றின் விளக்கமான கல்வெட்டுக்களும் காணப்படுகின்றன.

சாசனங்கள் பாறைகளில் வெட்டப்பட்டது போலவே செப்பேடுகளிலும் பொறிக்கப்பட்டுள்ளன. அவை சில பழைய குடும்பத்தாரிடமிருந்தும் பூமிக்குள்ளிருந்தும் கட்டிடங்களின் அஸ்திவாரங்களிலிருந்தும் கிடைக்கின்றன. அவை தாம்ரசாசனம், தாம்ரபட்டயம் செப்புப்பட்டயம், செப்பேடு என்ற பெயர்களாலும் அடைமொழி ஏதும் இல்லாமல் வெறுமே பட்டயம் என்றும் குறிக்கப்படுகின்றன.

சாசனம் பெரியதாக இருந்து ஒன்றுக்கு மேற்பட்ட தகடுகளை உடையதாக இருந்தால், அவற்றுள் துளையிட்டு ஒரு வளையத்தால் கோத்து அவற்றைப் பிணைத்திருப்பார்கள். அந்த வளையத்தின் இரு முனைகளையும் சேர்க்குமிடத்தில் அரசாங்க முத்திரையும் இருக்கும். அந்த முத்திரையில் தானத்தை வழங்கிய அரசன் பெயருடன், அவன்

விருது, கொடி முதலிய வெற்றிச்சின்னங்களும் காணப்படும். செம்பைத் தவிர, தங்கம், வெள்ளி, பித்தளை, ஈயம் முதலிய உலோகங்களால் ஆன தகடுகளிலும் சாசனங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. அவ்வாறே, கருங்கற்கள் மட்டுமன்றி மண் பாண்டம், செங்கல், சுட்டமண், பளிங்குக்கல் முதலிய பொருள்களின் மீதும் சாசனங்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

பழைய காலத்தனவாகக் கிடைக்கும் தங்கம், வெள்ளி, செம்பு ஆகிய உலோகங்களில் செய்யப்பட்ட நாணயங்களிலும் எழுத்துக்கள் காணப்படுகின்றன. அவை அந்த நாணயங்களை அடித்து வழங்கிய அரசன் போன்றோர் பெயரைத் தெரிவிக்கின்றன. அவை ஒரு தனிவகை; நாணயவியல் என்பதில் அடங்கும். அந்த எழுத்துகளைச் சாசனம் என்று நாம் குறிப்பிடுவதில்லை; அவை சாசனங்களும் ஆகா. ஆகவே அவை இவ்வாராய்ச்சியில் சேரவில்லை.

சாசனம் என்னும் வடமொழிச் சொல்லுக்கு உத்தரவு, கட்டளை என்று பொருள். இப்போது கல்லிலும், செம்பிலும் பொறிக்கப்பட்டுக் காணப்படும் சாசனங்களுள் பெரும்பாலானவை பண்டைக் காலத்திலே நம் நாட்டை ஆண்ட மன்னர்கள் கோயில்களுக்கும், வித்வான்களுக்கும் அளித்த தானங்களைப் பற்றிய உத்தரவுகளே ஆகும். முதலில் அரசன் உத்தரவையே குறித்துவந்த 'சாசனம்' என்னும் சொல் நாளடைவில் தானம் பெற்றவர்கள் நிலத்தை அனுபவிப்பதற்கு ஆதாரமாகக் கொண்ட பத்திரங்களைக் குறித்துக் கடைசியாக இப்பொழுது பொதுவாகக் கிரயபத்திரத்தையே குறிக்கிறது.

பழைய சாசனங்கள் அநேகமாக உளிகொண்டு செதுக்கியே வெட்டப்பட்டிருக்கும். மையினால் எழுதப்பட்டனவும் சில உண்டு.

நமக்குக் கிடைக்கும் சாசனங்கள் எல்லாம் முற்காலத்து அரசர்கள் வழங்கிய தானங்களை மட்டுமே தெரிவிப்பன அல்ல. அரசர்களைப் போலவே அரசாங்க உத்தியோகஸ்தர்களும் மற்றும் பலரும் வழங்கிய தானங்களையும், உள்நாட்டு மக்கள் ஒருவர்க்கொருவர் செய்துகொண்ட பரிவர்த்தனைகளையும் அவற்றுள் சில அறிவிக்கின்றன. தானங்களை அன்றி, மக்களின் நன்மையைக் கருதிக் குளம் வெட்டியது போன்ற செய்திகளைத் தெரிவிக்கும் சாசனங்கள் உண்டு.

இவ்விதமாகப் புண்ணியத்தை எதிர்பார்த்துச் செய்தவற்றோடு உண்மைச் சரித்திர நிகழ்ச்சிகளும், சரித்திர சம்பந்தமே இல்லாத இலக்கியப் பகுதிகளும் கல்லிலும் செம்பிலும் பொறிக்கப்பட்டுக் காணப்படுகின்றன.

தானம் வழங்கப்பட்டதை அறிவிக்கும் சாசனங்கள் பெரும்பாலும் ஹிந்து தர்மசாஸ்திரங்களிலும், தான காண்டத்திலும் கொடுத்துள்ள விதிகளைப் பின்பற்றியே எழுதப்பட்டுள்ளன. எனினும் கல்லில் வெட்டப்பட்டுள்ளவற்றுக்கும் செம்பில் பொறிக்கப்பட்டுள்ளவற்றுக்கும் மிகுந்த வேறுபாடுகள் உண்டு.

கல்லில் உள்ள சாசனங்கள் பொதுவாக அந்த அந்த நாட்டு மொழியிலேயே எழுதப்பட்டிருக்கும். தமிழ் நாட்டுச் சாசனங்களில் பெரும்பாலானவை தமிழ் மொழியில் உள்ளன. அதுவும் வசன நடையில் இருக்கும். சிற்சில சமயங்களில் அவை வடமொழியில் இருப்பதும் உண்டு. தானம் அளித்தவர்கள் பிறநாட்டவர்களாக இருக்கும் போது ஏதோ சில சமயங்களில் அச் சாசனங்கள் அவர்களுடைய நாட்டு மொழியிலே காணப்படுவதும் உண்டு. செப்பேடுகளோ வடமொழிச் சுலோகங்கள் நிரம்பியவை. பல சமயங்களில் வடமொழிப் பகுதியுடன் தமிழ்ப் பகுதியும் காணப்படும்.

கல்வெட்டுக்கள் மங்கலச் சொல்லுடன் ஆரம்பித்து, அந் நாளில் ஆட்சிபுரிந்த மன்னனது புகழைத் தெரிவிக்கும் மெய்க்கீர்த்தியைக்கூறி அந்த அரசனுடைய ஆட்சியின் இன்ன ஆண்டில் இன்னாருக்கு இன்னது அளிக்கப் பட்டது என்பதைச் சொல்லி அவ்விதம் செய்வதற்குப் பொறுப்பு வாய்ந்தவர்களின் கையெழுத்துக்களோடு ரக்ஷையையும் கொண்டு முடியும்.

செப்பேடுகளிலோ முதலில் மங்கல வாசகமும், வாழ்த்துச் செய்யுளும் காணப்படும். பிறகு தானம் வழங்கிய அரசனுடைய பூர்வோத்தரங்களும் அவன் முன்னோர்களுடைய பிரதாபங்களும் விரிவாகக் கூறப் பட்டிருக்கும். அப்பால் ஒருவனுடைய விண்ணப்பத்தின் மீது மற்றோர் அதிகாரியை ஆணத்தியாகக் கொண்டு அரசன் வழங்கிய தானமும் அதன் பரிகாரங்களும் விவரிக்கப்பட்டிருக்கும். தானம் பெறுபவர்களுடைய விவரங்களும் கொடுக்கப்பட்டிருக்கும். கடைசியில் அதிகாரிகள் கையெழுத்தும் அந்தத் தானத்தைக் காப்பவர்கள் அடையும் புண்ணியமும், தவிர்ப்பவர்கள் அடையும் பாபமும் காணப்படும். பல சமயங்களில் தான வாசகத்தை எழுதியவர் பெயரும், செப்பேட்டில் வெட்டிய சிற்பியின் பெயரும்கூடச் சேர்க்கப்பட்டிருப்பது உண்டு. சில சமயங்களில் அரசனுடைய கையெழுத்தும் காணப்படும்.

பழைய காலத்துச் சாசனங்களுக்கும், சமீபகாலத்தில் எழுதப்பட்டவற்றுக்கும் வேறுபாடுகள் உண்டு. பழமை வாய்ந்த சாசனங்கள் சுருக்கமாக இருக்கும். நாளாக ஆக அவற்றை எழுதுவதில் சம்பிரதாயங்கள் ஏற்பட்டு அவை நீண்டுவிட்டன. இவ்வாறே சாசனங்களின் அமைப்பும் வாசகமும் பிரதேசத்துக்கேற்றபடி மாறுபடும்.

கல்லிலும் செம்பிலும் உள்ள சாசனங்கள் எவ்விதம் ஏற்பட்டன வென்பதை அறிந்தால் அவற்றுள் காணப்படும் வேறுபாடுகள் விளங்கும்.

பண்டைக்காலத்து அரசர்கள் கிரஹணம் முதலிய புண்ணிய காலங்களிலோ, தாங்கள் பிறந்த நக்ஷத்திரத்தையுடைய தினங்களிலோ, வேறு விசேஷ சந்தர்ப்பங்களிலோ தானம் செய்வது வழக்கம். யாகங்களைக் காட்டிலும் தானங்களே சிறந்தவை என்றும் புண்ணியம் பயப்பவை என்றும் தர்ம சாஸ்திரங்களின் தான காண்டங்கள் கூறுவதைப் பின்பற்றியே அவர்கள் நடந்துவந்ததாகத் தெரிகிறது. அவற்றிலே விவரிக்கப்பட்டுள்ள துலாபாரம், ஹிரண்ய கர்ப்பம் முதலியவைகளையும் அவர்கள் செய்து புகழ்பெற்ற செய்திகள் கல்வெட்டுக்களில் அங்கங்கே குறிக்கப்பட்டுள்ளன.

எனினும், தானகாண்ட விதிகளின்படி யல்லாமல் முன்னாளில் அரசர்கள் அளித்த தான தர்மங்களைப்பற்றித் தெரிவிக்கும் தமிழ்ச் சாசனங்கள் ஏராளமாக உள்ளன. தானம் கொடுப்பதை அங்கீகரித்து உத்தரவு அளித்த காலங்களில் அரசன் அந்தப்புரத்தில் இருந்ததாகவோ இசையைக்கேட்டிருந்ததாகவோ வேறு ஏதோ ஒருகாரியம் செய்து கொண்டிருந்ததாகவோ காணப்படுவதால், அரசாங்க உத்தியோகஸ்தர்கள் அரசனிடத்தில் சமயம் பார்த்து விண்ணப்பம் செய்து அவனிடமிருந்து வாய்மொழியாக உத்தரவைப் பெறுவதே வழக்கம் என்று தெரிகிறது. பட்டத்தாள் மங்கலம் எனப்படும் கொற்றங்குடிச் செப்பேடுகளில், "கோவிசய நந்திவிக்ரமபருமருக்கு யாண்டு அறுபத்தொன்றாவது மங்கல நாடாள்வான் விண்ணப்பத்தால் ஆலப்பாக்க விசைய நல்லூழன் ஆணத்தியாக"த் தானம் கொடுக்கப்பட்ட செய்தி காணப்படுவதினின்றும் இது நன்கு விளங்கும்.

அரசனது வாய்மொழி உத்தரவைக் கேட்டிருந்த 'கேள்வி' அல்லது 'திருமுகம்' என்னும் அதிகாரி அதனை எழுதி அரசாங்கத்தில் அதற்கு உரிய இலாகாவுக்கு அனுப்புவான். தானம்பெற்றவர்க்கு அதனை வரவு வைத்து அரசாங்கத்தின் பல கணக்குகளிலும் அந்த உத்தரவு பதிவு செய்யப்பட்டு ஸ்தல அதிகாரிகளுக்கு ஓலை அனுப்பப்பெறும். அதற்குப் பிறகுதான் நிலத்தைப் பெற்றவர்க்குப் பல அதிகாரிகள் கையெழுத்திட்ட பத்திரம் அளிக்கப்படுகிறது. அக்காலத்தில் இவ்வித உத்தரவுகள் ஓலையிலேயே கொடுக்கப்பட்டிருந்தன. அந்தத் தானங்கள் சூரிய சந்திரர்கள் உள்ளவரை நிலைத்திருக்கவும், எல்லோருக்கும் தெரியும் படியாகவும் முக்கியமான இடத்தில் கல்லில் எழுதப்படும். நிலத்தைப் பெற்றவர்களுக்கு வேண்டிய உரிமைப் பத்திரங்களாக அவற்

றைச் செம்பிலும் வெட்டிக்கொடுக்க நேரிடும். இதனாலேதான் சில சமயங்களில் செப்பேடு, 'திரிபலீ தாம்ர சாசனம்' (செப்புப்பட்டய மான மூன்றும் பிரதி) என்று வழங்கப்படுகிறதுபோலும்.

சாசனங்களே நிலத்தைப் பெற்றிருந்தவர்களுடைய உரிமைப் பத்திரங்களாக விளங்கினவாதலின் அவ்வித உரிமை இல்லாதவர்கள் தங்கள் கைப்பற்றை நிலைநிறுத்தவேண்டிப் போலிச் சாசனங்களைச் சிருஷ்டிக்கவும் கூடும். அப்படிப்பட்ட சாசனங்களும் சில காணப்படு கின்றன. ஆதலின் கிடைக்கும் எல்லாச் சாசனங்களையும் உண்மை யெனக் கொள்ள முடியாது. அவற்றை நன்றாகக் கவனித்தால் போலி கள் எளிதில் விளங்கிவிடும். கல்லில் எழுதப்பட்டவற்றுள் போலிச் சாசனங்கள் பெரும்பாலும் இரா. போலிச் சாசனங்களும் சரித்திர ஆராய்ச்சிக்கு உபயோகம் உள்ளனவே.

இவ்விதம் நமக்குக் கிடைக்கும் சாசனங்கள் நம் நாட்டுப் பழைய சரித்திரத்தைத் தெரிவிப்பதற்காக ஏற்பட்டனவல்ல என்பது தெளி வாகும். ஆயினும் பழைய வரலாற்றை ஆராய்ந்து எழுதுவதற்கு அவையே முக்கிய ஆதாரங்களாக உள்ளன.

தான சாசனங்களிலே அந்த அந்தச் சாசனம் அளிக்கப்பட்ட காலம் குறிப்பிடப்படுகிறது. பொதுவாக அவை அந்நாளில் அரசு செலுத்திய மன்னனுடைய ஆட்சிக் காலத்தையும் சில சமயங்களில் சகாப்தம், கொல்லம் ஆண்டு போன்ற வருஷங்களையும் தெரிவிக்கும். ஓரொரு சாசனத்தில் ஆண்டுடன் மாதம், தேதி, திதி, கிழமை, நட்சத் திரம், கிரகணம் போன்ற பஞ்சாங்கக் குறிப்புகளும் காணப்படும். இவற்றைக்கொண்டு தானம் அளிக்கப்பட்ட நாளை நிச்சயமாகக் கணித்து அறியமுடியும். இவ்விதம் அரசர்களுடைய ஆட்சிக்காலம் நமக்கு நிர்ணயமாகத் தெரியவருகிறது. இன்னும், சாசனங்களில் காணப்படும் மெய்க்கீர்த்தி அல்லது பிரசஸ்தியிலிருந்து அரசனுடைய வெற்றிகளும் புகழும் நன்கு விளங்கும். அன்றி ஓர் அரசனுடைய சாச னங்கள் கிடைக்கும் இடங்களைக் கொண்டு அவனுடைய ஆட்சி எவ்வ ளவு தூரம் பரவியிருந்ததென்பதையும் நாம் அறியலாம்.

இவற்றைத் தவிர, சாசனங்களின் அமைப்பையும் வாசகத்தையும் கொண்டு வேறு எத்தனையோ விஷயங்களை நிர்ணயிக்கலாம். அந் நாளின் ஆட்சிமுறை, அதை நடத்திய அரசாங்க அதிகாரிகளின் வரம்பு, சமூக அமைப்பு, நாடு இருந்த நிலை, நாகரிகம், மக்கள் நடத் திய வாழ்க்கை, வாணிகம் முதலிய எல்லாத்துறைகளிலும் நம் நாட்டின் பழைய வரலாற்றை நாம் அறியலாம். இன்னும், இச் சாசனங்கள் அந்த அந்த நாட்டு மொழிகளில், பெரும்பாலும் உரைநடையிலும்

சில சமயங்களில் செய்யுளாகவும் அமைந்திருப்பதைக் கவனித்து அந் நாளில் மொழி, இலக்கியம், இலக்கணம் ஆகியவற்றின் நிலையையும் நாம் காணலாம்.

சாசனங்களை அவை கிடைக்கும் பிரதேசத்தைக் கொண்டோ, அவற்றுள் காணப்படும்அரசர்கள் அல்லது வம்சங்களைக் கொண்டோ, அவை பொறிக்கப்பட்ட நூற்றுண்டுகளைக் கொண்டோ பல பகுதிகளாகப் பிரித்துத் தொகுத்து வைத்துக்கொண்டு ஆராயவேண்டும். அப்போதுதான் அந்த ஆராய்ச்சியின் பயனாக உண்மைச் செய்திகள் பலவற்றை அறியமுடியும். ஒவ்வொன்றையும் தனித்தனியாக எடுத்துக் கொண்டு ஆராய்ந்தால் அது அதிகமாகப் பயன்படமாட்டாது.

இதற்குச் சாசனங்களின் மூலபாடங்கள் அத்தியாவசியம். சென்ற முக்கால் நூற்றுண்டாக அரசாங்கத்தார் தமிழ் ஜில்லாக்களிலிருந்து மட்டுமே இருபதினுயிரத்துக்கு மேற்பட்ட கல்வெட்டுக்களைப் பிரதி செய்திருக்கிறார்கள். ஆனல் வெளியிடப்பட்டவைகளோ நாலாயிரத்துக்குமேல் இருக்காது. 1904-ஆம் ஆண்டிலிருந்து பிரதி செய்யப்பட்ட சாசனங்களின் பெரும்பகுதி இன்னும் வெளியிடப்பெறுமல் உள்ளன. அவை விரைவில் வெளியிடப்பட்டால்தான் சாசன ஆராய்ச்சியைத் திறம்பட நடத்தமுடியும்.

## 2. பழைய சரித்திர நூல்கள்

நம் நாட்டுப் பழைய சரித்திரத்தை அறிவதற்கு நாம் சாசனங்களையே முக்கிய ஆதாரங்களாகக் கொண்டுள்ளோம். எந்த எந்தக் காலங்களில் நாட்டின் எந்த எந்தப் பாகங்களில் யார் யார் அரசு செலுத்திவந்தார்கள், எவ்வெப்பொழுது எந்த எந்த அரசாங்கங்கள் நாட்டின் எந்த எந்தப் பகுதியைக் கைக்கொண்டன, நாட்டை ஆண்டு வந்த அரசர்களில் யாருக்குப்பின் யார் அரசாங்கத்தை ஏற்று நடத்தி வந்தார்கள், அவர்களில் ஒருவருக்கு ஒருவர் பெற்றிருந்த முறை என்ன, ஒவ்வொருவரும் எத்தனை வருஷகாலம் அரசாண்டனர் என்பன போன்றவற்றை ஆராய்வதற்குத்தான் நாம் சாசனங்களை இப்பொழுது உபயோகிக்கின்றோம்.

ஆனல் இச்செய்திகளை அறிவதற்குச் சாசனங்கள் மட்டுமே ஆதாரங்களாக நிற்கவில்லை. கர்ண பரம்பரைச் செய்திகள், இலக்கியம், பழைய நாணயங்கள், சிற்பம், சித்திரம், வெளிநாட்டார் எழுதிவைத்துச் சென்ற குறிப்புக்கள் என்பனபோன்ற வேறு பலவகை ஆதாரங்களும் உள. ஆயினும் அவற்றல் நாம் அறிந்துகொள்வனவற்றை ஒருவிதமாக முறைப்படுத்தி முடிவுகட்டி நிச்சயம் செய்துகொள்வதற்குச் சாசனங்களே தக்க கருவியாக இருக்கின்றன.

நம் முன்னோர்களுக்குச் சரித்திர உணர்ச்சி கிடையாது என்ற பழிச்சொல் ஒன்று உண்டு. அது சமீபகாலத்தில் ஏற்பட்டதன்று. கி. பி. பதினோராம் நூற்றாண்டில் இக் காட்டிற்கு அல்பேரூனீ என்னும் அராபிய யாத்திரிகர் ஒருவர் வந்திருந்தார். அவர் “ஹிந்துக்கள் சரித்திர முறையைப்பற்றிக் கொஞ்சமும் கவனிப்பதில்லை. அவர்கள் தங்களுடைய அரசர்களைப்பற்றி வரன்முறையாகச் சொல்லமாட்டார்கள். நெருக்கியடித்துக் கேட்டால் இன்னது செய்வது என்னும் வகை யறியாமல், கதைகட்ட ஆரம்பித்து விடுவார்கள்” என்று கூறியிருக்கிறார். இது அவருடைய அனுபவம் போலும்.

இதுகாறும் நம் நாட்டுச் சரித்திரத்தை ஆராய்ந்த ஆசிரியர்களில், வெளிநாட்டவர் நம் தேசத்தவர் என்ற வேற்றுமையில்லாமல், பலரும் அக்கொள்கையை உடம்பாடாகக் கொண்டிருக்கிறார்கள். ‘இதையே தான் நாம் இன்றைக்கும் காண்கிறோம்’ என்பது அன்னார் கூற்று.

நாம் இப்பொழுது விரும்பும் முறையில் நாட்டுச் சரித்திரத்தை நம் முன்னோர்கள் எழுதிவைத்துச் செல்லவில்லை என்பது உண்மை தான். ஆனால் அவர்களுக்குச் சரித்திர உணர்ச்சி இல்லையென்றாவது, சரித்திரங்களை எழுதிவைக்கவே இல்லை யென்றாவது கூறமுடியாது. நாம் இக்காலத்தில் கொண்டிருக்கும் மனப்பான்மைக்கும் நம் முன்னோர்கள் பெற்றிருந்ததற்கும் மிகுந்த வேறுபாடுகள் உண்டு. அவர்கள் தங்கள் மனத்திற்கு இசைந்தவாறு சரித்திரத்தை எழுதிவைத்தே சென்றிருக்கிறார்கள்.

மக்களுடைய விருப்பங்களும், உள்ளக் கிளர்ச்சிகளும் நாகரிகம் முன்னேற்றம் அடையுந்தோறும் நாளுக்கு நாள் மாறி வருகின்றன. அன்றி, அவை தேசந்தோறும் வேறுபடுகின்றன. இன்றைக்கு முறையாக இருப்பது நாளைக்குத் தவறாக மாறுகின்றது. அவ்வாறே இன்றைக்குத் தவறாக உள்ளது நாளைக்கு முறையானதாகக் கருதப்படுகின்றது.

பண்டைய மக்கள் சரித்திரத்தையும் கால முறையையும் நாம் இப்பொழுது கருதுவதைப் போன்று மதிப்பிடவில்லை. அவர்களுக்குத் தெய்வபக்தியும் காவியரசனையுமே முக்கியமானவைகளாகத் தோன்றின. இந்தக் கருத்தைக் கொண்டே அவர்கள் காவிய நாடகங்களையும் புராணங்களையும் அதிகமாக எழுதிவைத்துச் சென்றனர் போலும். அவைதாம் பொதுமக்களுக்கு மிகவும் உபயோகப்படக் கூடியவை; அவர்கள் மனத்தை நல்வழியில் திருப்பக்கூடியவை. அந்த முறையில் அல்லாமல் நம் முன்னோர்கள் வேறு துறைகளில் சரித்திர நூல்களை ஜனசமூகத்திற்கு அத்தியாவசியமானவைகளாகக் கருதவில்லை.

எனினும், அவர்கள் சரித்திரங்களை எழுதாமல் விட்டுவிடவில்லை. பழைய புராணங்களில் நம் நாட்டுச் சரித்திரப் பகுதிகள் காணப்படு கின்றன. சிருஷ்டி காலத்திலிருந்து பூ மண்டலத்தின் வரலாற்றை எடுத்துரைப்பனவே புராணங்கள். இப்போது நமக்குக் கிடைக்கும் அவற்றின் பாடங்கள் மூல உருவங்கள் அல்ல; பல இடைச் செருகல் களும் திருத்தங்களும் கொண்டவை. நம் நாட்டைப் பழைய காலத்தில் ஆண்டவர்களாக அதிலே கூறப் பெறும் ராஜ வமிசங்களையும் அரசர் களையும் அவர்களுடைய ஆட்சியின் வரலாற்றையும் நாம் சரித்திர உண்மைகளாகக் கொள்ளாமல் வெறும் கட்டுக் கதைகளென்று கூறி ஒதுக்கிவிடுகிறோம்.

இன்னும், அந்தப் புராணங்களில் விவரிக்கப்பெற்றுள்ள அரசர் கள், பெரியோர் ஆகியவர்களுடைய காலத்திற்குப் பிறகு நாடு எவ் விதம் இருக்கும் என்று கூறுவதுபோலப் பரதகண்டத்தின் சரித்திரம் கூறப்பட்டுள்ளது. பவிஷ்யத், அதாவது வருங்காலத்தை அறிவிப் பதாக அமைந்திருக்கும் அந்தப் பாகம், அநேகமாக எல்லாப் புராணங் களிலும் ஒரேவிதமாகக் காணப்படுகின்றது. அவற்றுள் தோன்றும் வித்தியாசங்களும் பாடபேதங்களால் ஏற்பட்டனவேயன்றி வேறல்ல. பார்ஜிதர் என்னும் ஆசிரியர் அவற்றைத் தொகுத்து ஒப்பிட்டு, சரி யான பாடம் என்று தீர்மானித்ததைக் 'கலியுக ராஜவமிசங்கள் பற்றிய புராண பாடம்' என்ற பெயரில் வெளியிட்டுள்ளார்.

அந்தப் பாகத்தில் கி. மு. நான்காம் நூற்றாண்டின் மத்தியி லிருந்து கி. பி. நான்காம் நூற்றாண்டு வரையில் சுமார் ஐந்தாறு நூற் றாண்டுகளின் சரித்திரம் உள்ளது. அதிலே மௌரியர், சுங்கர், கண்வர், ஆந்திரர் அல்லது ஆந்திரபிருத்தியர்கள் எனப்படும் சாதவாகனர்கள் ஆகியோர்களுடைய வமிசாவளிகளும் அந்த அரசர்களுடைய ஆட்சி விவரங்களும் காணப்படுகின்றன. ஆனால் அது பரதகண்டம் முழுமைக் கும் இல்லை; மகத தேசத்திற்கும் அதைச் சுற்றியுள்ள நாடுகளுக் குமே உள்ளது. இந்தியாவின் எல்லைப்புறங்களிலும் தக்ஷிணத்திலும் ஆண்ட அரச வமிசங்களைப்பற்றிய செய்திகள் காணப்படவில்லை. புராண ஆசிரியர்கள் தாங்கள் வாழ்ந்துவந்த நாட்டை மத்தியாகக் கொண்ட பாகத்தை மட்டுமே முக்கியமாகக் கருதினர்கள் போலும். அன்றி, அந்நாளிலே மகதத்தை ஆண்டு வந்தவர்களே இந்நாட்டின் பேரரசர்கள் என்றும் மற்ற மன்னர்கள் யாவரும் அவர்களுக்குக் கீழ்ப் பட்டவர்கள் என்றும் ஓர் எண்ணம் நிலவி வந்திருக்கிறது.

புராணங்களின் பவிஷ்யத் பாகத்தில் காணப்படும் அரசர்களுடைய வமிசம், அவர்களுடைய ஆட்சிக்காலம் முதலியன சரித்திர ஆராய்ச்சி

யால் கண்ட முடிவுகளையே தழுவியிருக்கின்றன. பல சமயங்களில் புராணங்களில் காணப்படும் செய்திகளைக் கொண்டே சரித்திர முடிவுகளை நாம் வரையறுக்கவேண்டி யிருக்கிறது.

ஆனால் அவ்விடத்தில் கூறப்பட்டவற்றுள் முக்கியமான ஒரு மாறுதலை நாம் செய்து கொள்ளவேண்டும். நாட்டின் பல பாகங்களிலும் சமகாலத்தில் ஆண்ட அரச பரம்பரைகளைப் புராணங்கள் அந்த அந்த வமிசங்கள் ஆதிக்கியம் பெற்ற வரிசையில் குறிப்பிட்டு, அவற்றின் வமிசாவளியை ஆதிமுதல் முடிவு வரையில் அந்த இடத்தில் கொடுத்திருக்கின்றன. உதாரணமாகப் பின்வருவதைக் காட்டலாம்: கி. மு. இரண்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் அரசு நிறுவிய சுங்க வமிசத்தவர்கள் மகதநாட்டை நூற்றுப்பன்னிரண்டு வருஷங்கள் ஆண்டுவந்தனர். அவர்களுக்குப் பிறகு நாற்பத்தைந்து ஆண்டுகள் கண்வ வமிசத்து மன்னர்களும் ஆண்டு வந்தார்கள். அக்காலங்களில் தக்ஷிணத்தின் வடகோடியில் மத்திய இந்தியாவை ஒட்டிய பாகத்தில் ஆந்திரர்கள் என்றும் ஆந்திரபிருத்தியர்கள் என்றும் வழங்கப்பெறும் சாதவாகனர்கள் அரசு செலுத்தினர். சாதவாகன வேந்தன் ஒருவன் கண்வ வமிசத்துக் கடைசி அரசனைக் கி. பி. 27-ஆம் ஆண்டளவில் கொன்று மகதநாட்டையும் கைக்கொண்டான். கண்வ வமிசம் வீழ்ச்சியடைந்ததும் சாதவாகனர்கள் ஆதிக்கியம் பெற்றனர். ஆகையால் புராணங்களில் சாதவாகனர்கள் கண்வ வமிசத்திற்குப் பிறகு வைத்துக் கூறப்பட்டுள்ளனர். அவ்விதம் கூறும்போது அந்த வமிசத்தின் முதல் அரசனிலிருந்து ஆரம்பிக்கின்றனர். இவ்விதமான திருத்தம் ஒன்றை மட்டில் செய்துகொண்டால் புராணங்களில் உள்ள சரித்திரப் பகுதி நம்பக் கூடாதது என்று கருத இடமில்லாமற் போய்விடும்.

இதேபோல், சுமார் கி. மு. 700 முதல் கி. பி. 770 வரையில் ஆயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு இந்நாட்டின் சரித்திரம் 'மஞ்சுஸ்ரீ மூலகல்பம்' என்னும் புத்தமத நூலில் காணப்படுகிறது. ஸம்ஸ்கிருதத்தில் எழுதப்பெற்ற அந்நூலுக்குத் திபேத்திய பாஷையில் ஒரு மொழிபெயர்ப்பும் உள்ளது. அவ்விரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்துச் சரியான மூல பாடத்தை நிர்ணயித்து ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் காலஞ்சென்ற காசிப் பிரசாத ஜயஸ்வால் என்பார் 'இந்தியப் பேரரசின் வரலாறு' (ஆன் இம்பீரியல் ஹிஸ்டரி ஆப் இந்தியா) என்ற பெயரில் வெளியிட்டிருக்கிறார்.

கல்ஹணர் எழுதிய 'ராஜதரங்கிணி' மற்றொரு சரித்திர நூலாகும். அது காச்மீர தேசத்தின் சரித்திரத்தைக் கூறுவதாகும். அந்த நூல் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் மத்தியில் (1148-9-ஆம் ஆண்டு)

எழுதப்பட்டது. அவர் அந்நூலை எழுதுவதற்கு முன்னர் அந்நாட்டுச் சரித்திரத்தைக் கூறும் நூல்கள் சில இருந்தன. க்ஷேமேந்திரர் எழுதிய நிருபாவலி, ஹேலாராஜர் பன்னீராயிரம் செய்யுட்களில் எழுதிய பார்த்திவாவலி, நீலமுனி எழுதிய நீலமத புராணம் என்பன அவற்றுள் முக்கியமானவை. அன்றி, ஸுவ்ருதர், பத்மமிஹிரர் என்போர் எழுதிய நூல்களும் இருந்தன.

கல்ஹணர் பழைய நூல்களில் காணப்படும் குறைகளை நீக்கி உண்மைச் சரித்திரத்தை எழுதுவதாகக் கூறுகிறார். அரசாங்கத்தில் உயர்ந்த பதவியைப் பெற்றிருந்த ஒருவருடைய குமாரராகிய கல்ஹணருக்கு அதற்கு வேண்டிய சௌகரியங்கள் பல இருந்தன. அவர் தம்முடைய நூலைத் தமக்கு முன்னர் எழுதப்பட்டுள்ள பதினொரு ராஜ கதைகளையும் நீலமத புராணத்தையுமே ஆதாரங்களாகக் கொண்டு எழுதியிருக்கிறார்; பண்டை மன்னர் அளித்த சாசனங்கள் பலவற்றையும், முதிர்ந்தோர் வாய்மொழிகளையும், சுவடிகளையும் ஆராய்ந்து எழுதியதாக அவரே கூறியுள்ளார். எனினும் ராஜதரங்கிணியில் சில குறைகள் இல்லாமல் இல்லை. அது கி. மு. 2448-ஆம் ஆண்டிலிருந்து சரித்திரத்தைக் கூறிவருகின்றது. ஆயினும் அவ்வளவு பழைய காலத்ததாகக் கூறப்படும் சரித்திரம் நம்பத்தகுந்ததல்ல. ஆசிரியரின் காலத்திற்குச் சுமார் நாலைந்து நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட காலத்தில் ஆண்டவர்களாகத் தெரியும் மன்னர்களுடைய ஆட்சிக்காலங்களை நாம் அப்படியே ஏற்றுக்கொள்ள முடியாது.

தமிழ் நாட்டிலும் அத்தகைய சரித்திரங்கள் உள்ளன. சென்ற நூற்றாண்டின் துவக்கத்தில் கர்னல் மக்கென்ஸி என்பவர் நம் நாட்டுச் சரித்திரத்தை ஆராய்ந்து எழுதவேண்டும் என்னும் நோக்கத்துடன் அதற்குத் தேவையான ஆதாரங்களைத் தேடிச் சேகரித்தார். அதற்காக அவர் பல உதவியாளர்களை நியமித்து அவர்களை நாட்டின் பல பாகங்களுக்கும் அனுப்பிவைத்தார். அவர்கள் அங்கங்கே உள்ள வயது சென்றவர்களிடமும் முக்கியஸ்தர்களிடமும் கிடைத்த பழைய நூல்களையும் செய்திகளையும் பெற்று வந்தார்கள்.

அவ்விதம் கிடைத்தவற்றை அப்படியே தொகுத்துப் பிரதி செய்து வைத்துள்ளார்கள். அந்தத் தொகுதிகளுள் கர்ணபரம்பரைச் செய்திகள், நாட்டுச் சரித்திரங்கள், மகாத்மியங்கள், ஸ்தலபுராணங்கள், சிற்றூர் வரலாறுகள், கோயிற் சுவர்களினின்றும் பெயர்த்தெழுதிய கல்வெட்டுகள், செப்பேட்டுப் பிரதிகள், சில்லறைப் பிரபந்தங்கள், நாட்டுப் பாடல்கள் ஆகியவை நிறைந்து இருக்கின்றன.

மக்கென்ஸி அவற்றைச் சேகரித்தாரே ஒழிய அவற்றை உபயோகிக்கவில்லை. அந்த நூல்கள் இன்னும் நன்கு முறையாக ஆராயப்படவில்லை. சென்ற நூற்றாண்டின் மத்தியில் டெயிலர், வில்ஸன் என்னும் ஆசிரியர் இருவர் அவற்றைத் தனித் தனியாக ஆராய்ந்து தொகுத்து அட்டவணைகள் வெளியிட்டிருக்கிறார்கள். டெயிலர் என்பவர் அவற்றுள் சிலவற்றைச் சுருக்கமாக ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து 'ஓரியண்டல் ஹிஸ்டாரிகல் மானுஸ்கிருப்ட்ஸ்' என்ற பெயரில் 1835-ஆம் ஆண்டு வெளியிட்டார்.

அந்தத் தொகை நூல்களை ஆராய்ந்த ஆசிரியர்களிற் பலர் அவற்றைப் புராணக் கதைகளென்றும், சரித்திர ஆதாரங்களாகக் கொள்ளத் தகுதிவாய்ந்தனவல்ல வென்றும் ஒதுக்கிவிட்டனர். கால்டுவெல் போன்ற ஆசிரியரும் அவற்றைக் 'கர்ணபரம்பரைச் செய்திகளைவிட மிகவும் மட்டம்' என்றும், 'கட்டுக்கதை நிலையைக் காட்டிலும் அதிக ஆதாரமனவை யல்ல' என்றும் கூறுகிறார். (திருநெல்வேலி வரலாறு, பக்கம் 55.) ஆனால் அது நடந்தது வெகு காலத்திற்கு முன்பு. அக்காலத்தில் நம் நாட்டுப் பூர்விக சரித்திரத்தைப்பற்றிய ஆராய்ச்சி ஆரம்பப் பருவத்திலே இருந்தது; முன்னேற்றம் அடையவில்லை. அதை நடத்தி வந்த ஆராய்ச்சியாளர்களுக்கும் நம் நாட்டுக் கலைச் செல்வம், மனப்பான்மை ஆகியவைகளின் அடிப்படைத் தத்துவம் தெரியாது. மேலை நாடுகளில் உள்ள சரித்திர நூல்களுடன் இவற்றை ஒப்பிட்டே அந்த விதமான முடிவுக்கு வந்தனர்.

அது மிகவும் தவறு. மக்கென்ஸி தொகையில் கிடைக்கும் 'கர்நாடக தேச ராஜாக்கள் சவிஸ்தார சரித்திரம்', 'கொங்குதேச ராஜாக்கள்', 'மதுரைத்தல வரலாறு', 'தஞ்சாவூரி ஆந்த்ர ராஜுல சரித்திரமு' (தெலுங்கு) என்பனபோன்ற நூல்களை நாம் அங்ஙனம் கூறமுடியாது. கி. பி. பதினைந்து, பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளின் தமிழ் நாட்டுச் சரித்திரத்தை எழுதுவதற்கு அந்தவகை நூல்களே முக்கிய ஆதாரங்களாக உள்ளன. நாட்டின் பல பாகங்களையும் ஆண்டுவந்த சிற்றரசர்கள் ஆகியோர்களுடைய சரித்திரங்களுக்கு அவற்றைத் தவிர வேறுவகை ஆதாரங்கள் கிடையா. சமீப காலத்தில் எழுதப்பட்ட அந்த நூற்றாண்டுச் சரித்திரங்கள் பலவற்றுக்கும் அவை நன்கு பயன் பட்டிருக்கின்றன.

'மதுரை நாயக்க மன்னர்களின் சரித்திர'த்தை எழுதிய பேராசிரியர் ஆர். சத்தியநாத ஐயர், "இத்தகைய நூல்களை நடுநிலைமையோடு ஒப்பிட்டு ஆராய்ந்து கண்ட முடிவே இந்தச் சரித்திரம் எழுதுவதற்கு

முக்கியமான ஆதாரமாக அமைந்துள்ளது" (பக்கம் 33) என்று குறிப்பிட்டிருக்கிறார். சோழ மன்னர்கள் வரலாற்றை விரிவாக ஆராய்ந்து எழுதிய பேராசிரியர் க. அ. நீலகண்ட சாஸ்திரிகள் ஓர் இடத்தில், "சோழர் சரித்திரத்தின் ஆரம்பகாலத்தைப் பற்றிக் 'கொங்கு தேச ராஜாக்கள்' என்னும் நூலில் காணப்படும் சில விஷயங்கள் சிலா சாசனங்களால் பெரிதும் வலியுறுத்தப்பட்டுள்ளன" என்று கூறிவிட்டு, "இந்த வரலாறுகள் எவ்விதம் எழுதப்பெற்றன வென்பதைப் பற்றிய விவரம் நமக்கு இப்போது அதிகமாகத் தெரியவில்லை. அவற்றை நல்ல முறையில் கவனமாக ஆராயவேண்டுவது அவசியம்" என்றும் தெரிவித்திருக்கிறார். (க. அ. நீலகண்ட சாஸ்திரிகள், ஹெச் எஸ். ராமண்ணா ஆகிய இருவரும் எழுதிய 'இந்திய வரலாறு பற்றிய சரித்திர ஆராய்ச்சி முறை' பக்கம் 46). சமகாலத்தில் ஆண்டுவந்த அரச பரம்பரைகளை அவை ஆதிக்கம்பெற்ற முறையிலே வைத்து, அந்த அந்த வமிசத்துச் சரித்திரத்தையும் ஆதிமுதல் தெரிவிப்பதாகப் புராணங்களில் காணப்படுகிற குறை 'கொங்குதேச ராஜாக்களிலும்' ஓர் அளவு தென்படுகிறது, அதுவும் மிகப் பழங்காலத்துக்குத்தான். இது ஒன்றைத் தவிர மற்ற விஷயங்களில் இது முற்றிலும் நம்பத் தகுந்தது. இந்த ஓலைச் சுவடி நிலயத்திலேயே 'கொங்கண தேச ராஜுல வ்ருத்தாந்தமு' என்னும் தெலுங்கு நூல் ஒன்றும் உள்ளது. அது இந்நூலில் தெலுங்கு வடிவமேயாகும் என்பர்.

இந்தச் சுவடி நிலயத்திலேயே 'கங்க வம்சாநு சரித்திரம்' என்னும் வடமொழிக் காவியம் ஒன்று இருக்கிறது. ஒரிஸ்ஸா தேசத்தை ஆண்டு வந்த கீழைக் கங்க வமிசத்து மன்னர்களின் வரலாற்றைக் கூறும் அந் நூல் ராஜகுருவாக இருந்த வாஸுதேவ ரத ஸோமயாஜி என்பவரால் இயற்றப்பெற்றது. முதல் பத்துப் பரிச்சேதங்கள் உள்ளன. அது கி. பி. பதினெண்காம் நூற்றாண்டில் இயற்றப்பெற்றதெனத் தெரிகிறது. அதன் ஆசிரியர் ராஜகுருவாக அரச குடும்பத்தாருடன் நெருங்கிய தொடர்பும் அரசாங்கப் பதவியும் பெற்றிருந்தமையால் அரச வமிசத்தாரின் வரலாறுபற்றிய ஆதாரமான செய்திகளை அவர் பெறுவதற்கு நல்ல வசதியும் வாய்ப்பும் இருந்திருக்கவேண்டும். எனினும் அந்நூல் சரித்திரமாக இல்லாது இலக்கியச்சுவை பெற்ற காவியமாகக் காணப்படுகிறது. (1919-20 ஆண்டு முதல் 1921-22 ஆண்டு வரை உள்ள மூவருடக் கேட்லாக்கு, ஆர் நெ. 3033 கொண்ட சுவடி.)

தவிர, பாரசீகம் முதலிய மொழிகளிலும் சாதத்நாமா, துஸ்கத்-இ-வாலாஜாஹீ என வாலாஜா நவாபுகளின் சரித்திரங்களைக் கூறும் நூல்களைப்போல அநேகம் இருக்கின்றன.

ராஜதரங்கிணி உட்பட இவ்வகை நூல்கள் எல்லாவற்றிலும் நாம் முன்னமே கூறியுள்ளபடி நடை அழகும் கற்பனைகளும் கலந்து காவிய வாசனை வீசுவது கவனிக்கத்தக்கது.

இவ்விதம் நாட்டை ஆண்டுவந்த அரச பரம்பரையினரின் சரித்திரத்தைக் கூறும் நூல்களைப் போலவே தனிப்பட்ட அரசர்களின் வாழ்க்கையைத் தெரிவிக்கும் நூல்களும் உள. அவற்றுள் பாண கவி எழுதிய ஹர்ஷ சரித்திரம், பில்ஹணர் எழுதிய 'விக்ரமாங்க தேவ சரித்திரம்' ஆகிய இரண்டையும் முக்கியமானவைகளாகக் கொள்ளலாம்.

ஹர்ஷ சரித்திரம் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் (கி. பி. 606 முதல் 648 வரையில்) வடக்கே கன்னோசி எனவும் கன்னகுச்சி எனவும் குறிக்கப்பெறும் கன்யாகுப்ஜ நாட்டை ஆண்டு வந்த ஹர்ஷவர்த்தனன் என்பவனுடைய சரித்திரத்தைக்கூறுவது. பில்ஹணர் எழுதியதோ கி. பி. பதினோராம் நூற்றாண்டின் பிற் பகுதியில் (கி. பி. 1075 முதல் 1126 வரையில்) கல்யாணியினின்றும் அரசு செலுத்திய ஆறும் விக்கிரமாதித்தன் என்னும் மேலைச் சாளுக்கிய அரசனுடைய சரித்திரத்தைத் தெரிவிப்பதாகும். இவ்விருநூல்களின் ஆசிரியர்களும் முறையே அவ்வரசர்களின் ஆஸ்தானத்திலே வித்துவான்களாக விளங்கியவர்கள்.

இவ்வகை நூல்களுள் மேலே கூறிய இரண்டுமே பிரபலமாக வழங்குபவை. அவற்றுள் காணப்படும் இலக்கியச் சுவையே அதற்குக் காரணமாகும்; அவை சரித்திர நூல்கள் என்பதற்காக அல்ல.

அவற்றைப் போல வேறு பல நூல்களும் உள்ளன. தஞ்சாவூர்ச் சீமையைக் கி. பி. பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் ஆண்டுவந்த நாயக்க மன்னர்களில் ரகுநாத நாயக்கருடைய ஜீவிய சரித்திரத்தைப் பற்றிப் புகழ்பெற்ற மந்திரியான கோவிந்ததீக்ஷிதர் குமாரர் யஜ்ஞநாராயண தீக்ஷிதர் எழுதிய 'ஸாஹித்ய ரத்நாகரம்,' அம்மன்னன் தேவிகளுள் ஒருத்தியான ராமபத்ராம்பா எழுதிய ரகுநாதாப்யுதயம் என்னும் வடமொழி நூல்களும், ரகுநாத நாயக்கர் புத்திரர் விஜயராகவ நாயக்கர் ரகுநாதாப்யுதயம் என்ற பெயரிலேயே தெலுங்கில் எழுதிய யக்ஷகானம் எனப்பெறும் நாடகவகை நூல், ரகுநாதநாயகாப்யுதயம் என்னும் தெலுங்கு மொழிக் காவியம் போன்றவைகளும் உள்ளன.

இவற்றைப் போலவே விஜயநகர சாம்ராஜ்யத்தை ஆண்டுவந்த மன்னர்களான சாளுவ நரஸிம்ஹன்மீது டிண்டிம கவி எழுதிய 'சாளுவாப்யுதயம்,' அச்சுத தேவராயர் மீது இயற்றிய 'அச்சுதராயாப்யுதயம்'

ஆகிய சரித்திரங்களும் கிடைத்துள்ளன. இன்னும் குமார தூர்ஜடி என்பார் கிருஷ்ணதேவராயர்மீது தெலுங்கில் இயற்றிய கிருஷ்ணராய விஜயம் என்னும் காவியமும் இருக்கிறது.

இவ்வகை நூல்கள் யாவும் இலக்கியச்சுவை மிகுந்தே காணப்படுகின்றன. இவற்றை அம் மன்னர்களுடைய ஜீவியத் தத்துவத்தைக் கூறும் வாழ்க்கைச்சித்திரங்களாகவே நாம் கொள்ளவேண்டும். நாம் இப்பொழுது விரும்பும் முறையில் உள்ள சரித்திர நூல்களாகக் கொள்ள முடியாது. உதாரணமாக, பில்ஹணர் தம்முடைய விக்கிரமாங்க தேவ சரித்திரத்தில் விக்கிரமாதித்தன் பிறந்த செய்தியைக் கூறுமிடத்தே அவன்பிறந்தவுடன், "தேவர்கள் ஆர்த்தனர் துந்துபி முழங்கிற்று, பூமாரி பொழிந்தது" என்று சம்பிரதாயமான முறையில் எழுதியிருக்கிறாரே ஒழியப் பிறந்த வருஷம், மாதம், தேதி முதலிய விவரங்களைக் கூறவில்லை.

இம்மாதிரியே பாணகவியும் தம் பாட்டுடைத் தலைவனான ஹர்ஷவர்த்தனன் "ஜைஷ்ட மாசத்துக் கிருஷ்ணபக்ஷத் துவாதசிதினம் சந்திரன் கார்த்திகை நட்சத்திரத்தில் நிற்கையில், சந்தியா காலம் தாண்டி முன்னிரவு ஆரம்பிக்கும் சமயம் பிறந்தான்" என்று கூறுகிறாரேயன்றி, அது எந்த வருஷம் நிகழ்ந்தது என்பதைத் தெரிவிக்கவில்லை.

"இவ்விரு ஆசிரியர்களில் யாரும் தாங்கள் வாழ்ந்த காலத்தையோ நூல் எழுதிய காலத்தையோ குறிப்பிடவில்லை. ஆகவே ஹர்ஷவர்த்தனனைப்பற்றியோ விக்கிரமாதித்தனைப் பற்றியோ சரித்திர பூர்வமான வேறு ஆதாரங்களிலிருந்து நமக்குத் தெரியாமல் இருந்திருக்குமாயின் அந்தக் கவிஞர்கள், அவர்களுடைய பாட்டுடைத்தலைவர்கள் ஆகியோருடைய காலம் நமக்குத் தெரியாமலே போயிருக்கும்" என்று பிரபல ஆசிரியர் ஒருவர் இந்த நூல்களின் சரித்திர மதிப்பைப்பற்றிக் கூறும் போது எழுதிச் செல்கிறார்.

இந்தக் குறை இலக்கியங்களில் மட்டுமல்லாமல் சாசனங்களிலும் காணப்படுகின்றன. பல்லவர்களில் சிம்ஹவிஷ்ணுவின் காலத்திற்கு முற்பட்டவர்கள் அளித்தனவாகவுள்ள செப்பேடுகள் ஏராளமாகக் கிடைத்திருக்கின்றன. அவற்றில் தானம் வழங்கிய மன்னனுடைய முன்னோர் மூன்று தலைமுறைக்குப் பெயர் குறிக்கப்பட்டிருக்கிறார்கள். எனினும் அவை சாசனம் வழங்கப்பட்ட காலங்களை நிர்ணயிக்கக் கூடியனவாக இல்லை. பல சமயங்களில் அரசனுடைய ஆட்சியின் ஆண்டே கொடுக்கப்பட்டிருக்கும். சிலசமயங்களில் அதுவும் இராது. அன்றி, அவர்களில் பலர் ஒரேமாதிரியான பெயரைத் தாங்கியிருப்பர். ஆகவே சாசன

எழுத்துக்களின் வரி வடிவத்தைக்கொண்டே அந்தச் சாசனங்களின் காலத்தை நிர்ணயித்து அம்மன்னர்களுடைய வமிசாவளியை நிச்சயிக்க வேண்டியிருக்கிறது.

ஹர்ஷசரித்திரம் போன்ற நூல்கள் தமிழிலும் முன்னுளிலே இயற்றப்பட்டிருந்தனவாகத் தெரிகிறது. அவை இப்போது கிடைக்க வில்லை. எனினும் அவைகளைப்பற்றி நாம் கல்வெட்டுகளிலிருந்து அறி கிறோம். தஞ்சாவூர் ஜில்லா திருப்பூந்துருத்தியில் உள்ள முதலாம் இரா ஜேந்திர சோழனுடைய காலத்தைச் சேர்ந்ததான குறைச்சாசனம் ஒன்று (1931-ஆம் ஆண்டின் 120-ஆம் நெ. கல்வெட்டு), 'ஸ்ரீராஜராஜ விஜயம்' என்னும் நூலை வாசிப்பதற்காக நிவந்தம் அளிக்கப்பெற்ற செய்தியைக் கூறுகிறது. இரண்டாம் இராஜேந்திரசோழன் காலத்த தாகத் தஞ்சாவூர்ப் பெரியகோவிலிலிருந்து கிடைக்கும் மற்றொரு சாச னம் (தெ. இ. சாசனங்கள், இரண்டாம் வால்யூம், நெ. 67) அக்கோயி லிலே வைகாசிப் பெருவிழாவில் ராஜராஜேச்வர நாடகத்தை ஆடிக் காட்டுவதற்கான நிவந்தம் அளிக்கப்பட்டிருந்ததைத் தெரிவிக்கிறது. இந்நூற்கள் எந்த மொழியில் எழுதப்பட்டிருந்தன என்ற விவரம் தெரியவில்லை; பெரும்பாலும் தமிழில் எழுதியவைகளாகவே இருத் தல் வேண்டும். தஞ்சைப் பெரியகோயிலில் எழுந்தருளியிருக்கும் எம் பெருமான் பெயரே ராஜராஜேச்வரர் என்பது. ஆகவே, அக்கோயில் நிர்மாணிக்கப்பெற்ற சம்பவத்தையே நாடக உருவில் எடுத்துக்காட்டுவ தாக அந்த நாடகத்தைச் சொல்லலாம். மற்றது அம்மன்னன் வாழ்க் கைச் சம்பவங்களை எடுத்துக்கூறும் காவியமாக இருந்தல் வேண்டும். எவ்விதமாயினும் இரண்டிலும் முதலாம் இராஜராஜ சோழனுடைய வாழ்க்கைச் சம்பவங்களுள் முக்கியமானவை சில விவரிக்கப்பட்டிருத் தல் இயல்பே.

இதேபோல் முதற் குலோத்துங்கசோழ மன்னன்மீது 'குலோத் துங்க சோழ சரிதை' என்ற நூல் ஒன்று இயற்றப்பட்டிருந்ததென்பது புதுச்சேரிக்குப் பக்கத்தில் உள்ள திரிபுவனி என்னுமிடத்திலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டி (1919-ஆம் ஆண்டின் 198-நெ.) லிருந்து தெரிகிறது. மானகுலாசனிச்சேரியைச் சேர்ந்த திருநாராயண பட்டர் என்னும் கவிகுமுதசந்திரன் அதை இயற்றினர். அந்நூலைப் படிக்கக் கேட்டு அரங்கேற்றி ஆசிரியருக்கு ஏற்ற சம்மானம் செய்ய வேண்டு மென்று அரசன் அளித்த திருமுகத்தின்படி அவ்வூர்ச் சபையார் நூலைப் படிக்கக்கேட்டு அதன் ஆசிரியருக்கு நிலம் அளித்திருக்கிறார்கள்.

திருவாரூர்க் கோயிலில் ஒரு சமயம் தேவரடியாள் ஒருத்தியின் நடனத்தைப் பார்த்திருந்த சோழமன்னன் ஒருவன் சிற்றரசனுனை

வீரசோழ அணுக்கன் என்பானைப் புகழ்ந்து 'வீரணுக்க விஜயம்' என்ற பெயரில் ஒரு நூல் எழுதிய பூங்கோயில் நம்பி என்பாருக்கு இறையிலி யாக நிலம் வழங்கிய செய்தியைத் தெரிவிக்கும் சாசனம் ஒன்றும் (1904-ஆண்டின் 548-செ.) கிடைத்திருக்கிறது.

இத்தகைய நூல்கள் இப்போது கிடைக்காமல் மறைந்து போனது நம் நாட்டுச் சரித்திர ஆராய்ச்சிக்குப் பெரு நஷ்டமேயாகும்.

இம்மாதிரியே க்ஷேத்திரங்கள், பெரிய கோயில்கள் ஆகியவற்றின் வரலாற்றைக்கூறும் நூல்கள் உள்ளன. மதுரையில் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் மீனாட்சிசுந்தரேசர் ஆலயம் அந்நகரம் ஆகிய வற்றின் வரலாற்றை உரைக்கும் மதுரைத்தல வரலாறு என்பதைப்பற்றி முன்னரே நாம் குறிப்பிட்டுள்ளோம். அது வரலாற்றை ஆதி காலத்தி லிருந்து கூறுவதாக இல்லை. சமீபகாலத்திய சரித்திரம் முற்றிலும் நம்பத் தகுந்ததாக உள்ளது.

கோயிலொழுகு என்பதும் இதே போன்றதுதான். கோயில் என்று ஸ்ரீவைஷ்ணவர்கள் பக்தியோடு குறிக்கும் திருவரங்கப் பெரு நகர்க் கோயில் வரலாற்றையும் அதற்குப் பலர் செய்த சேவையையும் விரிவாக எடுத்துக் கூறுகிறது அந்நூல். அதிலே காணப்படும் செய்திக ளில் பல சாசனங்களால் உறுதிப்படுகின்றன. பூரி க்ஷேத்திரத்தில் உள்ள ஜகந்நாதர் ஆலயத்துக்கு இதேபோல் 'மாதலாபாஞ்சி' என்ற நூல் ஒன்று உண்டு. திருப்பதி என்னும் வடவேங்கடத்துக் கோயில் பற்றிய 'திருமலை ஒழுகு' உள்ளது. காளஹஸ்திக் கோயிலைப் பற்றிய நூல் ஒன்றும் இம்மாதிரியே உண்டாம்.

## 3. சரித்திர ஆதாரங்களும் சாசனங்களும்

நம் நாட்டு மன்னர்கள் பெற்ற வெற்றிகளைப் புகழ்ந்து கூறுமுகத் தால் அவர்களுடைய போர்க்களங்களைப் பாடும் பிரபந்த வகைகள் தமிழிலே காணப்படுகின்றன. சேர வேந்தனான கணைக்கால் இரும் பொறையைச் சோழமன்னன் செங்கணான் கழுமலத்தில் முறியடித்து வெற்றி கொண்ட போர்க்களத்தைப் புகழ்ந்து பொய்கையார் பாடிய 'களவழி நாற்பது' என்பதே இந்தவகையில் இப்போது கிடைப்பவற் றுள் மிகவும் பழமையானது. முதற் குலோத்துங்க சோழன் கலிங்கப் போரிலே கொண்ட வெற்றியைப் புகழ்ந்து கவிச் சக்கரவர்த்தி சயங் கொண்டார் பாடிய 'கலிங்கத்துப் பரணி' மிகவும் பிரசித்தமானது. அவ் வேந்தன் மகனான விக்கிரம சோழன் கலிங்கத்திலே போர் நடத்தி வெற்றி கொண்டதை அவன் அவைக்களப் புலவரான ஒட்டக்

கூத்தரும் கலிங்கத்துப் பரணி எனப் பரணி ஒன்று பாடிப் புகழ்ந்திருக்கிறாராம். அதை அவரே தம்முடைய இதர நூல்களில் குறித்திருக்கிறார். ஆனால் அது கிடைக்கவில்லை. இவை யாவும் சரித்திர நிகழ்ச்சியான அரசன் வெற்றியை விவரித்துக் கூறுகின்றனவே ஆயினும் பெரிதும் சம்பிரதாயத்தை ஒட்டியே கவிஞர்களது கற்பனைத் திறம் விளங்க இலக்கியச் சுவை மிகுந்து உள்ளனவே.

பதினான்காம் நூற்றாண்டின் மத்தியில் தமிழ்நாட்டிலே ஆதிக்கியம் பெற்று அரசு புரிந்துவந்த முஸ்லிம்களிடமிருந்து நாட்டை மீட்பதற்காக விஜயநகர அரசிளங்குமரனான குமார கம்பணன் படைநடத்தி வந்து போரிட்டு வெற்றிகொண்டதை விவரித்து அவன் தேவிகளுள் ஒருத்தியான கங்காதேவி என்பவள் 'மதுராவிஜயம்' என்ற பெயரில் வடமொழிக் காவியம் ஒன்று இயற்றியிருக்கிறாள். தமிழ்நாட்டிலே அந்நாளில் முஸ்லிம் ஆட்சி நிறுவியதைப்பற்றித் தெரிவிக்கும் முஸ்லிம் சரித்திரங்களில் காணும் தவறுகளைத் திருத்தி உண்மையை உணருவதற்கு இந்நூல் பெரிதும் உதவுவதாகும்.

இவற்றைத் தவிர, நம் நாட்டு மன்னர்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு அவர்களுடைய கீர்த்திகளைக் கூறும் வேறு பல சில்லறைப் பிரபந்தங்களும் உள. விக்கிரம சோழன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் இராஜராஜன் ஆகிய மூவரில் ஒவ்வொருவர் மீதும் தனித்தனியாகக் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் பாடிய மூன்று உலாக்களைக் கொண்ட மூவருலா, மூன்றாம் குலோத்துங்கனுடைய தம்பியான சங்கரசோழனைப் புகழ்ந்து ஒரு கவிஞர் பாடிய சங்கரசோழனுலா ஆகியவை உலாப் பிரபந்தங்களிலே முக்கியமானவை.

கோவை என்னும் வகையிலே மிகவும் பழமையானது இறையனார் அகப்பொருளுரைக்கு உதாரணச் செய்யுட்களாக அமைந்த 'பாண்டிக் கோவை'யாகும். குலோத்துங்க சோழன்மீது பாடப் பெற்ற குலோத்துங்கன் கோவையும் கிடைத்துள்ளது. அதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. பாட்டுடைத் தலைவனையும் மூன்றாம் குலோத்துங்கனாகவே கொள்வர். பொட்டைத் தஞ்சை என்றும் குறிக்கப்படும் பாண்டி நாட்டுத் தஞ்சாக்கூரிலிருந்து அரசு புரிந்த வாணர் குலச் சிற்றரசன்மீது பொய்யாமொழிப் புலவர் இயற்றிய 'தஞ்சை வாணன் கோவை'யும் இவ்வகையைச் சேர்ந்ததே. நம்பி அகப்பொருளுக்கு உதாரணச் செய்யுட்களாக அமைந்தது இக் கோவை.

இரண்டாம் குலோத்துங்க சோழனுக்கு அவைக்களப் புலவராக மட்டுமல்லாமல் அவனுடைய இளமைப் பருவத்தில் ஆசிரியராகவும்

இருந்த ஒட்டக்கூத்தர் அம்மன்னன்மீது 'குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ்' என்ற பிரபந்தம் ஒன்றும் பாடியிருக்கிறார்.

கலம்பக வகையிலே பிரசித்தமானது 'நந்திக் கலம்பகம்' ஆகும். தெள்ளாற்றுப் போரிலே வெற்றிகொண்ட பல்லவ மன்னன் நந்திவர்மன் மீது பாடப்பெற்ற அந்நூல் அதன் இலக்கியச் சுவைக்காகப் பலரும் விரும்பிப் படிப்பது; மன்னன்மீது பொறாமை கொண்ட அவன் தம்பி ஒருவன் அரம் வைத்துப் பாடியது என்பர். 'நந்தி கலம்பகத்தால் மாண்ட கதை நாடறியும்' என்று சோமேசர் முதுமொழி வெண்பா கூறுவதிலிருந்து இது விளங்கும்.

இத்தகைய நூல்களிலும் சரித்திர முக்கியத்வம் பெற்ற பல விஷயங்கள் சம்பிரதாயமான முறையிலேயே குறிக்கப்பட்டுள்ளன. குலோத்துங்கன் அவதாரத்தைக் கூறும்பொழுது சயங்கொண்டார் கலிங்கத்துப் பரணியில்,

> "வந்தருளி யவதாரஞ் செய்தலுமே
> மண்ணுலகு மறைக ளோன்கும்
> அந்தரீங் கினவென்ன வந்தாதுந்
> துபிமுழங்கி யதிர்ந்த வாங்கே"

என்று புகழ்ந்து கூறுகிறார். அதே போல வீரராஜேந்திரன் இறந்த பின்னர் குலோத்துங்கன் சோழநாடு போந்து பட்டமேற்கும் காலத்தில் நாடு இருந்த நிலையை,

> "மறையவர் வேள்வி குன்றி மனுநெறி யனைத்து மாறித்
> துறைகளோ ராறு மாறிச் சுருதியு முழக்க மோய்ந்தே"

என்று வருணிக்கிறார். இவை யாவும் பழைய முறையைப் பின்பற்றி இலக்கியச் சுவை தோன்ற மொழிந்தனவே யன்றிச் சரித்திர நிகழ்ச்சிகளாக கருதவேண்டுவனல்ல.

அன்றி, சரித்திர நிகழ்ச்சிகள் குறிக்கப்பட்டிருக்கும் இடங்களிலும் அவற்றின் விவரங்கள் காணப்படவில்லை. நந்திக் கலம்பகத்தில் தெள்ளாற்றெறிந்த நந்திவர்மன் "படையாறுசாயப் பழையாறுவென்றான்" என்று பொதுவாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் பழையாற்றுச் சண்டைக்குக் காரணம் என்ன, அவ்விடத்தில் அவன் யாரை வெற்றி கொண்டான் முதலிய விவரங்கள் காணப்படவில்லை.

எனினும், பல சமயங்களில் சாசனங்களில் காணும் விஷயங்களை விளக்குவனவாக அமைந்துள்ள இவ்வகை நூல்கள் சரித்திர ஆராய்ச்சிக்கு மிகவும் உபயோகமாக இருக்கின்றன. இவற்றில் உள்ள சரித்திரச் செய்திகள் மிகவும் முக்கியமானவை. ஆயினும் இவற்றை நாம் ஜாக்கிரதையாகவே உபயோகிக்க வேண்டும்.

பரணி, உலா முதலிய நூல்களில் 'திருமுடியடைவு' என்று வழங்கப்பெறும் இராசபாரம்பரியப் புகுதி காணப்படுகிறது. அதனுள்,

"மண்கண்ட பொன்னிக் கரைகட்ட வாராதாற்
கண்கொண்ட சென்னி கரிகாலன்"

(குலோ. உலா.)

என்பது போன்று பாட்டுடைத் தலைவனுடைய முன்னோர் கொண்ட வெற்றிகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

ஆயினும் பல இடங்களில் அவர்களுடைய பெயர்களை வெளிப்படையாகக் கூறாமல் அவர்களுடைய சிறப்பை மட்டும் எடுத்துக் காட்டிச் செல்வர் நூலாசிரியர்.

"தண்டினாற்
கங்கா நதியும் கடாரமும் கைக்கொண்டு
சிங்கா தனத்திருந்த செம்பியனும்"

என்று விக்கிரம சோழனுலாவில் முதலாம் இராஜேந்திர சோழன் புகழப்பட்டிருக்கிறான். கங்கையும் கடாரமும் கொண்ட அவன் 'கங்கைக் கொண்ட சோழன்' எனவும், 'கடாரம் கொண்டான்' எனவும் சிறப்புப் பெயர்களைப் பெற்றிருந்த செய்தியை நாம் சாசனங்களின் மூலம் அறிவோமாதலால், இவ்விடத்தில் குறிக்கப்பட்டவன் அவனே என நாம் நிச்சயிக்கமுடியும். இராசபாரம்பரியம் வருமுறையினும், அந்த இடத்தில் அது வேறு யாரையும் குறிக்கமுடியாது.

மற்றும் ஒருவகை இலக்கியம் உண்டு. ஜனரஞ்சகமான சந்தங்களில் அம்மானை சிந்து போன்று எழுதப்பட்டனவற்றை இதுகாறும் யாரும் உன்னிப்பாக ஆராயவில்லை. எளிய நடையில் மக்களிடையே வாய்மொழியாகப் பாவுவதற்கு ஏற்ப அமைந்துள்ள இவ்வகை இலக்கியத்தில் இராமப்பையன் அம்மானை, தேசிங்குராஜன் கதை, கான்சாயபு சண்டை, சிவகங்கைச் சரித்திர அம்மானை, பாஞ்சாலங்குறிச்சி சிந்து முதலியவற்றைக் கூறலாம். இந்த ஓலைச்சுவடி நிலயத்திலேயே மக்கென்ஸியின் தொகுப்பில் தேசிங்குராஜனைப்பற்றிய பாடல் ஒன்று இருக்கிறது. இப்போது வழக்கில் உள்ளதனின்றும் வேறான அது பெரும்பாலும் சரித்திர நிகழ்ச்சியை ஒட்டியுள்ளது.

இவ்விதம் பலவகையாக உள்ள சில்லறைப் பிரபந்த இலக்கியங்கள் படிக்க அழகாகவும் பல விஷயங்களைத் தெரிவிப்பனவாகவும் இருக்கும் எனினும் அவற்றுள் பெரும்பாலானவை சரித்திர ஆராய்ச்சியிலே காலவரையறைக்கு உபயோகப்படா. அது ஒன்றைத் தவிர அவை வேறு துறைகளில் மிகுதியும் பயன்படக் கூடியவை.

காவியமோ, பிரபந்தமோ, ஸ்தலபுராணமோ, மாகாத்மியமோ எதுவாயினும் பொதுவாக எல்லா நூல்களிலும் உள்ள சிறப்புப் பாயிரப்பகுதி மிகவும் முக்கியமானது. அதனுள் அந் நூலை இயற்றிய ஆசிரியர் பெயர், அவர் அதனை இயற்றிய காலம், அக்காலத்திலிருந்து அவரை உபசரித்த வள்ளலைப்பற்றிய விவரங்கள் ஆகியவை காணப் படும். எனினும் அவ்விடம் காணப்படுபவை பெரும்பாலும் நூலாசிரியர் களின் பெருமையை எடுத்துக்காட்டும் நோக்கத்துடனேயே எழுதப் பெற்றிருக்கும். அவர்களை ஆதரித்த புரவலர்களைப்பற்றிய புகழ்ச்சியும் இதே காரணத்துக்காக அமைந்ததே என்னலாம்.

'லோக விபாகம்' என்னும் ஜைனமதக் கிரந்தம் ஒன்று உண்டு. அது மோக்ஷபாகம் உள்ளிட்டுப் பதினொரு பிரகரணங்களைக் கொண்டது. அது வர்த்தமானரால் ஸுதர்மாவுக்கும் மற்றவர்களுக்கும் உபதேசிக்கப்பட்டது என்பர். குருசிஷ்ய முறையாக வழி வழி வந்து வெகு காலத்திற்குப் பிறகு ரிஷி ஸிம்ஹ ஸூரி என்பவர் அதனை வட மொழியில் எழுதினார். (மைசூர் ஆர்க்கி. அறிக்கை, 1917) இப் பொழுது கிடைக்கும் அந்த நூலின் ஏட்டுப் பிரதிகள் எல்லாவற்றிலும் அது பாணராஷ்டிரத்தில் உள்ள பாடலிகை என்னும் கிராமத்தில் குறிப் பிட்ட கிருஹநிலைகளைக்கொண்ட ஒரு நாளில் ஸர்வநந்தி என்பவரால் பெயர்த்தெழுதப்பட்டது என்று குறிக்கப்பட்டிருக்கிறது. அன்றி, காஞ்சீபுரத்தினின்றும் அரசு செலுத்திவந்த பல்லவ அரசன் ஸிம்ஹ வர்மன் ஆட்சியின் இருபத்திரண்டாம் ஆண்டுக்குச் சமமான 380-ஆம் வருஷத்தில் அது பூர்த்தியாயிற்று என்றும் ஒரு சுலோகம் தெரிவிக் கின்றது. பாடலிகை என்பது பாடலிபுரம் என்று வழங்கப் பெறும் திருப்பாதிரிப் புலியூரேயாகும். அங்கே சமணப்பள்ளி இருந்துவந்தது என்பது பெரியபுராணத்தினின்றும் தெரிகிறது. நூலைப் பெயர்த்தெழு திய நாளில் இருந்தனவாக ஸர்வநந்தி கொடுத்திருக்கும் கிருஹ நிலை களைக் கொண்டு ஜோதிஷ ரீதியாகக் கணித்தால் அது ஒத்திருப்பதைக் காணலாம். இதனால் ஸிம்ஹவர்மன் என்னும் பல்லவ அரசன் ஒருவன் சக 359 (கி. பி. 437) -ஆம் ஆண்டில் காஞ்சீபுரத்தைத் தலைநகராகக் கொண்டு அரசு செலுத்த ஆரம்பித்தான் என்பதும், அவன் ஆட்சியின் இருபத்திரண்டாம் ஆண்டில், (கி. பி. 459) திருப்பாதிரிப்புலியூரிலிருந்த ஸர்வநந்தி என்பவர் 'லோகவிபாகம்' என்னும் ஜைனமதக் கிரந்தத்தைப் பெயர்த்தெழுதினார் என்பதும் ஏற்படும். அக்காலத்தில் ஸிமஹவர்மன் என்னும் பல்லவ அரசன் அரசு செலுத்தி வந்தான் என்பதைப் பெனு கொண்டைச் செப்பேடுகள் உறுதிப்படுத்துகின்றன.

சோமதேவ ஸூரி என்னும் ஜைன ஆசிரியர் தம்முடைய வடமொழி நூலான 'யசஸ்திலக சம்பு'வைச் சகாப்தம் 881-க்கு மேல் செல்லா

நின்ற சைத்ர மாதம் (கி. பி. 959-ஆம் ஆண்டு) எழுதி முடித்தார். அப்போது கிருஷ்ணராஜன்கீழ்ச் சிற்றரசனாக அரிகேசரியினுடைய மூத்த குமாரன் ஆட்சி புரிந்து வந்தான் என்றும், கிருஷ்ணராஜன் பாண்டிய சிங்கள சேர மன்னர்களை வெற்றி கொண்டு மேல்பாடியிலிருந்து அரசு செலுத்திவந்தான் என்றும் அவர் நூலிலே கூறியிருக்கிறார். இவற்றைத் தவிர, அவர் தம்மை ஆதரித்த குறுநில மன்னன் எந்தப் பிரதேசத்தை ஆண்டுவந்தான் என்றோ அவன் எந்த வமிசத்தைச் சேர்ந்தவன் என்றோ கூறவில்லை. எனினும், கி. பி. 959-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் ஒன்பதாம் தேதி கொண்டதாகக் கிடைத்துள்ள ராஷ்டிரகூட வேந்தனான மூன்றாம் கிருஷ்ணனுடைய கர்ஹாட்செப்பேடுகளிலிருந்து அவன் அப்போது தென்னாட்டின்மீது வெற்றிகொண்டு சித்தூர் ஜில்லாவில் உள்ள மேல்பாடி என்னும் இடத்தில் தங்கியிருந்தான் என்றும், அவன் புரிந்த திக்குவிஜயத்தில் 'சோழர்களை முறியடித்துச் சிங்களம் உள்படப் பல நாட்டு மன்னர்களிடமிருந்தும் திறைபெற்றான்' என்றும் தெரியவருகிறது. இவற்றிலிருந்து சோமதேவ ஸூரியை ஆதரித்த அரிகேசரியின் மகன் ராஷ்டிரகூட வேந்தனான மூன்றாம் கிருஷ்ணன் கீழ்ச் சிற்றரசனாக இருந்தவன் என்பது தெரியவரும். கன்னட மொழியிலே விக்கிரமார்ஜுந விஜயம் என்ற மறு பெயருடன் பம்ப கவி எழுதிய பாரதத்திலிருந்து இந்த அரிகேசரியைப் பற்றி மேலும் விவரங்கள் கிடைக்கின்றன. கி. பி. 941-42-ஆம் ஆண்டில் எழுதப்பெற்ற பாரதத்தில் அம்மன்னனுடைய புகழும் அவன் முன்னோரில் ஏழுதலைமுறை வந்தவர் விவரங்களும் சரித்திரக் குறிப்புகளும் காணப்படுகின்றன. சாளுக்கியர்களில் லேமுலவாடக்கிளையின் சரித்திரத்தை எழுதுவதற்குச் சாசனங்களோடு இவைகளே முக்கிய ஆதாரங்களாக உள்ளன.

இதேபோன்றதுதான் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் மத்தியில் ஹேமாத்ரி என்பார் எழுதிய விரதகண்டத்தின் பாயிரப்பகுதியும். தேவகிரி யாதவ மன்னர்களான மகாதேவன், அவன் மகன் இராமசந்திரன் ஆகியோர்களின் ஆட்சியிலே ஸ்ரீகரணாதிபர், அதாவது ஓலை எழுதும் துறையின் தலைவரான ஓலைநாயகம் போன்ற பதவியை வகித்து வந்த அவர் தம்மை ஆதரித்த அரச பரம்பரையின் வரலாற்றைப் புராணகாலத்திலிருந்து அந் நாள் வரையில் அந்தப் பாயிரத்திலே கொடுத்திருக்கிறார். அவர் வகித்திருந்த பதவியின் காரணமாக அரச பரம்பரையின் உண்மை வரலாற்றை நன்கு அறிந்து கொள்வதற்கான வசதியும் வாய்ப்பும் அவருக்குக் கிட்டியிருத்தல் வேண்டும். அவற்றை கொண்டு அவர் கொடுத்த வரலாற்றை நாம் உண்மையாகவே கருதலாம். எனினும் பல சமயங்களில் அவர் ஓர் அரசனுக்கும் அவனுக்குப் பின்

பட்டத்துக்கு வந்தவனுக்கும் உள்ள உறவு முறையைத் தெளிவாக எடுத்துக் கூறாமல் விட்டுவிடுகிறார். தந்தைக்குப் பின் மகன் என்ற முறையிலேயே முன்னோர் அரசுபாரம் ஏற்று வந்திருத்தலால் நாம் அம்முறையிலேயே கொள்ளவேண்டும் போலும்.

இவற்றைப் போலவே நூலாசிரியர்களும் தங்களைப் பற்றிய செய்திகள் சிலவற்றைக் கூறிச் செல்வர். வடமொழி நூல்கள் சிலவற்றுள் ஆசிரியருடைய பரம்பரைச் செய்திகளும் காணப்படுகின்றன. அவர்களுடைய தந்தை, பாட்டன் ஆகியோருடைய விருத்தாந்தங்களும், அவர்கள் யார் யாரிடம் படித்து வந்தார்கள் என்பதும் கூறப்பட்டுள்ளன. தமிழ் நூல்களில் அத்தகைய செய்திகள் அதிகம் காணப்படவில்லை.

உதாரணமாக, நதிண்ட்லா கோபமந்திரி என்பவர் தாம் எழுதிய 'கிருஷ்ணார்ஜுன ஸம்வாதம்' என்னும் நூலில் தம்முடைய முன்னோர்களைப் பற்றியும், தமக்கு மாமனும், அப்பாஜி என்று சரித்திர பிரசித்தி பெற்றவருமான (கிருஷ்ணதேவராயருடைய மந்திரி) சாளுவ திம்மாஜியைப்பற்றியும் விவரமாகக் கூறியுள்ளார்.

'அவந்தி சுந்தரி கதை' என்ற பெயரில் மகாகவி தண்டி வடமொழியிலே இயற்றிய காவியத்தின் முன்னுரையில் தாம் மகாகவி பாரவியின் தோழனான தாமோதரன் என்பாருடைய கொட்பெயரன் என்று கூறிக் கொள்ளுகிறார். இன்னும் அதிலிருந்து பாரவி என்பார் சாளுக்கிய வேந்தனான விஷ்ணு வர்த்தனன், மேலைக் கங்க அரசனான துர்விநீதன், பல்லவ மன்னனான ஸிம்ஹவிஷ்ணு ஆகிய மூவருடைய சபைக்கும் விஜயம் செய்திருக்கிறார் என்பது தெரிகிறது. ஆகவே இந்த மூன்று மன்னர்களும் சமகாலத்தவர்கள் என்பது எளிதில் விளங்கும்.

நூல்களுள் காணப்படும் சிறு செய்திகளும், குறிப்புகள் சிலவும் சரித்திர ஆராய்ச்சிக்குப் பெரிதும் உபயோகமாகவுள்ளன. மண்டல புருடர் எழுதியுள்ள சூடாமணி நிகண்டில் அதன் ஆசிரியர்,

"கெடிமன்னர் வணங்குந் தாளான் கிருட்டின ராயன் கைபோற்
கொடைமட மென்ப தம்ம வரையாது கொடுத்த லாமே"

என்று கிருட்டினராயன் என்னும் அரசனுடைய கொடைத்திறனைப் புகழ்ந்து கூறுகிறார். அங்கே குறிக்கப்பட்டவர் கி. பி. பதினாறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் விஜயநகர ஸாம்ராஜ்யத்தை ஆண்டுவந்த கிருஷ்ணதேவராயரேயாவர். ஆதலின் இந் நூலினுடைய ஆசிரியரும் அக்காலத்தில் வாழ்ந்தவர் என்று கொள்ளலாம்.

இவ்விதம் சரித்திர நூல்களாக உள்ளவற்றைத் தவிர, பிற நூல்களிலும் அவை எழுதப்பட்ட காலங்களில் ஆண்ட அரசர்களைப்பற்றி மட்டுமேயன்றி அம் மன்னர்களுடைய முன்னோர்களைப் பற்றிய விவரங்களும் காணப்படுவது எங்ஙனம்? அவை யாவும் உண்மையாக இருக்க முடியுமா? அவர்கள் அந்த விவரங்களையும் மன்னர்களின் வமிசாவளியையும் எவ்விதம் அறிந்தனர்? இத்தகைய கேள்விகள் உண்டாவது இயற்கையே.

நம் நாட்டவர்களுக்கு வமிசங்களின் கிளைகளைப் பற்றிய விவரங்கள் நன்றாகத் தெரிந்திருப்பது மிகவும் சாதாரண விஷயம். இன்றைக்கும் பல குடும்பங்களில் ஏழு தலைமுறைகளுக்கு மேற்பட்ட வமிசாவளிகள் இருப்பதை நாம் காணலாம். ஒரே குடும்பம் பலவாறாகப் பிரிந்து போய்விடினும் சுபாசுப காரியங்களுக்கு அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ஒன்றுசேர வேண்டியதைக் கருதியே அங்ஙனம் வைக்கப்பட்டிருக்கிறது போலும். அன்றி, அவை லௌகிகமாகவும் மானியம் போன்ற சொத்துக்களின் உரிமை, அநந்தர வாரிசு பாத்தியதை முதலியவற்றை நிலை நிறுத்தவும் உபயோகப்படக் கூடியன.

நம் நாட்டில் உள்ள முக்கியமான மடம் ஒவ்வொன்றிலும் அது ஏற்பட்ட நாள்முதல் அதிலே குருசிஷ்ய பாரம்பரையாகப் பதவி ஏற்று அருளாட்சி நடத்திவந்த தலைவர்களின் வரன்முறையைத் தெரிவிக்கும் பட்டாவளி இருந்துவருகிறது. கிறிஸ்து பிறப்பதற்கு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே தொடங்கி ஜைனமதத்தின் கடைசித் தீர்த்தங்கரரான மகாவீரர் முதல் வரிசையாக வரும் ஜைன மடப் பட்டாவளிகள் சிலவற்றை ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ந்திருக்கிறார்கள் (இந்தியன் ஆண்டிகுவரி, 20, 21-ஆம் தொகுதிகள்). திருவள்ளூர் வீரராகவப்பெருமாள் கோயிலுக்குச் சகாப்தம் 1552, அதாவது கி. பி. 1630-ஆம் ஆண்டில், வீரராகவ சடகோப ஜீயர் என்பார் பொன் அளித்த செய்தியைத் தெரிவிக்கும் கல்வெட்டு ஒன்றை அந்தக்கோயிலிலிருந்து மக்கென்ஸியின் உதவியாளர்கள் பிரதி செய்திருக்கிறார்கள். (இந்தத் தொகுப்பின் 1107 நெ. சாசனம்). அந்தக் கோயில் அஹோபலமடத்தின் நிர்வாகத்தில் உள்ளது. அந்த மடத்தின் பதின்மூன்றாம் பட்டம் வகித்த வீரராகவ சடகோப ஜீயர் கி. பி. 1630-முதல் 1675-வரையில் இருந்தார் என்று கூறப்படுகிறது. இதிலிருந்து அந்தக் கோயிலுக்குப் பொன் அளித்த ஜீயர் அந்த மடத்தைச் சேர்ந்தவரே என்பது தெளிவாகும்; அன்றி மடத்து வமிசாவளியின் நம்பிக்கைத் தன்மையும் விளங்கும்.

விஜயநகர மன்னனான வீர நரசிம்மன் சகாப்தம் 1429-க்குச் சரியான கி.பி. 1506-ஆம் ஆண்டில் சதாசிவ சரஸ்வதியின் சிஷ்யரான மகாதேவ சரஸ்வதி என்பாருக்குக் குடியாந்தண்டலம் என்னும் கிராமத்தை அளித்தசெய்தியைத் தெரிவிக்கும் செப்பேட்டுச் சாசனம் ஒன்று (எபி. இந்திகா, 14-வால்யூம்) காஞ்சி காமகோடி மடத்தில் இருக்கிறது. அந்த மடத்துப் பீடத்தில் அமர்ந்திருந்த சங்கராசாரியர்களின் வரலாற்றைக் கூறும் 'குருராஜரத்னமாலிகா'என்னும் நூலிலிருந்து மகாதேவசரஸ்வதியைப் பற்றிய விவரம் தெரியவருகிறது. சாசனத்தில் கூறியுள்ளபடியே அவர் சதாசிவ சரஸ்வதியின் சிஷ்யராவர். அன்றி, அவருக்குச் சந்திரசூட சரஸ்வதி என்பவர் சிஷ்யராக இருந்தார் என்பதையும் தெரிவிக்கிறது அந்த நூல். சகாப்தம் 1444, அதாவது கி. பி. 1521-ல் சந்திரசூடருக்குக் கிருஷ்ணராயபுரம் கிராமத்தைக் கிருஷ்ணதேவராயர் தானம் செய்ததைத் தெரிவிக்கும் செப்பேட்டுச் சாசனம் உள்ளது. (ஷை) இவருக்குச் சந்திரசேகர சரஸ்வதி என்ற பெயரும் இருந்ததாகத் தெரிகிறது. கிருஷ்ணதேவராயர் ஆட்சியில் சகாப்தம் 1436, அதாவது கி. பி. 1514-ல், காஞ்சீபுரத்துக்குப் பக்கத்தில் உள்ள அம்பி என்னும் ஊர்க்கோயிலுக்கு அரசன் அளித்த நிவந்தத்தைத்தெரிவிக்கும் இந்தச் சந்திர சேகர சரஸ்வதியின் சாசனம் ஒன்றும் அந்தக் கோயிலிலே கிடைத்திருக்கிறது. கிருஷ்ணதேவராயரே சகாப்தம் 1450, அதாவது 1527-ஆம் ஆண்டில் உதயம்பாக்கம் கிராமத்தைச் சந்திரசேகர சரஸ்வதியின் சிஷ்யரான சதாசிவ சரஸ்வதிக்கு அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது (ஷை பதின்மூன்றும் வால்யூம்). குருபரம்பரைகளிலே சந்திரசூடர் என்பூரர் நேபாள மன்னனால் கௌரவிக்கப்பெற்ற செய்தி காணப்படுகிறது. நேபாள நாட்டு வரலாற்றிலிருந்தும் சோமசேகரானந்தர் என்னும் பெரியார் ஒருவர் கி.பி. 1503-ஆம் ஆண்டில் அந்நாட்டுக்கு விஜயம் செய்தார் என்பது தெரியவருகிறது. சந்திரசூடர், சந்திரசேகரர், சோமசேகரர் ஆகியவை ஒரே பொருளைக் கொடுக்கும் பெயர்கள். ஆகவே நேபாள சரித்திரத்தில் காணும் சோமசேகரானந்தர் என்பார் சந்திரசேகர சரஸ்வதியேயாவர் என்று கொள்வதில் தவறு ஒன்றும் இல்லை. இவற்றால் அவர் நேபாளம்போய்வந்த செய்தி உறுதியாவதுடன் வமிசாவளியின் மெய்ம்மைப்பாடும் விளங்கும்.

நேபாள நாட்டில் கலியுகம் பிறந்த நாள் முதல் ஆண்டுவந்த அரசர்களையும் அவர்களுடைய ஆட்சிக் காலங்களையும் தெரிவிப்பதாக உள்ள வமிசாவளியும் கிடைத்திருக்கிறது. (இ. ஆ., 13-வால்யூம், பக்கம் 114). காலமுறையிலே அதில் பல தவறுகள் காணப்படுகின்றனவென்பது உண்மைதான், சமகாலத்தில் ஆதிக்கியம் வகித்த வமிசபரம்

பரைகளை ஒன்றன்பின் ஒன்றாக வைத்துக் கூறும் தவறு அதிலும் உள்ளது. எனினும் அதுகூட ஆராய்ச்சிக்குப் பெரிதும் உபயோகமாக உள்ளது. பலசமயங்களில் அதில் காணும் சரித்திர நிகழ்ச்சிகள் கல்வெட்டுக்களால் உறுதியாகியுள்ளன. உதாரணமாக, அதிலே அந் நாட்டை ஆண்ட சூரிய வமிசத்தாருள் 18-ஆம் மன்னனான விருஷதேவனுக்கும் 23-ஆம் அரசனான வசந்த தேவனுக்கும் இடையில் ஆண்டவர்களாகக் காணும் ஆறு அரசர்களின் பெயர்கள் கல்வெட்டுக்களால் உறுதியாவதுடன் அவர்கள் அதே வரிசையில் ஆண்டதாகவும் தெரிய வருகிறது.

அவ்விதமே முற்காலத்தில் ஒவ்வொரு ராஜகாத்திலும் ராஜாவளிகள், அதாவது ராஜ்யபாரமேற்ற அரசர்களின் வரன்முறை இருந்திருத்தல் வேண்டும். இது தமிழ் நாட்டுச் சாசனங்களினின்றும் நமக்கு நன்கு விளங்கவில்லையாயினும், பக்கத்திலே தெலுங்கு கர்நாடக தேசங்களில் ஆண்ட அரசர்களுடைய சாசனங்களால் தெரியவருகின்றது.

உதாரணமாக, வேங்கி நாட்டை ஆண்டுவந்த கீழைச் சாளுக்கிய வமிசத்துச் சாசனங்களில், கி.பி. பதினோராம் நூற்றாண்டில் பொறிக்கப்பட்ட செப்பேடுகளிலும், கி. பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாதாபி (மேலை)ச் சாளுக்கிய வேந்தன் இரண்டாம் புலிகேசியின் தம்பியான குப்ஜ விஷ்ணுவர்த்தனால் அந்த வமிசம் நிறுவப்பெற்றகாலத்திலிருந்து சாசனகாலம் வரையில் ஆண்ட அரசர்களின் பெயர்கள், அவர்கள் அரசுசெலுத்திய கால அளவு முதலியனவரிசையாகக்கொடுக்கப்பட்டுள்ளன. ஏழாம் நூற்றாண்டுக்கும் பதினோராம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்துச் சாசனங்களை ஒன்று சேர்த்துக் கவனித்தாலும், அந்த விவரங்கள் ஒரே விதமாக உள்ளதை அறியலாம். ஒரு சாசனத்தில் உள்ளது போலவே மற்றொரு சாசனத்திலும் இருக்கும். அவற்றுள் ஒன்றிரண்டு இடங்களில் பேதங்கள் இருக்கின்றன. நேர் முறையில் இல்லாமல் பலாத்காரமாக நாட்டைக் கைப்பற்றிய இளைய பரம்பரையைச் சார்ந்தவர் முதலியோரை மூத்த பரம்பரையைச் சேர்ந்தவர்கள் கூறாமல் விலக்கியிருப்பது போன்ற வேறுபாடுகளே அவை. கலிங்க தேசத்தை அரசுபுரிந்த கீழைக் கங்க வமிசத்து அரசர்கள் அளித்தனவாகக் கிடைக்கும் சாசனங்களிலும் இதேபோல அந்த வமிசத்தின் ஆரம்பத்திலிருந்து நாட்டை ஆண்டுவந்த மன்னர்களின் பெயரும் அவர்களுடைய ஆட்சிக்காலமும் முறையாகக் கொடுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். ராஜகரத்திலே அத்தகைய ராஜாவளிகளை வைத்திருந்தாலே இவ்விதம் கொடுப்பது சாத்தியமாகும்,

காஞ்சீபுரத்துப் பல்லவமன்னர்கள் காலத்திலும் இத்தகைய தஸ்தா வேஜுகள் இருந்திருக்கவேண்டும். கி. பி. எட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இரண்டாம் பரமேச்வரவர்மன் இறந்துபோன பிறகு சிங்காதனம் ஏறுவதற்கு உரியவர் 'உபயகுல பரிசுத்தராக' யாரும் இல்லாமையால், மந்திரிகளும் மற்றப் பிரமுகர்களும் ஒன்று சேர்ந்து இளைய பரம்பரையைச் சேர்ந்த ஹிரண்யவர்மன் மகனை நந்திவர்மன் பல்லவ மல்லனைத் தேர்ந்தெடுத்தார்கள் என்று காஞ்சீபுரம் வைகுண்டப்பெருமாள் கோயிலில் உள்ள சாசனம் (தெ. இ. சாசனங்கள், வால்யூம் 4, சாசனம் 147 செ.) தெரிவிக்கிறது. பல்லவமல்லனுடைய கசாக்குடிச் செப்பேடுகளிலிருந்து அவனுடையவமிசாவளியும் நமக்குத் தெரிகிறது. ஏழுதலைமுறைகளுக்கு முன்னதாக மூத்தகிளையில் அரசுபுரிந்த ஸிம்ஹவிஷ்ணு மகாராஜாவின் தம்பியான புத்தவர்மனுடைய பெயரனுக்குப் பெயரனே ஹிரண்யவர்மனுவன் (ஷை இரண்டாம் வால்யூம்). இந்த விவரங்கள் அத்தகைய தஸ்தாவேஜுகளிலிருந்தே கிடைக்க முடியும்.

மேலைச் சாளுக்கியர்கள் வாதாபியைத் தலைநகராகக் கொண்டு ஆறும் நூற்றாண்டின் மத்தியிலிருந்து எட்டாம் நூற்றாண்டின் மத்தி வரையில் சுமார் இருநூறுவருஷகாலம் ஆண்டுவந்தனர். அவர்களுக்குப் பிறகு ராஷ்டிரகூடர்கள் அந்த நாட்டைக் கைக்கொண்டு இரண்டு நூற்றாண்டுகளுக்கு மேல் அரசு செலுத்தினர். அப்பால் சாளுக்கிய பரம்பரையினர் மறுபடியும் தலையெடுத்துத் தங்கள் முன்னோர்கள் இழந்த நாட்டைக் கைப்பற்றிக் கல்யாணபுரம் என்னும் நகரினின்றும் ஆண்டு வந்தனர். அவர்கள் பதினொராம் நூற்றாண்டின் முற்பகுதியில் கொடுத்த சாசனம் ஒன்றில் வாதாபிச் சாளுக்கியர்களுடைய பரம்பரையும் வீரப்பிரதாபங்களும் விரிவாக எழுதப்பட்டிருக்கின்றன அந்த அரசை மறுபடியும் பழைய நிலைக்குக் கொணர்ந்த இரண்டாம் தைலபனுடைய பெயரனை ஐந்தாம் விக்கிரமாதித்தியன் கி. பி. 1009-ஆம் ஆண்டில் அளித்த கவுட்டேம் செப்பேடுகளில் (இ.ஆ., வால்யூம் 16) வாதாபிச் சாளுக்கியர்களில் கடைசியாக அரசுபுரிந்த மன்னனிடமிருந்து தங்களுடைய வமிசாவளியையும் தொடர்ச்சியாகக்கொடுத்திருக்கக் காணலாம். வாதாபிச் சாளுக்கியர்களிலும் நேர்முறையில் வாராத மங்களேசன் ஆட்சியைக் குறிப்பிட்டு, அவன் அரசுக்கு உரியவனும் தன் தமையன் மகனுமான இரண்டாம் புலிகேசியின் பிரதிநிதியாகவே ராஜ்யபாரம் தாங்கினான் என்றும், புலிகேசிக்கு உரிய வயது வந்ததும் தருமப்படி அரசை அவனிடம் ஒப்படைத்துவிட்டான் என்றும் கூறுகிறது அந்தச் சாசனம். மங்களேசன் அரசுக்கு முறைப்படி உரிய

புலிகேசியை ஒதுக்கித் தன் மகனையே இளவரசனாக்கிய செய்தியை அது கூறாமல் மெழுகிவிடுகிறது.

சிற்றரசர் பதவி வகித்துவந்த வமிசங்களைச் சேர்ந்த சிலர் தங்களுக்குப் பேரரசர்களாக விளங்கியவர்களுடைய பரம்பரையைப் பற்றிய விவரங்களைக்கூட இதேபோல் எழுதிவைத்திருந்தனர் என்றும் தெரிகிறது. தென் கொங்கணத்தை ஆண்டுவந்த சிலாஹார வமிசத்து அரசர்களுடைய சாசனங்களிலிருந்து இது விளங்குகிறது. கல்யாணபுரத்தினின்றும் அரசு செலுத்திய மேலைச் சாளுக்கிய அரசனான சத்தியாசிரயன் ஆட்சியில் கி. பி. 1008-ஆம் ஆண்டில் சிலாஹார வமிசத்து ரட்டராஜன் வழங்கிய காரேபாட்டன் செப்பேடுகளில் ராஷ்டிரகூட மன்னர்களின் ஆட்சிக்காலத்தே சிலாஹாரவமிசம் முன்னணிக்கு வந்ததையொட்டிப் பேரரசர்களில் ராஷ்டிரகூட ஆட்சியை நிறுவிய தந்திதிர்க்கன் முதல் அவ்வமிசத்துக் கடைசி வேந்தனான இரண்டாம் கர்க்கராஜன் வரையில் அவர்கள் வமிசாவளி கொடுக்கப்பட்டிருப்பதோடு அவர்களுக்குப் பின்னால் ராஜ்யபாரம் தாங்கிய சாளுக்கியர்களின் விபரமும் காணப்படுகிறது. (எபி. இந்திகா, மூன்றாம் வால்யூம்.)

இவற்றை நோக்குங்கால், அக் காலங்களிலே அரசாங்கங்களில் ராஜகரத்து விஷயங்களைத் தெரிவிக்கும் சுவடிகளைத் தனியாகவே வைத்துப் பாதுகாத்து வந்தனர் என்று எண்ணவேண்டி இருக்கிறது. அந்த அந்த வம்சங்கள் நாட்டில் ஆதிக்கியத்தை இழந்துவிட்டாலும் அவ்வம்சத்தினர் அத்தகைய சுவடிகளைப் பாதுகாத்திருத்தல் வேண்டும்.

'பவர்சுவடி' என்று பெயர் பெற்றுள்ள கணித நூல் ஒன்று சுமார் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாயினும் நல்ல நிலைமையில் நமக்குக் கிடைத்திருக்கின்றது. அது காச்மீரத்துக்கு வடக்கே காஷ்கரியா என்னும் பிரதேசத்தில் ஒரு கட்டடத்தின் அஸ்திவாரத்தினின்றும் எடுக்கப்பட்டது; பூர்ஜ பத்திரத்தில் எழுதப்பட்டுள்ளது. இதனால் நன்றாய்ப் பாதுகாக்கப்பட்ட ராஜகரத்துச் சுவடிகளை ஐந்தாறு நூற்றாண்டுக் காலம் சிதிலமாகாமல் பாதுகாக்க முடியும் என்று நிச்சயமாகக் கொள்ளலாம்.

முன்னாளிலே ஒவ்வோர் அரசாங்கத்திலும் தினசரிக் குறிப்பு ஒன்று எழுதப்பட்டு வந்தது என்று தெரிகிறது. பேரரசாயினும் சரி, சிற்றரசாயினும் சரி, நாள்தோறும் நடந்த முக்கியமான சம்பவங்கள் அதிலே எழுதப்பட்டிருக்கும். பல சமயங்களில் அத்தகைய குறிப்புகளை எழுதுவதற்கெனத் தனி அதிகாரிகளும் இருந்தனர்

எனத் தெரிகிறது. அவை கிரந்தவாரி எனக் குறிக்கப்பெறும். சென்ற நூற்றுண்டின் ஆரம்பத்தில் கர்னல் மக்கென்ஸியின் உதவியாளர்கள் இத்தகைய கிரந்தவாரிகள் சிலவற்றைச் சேகரித்திருக்கிறார்கள். ஆனால் அவை எல்லாம் சமீபகாலத்தைச் சார்ந்தனவே. மராத்தியர் ஆட்சிக் காலத்து நாட்குறிப்புகள் (ரோஜ்நிசி), மொகலாயர் காலத்துக் குறிப்புகள் முதலியனவும் கிடைத்துள்ளன. ஆனால் அவற்றுக்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்தனவாக நம் நாட்டு ஹிந்து மன்னர்கள் ஆட்சியிலே எழுதப்பட்டவை இதுகாறும் கிடைக்கவில்லை.

பிற்காலத்தில் பேஷ்வாக்கள் முதலியோர் வைத்திருந்த கணக்குகளைப் பார்த்து, பழைய காலத்திலும் அவ்விதமே இருக்குமோ என்று ஒருவாறு எண்ணலாம். பேஷ்வாக் குறிப்புகளில் ஒவ்வொரு நாள் சம்பவங்களும் தொடர்ச்சியாக, இலாக்காவாரியாகப் பிரிக்காமல், எழுதப் பட்டுள்ளன.

இத்தகைய வரலாறுகளை அவர்கள் அவ்வப்பொழுது எழுதிச் சேர்த்துக்கொண்டே போயிருத்தல் வேண்டும். சோழ பாண்டிய மன்னர்களின் சாசனங்களைக் கவனித்தால் இது நன்கு விளங்கும். அவற்றுள் காணப்படும் மெய்க்கீர்த்தி அந்த அந்த அரசர்களது ஆட்சியின் ஆண்டை ஒட்டியே வளர்ந்து வருவது தெரியும். ஓர் அரசனுடைய இரண்டாம் ஆண்டுச் சாசனத்தில் உள்ள மெய்க்கீர்த்தியை விட அவனுடைய மூன்றும் ஆண்டுச் சாசனத்தில் உள்ளது நீளமாகவும் அதிகமான செய்திகளைத் தெரிவிப்பதாகவும் காணப்படும். ராஜாங்க வித்துவான்கள் மன்னர்களுடைய புகழ்களை அவ்வப்பொழுது நிகழுந்தோறும் பாடிச் சேர்த்துக்கொண்டே வந்திருக்கிறார்கள். இவ்விதம் வளர்ந்து வரும் மெய்க்கீர்த்தியில் பழைய பாகங்களை மாற்றுமல் மேலே சேர்த்துக்கொண்டு போவது குறிப்பிடத்தக்கது.

கிறிஸ்து பிறப்பதற்கு முன்பு கலிங்க தேசத்து அரசனாக விளங்கிய காரவேலனது ஹாதிகும்பாச் சாசனத்தையும் இத்தகைய மெய்க்கீர்த்திபோலவே கொள்ளவேண்டும். பிறந்தது முதல் அவன் ஆட்சியின் பதின்மூன்றும் வருஷம் வரையில் அவன் வாழ்க்கையை வருணிகிறது அச் சாசனம். மன்னன் தன் வாழ்நாளின் முதல் பதினைந்து வருஷங்களை விளையாட்டுக்களிலும், பிறகு ஒன்பது வருஷங்களை யுவராஜனாகவும் கழித்து இருபத்துநான்காம் ஆண்டின் முடிவில் முடிசூட்டப்பெற்றான் என்பதைக் கூறி அப்பால் அவன் ஆட்சியில் ஒவ்வோர் ஆண்டிலும் நடந்த நிகழ்ச்சிகளை முறையாக விவரித்துச் செல்கின்றது அது. ஹர்ஷ சரித்திரம்போல இதுவும் ராஜ கவியால் எழுதப்பட்டது

போலும். எக்காரணத்தினாலோ அது அரசன் ஆட்சியின் பதின்மூன்றாம் ஆண்டுடன் நின்றுவிட்டது. (எபி. இந்திகா, இருபதாம் வால்யூம்).

ஆனால் புதிய அரசன் ஒருவன் பட்டமேற்றவுடன் அவனுக்காகப் புதிய மெய்க்கீர்த்தி ஒன்றைச் சிருஷ்டிக்கும் வழக்கத்துக்கு மாறாக வாதாபிச் சாளுக்கியர்கள் தங்கள் பிரசஸ்தியில் முன்னோர்களைப்பற்றிய பகுதியை அப்படியே வைத்துக் கொண்டு மேலே எழுதிச் சேர்த்துக் கொண்டே போயிருக்கிறார்கள்.

இவ்விதம் ராஜகரத்து வரலாறுகளை எழுதியவர்கள் சுவடிகளையும் ஆதாரங்களாகக் கொண்டனர்போலும். இப்பொழுது உள்ளது போலவே முற்காலத்திலும் அரசாங்கத்தில் தஸ்தாவேஜுகளைப் பாதுகாத்து வந்திருத்தல் வேண்டும்.

சோழ பாண்டிய சாசனங்களிலிருந்து அந்நாளிலே இராஜ்ய நிர்வாகம் எவ்வாறு நடந்து வந்ததென்பதை நாம் ஓர் அளவு தெளிவாக அறியலாம். முற்காலத்தில் அரசாங்கம் இப்பொழுது உள்ளது போலவே பல இலாக்காக்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. எனினும், அவற்றுள் ஒன்றுக்கொன்று நெருங்கிய சம்பந்தம் பெற்றிருந்தது. ஒவ்வோர் இலாக்காவிலும் உயர்தர அதிகாரிகள் பலர் இருந்திருக்கின்றனர். அத்தகையோரின் பதவிப் பெயர்களை நாம் கல்வெட்டுக்களிலே காணலாம். பெருந்தரத்து அதிகாரிகளுக்கேற்பச் சிறுதரத்து உத்தியோகஸ்தர்களும் இருந்திருப்பார். அக்காலத்திலே அரசாங்கக் கணக்குகளை எவ்விதம் வைத்திருந்தார்கள் என்பது நமக்குத் தெரியாது. எனினும் அவை இருந்துவந்தன என்பது மட்டில் நிச்சயம். நாடு முழுவதும் பயிரிடும் நிலங்களை மிகவும் நுணுக்கமாக அளவிட்டுத் தரம் பிரித்து வகைசெய்து கணக்கு வைத்திருந்தனர் என்றும் கல்வெட்டுக்களிலிருந்து தெரியவருகிறது.

நாடு, ஊர் போன்ற சபைகளுக்குத் திருமந்திரவோலை அனுப்பும் உத்தரவுகள் சரிவர நிறைவேற்றப்பட்டனவா என்பதைக் கவனித்து அறிய மூலப் பிரதிகளை அரசாங்கத்தில் வைத்திருத்தல் வேண்டும். அதேபோலச் சபையாரும் தாங்கள் நிறைவேற்றும் காரியங்களுக்கு ஆதாரங்களாகப் பின்னால் தணிக்கை செய்பவர்களுக்குக் காண்பிப்பதற்கு அந்த உத்தரவுகளைக் காப்பாற்றி வைக்கவேண்டும்.

ஓர் அரசாங்கம் மற்றொன்றுடன் செய்துகொள்ளும் உடன்படிக்கை முதலியன சரிவர நடைபெறுகின்றனவா என்பதைக் கவனிக்க இருதரத்தாரிடமும் அவற்றின் பிரதிகள் இருத்தல் வேண்டும். அதே

போலச் சிற்றரசர்கள் செலுத்தும் கப்பம், நாட்டில் வசூலாகும் வரிப் பணம் முதலியவற்றுக்கும் சம்பந்தப்பட்டவர்களிடம் கணக்குகள் இருக்கவேண்டும். இவற்றுள் பல நிரந்தரமாகப் பாதுகாக்கப்பட வேண்டியவை. ஆயினும் இவை ஒன்றும் இப்பொழுது கிடைக்கவில்லை.

முதலாம் இராஜேந்திரன் அளித்த திருவேலங்காட்டுச் செப்பேடுகளில் அம்மன்னன் வாய்மொழியாகத் தன்னுடைய ஆட்சியின் ஆறும் ஆண்டு எண்பத்தெட்டாவது நாள் அளித்த உத்தரவு முப்பத்திரண்டு நாள் கழித்து, அதாவது அதே ஆண்டு நூற்றிருபதாம் நாள் கணக்கில் எழுதப்பட்டது என்று கூறப்பட்டுள்ளது. (தெ. இ. சாசனங்கள், இரண்டாம் வால்யூம்). தென் ஆர்க்காடு ஜில்லா எண்ணாயிரம் என்னும் இடத்திலிருந்து கிடைக்கும் முதலாம் இராஜாதிராஜனுடைய காலத்துச் சாசனம் (1917-ஆண்டு 330-நெ.) ஒன்றில் அவன் ஆட்சியின் இருபத்தேழாம் ஆண்டு நூற்று முப்பத்தேழாம் நாள் அளிக்கப்பெற்ற உத்தரவு மூன்று வருஷம் நூற்று மூன்று நாள் கழித்து, அதாவது முப்பதாம் ஆண்டு இருநூற்று நாற்பதாம் நாள் அந்த ஊர்ச் சபைக்கு வந்து சேர்ந்ததாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. அதேபோலத் திருப்பூவனம் செப்பேடுகளில் ஸ்ரீ கோச்சடையவன்மரான 'திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலசேகரதேவர்க்கு யாண்டு 13-ஆவது நாள் நாலாயிரத்து முந்நூற்று அறுபது' என்று காணப்படுகிறது. (எபி. இந்திகா, இருபத்தைந்தாம் வால்யூம்). இவற்றைக் கவனித்தால் ராஜகரத்துக் கணக்குகளிலும் குறிப்புகளிலும் நாட்களேயும் கணக்கிட்டு எழுதிவந்தனர் என்பது விளங்கும்.

அவர்கள் அவ்விதம் எழுதிச் சென்ற கணக்குகளும், குறிப்புகளும் கிடைத்துவிட்டால் போதும். நம் நாட்டின் சரித்திரம் முழுவதையும் பல துறைகளிலும் விரிவாக எழுதிவிடலாம். அது சுலபமான காரியமாக இருக்காதுதான். கட்டுக் கட்டாகக் கிடைக்கக் கூடிய அவற்றுள் புகுந்து ஆராய்ந்து தேடவேண்டும். எப்படியிருந்தால் வன்ன? அவை இப்பொழுது கிடைக்கவில்லை. அதனாலே யன்றோ நாம் வேறு பலவகை ஆதாரங்களைத் தேடி அலைகிறோம்?

இத்தகைய குறிப்புகளுக்குப் பதிலாக நமக்குக் கிடைக்கும் சாசனங்களையே கொள்ளவேண்டும். நாட்டுச் சரித்திரத்திற்குப் பலவகை ஆதாரங்கள் இருந்தாலும், அவற்றால் அறியப்படும் உண்மைகளை நிர்ணயம் செய்து நிச்சயமாக்கச் சாசனங்களே பெரிதும் உதவுகின்றன. சாசனங்கள் இல்லாவிடின் நம் நாட்டுச் சரித்திரத்துள் பெரும் பகுதி இருள் சூழ்ந்து விளங்காமல் போயிருக்கும். சாசனங்கள் சரித்திரத்தின் பல துறைகளுக்கும் உபயோகப்படக் கூடியனவாம்.

## 4. இலக்கிய சாசனங்களும் சரித்திரக் கல்வெட்டுகளும்

நம் நாட்டில் கிடைக்கும் சாசனங்களை இராஜகரத்துச் சாசனங்கள், மக்களைப்பற்றியவை என இருவகையாகப்பிரிக்கலாம். அதே போலத் தான சாசனங்கள், தான சாசனங்கள் அல்லாதவை எனவும் இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

இகலோகத்தில் புகழும், பரலோகத்தில் புண்ணியமும் கிடைக்க வேண்டி அளிக்கப்பட்ட தானங்கள் நம் நாட்டுக் கோயில்களுக்கும் தர்ம ஸ்தாபனங்களுக்கும் மற்றையோருக்கும் கொடுக்கப்பட்டனவாகும். இதனால் தான சாசனங்களையும் மதம் சம்பந்தமாகக் கொடுத்த தானங்கள், இதர தானங்கள் என இருவகைகளாகப் பிரிக்கலாம்.

தானங்கள் அல்லாத பிற செய்திகளைத் தெரிவிக்கும் சாசனங்களையும் சமூக வாழ்க்கையைப் பற்றியவை, தனிப்பட்டவர்களைக் குறித்தவை என இரண்டாக வகுக்கலாம். குளம் தொட்டது, பள்ளிக்கூடம் ஆதுல சாலை முதலியன நிறுவியது ஆகியவற்றைத்தெரிவிப்பவை; நாட்டின் மக்கள் தங்களுக்குள் செய்துகொண்ட உடன்படிக்கைகள் முதலியவை முதல் வகுப்பைச் சார்ந்தவை. வீரக்கல் போன்று இறந்தவர்களுக்கு எழுப்படும் ஞாபகச் சின்னங்கள், மக்கள் தங்களுக்குள் செய்துகொண்ட நிலப் பரிவர்த்தனைகள், அடிமைச் சீட்டுகள் முதலியன இரண்டாம் பிரிவைச் சாரும்.

இனி இந்த இரண்டு பெரும் பிரிவுகளையும் சேராமல் தனித்து நிற்கும் சாசனங்கள் சில உண்டு. அவை இலக்கிய சாசனங்களும், சரித்திர நிகழ்ச்சியைத் தெரிவிக்கும் சாசனங்களும் ஆகும்.

### இலக்கிய சாசனங்கள்

பண்டைக் காலத்தில் நூல்களைப் பனையேடுகளில் எழுதுவதைப் போலவே செப்பேடுகளிலும் எழுதிவந்தார்கள். இறையனார் அகப்பொருளுரையின் முன்னுரையினின்றும் இது நமக்குத் தெரிகிறது. 'பாண்டி நாடு பன்னீராண்டு பஞ்சத்தால் வாடியது. அதனால் புலவர்கள் பிறநாடுகளை அடைந்தனர். பஞ்சம் தீர்ந்தபிறகு, அவர்களில் பலர் பாண்டிய நாட்டுக்குத் திரும்பினர். எனினும், அவர்களுள் பொருள்நூல் வல்லார் இல்லை. அதனை அறிந்த மன்னன் மனம் தளர்ந்து இக்குறையை ஆலவாய் அவிர்சடைக் கடவுளிடம் முறையிட்டான். இறையனாரும் களவியல் என்னும் நூலை இயற்றிச் செப்பேடுகளில் எழுதி இரவில் தம் பீடத்தின் கீழ் இட்டனர்.' இச்செய்தியைத் தெரிவிக்கின்றது அந்த நூலின் உரைப்பாயிரம்.

இலக்கியங்களையும் அழிந்துபோகாமல் காக்க முன்னாளிலே அவற்றைச் செப்பேடுகளில் பொறித்து வந்தார்கள் என்பது இவ்வுரையால் தெரிகிறது. இதேபோன்ற விஷயங்களைத் தெரிவிக்கும் கர்ணபரம்பரைச் செய்திகள் நாட்டின் வேறு பகுதிகளிலும் காணப்படுகின்றன. குஷான வமிச அரசனான கனிஷ்கன் புத்தமதப் பெரியார்களின் பேரவை ஒன்றுகூட்டி அவர்களைக் கொண்டு (புத்தமதத்தின் மூலக் கிரந்தமான்) திரிபிடகத்துக்கு வியாக்கியானம் எழுதச் செய்து அதைச் செப்பேடுகளிலே பொறித்து அவற்றைக் கட்டடத்திலேவைத்து மேலே ஸ்தூபம் ஒன்றை எழுப்பிப் பாதுகாத்தான் என்று கி. பி. ஏழாம் நூற்றாண்டின் மத்தியில் நம் நாட்டுக்கு வந்திருந்த சீன யாத்திரிகர் யுவான் சுவாங் தம்முடைய குறிப்புகளில் எழுதியிருக்கிறார். பிற்காலத்தில் சாயணர் என்பவர் வேதங்களுக்கு எழுதிய பாஷியத்தையும் அதேபோலச் செப்பேடுகளில் பொறித்து வைத்தார் என்ற கர்ணபரம்பரைச் செய்தி இருப்பதை மாக்ஸ்-முல்லர் என்னும் ஐரோப்பிய ஆராய்ச்சியாளர் தம்முடைய ரிக்வேதப் பதிப்பில் (முதல் வால்யூம், முன்னுரை, 17-ஆம் பக்கம்) குறிப்பிட்டிருக்கிறார்.

சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் காம்பெல் என்னும் ஆசிரியர் தம்முடைய 'தெலுங்கு வியாகரணம்' என்னும் ஆங்கில நூலில் பின்வருமாறு எழுதியுள்ளார். "திருப்பதி மலைக் கோயிலில் ஒரு பிராமண வமிசத்தாருடைய பாதுகாப்பில் ஆயிரம் செப்பேடுகளுக்குமேல் உளவென்றும், அவற்றில் பல நூல்கள் எழுதப்பட்டுள்ளனவென்றும் கேள்விப்பட்டேன். அதன்மீது இந்தியர் ஒருவரை அனுப்பி அவற்றைப் பார்வையிடச் செய்தேன். ஆனால் அவற்றுள் வியாகரண நூல் ஒன்றைத் தவிர, மற்றவை அம்மலையில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள பெருமானைப் புகழ்ந்து பாடிய பாசுரங்களாகவே காணப்பட்டன. அவ்விலக்கண நூல் மட்டும் பிரதி செய்யப்பட்டது." (1820-ஆம் வருஷம் வெளியான இரண்டாம்பதிப்பு, 13-பக்கம்: டாக்டர் பர்னெல் எழுதிய தென்னிந்தியப் பிராசீனலிபி என்னும் ஆங்கில நூலின் 86, 87-ஆம் பக்கங்களில் மேற்கோளாகக் காட்டியுள்ளது.) இங்கே குறிக்கப்பட்டவர்கள் தள்ளப்பாக்கம் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ஆவார். அவை இப்போதும் திருப்பதி தேவஸ்தானத்தில் சங்கீர்த்தன பண்டாரத்தில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. கி. பி. பதினைந்து, பதினாறும் நூற்றாண்டுகளில் விஜயநகர மன்னர்களின் ஆதரவில் வாழ்ந்த மூன்று கவிஞர்கள் இயற்றியவை. சுமார் மூவாயிரம் செப்பேடுகள் உள்ளன. (ஒரு சமயம் 'வண்டிக்கணக்காக உள்ளன' என்றும் வருணிக்கப்பட்டுளளது.) வேங்கடத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் மீது சங்கீர்த்தனம் என்னும் பாணியில் இயற்றிய பாடல்களும் வேறு புல

இவ்விதம் சரித்திர நூல்களாக உள்ளவற்றைத் தவிர, பிற நூல்களிலும் அவை எழுதப்பட்ட காலங்களில் ஆண்ட அரசர்களைப்பற்றி மட்டுமேயன்றி அம் மன்னர்களுடைய முன்னோர்களைப் பற்றிய விவரங்களும் காணப்படுவது எங்ஙனம்? அவை யாவும் உண்மையாக இருக்க முடியுமா? அவர்கள் அந்த விவரங்களையும் மன்னர்களின் வமிசாவளியையும் எவ்விதம் அறிந்தனர்? இத்தகைய கேள்விகள் உண்டாவது இயற்கையே.

நம் நாட்டவர்களுக்கு வமிசங்களின் கிளைகளைப் பற்றிய விவரங்கள் நன்றாகத் தெரிந்திருப்பது மிகவும் சாதாரண விஷயம். இன்றைக்கும் பல குடும்பங்களில் ஏழு தலைமுறைகளுக்கு மேற்பட்ட வமிசாவளிகள் இருப்பதை நாம் காணலாம். ஒரே குடும்பம் பலவாறாய்ப் பிரிந்து போய்விடினும் சுபாசுப காரியங்களுக்கு அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ஒன்றுசேர வேண்டியதைக் கருதியே அங்ஙனம் வைக்கப்பட்டிருக்கிறது போலும். அன்றி, அவை லௌகிகமாகவும் மானியம் போன்ற சொத்துக்களின் உரிமை, அநந்தர வாரிசு பாத்தியதை முதலியவற்றை நிலைநிறுத்தவும் உபயோகப்படக் கூடியன.

நம் நாட்டில் உள்ள முக்கியமான மடம் ஒவ்வொன்றிலும் அது ஏற்பட்ட நாள்முதல் அதிலே குருசிஷ்ய பாரம்பரையாகப் பதவி யேற்று அருளாட்சி நடத்திவந்த தலைவர்களின் வரன்முறையைத் தெரிவிக்கும் பட்டாவளி இருந்துவருகிறது. கிறிஸ்து பிறப்பதற்கு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே தொடங்கி ஜைனமதத்தின் கடைசித் தீர்த்தங்கரரான மகாவீரர் முதல் வரிசையாக வரும் ஜைன மடப் பட்டாவளிகள் சிலவற்றை ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ந்திருக்கிறார்கள் (இந்தியன் ஆண்டிகுவரி, 20, 21-ஆம் தொகுதிகள்). திருவள்ளூர் வீரராகவப்பெருமாள் கோயிலுக்குச் சகாப்தம் 1552, அதாவது கி. பி. 1680-ஆம் ஆண்டில், வீரராகவ சடகோப ஜீயர் என்பார் பொன் அளித்த செய்தியைத் தெரிவிக்கும் கல்வெட்டு ஒன்றை அந்தக்கோயிலிலிருந்து மக்கென்ஸியின் உதவியாளர்கள் பிரதி செய்திருக்கிறார்கள். (இந்தத் தொகுப்பின் 1107 நெ. சாசனம்). அந்தக் கோயில் அஹோபிலமடத்தின் நிர்வாகத்தில் உள்ளது. அந்த மடத்தின் பதின்மூன்றாம் பட்டம் வகித்த வீரராகவ சடகோப ஜீயர் கி. பி. 1630-முதல் 1675-வரையில் இருந்தார் என்று கூறப்படுகிறது. இதிலிருந்து அந்தக் கோயிலுக்குப் பொன் அளித்த ஜீயர் அந்த மடத்தைச் சேர்ந்தவரே என்பது தெளிவாகும்; அன்றி மடத்து வமிசாவளியின் நம்பிக்கைத் தன்மையும் விளங்கும்.

குடுமியான்மலைக்குப் பக்கத்திலே உள்ள திருமெய்யத்திலும் குடைவரைக் கோயிலுக்கு வலதுபுறத்தின் மலைச்சரிவில் மற்றொரு சங்கீதக் கல்வெட்டு காணப்படுகின்றது. அது குடுமியான்மலைக் கல்வெட்டில் காணப்படும் வர்ணத்தினின்றும் வேறானது. எனினும் பிற்காலத்தில் மாறவர்மன் சுந்தரபாண்டியன் என்பான் 'பாஷை புரியாத கல்வெட்டு' என்று அதை அழித்துவிட்டு அந்த இடத்தில் சிவன் கோவிலுக்கும் விஷ்ணு கோவிலுக்கும் ஏற்பட்ட ஓர் உடன்படிக்கையை வெட்டுவித்தான் (புதுக்கோட்டைச் சாசனங்கள், 340, 341).

எனினும் பழைய கல்வெட்டின் பகுதிகள் சிற்சில அங்கங்கே தென்படுகின்றன. அவற்றுள் ஷட்ஜ, காந்தார, தைவத முதலிய சொற்கள் காணப்படுகின்றன. இவ்வெழுத்துக்களும் குடுமியான்மலைக் கல்வெட்டு எழுத்துக்களையே ஒத்திருக்கின்றன.

தஞ்சை ஜில்லா சீர்காழி தாலுகாவில் கொறடாச்சேரி என்னும் ரயில்வே ஸ்டேஷனுக்கு இரண்டுமைல் தெற்கேயுள்ள திருவிடைவாயில் என்னும் ஊரில் இருக்கும் புண்ணியகோடீச்வரர் கோயிலில் அங்கே எழுந்தருளியிருக்கும் பெருமானைப்பற்றித் திருஞானசம்பந்தர் பாடியதாகக் கூறப்படும் பதினொரு பாடல்களை உடைய பதிகம் ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது. (1918-ஆம் ஆண்டு 8 செ. கல்வெட்டு).

உமாபதி சிவாசாரியார்,

"பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிகமுந்நூற்று
எண்பத்து நான்கினை விலக்குதிரு முறைமூன்று"

(திருமுறைகண்ட புராணம், 25)

என்று கூறுகிறார். அதனால், தேவாரத்துள் சம்பந்தருடைய பதிகங்கள் முந்நூற்று எண்பத்து நான்கு அடங்கியிருந்தன வென்பது பெறப்படும். ஆயினும், இக் கல்வெட்டுக் கிடைப்பதற்கு முன்னர் அச்சிட்ட பதிப்புகளில் சம்பந்தர் வாக்காக முந்நூற்று எண்பத்து மூன்று பதிகங்களே இருந்தன. அவற்றுள் இக்கல்வெட்டில் கண்ட பதிகம் சேரவில்லை.

இதைப்போன்ற பதிகக் கல்வெட்டு வேறு எந்த இடத்திலும் கிடைக்கவில்லை. இதனால் வேறு விதமாகவும் ஊகிக்கலாம். சம்பந்தர் பதிகங்களில் ஒன்று குறைவாக இருப்பது, இந்தக் கல்வெட்டு பொறிக்கப்பட்டதற்கு முன்னதாகவே காணப்பட்டிருத்தல்வேண்டும் என்றும், அவ்விதம் காணமற் போனது இதுதானா என்பதில் அபிப்பிராய பேதம் இருந்திருத்தல்கூடும் என்றும் சொல்லலாம்.

சாசனத்தில் கண்ட பதிகத்தில் சம்பந்தருடைய மற்றப் பதிகங் களைப் போலவே ஒவ்வொரு பாட்டிலும் ஒரு பாதியில் அந்த ஊரைப் பற்றிய வர்ணனையும், மற்றப் பாதியில் சிவபெருமானைப் பற்றிய புகழும் பாடப்பட்டுள்ளன. அன்றி, சம்பந்தருடைய வழக்கமான கடை காப் பும் இந்தப் பதிகத்திலே இருக்கிறது. ஆதலால் ஏடுகளில் கிடைக்காம லிருந்த பதிகமே கல்வெட்டு மூலமாக நமக்குக் கிடைத்துள்ளது என்று துணியலாம். (மிதிக் சொஸைட்டி ஜர்னல், இருபத்து நான்காம் வால் யூம், பக்கம் 160.)

திருச்சிராப்பள்ளியில் மலைமேலுள்ள குடைவரைக் கோயிலின் பின் சுவரில் ஒரு கல்வெட்டு உள்ளது. அது சுமார் கி. பி. 1100-ஆம் ஆண்டுக்கு அணித்தான காலத்தைச் சார்ந்த தமிழ் எழுத்துக்களால் பொறிக்கப்பட்டுள்ளது என்பர். சிவபெருமான்மீது பாடிய கலித்துறை யந்தாதி ஒன்றைக் கொண்டுள்ளது, அச் சாசனம். (தெ. இ. சாசனங் கள், நான்காம் வால்யூம், 167 நெ. சாசனம்). அந்த அந்தாதியின் ஆசிரிய ஞன நாராயணன் என்னும் கவியைப் பற்றிய வரலாற்றை அக் கல் வெட்டின் கடைசியிலுள்ள பின்வரும் பாடல்கள் தெரிவிக்கின்றன.

“மற்பந்த மார்பன் மணியன் மகன்மதில் வேம்பையர்கோன்
நற்பந்த மார்தமிழ் நாரா யணனஞ் சிராமலைமேற்
கற்பந்த னீழலில் வைத்த கலித்துறை நூறுங்கற்பர்
பொற்பந்த நீழ லரன்றிருப் பாதம் பொருந்துவரே”

“மாட மதுரை மணலூர் மதில்வேம்பை
கோடமர் சேய்ஞலூர் குண்டூரிந்—நீடிய
நற்பதிக்கோ ஞரா யணனஞ் சிராமலைமேற்
கற்பதித்தான் சொன்ன கவி.”

இவ்வந்தாதி சொல் நயம், பொருள் நயம் கொண்டு மிக்க அழகாகப் பாடப்பட்டுள்ளது. சமீபத்திலே பண்டித மு. இராகவையங்கார் அவர் களால் இது தருமபுர ஆதீனத்தின் வெளியீடாகப் பதிப்பிக்கப்பெற் றுள்ளது.

விஜயநகர வேந்தனை முதலாம் வேங்கடபதிதேவ மகாராயருக்கு ஆசாரியாக விளங்கிய கோடிகன்யாதானம் லக்ஷ்மீகுமாரதாதாசாரியார் ஐயங்கார்குளத்தில் தாதசமுத்திரம் என்ற பெயரில் ஒரு குளம் தோண்டி அதன் கரையில் அனுமாருக்கு ஒரு கோயிலும் எடுப்பித்தார். அங்கே பிரதிஷ்டித்த அனுமாரைப் புகழ்ந்து இருபது சுலோகங்கள் கொண்டதாக ஹநுமத்விம்சதி என்ற ஸம்ஸ்கிருத ஸ்தோத்திரம் ஒன்

றையும் அவர் இயற்றினர். அது அந்தக் கோயிலிலே கல்வெட்டாகப் பொறிக்கப்பட்டுள்ளது. (1923-ஆம் வருஷத்து 92 நெ. கல்வெட்டு). அது இன்னும் காஞ்சீபுரம் வரதராஜர் கோயிலிலே கர்ப்பகிருகமான அஸ்திகிரியின் கிழக்கு வடக்குச் சுவர்களிலும், தாயார் ஆலயத்துச் சுவர்களிலும் (1919-ஆம் ஆண்டு, 651 நெ. கல்வெட்டு), வெளிக் கோபுரத்திலும் பொறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். மக்கென்ஸியின் உதவியாளர்களும் இதைப் பிரதி செய்திருக்கிறார்கள். இது ஜர்னல் ஆப் ஓரியண்டல் ரிஸர்ச் பத்திரிகை, பதினெட்டாம் வால்யூமில் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

சிதம்பரம் ஸ்ரீநடராஜர் கோயிலின் கிழக்கு மேற்குக் கோபுரங்களில் அழகான சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் பல நடன உருவங்கள்: நாட்டிய சாஸ்திரத்தில் காணும் நிலைகளை எடுத்துக் காட்டுவனவாக உள்ளன. பரதநாட்டிய சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கும் நூற்றெட்டு வகைகளையும் விளக்கிக்காட்டும் அந்தச் சிற்பத்தில் ஒவ்வொரு மாடத்தின் மீதும் அந்தவகையைத் தெரிவிக்கும் சுலோகம் கிரந்த எழுத்தில் பொறிக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கோபுரங்களும் அவற்றில் காணும் சிற்பங்களும் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் மத்தியில் கோப் பெருஞ்சிங்கன் காலத்தில் ஏற்பட்டவை. (சிலாசாசன அறிக்கை, 1914-ஆம் ஆண்டு). அந்தச் சுலோகங்களுக்கும் அச்சிட்ட பரத நாட்டிய சாஸ்திரச் சுலோகங்களுக்கும் பாடபேதங்கள் காணப்படுகின்றன. அருமை வாய்ந்த இச் சுலோகங்கள் விளக்கப் படங்களுடன் டாக்டர் பி. வி. நாராயணசாமி நாயுடு அவர்களால் வேறு இருவருடைய கூட்டுறவோடு தாண்டவலக்ஷணம் என்ற பெயரில் தனி வெளியீடாகப் பிரசுரிக்கப்பட்டுள்ளது.

காஞ்சீபுரத்திலே கச்சப்பேசுவரர் கோயிலில் துர்க்கை சந்நிதியில் உள்ள மண்டபத்தின் தூணில் சூர்ய சதகம் என்னும் வடமொழி நூலின் முதல் ஆறு சுலோகங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. மயூர கவியால் எழுதப்பெற்ற அந் நூலின் முதல் ஆறு சுலோகங்கள் மந்திரசக்தி வாய்ந்தவை என்ற ஓர் எண்ணம் நிலவிவருகிறது. பதினோராம் நூற்றாண்டு எழுத்துக்களில் உள்ள அச்சாசனம் யாரோ ஒரு பக்தனால் உண்டாக்கப்பட்டதுபோலும் (1921-ஆம் ஆண்டு 81 நெ. கல்வெட்டு).

இவ்விதமான இலக்கிய சாசனங்கள் தமிழ்நாட்டில் மட்டுமின்றி இந்தியாவின் பிறபாகங்களிலும் கிடைக்கின்றன. மத்திய இந்தியாவிலே தாரா நகரத்தில் (Dhar) பாரிஜாத மஞ்சரி அல்லது விஜயஸ்ரீ என்னும் நாடிகை அதாவது நான்கு அங்கங்களைக் கொண்ட நாடகவகையின்

முதல் இரண்டு அங்கங்களைக் கொண்ட கல்வெட்டு ஒன்று இருக்கின்றது. பரமார வமிசத்து அரசனை அர்ச்சுனவர்மனைக் கதாநாயகனாகக் கொண்டு ராஜகுருவான மதனன் என்னும் கவியால் அது கி. பி. 1200-ஆம் ஆண்டுக்கு அணித்தாக இயற்றப்பெற்றது. (எபி. இந்திகா, எட்டாம் வால்யூம்.)

சாஹமான வமிசத்து அரசனை விக்ரஹராஜனைக் குறித்து ஸோமதேவர் என்பவர் 'லலித விக்ரஹராஜ நாடகம்' என்று ஒரு நாடகம் எழுதியிருக்கிறார். அந்த விக்ரஹராஜனே 'ஹரகேளிநாடகம்' என்பதை இயற்றியிருக்கிறான். இவ்விரண்டும் கி. பி. 12-ஆம் நூற்றாண்டின் மத்தியில் எழுதப்பட்டவை; சரித்திர சம்பந்தமான நாடகங்கள் என்றும் கூறப்படுகின்றன. இந்த இரண்டு நாடகங்களின் பாகங்கள் ஆஜ்மீரில் உள்ள கற்களில் பொறிக்கப்பட்டுள்ளன. (இ. ஆ., இருபதாம் வால்யூம்).

தாரா நகரத்திலேயே மகாவிஷ்ணுவின் கூர்மாவதாரத்தைத் துதித்து 'அவனி கூர்ம சதகம்' என்று எழுதிய பிராகிருத நூல்கள் இரண்டு பொறிக்கப்பட்ட வேறு கல்வெட்டுகளும் காணப்படுகின்றன. அவை போஜராஜனைப் பாராட்டி இயற்றப்பட்டவை. (ஷை) அவ்விரு நூல்களில் ஒவ்வொன்றும் நூற்றெண்பது சுலோகங்கள் கொண்டது. பூமியின் பாரத்தைக் கூர்மம் (ஆமை) போல் வேறு யாரும் தாங்கியதில்லை என்றும் அந்த ஆமையைப் பெற்ற தாயைப்போன்ற பாக்கியசாலியான தாய் வேறுயாரும் இல்லையென்றும் முதல் சதகம் தெரிவிக்கிறது. போஜராசன் தன் எதிரிகளை வென்று பூபாரம் தாங்குவதால் அந்தக் கூர்மத்துக்கும் ஓய்வு ஏற்பட்டுவிட்டது என்று இரண்டாம் சதகம் தெரிவிக்கிறது. போஜாராஜனே அந்த இரண்டு சதகங்களையும் இயற்றினான் என்று அவற்றின் இறுதிச் செய்யுள்கள் தெரிவிக்கின்றன.

இந்த நூல்கள் யாவும் கல்வெட்டுக்கள் மூலமாகவே நமக்குக் கிடைத்துள்ளன. இக் கல்வெட்டுக்கள் கிடைத்திராவிட்டால், இந்த நூல்களைப்பற்றி நாம் அறிவதற்கு மார்க்கமே இல்லை.

தாரா நகரத்திலேயே போஜராஜன் கலைமகளுக்கு ஓர் ஆலயம் அமைத்திருந்தான். அக்கோயில் முக மண்டபத்தில் இருந்த இரு தூண்களில் தூணுக்கு ஒன்றாக இரண்டு நாகபந்தங்கள் வெட்டப்பட்டுள்ளன. ஒன்றில் வடமொழியின் உயிரெழுத்துக்களும் மெய்யெழுத்துக்களும் அமைக்கப்பட்டுள்ளன. மற்றொன்றில் வடமொழியிலக்கணத்தில் கூறப்படும் தாதுக்கள் என்னும் வினை முடிபுகள் அமைக்கப்

பட்டிருக்கின்றன. இவை வடமொழியின் காதந்திரிய வியாகரணத்தின்படி அமைந்துள்ளன என ஆராய்ச்சியாளர் கூறுவர்.

வங்காளத்தில் சந்தால் பர்காணு என்னும் பகுதியில் உள்ள தேவ்கர் (தேவகிரி) வைத்தியநாத சுவாமி கோயிலிலிருந்து கிடைத்துள்ளதும் கி. பி. ஏழாம் நூற்றாண்டு எழுத்துக்களில் பொறிக்கப்பட்டதுமான ஒரு சாசனம் இதி மந்தரகிரி ப்ரகரணம் என்று முடிகிறது. ஆகவே அது ஸ்தலபுராணம் போன்ற ஏதோ ஒரு பெரிய நூலின் பாகமாக இருத்தல் வேண்டும் என்பது தெளிவாகும். (குப்த சாசனங்கள், 213 பக்கம்).

பல சருக்கங்களுடைய ஜைன ஸ்தல புராணம் ஒன்று ராஜபுதனத்தில் பிஜோல்லி என்னும் இடத்தில் கல்லில் பொறிக்கப்பட்டிருப்பதாகக் கூறுவர். (இ. ஆ, முப்பத்து மூன்றாம் வால்யூம், அநுபந்தம், பக்கம். 97).

இன்னும் உலோகத் தகடுகளில் பொறிக்கப்பட்டிருக்கும் நூல்கள் இன்றைக்கும் கிடைக்கின்றன. வெள்ளியேட்டில் சமீப காலத்தில் எழுதிய பாலிபாஷை நூல் ஒன்று லண்டன் நகரத்தில் உள்ள பிரிட்டிஷ் கண்காட்சி சாலையில் இருக்கிறது. அதே கண்காட்சி சாலையில் ஈயத் தகட்டில் எழுதப்பட்டுள்ள பௌத்தமத நூல் ஒன்றும் உள்ளது.

உத்தரப் பிரதேசத்திலே குசிநகரத்தில் மஹாநிர்வாண ஸ்தூபத்திலிருந்து கிடைத்த ஒரு செப்பேட்டில் புத்தபகவானுடைய உதான ஸூத்தம் என்னும் உபதேசம் பதின்மூன்று வரிகளில் பொறிக்கப்பட்டிருக்கிறது. (இந்தியப் புதை பொருள் இலாக்காவின் ஆண்டு அறிக்கை, 1907-ஆம் ஆண்டு, 46-ம் பக்கம்).

இனி, இவ்விதம் முழு நூல்களாகவோ அவற்றின் பகுதிகளாகவோ இல்லாமல் சில்லறைப் பாட்டுக்களைத் தெரிவிக்கும் சாசனங்களும் பல உள. குடுமியான்மலையில் உள்ள ஒரு கல்வெட்டு (1930-ஆம் ஆண்டு 361 நெ. சாசனம்) பின்வரும் பாடலைக் கொண்டுள்ளது.

“ எங்கள்நலக் குன்றரைப்பார்த்து ஏழுஉலகும் ஈன்றஉமை
நங்கைபல காலும் நகைசெயுமே — கங்கைஉறை
கொங்கே கமழ்சடிலம் போய்க்குடுமி ஆய்விட்டது
எங்கே மறைப்பார் என்று. ”

அங்கே எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் பெயர் குடுமித்தேவர் என்பதைக் கொண்டு எழுந்த கவியின் கற்பனை இது. சிவனுடைய சடாமகுடம் போய்க் குடுமி ஏற்பட்டுவிட்டது. அதுகாறும் சடையில் மறைத்திருந்த கங்கையை அவர் இனிஎங்கே மறைப்பார் என்று தேவி அவரைப் பார்த்துக் கேலி செய்கிறாளாம்.

தானம் செய்யப்பட்ட செய்தியைப் பற்றிய குறிப்பு ஒன்றும் இல்லாமல் சரித்திர நிகழ்ச்சிகளைமட்டுமே தெரிவிக்கும் சாசனங்களும் சில உண்டு. இலக்கிய சாசனங்களைப் போலவே இவ் வகையைச் சேர்ந்தனவும் மிகக் குறைவே.

சரித்திர சாசனங்களுள் முக்கியமானதாகத் தென்னார்க்காடு ஜில்லாவிலே திருவகீந்திரபுரத்தில் கிடைக்கும் கல்வெட்டைக் கூறலாம். அது சோழமன்னனான மூன்றாம் இராஜராஜனுடைய ஆட்சியின் பதினைந்தாம் ஆண்டுக்கு எதிராம் ஆண்டில், அதாவது பதினாறாம் ஆண்டில், (கி. பி. 1231) பொறிக்கப்பட்டதாகும் (எபி. இ., ஏழாம் வால்யூம்). 'சோழ சக்கரவர்த்தியைக் கோப் பெருஞ்சிங்கன் சிறைப்பிடித்துச் சேந்தமங்கலத்திலே வைத்துக்கொண்டு தன் படையை விட்டு இராஜ்யத்தை அழித்துத் தேவாலயங்களையும், விஷ்ணு ஸ்தலங்களையும் கெடுத்துவந்தான். அதனைக் கேட்ட ஹொய்சள மன்னனான வீர நரசிம்ஹன் கோபம் கொண்டு 'சோழ மண்டலப் பிரதிஷ்டாசாரியன்' என்னும் கீர்த்தியை நிலைநிறுத்தினால் அல்லது காளம் ஊதுவதில்லை என்று உறுதிகொண்டு தன் தலைநகரான தோரசமுத்திரத்திலிருந்து புறப்பட்டான். படையைச் செலுத்திச்சென்று கோப் பெருஞ்சிங்கனை வெற்றிகொண்டு இராஜராஜனை மீண்டும் சிங்காதனத்தில் அமர்த்த வேண்டும் என்று அவன் ஆணையிட்டதால் அவனுடைய தண்டநாயகர்களான அப்பண்ணன், சமுத்திர கோப்பையன் ஆகிய இருவரும் பல ஊர்களை அழித்து, வேந்தன் முதலிகள் ஈழத்துராஜா பராக்கிரம பாகு உள்ளிட்ட நால்வரைக் கொன்று மக்களுக்குப் பயத்தை விளைவித்தனர். சேந்தமங்கலத்தைத் தாக்கப்போகிற அளவிலே கோப் பெருஞ்சிங்கன் குலைந்த சோழ சக்கரவர்த்தியை எழுந்தருளிவிப்பதாக ஹொய்சள வேந்தனுக்குச் செய்தி அனுப்பினான். அரசன் அதைத் தன் தண்டநாயகர்களுக்கு அறிவிக்க அவர்களும் சோழ சக்கரவர்த்தியை எழுந்தருளுவித்து இராஜ்யத்தே புகவிட்டனர்." இச் செய்தியைத் தெரிவிக்கும் இந்தக் கல்வெட்டு, தமிழ் நாட்டுச் சரித்திரத்திற்கு மிகவும் முக்கியமானது.

இவ்வாறே தஞ்சைப் பெரியகோயிலில் மராத்தியபாஷையில் பொறிக்கப்பட்ட நாகரி எழுத்துக் கல்வெட்டு ஒன்று இருக்கிறது. (1924-ஆம் ஆண்டு 424 நெ.). அது சகாப்தம் 1725 (கி.பி. 1803-4) ஆம் ஆண்டில் தஞ்சை மன்னனான சரபோஜியால் வெட்டுவிக்கப்பட்டது. தஞ்சையில் அரசுசெலுத்திய போசள வமிசத்து மகாராஷ்டிர மன்னர்களுடைய

வமிசாவளியை இருபது தலைமுறைக்கு மேலாகக் கொடுக்கிறது. மகாராஷ்டிரர் பேரரசை நிறுவிய சிவாஜி, அவன் தந்தை ஷாஜி ஆகியோரைப் பற்றிய விவரங்களையும், அவர்களுக்கும் தஞ்சை மன்னர்களுக்கும் உள்ள உறவு முறையையும் தெளிவாகக் கூறுகிறது. அந்த வமிசத்து மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் நடந்த முக்கியமான செய்திகளையும் கொண்டு அவர்களுடைய வரலாற்றை எடுத்துக் கூறும் நூல்போல அமைந்துள்ளது அச் சாசனம். அதை வெட்டுவித்த சரபோஜி மன்னர் தாம் அந்தக் கோயிலுக்கு அளித்த மானியம் போன்றவற்றைத் தெரிவிக்கும் வேறு சில கல்வெட்டுகளையும் மராத்திய பாஷையில் அங்கே பொறித்திருக்கிறார். அவை எல்லாவற்றையும் ஸ்ரீ சாம்பமூர்த்தி ராவ் என்பார் தனியாக வெளியிட்டிருக்கிறார். அதிலே இந்தச் சரித்திரக் கல்வெட்டுமட்டுமே சுமார் நூற்றிருபது பக்கங்கள் கொண்டிருக்கிறது.

காஞ்சிபுரம் கைலாசநாதர் கோவிலில் வேறு வேறு பாகங்களில் வைத்துக் கட்டப்பட்ட நான்கு தனிக் கற்களில் பொறிக்கப்பட்ட சாசனம் ஒன்று இருக்கிறது. அக் கற்களை ஒன்று சேர்த்துப் பார்த்தால் அது ஓரே சாசனம் என்பது விளங்கும். தமிழ், தெலுங்கு, சம்ஸ்கிருதம் ஆகிய மூன்று பாஷைகளும் கலந்து எழுதப்பட்டுள்ள அந்தக் கல்வெட்டு, சக 923 (கி. பி. 1001-2) ஆம் ஆண்டில் ஜடாசோடபீமன் என்னும் தெலுங்குச் சோழ அரசனைத் தஞ்சைச் சோழ சக்கரவர்த்தியான முதலாம் இராஜராஜன் போரில் வென்று சிறைப் பிடித்த செய்தியைக் கூறுகின்றது. (எபி. இந்திகா, இருபத்தொன்றும் வால்யூம்). முதலாம் இராஜேந்திர சோழனுடைய திருவேலங்காட்டுச் செப்பேடுகளிலே அவன் தந்தையான முதலாம் இராஜராஜனைப் பற்றிப் பின் வரும் சுலோகம் காணப்படுகிறது: "என் பெயர் கொண்ட இராஜராஜனைப் போரில் சமர்த்தனுன பீமன் கதாயுதத்தால் கொன்றதால் பீமன் என்னும் இந்த ஆந்திர வேந்தனை நான் சென்று தாக்குவேன்—இவ்விதம் சொல்லி இராஜராஜன் அவனைத் தாக்கினான்." (தெ. இ. சாசனங்கள், மூன்றும்வால்யூம்). சாசனத்தை எழுதிய கவிஞர் அரசன் பெயர்களைக் கொண்டு சமத்காரமான கற்பனையைச் செய்திருக்கிறார். மகாபாரதக் கதையிலே துர்யோதனனைப் பீமன் கதாயுதத்தால் கொன்றான். துர்யோதனனுக்கு இராஜராஜன் என்ற பெயர் உண்டு. இதை ஞாபகத்தில் கொண்டால் கவியின் கற்பனை எளிதில் விளங்கும். இராஜராஜனும் பீமனும் ஓரே வமிசத்தில் பிறந்தவர்கள்; ஆனாலும் ஜன்மவிரோதிகள். ஆந்திர அரசனான ஜடாசோட பீமன் என்பான் சோழர்களின் தெலுங்கு நாட்டுக் கிளையைச் சேர்ந்தவன்.

நாட்டின் பல பகுதிகளிலே அரசு செலுத்திய குறுநில மன்னர்கள் பலர் தங்களுக்குள்ளே 'நிலைமைத்தீட்டு' என்று குறிக்கப்பெறும் உடன் படிக்கை செய்துகொண்டு அவற்றைக் கல்லிலே பொறித்தும் வைத் திருக்கிறார்கள். பேரரசர்களாகவிளங்கியவர்களின் ஆதிக்கியம் குறைந்து, சிற்றரசர்கள் தலைதூக்கிப் பெயரளவுக்குமட்டும் பேரரசர்களின் ஆதிக்கி யத்தை ஏற்றுக்கொண்டு மற்றப்படி சுயேச்சையாகக் காரியங்களைநடத்தி வந்த காலங்களிலேதான் இத்தகைய சாசனங்கள் காணப்படும்.

மூன்றாம் குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் பதின்மூன்றாம் ஆண்டு கொண்டதாகச் சேலம் ஜில்லா ஆறகளூர் என்னுமிடத்திலிருந்து ஒரு கல்வெட்டு (1913-ஆம் ஆண்டு 440 செ) கிடைத்திருக்கிறது. ராஜ ராஜதேவன் பொன்பரப்பினான குலோத்துங்கசோழவாணகோவரைய னுக்கும் திருக்கோவலூர் கிளியூர் மலையமானுக்கும் இடையில் ஏற்பட்ட உடன்படிக்கையில் அழிவினையாற்றுக்குத் தென்புறம் உள்ள பகுதியை வாணகோவரையனும், அதற்கு வடக்கே உள்ளபகுதியை மலையமானும் அனுபவிக்கவேண்டும் என்று ஏற்றுக்கொள்ளப்பட்டது. அன்றி, அவர் களுள் ஒருவரை வேறு யாராவது தாக்கினால் மற்றவர் உதவவேண்டு மென்றும், இருவரும் பேரரசனுக்கு அடங்கியவர்களாக நடக்கவேண்டு மென்றும் ஒப்பந்தம் செய்துகொண்டனராம். அதே இடத்திலிருந்து அதே மன்னனுடைய ஆட்சியின் முப்பத்தைந்தாம் ஆண்டு கொண்ட தாகக் கிடைக்கும் மற்றொரு கல்வெட்டு (1913-ஆம் ஆண்டு 435 செ.) செங்கேணி அம்மையப்பன் அழகிய சோழனான எதிரிலிசோழச் சம்புவ ராயன் என்பான் பொன்பரப்பின வாணகோவரையனான குலோத்துங்க சோழ வாணகோவரையன், அவன் மைத்துனன் காடவராயர் ஆகியோர் களுடன் இதேபோலச் செய்துகொண்ட மற்றோர் உடன்படிக்கையைத் தெரிவிக்கிறது. சில சமயங்களில் இத்தகைய சாசனங்களின் முடிவில் ஒப்பந்தத்தை மீறி நடப்பவர்கள் எந்த எந்தப் பாவத்துக்கோ பழிக்கோ ஆளானவர் ஆவர் என்று குறிக்கப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது.

இன்னும் குறிப்பிட்ட சில அரசர்களுக்கோ அரசபரம்பரைக்கோ விசுவாசம் தெரிவித்து அதிகாரிகள் சிலர் பிரமாணம் எடுத்துக்கொண்ட தைத் தெரிவிக்கும் சாசனங்களும் இந்த வகையைச் சார்ந்தனவே. கோதாவரி ஜில்லா திராக்ஷாராமத்திலிருந்து சோழவேந்தனான மூன்றாம் பராந்தகதேவனுக்கு விசுவாசம் தெரிவிக்கும் அதிகாரிகள் சிலருடைய பிரமாண சாசனங்கள் ஐந்தாறு கிடைத்துள்ளன. (தெ. இ. சாசனங்கள், நான்காம் வால்யூம், 1270-1274, 1275-A.) அந்நாளில் உள் நாட்டுக் கலகம் ஏதோ நிகழ்ந்திருத்தல் வேண்டும் என்பதை இக்கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.

இவ்விதம் சரித்திர நிகழ்ச்சிகளைக் கூறும் சாசனங்கள் வட நாட்டிலும் பல உள.

கிறிஸ்து பிறப்பதற்கு முன்னரே கலிங்க நாட்டை ஆண்டு வந்த காரவேல மன்னனது ஹாதிகும்பாச் சாசனத்தை முக்கியமானதாகக் கூறலாம். அதில் காரவேலன் பிறந்ததிலிருந்து அவன் பட்டம் கட்டப் பெற்றபின் பதின்மூன்று வருஷ காலம் அரசாண்டது வரையில் உள்ள அவனுடைய சரித்திரம் கூறப்பட்டிருக்கிறது. அவன் தன்னுடைய இளமையை, அதாவது அவன் வாழ்நாளில் முதல் பதினைந்து வருஷங்களைப் படிப்பிலும், அப்பால் ஒன்பது ஆண்டுகளை யுவராஜனாகவும் கழித்தான். இருபத்து நான்காவது வயது முடிந்தபிறகு அவனுக்கு ராஜ்யாபிஷேகம் நடைபெற்றது. சாசனம் இவற்றைக் கூறிய பிறகு வருஷவாரியாக அவனுடைய ஆட்சியில் நடந்த விசேஷச்செய்திகளையும் பொதுஜன நன்மைக்காக அவன் செலவு செய்த பெருந் தொகைகளையும் எடுத்துக்கூறிச் செல்கிறது. அது திடீரென்று பதின்மூன்றும் ஆண்டுடன் நின்றுவிடுகிறது. மேலே அவன் எவ்வளவுகாலம் ஆண்டுவந்தான் என்பது போன்ற விவரங்கள் குறிக்கப்படவில்லை. (எபி. இந்திகா, இருபதாம் வால்யூம்).

அலஹாபாத்திலுள்ள சமுத்திரகுப்தனது பிரசஸ்தியும் இப்பிரிவையே சேர்ந்ததே. (குப்த சாசனங்கள், முதற்பக்கம்). அதில் அவ்வரசனுடைய வமிசாவளியும் அவன் செய்த திக்கு விஜயங்களும் விவரமாகக் கொடுக்கப்பட்டுள்ளன. அவன் எந்த எந்த நாடுகளை ஜயிக்க முயன்றான் என்பதும் அக்காலத்தில் பிற நாடுகள் எவ்வித நிலையில் இருந்தன என்பதும் அந்தச் சாசனத்தினின்றும் நன்றாக விளங்குகின்றன.

அதேபோல மந்தஸோர் என்னுமிடத்தில் உள்ளதும், யசோதர்மனுடைய புகழைக் கூறுவதுமான சாசனமும் இந்த வகுப்பைச் சேர்ந்தது. சிவபெருமானுக்கு அன்றிப் பிறருக்கு எப்போதும் தலைவணங்கியறியாத மிஹிரகுலன் என்னும் ஹூணர் தலைவனை அவன் தோல்வியுறச் செய்த செய்தி இதனால் வெளியாகிறது. (ஷை. 142, 149 பக்கங்கள்).

புமாரா ஸ்தம்ப சாசனம் (குப்த சாசனங்கள், பக்கம் 110) என்பது மகாராஜா ஹஸ்தி, மஹாராஜர் சர்வநாதன் ஆகிய இரண்டு வேந்தர்களும் ஆண்டுவந்த நாடுகளுக்குப் பொதுவாக அமைந்த எல்லையைக் குறிப்பதற்காக நடப்பட்ட தூண் என்பதைத் தெரிவிக்கிறது. இதிலிருந்து அந்த வமிச அரசர்களையும் அவர்களுடைய கால வரையறையையும் நாம் அறியமுடிகிறது.

கி. மு. மூன்றும் நூற்றுண்டைச் சார்ந்தனவாகக் கூறக்கூடிய பிராமி எழுத்துக்களால் பொறிக்கப்பட்ட செப்பேடு ஒன்று உத்தரப் பிரதேசத்தில் ஸோகௌரா என்னுமிடத்திலிருந்து கிடைத்துள்ளது. (எபி. இந்திகா, இருபத்திரண்டாம் வால்யூம்). நான்கே வரிகளைக் கொண்டதாகப் பிராகிருத மொழியில் உள்ள அந்தச் சாசனம் பஞ்ச காலம் போன்ற சமயங்களில் அவசர உபயோகத்துக்காக, உணவுத் தானியம், மிருகங்களின் தீவனமான வைக்கோல் ஆகியவற்றைச் சேக ரித்து வைப்பதற்கென இரண்டு கொட்டாரங்கள் நிறுவப்பெற்ற செய் தியைத் தெரிவிக்கிறது.

பண்டை மன்னர்கள் தாங்கள் கொண்ட வெற்றிக்கு அறிகுறியாக ஜயஸ்தம்பங்கள் எழுப்பியதைத் தெரிவிக்கும் சாசனங்களையும் இந்த வகையிலே சேர்க்கவேண்டும்.

ஏழாம் நூற்றுண்டின் மத்தியில் காஞ்சீபுரத்திலிருந்து ஆண்டுவந்த 'வாதாபி கொண்ட நரசிம்ஹ வர்மன்' என்னும் பல்லவ அரசன் சாளுக்கிய மன்னர்களைப் போரில் வென்று அவர்கள் தலைநகரான வாதாபியிலே ஜயதம்பம் ஒன்றையும் கொண்டான் என்று வேலூர்ப் பாளையம் செப்பேடுகள் கூறுகின்றன. (தெ. இ. சாசனங்கள், இரண் டாம் வால்யூம்). அந்த வாதாபியிலேயே மல்லிகார்ஜுனர் ஆலயத் துக்குப் பின்புறம் பாறையில் அழகான பல்லவ கிரந்த எழுத்தில் பொறிக்கப்பெற்றுச் சிதிலமாகக் கிடைக்கும் பல்லவ நரசிம்மனுடைய பதிமூன்றும் ஆண்டுக் கல்வெட்டு இதனை வலியுறுத்துகிறது. (ஷை பதினேராம் வால்யூம்).

அதேபோல, சென்ற நூற்றுண்டின்தொடக்கத்தில் நெப்போலியன் மீது ஆங்கிலேயர்கள் கொண்ட வெற்றிக்குச் சின்னமாகத் தஞ்சை மன் னர் சரபோஜி கி. பி. 1814-ஆம் ஆண்டில் ஒரு ஞாபகச்சின்னம் நிறு வினர். 'மனோரா' எனப்படும் அந்தக் கட்டிடம் தஞ்சை ஜில்லா பட் டுக்கோட்டைத் தாலுக்காவில் சாளுவநாயக்கன்பட்டினத்தில் எழுப்பப் பட்டுள்ளது. அந்தச் செய்தியைத் தெரிவிக்கும் சாசனம் ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, மராட்டி, பாரசீகம் ஆகிய ஐந்து பாஷைகளிலும் அதிலே பொறிக்கப்பட்டுள்ளது. (1925-ஆம் ஆண்டு 343, 344 எண் கொண்ட சாசனங்கள்).

இவ்விதம் நமக்குக் கிடைக்கும் இலக்கிய சாசனங்கள், சரித்திர சாசனங்கள் ஆகியவற்றின் எண்ணிக்கை மிகவும் குறைவு என்று ஒரு காலத்தில் கருதப்பட்டு வந்தது. ஆனல் அப்படியல்ல, அதிகமாகக்

கிடைக்கும் தான சாசனங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் அவை குறைவுதான். எனினும் அதிகமாகவே கிடைத்துள்ளன.

சுமார் கி.பி. 700-ஆம் ஆண்டுக்கு அணித்தாக ஆட்சிபுரிந்த இராஜ ஸிம்ஹன் காலம் வரையில் பல்லவ மன்னர்களின் வமிச பரம்பரையைக் கொடுக்கும் வாயலூர்ச் சாசனம் (எபி. இந்திகா, பதினெட்டாம் வால்யூம்), பரமார மன்னனான போஜ தேவனுடைய பிரசஸ்தியைக் கொடுக்கும் குவாலியர்ச் சாசனம் (ஷை), மாளவ நாட்டுப் பரமார மன்னர்களின் புகழை எடுத்துரைக்கும் நாகபுரிச் சாசனம் (ஷை முதல் வால்யூம்), காலசூரிகளின் புகழைக் கூறும் காவியாச் சாசனம் (ஷை பதினெட்டாம் வால்யூம்) என்பன போன்றவைகளையும் சரித்திரக் கல்வெட்டுகளின் எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

## 5. சாசன வகைகள்

தர்ம சாஸ்திரங்களிலே லிகிதங்கள் (1) இராஜகீயம் அதாவது அரசன் அல்லது அரசாங்கம் பற்றியவை (2) ஜானபதம் அல்லது மக்களைப்பற்றியவை என இரு பிரிவுகளாகப் பகுத்துக் கூறப்பட்டுள்ளன. ஜானபதம் என்பது சில சமயங்களில் லௌகிகம் எனவும் பெறும். இராஜகீயம் என்பவை அரசனோ, அவனுடைய மந்திரிகளோ, அதிகாரிகளோ அளிக்கும் உத்தரவுகள் ஆகும். ஜானபதம் என்பவை பொது மக்கள் தங்களுக்கிடையில் அவர் அவர் செய்துகொள்ளும் உடன்படிக்கை, கிரய பத்திரம் முதலியவை ஆகும்.

இராஜகீயம் வகையைச் சாசனம், ஜயபத்திரம், ஆஜ்ஞாபத்திரம், பிரஜ்ஞாபனம் என மேலும் நான்கு பிரிவுகளாகப் பகுப்பர்.

(1) சாசனம் என்னும் வடமொழிச் சொல் உத்தரவு, கட்டளை என்ற பொருள்படும் என்பதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். பொதுவாக அது கோயில்களுக்கும் வித்துவான்களுக்கும் அரசன் பூமிதானம் அளித்ததை அறிவிக்கும் உத்தரவுகளையே குறிப்பிட்டுவந்தது. இடைக் காலத்திலே இச் சொல் பூமிதானத்தையே குறித்து வந்தது.

சாசனம் என்னும் வகையை யாஜ்ஞவல்கிய ஸ்மிருதி பின்வருமாறு விவரிக்கிறது: "நிலத்தையோ நிவந்தத்தையோ அளித்த அரசன் பின்னால் வரும் மன்னர்களும் அறிந்து கொள்வதற்காக அதை எழுத்து மூலம் நிலைநிறுத்தவேண்டும். துணியிலோ, செப்பேட்டிலோ

அதை எழுதச் செய்து தன் (கையெழுத்து) அடையாளத்துடனும் முத்திரையுடனும் அளிக்கவேண்டும். அரசன் வமிசாவளி, அவனுடைய புகழ், தானம் பெறுவோன் பெயர், தானம் அளிக்கப்பெறும் நிலத்தின் அளவு, நான்கெல்லை, தானம் செய்யப்பெற்ற காலம், கையெழுத்திட்ட காலம் ஆகியவற்றையும் தெரிவிக்கவேண்டும்."

ஆகவே முன்னாளில் அரசர்கள் நிலதானம் செய்ததைத் தெரிவிப்பனவாக உள்ள செப்பேடுகள், கல்வெட்டுக்கள் ஆகியவை எல்லாம் இந்த வகையைச் சேர்ந்தனவாகும். நிலதானத்தைத் தெரிவிப்பனவற்றுள் முன்னாளில் எழுதப்பட்டவற்றுக்கும் பிற்காலத்தனவற்றுக்கும் முக்கியமான வித்தியாசம் ஒன்று உண்டு. பிற்காலத்தவை, முக்கியமாக விஜயநகர சாம்ராஜ்ய காலத்தைச் சார்ந்தவை, குறிப்பிட்ட தானங்களை நேரிடையாகவே தெரிவிக்கின்றன. தற்காலத்தில் எழுதப் பெறும் தான பத்திரங்களைப்போலவே அதன் வாசகம் அமைந்திருக்கக் காணலாம். இவ்விதம் தானம் பெறுவோர் அதை அனுபவிப்பதற்கான ஆதார பத்திரம் போலவே அது இருக்கிறது. ஆனால் முற்காலத்தவை அப்படி அல்ல. உதாரணமாகப் பல்லவ அரசர்கள் அளித்தனவாகக் காணப்படும் பழைய தானங்களைக் கொள்ளலாம். அவை யாவும் தானம் அளித்த செய்தியைத் தானம் வழங்கப்பெற்ற கிராமத்தின் பிரதேச அதிகாரிக்கோ, அவ்வூரின் சபைக்கோ தெரிவிக்கும் உத்தரவுகளாகவே அமைந்துள்ளன. பிற்காலத்திய பல்லவ மன்னர்கள், சோழ வேந்தர்கள் ஆகியோர் வழங்கிய சாசனங்களில் இதே செய்தியை அறிவிக்கும் தமிழ்ப் பகுதியும் சேர்க்கப்பட்டிருக்கும். அதிலே அரசன் உத்தரவைப் பெற்ற சபையார் அதன்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளும் கொடுக்கப்பட்டிருக்கும். அரசன் உத்தரவைப் பெற்ற சபையார் அதைத் தலையால் தாங்கி, தானம் வழங்கப்பெற்ற நிலப்பகுதியின் எல்லையை வலஞ்செய்து நிர்ணயித்துக் கல்லும் கள்ளியும் நாட்டி, தானம் பெற்றவர் அனுபோகத்துக்கு விட்ட செய்தியும் காணப்படும். ஆகவே அதற்குப் பிறகே செப்பேட்டில் கண்ட சாசனம் தயாரிக்கப்பெற்று உரிய அதிகாரிகளின் கையெழுத்தோடு ஏட்டில் பொறிக்கப்பெற்று அரசாங்க முத்திரையோடு வழங்கப்பட்டிருத்தல்வேண்டும் என்பது தெளிவாகும். அவற்றை நோக்கும்போது அந்நாளிலே தானம் செய்யப்பட்ட நிலத்துக்கு ஆதாரமாகச் செப்பேட்டிலே சாசனம் எழுதி வழங்குவதற்கு மிகவும் நுணுக்கமான நடைமுறையும் சம்பிரதாயங்களும் இருந்து வந்தன வென்பது விளங்கும்.

(2) ஜயபத்திரம் என்பது பின்வருமாறு விவரிக்கப்பட்டுள்ளது: "விவாதத்துக்கு வந்த விஷயத்தை அரசனே நேரில் கேட்டு ஆராய்ந்து,

நியாயம் வல்லோர் அபிப்பிராயத்தையும் அறிந்து, முடிவு செய்து அந்த முடிவைப் பொதுமக்களுக்கு ஜயபத்திரம் மூலமாக அறிவித்தல் வேண்டும்."

இவ்விதம் மக்களில் ஒருவர்க்கொருவர் வழக்குப் புரிந்து அதை அரசனுடைய தீர்ப்புக்கு விட்டு அரசனோ அவனுடைய அதிகாரிகளோ செய்த தீர்ப்புகளைத் தெரிவிப்பனவாகப் பல சாசனங்கள் கிடைத்துள்ளன. அத்தகைய விவாதங்களும் சாதாரணமான சொத்துரிமை முதல் சமூகத்தின் நிலையையே பாதிக்கும் வாழ்க்கை உரிமை வரையில் பலதரப்பட்டவை.

தஞ்சாவூர் ஜில்லா பட்டீச்சுரத்திலிருந்து கிடைக்கும் கல்வெட்டு ஒன்று (1927-ஆம் ஆண்டு 257 நெ.) அவ்வூரில் வாழும் பட்டுநூற்காரர்களுக்கும் (சேணியர்) செட்டிகளுக்கும் கல்யாண காலங்களில் தாம்பூலம் வழங்கும் முறையைப் பற்றிய விவாதம் ஏற்பட்டு அந்த 'வழக்குமுறி' கி. பி. 1634-ஆம் ஆண்டில் மந்திரி கோவிந்த தீக்ஷிதர் முன்னிலையில் முடிவுசெய்யப்பட்ட விவரத்தை அறிவிக்கிறது. இவ்விதம் வரும் வழக்குகள் சிற்சில சமயங்களில் சுலபமாகத் தீர்க்க முடியாதபடி சிக்கலாக அமைந்து நெடுநாள் இழுத்துக்கொண்டே போவதும் உண்டு. ஸ்ரீகண்ட சதுர்வேதிமங்கலத்துச் சபையாருக்கும் திருவெறும்பியூர்ச் சபையான ஊருக்கும் எல்லைத் தகராறு ஒன்று இருந்தது. அது ஒரு விதமாகவும் முடிவாகாமல் நீண்ட காலம் இழுத்துவந்தது. முடிவில் இருவருக்கும் திருப்தியான விலையைக் கொடுத்து அந்த நிலத்தை ஒருவன் கிரயம் பெற்று அதை அவ்வூர்க் கோயிலுக்குத் தானமாக அளித்து விவாதத்துக்கு முடிவுகண்டான் என்ற செய்தியைத் தெரிவிக்கிறது ஒரு சாசனம். (கி. பி. 1914-ஆம் ஆண்டு 129 நெ.)

ஒரு வழக்கை அரசாங்கத்தின் தீர்ப்புக்கு விடுவது சம்பந்தமாக வழக்குத் தொடுப்பதிலிருந்து தீர்ப்பு அளிக்கப்பெறும் வரையில் உண்டாகும் அதன் நடைமுறையைப்பற்றிய விவரங்களைத் தெளிவாகச் சாசனங்கள் எடுத்துக் கூறவில்லை. ஆயினும் இங்கொன்றும் அங்கொன்றுமாக அவற்றில் காணப்படும் செய்திகளைக் கொண்டு குறையைப் பூர்த்தி செய்து ஒரு வழியாக நாம் அறிந்துகொள்ள முடியும். வழக்கை விசாரித்துத் தீர்ப்புக் கூறுவதற்காக அரசாங்கத்துக்கு உண்டாகும் செலவை வழக்கின் இரு தரத்தாரும் முன்னதாகவே அரசாங்கத்துக்குச் செலுத்திவிடவேண்டும் என்றும் தெரிகிறது. இலக்கியங்களிலிருந்து அறியப்படும் இச் செய்தி செங்கற்பட்டு ஜில்லா குன்றத்

தூரிலிருந்து கிடைத்த ஒரு செப்பேட்டுச் சாசனத்தாலும் உறுதி யாகிறது. கலியப்தம் 4468, பராபவ வருஷம் விஜயநகர வேந்தன் சதாசிவதேவ மகாராயர் ஆட்சிக் காலத்தில் அவ்வூர்க்கோயில் பண்டா ரத்தாருக்கும் ஊராருக்கும் முதன்மையாரோடு விவாதம் உண்டாகி யது. அதன்மீது அவர்கள் வழக்கை அரசன் சமுகம் கொண்டுபோய்த் தீர்ப்பளிக்க வேண்டினார்கள். அதைத் தெரிவிக்குமிடத்தில் 'சமஸ்தா னம் கஜானு(வு)க்கு கப்பம் கட்டி ஜபாபஜயம் பண்ணி வாரா நிற்கிற காலத்தில்' என்று சாசனம் கூறுகிறது. இதிலிருந்து அவர்கள் செல வுத்தொகையை அரசாங்கத்துக்கு முன்னதாகவே செலுத்திவிடவேண் டும் என்பது தெளிவாகும்.

தஞ்சாவூர் ஜில்லா கீழையூரிலிருந்து கிடைக்கும் மூன்றாம் குலோத்துங்க சோழனுடைய ஆட்சிக் காலத்துக் கல்வெட்டு ஒன்று (1925-ஆம் ஆண்டு 80 செ.) வேறு ஒரு வகையான வழக்கைப்பற்றித் தெரிவிக்கிறது. அந்த ஊரிலே வாழ்ந்த இருவர் கிராமத் துரோகி களாகவும் சமூக வாழ்க்கைக்கே பெரிய விரோதிகளாகவும் இருந்தனர். ஊரிலே தீ வைத்துக் கலகம் விளைவித்தனர் என்று குற்றம் சாட்டி அவர்களை விசாரித்து ஆயிரம் காசு அபராதம் விதிக்கப்பட்டது. இதே போலக் கலகம் செய்து தீ வைத்த குற்றங்கள் நடந்தால் இருபதினா யிரம் காசு வரையில் அபராதம் விதிக்கலாம் என்று அரசன் உத்தரவு அளித்திருந்தான். அவ்விருவருக்கும் விதிக்கப்பெற்ற ஆயிரம் காசை அபராதம் செலுத்த அவர்களுக்கு வழியில்லை. ஊரில் யாரும் அவர் களுக்கு உதவ முன்வரவில்லை. ஆகவே அவர்களுடைய நிலங்களைப் பறிமுதல் செய்து கோயிலுக்கு ஆயிரத்து அறுபது காசுக்கு விற்க வேண்டி வந்தது. நில விலையில் அதிகப்படியாகக் கிடைத்த அறுபது காசும் அபராதம் செலுத்தாதற்கான தண்டமாகக் கொள்ளப்பட்டது.

இவைகளைக் கவனிக்கும்போது முன்னாளிலே வழக்குகளை விசாரித்து நியாயம் வழங்கப்பட்ட முறையை ஓர் அளவு அறியலாம். ஆயினும், அந்நாளிலே அளிக்கப்பட்ட ஜயபத்திரங்களின் பிரதிகள் நமக்குக் கிடைக்கவில்லை.

கர்நாடக தேசத்துக் கிட்டூரில் ஒரு நிலத்தைத் தங்கள் தங்கள் கோயிலுக்கே உரியது என்று இரண்டு சைவாசாரியார்கள் கூறி வாதம் செய்ததைத் தெரிவிக்கும் கல்வெட்டு ஒன்று கிடைத்திருக்கிறது (ராயல் ஏஷ்டியாடிக் ஸொஸைட்டி, பம்பாய்க் கிளை, பத்திரிகை, ஒன்பதாம் வால்யூம்). அதிலிருந்து அந்நாளிலே ஒருவன் பழுக்கக் காய்ச்சிய மழுவைக் கையிலேந்தித் தன் கட்சியை நிரூபிக்கும் பழக்கம் இருந்தது தெரிகிறது.

விஜயநகர வேந்தனான புக்கராயர் காலத்தில் சிரவணபெள்ள கோளத்தில் ஜைனர்களுக்கும் வைஷ்ணவர்களுக்கும் ஏற்பட்ட உரிமை வழக்கு ஒன்றைப்பற்றி அவ்வூரில் கிடைத்துள்ள சாசனம் ஒன்று தெரிவிக்கிறது. (எபி. கர்நாடிகா, இரண்டாம் வால்யூம், 344 நெ. சாசனம்). அவ்விரு சமூகத்தினரையும் மன்னன் சமரசம்செய்துவைத்து வைஷ்ணவர்களைப்போலவே ஜைனர்களும் மதானுஷ்டான உரிமையையும் உற்சவம் முதலியவை நடத்தும் சுதந்தரத்தையும் அனுபவிக்க வேண்டும் என்று செய்த முடிவை அது எடுத்துரைக்கிறது.

(3) ஆஜ்ஞாபத்திரம்: 'சாமந்தர், உயர்தர அரசாங்க அதிகாரிகள், ராஜப்பிரதிநிதிகள் ஆகியோருக்கு அரசன் அனுப்பும் உத்தரவுகொண்ட ஓலை ஆஜ்ஞாபத்திரம் எனப்படும்.'

முன்னாளிலே பூதானம் செய்யப்பட்டதைத் தெரிவிப்பனவாக வடநாட்டிலும் சரி, தென்னாட்டிலும் சரி, கிடைக்கும் செப்பேடுகள் உண்மையில் அரசன் அச்செய்தியை அறிவித்துத் தன் அதிகாரிகளுக்கு அனுப்பும் உத்தரவுகளாகவே அமைந்துள்ளன வென்பதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம்.

காஞ்சிபுரத்துப் பல்லவமன்னனான சிவஸ்கந்தர்வமனுடைய ஹீர ஹடகள்ளிச் செப்பேடுகள் (எபி. இந்திகா, முதல்வால்யூம்) பிராமணர்கள் சிலருக்கு நிலதானம் செய்யப்பெற்ற விவரத்தை அறிவித்து, "நம் மாகாணத் தலைவர்கள், வத்தர்கள், அரசகுமாரர்கள், சேனாபதிகள், கோட்ட நிர்வாகிகள், சுங்க அதிகாரிகள், நாட்டு நிர்வாகிகளும் மற்றோர்களும், இன்னும், பலகிராமங்களை மானியமாக அனுபவிப்பர், கால்நடை மந்தைகளை வைத்திருப்போர், கோபாலர், மந்திரிகள், வனத்து அதிகாரிகள், குமிகர், தூதிகர், நெயிகர், இன்னும் நம்மிடம் சேவைசெய்யும் எல்லோரும், இன்னும் சாரணர், படைவீரர் ஆகிய பலருக்கும்" அனுப்பிய ஆணையாக அமைந்துள்ளன.

அதேபோலத்தான் ஸ்ரீ ஹர்ஷன் என்பானது பன்ஸ்கேரா சாசனம் (ஷை ஆறும் வால்யூம்) "ஹர்ஷன்...மஹா சாமந்தர், போலீஸ் அதிகாரிகள், நிலஅளவு அதிகாரிகள், ராஜப்பிரதிநிதி, குமாரஅமாத்தியர், கண்காணிப்போர், விஷயபதி, நிலைப்படையினர், கூலிப்படையினர், இன்னும் இதர ஊழியர்கள், இன்னும் அஹிச்சத்திர மாகாணத்தில் அங்கதிய விஷயத்தில் மேல்படாகையில் உள்ள மார்க்கடசாகரத்தில் கூடியுள்ள மஹாஜனங்கள் ஆகியோருக்கு" ஆணையிடுவதாகக் கூறுகிறது.

உண்மையில் அரசன் தானம் அளித்த செய்தியைத் தெரிவிப்பன வாகத் தமிழ்நாட்டில் கிடைக்கும் சாசனங்கள் எல்லாம் அந்த அந்த ஊர்ச்சபையாருக்கோ நாட்டாருக்கோ அரசன்விடுத்த திருமுகமாகவே உள்ளன. அந்தத் திருமுகங்களைப் பெற்ற பின்னரே சபையார் தான பூமியின் எல்லையை நிர்ணயித்துத் தானம் பெற்றவருக்கு நிலத்தை ஒப்புவித்துச் சாசனம் வழங்கியிருக்கிறார்கள். தமிழ்ச் சாசனங்கள் பலவற்றின் ஆரம்பத்தில் அரசனுடைய திருமுகத்தை அதை எழுதிய அதிகாரிகளின் கையெழுத்தோடு முழுதும் கொடுத்திருப்பதுடன், சபையார் அதையொட்டி மேலே எடுத்துக்கொண்ட நடவடிக்கை களும் விவரிக்கப்பட்டிருக்கக் காணலாம். இவ்விதம் செய்வதால் தான வாசகமும் அதன் பரிகாரங்களும் சாசனத்திலே இரண்டு மூன்று இடங்களில் கொடுக்கப்பட்டிருக்கும். ஆகவே சாசனம் சிதிலமாகப் போய் ஏதாவது ஓர் இடத்தில் குறை இருந்தாலும் அதைப் பூர்த்தி செய்துவிட இயலும்.

சில சமயங்களில் அரசனுடைய திருமுகம் தனியாகவும் அதன்மீது சபையார் பணித்த உத்தரவு தனியாகவும் இருவேறு சாசனங்களாகக் கல்லில் வெட்டப்பட்டிருப்பதும் உண்டு.

(4) பிரஜ்ஞாபனம்: 'ரித்விக், புரோஹிதர், ஆசாரியர், மான்யர் (கௌரவிக்கத்தக்கோர்), அப்யர்ஹிதர் (உரிமையுள்ளவர்) ஆகியோருக்கு ஒரு விஷயத்தைத் தெரிவிக்கும் ஓலை பிரஜ்ஞாபனம் எனப்பெறும்.'

இத்தகைய சாசனங்கள் மிகவும் குறைவு. இவை பொதுமக்களுக்கு அறிவிப்பனவாக ஏற்பட்டனவல்ல. குறிப்பிட்ட சிலருக்கு அவர்களு டைய வித்தையைக் கருதியோ அவர்களுடைய பதவி காரணமாகவோ முக்கியமான விஷயங்களை எடுத்து உரைப்பதற்காக அரசன் எழுதும் ஓலையே ஆகும்.

இராஜகீயம் என்னும் அரசாங்க வகையிலேயே 'பிரசாதலேக்யம்' என்று ஒரு வகையும் காணப்படுகிறது. "ஒருவனுடைய சேவையையோ வீரத்தையோ மெச்சி நிறைந்த மனத்துடன் அரசன் அவனுக்கு நில மாகவோ வேறு விதமாகவோ பரிசு வழங்குவதை எழுத்து மூலமாக அறிவிப்பது பிரசாதலேக்யம் எனப்படும்."

கி.பி. 949-50-ஆம் ஆண்டு கொண்டதாகக் காணப்படும் ஆதகூர்க் கல்லில் உள்ள சாசனத்தை இதற்குச் சிறந்த உதாரணமாகக் கூறலாம். தக்கோலத்தில் நடந்த போரில் சோழ அரசிளங்குமாரனை இராஜாதித் தியன் ஏறியிருந்த யானையின்மீது அம்பாரியையே போர்க்களமாகக்

கொண்டு சண்டையிட்டுச் சோழ அரசன் இராஜாதித்தியனைக் கொன்று வெற்றியை அளித்ததற்காக மேலைக்கங்க அரசன் இரண்டாம் பூதுகனுக்கு அவன் பேரரசனும் மைத்துனனுமான இராஷ்டிரகூடவேந்தன் மூன்றாம் கிருஷ்ணன் வனவாசி பன்னீராயிரம் பகுதியையும், பெள்ளகுளம் முன்னூறு, புரிகெறே முன்னூறு, கிசுகாடு எழுபது, பாகேநாடு எழுபது ஆகிய பிரதேசங்களையும் அளித்தான் என்பதைத் தெரிவிக்கிறது அக் கல்வெட்டு. (எபி. இந்திகா, ஆறாம் வால்யூம்).

அதே கல்லில் உள்ள மற்றொரு சாசனத்திலிருந்து அந்தப் போரிலே ஈடுபட்டு உயிர் துறக்காமல் பிழைத்த வீரன் ஒருவனுடைய சாகசத்தை மெச்சி அவனுக்குச் சில கிராமங்கள் அளிக்கப்பெற்ற செய்தியும் தெரியவருகிறது. இந்தச் சாசனத்திலிருந்து மற்றொரு விஷயமும் நமக்குப் புலனாகிறது. மதாசாரியர் முதலிய பெரியோருக்குத் தானம் வழங்கப்பெறும் காலங்களில் அவர்களுடைய பாதங்களைக் கழுவி வழிபட்டுத் தானம் செய்வதுபோலப் போர்வீரர்களுக்குப் பரிசு அளிக்கும் சமயங்களில் அவர்களுடைய வாளைக்கழுவிக் கௌரவிப்பார்களாம்.

கதம்பகுல வேந்தனான காகுஸ்தவர்மன் யுவராஜனாக இருந்த காலத்தில் போர்க்களத்திலே அவனுடைய உயிரைக்காத்த சேனாபதி சுருதகீர்த்தி என்பானுக்குக் கேட்டகிராமம் என்பதில் சில பூமிகளை அவன் பரிசாக அளித்த செய்தியைத் தெரிவிக்கின்றன ஹால்ஸிச் செப்பேடுகள் (இ. ஆ. ஆறாம் வால்யூம்). அந்தச் சாசனம் எண்பதாவது விஜய ராஜ்ய ஸம்வத்ஸரத்தில் கொடுக்கப்பட்டிருப்பதாகக் காண்பதால், அப்போது கதம்ப ராஜ்யம் நிறுவப்பெற்று எண்பது ஆண்டுகள் ஆயினவென்பதும் விளங்கும்.

ஜானபதம் எனப்பெறும் பொதுமக்கள் தனிப்பட்டவர் ஆகியோரின் பத்திரங்களை வியாசருடைய 'ஸ்மிருதி சந்திரிகை' பின்வருமாறு விவரிக்கிறது: "அது பிரசித்தமான ஊரைச் சேர்ந்த லேககு (எழுதுவோ)னால் எழுதப்பெறுதல் வேண்டும். அரசனுடைய வமிச பரம்பரை, ஆண்டு, மாதம், பக்ஷம், கிழமை ஆகியவைகளையும் அதிலே குறித்தல் வேண்டும்." இத்தகைய பத்திரங்கள் பற்பல விதமான விஷயங்களைப்பற்றியனவாக இருக்கும். பணவிஷயமான அல்லது ஒப்பந்தம் பற்றிய பத்திரங்கள் குறிப்பிட்ட முறையிலே எழுதப்படவேண்டும் என்று ஸ்மிருதி நூலாசாரியர்கள் கூறுகிறார்கள். "பரஸ்பரம் சம்மதித்து முடிவு செய்யப்பெறும் விஷயங்கள் சாட்சிகளுடைய பெயர்களையும், தனிகனுடைய பெயரையும் கொண்டு எழுத்து மூலமாக உறுதிப்

பெறுதல் வேண்டும்" என்று யாஜ்ஞவல்கியர் என்னும் ஸ்மிருதி ஆசிரியர் எழுதியிருக்கிறார்.

இவ்விதம் வகுக்கப்பட்டிருப்பதாலேயே பொதுமக்களுடைய விவகாரங்களைத் தெரிவிக்கும் சாசனங்களும் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தனவாக ஆகின்றன. அவற்றிலே அந்நாளில் அரசு செலுத்திய அரசனைப் பற்றிய விவகாரங்கள் காணப்படுகின்றனவன்றோ?

கௌடில்யருடைய அர்த்த சாஸ்திரத்திலே சாசனங்கள் ஏழு வகையாகப் பகுக்கப்பட்டிருக்கின்றன. அவை: (1) பிரஜ்ஞாபன லேகை (2) ஆஜ்ஞா லேகை (3) பரிதான லேகை (4) நிச்ருஷ்டி லேகை (5) ப்ராவிருத்திகா லேகை (6) ப்ரதிலேகை (7) ஸர்வத்ரக லேகை எனப்பெறும்.

ப்ரஜ்ஞாபனம் என்னும் முதல்வகை அரசனுடைய ஆணையை அவன் அறிவித்தபடியே கொஞ்சமும் பிசகாமல் உரியவர்களுக்கு 'இவ்விதம் அரசர் தெரிவிக்கிறார்' என்று அறிவிக்கும் ஓலையாகும்.

ஆஞ்ஜாலேகை என்பது அரசன் தன்னிடம் சேவகம் புரியும் அதிகாரிகளுக்கும் ஊழியர்களுக்கும் அவர்களுடைய சேவையை மெச்சிப் பரிசு அளித்தோ குறையை எடுத்துக்காட்டிக் கண்டித்தோ விடுக்கும் ஓலை என்பர்.

மூன்றாவதான பரிதானலேகை என்பது தகுதி வாய்ந்தவர்களைக் கௌரவிப்பதற்காக அவர்களைப் புகழ்ந்து அவர்களுக்குச் சில நிவந்தங்களையோ பரிசுகளையோ வழங்கி விடுக்கும் ஓலையாகும்.

நான்காவதான நிச்ருஷ்டிலேகை என்பது குறிப்பிட்ட சில சமூகத்தாருக்கோ அல்லது ஏதாவது ஒரு பகுதியில் வசிப்போர் அனைவருக்குமோ வரிவஜா போன்ற அநுக்கிரஹங்களைச்செய்து அரசன் அளிக்கும் ஓலையைக் குறிப்பதாகும். இது அரசன் வாய்மொழியாகவோ வேறு நடவடிக்கைகள் மூலமோ அளிக்கும் சலுகைகளைக் குறிப்பதாகக் கொண்டு 'வாசிகலேகை' எனப்பெறுவதாகும் என்பர்.

ஐந்தாவது ப்ராவருத்திகாலேகை என்பது நாட்டிலே துரிதங்கள், விபத்துக்கள் முதலியன ஏற்படக்கூடிய காலங்களில் எந்த எந்த விதமாக நடந்து அவற்றைத் தடுத்தும் அவற்றின் கொடுமையைக் குறைத்தும் நன்மை புரியவேண்டும் என்ற விவரங்களை எடுத்துக் கூறும் ஓலை என்பர்.

ஆறாவதான பிரதிலேகை என்பது அரசாங்கத்துக்கு வரும் கடிதங்களுக்கு அரசன் உத்தரவைப் பெற்று எழுதும் பதில் அல்லது மறுமொழி வாசகம் ஆகும்.

கடைசியான ஸர்வத்ரகலேகை என்பது நாட்டின் நலத்தையும் பொதுமக்களின் க்ஷேமத்தையும் குறித்து, பலதரப்பட்ட அதிகாரிகள் உள்பட அனைவருக்கும் அரசன் விடுக்கும் உத்தரவுகளைத் தெரிவிக்கும் ஓலையை எழுதுவதற்கான வாசகம் என்பதாகும்.

இவ்விதம் கௌடில்யர் வகுத்த பிரிவுகளுக்கும் தர்ம சாஸ்திரங்களில் காண்பனவாக மேலே நாம் எடுத்துக் காட்டிய பிரிவுகளுக்கும் வேறுபாடு இருப்பதைக் காணலாம். ப்ரஜ்ஞாபனம் எனப்படும் வகைக்கு இருவர் கூறும் விவரங்களும் வெவ்வேறாக உள்ளன. எனினும் இவற்றை ஒப்பு நோக்கும்போது கௌடில்யர் கூறிய பிரிவுகள் அந்நாளிலே அரசாங்கங்களின் நடைமுறையில் இருந்தன என்று கொள்ளலாம்.

தமிழ்நாட்டிலே கிடைக்கும் சாசனங்களையும் கௌடில்யர் கூறியுள்ள பல பிரிவுகளிலும் அடங்குவனவாக வகுத்துக் காட்டலாம். 'வாசிகலேகை' என்பதனோடு சோழ மன்னர்களின் ஆட்சிக் காலத்திலே அரசன் வாய்மொழியாக இடும் உத்தரவைத் திருவாய்க் கேள்வி என்னும் அதிகாரி கேட்டு எழுத்து மூலம் அனுப்பும் ஓலையை ஒப்பிட்டுக் கூறலாம்.

## 6. மத சம்பந்தமான சாசனங்கள்

நமக்குக் கிடைக்கும் சாசனங்களுள் பெரும் பகுதி நம் நாட்டுச் சரித்திரத்தை எழுதவேண்டும் என்னும் நோக்கத்துடன் ஏற்பட்டவையல்லவென்பதையும், நம் முன்னோர்களுடைய பக்தியும் மதப்பற்றுமே அவற்றுக்கு முக்கிய காரணங்கள் என்பதையும் நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். இந்தக் கலியுகத்திலே யாகங்களைக் காட்டிலும் தானங்களையே புரியவேண்டும் என்றும், அவைகளே புண்ணியம் பயக்கும் என்றும் தர்ம சாஸ்திரங்கள் தெரிவிக்கின்றன. நம் முன்னோர் சந்தர்ப்பம் நேரிட்ட காலங்களிலெல்லாம் தானங்களையும் தருமங்களையும் செய்து வந்ததற்கு இதுவே காரணம் என்னலாம். அதனாலேதான் அத்தகைய தான தருமங்களைத் தெரிவிக்கும் சாசனங்கள் மிகுந்த அளவில் கிடைக்கின்றன.

இவை தவிர, தான தருமங்களைப்பற்றித் தெரிவிக்காமல் மத சம்பந்தமான நோக்கத்துடனே எழுந்த சாசனங்கள் சிலவும் உண்டு.

பொதுவாக இவ் வகுப்பைச் சேர்ந்த சாசனங்கள் மதத்தைப் பரவச் செய்யும் நோக்கத்துடனேயோ, அல்லது மதாசாரியர்களின் ஞாபகார்த்தமாகவோ ஏற்பட்டவையாகும். மதத்தைப் பாவச்செய் யும் நோக்கத்துடன் ஏற்பட்டவற்றிற்கு அசோக மன்னனுடைய சாசனங்களை நாம் உதாரணமாகக் கூறலாம்.

அசோக மன்னனுடைய கல்வெட்டுக்கள் வடக்கே இப்போது பாகிஸ்தானில் சேர்ந்திருக்கும் பெஷாவர் ஜில்லாவில் உள்ள ஷாபாஜ் கரீ என்னுமிடத்திலிருந்து தெற்கே மைசூரில் உள்ள சித்தபுரம், ஆந் திரப் பிரதேசத்தில் எற்றகுடி, கர்நூல் பக்கம் உள்ள ராஜுலமண்டிகிரி ஆகியவை வரையிலும்; கிழக்கே ஒரிஸாவில் கட்டாக்குக்குப் பக்கத்தில் உள்ள தௌலி, கஞ்சம் ஜில்லாவில் உள்ள ஜௌகட ஆகிய இடங்களி லிருந்து மேற்கே கத்தியவார் பிரதேசத்தில் உள்ள கிர்நார் (ஜுநாகத்) வரையில் உள்ள பிரதேசத்தில் பலவிடங்களிற் காணப்படுகின்றன. தர் மத்திற்கு விரோதமாகஇல்லாமலும் நீதிக்கு ஒத்தாப்போலும் நாட்டைப் பரிபாலனம் செய்ய அசோக மன்னன் கொண்டிருந்த உத்தேசத்தையும் மன்னன் அனுஷ்டித்து வந்த மதத்தைத் தவிரப் பிற மதங்களுக்கும் அவற்றிற்குரிய சுயேச்சையை அவன் அளித்திருந்ததையும் அச் சாச னங்கள் தெரிவிக்கின்றன.

அவனுடைய சாசனங்கள் கிடைக்கும் இடங்கள் எல்லாம் அவ னுடைய ஆட்சியில் அடங்கியனவாக இருத்தல்வேண்டும் என் றும், தூரப்பிரதேசங்களில் கிடைப்பவை அவனுடைய நாட்டின் எல் லைப்புறங்களைக் குறிப்பனவென்றும் கருதப்பட்டு வருகிறது. தென் னாட்டில் சேர, சோழ, பாண்டியர்கள் தனியரசர்களாக இருந்ததும் சிரியா, எகிப்து, மசிடோனியா முதலிய பிற நாட்டு மன்னர்களுடன் அசோகன் சிநேக பாவத்துடன் இருந்ததும் அக் கல்வெட்டுகளால் நன்கு வெளியாகின்றன. அன்றி, அக்காலத்தில் மௌரிய சாம்ராஜ் யத்தின் தலைநகர் பாடலிபுரத்தில் இருந்ததென்பதையும், உஜ்ஜயினி, தக்ஷசீலம் முதலிய நகரங்களில் ராஜப் பிரதிநிதிகள் இருந்தனர் என் பதையும் அவை தெரிவிக்கின்றன; அம் மன்னன் கலிங்க நாட்டின்மீது படையெடுத்துச் சென்றதையும், அதன் பயனாக மன்னனுக்கு மதப் பற்று ஏற்பட்டதையும் அறிவிக்கின்றன.

அசோக மன்னனுடைய சாசனங்களில் பல வகைகள் இருக்கின் றன. மைசூர் சமஸ்தானத்தில் பிரம்மகிரி, சித்தபுரம், முதலிய இடங் களிலும் வட இந்தியாவில் ஸஹஸ்ராம், ரூப்நாத் முதலிய இடங்களி லும் உள்ள கல்வெட்டுகள் அசோகன் துறவியான பிறகு பொறிக்கப்

பட்டனவாகவும் சொண்ணகிரி (சுவர்ணகிரி) என்னுமிடத்தில் அசோகன் துறவியாக வசித்துவந்த காலத்தில் செய்த தர்மோபதேசத்தைத் தெரிவிப்பனவாகவும் உள்ளன. இவ்விடம் குறிக்கப்பட்ட சுவர்ணகிரி என்பது மாஸ்கிக்குத் தெற்கேயும் விஜயநகர-ஹம்பிக்கு வடக்கேயும் உள்ள கனககிரி என்னும் ஊராகவோ கர்நூல் ஜில்லாவில் உள்ள ஜொன்னகிரி என்னும் ஊராகவோ இருத்தல் வேண்டும் என்று ஆராய்ச்சியாளர் கருதுவர். எவ்விதமாயினும், அசோகன் துறவு பூண்டநாளில் தென்னாட்டில் வசித்து வந்தான் என்பது விளங்கும்.

பழைய காலத்து மன்னர்கள் யாகங்களைச் செய்து அந்தச் செய்தியைப் பொறித்துவைத்துள்ள கல்வெட்டுகளைக் கொண்டனவாகக் கிடைக்கும் யூப ஸ்தம்பங்களும் இந்த வகையைச் சேர்ந்தனவே. அத்தகைய சாசனங்கள் தமிழ் நாட்டிலே இதுகாறும் கிடைக்கவில்லை. எனினும், அணிமையிலே ஆந்திரப் பிரதேசத்திலும் வடக்கேயுள்ள மற்றப் பகுதிகளிலும் கிடைக்கின்றன.

இத்தகைய யூபஸ்தம்பச் சாசனங்கள் கடல் கடந்த பிரதேசங்களான தென் கிழக்கு ஆகியத் தீவுகளிலும் கிடைத்துள்ளன. அவற்றுள் போர்னியோவிலிருந்து கிடைத்த மூலவர்மனுடைய யூபஸ்தம்ப சாசனங்கள் பிரசித்தமானவை. கி. பி. நான்காம் நூற்றாண்டின் முடிவு அல்லது ஐந்தாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தைச்சார்ந்தனவென்று கொள்ளக்கூடிய பல்லவர்காலத்துக் கிரந்த எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ள அவை, மூலவர்மன் என்னும் அந் நாட்டு அரசன் வைதிக மார்க்கத்தைச் சார்ந்த யாகங்களை நடத்தினான் என்றும் பிராமணர்களுக்கு ஏராளமான தக்ஷிணையும் கோதானங்களும் வழங்கினான் என்றும் தெரிவிக்கின்றன. இவற்றால் தமிழ்நாட்டு நாகரிகமும் கலாசாரமும் அந்நாளில் எவ்வளவு தூரம் கிழக்கே கடல் கடந்து வெளிநாடுகளில் பரவியிருந்தனவென்பது நன்கு தெளிவாகும். (வங்காளத்து ராயல் ஏஷ்யாடிக் ஸொஸைட்டி பத்திரிகை, இலக்கியப் பிரிவு, முதல் வால்யூம்).

யமுனைப் பள்ளத்தாக்கில் அந்நதியின் உற்பத்தி ஸ்தானத்துக்கு அருகே ஜகத்கிராமம்என்னும் இடத்தில் நடந்த புதைபொருள் ஆராய்ச்சியில் ஏராளமான செங்கற்கள் கிடைத்துள்ளன. அவற்றில் ஒவ்வொன்றின் மீதும் ஒரே சமஸ்கிருத சுலோகம் கி. பி. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த எழுத்துக்களால் பொறிக்கப்பட்டிருக்கிறது. சீலவர்மன் என்னும் அரசன் நான்காவது தடவையாக அசுவமேத யாகம் செய்த விபரத்தைத் தெரிவிக்கிறது அது. சீலவர்மன் என்பான் இது

வரையில் வேறு ஆதாரங்களிலிருந்து தெரியவராத யௌதேய வமிசத்தைச் சேர்ந்த அரசனாக இருத்தல் வேண்டும் என்று ஆராய்ச்சியாளர் சொல்வர். (ஜர்னல் ஆப் ஓரியண்டல் ரிஸர்ச், இருபத்தோராம் வால்யூம்.)

சாதவாகன வமிசத்தைச் சேர்ந்த சாதகர்ணி என்னும் அரசன் இரண்டு அசுவமேதங்கள் உள்ளிட்டுப் பல பெரிய யாகங்களைச் செய்ததையும், அவன் தேவி நாகனிகை என்பவள் யாகப்பிராமணர்களுக்கு விலையுயர்ந்த தக்ஷிணைகளைக் கொடுத்ததையும் நாகாகாட் சாசனங்கள் கூறுகின்றன. சாதகர்ணி இறந்த பிறகு அந்த நாகனிகை என்பாள் இளவரசர்களான தன் பிள்ளைகளின் சார்பாக ராஜ்யபாரம் ஏற்றதும் அவற்றால் வெளியாகிறது.

அசோக மன்னனுடைய ரும்மிந்தேயி ஸ்தம்ப சாசனம் மதாசாரியரைப் பெருமைப்படுத்தும் நோக்கத்துடன் வெட்டுவிக்கப்பட்டதாகும். அக் கல்வெட்டால் புத்த பகவான் பிறந்தவிடமாகியதும் நேபாளத்தில் உள்ளதுமான லும்பினீவனம் என்னும் இடம் எது என்பதை நாம் நிச்சயமாகக் கூறமுடிகிறது. அசோகன் முடிசூட்டப்பெற்று இருபது வருஷங்கள் சென்ற பிறகு ஒரு சமயம் தனது நாட்டின் வடகிழக்குப் பாகத்தில் உள்ள அந்த இடத்தை நேரில் தரிசித்ததாகவும், அது சாக்கிய முனிவரின் பிறந்த இடமாதலால் அதைச் சுற்றிலும் சுவர் எழுப்பி அவ்விடத்தில் ஒரு ஸ்தம்பத்தை எழுப்பியதாகவும், லும்மினிகாம (லும்பினீகிராம)த்தார்கள் செலுத்தவேண்டிய சில வரிகளுக்கு விலக்குகள் செய்து கொடுத்ததாகவும் அது தெரிவிக்கின்றது.

இவ்விதமாக, புத்தபகவானுடைய ஞாபகச் சின்னங்களைப் பத்திரப்படுத்திவைப்பதான எண்ணத்தால் ஏற்பட்ட சாசனங்களும் பல சரித்திர உண்மைகளைத் தெரிவிக்கின்றன. வட மதுரையில் உள்ள பெயர்பெற்ற சிங்கத்தூணில் உள்ள கல்வெட்டு ராஜுலன், சோடாஸன் முதலிய க்ஷத்ரபர்களையும் தக்ஷசீலத்துச் சாசனம் பதிகன் என்னும் க்ஷத்ரபனையும் பற்றிய விவரங்களைத் தெரிவிக்கின்றன. புத்தபகவானுடைய ஞாபகச் சின்னங்களைச் சேமித்து வைப்பதற்காகப் பேழைகளை உதவியதைத் தெரிவிக்கும் பட்டிப்ரோலுச் சாசனங்கள் அசோக மன்னன் காலத்தில் வழங்கிவந்த பிராமி எழுத்துகளினின்றும் வேறுபட்ட தென்தேசத்து எழுத்துக்களின் ஒரு வகையைக் காட்டுகின்றன.

ஆசாரியர்கள் முனிவர்கள் முதலிய பெரியோர்களின் சின்னங்களைக் கொண்டு அவற்றின் பேரில் ஸ்தூபங்கள் எழுப்பப்பட்டதைத் தெரிவிக்கும் கல்வெட்டுகளும் இவ் வகுப்பைச் சேர்ந்தனவேயாகும்.

ஸாஞ்சியிலும் ஸோனாரியிலும் கோதீபுத்த கஸ்ஸப கோத்தன், கொடினீபுத்த மஜ்ஜிமன், கோதீபுத்த துந்துபிஸ்ஸன் முதலியோர்களுடைய சின்னங்கள் பத்திரப்படுத்தப்பட்டுள்ளன வென்று அச்சின்னங்களையுடைய சிமிழ்களின் பேரில் காணப்படும் சாசனங்கள் கூறுகின்றன. இச் சாசனங்களால் அசோகன் காலத்தில் எல்லைப்புற நாடுகளில் தர்மத்தைப் பரவச் செய்வதற்காக மொக்கலிபுத்த திஸ்ஸன் என்பவன் பிரசாரகர்களை அனுப்பியதாகத் தீபவம்சம் என்னும் இலங்கைச் சரித்திர நூல் கூறுவது ஊர்ஜிதம் ஆகிறது.

கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இலங்கையிலே விஜயபாஹு மன்னனுடைய ஆட்சி முடியப்போகும் தறுவாயில் பொலந்நறுவையிலே அவ் வேந்தன் 'தலதாயப் பெரும்பள்ளி' என்னும் பெரிய ஆலயம் ஒன்றை எழுப்பினான். புத்த பகவானுடைய புனிதச் சின்னமான அவருடைய (பல்) தந்தத்தின் மீது எழுப்பப் பெற்றதே அவ்வாலயம். இடைக்காலத்திலே, அந்தப் புனிதமான சின்னத்தை அடைந்திருப்பதே அந்நாட்டு அரசுக்குரிய சின்னங்களுள் ஒன்றாக மதிக்கப்பட்டு வந்தது. இவ்விதம் அமைக்கப்பட்ட அந்த ஆலயத்துக்கு மூன்று கைத் திருவேளைக்காரர் தலதாயப் பெரும்பள்ளி என்று பெயரிட்டு அதன் பாதுகாப்பைத் தமிழ் நாட்டு வேளைக்காரப் படைவசம் ஒப்புவித்ததைத் தெரிவிக்கும் தமிழ்ச் சாசனம் ஒன்று அங்கே கிடைக்கிறது. (எபி. இந்திகா, பதினெட்டாம் வால்யூம்).

தெய்வ பக்தி மிகுந்தவர்கள் வழிபடுவதற்காக அங்கங்கே புதிய கோயில்களை நிர்மாணம் செய்த விவரத்தைத் தெரிவிப்பனவாகக் கிடைக்கும் பல்லவ சோழ மன்னர்களுடைய கல்வெட்டுக்களில் பல இவ்விதம் மதப்பற்றினால் உண்டாகியவைகளே. இவ்வகையுள் கிடைப்பவற்றிலே மிகவும் பழமையானது மண்டகப்பட்டுக் குடைவரைக் கோயிலில் கிடைக்கும் பல்லவ அரசனான மகேந்திரவர்மனுடைய கல்வெட்டாகும். (ஷை பதினேழாம் வால்யூம்). நான்கு வரிகளில் எழுதப்பெற்ற ஒரே சம்ஸ்கிருத சுலோகத்தால் ஆன அக் கல்வெட்டு, கல்லில்லாமலும், மரம் இல்லாமலும், உலோகம் இல்லாமலும், சுண்ணும்பு இல்லாமலும், பிரம்மா, ஈசுவரன், விஷ்ணு ஆகிய மூவருக்கும் இருப்பிடமாக அக்கோயில் சமைக்கப்பட்டதைத்தெரிவிக்கிறது. தமிழ் நாட்டில் நிர்மாணிக்கப்பெற்ற முதல் குடைவரைக் கோயில் பூர்த்தியானதைக் கண்டு அம் மன்னன் அடைந்த களிப்பும், பெருமிதமும் அச் சிறு சாசனத்தில் நன்றாக ஒலிக்கின்றன. அதிலிருந்து அதற்கு முன்னர், கோயில்கள் செங்கல், சுண்ணும்பு, மரம், உலோகம் ஆகியவற்றால் நிர்மாணிக்கப்பெற்று வந்தன என்ற செய்தியும் நமக்குத் தெரியு

வருகிறது. இவை காலக்கிரமத்தில் அழிந்துவிடக்கூடிய பொருள் களாகையால் கோயில்கள் அழியாமல் இருப்பதற்காகப் பிற்காலத்தில் கற்களால் எழுப்பப்பெற்று வந்தன.

இவ்விதம் செங்கல்லால் அமைந்திருந்த கோயில்கள் கற்றளி களாக நிர்மாணிக்கப்பெற்ற செய்தியைத் தெரிவிக்கும் பல சாச னங்கள் நமக்குக் கிடைக்கின்றன. தஞ்சாவூர் ஜில்லா திருக்கோடிக் காவிலிருந்து மதுராந்தக உத்தம சோழனுடைய ஆட்சியின் பதினே ராம் ஆண்டு கொண்டதாகக் கிடைக்கும் சாசனம் ஒன்று (1931-ஆம் ஆண்டு 36 நெ.) அம் மன்னனைத் திருவயிறு வாய்த்த பிராட்டியா ரான செம்பியன் மாதேவியார் அவ்வூரில் இருந்த கோயிலைக் கற்றளி யாக எடுப்பித்து, தனிக் கற்களில் பொறித்துக் கிடந்த கல்வெட்டுக்களை கோயில் ஸ்ரீவிமானத்தில் பொறித்துவைத்தாள் என்ற செய்தியைத் தெரிவிக்கிறது. அவள் அவ்விதம் செய்ததால் அவள் காலத்துக்கு முற்பட்டனவாக இருபத்தாறு சாசனங்களின் பிரதிகள் நமக்கு இப் போது கிடைத்துள்ளன. அன்றி அந்தச் சாசனத்திலிருந்து நமக்கு மற்றொரு விபரமும் தெரியவருகிறது. செங்கல் முதலியவற்றால் கோயில்கள் எழுப்பப்பெற்று வந்த அந் நாளிலே சாசனங்களைக் கருங் கற்களில் பொறித்து அந்தக் கற்களைக் கோயிலில் நிறுவியோ நட்டு வைத்தோ இருந்தார்கள் என்பதையும் அறிகிறோம்.

நமக்குக் கிடைக்கும் கல்வெட்டுக்களில் பெரும் பகுதி தான தரு மங்களைப் பற்றியனவே என்பதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக் கிறோம். அத்தகைய தானங்கள் நாட்டை ஆண்ட அரசர்களாலோ அவர்களுடைய அதிகாரிகளாலோ அல்லது நாட்டு மக்களில் தரும சிந்தை வாய்ந்த சிலராலோ அளிக்கப்பட்டவை. அவை பெரும்பா லும் கடவுள் வழிபாட்டிற்காகக் கோயில்களுக்கும், கோயில்களின் சார்பாகத் தேவகன்மிகளுக்கும், வேறு தர்ம ஸ்தாபனங்களுக்கும், மத போதகர்களுக்கும், மடங்களுக்கும் இன்னும் இவைபோன்ற இதர ஸ்தாபனங்களுக்கும் கொடுக்கப்பட்ட தானங்களைக் குறிக்கும்.

கோயிலுக்கு அளிக்கப்பெற்றவை பெரும்பாலும் நிலங்களாகவோ பொன்னாகவோ, இல்லாவிட்டால் ஆடு மாடு போன்ற கால்நடைகளா கவோ இருக்கும். அவ்விதம் அளிக்கப்பட்டவை கோயிலில் விளக்கு எரிப்பது, நித்த நைமித்திக பூஜை நடத்துவது, குறிப்பிட்ட காலங் களில் கட்டளைகளைச் செய்வது, விசேஷ உற்சவங்கள், தபஸ்விகளுக் கும் பக்தர்களுக்கும் உணவளிப்பது, இன்னும் பல பூசை திருப்பணி முதலியவைகளைச் செவ்வனே நடத்துவதற்காகவே ஆகும்,

கோயிலுக்கு அளிக்கப்பெற்ற கால்நடைகளில் ஆடு, மாடு ஆகிய இருவகையும் அடங்கியிருந்தன. இரவும் பகலும் ஒரு நுந்தாவிளக்கு எரிப்பதற்குத் தேவையான நெய் அட்டுவதற்குத் தொண்ணூற்றாறு ஆடுகள் கொண்ட ஒரு மந்தை அளிக்கப்பட்டு வந்தது. அதையே பசுவாகக் கணக்கிடும்போது மூன்று ஆடுகளுக்கு ஒரு பசு வீதம் கொண்டு முப்பத்திரண்டு பசு கொண்ட மந்தையாகக் கணக்கிட்டனர். இந்த விகிதம் அளிக்கப்பெறும் ஆடு 'சாவா மூவாப் பேராடு' என்று வழங்கப்பெறும். முதுமையாலோ, சாவினாலோ மந்தைக்கு ஏற்படும் குறைவைக் குட்டிகளைக் கொண்டு பூர்த்தி செய்து குறிப்பிட்ட தொகை ஆடுகள் எப்போதும் கோயிலார்க்கு உபயோகமாகும் என்பதையே இத்தொடர் குறிப்பதாகும்.

அரசர்கள் தங்களுடைய பிறந்த நாளிலும் தங்கள் தேவிகளுடைய பிறந்த நாளிலும் கோயில்களிலே விசேஷ பூஜை நடத்துவதற்கு ஏற்பாடு செய்துவந்தார்கள். அதற்காகப் பொன்னோ, நிலமோ கோயிலுக்கு அளித்து வந்தனர். பல சமயங்களில் அரசன் பெயரால் இந்த நிவந்தங்களைச் சிற்றரசர்கள் அதிகாரிகள் முதலியோர் ஏற்படுத்துவதும் உண்டு.

சோழர் பேரரசன் இராஜராஜனுடைய தஞ்சைப் பெரிய கோயிற் சாசனங்கள், பல்லவ அரசனான பரமேச்வர வர்மனுடைய கூரம் செப்பேடுகள் முதலியன கோயில்களுக்குக் கொடுக்கப்பட்ட கிராமங்களையும் தானங்களையும் பற்றித் தெரிவிக்கின்றன.

வானவாசியிலிருந்து அரசாண்ட கதம்ப குல அரசர்களின் பழைய சாசனங்களிற் பல ஜினேந்திரருக்கும் அவரைப் பூஜை செய்வதற்காக ஜைன முனிவர் பலருக்கும் தானமாகக் கொடுக்கப்பட்ட கிராமங்களையும் நிலங்களையும் பற்றித் தெரிவிக்கின்றன. அதேபோல, கி. பி. 466-ம் வருஷத்தில் ஸ்கந்த குப்தன் காலத்தில் கொடுக்கப்பட்ட இந்தோர்ச் சாசனம் சூரியபகவானுடைய கோயிலில் நிசதம் ஒரு விளக்கு எரிப்பதற்கு வேண்டிய நெய் கொடுத்து வருவதற்காகச் செய்யப்பட்ட தர்மத்தைத் தெரிவிக்கிறது.

சிவன் கோயில்களிலும் விஷ்ணு ஆலயங்களிலும் பூஜாகாலங்களில் மத்தளம் கொட்டுவதுபோன்ற இசைக்கருவிகளின் ஒலியோடு திருப்பதியம் பாடுவதும் பூஜை முறையின் ஓர் அம்சமாக விளங்கி வந்திருக்கிறது. இதை நடத்துவதற்கான நிவந்தங்களும் ஏற்பட்டிருந்தன. இச்செய்தியைத் தெரிவிக்கும் சாசனங்கள் முதற்பாரந்தக

சோழன் காலத்திலிருந்தே தொடர்ச்சியாகக் கிடைக்கின்றன. (1914-ஆம் ஆண்டு 129 செ; 1915-ஆம் ஆண்டு 199 செ; 1918-ஆம் ஆண்டு 349-செ ; 1923-ஆம் ஆண்டு 176-செ. முதலிய சாசனங்கள்.) இதே போலக் கோயில்களிலே பூஜைவேளையில் வேதம் ஓதுவதற்கும் வேறு ஸ்தோத்திரங்களைப்பாடுவதற்கும் நிவந்தங்கள் ஏற்படுத்தப்பெற்றதைத் தெரிவிக்கும் சாசனங்களும் உள்ளன. (1926-ஆம் ஆண்டு 123-செ.)

அந்நாளிலே திவ்வியதேச யாத்திரை செல்லும் பெரியோர்களுக்கும் தபஸ்விகளுக்கும் உணவு அளிப்பதும் கோயில் நிர்வாகத்தார் ஏற்றுவந்த பொறுப்புக்களுள் ஒன்றாக விளங்கியது. ஆகவே இதற்கு ஆகும் செலவுக்கு ஈடுகட்டக்கூடிய வருமானத்தைக் கொடுக்கும் நிலத்தையோ, பொன்னையோ கோயில்களுக்குக் குறிப்பிட்டு அளித்த செய்தியைத் தெரிவிக்கும் சாசனங்களும் உள்ளன.

கோயம்புத்தூர் ஜில்லா கடத்தூரிலிருந்து கிடைக்கும் கொங்கு நாட்டு மன்னன் விக்கிரமசோழதேவனுடைய ஆட்சியின் இருபத்தோராம் ஆண்டு கொண்ட கல்வெட்டு ஒன்று (மக்கென்ஸி தொகுதியின் 286-செ.) அவ்வரசன் அதிகாரிகளுள் ஒருவனான விக்கிரமசோழ திரிபுவனசிங்கதேவன் என்பான் தன்னுடைய மேகநோயைத் தீர்த்தருளியதற்காக அவ்வூர்ச் சிவபெருமானுக்கு நிலம் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது.

இத்தகைய தருமங்கள் கோயில் தானத்தாரிடம் ஒப்படைக்கப் பட்டிருக்கும். சிற்சில சமயங்களில் கோயில் நிர்வாக உரிமையைப் பரம்பரையாகப் பெற்றிருப்பவரிடமோ நிர்வாகத்துடன் நெருங்கிய தொடர்புகொண்ட தனிமனிதரிடமோ ஒப்படைக்கப்படுவதும் உண்டு. மற்றும் சில சமயங்களில் கோயிலைச் சார்ந்த மடங்களின் பொறுப்பில் விடப்பெறுவதையும் காண்கிறோம். வட ஆர்க்காடு ஜில்லா காவேரிப்பாக்கத்திலிருந்து கிடைக்கும் பல்லவ அரசன் நிருபதுங்கவர்மனுடைய ஆட்சியின் இருபத்தைந்தாம் ஆண்டு கொண்ட சாசனம் ஒன்று (தெ.இ. சாசனங்கள், பன்னிரண்டாம் வால்யூம், 79-செ.) அவ்வூர்க் கோயிலில் விளக்கு எரிக்க அளிக்கப்பெற்ற பொன் 'மடத்து சட்டப் பெருமக்கள்' வசம் ஒப்புவிக்கப்பெற்றதென்பதை அறிவிக்கிறது.

மடங்களுக்கும் வேறு தர்மஸ்தாபனங்களுக்கும் நிவந்தங்கள் அளித்த விவரத்தை அறிவிக்கும் சாசனங்கள் உள்ளன.

தமிழ்நாட்டில் கிடைக்கும் சாசனங்களுள் மிகப் பழமையானவை மலைகளும் குன்றுகளில் உள்ள குகைகளில் கிடைப்பனவும் பிராமி

எழுத்துக்களில் பொறிக்கப்பட்டிருப்பவையுமான சாசனங்கள் புத்த மதத்தையோ சமணமதத்தையோ சார்ந்த துறவிகளுக்கு அந்தக் குகைகளைக் குடைவித்து அளித்த செய்தியைத் தெரிவிப்பனவென்று கருதப் பட்டு வருகிறது.

பீஹார் ராஜ்யத்தில் பாராபர், நாகார்ஜுனி மலைகளிலுள்ள குகைகளில் கிடைக்கும் அசோகன் காலத்தனவும் அவன் பெயரன் தசரதன் காலத்தனவுமான சாசனங்கள் அந்தக் குகைகள் ஆஜிவகதர்சனத்தைச் சார்ந்த துறவிகளின் உபயோகத்துக்காக வழங்கப்பெற்ற செய்தியைக் கூறுகின்றன. (இ. ஆ., இருபதாம் வால்யூம்).

காஞ்சிபுரம் காமகோடி பீடத்தில் அமர்ந்துள்ள சங்கராசாரியருக்கு விஜயநகர வேந்தர்கள் நிலம் அளித்த செய்தியைத் தெரிவிக்கும் செப்பேட்டுச் சாசனங்களைப் பற்றி முன்னரே (உகூஎ பக்கத்தில்) கூறியிருக்கிறோம். இன்னும் கோளகீ மடத்து லக்ஷாத்தியாய சந்தானத்தைச் சார்ந்த சைவ ஆசாரியார்களுக்கு அளித்த தருமங்களைத் தெரிவிக்கும் சாசனங்கள் ஏராளமாகக் கிடைக்கின்றன. அன்றி, காசீ, காஷ்மீரம் முதலிய இடங்களைத் தலைமையாகக் கொண்டு தமிழ் நாட்டில் இயங்கிவந்த வேறு பல மடங்களுக்கும் இத்தகைய தருமங்கள் அளிக்கப்பெற்றுள்ளன.

க்ஷகராத்திர அரசனான நாகபானனுடைய மாப்பிள்ளையான உஷவதாதன் என்பவனுடைய சாசனம் ஒன்று நாசிக் என்னுமிடத்தில் இருக்கிறது. பௌத்த பிக்ஷுக்கள் சிலர் வசிப்பதற்காக ஒரு குகையைக் கொடுத்துதவியதுடன் பொருளையும், தென்னந்தோப்பையும் அவர்களுக்குத் தானம் செய்ததாக அது தெரிவிக்கிறது.

கன்னட தேசத்தில் இப்பொழுது அதிகமாக அனுஷ்டிக்கப்பட்டு வரும் வீர சைவமதம் எப்படி ஏற்பட்டது என்பதைத் தார்வார் ஜில்லாவில் அப்லூர் என்னுமிடத்தில் ஸோமநாதர் கோவில் கட்டப் பட்டதைத் தெரிவிக்கும் ஒரு சாஸனத்தால் நாம் அறிய வருகிறோம். அது ஹாங்கலைச் சேர்ந்த கதம்பகுலத்து மஹாமண்டலேச்வரன் காமதேவனுடைய (சுமார் கி.பி. 1181-1203) காலத்தைச் சார்ந்தது. ஸோமநாதர் கோயிலைப் பற்றியும் அதைக் கட்டிய ஏகாந்தத ராமய்யா வீர சைவமதத்துக்குச் செய்துள்ள பெருந்தொண்டுகள்பற்றியும் அது கூறுகிறது. அம்மதமானது பஸவர் சன்னபஸவர் என்று கூறப்படுகிற மாமன் மருமகன் ஆகிய இருவர்களால் ஏற்படுத்தப்பட்டது என்று பொதுவாக இப்பொழுது கூறப்பட்டு வருகிறது. லிங்காயதர்கள் என்று பொதுவாகக் கூறப்படுகிற வீர சைவர்களும் சற்றேறக் குறைய அதே

கொள்கையைப் பின்பற்றும் ஆராத்தியர்கள் என்று வழங்கப்பெறும் பிராம்மணர்களும் முக்கியமான காரியங்களைச் செய்யப்புகுமுன் நான்கு ஆராத்தியர்களுக்காக நான்கு பாத்திரங்களில் நீரை வைத்து அவர்களை வழிபாடு செய்கிறார்கள். ஆராத்தியர்கள் என்றால் ஆராதிக்கப்பட வேண்டியவர்கள், முனிவர்கள் என்று பொருள்படும். அந்த நான்கு பேர்களும் ரேவணர், மருலர், ஏகோராமர், பண்டித ஆராத்தியர் எனப் படுபவர்கள் ஆவர். வீர சைவ மதத்தை ஸ்தாபித்த பஸவர் காலத்தில், பிஜ்ஜலன் என்பவன் மேலைச்சளுக்கிய நாட்டை அக்கிரமாகக் கைப்பற்றி அரசனாக ஆண்டு வந்திருக்கிறான். ஆனால் அந்தப் பிஜ்ஜலன் இச்சாஸனத்தில் மஹாமண்டலேச்வரன் என்று ஓர் அதிகாரி (கவர்னர்)யாகவே குறிக்கப்பட்டிருக்கிறான். வீர சைவர்கள் இந்நான்கு ஆராத்தியர்களும் பஸவர் காலத்திற்கு முன்பு வாழ்ந்தவர்கள் என்று கூறுவதால், மேலே மூன்றாவதாகக் குறிக்கப்பட்ட ஏகோராமர் எனப் படுவர் அப்லூர் சாசனத்தில் குறிக்கப்பட்ட ஏகாந்தத ராமய்யாவாகவே இருக்கவேண்டும் என்பது நன்கு பெறப்படுகிறது.

மதப்பற்றுக்கொண்டு அளித்தனவாக நம் நாட்டில் கிடைக்கும் சாசனங்களைக் கவனித்துப் பார்த்தால் ஒரு விஷயம் தெரியவரும். ஒரு குறிப்பிட்ட மதம் மட்டுமேயல்லாமல் எல்லாமதங்களுக்கும் அவை வழங்கப்பட்டுள்ளன. அதனால் பல மதங்களும் நம் நாட்டிலே தாராள மாகப் பரவிப் பெருகியிருந்த செய்தி தெரியவரும்.

நமக்குக் கிடைக்கும் சாசனங்களில் பெரும்பாலானவை சிவன் கோவில் விஷ்ணு ஆலயம் ஆகிய இரண்டுக்குமே அளித்த தருமங் களையே தெரிவிப்பனவாகும். எனினும், வேறு மதங்களைப்பற்றிய சாச னங்களும் இல்லாமல் இல்லை. ஜாவா நாட்டு ஸ்ரீவிஜய ராஜ்யத்து அரசன் தமிழ்நாட்டு நாகபட்டினத்தில் புத்த பகவானுக்குச் சூடாமணி வர்ம விகாரம் என்ற பெயரில் ஆலயம் எடுத்த செய்தியையும் அந்த மன்னர்களின் வேண்டுகோளுக் கிணங்கிச் சோழ வேந்தர்கள் அக் கோயிலுக்குப் பல கிராமங்களை அளித்த செய்தியையும் தெரிவிக் கின்றன லீடன் பட்டயங்கள். (எபி. இந்திகா, இருபத்திரண்டாம் வால்யூம்). அந்நாளிலே தமிழ்நாட்டுக்கும் இந்தோனேசியத் தீவுகளுக் கும் இருந்து வந்த உறவு இந்தச் சாசனங்களால் நன்கு விளங்கு கின்றது.

அதேபோல ஜைனப் பள்ளிகளுக்கும் கிராமங்கள் அளிக்கப் பெற்றிருந்தன. சித்தாமூர், திருப்பருத்திக்குன்றம், விஜயமங்கலம் முதலிய இடங்களிலிருந்து கிடைத்தனவாகக் கர்னல் மக்கென்ஸியின்

உதவியாளர்கள் சேகரித்து இந்தத் தொகுதியில் வெளியிடப்பட்ட சாசனங்களை அதற்கு ஆதாரங்களாகக் காட்டலாம்.

சமீபத்தில் காஞ்சீபுரம் காமாக்ஷி அம்மன் கோயிலிலிருந்து கிடைத்ததும் எட்டாம் நூற்றாண்டு எழுத்துக்களில் பொறிக்கப்பெற்றதும் பல்லவ அரசனான நரஸிம்ஹபோத்தரையனுடைய ஆட்சியின் பதினெட்டாம் ஆண்டு கொண்டதுமான தமிழ்ச் சாசனம் ஒன்று ஆஜீவக தர்சனத்தையும் அறிவர் கோயிலையும் குறிப்பிடுகின்றது. (இந்தியன் ஆர்க்கியாலஜி, அறிக்கைச் சுருக்கம், 1954-55)

இவற்றைத் தவிர, புண்ணியஸ்தலங்களுக்குச் செல்லும் யாத்திரிகர்கள் தங்கள் பெயர்களை அவ்விடங்களிற் பொறித்துவைத்து வரும் பழக்கத்தால் உண்டான சாசனங்களிற் பல ஸாஞ்சி, பார்ஹூத் முதலிய இடங்களிற் கிடைக்கின்றன. எந்த எந்தத் தேசங்களிலிருந்து அவ்விதம் யாத்திரிகர்கள் வந்துபோனார்கள் என்பதை அறிய உதவுகின்றன அந்தச் சாசனங்கள். இப் பழக்கத்தை இப்பொழுதும் திருப்பதி போன்ற புண்ணிய ஸ்தலங்களுக்குச் செல்லும் யாத்திரிகர்கள் அனுஷ்டித்து வருகிறார்கள். செங்கற்பட்டு ஜில்லாவில் உள்ள திருக்கழுக்குன்றத்திலிருந்து கிடைத்துள்ள சாசனங்களிலிருந்து கி.பி.பதினேழாம் நூற்றாண்டில் அந்த க்ஷேத்திரத்துக்கு விஜயம்செய் தடச்சு (உலாந்தாக் கும்பெனி) அதிகாரிகளின் பெயர்களும் அவர்கள் வந்துபோன தேதிகளும் கிடைக்கின்றன. (சாசன இலாகா அறிக்கை, 1908-ஆம் ஆண்டு, 79 - பாரா.)

இறந்த பெரியோர்களின் ஞாபகார்த்தமாக அவர்களுடைய வழி வந்தவர்களாலோ சிஷ்யர்களாலோ எழுப்பப்பெற்ற சின்னங்களும் இந்த வகையைச் சார்ந்தனவே.

சமண மதத்தைச் சார்ந்த சந்திரநந்தி என்னும் ஆசாரியர் ஐம்பத்தேழுநாள் உண்ணாவிரத நோன்பு இருந்து உயிர்துறந்ததையும் அவருக்கு அங்கே ஒரு நிசீதிகை எழுப்பியதையும் தெரிவிக்கும் திருநாதர் குன்றிலிருந்து பழந்தமிழ் எழுத்தில் உள்ளதாகக் கிடைக்கும் சாசனம் (1904-ஆம் ஆண்டு 239 நெ.) இந்த வகைக்குச் சிறந்த உதாரணமாகக் கொள்ளலாம். இவ்விதம் சமணமுனிவர்கள் சல்லேகனை நோற்று உயிர் துறந்ததையும் அதற்காக அவர்களுடைய சிஷ்யர்கள் நிசீதிகை எழுப்பியதையும் தெரிவிக்கும் சாசனங்கள் ஏராளமாகக் கன்னட தேசத்தில் கிடைக்கின்றன.

இறந்துபட்ட வீரர்களுக்கு எழுப்பப்பெற்ற நடுகல்களும் இவ் வகையே. பகைவருக்கு அஞ்சாமல் ஆற்றலோடு போர்புரிந்து இறந்து பட்ட வீரர்களுக்கு அவர்கள் இறந்துபட்ட இடங்களிலோ வேறிடங் களிலோ நடுகல் அமைத்து முன்னோர் விழா நடத்திப் பாராட்டி வந்த செய்தி பழைய தமிழ் இலக்கியங்களில் காணப்படுகின்றன. அந் நடுகல்லில் இறந்த வீரர்களின் பெயரும் பெருமையும் சில சமயங்களில் உருவமும் பொறிக்கப்பட்டிருக்கும்.

> " நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்
> பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்
> பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல் "
>
> (அகநானூறு-67)

என்று சங்க நூற்களில் காணும் பழக்கத்தை யொட்டி எழுந்த நடுகற் கள் அங்கங்கே இன்றைக்கும் கிடைக்கின்றன.

லால்குடிக்குப் பக்கத்தில் உள்ள சென்னிவாய்க்கால் என்னுமிடத் திலிருந்து கிடைக்கும் நடுகல் ஒன்றில் பிராமணன் ஒருவனுடைய கழுத்துக்குப் பக்கத்தில் அம்பு துளைத்து அவன் உயிர் துறக்கும் காட் சியில் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. 'தெள்ளாற்றெறிந்து ராஜ்ய மும் கொண்ட' நந்திவர்மனுடைய ஆட்சியின் இருபத்தோராம் ஆண் டில் சேவணர் குதிரைகளுடன் மாவலி வாணராயன் படையெடுத்து வந்து தாக்கி மடமும் சுட்டு, குரவரையும் எரித்த நாளில் ஒரு சிஷ்யன் காக்கப்போய் உயிர் துறந்த செய்தியைத் தெரிவிக்கிறது. அதிலே சோழமன்னர்களான முதல் பராந்தகன், அவன் மகன் அரிஞ்சயன் ஆகியோருடைய பெயர்கள் காணப்படுவதால் கி. பி. பத்தாம் நூற் றாண்டின் தமிழ்நாட்டுச் சரித்திரத்துக்கு அக் கல்வெட்டு மிகவும் முக் கியமானது.

இதேபோல, சதிகளாக உடன்கட்டை ஏறி உயிர்துறந்த பெண் மணிகளைப்பற்றித் தெரிவிக்கும் சாசனங்களும் இவ்வகையைச் சார்ந்த னவே. கி. பி. 1057-ஆம் ஆண்டில் ஒருவன் மல்யுத்தப் போட்டியில் அரசன் உறவினன் ஒருவனைக் கொன்றுவிட்டான். அந்தக் குற்றத் துக்காக அவனுக்கு மரண தண்டனை விதிக்கப்பெற்றது. அவன் மனை வியும் நுங்கநாட்டுச் சிற்றரசன் மகளுமான தேகப்பே என்பாள் பெற் றோர்கள் எவ்வளவோ தடுத்தும் கேளாமல் தன் புருஷனுடன் உடன் கூட்டை ஏறத் தீர்மானித்தாள். இச் செய்தியைத் தெரிவிக்கும் சாசனம்

கன்னடமொழியிலே உருக்கமாகக் காவியம்போல் அமைந்திருக்கிறது. (எபி. இந்திகா, ஆறும் வால்யூம், 213-19 பக்கம்; எபி. கர்நாடிகா, நான் காம் வால்யூம், எச். ஜி. 18.)

தென் ஆர்க்காடு ஜில்லாவில் எலவானாசூர் என்னுமிடத்திலிருந்து சோழ மன்னனான வீரராஜேந்திரன் ஆட்சிக்காலத்துச் சாசனம் ஒன்று (1906-ஆம் ஆண்டு 156 செ.) கிடைத்துள்ளது. அதிலே உடன் கட்டையேறிய ஒருத்தி, புருஷன் இறந்த பிறகு தான் உயிருடன் இருந்தால் தன்னுடைய சக்களத்தியருக்கு அடிமையாக உழைக்க நேரிடும் எனக்கூறி, தன்னை உடன் கட்டை ஏறாமல் தடுப்பவர்கள்மீது சொல்லொணாப் பழிபாவங்களைச் சுமத்திச் சபிக்கிறாள். அதுமட்டு மல்ல; தன்னைக் கட்டி நெருப்பிலே போட முன்வராதவர்கள் மீதும் அவ்விதம் பழி சுமத்துகிறாள் அவள்.

இவ்விதம் உடன்கட்டை ஏறியவர்கள் செயற்கரிய காரியங்களைச் செய்து புண்ணியம் பெற்றவர்கள் என்பது நம்முன்னோர் கருத்து. ஆகவே இவ்விதம் உயிர்துறந்தவளை அவளுடைய வழி வந்தோர்கள் தெய்வப் பிறவியாகக் கருதி வழிபட்டு வந்தனர். மாசதிக்கல்கள் என் னும் இக்கல்கள் நிறுவப்பெற்றதற்கு இதுவே காரணம்.

ஸ்ரீரங்கத்திலிருந்து கிடைக்கும் சாசனம் ஒன்று (இத்தொகுதி யில் 783 செ.) பிராமணன் ஒருவன் கோயிலின் கோபுரத்திலிருந்து கீழே விழுந்து பிராணத்தியாகம் செய்துகொண்டதைத் தெரிவிக்கிறது. கோயிலில் பூஜை சரிவர நடக்காததைக் கண்டு மனம் வருந்தி அதை ஒழுங்குபடுத்துவதற்காகவே அவன் தன்னைப் பலியிட்டுக்கொண்டான். உடனே அதற்கு உரிய பலன் கிட்டியது. பூஜைகள் செவ்வனே நடை பெற ஆரம்பித்தன. அவனுக்கும் பிரம்மமேத சம்ஸ்காரத்தால் அந்தி மக் கிரியைகளை நடத்திக் கோயிலார் அவனைப் பெருமைப்படுத்தினர்.

## 7. உலக வாழ்க்கைபற்றிய சாசனங்கள்

மக்களின் சமூக வாழ்க்கையைப்பற்றியும் அதிலே அவர்கள் அனு பவித்துவந்த உரிமைகள் பற்றியும் இன்னும் அவர்களுடைய சொத்து சுதந்தரங்கள் பற்றியும் தெரிவிக்கும் சாசனங்களும் வேண்டிய அளவு கிடைக்கின்றன.

செங்கற்பட்டு ஜில்லா உத்தரமேரூரிலிருந்து முதற் பராந்தக சோழனுடைய ஆட்சிக் காலத்தனவாக இரண்டு தமிழ்ச் சாசனங்கள் கிடைத்துள்ளன. (இந்தியப் புதை பொருள் இலாகாவின் ஆண்டு

அறிக்கை, 1905). அவற்றுள் அவ்வூர்ச் சபைக்கும் அதன் வாரியங்களுக்கும் உறுப்பினர்கள் குடவோலை மூலம் தேர்ந்தெடுக்கப்படுவதற்கான விதிகளும், அவ்விதம் தேர்ந்தெடுக்கப்படுவோர் பெற்றிருக்க வேண்டிய யோக்கியதாம்சங்களும் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன. இதேபோன்ற சாசனங்கள் தமிழ்நாட்டின் வேறு பகுதிகளிலிருந்தும் கிடைக்கின்றன. அவற்றிலிருந்து அந்நாளிலே அத்தகைய சபைகளும் அவைபோன்ற இதர ஸ்தாபனங்களும் எவ்விதம் நிறுவப்பட்டுச் செயலாற்றி வந்தன வென்பது தெளிவாக விளங்கும். தஞ்சாவூர் ஜில்லாவில் முத்துப்பேட்டைக்குப் பக்கத்தில் உள்ள சித்தமல்லியிலிருந்து இத்தகைய சாசனம் ஒன்று கிடைத்துள்ளது. சோழ வேந்தனான அதிராஜேந்திரனுடைய ஆட்சியில் சுத்தமல்லிச் சதுர்வேதி மங்கலத்துச் சபையார் செய்த விவஸ்தையைக் கூறும் அந்தச் சாசனம் (1946-ஆம் ஆண்டு, 5 செ.) அந்நாளின் பஞ்சாங்கக் குறிப்புகளைக் கொண்டுள்ளது. ஆகவே அது அதிராஜேந்திரனுடைய ஆட்சிக் காலத்தை நிர்ணயிக்கப் பெரிதும் உதவுகிறது. (1944-ல் நான் கண்டுபிடித்த இச்சாசனம் எபி. இந்திகாவில் விரைவில் வெளியாகும்.)

இதேபோல் உழுதுண்டு வாழும் வெள்ளாளன்மக்கள் நிரம்பிய கிராமத்துக்கு ஊர் என்னும் சபையும், வணிகர் நிறைந்த இடத்துக்கு நகரம் என்னும் சபையும் இருந்த செய்தியும் சாசனங்கள் வாயிலாகத் தெரியவருகின்றன. சிற்சில சமயங்களில் ஒரே இடத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட சபைகளும் இருந்து அதன் அதன் காரியத்தைக் கவனித்து வந்ததையும் காண்கிறோம்.

இன்னும், பெரும்பாலும் உழவோர்கள் நிறைந்த 'சித்திரமேழிப் பெரியநாட்டவர்', பல தேசத்து வியாபாரிகள் அமைத்துக்கொண்ட 'நானாதேசி' எனப்பெறும் 'திசை ஆயிரத்து ஐந்நூற்றுவார்', தச்சர், கம்மாளர் போன்றோருடைய 'ரதகாரர்' ஆகிய ஸ்தாபனங்கள் பல தேசங்களுக்கும் பொதுவாகப் பெரிய அளவில் செயலாற்றி வந்த விவரத்தையும் அறிகிறோம்.

இதுகாறும் கிடைத்துள்ள சாசனங்களைக் கவனித்தால் ஒரு விஷயம் தெரியவரும். நம்முடைய வாழ்க்கையில், சமூக வாழ்க்கையிலும் சரி, தனி மனிதர் வாழ்க்கையிலும் சரி, மதம் வெகுவாக ஊடுருவி இரண்டறக் கலந்து நிற்கிறது. மக்களின் சமூக வாழ்க்கை பற்றியவை என்று நாம் இப்போது கருதும் பல காரியங்கள் அந்நாளிலே புண்ணியம் பயப்பவை என்ற எண்ணத்தால் மத அடிப்படையில் முக்கியத்துவம் பெற்றிருந்தன. உண்மையில் நம் வாழ்க்கை முறையிலிருந்து மதத்தைத் தனியாகப் பிரித்துவிடுவது முடியாத ஒன்றாகும்.

பொதுமக்களின் நல்வாழ்க்கைக்கு உபயோகப்படுவனவாகக் குளம் தொடுவது போன்ற நற்பணி செய்த விவரங்களை அறிவிக்கும் சாசனங்கள் கிடைக்கின்றன. வனவாசியிலிருந்து அரசாண்ட கதம்ப வமிசம் எப்படி நிறுவப்பெற்றது என்பதைக் கூறி அதன் பழைய வரலாற்றைக் காவிய நடையில் எடுத்துக் கூறும் கதம்ப காகுஸ்தவர்மன் காலத்துத் தாளகுண்டா ஸ்தம்ப சாசனம் முக்கியமாக அவ்விடம் ஒரு பெரிய குளம் அமைக்கப்பட்ட விவரத்தை அறிவிப்பதாகவே உள்ளது. (எபி. இந்திகா, எட்டாம் வால்யூம்). கத்தியவார்ப்பிரதேசத்தில் ஜுனாகத்திலிருந்து கிடைக்கும் க்ஷத்திரப அரசன் ருத்திரதாமன் காலத்துச் சாசனமும் (ஷை) இதேபோன்றதுதான்; சுதர்சனம் என்னும் பெரிய ஏரியின் கரையைச் செப்பனிட்ட செய்தியை அறிவிக்கிறது. அதிலிருந்து அந்த ஏரி மௌரிய அரசனான சந்திரகுப்தன் காலத்தில் அவனுடைய பிரதிநிதி ஒருவனால் நிர்மாணிக்கப்பட்டதென்பதும், அசோகனுடைய பிரதிநிதி ஒருவன் அதைச் செப்பனிட்டான் என்பதும் தெரியவருகின்றன. அவ்விடத்திலே கிடைக்கும் மற்றொரு சாசனத்தால் பிற்காலத்தில் ஸ்கந்தகுப்தன் என்னும் குப்த மன்னன் காலத்திலே அந்த ஏரிக்கு மறுமுறையும் ஒரு தடவை மராமத்து வேலை நடந்த விவரம் தெரிகிறது. (குப்த சாசனங்கள், 56 பக்கம்).

இராமநாதபுரம் ஜில்லா எருக்கங்குடியிலிருந்து கிடைக்கும் ஒரு தமிழ்ச் சாசனம் (1930-ஆம் ஆண்டு, 334 செ.) நெடுமாறன் ஸ்ரீவல்லபன் என்னும் பாண்டிய அரசன் காலத்தில் எட்டி சாத்தன் என்பான் பாண்டி நாட்டு மக்களுக்குச் செய்த அரும்பெரும் சேவைகளை எடுத்துரைக்கிறது. தூர்ந்து கிடந்த பல குளங்களையும் ஏரிகளையும் செப்பனிட்டதுடன் அவன் புதிதாகவும் பல குளங்களைத் தோண்டினானும். அவன் சேவையை மெச்சி அரசன் அவனுக்கு 'இருப்பைக்குடிக் கிழான்' என்னும் விருதை அளித்தானும். இதே போன்ற சாசனங்கள் நாடு முழுவதும் அங்கங்கே கிடைக்கின்றன.

கடுங்கோடையில் வழிநடை செல்வோர்க்கும் தாகத்தால் தவிப்போர்க்கும் குளிர்ந்த நீர் வழங்கி அவர்கள் விடாயைத் தணிப்பதற்காகத் தண்ணீர்ப்பந்தல்கள் அங்கங்கே நிறுவும் பழக்கம் அந்நாளிலும் காணப்படுகிறது. அவ்விதம் பந்தல் அமைத்து, நீர் வார்ப்பவன் சம்பளம் உள்ளிட்டு ஆகும் செலவுக்குத் தேவையான வருமானத்தை அளிக்கும் நிலத்தையோ பொன்னையோ வழங்கிய செய்தியைத் தெரிவிக்கும் சாசனங்கள் கிடைத்துள்ளன.

இத்தகைய சம்பவங்களை நாம் இப்போது சமூக வாழ்க்கையின் அமைப்புக்கு அவசியமான செயல்கள் என்றே கொள்வோம். ஆயினும்

நம் முன்னோர் இச் செயல்களைப் புண்ணியம் பெறவேண்டுமென்று கருதியே நடத்தினர் எனக் கொள்ளலாம்.

தென்னார்க்காடு ஜில்லாவில் உள்ள எண்ணாயிரம் என்னும் ஊரி லிருந்து சோழ சக்கரவர்த்தியான இராஜேந்திரன் காலத்திய சாசனம் ஒன்றினால் அவ்வூர்ப் பெருமாள் கோயிலில் சில கட்டளைகளை நடத்து வதற்காகவும்; வேதம், வேதாந்தம், தர்க்கம், வியாகரணம் முதலிய வற்றைக் கற்பிப்பதற்காகப் பதினான்கு ஆசிரியர்களையும் முந்நூற்று நாற்பது மாணவர்களையும் கொண்ட ஒரு பாடசாலையை ஏற்படுத்தி ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் சாப்பாட்டிற்கு வேண்டிய ஏற்பாடு களையும் செய்து அவை நன்கு நடைபெறுவதற்கு வேண்டிய செலவு களுக்காகவும் இரண்டு கிராமங்கள் இறையிலியாக அளிக்கப்பட்டதை நாம் அறிகிறோம். (1917-ம் ஆண்டு செ. 333 சாசனம். அம்மாணவர் களில் எழுபது பேர் நன்கு கற்ற சாத்திரர்கள்; பாக்கி இருநூற்று எழுபது பேரும் பூர்வாங்கப்பயிற்சி அடைந்தவர்கள். இராஜராஜ சதுர் வேதி மங்கலம் என்னும் அவ்வூர்ச்சபையார் இந்த ஏற்பாடுகளை அரசன் திட்டம் வகுத்து அளித்த ஓர் உத்தரவுப்படியே அரசனுடைய அதிகாரி களுள் ஒருவன் முன்னிலையில் செய்தனராம். அதே தென்னார்க்காடு ஜில்லாவில் இப்பொழுது திருபுவனி என்று வழங்கப்படும் திருபுவன மஹாதேவி சதுர்வேதி மங்கலம் என்னும் ஊரிலும் இதேபோலச் சில தானங்களைச் செய்து வேறு ஒரு பாடசாலையும், அதைச் சேர்ந்த ஓர் அறச்சாலையும் (ஹாஸ்டல்) இராஜாதிராஜன் காலத்தில் ஏற்படுத்தப் பட்ட செய்தி தெரிய வருகிறது. (1919 ஆண்டு, 176 செ. சாசனம்).

செங்கற்பட்டு ஜில்லாவில் காஞ்சீபுரத்துக்குப் பக்கத்தில் உள்ள திருமுக்கூடல் என்னும் இடத்திலிருந்து வீர ராஜேந்திரன் காலத்துச் சாசனம் ஒன்று கிடைக்கிறது. கி. பி. 1067-ஆம் கொண்ட அக்கல் வெட்டு அவ்வூரில் எழுந்தருளியிருக்கும் மஹாவிஷ்ணுவின் ஆலயத் துக்கு வருஷந்தோறும் ஆகும் செலவுகளையும் அவற்றை நடத்துவதற் காகக் கிடைக்கும் வருமானங்களையும் விவரித்துக் கூறுகிறது. வீர சோழன் என்ற பெயரால் ஆதுலசால (வைத்தியசாலை)யும் மருத்துவம் கற்பிக்கும் கலாசாலையும் கோயிலால் நிர்வகிக்கப் பெற்றுவந்த செய்தி அதிலிருந்து தெரிகிறது. (எபி. இந்திகா, இருபத்தோராம் வால்யூம்).

நல்கூர் நற்பார்ப்பார் போன்ற தனி மனிதர்களுக்கு அளிக்கப் பெற்ற தானங்களும் தானம் செய்தவர்கள் தங்களுக்குப் புண்ணியம் இட்டவேண்டுமென்று கருதிச் செய்தனவே ஆகும்.

மைசூர் சமஸ்தானத்தில் உள்ள மாவல்லி என்னும் ஊரில் ஒரு ஸ்தம்பத்தில் பொறிக்கப்பட்டுள்ள பிராகிருத சாசனம் (எபி. கர்நாடிகா, ஏழாம் வால்யூம், ஷிகர்பூர் 263) வைஜயந்தியிலிருந்து அரசு செலுத்திய ஹாரிதிபுத்ர விஷ்ணுகட சூடுகுலானந்த சாதகர்ணி என்பவன் ஒரு பிராமணனுக்குச் சில கிராமங்களை அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. அதே ஸ்தம்பத்தில் அந்தச் சாசனத்தின் கீழே உள்ள மற்றொரு பிராகிருதக் கல்வெட்டு வைஜயந்தியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட கதம்பமன்னன் சிவ(ஸ்கந்த) வர்மன் என்பான் அதே கிராமங்களை வேறு சிலவற்றோடு முன்னால் பெற்றிருந்தோர்களின் வழியினருகே திரும்பவும் அளித்த செய்தியைக் கூறுகிறது. (ஷை 264 ந.) இந்தச் சாசனம் கதம்ப வமிசத்து மன்னர்களின் ஆட்சிக்காலம் எப்போது நிறுவப்பெற்றதென்பதை நிர்ணயிப்பதற்கு ஒருவகையில் உதவுவதாக இருக்கிறது.

இது போலவே சங்க காலத்தில் இருந்ததாகக் கூறப்படும் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பான் அளித்த ஒரு கிராமத்தை நடுவில் பாண்டிய நாட்டைப் பிடித்து ஆண்டு வந்த களப்பிரர்கள் கைப்பற்றிக் கொண்டு விட்டானும்; பின்னால் மதுரையிலே பாண்டிய அரசு திரும்பவும் நிலைபெற்றபிறகு, தானம்பெற்ற வமிசத்தில் வந்த ஒருவனுக்கு ஜடிலவர்மன் பராந்தகன் என்னும் பாண்டிய மன்னன் இந்தக் கிராமத்தைத் திரும்பவும் அளித்தான் என்ற செய்தியைத் தெரிவிக்கின்றன வேள்விக்குடிச் செப்பேடுகள். (எபி. இந்திகா, பதினேழாம் வால்யூம்.)

மேலைக் கடற்கரையோரத்தில் முற்காலத்தில் யூத வகுப்பினர் குடியேறி இருந்தனர் என்பதையும், அவர்களுக்குச் சிலஉரிமைகளையும், கிராமங்களையும் பாஸ்கர ரவி வர்மன் என்னும் அரசன் அளித்ததையும் கொச்சிச் செப்பேடுகளால் நாம் அறிகிறோம். (ஷை, மூன்றும் வால்யூம்) அதேபோல அந் நாட்டிலேயே கிறிஸ்துவர்கள் குடியேறியதையும் அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட உரிமைகளையும் ஸ்தாணு ரவி, வீரராகவச் சக்கரவர்த்தி ஆகிய மலைநாட்டு அரசர்களுடைய கோட்டயம், திருவள்ளாச் செப்பேடுகள் தெரிவிக்கின்றன. (திருவா. ஆர்க்கி. ஸீரீஸ், இரண்டாம் வால்யூம்).

நாட்டு மக்களில் பொதுவாக அடங்கியிருந்த பல வகைப் பிரிவினரும் இனத்தவரும் தர்ம சாஸ்திரங்களில் கண்டுள்ளபடியே அவர் அவர் தர்மத்தைப் பின்பற்றித் தொழிலையும் நடத்தி வந்தனர். இதை வலியுறுத்தித் தெரிவிக்கும் சாசனங்களும் அங்கங்கே கிடைக்கின்றன. திருச்சிராப்பள்ளி ஜில்லா உய்யக்கொண்டான் திருமலையில் கிடைக்கும்

சோழர் காலத்துச் சாசனம் ஒன்று (1908-ஆம் ஆண்டு 479 செ.) இரதகாரர் வகுப்பைச் சேர்ந்த அனுலோம ஜாதியினர் தங்கள் தொழில்களைச் சாஸ்திரங்களில் கண்டுள்ளபடியே எவ்விதம் நடத்தவேண்டுமென்பதை இராஜாச்ரய சதுர்வேதி மங்கலத்துப் பட்டர்கள் கூடி விவஸ்தை செய்த விவரத்தை எடுத்துக் கூறுகிறது.

அதேபோல, படைவீட்டுப் பிராமணர்கள் தங்கள் பெண்களைக் கன்னியாதானம் செய்து கொடுக்கவேண்டுமேயன்றிப் பெண்களுக்காகப் பணம் பெறக்கூடாது என்றும், அப்படிப் பணம் கொடுக்கும் மாப்பிள்ளைகளும் பணத்தைப் பெறும் பெண்களின் தகப்பன்மார்களும் ஜாதிப் பிரஷ்டம் செய்யப்படுவதுடன் அரசரால் தண்டிக்கவும் படுவார்கள் என்றும் தங்களுக்குள்ளே முடிவுசெய்து தீர்மானித்துக்கொண்டதை விரிஞ்சிபுரத்துச் சாசனம் ஒன்று கூறுகிறது. (தெ. இ. சாசனங்கள், முதல் வால்யூம், பக்கம் 82).

சமூக வாழ்க்கையிலே நாட்டு மக்களின் ஒவ்வொரு பிரிவைச் சேர்ந்தவர்களும் எந்த நிலைமையில் இருந்தனர், அவர்களுக்கு ஏற்பட்ட உரிமைகள் என்ன, என்பன போன்ற விஷயங்களும் சில சாசனங்களில் விவரிக்கப் பட்டிருப்பதைக் காணலாம். பெரும்பாலும் எல்லாப் பிரிவினருமே தாங்கள் அப்போது வகித்துவந்த நிலைமையைக் காட்டிலும் உயர்ந்தவர்கள், ஆகவே அந்த உயர்நிலைக்கான ஏற்றங்களை அனுபவிக்கும் உரிமை பெற்றவர் என்று கூறிவந்தனர். அதற்காக அவர்கள் பல சமயங்களில் தங்கள் பூர்வோத்தரத்தைப்பற்றிக் கட்டுக் கதைகள் புனையவும் செய்தனர். திருச்சிராப்பள்ளி ஜில்லா ஊற்றத்தூரில் மூன்றும் குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் நாற்பதாம் ஆண்டு கொண்டதாகக் கிடைக்கும் சாசனம்(1912-ம் ஆண்டு 409 செ.)இடங்கை வகுப்பார் தங்களைப்பற்றி அந்நாளில் என்ன வரலாற்றை உரைத்து வந்தனர் என்பதைக் கூறுகிறது. அவர்கள் கச்யப முனிவரின் யாகத்தை ஸம்ரக்ஷிப்பதற்காக அக்நிகுண்டத்திலிருந்து தோன்றியவர்களாம். அவர்கள் அரிந்தம சக்கரவர்த்தியின் நாளில் சோழ நாட்டுக்கு வந்து தங்கினார்களாம். அந்தச் சக்கரவர்த்தி அந்தர்வேதி (கங்கை-யமுனைப் பிரதேசம்) பூமியிலிருந்து அழைத்து வந்த பிராமணர்களோடு அவர்களுடைய பணியாளர்களாக வந்து சேர்ந்தவர்களாம், இடங்கைச் சாதியினர். (இப்போது திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் உள்ள) ஐந்து கிராமங்களில் அவர்களுக்கு நிலம் அளிக்கப்பட்டதாம். தங்கள் பூர்வோத்தரத்தைப்பற்றிய விவரங்கள் அவர்களுக்கு நீண்ட காலம் தெரியாமல் மறந்துபோய் இருந்ததாம். அப்பால் சுருதிமான்களுடைய உதவியால் அவர்கள் அதை மறுபடியும் அறிந்தனராம்.

கொங்கு நாட்டுச் சோழன் ஒருவன் வெங்கால நாடு, தென் கொங்கு ஆகிய பிரதேசங்களில் வாழும் கண்மாளர்களுக்கு வழங்கிய உரிமையைத் தெரிவிக்கும் சாசனங்கள் திருச்சிராப்பள்ளி ஜில்லா கருவூரிலிருந்தும் கோயம்புத்தூர் ஜில்லா பேரூரிலிருந்தும் கிடைத்துள்ளன. அவர்களுடைய குடும்பங்களில் நடக்கும் நன்மைதின்மைகளுக்கு இரட்டைச் சங்கு ஊதுவது, மேளம் கொட்டுவது, வெளியில் செல்லும்போது காலில் செருப்பு அணிந்துகொள்வது, வீட்டுச் சுவர்களுக்குச் சுண்ணம்புச் சாந்து பூசுவது, இன்னும் வீட்டு வாசல்களில் தோரணம் அமைப்பது போன்ற உரிமைகள் அவை. இவற்றால் அந் நாளில் அவர்கள் நடத்திவந்த வாழ்க்கைமுறை ஓர் அளவு தெரியவரும்.

கம்மாள (விசுவகர்ம) வகுப்பைச் சேர்ந்த ஐந்து பிரிவினர்களுக்குள்ளும் 'உடன் கூட்டம் வேண்டாம்' என்று தெரிவிப்பனவாகத் திருநெல்வேலி ஜில்லா பிரம்மதேசம், அம்பாசமுத்திரம் முதலிய இடங்களிலிருந்து கிடைத்த மதுரைநாயக்க வமிசத்து அரசன் முதலாம் முத்துவீரப்பநாயக்கருடைய சாசனங்களும் இந்த வகையைச் சேர்ந்தனவே. (1936-ஆம்ஆண்டு 309, 378 நெ.)

பிராமணர்களைப் போலவே பட்டு நூற்காரர்களும் (ஸௌராஷ்டிரர்கள்) (வருஷந்தோறும் பூணூல் போட்டுக்கொள்ளும் ஆவணி அவிட்டம் என்னும்) உபாகர்மத்தைச் செய்துகொள்ளலாம் என்று புகழ்பெற்ற மதுரை ராணி மங்கம்மாள் கி. பி. 1705-ல் உத்தரவிட்டதாகக் கூறும் ஓலைச் சாசனமும், கலியாண காலங்களில் சேணியர்கள் யார் யாருக்கு முதலில் வெற்றிலைபாக்குக் கொடுக்கவேண்டும் என்பதை நிச்சயம் செய்து தெரிவிக்கும் பட்டைச்சுரத்துச் சாசனமும் இப் பிரிவைச் சேர்ந்தவைகளேயாகும்.

கோயிலில் சந்தி விளக்கோ, நுந்தா விளக்கோ எரிப்பதற்காக நிவந்தம் ஏற்படுத்தியதைத் தெரிவிப்பனவாகக் காணும் சாசனங்கள் சிலவற்றுள் அத்தகைய நிவந்தங்களை அவர்கள் தாங்கள் செய்த பாபத்துக்குக் கழுவாயாக ஏற்படுத்தியதாகக் காணப்பெறுகிறது. அவ்விதம் அவர்கள் செய்தது சிலசமயங்களில் தங்கள் மனச்சாட்சியின் பயனுகவும் வேறு சில சமயங்களில் நியாயத்தார் வழங்கிய தீர்ப்பையொட்டியும் ஆகும்.

வடஆர்க்காடு ஜில்லா சீயமங்கலத்திலிருந்து கிடைக்கும் சாசனம் ஒன்று (தெ. இ. சாசனங்கள், ஏழாம் வால்யூம், 68 நெ.) பின் வருவதைத் தெரிவிக்கிறது: ஒருவன் அம்பெய்து தவறுதலாகத் தன் ஊரைச் சேர்ந்த வேறு ஒருவனைக் கொன்றுவிட்டான், அதன்மீது நாட்டவரும்

சம்புவராயரும் கூடி ஆலோசித்து, தற்செயலான தவறுதலால் நேர்ந்த விபத்துக்காக அவன் உயிரை வாங்கவேண்டியதில்லை யென்றும் தூணுண்டார் கோயிலிலே அவன் ஒரு விளக்கு எரித்துத் தன் பாவத்தைக் கழுவிக்கொள்ளலாம் என்றும் முடிவு கூறினர். அவனும் அதன் படியே தூணுண்டார் கோயிலில் விளக்கு எரிப்பதற்காகப் பதினாறு பசுக்களை அளித்தானும்.

அதே ஜில்லா திருவோத்தூரிலிருந்து கிடைக்கும் மற்றொரு கல்வெட்டு (ஷை. 85 ௌ) ஒருவன் வேட்டைக்குப் போன இடத்தில் எய்த அம்பு குறிதவறி வேறொருவனை அடித்துவிட்டதாகவும் அதன் மீது பன்றுட்டார் திரண்டு கோயிலில் விளக்கு எரிக்க அவன் பதினாறு பசுக்களை அளிக்கவேண்டும் என முடிவு செய்தனர் என்பதையும் கூறுகிறது.

மானிடர்களை அடிமைகளாக விற்ற செய்தியைத் தெரிவிக்கும் சாசனங்களும் கிடைக்கின்றன. பெரும்பாலும் அத்தகைய விற்பனைகள் கோயில்களுக்கோ மடங்களுக்கோ செய்யப்பட்டனவாக இருக்கும். தனிமனிதர்களுக்கு இவ்விதம் விற்பனை செய்யப்பட்டவர்களைப்பற்றிய சாதனங்கள் கல்லில் பொறிக்கப்பட்டிருக்காவே. தஞ்சாவூர் ஜில்லாவிலிருந்து கிடைத்த சாசனம் ஒன்றிலிருந்து (1925-ஆம் ஆண்டு 218 ௌ.) சோழர்களுடைய ஆட்சிக்காலத்தில் இரண்டு பெண்கள் தங்களை யண்டியவர்களையும் உறவினர்களையும் சேர்த்து கொண்டு தங்களை ஒரு கோயிலுக்கு விற்றுக்கொண்ட செய்தி தெரியவருகிறது. முதற்குலோத்துங்க சோழனுடைய காலத்தில், கி.பி. 1088-ல், பொறிக்கப்பட்ட சாசனம் ஒன்று (1921-ஆம் ஆண்டு 230 ௌ.) பின் வருவதைக் கூறுகிறது: காளஹஸ்தி கோயிலுக்குச் சொந்தமான தேவரடியார் சிலர் தவறுதலாக அரண்மனை ஊழியத்தில் சேர்க்கப்பட்டு விட்டனராம். அதையறிந்த மன்னன் அவர்களைத் திரும்பவும் கோயிலுக்கே அனுப்பிவிட்டான். அப்போது அரண்மனை ஊழியர்கள் என்பதற்காக அவர்களுக்கு இட்டிருந்த அரசாங்க முத்திரையை நீக்கிக் கோயில் தேவரடியார் என்பதற்காகச் சூல முத்திரை இடப்பெற்றதாம். கொடிய பஞ்சம் நேர்ந்த காலங்களில் வாழ வழி இல்லாதவர்கள் தங்கள் உயிரையும் தங்கள் சந்ததியாரையும் காப்பாற்றிக்கொள்ள அடிமைகளாக விற்றுக்கொண்டு உயிர்தப்பிய விவரங்களும் சாசனங்களிலிருந்து தெரியவருகின்றன.

தனிப்பட்ட மக்களின் சொத்துரிமையைப் பற்றிய சாசனங்களும் கிடைத்துள்ளன,

தஞ்சாவூர் ஜில்லா உடையாளூரிலிருந்து கிடைத்த சாசனம் ஒன்று (1927-ஆம் ஆண்டு 309 நெ.) மூன்றும் இராஜ ராஜ சோழனுடைய ஆட்சியின் ஐந்தாம் ஆண்டில் நிலவிய க்ஷாபத்திலே ஊரில் உள்ளோருடைய நிலங்களின் மூலபத்திரங்கள் அழிந்துபோயினமையால் நான்காம் ஆண்டளவில் உள்ள அனுபோக முறைப்படி நிர்ணயித்துப் புதிய பத்திரங்கள் வழங்க வேண்டி வந்ததென்று கூறுகிறது. அதே ஜில்லா தலைச்சங்காட்டிலிருந்து மூன்றும் இராஜராஜனுடைய ஆட்சியின் பத்தொன்பதாம் ஆண்டு கொண்டதாகக் கிடைக்கும் மற்றொரு கல்வெட்டிலே, (1925-ஆம் ஆண்டு, 213நெ. சாசனம்), அம்மன்னனுடைய ஆட்சியின் ஐந்தாம் ஆண்டிலே நாட்டில் நடந்த துரிதங்களால் பழைய கணக்குகள் அழிந்துபோயினமையால், அனுபோகப் பற்றொழுகையொட்டி ஆதாரச் சீட்டுகளைப் புதுப்பிக்க வேண்டியிருந்தது என்னும் செய்தி காணப்படுகிறது. இவற்றால் மூன்றும் இராஜ ராஜ சோழனுடைய ஆட்சியின் ஐந்தாம் ஆண்டில் (கி. பி. 1220-21) நாட்டிலே மக்களின் உயிருக்கும் பொருளுக்கும் பெருத்த சேதத்தை விளைவித்த கலகம் நடந்த செய்தி தெளிவாகும்.

தென்னார்க்காடு ஜில்லா கீழூர் வீரட்டானேச்வரர் கோயிலிலிருந்து கிடைக்கும் கல்வெட்டு ஒன்றிலிருந்து (இந்தத் தொகுதியில் 42 நெ.) மூன்றும் குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் இருபத்து நான்காம் ஆண்டில் திருக்கோவலூரில் உள்ள சிவன் கோயிலுக்கும் விஷ்ணு ஆலயத்துக்கும் நிலப்பரிவர்த்தனை நடந்த விவரம் தெரியவருகிறது. இந்தப் பரிவர்த்தனையைச் சிவன் கோயிலுக்காகச் சண்டேச்வரப் பெருமான் பெயராலும், விஷ்ணு ஆலயத்துக்காகச் சேனாபதி ஆழ்வார் பெயராலும் செய்து கொண்டார்கள். அந்நாளிலே சிவன் கோயில் நிர்வாகம் சண்டேசுவரர் பெயராலும், அதேபோல விஷ்ணு ஆலயத்தின் நிர்வாகம் சேனாபதியாழ்வார் என்னும் விஷ்வக்சேனர் பெயராலும் நடந்து வந்தன வென்ற விவரம் அதிலிருந்து வெளியாகிறது.

வட ஆர்க்காடு ஜில்லா திருமால்புரம் என்னும் ஊரில் மதுராந்தக உத்தம சோழனுடைய ஆட்சியின் பதினான்காம் ஆண்டு கொண்ட சாசனம் ஒன்று கிடைக்கிறது. (தெ. இ. சாசனங்கள், மூன்றும் வால்யூம், 142 நெ). அது ஒரு விஷயத்தைப்பற்றிய ஒரு நூற்றாண்டுக் கால விவரத்தைக் கூறுகிறது. சிற்றியாற்றூர் என்னும் கிராமம் தொண்டைமானாற்றூர்த் துஞ்சின (முதலாம் ஆதித்திய) உடையாருடைய ஆட்சியின் இருபத்தோராம் ஆண்டில் புதுப்பாக்கத்துச் சபையாருக்குத் தேவதானப் பிரமதேயமாக அளிக்கப்பட்டது. அடுத்த

ஆண்டிலேயே அதற்கான சாசனம் எழுதப்பட்டிருந்தும், உடனே கிராமத்தைத் தேவதானப் பிரமதேயமாகக் கணக்கில் எழுதவில்லை. இந்தக்குறை மதுரையும் ஈழமுங்கொண்ட பரகேசரிவர்ம (முதற் பராந்தக)னுடைய ஆட்சியின் நாலாம் ஆண்டில் நிவர்த்திக்கப் பெற்று வரியிலிடப் பெற்றது. அதுமுதல் புதுப்பாக்கத்துச் சபையார் தாங்கள் செலுத்த வேண்டிய பொருளைத் திருமால்பேற்று மகாதேவர் கோயிலுக்குக் கிரமமாக அளித்து வந்தனர். முதற் பராந்தகனுடைய முப்பத்தாறும் ஆண்டில் புதிதாக அளித்த சிலவற்றைக் கொண்டு புதுப்பாக்கம் சபையார் செலுத்தவேண்டிய பொன் அதிகமாக்கப்பட்டது. அதிகமாகச் செலுத்தவேண்டியதைச் சபையார் சரியாகச் செலுத்தவில்லை. அதன் பிறகு கோயில் அதிகாரிகள் மதுராந்தக உத்தம சோழனிடம் முறையிட்டுக் கொண்டார்கள். அரசனும் காஞ்சீபுரத்தில் தங்கியிருந்த நாளில் விசாரணை செய்து சபையாருக்குத் தண்டம் விதித்து, அவர்கள் முறைப்படி செலுத்தவேண்டுமென்று உத்தரவிட்டான்.

ஸ்ரீரங்கத்திலிருந்த முதற் குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் பதினோராம் ஆண்டு கொண்டதாக ஒரு சாசனம் (1937-ஆம் ஆண்டு 31 செ.) கிடைத்துள்ளது. இராஜ மஹேந்திர சதுர்வேதி மங்கலத்துச் சபையார் அவ்வூர் மும்முடிசோழ விண்ணகர் ஆழ்வார் கோயிலுக்குச் சொந்தமான நிலங்களை எழுபது கழஞ்சு பொன் கொண்டு இறையிலி ஆக்கிய செய்தியைக் கூறும் அக்கல்வெட்டு ரசமான விஷயங்கள் சிலவற்றையும் தெரிவிக்கிறது. "மன்னனுடைய ஆட்சியின் இரண்டாம் ஆண்டில் வலங்கை இடங்கைச் சமூகத்தார்களுக்குள் ஒரு பெருங்கலகம் நடந்தது. அதிலே கிராமம் சுட்டு எரிக்கப் பட்டது; கோயில்கள், புண்ணிய ஸ்தலங்கள் பாழாயின; கோயில் விக்கிரகங்களும் கோயில் பண்டாரமும் கள்வர்களால் சூறையாடப் பட்டன. அவர்களுடைய கொள்ளைக்குத் தப்பிய பொருள்களையும் கோயிலிலே பாதுகாக்க முடியவில்லை. கிராமத்தைப் புனர் நிர்மாணம் செய்து குடியேற்றிக் கோயில்களை ஜீர்ணோத்தாரணம் செய்து, பிராகாரங்களுக்குப் புதிய மதில்களை எழுப்பி விக்கிரகங்களைப் புதிதாய்ப் பிரதிஷ்டை செய்யவேண்டிநேர்ந்தது. அதற்காகச் சபையினர் கோயில் பண்டாரத்திலிருந்து இராஜேந்திர சோழன் மாடைக்கு அரைமாற்றுக் குறைவாக உள்ள ஐம்பது கழஞ்சு பொன்னைக் கடனாகப் பெற்றனர். அதன் வட்டி இருபத்தைந்து கழஞ்சு ஆகியது. மொத்தம் கூடுதலான பொன் எழுபத்தைந்து கழஞ்சில் மூன்றும் ஆண்டில் கோயில் ஜீர்ணோத்தாரணத்துக்கும் புதிய பிரதிஷ்டைக்குமாக ஐந்து கழஞ்சு செலவாகியது. மீதமுள்ள எழுபது கழஞ்சு பொன்னைக்கொண்டு

கோயிலின் நித்த நிவந்தங்களுக்காகச் சில நிலங்களை வாங்கி இறையிலி யாக்கிவிடச் சபையார் முன் வந்தார்கள்.'' இதிலிருந்து நாட்டின் அமைதியான வாழ்க்கைக்குப் பங்கம் நேரிட்ட காலங்களில் கோயில் பண்டாரத்தார் பணத்தை நற்காரியங்களுக்காகக் கடன் கொடுத்து உதவிவந்தார்கள் என்பதும் தெரியவருகிறது.

கல்லிலே இந்தக் கல்வெட்டின் பக்கத்தில், "இந்தக் கல்வெட்டு இராஜமஹேந்திர சதுர்வேதி மங்கலத்துக்கு உரியது" என்றும் குறிக்கப்பட்டுள்ளது. அவ்வூர் சுமார் நாற்பது மைல்களுக்கு அப்பால் உள்ள ஒரு கிராமம் ஆகும். இதைக் கவனித்தால் சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் ஓர் ஊருக்கு உரிய சாசனம் வேறு ஓர் ஊரில் பொறிக்கப்பட்டுக் காணும் பழக்கமும் இருந்ததென்பது தெரியவரும்.

## 8. போலிச் சாசனங்கள்

சாசனங்களெல்லாம் சரித்திர ஆராய்ச்சிக்கு உபயோகப்பட வேண்டும் என்னும் நோக்கத்துடன் எழுதப்பட்டன அல்லவென்பதை யும் அநேகமாக அவை நிலங்கள் முதலியவற்றின் உரிமைச் சீட்டுக்கள் ஆகும் என்பதையும் நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். அவ்வுரி மைகளை அனுபவிப்பதற்கு ஆதாரங்களான அச் சீட்டுக்கள் எவ்வளவு அவசியமென்பதைச் சொல்லவேண்டியதில்லை. இவ்வாறு அவை பெரி தும் உபயோகமாயிருந்ததே ஓர் அபாயத்திற்கும் காரணமாகிவிட்டது. தங்களுக்கு உரிமையில்லாத அனுபோகங்களின் பாத்தியதையை நிலை நிறுத்திக் கொள்ளவும், உண்மையாகவே உரிமையுள்ளவற்றின் ஆதாரச் சீட்டுகள் கைசோர்ந்துபோன விடத்தில் அவற்றிற்குப் பதிலாகவும் புதிய சீட்டுக்கள் சிருஷ்டிக்கப்பட்டு வந்தன. அதனால் கல்லினும் செம் பினும் பொறிக்கப்பட்டு அழிவில்லாமலிருப்பதனாலேயே சாசனங்கள் யாவும் நம்பிக்கைக்கு உரிய ஆதாரங்களெனக் கொள்வது அபாயம். இலக்கியங்களிற் புகுந்து உண்மையேபோல் நிலவிவரும் இடைச் செருகு களைப்போல, சாசனங்களிலும் போலிகள் உண்டு. போலிச் சாச னங்கள் வழக்கிற்கு வந்ததற்கு இதுவே முக்கிய காரணமாகும்.

எவ்வளவுக்கெவ்வளவு ஒரு நாடு பல்வேறு காலங்களில், பல்வேறு வமிசங்களின் ஆளுகையின்கீழ் வந்து அதன் பயனாக இராஜீய, சமூக நிலைமையில் வேறுபாடுகளைப் பெறுகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு அந்த நாட்டில் போலிச் சாசனங்கள் அதிகமாக ஏற்பட இடமுண்டா கிறது. ஒரு நாட்டை வேற்றரசன் பிடித்துக்கொண்டால், அச்சமயத் தில் அந்த நாட்டிலிருந்த இறையிலி யாவற்றையும் தவிர்த்துவிடுவான்;

மறுபடியும் தானே கொடுப்பதுபோலச் சிலவற்றைக் கொடுப்பான். அக் காலத்தில் தானத்தை மறுபடியும் பெற விரும்புவோர் தங்களுக்கு உள்ள பழைய உரிமைகளை ஆதாரங்கள் மூலம் நிலைநிறுத்தவேண்டும். புதிய அரசன் ஒவ்வொன்றையும் கவனித்து, தான் இஷ்டப்பட்டதை மட்டும் புதுப்பித்துக் கொடுப்பான்.

இவ்விதம் பண்டைய தானங்கள் நடுவிலே வேற்றரசர்கள் நாட்டைப் பிடித்துக்கொண்ட காலத்தில் நிறுத்தப்பட்டதையும், பிற்காலத்திற் பழைய பரம்பரையினர் மீண்டும் அரசைப்பெற்ற சமயம் புதுப்பிக்கப்பட்டதையும் பற்றிய குறிப்புகள் நம் நாட்டுச் சரித்திரத்தில் மிகுதியாக உள்ளன.

உதாரணமாக, வேள்விக்குடிச் செப்பேடுகளைக் கூறலாம். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பவன் வேள்விக்குடி என்னும் கிராமத்தைக் கேள்வி அந்தணாளர்க்குத் தானம் செய்திருந்தான். பாண்டிய நாட்டைக் களப்பிரர்கள் கைக்கொண்ட காலத்தில், அவர்கள் அந்தத் தானத்தைத் தவிர்த்துக் கட்டிக்கொண்டுவிட்டார்கள். பின்னர், பாண்டியர்கள் கிளம்பி நாட்டைக் கைக்கொண்டு வெகுகாலம் சென்ற பிறகு, முதலில் தானம் பெற்றவர்களுடைய சந்ததியார், பராந்தகன் நெடுஞ் சடையன் என்னும் அரசனிடம் தங்கள் குறையை முறையிட்டுத் தங்களுக்குள்ள பழைய உரிமைகளை ஆதாரங்களுடன் நிலைநிறுத்தினர். அரசன் அதன்பேரில் வேள்விக்குடி என்னும் பழம்பதியை மீண்டும் அவர்களுக்கு வழங்கினான் என்பதை அச் சாசனம் கூறுகின்றது. இவ்விதம் அந்தச் சாசனம் அந்தக் கிராமத்தின் வரலாற்றை ஐந்தாறு நூற்றாண்டுகளுக்குக் கூறுகிறது.

ராஷ்டிரகூட மன்னனான மூன்றாம் இந்திரன், தான் பட்டத்திற்கு வந்ததும், துலாபாரம் செய்ததுதவிரப் பண்டைய அரசர்கள் அபகரித்துக்கொண்ட நானூறு கிராமங்களை மறுபடியும் தானம் வழங்கினான் என்பதை அவனுடைய கி. பி. 915-ஆம் வருஷத்திய நவசாரிகைச் செப்பேடுகள் தெரிவிக்கின்றன. (ராயல் ஏஷ்யாடிக் ஸொஸைட்டி பம்பாய்க் கிளை பத்திரிகை, பதினெட்டாம் வால்யூம்). அதேபோலச் சாளுக்கிய அரசனான முதலாம் விக்கிரமாதித்தன், தன் தந்தையான இரண்டாம் புலிகேசியை வென்று நாட்டைக் கைக்கொண்ட காலத்து, முடியுடைவேந்தர் மூவர் நிறுத்திய தானங்களைத் தெய்வங்களுக்கும் பிராமணர்களுக்கும் தான் புதுப்பித்ததாகக் கூறிக்கொள்ளுகிறான்.

பண்டைக்காலத்து அரசர்கள் தாங்கள் கொடுத்த தானம் ஆசந்திரார்க்கம் அனுபவிக்கப்படவேண்டும் என்பதையே விரும்பினார்கள்;

ஆகவே தங்களுக்குப் பின் வருபவர்கள் அத் தானங்களை மதித்து அவற்றின் உரிமைகளை அளிக்க வேண்டுமென அவர்களைக் கேட்டுக் கொண்டனர். இவ்விதமான வேண்டுகோள் பொதுவாக எல்லாச் சாசனங்களிலும் காணப்படும். அச் சாசனங்கள் எக்காரணத்தாலோ அழிந்துவிடின், அவ்வுரிமையாளர்கள் போலியாக அவ்வுரிமைகளை எழுதிவைத்துக்கொள்ளுகிறார்கள்.

இவ்விதம் போலிச்சாசனங்களை உற்பத்தி செய்யும் வழக்கம் தொன்றுதொட்டதாகும். கன்னோசியை ஆண்ட ஹர்ஷவர்த்தனன் காலத்தைச் சார்ந்த (கி. பி. 631-2) மதுவனச் செப்பேடுகளால் சோமகுண்டிகை என்னும் கிராமத்தைக் கூடசாஸனத்தின் ஆதரவால் ஒரு பிராமணன் அனுபவித்து வந்த செய்தியும், மன்னன் அதை நிவர்த்தித்து அந்தக் கிராமத்தை வேறு சிலருக்குத் தானம் கொடுத்த செய்தியும் தெரியவருகின்றன. அதேபோலத் தாராசண்டி என்னும் இடத்திலுள்ள கல்வெட்டு ஒன்றால், கன்னோசி அரசனான விஜயசந்திரனின் வேலைக்காரர்களுள் ஒருவனிடமிருந்து சில பிராமணர்கள் கூடாம்பரத்தைப் பெற்று, அதைக் கொண்டு சில கிராமங்களை அனுபவித்து வந்தார்கள் என்பதும், அப்போலிச் சாசனத்தை ஏற்றுக் கொள்ளாது அக்கிராமங்களினின்றும் கடமைகளைப் பெறலாம் என்று மகாநாயகன் பிரதாபன் என்பவன் தனக்குப் பின் வருபவர்களுக்கு அறிவித்தான் என்பதும் தெரிய வருகின்றன.

தரும சாஸ்திரங்களிலே இவ் விஷயத்தைப்பற்றிய குறிப்புகள் காணப்படுவது இவ்வழக்கம் இருந்துவந்ததை வற்புறுத்துகிறது. போலிச் சாசனங்களை உற்பத்தி செய்பவர்களுக்குச் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கும் தண்டனை சிரச்சேதமேயாகும். அந்நூற்களில் சாசனங்களை ஆராய்வதற்கு லேக்ய பரீக்ஷை எனப்படும் விரிவான விதிகள் கூறப்பட்டுள்ளன. அவ்விதிகளின்படி நோக்கினால், இப்பொழுது கிடைத்திருக்கும் சாசனங்களுட் பெரும்பாலன அவற்றிற்கு விரோதமாகவே காணப்படும். சாசனங்களை எழுதுவதற்குக் கடைப்பிடித்த சம்பிரதாயங்கள் நாட்டுக்கு நாடு, காலத்துக்குக் காலம் வேறுபட்டமையே இதற்குக் காரணம் ஆகும்.

இங்ஙனம் போலியாகவுள்ள சாசனங்களைத் தயார்செய்பவர்கள், மூல சாசனத்தில் கண்டிருந்த செய்திகளை அரைகுறையாக அறிந்தோ, முழுமையும் அறியாமலோ, தங்கள் மனம் போல் எழுதிவிடுகிறார்கள். இதனால் இவ்வுண்மையை அறியாத சரித்திர ஆராய்ச்சியாளர்கள் சிலர் அவற்றிற் கண்ட வமிசாவளி முதலியவற்றின் மாறுபாடுகளை உணர இயலாது பிழைபடக் கூற ஏதுவாகிறது.

இவ்விதம் கிடைக்கும் போலிச் சாசனங்கள் மிகவும் குறைவா னவே; ஆயினும் அவை யாவும் செம்பிலேயே உள்ளன. கல்வெட்டுக் களில் கிடையா. ஏனெனில், செப்பேடுகளில் பொறிப்பதை இரகசிய மாக முடித்துவிடலாம். கல்வெட்டுக்களோ கோயில் முதலிய பொது இடங்களில் பொறிக்கப்படவேண்டும். அன்றி, அவற்றைப் பொறிப்ப தற்குக் கிராமஉத்தியோகஸ்தர்கள் முதலிய பலரது அனுமதியைப் பெறவேண்டியதால் பகிரங்கமாகப் போய்விடும். இதனாலேதான் போலிச் சாசனங்கள் கற்களில் காணப்படவில்லை.

இராமநாதபுரம் ஜில்லா திருப்புத்தூர்ச் சிவன் கோயில் சுவரில் பொறிக்கப்பட்டுள்ள சாசனம் ஒன்று (1908-ஆம் ஆண்டு 127 நெ.) போலிச்சாசனம் பற்றிய சில விவரங்களைக் கூறுகிறது. சகாப்தம் 1309, அதாவது கி.பி. 1387-ஆம் ஆண்டில், அவ்வூர் மூலபரிஷத் மஹா சபையார் ஊரின் கணக்குக் காணியை விற்றுக்கொடுத்த செய்தியைத் தெரிவிக்கும் அக்கல்வெட்டு அவ்விதம் விற்கவேண்டிய சந்தர்ப்பம் எப்படி நேர்ந்தது என்பதைப் பின்வருமாறு கூறுகிறது. அவ்வூரில் அதற்கு முன் இருந்த கணக்கன் அந்த ஊரில் தனக்கு இல்லாத சில உரிமைகளைக் கொண்டாட விரும்பி, ஒரு தட்டானுடன் சதியாலோசனை செய்து சபையார் தனக்கு அவற்றை அளித்ததாகக் கல்தச்சன் ஒரு வனைக் கொண்டு கோயில் சுவரில் இரகசியமாகக் கல் வெட்டச் செய் தான். செய்தி வெளியாகிவிட்டது. கணக்கன் ஊரை விட்டு ஓடி விட் டான். தட்டானும் கல் தச்சனும் 'கண்மாளர்' வசம் ஒப்புவிக்கப்பட் டனர். கண்மாளர்கள் குற்றவாளிகளை 'அழியச்செய்து' சபையாருக்குப் பொருந்திய பரிஹாரங்களைச் செய்தனர். அவ்விதம் ஓடிப் போன கணக் கனுடைய காணிதான் சபையாரால் (பறிமுதல் செய்யப் பெற்று) விற்கப் பட்டதாம்.

சாசனங்களை நாம் கூர்ந்து கவனித்தால் அவை போலியா, உண்மையா என்பதைச் சுலபமாகத் தெரிந்துகொள்ளலாம். போலிச் சாசனங்களை அறிந்துகொள்வதற்கு அடியிற் கண்டவை முக்கியமான பரீக்ஷைகளாகும்.

பண்டைய சாசனங்களைப் பொறித்த வினையாளர்கள் அவற்றை அழகாகவும், எழுத்துக்களை நன்கு விளங்கும்வண்ணமும் பொறித் துள்ளார்கள். மேலும், ஏடுகளில் எழுதப்பட்ட சாசனங்கள் அவ்வக் காலத்திற் கேற்றவாறு உருவ வேறுபாடுகளை உடைத்தாயிருந்தன. தென்னாட்டிற் காணப்படும் பழைய காலத்துச் செப்பேடுகள் சுவடி

போன்ற நீண்ட வடிவத்தையும், விஜயநகர அரசர் காலத்துச் செப்பேடு கள் புத்தக வடிவையும் உடையன.

பண்டைக்காலத்து வழக்கிலிருந்த எழுத்துக்கள் நாளடைவில் வளர்ச்சியடைந்து இப்பொழுதுள்ள நிலையை அடைந்திருக்கின்றன. இவ்வெழுத்துக்களும் ஒவ்வொரு தேசத்திலும் வெவ்வேறு விதமான வளர்ச்சியைப் பெற்றுள்ளன. ஆதலின், ஒரு சாசனம் எந்த நாட்டில், எந்தக் காலத்தில் ஏற்பட்டதோ, அக்காலத்தில், அந்நாட்டில் வழங்கி வந்த எழுத்துக்களாற் பொறிக்கப்பட்டிருத்தல்வேண்டும். அவ்வாறன்றி மிகவும் பிற்பட்டகாலத்து எழுத்துக்களையோ வழக்கொழிந்தஎழுத்துக் களையோ கொண்டு எழுதப்பட்டிருக்குமானால், அது போலிச் சாசனம் என்று நாம் நிச்சயமாகக் கூறலாம்.

சாசனங்கள் பொதுவாகத் தானங்களையே குறிப்பனவாகும். தான சாசனங்களில் எங்கெந்த விஷயங்கள் கூறப்படவேண்டும் என்பதைத் தர்ம சாஸ்திரங்கள் விரிவாகக் கூறுகின்றன. அவை, தானங் கொடுத் தோன், அவனது வமிசாவளி, தானம் பெற்றவர், கொடுக்கப்பட்ட தான விபரம், காலம், தானத்திற்குரிய பாதுகாப்புகள், சாட்சி முதலி வாகும்.

தான பத்திரங்களை எழுதுவதில் ஒவ்வொருகாலத்தில் ஒவ்வொரு விதமான உரைநடை வழங்கி வந்திருக்கிறது. தானம்பெற்றோர்கள் அனுபவிக்க வேண்டிய உரிமைகளும் வெவ்வேறு காலங்களில் வெவ் வேறு விதமாகக் கூறப்பட்டுள்ளன. உதாரணமாக, உடும்போடி ஆமை தவழ்தவெல்லாம், சாவாமூவாப் பேராடு, கற்று, முற்றூட்டு என்பன போன்ற சொற்கள் ஓரோர் காலங்களில் வழங்கிவந்து, பின்பு வழக் கொழிந்தன. சாசனங்களின் உரைநடை சரியானபடி இல்லாவிட்டால், அவற்றைப் போலியென நாம் நிச்சயமாகக் கூறலாம்.

சாசனங்களிற் குறிக்கப்படும் காலம், தேசந்தோறும் மாறுபட் டிருக்கும். சகம், கலி, கொல்லம், புதுவைப்பு, விக்கிரம ஆண்டுகள் போலப் பல அப்தங்கள் வழக்கில் இருந்துள்ளன. பாண்டிய சாசனங் களில் 'இரண்டாம் ஆண்டைக் கெதிர் பதினாலாமாண்டு' என்பதுபோலப் பொதுவாக ஈராண்டுகள் குறிக்கப்பட்டுள்ளன. இதைப்போலவே, மாதம், தேதி, நாள், நக்ஷத்திரம் முதலியவற்றைக் குறிப்பதிலும் மாறு பாடுகள் உள. இவையாவும் சரியான முறையில் உபயோகப்படுத்தப் பட்டிருத்தல் வேண்டும். தானங்கள் பொதுவாகக் கிரஹணம் முதலிய புண்ணியகாலங்களிலேதான் கொடுக்கப்படுவது மரபு. இதை அனு சரித்துப் போலிச் சாசனங்களைச் சிருஷ்டிப்பவர்களும், அந்தத் தானங்

கள் ஏதாவது சூர்ய சந்திர கிரஹணங்களை முன்னிட்டுக் கொடுக்கப்பட்டன எனக் கூறுவதுண்டு. கணிதமுறைப்படி அவற்றை ஆராய்ந்தால் சில சமயங்களில் அவ்விதமான கிரஹணங்களே ஏற்பட்டிருக்க முடியா வென்பது புலப்படும்!

போலிச் சாசனங்களை எழுதுபவர்கள் பொதுவாகப் பிரசித்தி பெற்ற ஓர் அரசன் கொடுத்தனவாகக் கூறக்கூடிய தானங்களையே சிருஷ்டிப்பார்கள். அங்ஙனம் அவர்கள் எழுதும்பொழுது அந்த அரசனுடைய சாசனங்களுள் ஏதோ ஒன்றைப் பின்பற்றியே தயாரிப்பார்கள். ஆகவே அந்த அரசனுடைய பிரசஸ்தியைப் பழைய சாசனத்தில் கண்டபடியே வைத்துக் கொண்டு மேலே தாங்கள் விரும்பிய உரிமை தானம்வழங்கப் பெற்றதாக எழுதிக்கொள்வார்கள். ஆகவே இத்தகைய சாசனங்களில் தானப் பகுதியையே நாம் முக்கியமாகப் பிற்காலத்திய சிருஷ்டி என்று தள்ளி விடவேண்டும். அரசனுடைய பிரசஸ்திப் பகுதியோ போலிச்சாசனத்தைச் சேர்ந்ததேயாயினும் பெரும்பாலும் பழைய சாசனம் ஒன்றன் பிரதியாகவே இருக்குமாதலால் அவ்விதம் விலக்கப் படவேண்டியதல்ல.

வாதாபிச் சாளுக்கியர்கள் அளித்தனவாகக் கூறப்படும் சாசனங்களில் சில போலிச் சாசனங்களும் கிடைத்துள்ளன, அவை செப்பேடுகளில் அறுநூறு ஆண்டுகளுக்குப் பின்னால் வழங்கிய எழுத்துக்களால் பொறிக்கப்பட்டுள்ளன. அவை போலிச்சாசனங்களே ஆயினும் சிற்சில அம்சங்களில் சரித்திர ஆராய்ச்சிக்கு உபயோகமானவை என்றே ஆசிரியர்கள் கருதுகிறார்கள்.

சிற்சில சமயங்களில் கிடைக்கும் சாசனங்களில் அவை மூல சாசனங்கள் அல்லவென்றும், அவற்றின் பிரதிகள் எனவும் கூறப்பட்டிருப்பதுண்டு. ஆயினும் மூலம் நமக்குக் கிடைப்பதில்லை. இப்படிப்பட்ட சாசனங்களையும், முக்கியமாகச் செம்பில் உள்ளவற்றை, நாம் நம்பமுடியாது. இம்மாதிரியான ஒரு பிரதியை நாம் ஆராயுங்கால், எழுத்துக்களின் வரிவடிவங்களைத் தவிர மற்றைய பரீக்ஷைகளின் முடிவாகச் சாசனம் எந்தக் காலத்தைச் சார்ந்ததாகக் கூறப்படுகின்றதோ அந்தக் காலத்திற்கு ஏற்றபடி இருக்கிறதா என்பதைக் கவனித்தல் வேண்டும். தமிழ்நாட்டிற் கிடைக்கும் கல்வெட்டுக்களில் இம்மாதிரியான பிரதி சாசனங்கள் பல உள. பொதுவாக, அப்படிப்பட்டவை பழையகோயில்களைப் பிரித்துக்கட்டுவதற்கு முன்பு அவற்றின் சுவர்களில் காணப்பட்ட கல்வெட்டுகளைப் பெயர்த்தெழுதி வைத்துக்கொண்டு புதிய கட்டிடம்முடிந்த பிறகு பொறிக்கப்பட்டனவாகும்,

எழுதுவோரின் பிழையால், மூலத்திற்கும் பிரதிக்கும் வேறுபாடுகள் ஏற்படுவது இயல்பு. ஆராய்ச்சியாளர்கள் அவற்றைச் சுலபமாகக் கண்டு கொள்ளுதல் கூடும்.

இராஷ்டிரகூட அரசனான முதலாம் அமோகவர்ஷன் காலத்தில் கி. பி. 860-ஆம் ஆண்டில் கொடுக்கப்பட்ட ஒரு செப்பேட்டுச் சாசனத்தை ஆதாரமாகக் கொண்டு கல்லில் வெட்டப்பெற்றதாகக் குறிக்கப்படும் கல்வெட்டு ஒன்று தார்வார் ஜில்லா கொன்னூர் என்னுமிடத்திலிருந்து கிடைக்கிறது. (எபி. இந்திகா, ஆறும் வால்யூம்). கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் இருந்தவராகக் காணும் மேகசந்திரரின் குமாரரான வீரநந்தி என்னும் ஜைன ஆசாரியர் செப்பேட்டிலிருந்து வாசித்துச் சொல்லியபடி கல்வெட்டு தயாரிக்கப்பட்டதாம். ஆயினும் அதிலே காணும் சில தவறுகளைக் கொண்டு அவரால் சரியாக வாசித்துச் சொல்லமுடியாததாலோ வேண்டுமென்றே திருத்திக் கூறியதாலோ தான் அந்தத் தவறுகள் ஏற்பட்டிருத்தல் வேண்டும் என்பதை நாம் நிச்சயமாகக் கூறலாம்.

சேக்கிழார் பிறந்த ஊரான குன்றத்தூரிலிருந்து செப்பேட்டுச் சாசனம் ஒன்று கிடைத்துள்ளது. செப்பேடு விஜயநகர ஆட்சிக் காலத்தில் வழக்கிலிருந்த உருவம் கொண்டது, எனினும் 'கச்சியுந் தஞ்சையும் கொண்ட கன்னர தேவ'னுடைய ஆட்சிக் காலத்தனவாக மூன்று கல்வெட்டுக்களையும் சோழ மெய்க்கீர்த்திப் பகுதிகளின் சில வரிகளையும் கொண்டிருக்கிறது. கல்லில் காணும் உருவத்திலேயே பெயர்த்தெழுதியதாகக் காண்பதால் சரியாகவும் வாசிக்கமுடியாது. இவ்வளவு இருந்தும் அதை ஒரு போலிச் சாசனம் எனவே கொள்ள வேண்டும்.

இவ்விதம் போலிச் சாசனங்களை உண்டாக்குவது சமீப காலத்திலும் நடந்துள்ளது; இப்பொழுதும் நடந்து வருகின்றது. மேலைக் கங்க அரசனான இரண்டாம் சிவமாரன் என்பவனால் கி. பி. 807-ஆம் வருஷத்தில் கொடுக்கப்பட்ட தானத்தைத் தெரிவிப்பதாக எழுதப்பட்டுள்ள சுரதேனுபுரச் செப்பேடுகள், சென்ற நூற்றாண்டிலேதான் மைசூர் ஸம்ஸ்தானத்தின் இனாம் கமிஷனர் முன்பாகத் தாக்கல் செய்வதற்காகத் தயார் செய்யப்பட்டனவாகும் என்னும் செய்தியை மைசூர் சாசன இலாகா அதிகாரியாயிருந்த ரைஸ் குறித்துள்ளார்.

அதேபோல, வங்காள ஏஷ்யாடிக் ஸொஸைட்டியின் புத்தகசாலையில் ஒரு செப்பேடுஉள்ளது; அது தானபத்திரம் அல்ல. கி. பி. 1347-இல் வடஇந்தியாவில் முஸ்லிம் அரசர்களுடன் நடந்த ஒரு சண்டை

யைப் பற்றிக் கூறுகின்றது. கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் ஆண்ட அசோக மன்னனின் கல்வெட்டுக்களிற் காணப்படும் எழுத்துக்களைக் கொண்டு இவ்வேடு பொறிக்கப்பட்டுள்ளது. இச்சாசனத்துள் அந்த எழுத்து 'பாலி' என்னும் பெயரால் குறிக்கப்பட்டிருக்கிறது. பாலி என்பது ஒரு மொழியே அன்றி, எழுத்தின் வகை அல்ல என்பதை நாம் அறிவோம். சாசனம் ஸம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்டுள்ளது. அசோக மன்னன் காலத்தைச் சார்ந்த ஸம்ஸ்கிருத சாசனம் ஒன்றும் இது வரையில் கிடைத்ததில்லை. இச்சாசனத்தில் காணப்படும் எண்கள் தற்கால வழக்கில் உள்ளவைகளேயாகும். பெயர்களோ, ஆங்கில நாகரிகம் நம் நாட்டில் புகுந்த பிறகு அவை திரிபுபெற்று அடைந்த உருவில் எழுதப்பட்டுள்ளன!

## 9. சாசனங்களைப் பொறித்திருக்கும் பொருள்கள்

நாம் இதுகாறும் சாசனங்கள் தெரிவிக்கும் விஷயங்களைக்கொண்டு அவற்றைப் பலவகைகளாகப் பிரித்து ஆராய்ந்தோம். அவை சுட்ட மண் முதல் தங்கம் வரையில் உள்ள பலவகைச் சாமான்கள் மீதும் பொறிக்கப்பட்டுக் காணப்படுகின்றன வென்பதை நாம் முன்னமேயே கூறியிருக்கிறோம். அதனால் அவை எவ்வெவற்றின்பேரில் பொறிக்கப் பட்டுள்ளன வென்பதை ஆராய்ந்தாலும் அவற்றைப் பல வகைகளாகப் பிரிக்கலாம். ஆயினும் அப்பிரிவுகள் யாவும், உலோகங்கள், உலோக மல்லாதவை என்னும் இரு பெரும் பிரிவுகளுள் அடங்கிவிடும்.

### உலோகங்கள்

உலோகங்களிலே செம்புதான் அதிகமாக உபயோகிக்கப் பெற்றதாயினும், தங்கம், வெள்ளி, பித்தளை, வெண்கலம், இரும்பு ஆகிய வேறு பலவும் உபயோகப்பட்டுள்ளன.

**1.** தங்கம்: ருருஜாதகம், குருதம்மஜாதகம் போன்ற புத்த ஜாதகக்கதைகளிலிருந்து முன்னாளிலே செல்வச்சீமான்களான வணிகர்களுடைய குடும்பப்பத்திரங்கள், ராஜசாசனங்கள், தர்மோபதேச வாக்கியங்கள், அழகிய கவிதைகள் ஆகியவை பொன்னிலே பொறிக்கப் பட்டு வந்தனவென்று தெரிய வருகிறது. ஒருகால் ஜாதகக் கதைகள் விவரிக்கும் வாழ்க்கை லக்ஷ்யவாழ்க்கையின் வருணனையாக இருக்கலாம். தங்கம் விலையுயர்ந்த பொருள்; எளிதில் யாவருக்கும் கிட்டியிராது. பெரும்பாலும் சம்பிரதாயமான காரியங்களிலும் ஆடம்பரவிஷயங்களிலுமே பொன்னை உபயோகித்திருப்பார்கள். இன்றைக்கும் ரக்ஷையாக அணியப் பொன் தகட்டிலே யந்திரங்களை எழுதிவருகிறார்கள்.

இதுகாறும் நமக்குப் பொன்னில் எழுதியனவாகக் கிடைத்த சாச னங்கள் மிகச் சொற்பமே. பஞ்சாபில் ஸிர்ஸுக்கிற்கு அருகில் கங்கு என்னுமிடத்தில் உள்ள பௌத்த ஸ்தூபத்தில் காணிக்கை செலுத்திய செய்தியைத் தெரிவிக்கும் சாசனம் ஒன்று தங்கத் தகட்டில் கரோஷ்டி எழுத்தில் பொறிக்கபட்டுக் காணப்படுகிறது. (கன்னிங்ஹாம் எழுதிய புதை பொருள் ஆராய்ச்சி அறிக்கை, இரண்டாம் வால்யூம், 130 பக்கம்).

கி.பி. நான்கு அல்லது ஐந்தாம் நூற்றாண்டு எழுத்துக்களிலே புத்தமத சூத்திரங்களையும் பாலி மொழிச் சுலோகம் ஒன்றையும கொண்ட இரண்டு தங்கத் தகடுகள் பர்மாவிலிருந்து கிடைத்துள்ளன. (எபி. இந்திகா, ஐந்தாம் வால்யூம்). இன்னும் பர்மா தேசத்து ஆவா நாட்டு அரசனுக்கும் போர்ச்சுகீசியருக்கும் ஏற்பட்ட உடன்படிக்கை ஒன்றைத் தங்கத்தகட்டில் எழுதித் தந்தப்பேழையில் வைத்து அளித்த தாகப் பர்ணல் குறித்திருக்கிறார். (தென்னிந்தியப் பிராசீனலிபி, பக்கம் 93). அதேபோல, கோபகா பட்டினத்திலிருந்த போர்ச்சுகீசியத் தலைவ னுக்குக் கி.பி. 1514-ஆம் ஆண்டில் விஜயநகர மன்னர் (கிருஷ்ணதேவ ராயர்) அனுப்பிய கடிதத்தைத் தங்கத்தகட்டில் பொறித்து அனுப்பி னாராம். (ஷை பக்கம் 90).

2. வெள்ளி: இது தங்கத்தைப்போல் அவ்வளவு அதிக விலை பெற்றதல்ல; ஆதலின் வெள்ளியில் பொறிக்கப்பட்ட சாசனங்கள் தங்கத்தைக் காட்டிலும் கொஞ்சம் அதிகம் என்னலாம்.

கிருஷ்ணா நதி தீரத்தில் உள்ள பட்டிப்ரோலு ஸ்தூபத்திலும், (தென்னிந்தியப் புதை பொருள் ஆராய்ச்சி, ஆறாவது வால்யூம்), வட நாட்டில் தக்ஷசில ஸ்தூபத்திலும் (ராயல் ஏஷ்யாடிக் ஸொஸைட்டி பத்திரிகை, 1914, 1915-ஆண்டுகள்), இன்னும் ராவல்பிண்டி ஜில்லாவில் மாணிக்கியாலா என்னுமிடத்தில் உள்ள ஸ்தூபத்திலும் (கன்னிங்ஹாம் எழுதிய புதை பொருள் ஆராய்ச்சி அறிக்கை, இரண்டாம் வால்யூம், பக் கம் 160) கிடைத்த சிறு சாசனங்கள் வெள்ளியிலே பொறிக்கப்பட்டு இருக்கின்றன.

தஞ்சை நாய்க்க வம்சத்துக் கடைசி மன்னனான விஜயராகவ நாய்க் கர் நாகபட்டினத்தை டச்சுக்காரர்களுக்குக் கொடுத்ததைத் தெரிவிக்கும் சாசனம் தெலுங்கிலே வெள்ளியேட்டிலே பொறிக்கப்பட்டுள்ளது. தஞ்சை மராத்திய மன்னர்களில் முதல் அரசனான எக்கோஜி கி. பி. 1676-ல் அதை ஊர்ஜிதம் செய்து எழுதிய தமிழ்ச் சாசனமும் வெள்ளி யேட்டிலே எழுதப்பட்டுள்ளது. இவ்விரு ஏடுகளும் படேவியா பொருட் காட்சி சாலையில் வைக்கப் பட்டிருக்கின்றனவாம். விஜயநகரத்துக் கடைசி

மன்னனை மூன்றும் ஸ்ரீரங்கனுடைய தேவிக்கும் குமாரர்களுக்கும் அழிந்துபோன விஜயநகர சாம்ராஜ்யத்தின் ஸ்தானத்தில் மஹாராஷ்டிர ராஜ்யத்தை ஏற்படுத்திப் பெரும் புகழ் பெற்ற சிவாஜி மன்னன் கொடுத்த உரிமைகளும் தானங்களும் வெள்ளியேடுகளில் பொறித்து அளிக்கப்பட்டனவாம்.

சமீப காலத்திலே வெள்ளி யேட்டிலே எழுதப் பெற்ற பாலி பாஷை நூல் ஒன்று இலங்கையிலிருந்து கிடைத்ததாக டாக்டர் பர்னல் கூறியிருக்கிறார். தங்கமுலாம் வெள்ளி முலாம் பூசிய ஏடுகளில் எழுதப் பட்ட நூல்கள் லண்டன் பிரிட்டிஷ் மியூசியத்தில் உள்ளனவாம்.

3. பித்தளை: தங்கம், வெள்ளி இவற்றைக் காட்டிலும் பித்தளை யில் பொறிக்கப்பட்டுள்ள சாசனங்கள் சற்று அதிகமாகவே காணப்படு கின்றன. எனினும், சாசனங்களை எழுதிய தனி ஏடுகள் கிடைக்கவில்லை. அவை பெரும்பாலும் விக்கிரகம் முதலியவற்றின்மீதே காணப்படும்.

அப்கானிஸ்தானத்தைச் சேர்ந்த வர்தக் என்னுமிடத்தில் ஞாபகச் சின்னங்களைத் தாங்கி நிற்கும் பித்தளைப் பாத்திரம் ஒன்று கிடைத் துள்ளது. அதில் குஷான மன்னனை ஹுவிஷ்கனுடைய சாச னம் ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது. (கரோஷ்டி சாசனங்கள்).

அலகாபாத்திற்குச் சமீபத்தில் உள்ள கோசம் என்னுமிடத்தி லிருந்து குப்தர்கள் ஆண்டுவந்த காலத்திய சாசனம் பொறிக்கப்பட் டுள்ள ஏடுகளைச் சேர்த்துக் கோத்திருந்த வளையம் ஒன்று முத்திரை யுள்படப் பித்தளையில் கிடைத்திருக்கிறது. (கன்னிங்ஹாம் எழுதிய புதை பொருள் ஆராய்ச்சி அறிக்கை, பத்தாம் வால்யூம், படம் 2).

கயைக்குப் பக்கத்திலிருந்து புத்த பகவானுடைய பித்தளை விக்கிரகம் ஒன்று கிடைத்திருக்கிறது. அதன் பீடத்தில் அதை அர்ப் பணம் செய்ததைத் தெரிவிக்கும் சாசனம் ஒன்று காணப்படுகிறது. அச்சாசனத்திலிருந்து "ஆணி எழுத்துக்கள்" என்று சரித்திர ஆசிரியர் களால் வழங்கப்படும் ஒருவகை எழுத்துக்கள் வெளியாகின்றன. (இ.ஆ., பத்தொன்பதாம் வால்யூம், 99 பக்கம்.) சம்பா ஸம்ஸ்தானத்தி லிருந்து பித்தளைப் படிமங்கள் சில கிடைக்கப்பெற்றுள்ளன. அவற்றில் அப் படிமங்களைச் செதுக்கிய சிற்பிகளின் பெயர்களும் அவற்றைச் செய்வித்த அரசர்களின் பெயர்களும் காணப்படுகின்றன. (இந்தியப் புதை பொருள் இலாகா ஆண்டு அறிக்கை, 1903). ஆபு மலைகளில்

உள்ள ஜைனக்கோயில்களில் அவர்களுடைய மதத்தின் கிரந்தங்கள் பொறித்த பித்தளை ஏடுகள் இன்றைக்கும் உள்ளன என்று மஹா மஹோபாத்யாய பண்டித ஓஜா கூறுகிறார்.

4. வெண்கலம்: இவ்வகைக் கலவையினால் செய்யப்பட்ட விக்கிரகங்கள் சில ஓரோரிடங்களில் காணப்படுகின்றன. உதாரணமாகப் பிஷாவரிலிருந்து வெண்கலத்தால் செய்யப்பட்ட ஒரு விக்கிரகத்தின் தலைமட்டும் கிடைத்திருக்கிறது. அதைஅளித்த விவரத்தைத் தெரிவித்து அதன் அடியைச் சுற்றிலும் ஒரு சாசனம் பொறிக்கப்பட்டுள்ளது. (வங்காளத்து ஏஷ்யாடிக் ஸொஸைட்டி பத்திரிகை, 1836, பக்கம் 482). நாகபட்டினத்திலிருந்த கிடைத்த புத்த பகவானுடைய விக்கிரகங்கள் நம் நாட்டில் உள்ள பொருட்காட்சி சாலைகள் பலவற்றிலும் இப்போது காணக் கிடைக்கின்றன. அவற்றின் பீடத்தில் தமிழிலே பொறிக்கப் பட்ட சாசனங்கள் உள்ளன. (நாகபட்டினப் படிமங்கள் என்ற பெயரில் சென்னை மியூசியம் வெளியீடு).

அரச முத்திரைகளைச் செய்வதற்கு வேண்டிய படிமங்கள் பல வெண்கலத்தால் செய்யப்பட்டுக் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்றில் பிராமி, கரோஷ்டி, கிரேக்கம் ஆகிய மூன்று வகை லிபிகளிலும் எழுத்துக்கள் காணப்படுகின்றன. (ராயல் ஏஷ்யாடிக் ஸொஸைட்டி பத்திரிகை, 1901, 1905-ஆண்டுகள்).

செம்புப் பட்டயங்களைக் கோத்திருக்கும் வளையங்களில் காணப் படும் முத்திரைகளை நாம் செம்பு என்று மதித்து வருகிறோம். ஆனால் செம்பில் உருவங்களை அவ்வளவு அழகாகவும் தெளிவாகவும் வார்க்க முடியாது என்றும் ஆழ்ந்து நோக்கினால் அவற்றுள் பெரும்பாலானவை வெண்கலம் என்றே ஏற்படும் என்றும் ஆராய்ச்சியாளர் கொள்வர்.

5. செம்பு: உலோகங்களில் காணப்படும் சாசனங்கள் பெரும் பாலும் செம்பிலேதான் உள்ளன. செம்பிலே நமக்கு அதிகமாகக் கிடைப்பவை பட்டயங்களே ஆகும். செப்புப் பட்டயங்கள் மிகச் சிறிய அளவிலிருந்து மிகப் பெரிய அளவுவரை பலவித உருவங்களில் காணப் படுகின்றன. உத்தரப் பிரதேசத்தில் கோரக்பூர் ஜில்லாவில் ஸோ கௌரா என்னுமிடத்திலிருந்து கிடைத்த பட்டயமே இதுவரையில் நமக்குக் கிடைத்தவற்றுள் மிகச் சிறிய அளவில் உள்ளதாகும். அது இரண்டரை அங்குலம் நீளமும், ஒன்றேமுக்காலே அரைக்கால் அங்குல அகலமுமுள்ள செப்பேட்டில் எழுதப்பட்டதாகும். (ஷை 1907). ஸுயே விஹாரத்திலிருந்து கிடைத்த கனிஷ்க மன்னன் காலத்துச் செப்பேடே மிகப் பெரியதாகும். அது இரண்டரையடிச் சதுரமாக இருக்கிறது. (கரோஷ்டி சாசனங்கள்).

செம்பில் உள்ள சாசனங்களிலே சிலவற்றுள் அவை பட்டிகா (பட்டயம்) அல்லது தாம்ரபட்டிகா (தாம்பரப் பட்டயம்) என்று குறிக்கப்பட்டுள்ளன. மற்றும் சில சாசனம் அல்லது தாம்ரசாசனம் என்றும் கூறப்பட்டுள்ளன. இரண்டு இடங்களில் அவை பிரசஸ்தி என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளன. கல்லிலே வெட்டுவிக்கப்பட்ட சாசனங்கள் தாம் அதிகமாகப் பிரசஸ்தி என்று வழங்கப்படுகின்றன. செம்பில் உள்ளவற்றுள் இப்பெயரையுடையவை இவற்றைத் தவிர வேறு காணப்படவில்லை. ஓரிடத்திலே செப்பேடு திரிபலீ தாம்ர சாசனம் (அதாவது செம்பில் செய்யப்பட்ட உத்தரவின் மூன்றும் ப்ரதி) என்றும் குறிக்கப்பட்டுள்ளது. (எபி. இந்திகா, மூன்றும் வால்யூம், பக்கம் 345).

அரசன் கொடுத்த தானத்தைத் தெரிவிக்கும் உத்தரவு முதலிலேயே செம்பில் எழுதப்படமாட்டாது. அது முதலில் ஓலையிலே எழுதப்பட்டு மற்றைய உத்தரவுகளைப் போலவே பல அதிகாரிகள் பார்த்துக் கையெழுத்திட்டப் பிறகே தானம் பெற்றவருக்கு வந்து சேருகிறது. அதே சமயத்தில் அச் செய்தி நாட்டாருக்கும் அறிவிக்கப்படுகிறது. இந்தத் தானம் நீடூழிகாலம் அனுபவிக்கப்படுவதற்காக அது கோயில் சுவரில் அல்லது வேறு பொதுஸ்தலத்தில் வெட்டப்படுகிறது. இன்னும் ஓலையானது சீக்கிரம் அழிந்துவிடக்கூடிய பொருளாதலின் தானம்பெற்றவர்களுக்கு வெகுகாலம் உபயோகப்படுவதற்காகச் செம்பிலும் வெட்டிக்கொடுக்கப்படுகிறது. பல சாசனங்களில் 'கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொள்ளக் கடவதாகவும்' என்று உத்தரவிடப்பட்டதாகக் காணப்படுவது நாம் மேலே கூறியதை உறுதியாக்குகின்றது. இவ்விதமாக இவ்வுத்தரவு முதலில் ஓலையிலும், பின்னுல் கல்லிலும், அதற்கப்பால் செம்பிலும் எழுதப்படுவதால் செப்பேடு மூன்றுவது பிரதி ஆகிறதுபோலும்.

பொதுவாகச் செப்புப் பட்டயங்கள் தானம் செய்யப்பட்ட நிலங்களின் மீது தானம் பெற்றவர்களுக்கு உள்ள உரிமையைத் தெரிவிக்கும் பத்திரங்களேயாகும். சிற்சில ஞாபகார்த்தமாக ஏற்பட்டவைகளாகவும் உள்ளன. அவ்விதமானவை ஸ்தூபங்கள், கட்டிடங்கள் முதலியவற்றுள் வைத்துப் பத்திரப்படுத்தி வைக்கப்பட்டுள்ளன. சில சமயங்களில் தானம் கொடுக்கப்பட்ட நிலங்களுக்குள்ளேயே இப்பட்டயங்கள் புதைக்கப்பட்டிருந்தும் கிடைத்துள்ளன. வேறு சில கட்டிடங்களின் அஸ்திவாரங்களிலும், சுவர்களிலும் இரகசியமாக வைக்கப்பட்டு அவற்றின்மேல் கட்டிடங்கள் எழுப்பப்பட்டுள்ளன. இவ்விதம் அந்தாவரம் என்னுமிடத்தில் சாசனங்களோடு பூமியிலே புதைக்கப்பெற்

திருந்த மண்பானையின் புகைப்படங்கள் (ஏன்ஷியண்ட் இந்தியா) 'புராதன இந்தியா' ஒன்பதாம் இதழில் வெளியிடப்பட்டுள்ளன.

தாம்பர சாசனங்களை வைத்திருப்பவர்கள் அவற்றை வெளியில் காண்பிப்பதற்கு மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அவற்றுள் எழுதப் பட்டிருப்பதை என்னவென்று அறியாமல் ஏதோ புதையல் இருக்கு மிடத்தையோ அல்லது வேறு அதிர்ஷ்டத்தைப் பற்றியோ மந்தி ரங்கள் எழுதப்பட்டிருப்பதாகவும், பிறருக்குக் காண்பித்தால் அதன் பலனைத் தாங்கள் அனுபவிக்க இயலாது போய்விடும் என்றும் எண்ணம் கொண்டு அவர்கள் சாசனங்களை இரகசியமாகப் பாது காத்து வருகிறார்கள். மற்றும் சிலர் ஆதிகாலத்தில் தங்கள் குடும் பத்திற்கு கொடுக்கப்பட்டதாகக் கூறப்படும் சொத்தைத் திரும்ப அடைவதற்காக அவற்றை அதிகாரிகளிடம் கொண்டுவந்து கொடுக் கிறார்கள். ஆனால் தானம் பெற்ற சந்ததிகள் நசித்துப்போதல், ராஜீய மாறுதல்கள், அரசாங்க சுதந்தரம், இவை யாவற்றுக்கும் மேலாகக் காலாவதி (அனுபோகப் பாத்தியதை) முதலியவற்றால் தங்களுடைய உரிமையை ஸ்தாபிக்க முடியாது என்பதை அவர்கள் அறிந்து கொண்டார்கள் இல்லை. இவ்விதமாகச் செப்புப் பட்டயங்கள் தனிப் பட்டவர்களிடமே அதிகமாக இருக்கின்றன வென்றும், இதுகாறும் வெளியானவற்றைவிட இன்னும் வெளிப்படவேண்டியவையே அதிக மாக இருக்கும் என்றும் நாம் எண்ணுவதற்கு இடமிருக்கிறது.

ஓர் இடத்தில் யாராவது அரசனுடைய கல்வெட்டு ஒன்று கிடைக்கு மானால் அந்த அரசனுடைய ஆட்சி அந்த ஊர்வரை பரவியிருந்தது என்கிறோம். அதேபோல் ஓர் ஊரில் ஓர் அரசனுடைய தாம்பர சாசனம் ஒன்று கிடைக்குமானால் அந்த அரசனுடைய ஆட்சி அந்த ஊர்வரையில் பரவியிருந்தது என்று நாம் நிச்சயமாகக் கூறமுடி யாது. தானம் கொடுக்கப்பட்ட நிலங்களின் பேரில் தானம் பெற்றவர் களுக்கு உள்ள உரிமைகளை ஸ்தாபிக்கும் பத்திரங்களாக அவைஉபயோ கப்பட்டன வாதலின், அப்பட்டயங்கள் பல கைகள் மாறித் தானம் கொடுக்கப்பட்ட இடத்திற்கு வெகுதூரத்தில் உள்ள வேறோர் ஊரில் கிடைக்கக் கூடும். ஆதலால் அந்தப் பட்டயத்தில் கூறப்பட்டுள்ள ஒவ் வோர் ஊரையும் நாம் நிச்சயித்தால் அல்லாது அந்தத் தானத்தைக் கொடுத்த அரசனதுஆட்சி எவ்வளவு தூரம் பரவியிருந்தது என்பதைக் கூறமுடியாது. மேலைச் சாளுக்கிய மன்னனான இரண்டாம் கீர்த்தி வர்மன் கி. பி. 757-ம் வருஷத்தில் கொடுத்த தானத்தைத் தெரிவிக்கும் வக்கலேரிச் செப்பேடுகளை நாம் இதற்கு உதாரணமாகக் கூறலாம். அவற்றுள் குறிக்கப்பட்ட தானத்தைக் கொடுக்கையில் அரசன் பீம

நதியின் வடக்கரையில் பண்டாரக விட்டகை என்று கூறப்படும் இடத்தில் பாடி இறங்கியிருந்ததாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது. அது ஷோலாப்பூருக்குத் தென்மேற்கே இருபது மைல் தூரத்தில், பீமநதியின் வடக்கரையில் உள்ள பண்டார் கௌடேம் என்னும் இடமாகுமென ஆசிரியர்கள் கொள்வர். தானம் கொடுக்கப்பட்டதாகக் கூறப்படுவதோ இப்பொழுது தார்வார் என்று வழங்கப்படும் ஜில்லாவில் ஹாங்கல் என்னுமிடத்திற்குச் சமீபத்தில் உள்ள சுள்ளியூர் என்னும் கிராமம் ஆகும். தானம் பெற்றவர் அவ்வூரிலேயோ அல்லது அதற்குச் சமீபத்திலேயோ வசித்து வந்திருக்கவேண்டும். அவர் அந்த ஊரை அனுபவிப்பதற்கான உரிமைக்கு ஆதாரமாக அரசன் கொடுத்த தானப் பட்டயத்தை அவர் வைத்திருக்கவேண்டும். அதனால் சாதாரணமாகப் பார்க்கும்பொழுது அச்செப்பேடுகள் அந்த ஊர்ப்பக்கத்தில், அதாவது தார்வார் ஜில்லாவில், கிடைத்திருக்கவேண்டும். ஆனால் அவை மைசூர் சம்ஸ்தானத்தில் கோலார் ஜில்லாவில் உள்ள வக்கலேரி என்னுமிடத்தில் கிடைத்தன.

செப்பேடுகள் ஏட்டுச் சுவடிகளைப்போல அமைக்கப்பட்டிருக்கும். அவற்றை ஒழுங்காக அடுக்கி வைத்தால் சுவடியையே ஒத்திருக்கும். ஆயினும் ஒரு பட்டயத்தின் ஏடுகள் மற்றொரு பட்டயத்தின் ஏடுகளை ஒத்திரா. அந்தந்தச் சாசனங்களின் வாசகத்திற்குத் தகுந்தாற்போலவும் வழக்கத்தை யொத்தும், அவ்வேடுகளின் நீளமும், அகலமும் காணப்படும். ஒன்றிற்கு மேற்பட்ட ஏடுகளையுடையவற்றின் முதற் பக்கமும், கடைசிப் பக்கமும் எழுதப்படாமல் காணப்படும். ஏதாவது ஒரு சாசனம் கடைசிப் பக்கத்தில் முடிவதாக இருந்தால் அதற்குப் பிறகு வெற்று ஏடு ஒன்று சேர்க்கப்படுவதும் உண்டு. இதனால் எழுதப்பட்ட ஏடுகளின் பக்கங்கள் பழுதாகாமலும் சேதமுறாமலும் பாதுகாக்க இயலும். இன்னும் இதே நோக்கத்துடன் ஏடுகளின் ஓரங்களிலும் சற்றே கனமான விளிம்பும் காணப்படும்.

செப்பேட்டுச் சாசனம் ஒரே ஏடு கொண்டதாக இருக்குமானால் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுதப்பட்டிருக்கும். சிற்சில சமயங்களில் இரு புறங்களிலும் எழுதப்பட்டிருப்பது உண்டு. ஆயினும் பெரும்பாலான செப்பேட்டுச் சாசனங்கள் ஒன்றுக்கு மேற்பட்ட ஏடுகள் கொண்டனவாகவே இருக்கும். அவ்விதம் அதிகமான ஏடுகள் கொண்டவை தமிழ் நாட்டிலிருந்துதான் கிடைக்கின்றன.

இதுகாறும் கிடைத்துள்ள செப்பேட்டுச் சாசனங்களிலே மிகவும் பருமனும் கனமும் கொண்டவை தஞ்சைச் சோழமன்னர்கள் அளித்தனவே ஆகும். முதலாம் இராஜராஜசோழன் அளித்த பெரிய லீடன்

பட்டயம் இருபத்தொரு செப்பேடுகள் கொண்டது. அந்தச் சாசனம் நானூற்று நாற்பத்து மூன்று வரிகளில் எழுதப்பட்டது. (எபி. இந்திகா, இருபத்திரண்டாம் வால்யூம்). முதலாம் இராஜேந்திர சோழன் வழங்கிய திருவேலங்காட்டுச் செப்பேடுகளில் மொத்தம் முப்பத்தோர் ஏடுகள் உள்ளன. கனமான வளையத்தோடு அவை ஏழாயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பது தோலா எடை கொண்டனவாகும். அந்தச் சாசனம் எண்ணூற்றுப் பதினறு வரியில் எழுதப் பட்டிருக்கிறது. (தெ. இ. சாசனங்கள், மூன்றும் வால்யூம்). இவை யாவற்றிலும் மிகப்பெரியது சமீபத்திலேகிடைத்த முதலாம் இராஜேந்திர சோழனுடைய கரந்தைத் தமிழ்ச் சங்கத்துச் செப்பேட்டுச் சாசனம். இரண்டாயிரத்து ஐந்நூறு வரிகளுக்கு மேலாகச் செல்லும் அது ஐம்பத்தைந்து ஏடுகளில் எழுதப்பட்டிருக்கிறது. ஒவ்வோர் ஏடும் பதினறரை அங்குல நீளமும் ஒன்பதரை அங்குல அகலமும் கொண்டது. அந்த ஏடுகளைக் கோக்கும் வளையம் இல்லாமல் ஏடுகள் மட்டுமே எண்ணுயிரத்து அறுநூற்று நாற்பத்தைந்து தோலா (அதாவது ஒன்பது மணங்குக்குமேல்) எடை உள்ளன. (புராதன இந்தியா, ஒன்பதாம் இதழ், 219-ஆம் பக்கம்).

ஒவ்வோர் ஏட்டிலும் எண் இடப்பட்டிருக்கும். ஆனால், சில கல்வெட்டுகளில் காணப்படுவதைப்போல் ஏட்டிலுள்ள வரிகள் எண் இடப் பட்டிருக்கமாட்டா. தற்காலத்தில் புத்தகங்களில் காணப்படுவதுபோல் பக்கங்களும் எண்ணிடப்பட்டிருக்கமாட்டா. ஏடுகளே கணக்கிடப்பட்டிருக்கும். அந்த எண் ஏட்டில்உள்ள துவாரத்தின்பக்கத்தில் இருக்கும். தென்னுட்டுச் சாசனங்கள் பொதுவாக ஏட்டின் முன்பக்கமே எண்ணிடப் பட்டிருக்கும். வடநாட்டுச் சாசனங்கள் சிலவற்றில் பின்புறம் இடப்பட்டுக் காணப்படுவதும் உண்டு.

அவ்வேடுகள் நீண்டனவாக இருந்தால் இடதுபுறத்திலும், சதுரமாக இருந்தால் தலைப்புறத்திலும், சுவடிகளைப்போலத் துளை இடப்பட்டு ஒரு வளையத்தில் ஒன்றுகக் கோக்கப்பட்டிருக்கும். அவ் வளையத்தில் அரசனுடைய முத்திரையை உடைய ஒரு முகப்பும் காணப்படும். மிகவும் அதிகமான ஏடுகளைக் கொண்ட சாசனங்களுக்கு இரண்டு வளையம் காணப்படுவதும் உண்டு. சில சமயங்களில் அரசனுடைய முத்திரை தனியாக ஒரு வளையத்தில் ஏடுகளோடு சேர்க்கப்பட்டிருப்பதும் உண்டு.

சாசனங்களிலே எழுத்துக்கள் பொதுவாக நீளவாக்கில் வரி வரியாகக் காணப்படும், உதாரணமாக ஓலைச்சுவடி உருவத்தில் உள்ள ஏடு

களில் ஏட்டின் அகலத்துக்குத்தக்கபடி ஏழெட்டுவரிகளே காணப்படும். பூர்ஜ பத்திரத்தை மாதிரியாகக் கொண்டு இப்போது காணும் புத்தகம் போன்ற வடிவில் உள்ள சாசனங்களின் ஏடுகளோ அச்சுப் புத்தகத்தில் காண்பதுபோல நிறைய வரிகள் கொண்டு அமைந்திருக்கும்.

ஏடுகளை முதலில் காய்ச்சி வேண்டிய உருவத்தில் அடித்து வைத்துக் கொண்டு பிறகே அதன் மீது சாசனங்களைப் பொறிப்பார்கள் முதலில் பளிச்சென்று தெரியும் ஏதாவது ஒரு பொருளால் ஏட்டிலே எழுதுவார்கள். இதைப் பெரும்பாலும் நன்றாகப் படித்தவனே செய்வான். அப்பால் உளிபோன்ற கூரிய ஆயுதத்தால் அந்த எழுத்துக்களை ஏட்டில் செதுக்கி அமைப்பார்கள். தவறுகள் நேர்ந்து விட்டால், ஏதோ சில எழுத்துக்களையே சேர்க்கவேண்டுமானால் நடுவில் இடைச்செருகலாகச் சேர்ப்பார்கள். அதிகமாக இருந்தாலோ எழுதிய எழுத்துக்களை நீக்க வேண்டியிருந்தாலோ ஏட்டின் அந்தப் பகுதியை மறுபடியும் காய்ச்சி அடித்துப் பழைய எழுத்தை அழித்து விட்டுப் புதிதாக எழுதுவார்கள். அவ்விதம் காய்ச்சி அடிக்கும்போது பல சமயங்களில் பழைய எழுத்துக்கள் முற்றிலும் மறைந்து விடுவதில்லை. அம்மாதிரி ஒரு தரம் எழுதிய பிறகு மேலே திரும்பவும் புதிதாக எழுதிய சாசனங்கள் அவ்வப்போது கிடைக்கின்றன.

சில சாசனங்களில் எழுத்துக்களைக் கோடாக எழுதாமல் சிறு சிறு புள்ளிகளாக அமைத்து எழுதுவதும் உண்டு. பெரும்பாலும் அத்தகைய புள்ளிகள் முதலில் கீறிய கோட்டின் மீதே இடப்பட்டிருக்கும். (எபி. இந்திகா. நான்காம் வால்யூம், 56 பக்கம்).

இவ்விதம் எழுதாமல் வார்ப்பாகச் செய்யப்பட்ட சாசனம் ஒன்றும் கிடைத்துள்ளது. ஸோகௌராச் செப்பேடு அவ்விதம் அமைந்தது. எழுதவேண்டிய சாசனத்தை முதலில் மண்ணிலே சமம் செய்த தளத்தில் கூரிய எழுத்தாணியால் எழுதிப் பிறகு செம்பை உருக்கி அதன் மீது ஊற்றி அந்தச் சாசனத்தைத் தயாரித்திருக்கிறார்கள். அதனால் அந்தச் சாசனத்தில் எழுத்துக்கள் பள்ளமாக இல்லாமல் எடுப்பாக உள்ளன.

கவிஞன் ஒருவன் தன்னை ஆதரித்த வேந்தனைப் புகழும்போது அவனுடைய நாட்டிலே செம்புக்குப் பஞ்சம் ஏற்பட்டுவிட்டதென்று வருணிக்கிறான்; அரசன் ஏராளமாக அளித்த பூதானங்களைச் செப்பேட்டில் எழுதி வழங்குவதிலேயே செம்பு முழுவதும் செலவாகி விட்டதென்றும், மேலும் அவன் வழங்குவதை எழுதுவதற்குச் செப்

பேடுகள் இல்லையென்றும் கூறுகிறான். (வல்லாளனுடைய போஜப் பிரபந்தம்). அதை முற்றிலும் கற்பனை என்று சொல்லிவிடுவதற் கில்லை. சோழமன்னர்கள் அளித்த தானங்களைத் தெரிவிக்கும் செப் பேடுகளைக் கவனித்தால் கவியின் கூற்று ஓர் அளவு உண்மையே என்று கொள்ளலாம். இதை வலியுறுத்துவதேபோல, பழைய காலத்தில் சாசனங்கள் பொறித்திருந்த செப்பேடுகளைத் திரும்பவும் காய்ச்சி அடித்துப் புதிய சாசனங்களை எழுதுவதற்கு உபயோகித்த பல ஏடுகள் கிடைத்துள்ளன. அவ்விதம் காய்ச்சி அடித்த காலங் களில் அந்த ஏடுகளின் பழைய எழுத்துக்கள் முற்றிலும் மறைந்து விடாமல் சிற்சில சமயங்களில் நன்றாகத் தெரிகின்றன. நூதிமடுகு என்னுமிடத்திலிருந்து கிடைத்த விஜயநகர வேந்தனான இரண்டாம் தேவராயனுடைய செப்பேட்டுச் சாசனத்தில் ஓர் ஏட்டிலே வேங்கிச் சாளுக்கியர்களுடைய பிரசஸ்தி பத்தாம் நூற்றாண்டுத் தெலுங்கு எழுத்திலே பொறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். (எபி. இந்திகா, இருபத்தைந்தாம் வால்யூம்).

செம்பிலே எழுதப்பட்டிருக்கும் சாசனங்கள் பெரும்பாலும் ஏட்டு உருவத்திலேதான் கிடைக்கின்றன. எனினும், கலப்பை, கோடரி என்பன போன்ற வேறு உருவங்களிலும் அவ்வப்போது நமக்குக் கிட்டியுள்ளன. கி. பி. பதின்மூன்று அல்லது பதினான்காம் நூற் றாண்டில் வழங்கிய தமிழ் எழுத்துக்களில் சித்திரமேழிப் பெரிய நாட்டவர் என்னும் ஸ்தாபனத்தாரின் சாசனம் ஒன்று செம்பிலே செய்யப்பட அவர்களுடைய சின்னமான கலப்பை உருவத்தின்மீது பொறிக்கப்பட்டிருக்கிறது.

பிஷாவருக்குப் பக்கத்தில் உள்ள குர்ரம் என்னும் இடத்திலிருந்து ஹார்மிகை குடை முதலியவை யாவற்றையும் உடைய ஸ்தூபத்தின் சிறு உருவத்தில் அமைந்த பேழை ஒன்று செம்பிலே கிடைத்துள்ளது. அதன் அடியில் உள்ள சதுரமான பீடத்தின் நான்கு புறங்களிலும் புள்ளி புள்ளியாகத் துவாரம் செய்யப்பட்ட கரோஷ்டி எழுத்துக் களால் ஆன சாசனம் ஒன்று இருக்கிறது. சாக்கிய முனிவருடைய புனித உடலின் சின்னங்கள் அதிலே சேமிக்கப்பட்டிருந்த செய்தி யைத் தெரிவிக்கிறது அந்தச் சாசனம். (எபி. இந்திகா, பதினெட்டாம் வால்யூம்).

6. இரும்பு: நீண்ட காலமாகவே மக்கள் இரும்பைப் போர்க் கருவிகள், உழவுக்கு வேண்டிய உபகரணங்கள், மற்றும் வாழ்க்கைக்கு அத்தியாவசியமாக வேண்டிய சாமான்கள் ஆகியவற்றைச் செய்வதற்கு உபயோகித்து வந்திருக்கிறார்கள். எனினும், சாசனம் எழுதுவதற்கு

அந்த உலோகத்தைப் பெரும்பாலும் உபயோகித்ததில்லை. இருந்தாலும் ஒன்றிரண்டு கிடைக்கின்றன. சந்திரன் என்னும் அரசன் ஒருவனைப் பற்றிய சாசனம் பொறிக்கப்பட்ட இரும்புத் தூண் ஒன்று (தில்லில் குதுப்மினர் சமீபம் உள்ள) மேஹருளியில் கிடைக்கிறது. (குப்த சாசனங்கள், 139 பக்கம்). இருபத்துமூன்று அடி எட்டு அங்குலம் உள்ள அந்தத் தூண் ஆறு டன் கனம் உள்ளதென மதிப்பிடுவர். அதைப் போல் இருமடங்கு உயரம் உள்ள மற்றொரு தூண் உடைந்து துண்டுகளாகச் சிதைந்து தாரா நகரத்தில் கிடைக்கிறது. அதிலே மொகலாய மன்னனை அக்பருடைய பாரசீக மொழிச் சாசனம் ஒன்று காணப்படுகிறது. இன்னும் நாகரி எழுத்திலும் பாரசீக எழுத்திலும் சில பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இவை தவிர, இரும்பால் செய்யப்பட்ட சிவபெருமான் ஆயுதமான திரிசூலம், போரில் உபயோகிப்பதற்காகச் செய்த பீரங்கிக் குண்டுகள் ஆகியவற்றின்மீதும் சாசனங்கள் பொறிக்கப் பட்டுள்ளன. ஆனல் அவை யாவும் பதினைந்தாம் நூற்றாண்டையும் அதற்குப் பிற்பட்ட காலத்தையும் சார்ந்தவை.

## உலோகமல்லாதவை

சாசனங்களை எழுதுவதற்கு உலோகங்களிலே செம்புதான் அதிகமாக உபயோகப்படுவதுபோல, உலோகமல்லாதவற்றிலே கருங்கல்தான் முக்கியமானது. எனினும், பளிங்கு, மரத்தூண், பலகைகள், மண்பாண்டம், சுட்டமண், செங்கல், சங்கு, ஆமையோடு, தந்தப்பலகை முதலிய பலவற்றிலும் சாசனங்கள் பொறித்திருக்கக் காண்கிறோம்.

1. **பளிங்கு:** பளிங்கிலே எழுதியுள்ளதாகக் கிடைக்கும் சாசனம் மிகவும் அரிது. அவ்வகைக் கல் எளிதில் கிட்டக்கூடிய பொருள் அல்ல. அன்றி அது உறுதியும் செறிவும் கொண்டிருப்பதால் சுலபமாக அதிலே சாசனங்களைப் பொறிக்க முடியாது. உண்மையில் இப்போது நமக்குக் கிடைத்திருக்கும் பளிங்குச் சாசனமும் அதிலே வெட்டப்பெறாமல் கீறப்பெற்றிருப்பதையே காண்கிறோம். கிருஷ்ணா ஜில்லா பட்டிப்ரோலுவிலிருந்த பௌத்த ஸ்தூபத்தினின்றும் கிடைத்த பொருள்களுள் சுமார் இரண்டேகால் அங்குலம் உள்ள ஆறுபட்டை ஸ்படிகக் கல்லும் ஒன்று. காலேயரைக்கால் அங்குல அகலம் உள்ள அதன் ஆறுபட்டைகளில் ஒவ்வொன்றிலும் எழுத்துக்கள் கீறப்பட்டுள்ளன. (எபி. இந்திகா, இரண்டாம் வால்யூம்). அந்தக் கல்லின் மத்தியிலே நீளவாக்கில் ஒரு சிறு துவாரம் காணப்படுவதால் அதை ஒரு கயிற்றிலே கோத்துத் தாயத்துப்போல அணிந்துகொள்ள உபயோகித்து வந்ததாகக் கொள்ளலாம். நந்தபுரத்தைச் சேர்ந்த மங்கையொருத்தி

தான் நோய் நீங்கிப் பிழைத்தெழுந்ததற்காகப் பிரார்த்தனை செலுத்துவதற்காக அளித்ததாகும் என்று அதை ஆராய்ச்சியாளர் கூறுவர்.

இன்னும் பளிங்கிலேயே செய்த பேழைகள், சம்புடங்கள் போன்ற வேறு உருவங்களும் பட்டிப்ரோலு, ஸோபாரி, கோல்ஹாப்பூர் முதலிய இடங்களிலிருந்து கிடைத்துள்ளன. அவற்றிலே சாசனம் ஏதும் காணப்படவில்லை. எனினும், அந்தப்பொருள்கள் எதற்காக அளிக்கப்பெற்றன வென்பதைத் தெரிவிக்க வேறு வழிகள் கையாளப் பட்டுவந்தன. சோபாரியிலிருந்து கிடைத்த பேழைக்குள் முக்கால் அங்குல நீளமும் அரைஅங்குல அகலமும் உள்ள ஒருகல்துண்டில் இருபுறங்களிலும் எழுதிவைத்திருந்தனர். (ராயல் ஏஷ்யாடிக் ஸொஸைட்டி ஜர்னல், 1905). கோல்ஹாப்பூர்லோ அந்தப் பேழை ஒரு சிறு கருங்கற்பெட்டியில் வைத்துப் பாதுகாக்கப்பட்டிருந்தது. அந்தப் பெட்டியின் மூடியில் சாசனம் காணப்படுகிறது. (மேலை இந்தியப் புதைபொருள் ஆராய்ச்சி, பத்தாம் வால்யூம், படம் 1).

2. செங்கல்: புண்ணிய சுலோகங்கள் எழுதிய கற்கள் அவ்வப்போது நம் நாட்டின் பல பாகங்களிலும் கிடைக்கின்றன. எனினும் அவை தென்னாட்டில் கிடைக்கவில்லை. மெசோபடோமியா முதலிய மேற்கு ஆசிய நாடுகளிலே செங்கல்லில் சாதாரணமாக எழுதும் பழக்கம் முன்னாளில் இருந்துவந்திருக்கிறது. ஆயினும் அவ்விதம் நம் நாட்டில் இருந்ததில்லை. ஒன்றிரண்டு எழுத்துக்களைக் கொண்ட செங்கற்கள் கோயில் சுவர்களிலும் மாடங்களிலும் வைத்துக் கட்டப்பட்டிருந்ததை நாம் காணலாம். உத்தரப் பிரதேசத்தில் கோரக்பூர் ஜில்லா பிதாரி என்னும் இடத்தில் ஸ்ரீகுமாரகுப்தன் என்ற பெயர் பொறித்த செங்கல்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. (கன்னிங்ஹாமின் புதைபொருள் ஆராய்ச்சி அறிக்கை, முதல் வால்யூம், 94 பக்கம்). அதே ஜில்லாவில் கோபால்பூர் என்னுமிடத்தில் புத்தமதக் கிரந்தங்களான சூத்திரங்கள் சிலவற்றைப் பொறித்துள்ள செங்கல்கள் கிடைத்துள்ளன. அவற்றுள் ஒன்று சிராவஸ்தியில் புத்தபகவான் செய்த உபதேசத்தைக் கொண்ட சூத்திரத்தின் ஸம்ஸ்கிருத வடிவம் ஆகும். (வங்காளத்து ஏஷ்யாடிக் ஸொஸைட்டி ஜர்னல், 1896, நடவடிக்கைகள் பகுதி, பக்கம் 99).

அந்த உத்தரப் பிரதேசத்திலேயே ஜான்பூர் ஜில்லாவிலிருந்து கிடைத்த செங்கற்பலகை ஒன்றில் வாங்கிய கடனுக்கு ஈடுகாட்டிக் கி.பி. 1217-ஆம் ஆண்டில் எழுதிக்கொடுத்த நில அடைமானப் பத்திரம் பொறிக்கப்பட்டிருக்கிறது. (ஷை 1850-ஆண்டு, பக்கம் 454).

யமுனை நதி உற்பத்தி ஸ்தானத்தையொட்டிய குறுகிய பள்ளத் தாக்கில் உள்ள ஜகத்கிராமம் என்னுமிடத்தில் நடந்த புதை பொருள் ஆராய்ச்சியிலே சாசனங்களைக்கொண்ட செங்கற்கள் அதிகமாகக் கண் டெடுக்கப்பட்டன. சுமார் கி.பி. மூன்றும் நூற்றாண்டு எழுத்துக்களில் பொறிக்கப்பட்ட அந்தச் செங்கற்களில் ஒரு வடமொழிச் சுலோகமே திரும்பத் திரும்பக் காணப்படுகிறது. அதிலிருந்து சீலவர்மன் என் பான் நான்காவது தடவையாக அசுவமேத யாகம் செய்த இடம் அது என்று தெரியவருகிறது. சீலவர்மன் என்பான் அந்நாளிலே ஆண்ட யௌதேய வமிசத்து ராஜகுமாரர்களுள் ஒருவனாக இருத்தல் வேண்டும் என்று ஆசிரியர்கள் கருதுவர். (ஜர்னல் ஆப் ஓரியண்டல் ரிஸர்ச், இரு பத்தோராம் வால்யூம்).

3. களிமண்ணும், சுட்டமண்ணும்:—செங்கல்லைப் போலவே சாசனம் எழுதிய களிமண் பலகைகளும் அதிகமாகக்கிடைத்துள்ளன. அவை சில சமயங்களில் இயற்கையாகவே வெய்யிலில் காய்ந்து கெட்டி யாகவிடப்பட்டிருக்கும். மற்றும் சில சமயங்களில் சுடப்பட்டும் காணப் படும். பெரும்பாலும் அவை புத்தமதத்தார் காணிக்கை செலுத்தியன வாக இருக்கும். அதனால் அவற்றில் அந்த மதத்தின் மூலாதாரமான புண்ணிய சுலோகங்கள் பொறிக்கப்பட்டிருக்கும். சில சமயங்களிலே அதனோடு ஸ்தூப உருவங்களையும் காணலாம். ஓரொரு சந்தர்ப்பத்தில் புத்தபகவானுடைய உருவமும் சேர்க்கப்பட்டிருக்கும்.

புத்தமதம் அல்லாத வேறு மதத்தினரும் இவ்விதம் காணிக்கை யாகச் செலுத்திய களிமண் பலகைகளும் கிடைத்துள்ளன. பஞ்சாபில் லூதியானாவுக்குப் பக்கத்தில் உள்ள ஸுநேத் என்னுமிடத்தில் 'சங்கா நாராயணர்'களுக்குக் காணிக்கை செலுத்திய விவரம் பொறிக்கப்பட்ட களிமண் பலகைகள் கிடைத்துள்ளன. (ராயல் ஏஷ்யாடிக்ஸொஸைட்டி ஜர்னல், 1901). சிலவற்றிலே ஒரு பக்கத்தில் 'ஸ்ரீ விஷ்ணுதாஸஸ்ய' என்பது போலக் காணிக்கை செலுத்தியவன் பெயரும் பொறிக்கப்பட் டிருக்கும்.

கண்மண்ணால் செய்யப்பட்டுக் கிடைத்தவற்றுள் முக்கியமானவை எழுத்துக்கள் பொறிக்கப்பெற்ற களிமண் முத்திரைகள். வங்காளத்து முஜபர்பூர் ஜில்லாவில் உள்ள பஸார் என்னுமிடத்தில் தோண்டிய போது இத்தகைய களிமண் முத்திரைகள் ஆயிரத்து ஒரு நூற்றுக்கு மேல் கிடைத்தன. அவற்றை ஆராய்ந்தபோது நூற்றிருபதுக்கு மேற் பட்ட வகைகளும் எழுநூற்றுக்கும் மேற்பட்ட மாதிரிகளும் அதிலே

இருந்த விவரம் தெரியவந்தது. அவை பலவகைப்பட்ட மனிதர்கள், அதிகாரிகள், சபையினர் ஆகியோருடைய அதிகார முத்திரைகளாகும். ஒன்றிலே 'ஸ்ரீ கடோத்கச குப்தஸ்ய' என்று காணப்படுகிறது. குப்த அரசனை கடோத்கசகுப்தனே அவன். இன்னும் மூன்றிலே துருவ சுவாமினி என்பவள் பெயர் காணப்படுகிறது. துருவதேவி என்று சாசனங்களிலே குறிக்கப்பட்டிருக்கும் இரண்டாம் சந்திரகுப்தன் மனைவியே அவள். (இந்தியப் புதை பொருள் இலாகா ஆண்டு அறிக்கை, 1904).

பீஹாரில் பாட்னா ஜில்லாவில் நாலந்தா என்னுமிடத்திலிருந்து புதகுப்தனுடைய களிமண் முத்திரை ஒன்று சிதிலமாகக் கிடைத்துள்ளது. அதிலே அவனுடைய வமிசாவளி நான்கு தலைமுறைகளுக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. (இந்தியன் ஹிஸ்டாரிகல் குவார்ட்டர்லி, பத்தொன்பதாம் வால்யூம்). அதனால் குப்த வமிசத்திலே அவனுடைய நிலை நமக்கு நன்கு விளங்குகிறது. மத்திய பாரதத்தில் உள்ள சாகர் ஜில்லா ஏரண் என்னுமிடத்திலிருந்து 1838-ஆம் ஆண்டில் புதகுப்தனுடைய சிற்றரசனை ஸுரச்மிசந்திரன் என்பான் சாசனம் ஒன்று கிடைத்தது. (குப்த சாசனங்கள், 88-பக்கம்) அதிலிருந்து ஒரு நூற்றுண்டுக்காலம் வரையில் நிச்சயமாகத் தெரியாதிருந்த புதகுப்தனுடைய ஸ்தானம் இந்த நாலந்தா முத்திரையினல் நிர்ணயமாகிறது.

சுட்டமண்ணிலே செய்த முத்திரைகளும் கிடைத்துள்ளன. அவ்விதம் கிடைத்தவற்றுள் உத்தரப்பிரதேசத்துப் புலந்தஷர் என்னுமிடத்திலிருந்து கிடைத்ததை முக்கியமானதாகக் கூறலாம். (இ. ஆ., பதினெட்டாம் வால்யூம்). கோரக்பூர் ஜில்லா காசியா என்னுமிடத்திலிருந்து கி.பி. ஐந்தாம் நூற்றுண்டு எழுத்துக்களால் பொறிக்கப்பட்ட சாசனத்தையுடைய புத்தபகவானுடைய சுட்டமண் விக்கிரகம் ஒன்றும் கிடைத்திருக்கிறது. (பஞ்சாப், ஐக்கிய மாகாண வட்டத்தின் புதை பொருள் ஆராய்ச்சி இலாகா ஆண்டு அறிக்கை, 1904-5).

நாலந்தாவிலிருந்து கிடைத்த மௌகரி மன்னன் சர்வவர்மனுடைய சுட்டமண்முத்திரையும் (எபி. இந்திகா, இருபத்துநான்காம் வால்யூம்) கோரக்பூர் ஜில்லா ஸோஹாக் என்னும் இடத்திலிருந்து கிடைத்த அவனுடைய மகன் அவந்திவர்மனுடைய சுட்டமண் முத்திரையும் (ஷை இருபத்தேழாம் வால்யூம்) அவ்வமிசத்து அரசர்களின் சரித்திர ஆராய்ச்சிக்கு மிகவும் முக்கியமானவை.

4. மண் பாண்டம் :—பானை, சாடி போன்ற வடிவங்கள் உள்ள பழையகாலத்து மண்பாண்டங்கள் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டு அவ்

வப்போது கண்டெடுக்கப்படுகின்றன. ஆந்திரப்பிரதேசத்தில் உள்ள நந்தூரு என்னுமிடத்திலிருந்து கிடைத்ததைச் சிறந்த எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம். சாலிஹுண்டத்துப் பௌத்த ஸ்தூபத்திலிருந்தும் இத்தகைய பானை ஒன்று கிடைத்துள்ளது. (ஷை. இருபத்தெட்டாம் வால்யூம்; இந்தியப் புதைபொருள் இலாகா ஆண்டறிக்கை, 1920).

புதுச்சேரிக்குப் பக்கத்தில் உள்ள அரிக்கமேட்டிலிருந்து எழுத்துக்கள் பொறித்த மண்பாண்டச் சில்லுகள் தோண்டி எடுக்கப்பட்டுள்ளன. அந்தச் சில்லுகளில் காணும் எழுத்துக்கள் கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டில் வழங்கிவந்த பிராமி எழுத்துக்களாகும். அந்நாளில் அவ்விடம் முக்கியமான ஒரு வியாபாரஸ்தலமாக விளங்கியது என்பதையும் ரோம ராஜ்யத்தோடு நெருங்கிய தொடர்பு பெற்றிருந்த தென்பதையும் அவ்விடம் நடந்த ஆராய்ச்சியிலிருந்து அறிகிறோம். (புராதன இந்தியா, இரண்டாம் இதழ்.)

ஸாஞ்சிக்குப் பக்கத்தில் உள்ள போஜ்பூரில் கிடைத்த புராதனப் பொருள்களுள் ஒரு மண்பாண்டப் பேழை சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது. அதன் மூடியில் சுண்ணாம்பு பூசி அதன்மீது மசியினால் எழுதப்பெற்றிருக்கிறது. இப்போது அந்த எழுத்துக்களின் மங்கிய ரேகைகளே தெரிகின்றன வாதலின் என்ன எழுதப்பட்டிருக்கிறதென் பதைப் படிக்க முடியவில்லை. (கன்னிங்ஹாம் எழுதிய 'பில்சா தோப்புகள்', பக்கம் 331). அம்மாதிரி மசியினால் எழுதப்பெற்ற கரோஷ்டி சாசனங்களைக் கொண்ட மூன்று மண்பாண்டச் சாடிகள் (இப்போது பாகிஸ்தானில் வடமேற்கு மாகாணப் பகுதியில் சேர்ந்துள்ள) சார்ஸதாவுக்குப் பக்கத்தில் பாலாட்டு - டேரி குன்றிலிருந்து கிடைத்துள்ளன. அவ்விடத்திலிருந்த புத்த பிக்ஷுக்களின் சங்கத்துக்கு அந்தச் சாடிகள் காணிக்கை செலுத்தப் பெற்ற விவரத்தைக் கூறுகின்றன அந்தச் சாசனங்கள். (இந்தியப் புதை பொருள் இலாகா ஆண்டு அறிக்கை, 1903.)

கத்தியவார்ப் பிரதேசத்திலிருந்து அங்கே ஆண்ட வல்லப - மைத்திரக ராஜ குமாரர்களில் ஒருவனான குஹசேனன் என்பான் பெயரையும், கி. பி. 566-7-ஆம் ஆண்டுக்குச் சமமான காலத்தையும் குறிக்கும் சாசனம் ஒன்று பொறிக்கப்பட்ட மண் பானையின் உடைந்த பகுதி கிடைத்துள்ளது. (இ. ஆ., பதினான்காம் வால்யூம்).

5. மரம் :—மரத்தைச் சாசனம் பொறிப்பதற்கு ஏற்ப நீண்டகாலம் அழியாமல் இருக்கக்கூடிய பொருளாகக் கருதுவதில்லை. எனினும்

அவ்விதம் மரத்திலே பொறிக்கப்பெற்ற சாசனங்கள் சில கிடைத்துள்ளன. சட்டீஸ்கர் பகுதியில் கிராரீ என்னுமிடத்திலிருந்து கி.பி. இரண்டாம் நூற்றாண்டுப் பிராமி எழுத்துக்களில் வெட்டப்பட்ட சாசனத்தையுடைய மரத்தூண் ஒன்று பழைய குளத்தின் அடியிலிருந்து தோண்டி எடுக்கப்பட்டது. (எபி. இந்திகா, பதினெட்டாம் வால்யூம்). துரதிர்ஷ்டவசமாக அது காய ஆரம்பித்ததும் அதிலே வெடிப்புக் கண்டு சாசனத்தின் பெரும்பகுதியோடு அதன் மேற்புறணி பெயர்ந்துபோய் விட்டது. இப்போதுள்ள நிலையிலே அந்தத் தூணில் வெட்டப்பட்டுள்ள சாசனம் எதைக் குறிக்கிறதென்று நிச்சயமாகக் கூறமுடியாது. எனினும் கிடைத்திருக்கும் பகுதியிலே முன்னாளில் வழக்கிலிருந்த அரசாங்க உயர் பதவிகள் சிலவற்றின் பெயர்களும் அவற்றை வகித்து வந்தவர்கள் பெயர்களும் காணப்படுவதாகக் கொள்ளலாம்.

இதேபோல மரத்திலே பொறிக்கப்பட்ட மற்றொரு சாசனம் சமீபத்திலே கிடைத்துள்ளது. பூனாவுக்குச் சமீபமாகப் பாஜம் என்னுமிடத்தில் புத்தவிஹாரம் ஒன்று உள்ளது. அந்தச் சைத்தியத்தின் (மேற்கூரை) விதானத்தில் அமைத்திருக்கும் மரப்பாவுச் சட்டம் ஒன்றில் கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த பிராமி எழுத்துக்களில் ஒரு சாசனம் வெட்டப்பட்டிருக்கிறது. (இந்தியன் ஆர்க்கியாலஜி, அறிக்கைச் சுருக்கம். 1955-56, பக்கம் 29, படம் 44). அதிலிருந்து அந்தச் சைத்தியம் எப்போது ஏற்பட்டதென்பது நன்கு விளங்கும்.

மரத்தாலான பொருள்கள்மீது எழுதும் பழக்கத்தைப் பற்றிய பழமையான குறிப்புகள் புத்தமத நூல்களிலே காணப்படுகின்றன. இறந்தபின் சுவர்க்கத்தை யடையலாம் என்ற நோக்கத்துடனோ, மறுபிறப்பில் பொருளும் புகழும் அடைய வேண்டும் என்ற நோக்கத்துடனோ பிராணத்தியாகம் செய்ய விரும்புகிறவர்களுக்கு அந்த முறைகளைப் பற்றி எதையும் எழுதிக்கொடுக்கக் கூடாது என்று புத்த பிக்ஷுக்களுக்குத் தடைவிதித்துக் கூறுமிடத்தில் பிக்ஷுக்கள் அவ்விதம் பலகைகளில் எழுதக்கொடுக்கக்கூடாது என்று விநயபிடகத்தில் குறிக்கப் பட்டுள்ளது. புத்தஜாதகக் கதைகளிலும் அந்நாளிலே எழுத்து அறியப்புகும் சிறுவர்கள் எழுதுவதற்கு மரப் பலகைகளை உபயோகித்து வந்த செய்தி காணப்படுகிறது. இன்னும் அந்நாளிலே, மூங்கில் துண்டுகளைப் புத்தபிக்ஷுக்கள் தங்கள் அடையாளச் சீட்டுக்களாகக் கொண்டிருந்தனர் என்றும் தெரியவருகிறது. அந்தத் துண்டுகளில் அந்தப் பிக்ஷுக்களின் பெயரோ அல்லது ஏதோ சில அடையாள எழுத்துக்களோ பொறிக்கப்பட்டிருக்குமாம்.

க்ஷத்ரப அரசனான நாஹபாணன் காலத்துச் சாசனம் ஒன்றில் கடன்கள் பற்றிய ஒப்பந்தங்களை நகரத்தார் மன்றத்திலே பலகையில் எழுதி வெளியிட்டுவந்த செய்தி குறிக்கப்பட்டுள்ளது. (மேலை இந்தியப் புதைபொருள் ஆராய்ச்சி, நான்காம் வால்யூம், நாசிக் கல்வெட்டுக்கள், நெ. 7). சட்டசம்பந்தமான விவரங்களை உரைக்கும் நூலான காத்யாயன ஸ்மிருதியில் நியாய மன்றத்திலே வழக்குகளைப் பற்றிப் பலகைகளில் (பாண்டுரேகை) சுண்ணாம்புக்கட்டியால் எழுதவேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது.

பர்மாவிலே மரப் பலகைகளுக்குப் பொன் அல்லது வெள்ளி நிறம் கொண்ட எண்ணெய்க்கலவைபூசி அதன்மீது கறுப்பு எழுத்துக்களால் அவர்களுடைய மத சம்பந்தமான நூல்களை எழுதி வந்தார்களாம். அவ்விதம் எழுதிய பலகைகள் சில லண்டன் நகரத்துப் பிரிட்டிஷ் மியூஸியத்தில் உள்ளன. எனினும் இத்தகைய பலகைகள் நம் நாட்டில் கிடைக்கவில்லை. அஸ்ஸாம் பகுதியிலிருந்து மரப்பலகையில் எழுதப்பெற்ற நூல் ஒன்று இங்கிலாந்தில் போட்லீன் லைப்ரரியில் இருப்பதாக விண்டர்நிட்ஸ் என்னும் ஜர்மன் ஆசிரியர் கூறினார் என்று டாக்டர் பீலர் எழுதியிருக்கிறார்.

மூங்கிலில் எழுதும் பழக்கமும் உண்டு. இவ்விதம் எழுதப்பெற்ற மூங்கில் குழாய் ஒன்றை நான் பார்த்திருக்கிறேன். அது கேரள நாட்டுப் பழைய கொச்சி சம்ஸ்தானப் பகுதியிலிருந்து கிடைத்தது. இரண்டு கணுக்களுக்கும் இடைப்பட்ட பாகத்தில் மூங்கிலின் மேல் புறணியில் எழுத்தாணி போன்ற கூரிய ஆயுதத்தால் கீறி எழுதப்பட்டிருந்தது. ஒரு பக்கத்தில் உள்ள கணுவை எடுத்துவிட்டு, நடுவில் உள்ள குழாயில் நொச்சியிலை, வேப்பந்தழை போன்றவற்றைச் செருகி அது பூச்சியடிக்காமல் பாதுகாக்கப்பெறுவது வழக்கமாம். முக்கியமாக நீண்டகாலம் காக்கவேண்டியவற்றை இவ்விதம் மூங்கில்மீது எழுதும் பழக்கம் சமீபகாலம்வரையில் மலையாள தேசத்தில் இருந்துவந்ததாம். இத்தகைய மூங்கில்கள் இன்றைக்கும் கிடைக்குமாம்.

6. கருங்கல் பாறை: நமக்குக் கிடைக்கும் சாசனங்களில் பெரும் பகுதி கல்லில் பொறிக்கப்பட்டிருப்பனவே. தென் இந்தியாவிலே அவை பெரும்பாலும் கோயில் சுவர்களிலே வெட்டப்பட்டிருக்கும். அந்தச் சாசனங்களில் காணப்பெறும் விஷயங்கள் அநேகமாக அந்த அந்தக் கோயில்களுக்குச் சம்பந்தம் கொண்டிருந்தமையாலே போலும் அவை அங்ஙனம் கோயில் சுவர்களில் பொறிக்கப்பட்டுவந்தன என்று கொள்ளலாம். எனினும் பழைய சாசனங்கள், முக்கியமாகக் குடை

வரைக் கோயில்களில் உள்ளவை, சுவர்களில் பொறிக்கப்பட்டிருக்காமல் தூண்களிலோ உத்தரங்களிலோ பொறிக்கப்பட்டிருக்கின்றன. பல்லவமன்னனான மஹேந்திரவர்மன் பாறைகளில் குடைவித்து நிர்மாணித்த கோயிலில் காணும் கல்வெட்டுக்களை இதற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். முன்னாளிலே செங்கல் முதலிய அழியக்கூடிய பொருள்களால் எழுப்பப் பெற்ற கோயில்களின் சாசனங்களைத் தனிக் கற்களில் பொறித்து அங்கே போட்டு வந்தனர் என்பதை முன்னரே (மேலே ௩ா-ஆம் பக்கம்) நாம் குறிப்பிட்டிருக்கிறோம். அத்தகைய கற்கள் இப்போதும் கோயிலிலோ அதற்குப் பக்கத்திலோ அல்லது சிற்சில சமயங்களில் அந்த ஊர்களிலே நட்டிருப்பதைக் காணலாம்.

சில சமயங்களில் கோயில் கட்டிடங்களிலும் பிராகாரங்களிலும் கல்வெட்டுப் பொறிக்கப்பட்ட கற்களைப் பாவித் தளம் அமைத்திருப்பதைக் காணலாம். பிற்காலத்தில் கோயிலை ஜீர்ணோத்தாரணம் செய்து பிரித்துக்கட்டியபோது கல்வெட்டுக்களைக் கவனியாமல் கற்களை அங்ஙனம் அமைத்ததாலேயே நாம் அவ்விதம் காணநேரிடுகிறது. எனினும் சில இடங்களில் கல்வெட்டுக்களை அவ்விதம் தளத்திலேயே பொறித்திருந்திருக்கிறார்கள். இராமநாதபுரம் ஜில்லா குன்றக்குடியில் உள்ள குடைவரைக் கோயில் ஒன்றன் முன்புறம் உள்ள தாழ்வாரத்திலே இத்தகைய கல்வெட்டு பொறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். பாறையிலேயே அமைக்கப்பட்ட அந்தத் தாழ்வாரத்தின் நடுவில் ஆரம்பித்து அதன் கீழே செங்குத்தாக உள்ள படங்கிலும் அதைத் தொடர்ந்து எழுதியிருக்கிறார்கள். கோயிலுக்கு வரும் சேவார்த்திகள் நடந்து நடந்து எழுத்துக்கள் தேய்ந்துபோய் இப்போது அந்தச் சாசனம் படிக்கமுடியாத நிலையில் இருக்கிறது.

கோயில் சுவர்களைப் போலவே ஊர்ப்புறங்களில் உள்ள பாறைகளிலும் சாசனங்களைப் பொறித்து வந்திருக்கிறார்கள். ஊருக்குப் பக்கத்தில் இருப்பது, யாவரும் எளிதில் காணும் விதமாகப் பிரதானமான இடத்தில் அமைந்திருப்பது, என்பனபோன்ற காரணங்களாலே போலும் அவ்விதம் கல்வெட்டுக்களைப் பொறிக்கப் பாறைகளைத் தேர்ந்தெடுத்தனர் என்னலாம். நம் நாட்டின் பல பாகங்களிலும் உள்ள அசோக மன்னன் சாசனங்களை இந்தவகைக்குச் சிறந்த உதாரணமாகக் கொள்ளலாம். குடுமியான்மலையில் உள்ள சங்கீதக் கல்வெட்டும் (மேலே உ௪௬-ஆம் பக்கம்) இந்த வகையைச் சேர்ந்ததுதான்.

இவ்விதம் பாறைகளில் கிடைக்கும் சாசனங்கள் சில சமயங்களில் ஒற்றையாக இருக்காது. பின்னால் வந்த தலைமுறையினரும் முதலில் பொறித்த சாசனத்துக்குப் பக்கத்திலும் அதைத் தொடர்ந்தும் தங்

கள் கல்வெட்டுக்களைப் பொறித்து வந்திருக்கிறார்கள். சௌராஷ்டிரப் பிரதேசத்தில் உள்ள கிர்நார் மலையில் கிடைக்கும் சாசனங்களை உதாரணமாகக் காட்டலாம். அதிலே அசோகமன்னன் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அவற்றைத் தொடர்ந்து கி. பி. 150-ஆம் ஆண்டு கொண்ட மஹாக்ஷத்ரப அரசன் ருத்திரதாமனுடைய கல்வெட்டு ஒன்றும் அங்கு இருக்கிறது. இன்னும் ஐந்தாம் நூற்றாண்டின் மத்திய காலத்தைச் சார்ந்த குப்த மன்னன் ஸ்கந்த குப்தனுடைய சாசனமும் காணப்படுகிறது.

மைசூரில் சிரவண பெள்ளகொளத்தில் உள்ள சந்திரகிரி மலையில் ஏராளமான சாசனங்கள் உள்ளன. சமணர்களிலே திகம்பரப்பிரிவினர் மிகப் பழங்காலத்திலே தென்னாடு போந்து சிரவண பெள்ளகொளத்தில் தங்கிய செய்தியைத் தெரிவிப்பதாக உள்ள ஜைன ஆசிரியர் பிரபா சந்திரருடைய நிசீதிகை உள்படப் பல சாசனங்கள் கிடைக்கின்றன.

திருநெல்வேலி ஜில்லாவில் கழுகுமலையில் பாறையிலே வரிசை வரிசையாக நூற்றுக்கு மேற்பட்ட உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அவற்றிலே ஒவ்வொன்றின் கீழேயும் கி. பி. எட்டாம் நூற்றாண்டில் வழங்கிவந்த வட்டெழுத்துக்களில் பொறிக்கப்பட்ட சாசனங்கள் வெட்டப்பட்டுள்ளன. அந்த உருவங்கள் யாரைக் குறிக்கின்றன வென்பதையும் அவற்றை யார் யார் செய்துவைத்தார்கள் என்பதை யும் அக்கல்வெட்டுக்கள் (தெ. இ. சாசனங்கள், ஐந்தாம் வால்யூம்) கூறுகின்றன.

தஞ்சாவூர் ஜில்லா தராசுரம் ஐராவதேச்வரர் கோயில் பிராகாரச் சுவர்களில் உள்ள மாடங்களில் சிவனடியார் பலருடைய வாழ்க்கைச் சம்பவங்களையும் உருவங்களையும் விவரிக்கும் சிற்பங்கள் நிறைய அமைக்கப்பட்டுள்ளன. அவை ஒவ்வொன்றின் கீழும் அந்தச் சிற்பம் எதை எடுத்துக் காட்டுகிறது என்பதைத் தெரிவிக்கும் சாசனம் பொறிக்கப்பட்டிருக்கிறது.

சில விக்கிரகங்களின் பீடங்களிலும், தோள் முதுகு போன்ற இதர இடங்களிலும் சாசனங்கள் பொறிக்கப்பட்டுக் காண்கின்றன. கி. பி 977-ஆம் ஆண்டுக்கும் 984-ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் மைசூர் சிரவண பெள்ளகொளத்தில் வானளாவ நிற்கும் பாஹுபலி என்றும் கும்மடர் என்றும் குறிக்கப்பெறும் ஜைநமுனி வர் கொம்மடேசுவரருடைய திருமேனியின் சாசனம் இவ்வகையைச் சார்ந்தது (எபி. இந்திகா, ஏழாம்வால்யூம்). இதேபோன்ற திருவுருவங்

கள் இவ்வளவு பெரியவாக இல்லாவிட்டாலும், தென்கன்னட ஜில்லா வில் கார்க்கால், வேணூர் என்ற இடங்களில் முறையே கி. பி. 1432-ஆம் ஆண்டிலும் 1604-ஆம் ஆண்டிலும் நிறுவப்பட்டுள்ளன.

உத்தரப் பிரதேசத்துக் கோரக்பூர் ஜில்லாவில் உள்ள காஸியாவில் படுத்த கோலத்தில் நிர்வாணம் அடையும் நிலையில் உள்ள பகவான் புத்தருடைய பிரம்மாண்டமான சிலை ஒன்று கிடைத்துள்ளது. (கன்னிங்ஹாம் எழுதிய புதைபொருள் ஆராய்ச்சி அறிக்கை, பதினெட்டாம் வால்யூம்). அதன் பீடத்தின் ஒரு பகுதியிலே கி. பி. ஐந்தாம் நூற்றுண்டு எழுத்துக்களில் பொறிக்கப்பட்ட சாசனம் காணப்படுகிறது. (குப்த சாசனங்கள், பக்கம் 272).

தில்லிக்குப் பக்கத்தில் உள்ள வடமதுரையிலிருந்து குஷான மன்னனுன ஹுவிஷ்கன் ஆட்சிக் காலத்தைச் சேர்ந்த போதிஸத்வருடைய திருவுருவம் ஒன்று கிட்டியுள்ளது. அமர்ந்த கோலத்தில் அமைந்துள்ள அதன் பீடத்தில் அந்த விக்கிரகத்தைப் புத்த பிக்ஷுணிகள் இருவர் அளித்த செய்தியைத் தெரிவிக்கும் சாசனம் காணப்படுகிறது. அவ்விடத்திலேயே குஷான மன்னனுன கனிஷ்கனுடைய உருவம் ஒன்றும் சிதைந்த நிலையில் கிடைத்திருக்கிறது. அது யாருடைய உருவம் என்பதை முழங்காலுக்குக் கீழே உள்ள ஆடைப் பகுதியில் காணும் சாசனம் தெரிவிக்கிறது. (இந்தியப் புதைபொருள் இலாகா ஆண்டு அறிக்கை, 1912).

தூண்களில் பொறிக்கப்பட்ட சாசனங்களிலே பிரசித்தமானது அலஹாபாத் ஸ்தம்ப சாசனம் ஆகும். அதிலே அசோகனுடைய ஸ்தம்ப சாசனங்களுள் முதல் ஆறுடன் தேவியின் சாசனம், கோசாம்பி சாசனம் என்று குறிக்கப்பெறும் அசோக சாசனங்கள் இரண்டும் உள்ளன. இவை தவிர, கி.பி. 375-ஆம் ஆண்டுக்கு அணித்ததாகப் பொறிக்கப்பட்ட குப்த மன்னனுன சமுத்திர குப்தனுடைய பிரசஸ்தியும் காணப்படுகிறது. (குப்த சாசனங்கள், முதல் பக்கம்).

மைசூர் ராஜ்யத்தில் கதம்ப வமிசத்து ஆதிவரலாற்றைக் கூறும் தாளகுண்டை ஸ்தம்ப சாசனம் (எபி. இந்திகா, ஏழாம்வால்யூம்), கதம்ப ராஜ்யம் எப்போது நிறுவப்பட்டிருக்கலாம் என்பதை நிர்ணயிக்க உதவும் மாளவல்லி ஸ்தம்ப சாசனம் (எபி. கர்நாடிகா, ஏழாம் வால்யூம்), கி.பி. 602-ஆம்ஆண்டு கொண்டதாகக்கணிக்கப்பட்டுப் பிஜாப்பூர்ஜில்லா மஹாகூடத்தில் கிடைக்கும் மேலைச் சாளுக்கிய அரசனுன மங்கலேசனுடைய ஸ்தம்ப சாசனம் (இ. ஆ., பத்தொன்பதாம் வால்யூம்) ஆகிய வற்றையும் உதாரணங்களாகக் கொள்ளலாம்.

பாட்னு ஜில்லாவில் கைல்வன் என்னுமிடத்தில் வயலிலிருந்து கிடைத்த கருங்கல் பாண்டம் ஒன்றன் விளிம்பைச் சுற்றிலும் கி. பி. இரண்டாம் நூற்றுண்டைச் சார்ந்த பிராமி எழுத்துக்களால் ஆன சாசனம் ஒன்று பொறிக்கப்பட்டிருக்கிறது. (இந்தியன் ஆர்க்கியாலஜி, அறிக்கைச் சுருக்கம், 1955-56). அதிலே இன்னது என்று குறிக்கப் பெறுத ஏதோ ஓர் அப்தத்தின் நூற்றெட்டாம் ஆண்டும், மகதநாட்டு மைத்ரக ராஜ வமிசத்தவர்களுள் இதுவரையில் அறியாத ஓர் அரசன் பெயரும் காணப்படுகின்றனவாம்.

கல்லில் காணும் சாசனங்கள் கருங்கல்லில் உள்ள பலவகைகளிலும் காணப்படுகின்றன. அவ்வித நிலைமை ஏற்பட்டதற்கு எந்த எந்தப் பிரதேசத்தில் எந்த எந்த வகைக் கற்கள் சுலபமாகக் கிடைத்து வந்தன வென்பதே காரணமாக இருக்கலாம்.

முத்திரைகளுக்கான படிமங்களில் முக்கியமானவை சில மாக் கல்லில் தயாரிக்கப்பட்டுள்ளன. உத்தரப்பிரதேசம் பருக்காபாத் ஜில்லாவில் ஸங்கீஸா அல்லது ஸங்கீஸா வஸந்த்பூர் என்னுமிடத்திலிருந்து உதரசேனன் என்பவன் பெயர்கொண்ட ஒருவனுடைய முத்திரையின் படிமம் கிடைத்துள்ளது. மேலே ஏதோ வொரு சின்னமும் கீழே ஸ்வஸ்திகை உருவமும் கொண்டு அதில் எழுத்துக்கள் கண்ணுடியில் காண்பதுபோல் திருப்பி எழுதப்பட்டுள்ளன. (கன்னிங்ஹாம் எழுதிய புதை பொருள் ஆராய்ச்சி அறிக்கை, பன்னிரண்டாம் வால்யூம்). அவ்விடத்திலிருந்து கரோஷ்டி எழுத்துக்களில் தயாரிக்கப்பெற்ற பொற்கொல்லனுடைய முத்திரைப் படிமம் ஒன்றும் கிடைத்திருக்கிறது. அதிலே எழுத்துக்கள் பிரதிபிம்பம் போலத் திரும்பி இருக்கவில்லை. அன்றி, எழுத்துக்கள் பள்ளமாகவும் இல்லை; எடுப்பாக உள்ளன. இவை மாக்கல்லால் ஆனவை.

வங்காளத்து ஷாஹாபாத் ஜில்லாவில் உள்ள ரோதாஸ்கர் என்னும் இடத்தில் கி. பி. ஏழாம் நூற்றுண்டின் முற்பகுதியைச் சார்ந்த முத்திரைப்படிமம் ஒன்று பாறையில் செதுக்கப்பட்டிருக்கிறது. சுமார் நாலரை அங்குலம் குறுக்களவு கொண்ட ஒரு வட்டத்துக்குள் அடங்கிய அதிலே படுத்திருக்கும் ரிஷபம் ஒன்றும் அதன்கீழ் 'ஸ்ரீ மஹாஸாமந்த சசாங்க தேவஸ்ய' என்ற எழுத்துக்கள் பிரதிபிம்பம்போல் தலைகீழாகவும் உள்ளன. இவ்வளவும் எடுப்பாக இல்லாமல், பாறையில் பள்ளமாகச் செதுக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே அந்தப் படிமத்தைக் கொண்டு முத்திரை தயாரிப்பதற்காகவே அதை வெட்டி வைத்திருப்பதாக ஆராய்ச்சியாளர் கருதுவர். (குப்த சாசனங்கள், 283 பக்கம்).

எனினும் முத்திரை செய்வதற்காகச் செம்பு வெண்கலம் போன்ற உலோகத்தை உருக்கி ஊற்றினால் அதை அந்தப் பாறை தாங்குமா வென்பது சந்தேகம்; தாங்காது என்றே கருதுவர். ஆகவே அந்த முத்திரை உலோகத்தால் செய்யப்படுவதாக இராது என்றும் களிமண், மெழுகு அல்லது அரக்கு போன்ற ஏதோ ஒன்றால் செய்யப்படுவதாக இருக்க வேண்டும் என்றும் கொள்வர்.

முஸ்லீம் அரசர்களுடைய சாசனங்கள், அவற்றுள்ளும் முக்கியமாக வடநாட்டில் உள்ளவைகளும் அரபு பாரசீக மொழிகளில் உள்ளனவும், வெட்டப்பட்டிருக்கமாட்டா. எழுத்து உருவங்களை எடுப்பாக விட்டுப் பக்கத்தில் உள்ள இடைவெளியைச் செதுக்கி எடுத்து விடுவது வழக்கம். மத்திய காலத்தில் வடநாட்டிலே வேறுசில சாசனங்களிலும் இந்த முறை கையாளப் பட்டிருப்பதைக் காணலாம்.

7. சங்கு, தந்தம் முதலியன: வெண்சங்கு, தந்தம் முதலியவற்றில் காணும் சாசனங்கள் அதிகம் இல்லை. ஒன்றிரண்டே உள்ளன. சாலிஹுண்டத்தில் பிராமி எழுத்தில் உள்ள சாசனத்தோடு வெண் சங்கு ஒன்று கிடைத்துள்ளது. (எபி. இந்திகா, இருபத்தெட்டாம் வால்யூம்) ஸட்லஜ் நதிக் கரையில் அம்பாலாவுக்கு அறுபது மைல் தூரத்தில் உள்ள ரூபார் என்னுமிடத்தில் நடந்த புதை பொருள் ஆராய்ச்சியில் மௌரியர் ஆட்சிக் காலத்துப் பிராமி எழுத்துக்கள் கொண்டு தந்தத்தால் ஆன முத்திரை ஒன்று சமீபத்திலே தோண்டி எடுக்கப்பட்டுள்ளது. (புராதன இந்தியா, ஒன்பதாம் இதழ், படம் 48-வ).

## எழுதுவதற்கு உபயோகிக்கும் வேறு பொருள்களைப் பற்றிய குறிப்பு

எவ்வளவு பழமை வாய்ந்தனவாயினும் பனை ஓலை, பூர்ஜ பத்திரம் முதலியவற்றில் காணும் எழுத்துக்களைச் சாசனமெனக் கொள்வதில்லை. எனினும் அத்தகைய எழுத்துக்களை, முக்கியமாகப் பழைய காலத்தனவாக உள்ளவற்றை, சாசனங்களிலும் எழுத்துக்களின் வரி வடிவ வளர்ச்சியிலும் பயிற்சி பெற்றவர்களே நன்கு வாசிக்கமுடியும். தவிர, அத்தகைய பொருள்களைப்பற்றிய விவரங்கள் இல்லாமல் எழுது கருவிகளைப்பற்றிய எந்த ஆராய்ச்சியும் பூர்த்தியாகாது.

1. பனை ஓலை:—முன்னாளிலே எழுதுவதற்கு உபயோகமாக விளங்கிய பொருள்களுள் பனையோலையேமுக்கியமானது. தாலபத்திரம், தாடபத்திரம் என்பனபோன்ற பெயர்களால் அது குறிக்கப்பட்டு வந்தது. சமீபகாலம் வரையில் அது வழக்கில் இருந்திருக்கிறது.

பனையிலே இருவகை உண்டு. சாதாரணமாக நம் நாட்டில் காணும் பனை ஒன்று. அகலமான ஓலைகளையுடைய தாளிப் பனை மற்றொன்று. இவ்விருவகையும் தென்னாட்டுக்கே உரியவை என்பர். எனினும்வடக்கே பஞ்சாபில் கூடப் பனையைக் காணலாம். முன்னாளில் காச்மீரத்திலும் இன்னும் நம் நாட்டின் வடமேற்குப் பகுதிகளிலும் பூர்ஜபத்திரமே பெருவழக்கில் இருந்தது. எனினும், அந்தப் பகுதியிலும் பழங் காலத்திலே பனையோலையே எழுதுவதற்கு உபயோகப்பட்டு வந்தது என்பதை நாம் நிச்சயமாகக் கூறலாம். அந்நாளிலே பூர்ஜபத்திரத் தையும் பனையோலையைப் போன்ற அளவிலேதான் கத்தரித்து எழுதி வந்ததிலிருந்து இது தெளிவாகும். கி. பி. முதலாம் நூற்றாண்டு எழுத்துக்களைக் கொண்டதாகத் தக்ஷசிலத்திலிருந்து கிடைத்த செப் பேடும் பனையோலை உருவத்திலேதான் அமைந்திருக்கிறது. (எபி. இந்திகா, இருபத்தோராம் வால்யூம்). புத்த ஜாதகக் கதைகளில் பண்ண (அதாவது பர்ணம் அல்லது இலை) என்பது எழுது கருவிகளுள் ஒன்றாகக் குறிக்கப்பட்டுள்ளது. அது பனையோலையே போலும். புத்த பகவான் நிர்வாணம் ஆனபிறகு கூடிய முதல் புத்தமதச் சபையில் அவர்களுடைய மதத்தின் மூலக் கிரந்தமான திரிபிடகம் தொகுக்கப் பெற்றுப் பனையேடுகளில் எழுதப்பெற்றனவென்னும் கர்ணபரம்பரைச் செய்தியைச் சீன யாத்திரிகரான யுவான் சுவாங் குறித்திருக்கிறார்.

தென்னாட்டில் கிடைக்கும் பனையோலைச் சுவடிகள் பெரும்பாலும் கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டுக்கோ அதற்குப் பிற்பட்ட காலத் துக்கோ சேர்ந்தவையாக இருக்கும். அதற்கு முற்பட்ட காலத்தைச் சார்ந்தவை கிடைக்கவில்லை. இவ்விடம் உள்ள சீதோஷ்ண நிலையே இதற்குப் பெரிதும் காரணமாகும். குளிர்ச்சியும் வறட்சியும் கொண்ட வடஇந்தியப் பகுதிகள் சிலவற்றிலும் அதற்கு அப்பால் உள்ள பிரதே சங்களிலும் பழையகாலத்துச் சுவடிகள் கிடைக்கின்றன. இதுவரையில் நமக்குக் கிடைத்துள்ள பனையோலைச் சுவடிகளுள் மிகவும் பழமை யானது கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு உரியது என்னலாம். அது மத்திய ஆசியாவிலிருந்து கிடைத்தது. ஸம்ஸ்கிருத நாடகம் ஒன்றன் பகுதிகள் சிலவற்றைக் கொண்டது. காஷ்கர் பிரதேசத்தில் மக்கார்டன் என்பவர் கண்டெடுத்த சுவடிகள் நான்காம் நூற்றாண்டைச் சார்ந்தன. இப்போது ஜப்பானில் புத்தமடம் ஒன்றில் பாதுகாக்கப்பட்டுவரும் பிரஜ்ஞாபாரமித ஹ்ருதயஸூத்ரம், உஷ்ணீச விஜயதாரிணி ஆகிய புத்த மதக் கிரந்தங்களைக் கொண்ட சுவடிகள் மத்திய இந்தியாவில் கி. பி. ஆறாம் நூற்றாண்டில் எழுதப்பட்டவை. நேபாளத்தில் காட்மாண்டு தர்பார் சுவடி நிலையத்தில் உள்ள ஸ்கந்த புராணச் சுவடி ஏழாம் நூற் றாண்டில் எழுதப்பட்டது. கேம்பிரிட்ஜில் உள்ள பரமேச்வர தந்திரம்

என்னும் நூல் எழுதப்பட்ட சுவடி ஹர்ஷ அப்தம் 252-ல் (அதாவது கி. பி. 858-ல்) தயாரிக்கப்பட்டது. அதேபோலப் புத்த மத நூலான லங்காவதாரம் என்பதன் பிரதி ஒன்று நேவார் அப்தம் 28-ல் (அதாவது கி. பி. 906-7-ல்) எழுதப்பட்டது. இன்னும் தென்னிந்தியாவிலிருந்து சென்ற ஓலைச் சுவடிகள் சில திபேத்திலும் இருக்கின்றன. கி. பி. பதினோராம் நூற்றாண்டுக் கிரந்த எழுத்துக்களில் காணும் வடமொழிச் சுவடிகளும் பதின்மூன்றாம் நூற்றாண்டுத் தமிழ் எழுத்துக்களில் உள்ள தமிழ்ச் சுவடிகளும் திபேத் நாட்டுப் புத்த மடம் ஒன்றில் காணப்பட்டனவாம். அவற்றின் புகைப்படப் பிரதிகள் பாட்னா நகரத்துக் காசிப்பிரசாத் ஜயஸ்வால் ஆராய்ச்சிக் கழகத்தில் உள்ளன.

நீண்டகாலம் பாதுகாக்கவேண்டிய பத்திரங்களையும் நூல்களையும் எழுதுவதற்குப் பனையோலைகளைப் பாடம் செய்தே எழுதுவார்கள். அப்போதுதான் ஓலையிலே ஒரு துவள்வு இருக்கும்; எழுதுவதற்கும் சுலபமாக இருக்கும். அதற்கு முதலிலே ஓலையை நன்றாகக் காய வைப்பார்கள். பிறகு தண்ணீரில் ஊறவைத்தோ கொதிக்கவைத்தோ துவளச்செய்து மறுபடியும் காயவைப்பார்கள். சில சமயங்களில் பனிப் பாடம் செய்வதும் உண்டு. கடைசியிலே அதைச் சோழியாலோ கூழாங் கல்லாலோ தேய்த்து மெருகு ஏற்றுவார்கள். பிறகு அதை வேண்டிய அளவுக்குக் கத்தரித்து வைத்துக்கொள்வார்கள். பழைய சுவடிகளை ஊன்றிக் கவனித்தால் இங்ஙனம் பாடம் செய்யப்பட்டிருப்பது தெரியும். தாளிப் பனையேடுகள் ஒன்று முதல் மூன்று அடி நீளம் வரையில் காணப்படுகின்றன. அகலத்திலும் ஒன்றுமுதல் நான்கு அங்குலம் வரையில் உள்ளன. வட இந்தியாவிலே ஓலைகளில் மசிகொண்டே எழுதி வந்தனர். ஆனால் தென்னாட்டில் எழுத்தாணிகொண்டு எழுதுவதே வழக்கம். அவ்விதம் எழுதிய பிறகு எழுத்துக்கள் பளிச்சென்று தெரிவதற்காகக் கரியையும் மஞ்சளையும் கலந்து தடவுவார்கள். (படிக்கும் போது சில சமயங்களில் பச்சிலையைக் கசக்கித் தடவுவதும் உண்டு.) இவ்விதம் எழுதிய பிறகு ஏட்டின் மத்தியில், பெரும்பாலும் இடது பக்கம், துவாரம் இட்டு அதிலே கயிற்றைக் கோத்து ஏடுகள் கலையாமல் கட்டுவர். ஏடுகள் மிகவும் நீளமாக இருந்தால் இடதுபுறம் வலதுபுறம் ஆகிய இரண்டிலும் துவாரங்கள் இட்டுக் கயிறு சேர்ப்பார்கள்.

சாதாரணக் கடிதங்களுக்கும் தினசரி உபயோகத்துக்கும் இவ்விதம் ஏடுகளைப் பாடம் செய்யமாட்டார்கள். சிற்சில சமயங்களில் நன்கு வாரி நரம்பை எடுக்காமலேகூட உபயோகப்படுத்துவதும் உண்டு.

விலைமலிவான காகிதம் பழக்கத்துக்குவந்த பிறகுகூடப் பனை யோலைகளிலே எழுதுவது தொடர்ந்து இருந்துவந்திருக்கிறது. சென்ற இருபத்தைந்து ஆண்டுகளில்தான் அதன் உபயோகம் மறைந்தது என்னலாம். எனினும், குழந்தையை வாசிக்கவைத்தல் முதலிய சுபச் சடங்குகளுக்கும் ரக்ஷைபோன்றவற்றுக்கும் இன்னும் பனையோலை யையே புனிதமாகக் கருதி உபயோகித்து வருகிறார்கள்.

2. பூர்ஜபத்திரம்: முன்னாளிலே எழுதுவதற்கு முக்கியமாக இருந்தவற்றுள் பூர்ஜபத்திரம் மற்றொன்று. அது பூர்ஜம் என்னும் மரத்தின் உள் பட்டையைக் கொண்டு தயாரிக்கப்பெறுவது. அந்த மரம் இமயமலைக் காடுகளில் ஏராளமாக வளர்கின்றது. அதனால் பூர்ஜபத்தி ரத்தின் உபயோகம் வட இந்தியாவிலேதான் அதிகமாக இருந்து வந்தது. அப்பால் அதன் உபயோகம் இந்தியாவின் மற்றப் பாகங் களுக்கும் மத்திய ஆசியாவுக்கும் பரவியது.

அலெக்ஜாந்தர் இந்தியாவின்மீது படையெடுத்து வந்தபோது அவனுடன் கூட வந்திருந்த கிரேக்க ஆசிரியரான குர்ட்டிஸ் என்பார் இந்தியர்கள் அந்நாளிலே மரப்பட்டையில் எழுதி வந்ததாகக் கூறி யிருக்கிறார். புத்தமதக் கிரந்தங்களில் வடகலையைச் சேர்ந்தவற்றுள் பூர்ஜபத்திரத்தைப்பற்றிய குறிப்புகள் அதிகமாகக் காணப்படுகின்றன. இந்தப் பட்டையைப்பற்றி அல்பெரூனீ என்னும் அரபுயாத்திரிகர் விவர மாகத் தெரிவித்திருக்கிறார்: மத்திய இந்தியாவிலும் வட இந்தியாவிலும் மக்கள் தூஜ் என்னும் வகையைச் சேர்ந்த ஒரு மரத்தின் பட்டையை எழுதுவதற்கு உபயோகிக்கிறார்கள். அந்த மர வகையின் பட்டையை வில்லுக்கு உறையாகவும் உபயோகப்படுத்துவது உண்டு. எழுதுவதற் காக அவர்கள் இரண்டு முழ நீளமும் ஒரு சாண் அகலமும் உள்ள பட் டையாகத் தேர்ந்தெடுப்பார்கள். அதன்மீது எண்ணெய் தடவிப் பாடப் படுத்தித் தேய்த்து வழுவழுப்பாக்குவர். அதன்மீதுதான் எழுதுவார் கள். அதற்கெனத் தயாரித்த தனிவகை மசியால் கொறுக்கைத்தட்டை எழுதுகோலால் எழுதுவார்கள். பிறகு ஏட்டின் நடுவிலே துளையிட்டு அதன் வழியாகக் கயிறு செலுத்தி அந்த ஏடுகளைக் கோப்பார்கள். கடைசியாக மேலும் கீழும் அதே அளவு கொண்ட மரப் பலகைகளை வைத்து எல்லாவற்றையும் சேர்த்துத் துணியால் கட்டிப் பத்திரப் படுத்துவார்கள். தினசரி உபயோகத்துக்குப் பட்டையை இவ்வளவு விரிவாகப் பாடம் செய்யமாட்டார்கள். தூஜ மரத்தின் பட்டைகளையும் உபயோகிப்பார்கள்.

மொகலாயர் காலத்தில் காகிதம் அதிகமான பழக்கத்துக்கு வந்த பிறகு, பனையோலையைப் போலவே பூர்ஜ பத்திரத்தின் உபயோகமும்

அரிதாகிவிட்டது. இன்றைக்கும் அது புனிதத் தன்மை வாய்ந்ததாகக் கருதப்பட்டுச் சில சடங்குகளில் உபயோகிக்கப்பட்டு வருகிறது. இந்தப் பத்திரத்தின் உபயோகம் தமிழ்நாட்டில் காணப்படவில்லை.

பூர்ஜ பத்திரத்தில் எழுதியதாகக் கிடைத்துள்ள நூல்களுள் மிகவும் பழமையானது கி. பி. இரண்டு அல்லது மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்த கரோஷ்டி எழுத்துக்களில் எழுதப்பட்டு மத்திய ஆசியாவில் கோட்டான் பிரதேசத்திலிருந்து கிடைத்த தம்மபதம் என்னும் புத்தமத நூலாகும். ஸம்யுக்தாகமம் என்னும் நூலின் சுவடி நான்காம் நூற்றாண்டைச் சார்ந்தது. அடுத்தபடியாக உள்ளவை அப்கானிஸ்தானத்து ஸ்தூபங்களிலிருந்து கிடைத்த 'முடிப்புகள்'. பவர், காட்ப்ரே ஆகியோர் சேகரித்த சுவடிகள் ஆறாம் நூற்றாண்டைச் சார்ந்தவை. பக்ஷாலி கணக்குச்சுவடி எட்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்டதென்பர். இன்னும் காஷ்மீரம் முதலிய பகுதிகளிலிருந்து பதினைந்தாம் நூற்றாண்டையும் அதற்குப் பிற்பட்ட காலத்தையும் சார்ந்த சுவடிகள் கிடைத்துள்ளன.

3. காகிதம் :—முதன் முதலில் கி. பி. 105-ஆம் ஆண்டில் சீன தேசத்தில்தான் காகிதம் செய்யப்பட்டதென்றும் அதற்குப் பிறகு முஸ்லீம்களால் அது இந்த நாட்டுக்குக் கொண்டுவரப்பட்டதென்றும் ஆராய்ச்சியாளர்கள் பொதுவாகக் கருதுவர். (பார்னட் எழுதிய இந்தியப் புராதனப் பொருள்கள் - ஆண்டிகுடீஸ் ஆப் இந்தியா, பக்கம் 229). எனினும் அலெக்ஜாந்தரோடு இந்தியாவுக்கு வந்திருந்த நீர்ச்சர்ஸ் என்பவர் அந்நாளிலே இந்தியமக்கள் பருத்தி (நூலால்ஆன துணி)யை அடித்து எழுதும் காகிதம் தயாரித்து வந்ததாகக் குறித்திருக்கிறார். (ஸ்டிராபோ, 717). காகிதத்தில் எழுதிய சுவடிகளிலே இதுகாறும் நமக்கு கிடைத்தவற்றுள் மிகவும் பழமையானது மத்திய ஆசியப் பகுதியில் காஷ்காரிலிருந்து கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் வழங்கிய குப்த எழுத்துக்களில் எழுதப்பட்டுக் கிடைத்ததாகும். (வங்காள ஏஷ்யாடிக் ஸொஸைட்டி ஜர்னல், அறுபத்தாறாம் வால்யூம்). எனினும் நம் நாட்டில் கிடைக்கும் காகிதப் பிரதிகள் கி. பி. பதினான்காம் நூற்றாண்டுக்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்தனவாக இல்லை.

முன்னாளிலே காகிதத்திலே எழுதுவதையும் பனையேடுகளிலோ பூர்ஜ பத்திரத்திலோ மசியினால் எழுதுவதைப் போலவே செய்து வந்தார்கள். இதற்காகக் காகிதத்தின்மீது அரிசிக் கஞ்சியையோ கோதுமைக் கஞ்சியையோ நீர்க்கத் தயாரித்துப் பூசி அது காய்ந்ததும் கூழாங்கல்லையோ சோழியையோ கொண்டு தேய்த்து வழுவழுப்பாக்கு

வார்கள். அப்போதுதான் காகிதத்தில் எழுதும்போது மசி ஊறாமல் இருக்கும். இவ்விதம் தயாரித்த காகிதத்தை வேண்டிய அளவுக்குக் கத்தரித்து வைத்துக்கொள்வார்கள். காகிதத்தில் எழுதிய புத்தகத்தைப் பனை ஏடுகளைப் போலவே மேலும் கீழும் மரப் பலகைகளை வைத்துக் கட்டியிருப்பார்கள். சில சமயங்களில் பனையோலைச் சுவடிகளைப்போல் காகிதங்களிலும் நடுவில் துளையிட்டு நூலைக் கோத்துக் கட்டியிருப்பார்கள்.

4. பருத்திநூல்துணி: முன்னாளிலே நம் நாட்டில் பருத்தி நூலால் நெய்த துணிகளையும் எழுதுவதற்கு உபயோகித்து வந்தார்கள். அது படம், படிகா, கார்பாஸிகபடம் என்பனபோன்ற பெயர்களால் குறிக்கப்பட்டு வந்தது. தர்ம சாஸ்திரங்களிலே துணியில் எழுதுவது குறிக்கப்பட்டிருக்கிறதென்பதை நாம் முன்னமே (மேலே உ௮எ-ஆம் பக்கம்) தெரிவித்திருக்கிறோம். சாசனங்களில் படம் அல்லது துணியிலே எழுதுவதைப்பற்றிக் கூறுவனவற்றுள் மிகவும் பழமையானவை சாதவாகன அரசர்கள் காலத்து நாசிக் கல்வெட்டுக்கள் ஆகும். (மேலை இந்தியப் புதைப்பொருள் ஆராய்ச்சி அறிக்கை, நான்காம் வால்யூம், 11 - எ. பி. சாசனங்கள்). காகிதத்தைப்போலவே துணியும் நீண்டகாலம் நிற்காது. சீதோஷ்ண ஸ்திதியால் மக்கிப்போய், பூச்சியரித்துச் சீக்கிரமே வீணாகிவிடும்.

ஸ்ரீபிரபாசூரி என்னும் ஜைன ஆசிரியர் இயற்றிய 'தர்மவிதி' என்னும் நூலுக்கு விக்கிரம சம்வத்ஸரம் 1418-ல் (அதாவது கி. பி. 1361-2-ல்) காகிதத்தில் எழுதிய பிரதி ஒன்று கூர்ஜரத்து அணஹில் வாட் பட்டணத்தில் கிடைத்தது என்று பீடர்ஸன் என்னும் ஆசிரியர் கூறுகிறார். ஜஸல்மீர் நகரத்தில் பிரஹஜ்ஞானகோசம் என்னும் புத்தசாலையில் ஜைனசூத்திரங்களின் பட்டியல் ஒன்று பட்டுத்துணியில் மசியினால் எழுதப்பட்டிருந்ததைத் தாம் பார்த்திருப்பதாக டாக்டர் பீலர் கூறுகிறார். இரண்டு மூன்று நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட காலத்துக் கணக்குகளை எழுதிய துணிக்கணக்குப் புத்தகங்கள் சிருங்கேரிமடத்தில் இப்போதும் பாதுகாக்கப்பட்டு வருகின்றனவென்பர். இராஜபுதனத்திலே ஒரு வகுப்பினர் நீளமான துணியிலே வருஷவருஷம் பஞ்சாங்கங்களைத் தயாரித்து எழுதிவருகிறார்கள் என்று மகாமகோபாத்தியாய பண்டித ஓஜா தம் நூலில் கூறுகிறார். (பாரதீய ப்ராசீன லிபிமாலா, பக்கம் 146). கர்நாடக தேசத்து வணிகர்கள் கடதம் என்று வழங்கப்படும் ஒருவகைத் துணியைத் தங்களுடைய கணக்குகளை எழுத உபயோகித்து வந்தனர் என்று பர்னல், ரைஸ் போன்ற ஆசிரியர்கள் கூறுகிறார்கள். அந்தத் துணியின்மீது புளியங்கொட்டையிலிருந்து தயா

ரித்த பசையைப் பூசியிருப்பார்களாம். தமிழ் நாட்டிலும் சமீபகாலம் வரையில் மார்வாடி வியாபாரிகளில் சிலர் இத்தகைய கணக்குப் புத்தகங்களை வைத்திருந்தனர்.

காகிதத்தைப்போலவே துணியிலும் கஞ்சிபோன்ற பசையை நீர்க்கக் கரைத்துப் பூசுவார்கள். அப்போதுதான் துணியில் இழை யோடியுள்ள துவாரங்கள் தெரியாமல் அடைபடும். நன்றாகக் காய்ந்த பிறகு அதைக் கூழாங்கல்லாலோ சோழியினாலோ இழைத்து வழு வழுப்பாக்குவர். அப்பால் அதற்கெனத் தயாரித்த ஒருவகைக் கறுப்பு மசியினால் அதன்மீது எழுதுவர். சில சமயங்களில் துணிகளுக்குக் கரியைத் தடவிக் கறுப்பாக்கிவிடுவார்கள். அப்போது அதன்மீது மாக் கல், சுண்ணாம்புக்கட்டி முதலியவைபோன்ற வெண்மையான பொருள் களால் எழுதுவர்.

5. தோல்: ஆசியாவின் மேற்குப்பகுதி, எகிப்து, ஐரோப்பா ஆகிய பிரதேசங்களில் முன்னாளிலே தோலிலும் எழுதி வந்திருக் கிறார்கள். ஆனால் அது நம் நாட்டிலே பழக்கத்தில் இருந்ததாகத் தெரிய வில்லை. புத்தமதக் கிரந்தங்கள் சிலவற்றிலே தோலும் எழுதுகருவி களுள் ஒன்றாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. ஸுபந்து என்பவர் எழுதிய வாசவதத்தை என்னும் வடமொழி நூலும் ஏறக்குறைய இதேபோன்ற கருத்தை ஓரிடத்தில் தெரிவிக்கிறதென்பர். எனினும், நம்மக்கள் தோலை அசுத்தப் பொருளாகவே மதித்து வந்திருக்கிறார்கள். மத விஷயங் களில் புனிதம் வாய்ந்த பொருள்களாக உபயோகிக்கும் புலித்தோல், மான்தோல் ஆகிய இரண்டையும் தவிர மற்றவைகளைக் கையால் தொடக்கூடமாட்டார்கள். அன்றி, தோலில் எழுதப்பெற்றது ஏதும் இதுவரையில் நம் நாட்டில் கிடைக்கவில்லை. எனினும் இந்திய எழுத் துக்கள் பொறிக்கப்பெற்றுக் காஷ்கர்பகுதியி லிருந்து கிடைத்த தோல் துண்டுகள் பீட்டர்ஸ்பர்க்கில் இருக்கின்றனவாம்.

6. மசி: இந்திய மக்கள் பூர்ஜபத்திரம், காகிதம், பருத்தி நூல் துணி ஆகியவற்றில் எழுதிவந்தார்கள் என்று கிரேக்க ஆசிரியர்கள் கூறுவதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். அதைக் கவனித் தால் அவற்றின்மீது எழுதுவதற்கு ஏதோ ஒரு வகையான சாயத்தை உபயோகித்திருக்கவேண்டும் என்பது விளங்கும். கிறிஸ்து அப்தத் துக்கு முற்பட்டகாலத்தில் எழுதப்பட்டனவாகக் காணும் கிருஹ்ய ஸூத்திரங்களில் மஷி, மஸி, மசி என்பனபோன்ற உருவங்களில் இந்தச் சொல் காணப்படுகிறது. மசிகொண்டு எழுதியதாக நமக்குக் கிடைப் பவற்றுள் மிகவும் பழமையானது கி. மு. இரண்டு அல்லது மூன்றாம்

நூற்றாண்டு எழுத்துக்களால் அந்தேர் என்னும் இடத்தில் மூன்றும் எண் கொண்ட ஸ்தூபத்தினின்றும் கிடைத்த பாத்திரப்பேழையே யாகும். அதன் மூடியில் இந்தச் சாசனம் காணப்படுகிறது. (கன்னிங் ஹாம் எழுதிய 'பில்சாத்தோப்புகள்', 349 பக்கம்). இன்னும் அசோக சாசனங்களில் சில இடங்களில் புள்ளிகளுக்குப் பதிலாகச் சுழிகள் காண்பதைக்கொண்டு அந்நாளிலே மசியினால் எழுதும் பழக்கம் இருந் திருக்க வேண்டும் என்று ஆராய்ச்சியாளர் சிலர் கொள்வர். கோட்டானி லிருந்து கிடைத்த கரோஷ்டி எழுத்தில் உள்ள தம்மபதம் என்னும் நூல், அப்கானிஸ்தானத்து ஸ்தூபங்களிலிருந்து கிடைத்த கருங்கல் பாத்திரங்கள், 'முடிப்புகள்' ஆகியவை மசியினால் எழுதப்பட்டனவே. அஜந்தாவிலும் மசியினால் எழுதிய சாசனங்கள் சில கிடைத்துள்ளன.

மசியிலும் பல வர்ணங்களை உபயோகித்திருக்கிறார்கள். எனினும் கறுப்பு மசியே பெருவழக்கு. கறுப்பு மசியிலும் இரண்டு வகைகள் உண்டு. தினசரி உபயோகத்துக்கும் சாதாரணமானவிஷயங்களை எழுது வதற்கும் உபயோகமாகும் மசி ஒரு வகை. ஏதோ ஒரு வகையான கரித் தூளோடு கோந்து, வெல்லம் போன்ற பசைப்பொருளைக் கலந்து தண் ணீர் விட்டுக் குழைத்து எழுதுவார்கள். அந்த மசி நிலைத்து நிற்காது; சீக்கிரத்தில் கலைந்துவிடும். மற்றொரு வகை முக்கியமான பத்திரங் களையும் நீண்டகாலம் காக்க வேண்டியவற்றையும் எழுதுவதற்கு உப யோகமாவது. இதை அரக்கு, வெங்காரம், லோத்ரா, எண்ணெய் விளக்கு எரித்த புகைக்கரி ஆகியவற்றைத் தண்ணீரில் குழைத்து வேறு பசையுடன் சேர்த்து நன்றாகக் கொதிக்கவைத்துத் தயாரிப்பார்களாம். இவ்விதம் தயாரித்த மசியினால் எழுதியது தண்ணீரிலும் கலையாதாம். காஷ்மீரத்திலே பூர்ஜ பத்திரத்தின்மீது எழுதுவதற்கு வாதாம் கொட்டை ஓட்டைச் சுட்ட கரியை உபயோகித்துப் பசுமாட்டின் சிறு நீரில் கொதிக்கவைத்து மசி தயாரிப்பார்களாம். அவ்விதம் தயாரித்த மசியினால் எழுதிய மரப்பட்டையை அவ்வப்போது தண்ணீரில் போட் டுக் கழுவினாலும் எழுத்துக்கள் கலையாவாம்.

மசிகளைப் பலவேறு வர்ணங்களிலும் தயாரித்து வந்திருக்கிறார்கள். சிவப்பு மசி சாதாரணமானது. சுவடிகளை எழுதுவதற்குச் சில சமயங் களில் மஞ்சள் வர்ண மசியையும் உபயோகித்திருக்கிறார்கள். பலவித வர்ணங்களில் எழுதிய சுவடிகளைத் தானம்செய்வதைப்பற்றி ஹேமாத்ரி தம்முடைய 'தானகாண்ட'த்தில் கூறியிருக்கிறார். சிவப்பு மசியை அலக் தகம் அல்லது ஹிங்குளத்தைத் தண்ணீரில் கரைத்துப் பசை சேர்த் துத் தயாரித்துவந்திருக்கிறார்கள். பெரும்பாலும் ஏடுகளில் வலத்தி லும், இடத்திலும் கோடு இழுக்கவும், இடையிலே சில குறிகளை இடு

வதற்குமே அதை உபயோகித்திருக்கிறார்கள். சில சமயங்களில் அத்தியாயமுடிவுகளையும் சுலோக முடிவுகளையும் இதனால் குறித்திருக்கிறார்கள். ஜைன ஆசிரியர்கள் சிலர் அத்தியாய முடிவைக் காட்டப் பச்சை அல்லது மஞ்சள் வர்ண மசியைக் கையாண்டிருக்கிறார்கள்.

சித்திரங்களின் நடுவே எழுதுவதற்கும், அரசர்கள், தனிகர்கள் போன்றோர் உபயோகத்திற்கான நூல்களை எழுதுவதற்கும், புனிதமான சிறு நூல்களை எழுதுவதற்கும் தங்கத்தாலும், வெள்ளியாலும் ஆன மசிகளை உபயோகித்தார்கள். அத்தகைய மசியைப்பற்றிய குறிப்புக்கள் பழங்காலத்திலிருந்தே இலக்கியங்களிலும் கிடைக்கின்றன. ஆயினும் இப்போது நமக்குக் கிடைக்கும் இத்தகைய எழுத்துக்கள் சமீப காலத்தைச் சார்ந்தனவே.

## 10. சாசன அமைப்பு

சாசனங்களை எவ்விதம் அமைத்து எழுதவேண்டும் என்பதைப் பற்றிய விதிகள் தர்ம சாஸ்திரங்களிலே காணப்படுகின்றன வென்பதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். பொதுவாகச் சாசனங்கள் ஐந்து பிரிவுகளாக அமையும். மங்கல வாசகம், தானம் கொடுப்பவன், தானம் பெறுபவன், தான விவரம், முடிவு ஆகியவை அவ்வைந்து பகுதிகள். பழைய சாசனங்கள் எளிய நடையில் சுருக்கமாகக் காணப்படும். காலம் செல்லச் செல்ல வாசகத்திலும் முறையிலும் சம்பிரதாயங்கள் ஏற்பட்டன. அவை இடத்துக்கு இடம், காலத்துக்குக் காலம் வேறுபட்டன. எனினும் மேலே காட்டிய ஐந்து முக்கியமான அம்சங்களை விட்டுவிடவில்லை; முறையாகக் கடைப்பிடிக்கப்பட்டு வந்தன.

மங்கல வாசகம் : இலக்கியமோ தத்துவமோ அல்லது வேறு எந்தத் துறையிலும் சரி, ஒரு நூலை மங்கல வாசகத்துடன் ஆரம்பிப்பதே நம் மரபு. நூல் அல்லாமல் வேறு எதை எழுதினாலும்கூட அதை நாம் பின்பற்றுகிறோம். சாதாரணக் கடிதம் எழுதும்போது கூடப் பிள்ளையார் சுழி போட்டே ஆரம்பிக்கிறோம். அந்த மங்கல வாசகம், வாழ்த்து, வணக்கம் மங்கலச் சொல் என மூன்று வகைப்படும். கடவுள் வாழ்த்து ஏதும் இல்லாமல் எடுத்த எடுப்பிலே நூலைத் துவக்குமிடத்திலும் மங்கலச் சொல்லையாவது முதலில் கொடுத்தே எழுதுவது வழக்கம்.

பழைய சாசனங்கள் பலவற்றில் ஆரம்பத்திலே கடவுள் வணக்கத்தோடு மங்கலத்தைக் கொடுப்பனவாகக் கருதும் குறிகள் சிலவும் காணப்

படுகின்றன. பெரும்பாலும் இந்தக் குறிகளை முதலில் கொடுத்தே பிறகு கடவுள் வணக்கத்தைக் கூறுவார்கள். பிற்காலத்திய தமிழ்ச் சாசனங்கள் பலவற்றின் ஆரம்பத்திலே பிள்ளையார் சுழியும் காணப் படுகிறது. அது பல வேறு உருவங்களில் எழுதப்பட்டு வந்திருக் கிறது. (இதை விவரமாகக் கலைகளில் வெளியான கட்டுரை ஒன்றில் ஆராய்ந்திருக்கிறேன்). கர்நாடக தேசத்துச் சாசனங்களிலும் இது காணப்படுகிறது. அவ்விடத்திலே இது ஒன்றுக்குள் ஒன்றாகத் தொடர்ந்து வரும் ஒரு சுழி உருவத்தில் உள்ளது. அதை ஸித்தம் என்றே வாசிப்பர்; சில இடங்களில் ஓங்காரமான பிரணவமாகவும் கொள்வர். சில சமயங்களில் முதலில் இந்தப் பிள்ளையார் சுழியை எழுதி அதைத் தொடர்ந்து ஸித்தம் அல்லது ஓம் என்பதை எழுத்தாலும் எழுதியிருப்பர்.

கலிங்கநாட்டு மன்னனான காரவேலனுடைய ஹாதிகும்பாச் சாச னத்தின் ஆரம்பத்திலே ஒரு கிரீடமும், ஒரு ஸ்வஸ்திகையும் ஒன்றன் கீழ் ஒன்றாகப் பொறிக்கப்பட்டுள்ளன. அவற்றை ஸ்வஸ்திகை, ஸ்ரீவத்ஸம் ஆகிய இரண்டையும் குறிப்பனவாகக் கொள்வர். பழைய சாசனங்களில் சில 'ஸ்வஸ்தி ஸ்ரீமதாம்' என்றே ஆரம்பிக்கின்றன. அதனால் இவ்வுருவங்கள் 'ஸ்வஸ்தி ஸ்ரீ' என்று சாசனங்களின் ஆரம்பத்தில் காணும் மங்கலச் சொல்லைக் குறிப்பனவாக இருக்கலாம் என்று ஆசிரியர்கள் சிலர் கருதுவர். அந்தச் சாசனத்திலே இவ்வுரு வங்கள் மட்டுமல்லாமல் ஜினபகவானுக்கு வணக்கமும் ஆரம்பத்தில் கூறப்பட்டுள்ளது.

சில சாசனங்களில் 'உடுக்கையும் போதி மாமும்' என்று ஆராய்ச் சியாளர் கூறும் குறியும் காணப்படுவது உண்டு. அவற்றுள் முதலா வதைப் பிரணவம் அல்லது பகவான் என்றும் பிந்தியதை நாராயணன் என்றும் கொள்வர். 'திரிசூலத்தின்மீது உள்ள சக்கரம்' எனப்படும் குறியீடும் சில இடங்களில் எழுதியிருப்பர். 'நமோ' என்ற சொல்லே இவ்விதம் குறியீடாக அமைந்தது என்று ஆசிரியர்கள் கூறுவர்.

பெரும்பாலான சாசனங்கள் இத்தகைய குறிகளைக் கொண் டிருந்தாலும் இல்லாவிட்டாலும், 'ஸ்வஸ்தி' என்ற சொல்லுடனே தான் ஆரம்பமாகும். சிலவற்றுள் 'ஸித்தம்' என்பது காணப்படும். பழைய சாசனங்களிலே இது முதல்வரியின் ஆரம்பத்தில் எழுதப்பட் டிருக்காது. இடதுபுறமாக ஏட்டின் நடுவில் நடு வரியை உள்ளே தள்ளி ஆரம்பிக்கச் செய்யும் வகையில் எழுதப்பட்டிருக்கும். இது தவிர, தானம் கொடுத்தோன் வழிபடும் கடவுளையோ, தானம் வழங்கப்

பட்டாரின் மதத்துக்குரிய கடவுளேயோ வணங்கும் வாசகமும் ஆரம்பத்தில் காணப்பெறும். பல்லவர், மேலைக் கங்கர் ஆகியோருடைய பழைய சாசனங்கள் ஜிதம் பகவதா என்று கூறி ஆரம்பிக்கும். இதேபோல வேறு சாசனங்களில் நமச்சிவாய (எபி. இந்திகா, இரண்டாம் வால்யூம், 10,410-பக்கங்கள்), நமோ புத்தாய (ஷை ஆறும் வால்யூம், 287-பக்கம்), நமோ பகவதே வாஸுதேவாய (ஷை இரண்டாம் வால்யூம், 350-பக்கம்), நமோ அர்ஹதோ வர்த்தமாநஸ்ய (ஷை), நமோ ஸரஸ்வத்யை அல்லது பாரத்யை (ஷை பக்கங்கள் 182, 333) என்றும் காணப்படும். விஜயநகர ஸாம்ராஜ்ய மன்னர்கள் வழங்கிய சாசனங்கள் கணபதயே நமஃ என்று ஆரம்பிக்கும்.

பல சாசனங்களின் ஆரம்பத்திலே தானம் வழங்குவோரின் இஷ்ட தெய்வத்துக்கு வணக்கம் கூறுவதாக அழகான சுலோகங்கள் காணப்படுகின்றன. அந்தச் சுலோகங்கள் சிவன், விஷ்ணு, தேவி, கார்த்திகேயன், பிரம்மா, ஸரஸ்வதி ஆகிய பலரைப் பற்றியும் வணக்கம் கூறுவனவாக இருக்கும் விஷ்ணுவைப்பற்றியவை அவருடைய அவதாரங்களில் பலவற்றின் பெயரிலும் காணப்படும். கர்நாடக தேசத்திலே ஜைனர்களுடைய சாசனங்கள் அதிகமாகக் கிடைக்கின்றன. அவை ஜின பகவானுக்கு வணக்கம் செலுத்துவதாகவோ ஜினசாசனத்தைப் புகழ்வதாகவோ உள்ள சுலோகத்துடன் ஆரம்பமாகும். புத்தமத சம்பந்தமான சாசனங்களிலே புத்த பகவான் வணக்கம் கூறப்பட்டிருக்கும். சில சமயங்களில் மஞ்சுகோஷர், மஞ்சுஸ்ரீ போன்ற வேறு புத்தமதத் தெய்வங்களின் வணக்கமும் காணப்படும். அந்த அந்தத் தெய்வங்களின் விக்கிரக லக்ஷணத்தை அறிவதற்கு உதவும் வகையில் இந்தச் சுலோகங்கள் விவரங்களைக் கொடுத்திருக்கும்.

தானம் வழங்கியவர்: சாசனங்களிலே மங்கல வாசகத்துக்கு அடுத்தபடியாகத் தானம் வழங்கியவர் பெயர் காணப்படும். தானம் வழங்குவோருடைய பரம்பரையை மூன்று தலைமுறைக்குக் கொடுக்க வேண்டுமென்று தர்ம சாஸ்திரங்கள் விதிக்கின்றன. இதனால் அவனுடைய தந்தை, பாட்டன், முப்பாட்டன் ஆகியோர்களுடைய பெயர்கள் காணப்படும். தானம் கொடுப்போர் பெயரையும் சேர்த்தால் நான்கு தலைமுறைகளுக்கு ஆகும். பழைய சாசனங்கள் இந்த விதியை அப்படியே பின்பற்றியிருக்கக் காணலாம். பல்லவ மன்னர்களுடைய பழைய ஸம்ஸ்கிருதச் சாசனங்கள் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். சில சமயங்களில் அந்த அரசர்களுடைய பெயர்களோடு அவர்களுடைய வெற்றிகளும் வேறு புகழ்ச்செய்திகளும் கூறப்பட்டிருக்கும். மற்றுஞ் சில சாசனங்களில் இவ்விதம் தானம் வழங்கிய அரசன் பரம்பரையைப்

பற்றிக் கூறுமிடத்தில் மூன்று தலைமுறைகளோடு நிறுத்திவிடமாட்டார் கள்; அந்த வமிசம் நிறுவப்பட்ட காலத்திலிருந்து ஆண்ட அரசர்கள் எல்லோரையும் குறிப்பிட்டிருப்பார்கள். மேலைச் சாளுக்கியர், கீழைச் சாளுக்கியர் ஆகியோருடைய செப்பேட்டுச் சாசனங்களில் இந்த முறை பின்பற்றப்பட்டிருப்பதைக் காணலாம். அவற்றுள் காணப்படும் பிர சஸ்தி ஒரே விதமாக இருக்கும். புது அரசர்கள் பட்டமேற்கும்போது பழைய பிரசஸ்தியின் சுலோகங்களை அப்படியே வைத்துக்கொண்டு புது அரசர்களுக்கான புதுச் சுலோகங்களைச் சேர்ப்பர்.

ஆனால் தமிழ்ச் சாசனங்களிலே இந்த முறை பின்பற்றப்பட வில்லை. தானம் வழங்கியவர்களுடைய வமிச பரம்பரை பெரும்பாலும் காணப்படாது. பிரசஸ்தியும் அந்த அரசனைப் பற்றியதாகவே இருக்கும். தஞ்சையிலிருந்து ஆண்ட சோழ மன்னர்கள், அவர்களுக்குப் பின்னால் ஆதிக்கியம் பெற்ற பாண்டிய மன்னர்கள் ஆகியோருடைய சாசனங் களில் இதைக் காணலாம். இந்தப் பிரசஸ்தியைத் தமிழில் மெய்க்கீர்த்தி என்பர். செய்யுள் உருவில் அமைந்த இம் மெய்க்கிர்த்தி ஒவ்வோர் அரசனுக்கும் தனித்தனியாக அமைந்திருக்கும். சிலசமயங்களில் ஓர் அரசனுக்கே ஒன்றுக்கு மேற்பட்ட மெய்க்கீர்த்திகளும் காணப்படும். அவை ஆட்சியின் ஆண்டு ஏற ஏற உருவத்திலும் பெருகிக் கொண்டே வரும். அவ்வப்போது நிகழும் புதுப் புது வெற்றிகள் அம் மெய்க்கீர்த்தி யில் சேர்க்கப்படும். வடமொழிப் பிரசஸ்தியில் சிலசமயங்களில் காணும் கவியின் கற்பனைகள் இந்த மெய்க்கீர்த்தியில் இடம் பெறா. இவை தெளிவாகவும் சுருக்கமாகவும் சரித்திர நிகழ்ச்சிகளை அப்படியே எடுத் துக் கூறுகின்றன. தானம் வழங்கிய அரசனுடைய பெயர் மெய்க்கீர்த்தி யின் முடிவிலே கொடுக்கப்பட்டிருக்கும். அரசனுடைய ஆட்சியின் ஆண்டும் அதைத் தொடர்ந்து காணப்படும்.

தமிழ் இலக்கண நூல்களிலே பாட்டியல் வகையில் மெய்க்கீர்த்தி யின் இலக்கணமும் கொடுக்கப்பட்டிருக்கக் காணலாம்.

சில சாசனங்களிலே மெய்க்கீர்த்தி கொடுக்கப்பட்டிருக்காது. இன் னும் சிலவற்றுள் 'புயல் வாய்த்து' என்பது போல மெய்க்கீர்த்தியின் ஆரம்பத்தை மட்டும் கொடுத்து அதை முழுதும் எழுதாமல் விட்டு விடுவார்கள். வேறு சிலவற்றிலே மெய்க்கீர்த்தியையே கொடுக்காமல், 'ஸ்ரீ மெய்க்கீர்த்திக்குமேல்' என்று ஆரம்பித்து விடுவர். அத்தகைய கல்வெட்டுக்களிலும் அரசன் பெயரை ஒட்டி அவன் ஆட்சியின் ஆண்டு காணப்படும்.

வேறு சிலவற்றுள் மெய்க்கீர்த்தி இல்லாததோடு மட்டுமல்லாமல் அரசனுடைய பெயரும் தெளிவாகக் காணப்படாது. திரிபுவனசக்கரவர்த்திகள் என்றோ கோனேரின்மை கொண்டான் என்றோ அரசன் பொதுவில் குறிக்கப் பட்டிருப்பான். அவை பெரும்பாலும் அரசாங்கத்தாரிடமிருந்து கிராமசபை, நாட்டார் போன்ற ஸ்தாபனங்களுக்கு வந்த நிர்வாக உத்தரவுகள் அடங்கிய ஓலைகளாகும். அவைகளையும் சபையார் கல்லில் பொறித்திருப்பதே அவை கிடைப்பதற்குக் காரணம். அவற்றில் அரசனுடைய ஆண்டு பெரும்பாலும் கடைசியிலே கொடுக்கப் பட்டிருக்கும்.

தானம் பெற்றவர் : சாசனங்களிலே யாருக்குத் தானம் வழங்கப் பெற்றதென்பது தெளிவாகக் கூறப்பட்டிருக்கும். தானம் பிராமணர்களுக்கு அளிக்கப் பெற்றதாயின் அவர்களுடைய வேதசாகை, சூத்திரம், கோத்திரம் போன்றவற்றுடன் அவர்கள் எந்த ஊரில் வசித்து வந்தனர் என்ற விவரமும், சிற்சில சமயங்களில் அவர்களுடைய தந்தையின் பெயரும் கொடுக்கப் பட்டிருக்கும். கோயில் மடங்கள் போன்ற ஸ்தாபனங்களுக்கு அளித்தனவாயின் அந்த ஸ்தாபனங்களின் சார்பாக யார் அந்தத் தானங்களைப் பெற்றுக் கொண்டார்கள் என்பதும் விவரிக்கப் பட்டிருக்கும்.

தான விவரம் : இந்தப் பகுதிதான் சாசனத்திலே முக்கியமானது. தான விவரமும் அதன் பரிகாரங்களும் அதை அனுபவிக்கும் முறையும் இந்தப் பகுதியிலே விரிவாகவும் தெளிவாகவும் கூறப்பட்டிருக்கும். அன்றி, பூமி தானமாக இருக்குமானால் அந்தப் பூமியின் நான்கெல்லையும், அந்த நிலத்துக்கான வரி விவரங்களும், அந்த வரிகளுள் விலக்கப் பட்டனவும் கொடுக்கப்பட்டிருக்கும். தான சாசனம் அல்லாது வேறு வகையாயின் அதன் விவரம் தெளிவாக இந்தப் பகுதியில் தான் காணப் பெறும். ஆகவே இந்தப் பகுதியின் வாசகம் சாசனத்தின் உள்ளுரையை ஒட்டிச் சாசனத்துக்குச் சாசனம் வேறுபடும்.

முடிவு : இந்தப் பகுதியும் ஒவ்வொரு சாசனத்திலும் வெவ்வேறு விதமாக இருக்கும். இருந்தாலும், ஓம்படைக் கிளவி என்னும் இந்தப் பகுதி இல்லாத சாசனமே இல்லை என்னலாம். பழைய தமிழ்ச் சாசனங்களின் முடிவில் 'இது பன்மாகேச்வர ரக்ஷை', 'இவ்வறம் காத்தார் ஸ்ரீபாதம் என் தலை மேலன' 'அறம் மறவற்க, அறமல்லது துணையில்லை' என்பன போன்ற வாசகங்கள் காணப்படும். இன்னும் பலவற்றின் முடிவில் சில குறிப்பிட்ட ஸம்ஸ்கிருத சுலோகங்கள் காணப்படுவதும் உண்டு. இந்தச் சுலோகங்களில் பல உள்ளன. சில சமயங்களில்

அவற்றுள் ஒரு சுலோகம் மட்டுமே எழுதப்பட்டிருக்கும். மற்றுஞ் சில வற்றில் அதிகப்படியான சுலோகங்களும் காணப்படும். தமிழில் உள்ள சாசனங்கள் சிலவற்றின் முடிவிலும் இந்த ஸம்ஸ்கிருத சுலோகங்கள் கொடுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். (பெரும்பாலும் வழக்கில் உள்ள இத்தகைய சுலோகங்கள் இந்தத் தொகுப்பின இரண்டாம் பாகத்தில் ஒரு பிற்சேர்க்கையாகக் கொடுக்கப் பட்டுள்ளன.)

இன்னும் சாசனங்களில் காணும் தர்மங்களைக் காப்பவர்கள் அடையும் புண்ணியமும் அவற்றுக்குக் கெடுதல் செய்ப்வர்கள் அடையும் பாபமும் விவரிக்கப்பட்டிருக்கும். தர்மத்தைக் காத்தவர்கள் அசுவ மேதயாகம் செய்த பலனை அடைவார்களாம். சில சமயங்களில் ஆயிரம் யாகங்கள் என்றும் கூறப்பட்டிருக்கும். அன்றி, சிவலிங்கப் பிரதிஷ்டையினல் உண்டாகும் புண்ணியத்தையும் பெறுவார்களாம். அதே போலக் கெடுதல் செய்தவர்கள் பஞ்ச மகாபாதகங்களைச் செய்த பாவத்தை அடைவார்களாம். 'இது இறக்குவான் கங்கையிடை குமரியிடை ஏழு நூற்றுக்காதமும் செய்தார் செய்த பாவமும் எய்துவான்', 'இதற்கு அஹிதம் செய்தவன் ஏழு பிறப்பும் வழியெச்சம் அறுவான்', 'இது விலக்குவான் கங்கையிடை குமரியிடை குரால் பசு கொன்றுன் செய்த பாபம் கொள்வான்' என்பன போல் பலவிதமான பாபங்களும் தர்மத்தை விலக்குவார்மீது ஏற்றிக் கூறப்பட்டிருக்கும்.

பல்லவ அரசனுன சிவஸ்கந்தவர்மன் தான் அளித்த நில தானத்தைப் பெற்றவர் அதை அனுபவிக்கமுடியாதபடி பீடையோ வாதையோ விளைவித்துத் தடை செய்பவர்களுக்குச் சரீர தண்டனை விதிக்கப்பெறும் என்று தன்னுடைய மயிதவோலுச் செப்பேட்டுச் சாசனத்திலே கூறியிருக்கிறுன். (எபி. இந்திகா, ஆறும் வால்யூம்). அவ்விதம் அவன் உயிருடன் அரசுபுரியும் வரையில் தான் ரக்ஷிக்கமுடியும். என்றைக்கும் அவன் உடன் இருந்து பாதுகாப்பு அளிக்கமுடியாது. அதனுலேதான் அத்தகைய தர்மங்களுக்கு அஹிதம் செய்பவர்களைத் தெய்வமே தண்டிக்கும் என்று தெரிவித்துப் பழிபாவங்களை ஏற்றிக் கூறுவது சாசனங்களிலே வழக்கமாகிவிட்டது. அன்றி, ஒவ்வோர் அரசனும் தனக்கு முன்னுல் ஆண்ட மன்னர்கள் அளித்த தானங்களை நல்ல முறையில் பரிபாலனம் செய்யவேண்டுமென்று கூறித் தானம் அளித்தவன் தனக்குப் பின்னுல் வரப்போகும் அரசர்களைப் பிரார்த்தித்துக் கொள்வதாகவும் காணப்படும். அவ்விதம் அவர்கள் ஊழிக்காலம் வரையில் தானத்தைப் பரிபாலனம் செய்யவேண்டுமென்று கை கூப்பிப் பிரார்த்திக்கும்போது, செல்வ நிலையாமையையும் புகழ் நீர்க்குமிழி போன்ற தென்பதையும் தெரிவித்திருப்பார்கள். அதனேடு, பின்னுல்

வரும் அரசர்கள் தங்களுக்கு முன்னால் இருந்தவர்கள் அளித்த தர்மங்களைப் பாதுகாக்கவேண்டுமென்று, அயோத்தி மன்னனான ராமபத்திரன் (அதாவது ராமபிரான்) வேண்டிக் கொண்டதாக உள்ள சுலோகத்தையும் கொடுத்திருப்பதைக் காணலாம். புதிதாகத் தானம் வழங்குவதைக் காட்டிலும் பழைய தர்மங்களைப் பரிபாலனம் செய்வதே சிறந்தது என்று வியாசர் இயற்றியதாகக் காணப்படும் ஒன்றிரண்டு சுலோகங்களும் எழுதப்பெற்றிருக்கும்.

இந்தப் பகுதி நாளாக ஆக விரிந்துகொண்டே வந்தது. தமிழ்ச் சாசனங்களிலும் இதே முறை கையாளப்பட்டு வந்திருக்கிறது.

சில சாசனங்களின் கடைசியில், முக்கியமாகச் செப்பேடுகளில், அவற்றை எழுதியவர் பெயர்களும் காணப்படும். நந்திவர்மன் பல்லவ மல்லனுடைய பட்டத்தாள் மங்கலச் செப்பேடுகளில் முடிவில் 'இவ்வெழுத்து வெட்டினேன் கச்சிப்பேட் டைம்பணைச்சேரி விடேல் விடுகு பல்லவப் பெருந்தச்சன் மகன் ஸ்ரீ உணி(தண்டி)யேன்' என்று காணப்படுகிறது. (எபி. இந்திகா, பதினெட்டாம் வால்யூம்). சில சமயங்களில் பிரசஸ்தியை இயற்றிய கவிஞன் பெயர், அதைச் செதுக்குவதற்காகச் செப்பேட்டில் எழுதியவன் பெயர் ஆகியனவும் கூடக் கொடுக்கப்பட்டிருக்கும். ஒரு சாசனத்திலே (ஷை முதல் வால்யூம், பக்கம் 49) பிரசஸ்தியை இயற்றிய கவியின் பெயர் தேவகணன் என்றும், அதைச் செப்பேட்டில் எழுதியவன் பெயர் க்ஷத்திரியன் குமாரபாலன் என்றும், எழுத்து வெட்டியவன் பெயர் சம்புலன் என்றும் காணப்படுகிறது. மற்றொரு சாசனத்திலே (ஷை பக்கம் 45) கவிஞன் பெயர் ரத்ன ஸிம்ஹன் என்றும், ஏட்டில் எழுதியவர், எழுத்து வெட்டியவர் ஆகிய இருவர்களும் மேலே காட்டிய சாசனத்தில் குறிக்கப்பட்டவர்களே என்றும் கூறப்பட்டுள்ளது.

**எழுதுவோர்** ;-முன்னாளிலே சமூக வாழ்க்கையில் எழுதுவோர்கள் ஒரு முக்கியமான ஸ்தானத்தை வகித்து வந்தார்கள். அந்நாளில் இருந்த வாழ்க்கை நிலை, எழுதுகருவிகள், எழுதும் முறை, வாசிப்பதற்கு ஏற்றவகையில் தெளிவாக எழுதவேண்டிய அவசியம் ஆகியவையே எழுதுவோர்களுக்கு அத்தகைய ஸ்திதியை அளித்தனவென்னலாம். முத்ராராக்ஷஸம் என்னும் வடமொழி நாடகத்தின் நாடக பாத்திரங்களுள் ஒருவரான சாணக்கியன், 'எவ்வளவு சிரத்தையோடு எழுதினாலும் என்னைப்போன்ற சுரோத்திரியர்களின் எழுத்து தெளிவாகவோ சுலபத்தில் புரியக்கூடியதாகவோ இரா' என்றும், 'ஆகவே எழுதுவோன் ஒருவனைக் கொண்டே என்னுடைய லிகிதங்களை எழுதிக் கொள்வது' என்றும் கூறுவதாக அதன் ஆசிரியரான சூத்ரகர் எழுதி

யிருக்கிறார். நாட்டுமக்களில் நன்றாகப் படித்தவர்களும் தாங்களே அதிகமாக எழுதாமல் கையெழுத்து அழகாக உள்ளவர்களைக் கொண்டே தங்களுக்கு வேண்டியவற்றை எழுதிக்கொண்டனர். சமீபகாலம் வரையில் கூட, சர்க்கார் கச்சேரி ஒவ்வொன்றிலும் வெளியே அனுப்பவேண்டிய கடிதங்களையும் இதர தஸ்தாவேஜுகளையும் பிரதி செய்வதற்காகக் கையெழுத்து அழகாகவும் தெளிவாகவும் உள்ளவர்களை நியமித்து வந்தனர். டைப் அடிப்பது பழக்கத்துக்கு வந்தபிறகே இந்த முறை மாறலாயிற்று.

முன்னாளிலே பனையோலை, பூர்ஜபத்திரம், துணி முதலியவற்றில் எழுதுவதற்கு, அவற்றிலுள்ளும் முக்கியமாக அரசாங்கத் தஸ்தாவேஜுகளை எழுதுவதற்குப் பயிற்சிபெற்ற எழுத்தாளர்கள் இருந்தனர். எனினும், அவற்றைக் கல்லிலும் செம்பிலும் கைதேர்ந்த வினைஞர்களே வெட்டிவந்தனர். இன்னும் அந்த எழுத்துக்களைச் சித்திரித்து எழுதுவதானால் அது நல்ல கைலாகவமும் கலையுணர்ச்சியும் உள்ளவர்களாலே தான் முடியும்.

எழுதுவோர்கள் அந்நாளிலே லேககர் என்று குறிக்கப்பட்டு வந்தனர். சில சமயங்களில் லிபிகாரர் எனவும் பெறுவர். கிருஷ்ணா ஜில்லா அமராவதியிலிருந்து கிடைத்த சாசனம் ஒன்றிலே ராஜ லேககன் ஒருவன் தானம் வழங்கிய செய்தி காணப்படுகிறது. அதிலிருந்து எழுதுவோர்களிலே கைத்திறமையும் சாமர்த்தியமும் வாய்ந்த சிலர் அரண்மனையிலும் அரசாங்கத்திலும் சேவகம் புரிந்துவந்தனர் என்பது தெளிவாகும். அசோகனுடைய பிரம்மகிரி, சித்தபுரச் சாசனங்களைப் பொறித்தவன் சபதன் எனப்பெறும் லிபிகாரன் என்று அந்தச் சாசனங்களில் காணப்படுகிறது. அரசனுடைய ஊழியத்தில் இருந்த எழுதுவோர்களைப் பற்றிக் கிடைக்கும் சாசனங்களில் இவையே மிகவும் பழமையானவை. ஸாஞ்சியிலிருந்து கிடைத்த சாசனத்திலே (எபி. இந்திகா, இரண்டாம் வால்யூம்) ஸுபாஹித கோதிபுதன் என்னும் ராஜலிபிகாரன் பெயர் காணப்படுகிறது.

தமிழ்நாட்டில் கிடைக்கும் கல்வெட்டுக்களிலே அதைக் கல்லில் பொறித்தவர்களுடைய பெயர் குறிக்கப்படுவதில்லை. செப்பேடுகளிலும் ஏதோ சிலவற்றிலே அவர்களுடைய பெயர் கொடுக்கப்பட்டிருக்கும். எனினும் தெலுங்கு நாட்டிலே கல்வெட்டுக்களிலும் பல சமயங்களில் அவற்றைப் பொறித்தவர்கள் யார் என்பது குறிப்பிடப்பெற்றிருக்கும். மேற்கு கோதாவரி ஜில்லா திராக்ஷாராமத்திலிருந்து கிடைக்கும் முதற் குலோத்துங்க சோழனுடைய தமிழ்ச் சாசனங்கள் இரண்டின்

முடிவிலும் அவற்றைக் கல்லிலே பொறித்தவன் 'டாகரேமி சுராசாரி ஆன வீராஜேந்திர சோட ஆசாரி' என்பான் ஆவன் என்று தெலுங்கிலே வெட்டப்பட்டிருக்கிறது. (தெ. இ. சாசனங்கள், நான்காம் வால்யூம், 1246, 1227 எண்கள்). அவன் பெயரிலிருந்தே அவன் கல்வெட்டுகளைப் பொறிக்கும் பொறுப்பு ஏற்றிருந்த அரசாங்க அதிகாரியான கல்தச்சன் என்பது விளங்கும். இவ்விதம் அரசாங்க அதிகாரம் பெற்ற கல்தச்சர்கள் தமிழ்நாட்டிலும் இருந்திருக்கிறார்கள். இது சாசனங்களிலிருந்து நன்றாகத் தெரிகிறது. தஞ்சாவூர் ஜில்லாவிலே திருவையாற்றிலிருந்து கிடைக்கும் முதலாம் இராஜேந்திர சோழன் காலத்துச் சாசனம் ஒன்று, முதலாம் இராஜராஜ சோழனுடைய தேவியான உலோகமகாதேவி அவ்விடம் எழுப்பிய தக்ஷிண கைலாசம் என்னும் ஆலயத்தின் சுவர்களிலே கல்வெட்டுக்களைப் பொறிக்கும் உரிமையைக் காணியுடைய கல்தச்சனே அனுபவிக்கவேண்டும் என்று அவள் உத்தரவிட்ட செய்தியைத் தெரிவிக்கிறது. (இந்தத் தொகுப்பின் 610 செ.) இதேபோல் கல்வெட்டும் காணியுடைய கல்தச்சர்கள் வேறு பல கோயில்களிலும் இருந்த விவரம் சாசன வாயிலாகத் தெரிய வருகிறது.

பிரசஸ்தி புனைந்தவர்—பல சாசனங்கள் உயர்ந்த காவிய நடையில் சொல் நயமும் பொருள் நயமும் கொண்டு சிறந்த கற்பனைகளுடன் அமைந்திருக்கின்றன. இதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். உண்மையில் சில சாசனங்கள் சிறந்த காவியங்களோடு சமமாக வைத்து எண்ணத்தக்கவை. எனினும் அத்தகைய பிரசஸ்தியைப் புனைந்த கவிஞர்களின் பெயர் பெரும்பாலும் பிறருக்குத் தெரியாமலே மறைந்து போயின. ஆனாலும் இங்கு ஒன்றும் அங்கொன்றுமாகச் சில பெயர்கள் தெரிகின்றன. கதம்ப வமிசத்து ஆதிகால வரலாற்றைக் கூறுவதாகத் தாளகொண்டை ஸ்தம்பத்தில் காணும் காவிய சாசனம் குப்ஜன் என்னும் புலவனால் புனையப் பெற்று அவனாலேயே கல்லிலும் எழுதப்பட்டதாம். இது 'குப்ஜஃ ஸ்வகாவியம் இதம் அஸ்மதலே லிலேக' என்று அந்த கல்வெட்டிலேயே கூறப்பட்டிருக்கிறது. (எபி. இந்திகா, எட்டாம் வால்யூம்).

இவ்விதம் சாசனங்களுக்காகப் பிரசஸ்தி இயற்றும் கவிஞர்களும் அவற்றைச் செப்பேட்டில் பொறிப்பவர்களும் சில சமயங்களில் தங்கள் பதவிகளைப் பரம்பரை வழியிலே வகித்து வந்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. நந்திவர்மன் பல்லவமல்லனுடைய உதயேந்திரம் செப்பேட்டுச் சாசனத்தின் பிரசஸ்தியை எழுதிய கவிஞனை பரமேச்வரன் தன்னை ஸ்ரீசந்திரன் மகனென்றும் மேதாவியின் குலத்தில் உதித்தவன் (மேதாவி குலோத்பவன்) என்றும் கூறிக்கொள்ளுகிறான். (தெ. இ.

சாசனங்கள், இரண்டாம் வால்யூம்). பல்லவமல்லனுக்கு முன் ஆண்ட பல்லவ அரசர்களுள் ஒருவனுன ஸிம்ஹவர்மனுடைய செப்பேட்டுச் சாசனம் ஒன்று சமீபத்திலே கிடைத்துள்ளது. அதில் காணும் பிரசஸ்தியை மேதாவி என்னும் கவி இயற்றினுன் என்று அந்தச் சாசனம் கூறுகிறது. உதயேந்திர சாசனத்தின் பிரசஸ்தி கர்த்தாவான பரமேச்வரன் குலத்தையே இவனும் சேர்ந்தவன் போலும்.

பூதானம் வழங்கிய சாசனத்தின் பிரசஸ்தியை இயற்றிய கவிஞர், அந்தச் சாசனத்தைச் செம்பில் பொறித்தவர் ஆகியோர்களும் சிற்சில சமயங்களில் தானம் வழங்கிய பூமியில் பங்கு பெற்றவர்களாக இருக்கக் காண்கிறேம். உதயேந்திரம் சாசனத்தை எழுதிய கவிக்கு அந்தக் கிராமத்தில் ஒரு பங்கு அளிக்கப்பட்டதாக அதே சாசனம் கூறுகிறது. இதேபோல் பாண்டிய மன்னனுன பராந்தகன் நெடுஞ்சடையனுடைய வேள்விக்குடிச் செப்பேடுகளை எழுதிய யுத்தகேசரி பெரும்பணைக் காரன் அந்தக் கிராமத்திலே ஒரு மனையும், இரண்டு மா நன்செய் நிலமும் ஒரு புன்செய் பூமியும் பெற்றுன் என்று காணப்படுகிறது. (எபி. இந்திகா, பதினேழாம் வால்யூம்).

கையெழுத்து:—எந்தப் பத்திரத்துக்கும் கடைசியில் கையெழுத் திட்டு முத்திரையையும் இட்டால்தான் அது பூர்த்தியாகும். சாசனங் களிலே அரசன் கையெழுத்து இடப்பட்டுக் காண்பதற்குப் பழமையான உதாரணம் கன்னேசியில் ஆண்ட வர்த்தன வமிசத்து அரசன் ஸ்ரீ ஹர்ஷ னுடையதாகும். அது 'ஸ்வஹஸ்தோ மம மஹாராஜாதிராஜ ஸ்ரீ ஹர்ஷ தேவஸ்ய' என்று மிகவும் சித்திரித்த வகையில் எழுதப்பட்டிருக்கும். (எபி. இந்திகா, நான்காம் வால்யூம், பக்கம் 288). தாராநகரத்துப் பர மார வேந்தன் போஜதேவனுடைய சாசனங்களிலும் 'ஸ்வஹஸ்தோயம் ஸ்ரீபோஜதேவஸ்ய' என்று எழுதப்பட்டிருக்கும். (ஷை பதினேராம் வால்யூம், 192-ஆம் பக்கம்). சில சமயங்களில் 'ஸ்வஹஸ்த' என்பது சேர்க்கப் பெருமல் 'ஸ்ரீமூலராஜஸ்ய' என்பதுபோல அரசன் பெயர் மட்டுமே காணப்படும். (ஷை பத்தாம் வால்யூம்). வேறு சில சாசனங் களில் அரசன் பெயர் இல்லாமல் 'ஸ்வஹஸ்தோ மம' என்றே 'என்னுடைய கையெழுத்து இது' என்பது மட்டுமே காணப்படும். (ஷை முதல் வால்யூம், பக்கம் 88). சாசனத்தோடு சேர்ந்திருக்கும் முத்திரையில் அரசன் பெயர் காணப்படுமாதலால் இவ்விடத்தில் கொடுக் காமல் போனுலும் தவறு இல்லையென்றே கொண்டனர் போலும்.

தென்னுட்டிலே அரசனுடைய கையெழுத்து தெலுங்கு தேசத் தில் அரசு செலுத்திய சிற்றரசர்களுடைய சாசனங்களிலும் விஜயநகர வேந்தர்களுடைய சாசனங்களிலுமே காணப்படுகின்றன. விஜயநகர

ஸாம்ராஜ்யத்தின் ஆரம்பகாலத்துச் சாசனங்களின் முடிவில் 'ஸ்ரீ ஹரி ஹர' என்பதுபோல அரசன் பெயர் எழுதப்பட்டிருக்கும். தெலுங்கு தேசத்துச் சிற்றரசர்கள் சாசனங்களிலே 'சிங்கநாயனிவ்ராலு' என்பது போல வ்ராலு (கையெழுத்து) என்பது சேர்த்துக் காணப்படும். ஆனால் விஜயநகர சாசனங்களில் இந்தச் சொல் சேர்க்கப்பட்டிருக்காது. ஆரம்ப காலத்தில் அரசர்கள் பெயரையே எழுதிவந்தார்கள். எனினும் சிறிது காலத்திலே அந்த முறையை மாற்றித் தங்கள் தலைநகரில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்பெயரையே தங்கள் இலச்சினையாகக் கொண்டு 'ஸ்ரீ விருபாக்ஷ' என்று எழுதிவந்தார்கள். அம் மன்னர்கள் வைஷ்ணவ மதத்தைத் தழுவி விஷ்ணு பக்தர்களாக மாறிய பிறகு அதை மறுபடியும் மாற்றி 'ஸ்ரீ வேங்கடேச' என்று எழுதி வந்தார்கள்.

ஆனால் தமிழ்நாட்டிலே இம்முறை கையாளப்படவில்லை. பல்லவர், சோழர், பாண்டியர் போன்ற அரசர்களுடைய சாசனங்களிலும் அவர்களுக்கு அடங்கியவர்களாக அரசு செலுத்திய சிற்றரசர்களுடைய கல்வெட்டுக்களிலும் அவர்களுடைய கையெழுத்து காணப்படவில்லை. எனினும், அந்தச் சாசனங்களிலே கையெழுத்தே இல்லாமலும் இல்லை. சோழ சாசனங்கள் பலவற்றிலே புரவுவரி திணைக்களநாயகம், முகவெட்டி, திருவாய்க்கேள்வி என்பனபோன்ற உயர்தர அரசாங்கத்து அதிகாரிகள் பலருடைய கையெழுத்துக்கள் இடப்பட்டிருக்கின்றன. சில சாசனங்களில் இத்தகைய அதிகாரிகள் பலருடைய கையெழுத்துக்கள் ஒன்றன்பின் ஒன்றாக இடப்பெற்றுக் காணப்படுவதும் உண்டு. அந்தச் சாசனத்தில் காணும் அரசனுடைய உத்தரவு அரசாங்கத்திலே எந்த எந்தத் துறைகளில் எந்த எந்த அதிகாரிகளால் பரிசீலிக்கப்பட்டு அந்த அந்தத் துறை வரிப் புத்தகங்களில் வரியிலிடப்பெற்றது என்ற விவரத்தை அவை எடுத்துக் காட்டுகின்றன.

தமிழ்ச் சாசனங்கள் பலவற்றிலே இத்தகைய கையெழுத்துக்களே முடிவுப்பகுதியாக இரா து. அரசன் அளித்த உத்தரவு அந்த அந்த ஊர்ச் சபையார்களுக்கே யாகும். அதன்மீது சபையார் எடுத்துக் கொண்ட நடவடிக்கையும் சாசனங்களில் கூறப்பட்டிருக்கும். பூமி தானங்களைத் தெரிவிக்கும் சாசனங்களிலே "நாட்டார் திருமுகம் கண்டு தொழுது தலைக்கு வைத்துப் படாகை நடந்து கல்லுங் கள்ளியும் நாட்டி"னர் என்பதுபோலச் சபையார் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளும் விவரிக்கப்பட்டுள்ளன. (பாகூர்ச் செப்பேடுகள், எபி. இந்திகா, பதினெட்டாம் வால்யூம்). அரசன் ஓலைகளிலே 'கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொள்வாராக' என்று காணப்படுவதினின்றும் அந்த ஓலைகளைப்

பெற்ற சபையார் எடுக்கவேண்டிய நடவடிக்கை விவரமும் தெரியவரும். சபையாரே அந்த உத்தரவுகளைக் கல்லில் பொறித்துவந்தனர். அதனால் பல சமயங்களில் கல்லில் பொறித்த சபை அதிகாரியின் பெயரும் சாசனங்களின் முடிவில் காணப்பெறும்.

முத்திரை :— ஒரு பத்திரத்தின் மெய்ம்மையை நிரூபிக்கக் கையெழுத்துக்கு அடுத்தபடியாக அரசனுடைய முத்திரை முக்கிய மானது. தர்மசாஸ்திர விதிகளின்படி பத்திரங்களுக்கு அரசாங்க முத்திரை இடவேண்டுமென்பது அவசியம் இல்லையென்றும், ஆகவே அதைப் பழையகாலத்தில் முக்கியமானதாகக் கருதவில்லையென்றும் சில ஆசிரியர்கள் சொல்வர். கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டில் எழுதப்பெற்றதாகக் கருதப்படும் யாஜ்ஞவல்கிய ஸ்மிருதியிலே அரசன் அளிக்கும் பூதான பத்திரங்களில் அவன் முத்திரையும் இடப்படவேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறது. எனினும் அரசனுடைய முத்திரை செப்பேட்டுச் சாசனங்களிலே தான் காணப்படுகிறது. கல்வெட்டுக்களிலே அதை இட முடியாதே.

உண்மையை நிரூபிக்க அரசன் முத்திரையோ முத்திரை பதித்த மோதிரத்தையோ உபயோகிக்கும்வழக்கம் மிகப்பழங்காலத்திலிருந்தே காணப்படுகிறது. இலங்கையில் இராவணனால் சிறை வைக்கப்பட்டிருந்த சீதையைப் பார்த்தபோது ஹநுமான் தான் கூறுவது முற்றிலும் உண்மையென்பதை இராமனுடைய கணையாழியைக் காட்டி நிரூபித்தான் என்று இராமாயணம் கூறுகிறது. காளிதாசன் எழுதிய நாடகங்களுள் சிறந்த சாகுந்தலமும் துஷ்யந்த மன்னனுடைய முத்திரை மோதிரத்தை ஆதாரமாகக் கொண்டு எழுந்ததாகும். முத்திரா ராக்ஷஸம் என்னும் நாடகத்திலும் மந்திரியின் முத்திரை மோதிரமே பிரதானமாக விளங்குகின்றது. நாடகத்தின் பெயரே அதைக் குறிக்கிறது.

இன்னும் பாணகவி எழுதிய ஹர்ஷ சரித்திரத்திலும் அரசனுடைய முத்திரையைப் பற்றிய ஒரு சம்பவம் கூறப்பட்டிருக்கிறது. கௌட தேசத்தின் மீது படையெடுத்துச் செல்வதற்காகக் கிளம்பிய மன்னன் ஹர்ஷவர்த்தனன் சரஸ்வதி நதிக்கரையில் பாடி இறங்கியிருந்தான். அப்போது அந்த ஊர் அதிகாரி அரசன் முன்னிலையில் வந்து அன்றைத் தினம் செய்யவேண்டிய காரியங்களுக்கு ஆணையிட வேண்டி, அந்த உத்தரவை முத்திரையிட்டு அளிக்கப் புதிதாகச் செய்த பொன் முத்திரை ஒன்றையும் கொடுத்து, அதைப் பொறிப்பதற்காகக் களிமண்ணையும் நீட்டினனும், அரசன் கையில் வாங்கிய முத்திரை தவறிக் கீழே

கறுப்பு ஈரமண்ணில் விழுந்து உருண்டு ஓடியது. தலைகீழாக விழுந்த அது கீழே மண்ணில் தோய்ந்து பக்கத்துப் பூமியில் பதிந்தபோது அரசன் முத்திரை அந்த நிலத்திலே விழுந்தது. இதைக் கண்ட பரிஜனங்கள் இது துர்நிமித்தமோ என்று எண்ணி மனங்கலங்கினர். ஆனால் அரசனே அதை ஒரு சுப சூசகமாகவே கொண்டான். பூவுலகம் முழுதும் அவனுடைய ஒரே ஆணைக்கு அடங்கியதாக ஆகும் என்பதையே அது அறிவிப்பதாகக் கருதினான். அவ்விடம் கூறியுள்ள படியே களிமண்ணைக் கையில் ஏந்தியே அதன்மீது முத்திரையைப் பதிப்பர் என்பதும் இப்போது கிடைக்கும் களிமண் முத்திரைப் படிமங்களால் உறுதியாகின்றது. அந்தப் படிமங்களின் பின்புறம் உள்ளங்கை ரேகைகள் பதிந்திருப்பதைக் இப்போதும் காணலாம். (ராயல் ஏஷ்யாடிக் ஸொஸைட்டி பத்திரிகை, 1901).

நம் நாட்டுக்கு வந்திருந்த சீன யாத்திரிகரான யுவான் சுவாங் கடைசியாக ஹர்ஷ மன்னனிடம் விடைபெற்றபோது அரசன் மெல்லிய பருத்தி நூல் துணியில் எழுதிச் செவ்வரக்கு முத்திரையிட்டலிகிதங்களை வழங்கினான். அந்த யாத்திரிகரும் அவரோடு உடன் செல்வோர்களும் தாங்கள் பிரயாணம் செய்யும் நாடுகளிலே அரசன் அளித்த உத்தரவைக் காண்பித்தால் அந்நாட்டவர் அவர்களுக்கு வேண்டிய வசதிகளையும் வாகனாதிகளையும் அளித்து உதவுவார்களாம். இந்தச் செய்தி யுவான் சுவாங் வரலாற்றிலே விவரிக்கப்பட்டிருக்கிறது.

அவ்விதம் முன்னாளில் வழங்கி வந்த முத்திரை மோதிரம் ஒன்றும் இப்போது கிடைத்துள்ளது. அது செம்பினாலோ வெண்கலத்தாலோ செய்யப் பெற்றது. விரலில் கோத்துக் கொள்ளும் அதன் பாகம் ஒன்றேகால் அங்குலம் குறுக்களவு கொண்டது. முகப்பு ஒன்றே முக்காலே அரைக்கால் அங்குல நீளமும் ஒன்றரையே அரைக்கால் அங்குல அகலமும் கொண்டு முட்டை வடிவமாக அமைந்துள்ளது. அதிலே நாகபட்டன் குமாரனான மஹாராஜா மஹேச்வரநாகன் என்பான் பெயர் காணப்படுகிறது. (குப்த சாசனங்கள், ப. 282) எழுத்துக்கு மேலே ஒரு கோடுஇட்டு அதற்கு மேலே படுத்திருக்கும் ரிஷபத்தின் உருவம் ஒன்றும் பிறைச் சந்திரனும் காணப்படுகின்றன. எழுத்துக்குக் கீழே நாகத்தின் உருவம் காணப்படுகிறது.

செப்பேடுகளிலே காணப்படும் முத்திரைகளைப் பற்றி நாம் மேலே குறிப்பிட்டிருக்கிறோம். ஒற்றை யேட்டுச் சாசனமானால் முத்திரை அந்த ஏட்டிலேயே சேர்க்கப்பட்டிருக்கும். தேவபாலனுடைய மூங்கிர் சாசன ஏட்டை இதற்கு உதாரணமாகக் காட்டலாம். (எபி. இந்திகா,

பதினெட்டாம் வால்யூம்) ஒன்றுக்கு மேற்பட்ட ஏடுகளையுடையதாயின் அந்த ஏட்டுத் துளைவழியாகக் கோத்திருக்கும் வளையத்திலே முத்திரை பொறிக்கப்பட்டிருக்கும். இவ்விதம் செய்வதால் சாசனத்திலே பிற்காலத்தில் புதிய ஏட்டைச் சேர்க்கவோ ஏற்கெனவே உள்ள ஏட்டை எடுக்கவோ முடியாமல் தடுப்பதற்கு வேண்டிய பாதுகாப்பாகவும் அது அமையும். ஒற்றை ஏட்டிலே பொருத்தப்பட்டிருக்கும் முத்திரை சில சமயங்களில் பெயர்ந்து தனியாக வந்துவிடுவதும் உண்டு. குமார குப்தனுடைய பிதாரி முத்திரை (வங்காளத்து ஏஷ்யாடிக் ஸொஸைட்டி ஜர்னல், 1889), சர்வவர்மனுடைய அஸீர்கர் முத்திரை ஆகியவை இதற்கு உதாரணங்கள் ஆகும். (குப்த சாசனங்கள், பக்கம் 230).

முத்திரையிலே சாசனம் வழங்கிய அரசனுடைய பரம்பரையின் இலச்சினை முக்கியமாகப் பொறிக்கப்பட்டிருக்கும். பல்லவ முத்திரைகளில் படுத்திருக்கும் ரிஷபம், சாளுக்கிய, விஜய நகர மன்னர்களில் முத்திரைகளில் வராஹ (பன்றி) உருவம் ஆகியவைகளைக் காணலாம்.

சில சமயங்களில் முத்திரைகளில் ஒன்றுக்கு மேற்பட்ட உருவங்களும் காணப்படும். எனினும் அவற்றுள் அந்த அரசனுடைய வமிசத்து இலச்சினையே பிரதானமானதாக இருக்கும். மற்ற உருவங்கள் சிறிய அளவில் காணப்படும். அவற்றுக்கு உரிய அரசர்கள் அந்தச் சாசனம் வழங்கிய பேரரசனுக்கு அடங்கிய சிற்றரசர்களாவர் என்பதையே அந்த உருவங்கள் குறிக்கின்றன. உதாரணமாக, சோழ மன்னர்களுடைய சாசனங்களில் காணும் முத்திரையிலே அவர்களுடைய இலச்சினையான புலியின் உருவத்தோடு பாண்டியர்களுக்கு உரிய மீனும் சேரர்களுக்கு உரிய வில்லும் இதே போல இன்னும் சில உருவங்களும் காணப்படும். மீன், வில் முதலியவை அந்நாளிலே பாண்டிய சேரர் போன்றோர் சோழர்களுக்கு அடங்கியவர்கள் என்பதையே குறிக்கும். எனினும் சோழ வேந்தன் பேரரசன் என்பதை எடுத்துக்காட்ட அவன் இலச்சினையான புலியின் உருவம் பிரதானமானதாக அமைந்திருக்கும்.

சாசனத்தை அளித்த அரசன் பெயரும் முத்திரையிலே காணப்படும். பழைய சாசனங்களில் அரசன் பெயர் மட்டுமே இருக்கும். எனினும் தமிழ் நாட்டுச் சாசனங்களின் முத்திரையிலே அதற்கு உரிய அரசனைப் புகழ்ந்து கூறும் பிரசஸ்தி போன்ற ஸம்ஸ்கிருத சுலோகம் ஒன்று சாசனத்தின் வட்டமான விளிம்பை யொட்டி எழுதப்பட்டிருக்கும். ஒரோரு சமயங்களில் அவ்வரசனுடைய கல்வெட்டுக்களினும் அந்தச் சுலோகம் முதலில் கொடுக்கப்பட்டிருக்கும். வடநாட்டுச் சாசன முத்

திரைகள் சிலவற்றில் அரசன் பெயர் மட்டுமேயல்லாமல் அந்த வமி சத்தை நிறுவிய முதல் அரசன் முதல் தொடர்ச்சியாக அவனுடைய வமிசாவளியும் கொடுக்கப்பட்டிருக்கும். குமார குப்தனுடைய பிதாரி முத்திரை, நாலந்தாவிலிருந்து சிதிலமாகக் கிடைத்த புதகுப்தனுடைய முத்திரை (மேலே ௩௬௭-ஆம் பக்கம்) ஆகியவை இதற்கு எடுத்துக் காட்டுகளாகும்.

சில சாசனங்களிலே மற்றொரு வகையான அரசாங்க அங்கீ காரமும் காணப்படுகிறது. அவற்றின் ஆரம்பத்திலே 'திருஷ்டம்' அதாவது 'பார்வையிடப்பட்டது' என்று பொறிக்கப்பட்டிருக்கும். பல்லவ அரசனை சிவஸ்கந்தவர்மனுடைய மயிதவோலு (எபி. இந்திகா, ஆறும் வால்யூம்), ஹீரஹடகல்லிச் செப்பேடுகளில் (ஷை முதல் வால் யூம்), இது திடம் என்ற பிராகிருதவடிவில் எழுதாமல் விடப்பட்ட முதல் ஏட்டின் முதற் பக்கத்திலே இடதுபுறத்தில் காணப்படுகிறது. வாகாடக அரசனை இரண்டாம் விந்தியசக்தியின் பாஸிம் செப்பேடு களில் திருஷ்டம் என்ற ஸம்ஸ்கிருத வடிவில் அது கொடுக்கப்பட் டுள்ளது. (இந்திய சரித்திர காங்கிரஸ் நடவடிக்கைகள், கல்கத்தா, 1939) சாசனத்தை அரசனோ அரசாங்க அதிகாரிகளோ பார்வையிட்டு ஒப்புக் கொண்டனர் என்பதையே இந்தச் சொல் குறிப்பதாகும்.

இதேபோலத் தமிழ்ச் சாசனங்கள் சிலவற்றில், முக்கியமாகப் பாண்டிய அரசர்கள் வழங்கியவற்றில், துல்யம் என்ற சொல் ஆரம்பத் திலோ முடிவிலோ காணப்படுகிறது. இந்தச் சொல் 'சமம்' என்பதைக் குறிக்கும். தற்கால வழக்கில் உள்ளபடி இது 'சரியான பிரதி' என்ப தற்கு ஒப்பாகும். கல்லில் பொறிக்கப்பட்ட சாசன வாசகத்தை மூலத் தோடு ஒப்புநோக்கிய பின் அது சரியான பிரதி என்று அதிகாரிகள் ஏற்றுக்கொண்டதையே துல்யம் என்னும் சொல் குறிக்கிறது. பாண்டி யர்களின் ஆட்சியிலே இவ்விதம் கல்வெட்டுக்கள் பொறிப்பதை அரசாங் கமே நேரிடையாகக் கண்காணித்து வந்ததுபோலும்.

சில சமயங்களில் ஆரம்பத்தில் காண்பதுபோலவே சாசனங்களின் முடிவிலும் மங்கலச் சொற்களும் குறிகளும் காணப்படுகின்றன.

## 11. கல்வெட்டுக்களில் காலம் குறிக்கும் முறை.

ஒவ்வொரு பத்திரத்திலும் அது எழுதப்பெற்ற காலத்தைத் தெளி வாகக் கொடுக்கவேண்டுமென்று தர்மசாஸ்திரங்கள் விதிக்கின்றனவென் பதை நாம் முன்னரே எடுத்துக்காட்டியிருக்கிறோம். பெரும்பாலான சாசனங்களில் இந்த முறை முழுமையும் பின்பற்றியிருக்கக் காண

லாம். இவ்விதம் காலம் குறிக்கப்படுவதால்தான் தனி மனிதர்களுடைய விவகாரங்களை விவரிக்கும் சாசனங்களும் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்து ஆராய்ச்சிக்குப் பெரிதும் உபயோகப்படுகின்றன.

ஆனால் இவ்விதம் காலத்தைக் குறிப்பிடுவதிலே எல்லாச் சாசனங்களும் ஒரே முறையைப் பின்பற்றவில்லை. காலத்தைப் பலவகைகளில் கொடுத்திருக்கின்றன. சில சாசனங்கள் அந்தக் காலத்தில் அரசு புரிந்த மன்னனுடைய ஆட்சி ஆண்டையே குறிக்கின்றன. மற்றுஞ் சில குறிப்பிட்ட அப்தங்களின் ஆண்டுகளைக் கொடுக்கின்றன. வேறு சிலவற்றில் இரண்டும் சேர்ந்து காணப்படுகின்றன. இன்னும் சில வற்றிலே வருஷம் தவிர, மாதம், பக்ஷம், திதி, கிழமை, நக்ஷத்திரம், தேதி போன்ற விவரங்களும் உள்ளன. அன்றி, சங்கராந்தி, கிரகணம் போன்ற புண்ணிய காலங்களையும் குறிப்பிட்டிருக்கக் காணலாம். இந்தப் பஞ்சாங்க விவரங்களைக் கொண்டு தானம் வழங்கப்பெற்ற நாளை நாம் நிச்சயமாகக் கணித்துவிடலாம். பிராகிருத சாசனங்களிலும் ஸம்ஸ்கிருத சாசனங்களில் பழமையானவைகளிலும் நாள் விவரம் வேறுவிதமாகக் காணப்படும். வருஷத்தை வருஷகாலம் (மழைக்காலம்), கிரீஷ்ம காலம் (கோடை), ஹேமந்தகாலம் (பனிக் காலம்) என்று குறிப்பிட்டு மூன்றாகப் பிரித்து ஒவ்வொரு காலத்தின் பக்ஷங்களையும் கொடுத்திருக்கக் காணலாம்.

தமிழிலே கிடைக்கும் சாசனங்களில் அரசனுடைய ஆட்சியின் ஆண்டே பெரும்பாலும் குறிக்கப்பட்டிருக்கும். பழையகாலத்துச் சாசனங்களில் 'கோ விசைய நந்திவிக்கிரம பருமற்கு யாண்டு அறுபத் தொன்றாவது' (எபி. இந்திகா, பதினெட்டாம் வால்யூம், பட்டத்தாள் மங்கலம் செப்பேடுகள்) என்பதுபோல ஆண்டு எழுத்தால் எழுதப் பட்டிருக்கும். அதேநாளில் வேங்கியிலும் இதர இடங்களிலும் கிடைக்கும் சாசனங்களில் இந்த ஆண்டு இலக்கத்தால் எழுதப்பட்டிருக்கும். கி. பி. ஒன்பது, பத்தாம் நூற்றாண்டுகளில் பொறிக்கப்பட்ட தமிழ்ச் சாசனங்களில், 'கோ ராஜகேசரி பற்ம [ர்] க்கு யாண்டு அ-எட்டாவது' (தெ.இ. சாசனங்கள், பதின்மூன்றாம் வால்யூம், 187-நெ.) என்பது போல அரசனுடைய ஆட்சிஆண்டு இலக்கத்திலும் எழுத்திலும் கொடுக்கப்பட்டிருக்கும். பிற்காலத்திலேதான் அந்த ஆண்டு இலக்கத்தாலேயே எழுதப்பட்டு வந்தது.

பாண்டிய சாசனங்கள் பலவற்றிலே, "யாண்டு இரண்டாவதின் எதிர் நாற்பத்திரண்டு" (செந்தமிழ், நான்காம் தொகுதி, பக்கம் 114), அல்லது 'பதின்மூன்றாவதின் எதிர் பன்னிரண்டாவது' (இ. ஆ.,

இருபதாம் வால்யூம், பக்கம் 288) என்பனவைபோல இரட்டை ஆண்டுகள் காணப்படுகின்றன. இவ்விதம் இரண்டு ஆண்டுகள் காணப் படுவதில் எது சாசனகாலம் என்பதை நிர்ணயிக்க முடியாமல் நீண்ட காலம் அது பெரும்புதிராகவே இருந்தது. பாண்டிய மன்னனான இராஜ சிம்மனுடைய சின்னமனூர்ச் செப்பேடுகளில் பெரிய சாசனத்திலே தான் இதற்கு விளக்கம் கிடைத்தது. அந்தச் சாசனத்தின் காலம் தமிழ்ப்பகுதியிலே 'இரண்டாவதின் எதிர் பதினான்காவது' என்றும் ஸம்ஸ்கிருதப் பகுதியில் 'ஷோடசே ராஜ்ய வர்ஷே' என்றும் காணப் படுகிறது. ஆகவே இரட்டை ஆண்டுகள் குறிக்கப்பெறும் இடங்களில் அந்த இரண்டு ஆண்டுகளையும் கூட்டிவந்த மொத்தத்தொகையே சாச னத்தின் காலத்தைக் குறிப்பதாகும் எனக்கொள்ளவேண்டுவது தெளி வாகும்.

ஆனால் ஏன் இந்தமுறை, முக்கியமாகப் பாண்டிய சாசனங்களில் மட்டும் காணப்படும் முறை, கையாளப்பட்டு வந்தது என்பது விளங்க வில்லை. இதை விளக்குவதற்கு ஆராய்ச்சியாளர்கள் பலவிதமான சமா தானங்களைக் கூறியிருக்கின்றனர். ஆயினும் எந்தக் கொள்கையும் ஏற்றுக்கொள்ளக் கூடியதாக இல்லை. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு விதமான ஆக்ஷேபணை கிளம்புகிறது. எந்தக் கொள்கையும் எல்லா ஆக்ஷேபங்களுக்கும் சமாதானம் கூறுவதாக இல்லை. திருப்பதி தேவஸ்தானத்தில் சாசனபரிசோதகராக இருந்த பண்டித சுப்பிரமணிய சாஸ்திரிகள் இதைப்பற்றி விரிவாகத் திருப்பதி ஸ்ரீ வேங்கடேச்வரா கீழ்த்திசைக் கலை ஆராய்ச்சி நிலயத்துப் பத்திரிகையில் (ஜர்னல் ஆப் ஸ்ரீ வேங்கடேச்வரா ஓரியண்டல் ரிஸர்ச் இன்ஸ்டிடியூட், ஆறு ஏழாம் தொகுதிகள்) ஆராய்ந்திருக்கிறார்.

தென் ஆர்க்காடு ஜில்லா எண்ணாயிரம் என்னும் கிராமத்திலிருந்து கிடைத்த முதலாம் இராஜாதிராஜ சோழன் ஆட்சி காலத்துச் சாசனம் ஒன்றிலிருந்து அரசன் உத்தரவு ஒன்று அவ்வூர்ச் சபையாரிடம் வந்து சேர்வதற்கு மூன்று வருஷமும் நூற்றுமூன்று நாட்களும் பிடித்தன வென்பதை நாம் முன்னரே (மேலே உ௭௲ பக்கம்) குறிப்பிட்டிருக் கிறோம். முதலாம் இராஜேந்திர சோழனுடைய திருவேலங்காட்டுச் செப்பேடுகளிலிருந்து (தெ. இ. சாசனங்கள், மூன்றாம் வால்யூம்) அரச னுடைய ஆட்சியின் ஆறாம் ஆண்டு அளிக்கப் பெற்ற அந்தத் தானம் அவனுடைய ஆட்சியின் பன்னிரண்டாம் ஆண்டுக்குப் பிறகே செப் பேட்டில் பொறிக்கப்பட்டது என்பது தெரியவருகிறது. அவனுடைய ஆட்சியின் பன்னிரண்டாம் ஆண்டில் நிகழ்ந்த கங்காவிஜயம் அந்தச் சாசனத்தின் வடமொழிப் பிரசஸ்தியில் வருணிக்கப் பட்டிருப்பதி

லிருந்து இது விளங்கும். இவ்விதம் அரசன் உத்தரவு அளித்ததற்கும் அதை நிறைவேற்றி முடிப்பதற்கும் நடுவே இடைவெளி ஏற்படு வதைக் கவனிக்கும்போது, பாண்டிய சாசனங்களில் காணும் இரண்டு ஆண்டுகளுள் முதலில் கொடுக்கப்படுவதே சாசனத்துக்கான உத்தரவு வழங்கப்பட்ட வருஷம் என்றும், இரண்டாவதாகக் கொடுக்கப்படுவது அவ்விதம் உத்தரவு அளிக்கப்பட்டது முதல் சாசனம் பொறிக்கப்பட்ட நாள்வரையில் சென்ற இடைவெளிக்காலம் என்றும் கொள்ளலாம்.

இந்த ஆண்டுகள் சில சாசனங்களில் இரண்டுடன் நின்றுவிடாமல் ஐந்துவரையில் செல்வதையும் காணலாம். உதாரணமாக, ஒரு சாச னத்தில் (1907 ஆண்டு 358 செ.) 'நான்காம் ஆண்டுக்கு எதிராம் ஆண் டுக்கு எதிராம் ஆண்டுக்கு எதிராம் ஆண்டுக்கு எதிராம் ஆண்டு' (4+1+1+1+1) குறிக்கப்பட்டிக்கிறது. இவ்விதம் பின்னால் வரும் பல எதிராம் ஆண்டுகளையும் முதலில் அளிக்கப் பெற்ற உத்தரவை நிறைவேற்றுவதில் அந்த அந்த நிர்வாகக் கட்டங்களில் செல்லும் காலத் தைக் குறிப்பனவாகக் கொள்ளலாம். (இதற்குத் தற்கால நடைமுறை யில் ஓர் உதாரணமும் காட்டலாம். சர்க்கார் உத்தரவுகள் சிலவற்றிலே 15/19 என்பது போலத் தேதி குறிக்கப்பட்டிருக்கும். அதிலிருந்து 15உ யன்றே உத்தரவு அளிக்கப்பட்டதென்றும் அதற்குப் பிரதி எடுத்து அதில் அதிகாரிகள் கையெழுத்திடுவதற்குச் சிலகாலம் பிடித்தது என்றும் 19உ அது கையெழுத்தாயிற்று என்றும் கொள்கிறோம்).

அப்தங்கள் :—தென்னிந்தியச் சாசனங்களிலே, அவற்றுள்ளும் முக்கியமாகத் தமிழ்நாட்டிலே கிடைக்கும் சாசனங்களில், கி.பி. 78-ஆம் ஆண்டிலிருந்து கணக்கிடப்படும் சகாப்தமே பெருவழக்கில் காணப் படுவது ஆகும். முதன் முதலாக அந்த அப்தத்தில் வழங்கிய சாசனம் சகாப்தம் 465 கொண்டதாக வாதாபியிலே ஒரு பாறையில் பொறிக்கப் பட்டுள்ள முதலாம் புலிகேசி எனப்படும் சாளுக்கிய வல்லபேசுவர னுடையதாகும். (எபி. இந்திகா, இருபத்தேழாம் வால்யூம்). அடுத்த படியாக உள்ளது சகாப்தம் 500 கொண்டு அதே ஊரில் விஷ்ணுவின் குடைவரைக் கோயிலில் காணும் முதலாம் கீர்த்திவர்மனுடைய சாசன மாகும். (இ. ஆ., பத்தாம் வால்யூம்). எனினும் இலக்கிய வழக்கிலே இந்த அப்தம் இன்னும் முன்னதாகவே காணப்படுகிறது. தமிழ்நாட்டுத் திருப்பாதிரிப்புலியூரிலே திகம்பர ஜைனமுனிவரான ஸிம்ஹஸூரியின் நூலான லோக விபாகம் என்பது சகாப்தம் 380-ல் பிரதி செய்யப் பெற்றதாகக் காணப்படுகிறது. (மைசூர் புதை பொருள் இலாகா அறிக்கை, 1922).

தமிழ்நாட்டுச் சாசனங்களிலே சகாப்தத்தை இரண்டு வகையில் குறிப்பிடுவர். 'சகாப்தம் 1665-ன்மேல் செல்லாநின்ற' (இந்தத் தொகுப்பின் 947-ஆம் எண் கொண்ட சாசனம்)என்பதுபோல முடிந்து போன ஆண்டைக்கொண்டு குறிப்பிடுவது ஒரு முறை. அதன்படி அந் தச் சாசனம் பொறிக்கப்பட்ட காலத்தில் சகாப்தத்தின் 1665-ஆம் ஆண்டு முடிந்து 1666-ஆம் ஆண்டு நடந்துகொண்டிருந்ததென்று ஆகும். மற்றொரு முறையில் முடிந்துபோன ஆண்டைக் குறிப்பிடாமல் நடப்பு வருஷத்தைக் குறிப்பதாகும். இவ்விதம் நடப்பு வருஷமே குறிக்கப் பட்டுள்ளதென்பதை எடுத்த எடுப்பிலே தெரிந்துகொள்ள முடியாது. அறுபது வருஷக் கணக்கில் வரும் அந்த ஆண்டின் பெயரையும் இதர விவரங்களையும் கொண்டு கணித்துப் பார்த்தே நிர்ணயிக்க முடியும். இந்த முறைகளுக்குப் பின் வருவதை உதாரணமாகக் காட்டலாம். இப்போது அரசாங்கத்தார் நடைமுறையில் கொணர்ந்த இந்திய தேசியப் பஞ்சாங்கத்தின்படி ஹேவிளம்பி வருஷத்துக்குச் சகாப்தம் 1879-ஆம் ஆண்டு ஆகும். இது முடிந்துபோன ஆண்டைக் கொண்டு கணக்கிடப்பட்டது. ஆயினும் தமிழ்நாட்டுப் பஞ்சாங்கங்களில் அது 1880-ஆம் ஆண்டு என்றே காணப்படும். அது நடப்பு வருஷக் கணக் கில் இடப்பட்டதாகும்.

தென் பாண்டிநாட்டிலும் மேலைக் கடற்கரை யோரமாகவுள்ள கேரளநாட்டிலும் பெருவழக்காக உபயோகப்படும் அப்தம் கி. பி. 824-ஆம் வருஷத்திலிருந்து தொடங்கும் கொல்லம் ஆண்டு ஆகும். பழைய சாசனங்களிலே இது 'கொல்லம் தோன்றி' எத்தனை ஆண்டு கள் சென்றனவென்றே குறிக்கப்படும். கொல்லம் எனப்படும் நகரம் நிர்மாணிக்கப் பெற்ற வருஷத்திலிருந்து இந்த ஆண்டு கணக்கிடப் படுவதாகக் கருதுவர்.

மற்றொரு வகையான கொல்லம் ஆண்டு, அதாவது கி.பி. 1096-ஆம் வருஷம் கொல்லம் அழிக்கப்பட்டதை யொட்டி எழுந்த 'கொல்லம் அழிந்த ஆண்டு' ஒன்றும் ஓரிடத்தில் குறிக்கப்பட்டதை நாம் இதே நூலில் மற்றோர் இடத்தில் (சரித்திரக் குறிப்பு, ௱கக௬-௱கஎ-ஆம் பக் கங்கள்) பிரஸ்தாபித்திருக்கிறோம்.

கி. மு. 3101-ஆம் ஆண்டு விஷுவிலிருந்து ஆரம்பம் ஆவதாகக் கணக்கிடப்படும் கலியுக வருஷத்திலும் சில சாசனங்களில் காலம் குறிக்கப்பட்டிருக்கும். மதுரை ஜில்லா ஆனைமலைக் குடைவரைக் கோயி லில் கிடைத்த இரண்டு சாசனங்களில் ஒன்று (எபி. இந்திகா, எழாம் வால்யூம்) கி. பி. 770-ஆம் ஆண்டுக்குச் சமமான கலியுக வருஷம்

3871-ல் பொறிக்கப்பட்டதாகும். பிற்காலத்துச் சாசனங்கள் சிலவற்றில் கலியுக வருஷம் சகாப்தத்துடன் சேர்த்தே கொடுக்கப்பட்டிருக்கும்.

கேரள தேசத்தில் கிடைக்கும் சில சாசனங்கள் வியாழவட்டம் எனப்பெறும் பார்ஹஸ்பத்ய வருஷத்தில் கணக்கிடப்பட்டிருக்கும். பிரஹஸ்பதி என்றும் குரு என்றும் குறிக்கப்படும் வியாழன் ஒவ்வோர் இராசியிலும் சுமார் ஒரு வருஷம் தங்குகிறார் என்று வான நூல் வல்லோர் கூறுவர். அவர் தங்குகிற இராசியைக் கொண்டு மேஷ வியாழன், விருச்சிக வியாழன் என்பனபோல் ஆண்டைக் கணக்கிட்டு கூறுவர். பாஸ்கர ரவிவர்மனுடைய தமிழ்ச் சாசனங்களின் ஆண்டு (திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் ஸீரிஸ், இரண்டாம் வால்யூம்) இந்த முறையிலே குறிக்கப்பட்டுள்ளது.

முஸ்லிம்கள் உபயோகிக்கும் ஹிஜ்ரி வருஷத்தில் கணக்கிட்ட மூன்று தமிழ்ச் சாசனங்கள் கிடைத்துள்ளன. ஒன்று தேவகோட்டையிலும் மற்றொன்று திருப்புத்தூரிலும் கிடைத்துள்ளன. இராமநாதபுரம் ஜில்லாவில் கிடைத்த இவ்விரண்டையும், டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள் தம்முடைய 'தென்னிந்தியாவும் அதன்மீது படை எடுத்துவந்த முகம்மதியர்களும்' என்னும் நூலில் அநுபந்தமாகக் கொடுத்திருக்கிறார். மூன்றாவது சாசனம் கோயம்புத்தூர் ஜில்லா அலங்கியத்தில் கிடைத்தது. (1920-ஆம் ஆண்டின் 160-ெந). இம் மூன்றும் கி.பி. பதினான்காம் நூற்றாண்டில் அந்தப் பகுதிகளை மதுரை சுல்தான்கள் ஆண்டுவந்த நாளில் பொறிக்கப்பட்டவை.

மேலைச் சாளுக்கிய வேந்தனான ஆறாம் விக்கிரமாதித்யன் கி. பி. 1075-76-ஆம் ஆண்டு முதல் தன்னுடைய பெயரால் சாளுக்கிய விக்ரம அப்தம் என ஒன்றைப் புதிதாக ஆரம்பித்தான். அவனுக்குப் பிறகு சாளுக்கிய சிங்காசனம் ஏறிய அவன் மகன் காலத்திலும் அந்த அப்தம் வழக்கில் இருந்தது. எனினும் நாளடைவில் வழக்கொழிந்து மறைந்துவிட்டது. அதேபோல அவனுக்குப பின்னால் வந்த அரசர்களில் வேறு ஒருவனும் தன் பெயரால் ஒரு புதிய அப்தத்தை ஆரம்பித்தான். அதுவும் நீடிக்கவில்லை. சீக்கிரமாகவே மறைந்துவிட்டது. அன்றி அந்த அப்தங்களில் காலம் குறிக்கப்படும் சாசனங்கள் தெலுங்கு கர்நாடகப் பிரதேசங்களிலேதான் காணப்படுகின்றன.

கேரள தேசத்திலிருந்து கிடைக்கும் சாசனங்களில் வேறுபலவகையான அப்தங்கள் காணப்படுகின்றன,

"திருக்கண்டியூர் மகாதேவர்க்கு ஸர்வாதித்யம் செய்தருளிச் செல்லாநின்ற யாண்டு முந்நூற்றுத் தொண்ணூற்று நாலாம் ஆண்டை மேட வியாழத்தில்" (திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் ஸீரிஸ், முதல் வால்யூம், 290-பக்கம்).

"திருக் குலசேகரபுரத்துத் தளிக்குச் செல்லாநின்ற யாண்டு நூற்றுத் தொண்ணூத்தஞ்சு; இவ்வாண்டு மகர நாயற்று" (ஷை, ஆறும் வால்யூம், 193-பக்கம்).

கி. பி. 1663-ஆம் ஆண்டில் கொச்சி மன்னருக்கும் 'லேந்தா கும்மஞ்ஜி' (உலாந்தாக் கும்பினி) எனப்பெற்ற டச்சு கிழக்கு இந்தியக் கம்பெனியாருக்கும் இடையில் ஏற்பட்ட ஒப்பந்தம் புதுவைப்பு ஆண்டு 322-ல் செய்யப்பெற்றதாகப் பாலியம் செப்பேடுகள் கூறுகின்றன. (ஷை முதல் வால்யூம்.) வைப்பு என்னும் தீவு புதிதாகக் கடலில் தோன்றிய காலத்திலிருந்து கணக்கிடப்படுவதே இந்த அப்தம் என்று கூறுவர்.

இதேபோல, அந்த அந்த ஊர்களில் முக்கியத்துவம் பெற்ற ஏதோ சில சம்பவங்களைக் கொண்டு கணக்கிடப்பெற்ற சாசனங்களும் மலைநாட்டில் கிடைத்துள்ளன. (தேசிக விநாயகம் பிள்ளை எழுதிய 'காந்தளூர்ச் சாலை', பக்கங்கள் 18-20 பார்க்க).

சகாப்தத்துக்கு நூற்று முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால், அதாவது கி. மு. 57-ஆம் ஆண்டு, ஆரம்பிப்பதாகக் கணக்கிடப்படும் விக்கிரம அப்தமும் சாசனங்களிலே பெரிதும் வழங்கப்பெறும் அப்தங்களுள் முக்கியமானதாகும். எனினும், அது வட இந்தியாவிலேதான் அதிகமாக வழங்கிவந்திருக்கிறது. தென்னாட்டிலே அதன் உபயோகம் மிகவும் குறைவு. பழைய சாசனங்களிலே இது கிருத வருஷம், மாலவ அப்தம் என்பன போன்ற பெயர்களாலும் எந்த அடைமொழியும் இல்லாமல் ஸம்வத் அல்லது ஸம்வத்ஸரம் என்றும் காணப்படும். பிற்காலச் சாசனங்களில் அவ்வாண்டு விக்கிரம ஸம்வஸ்தரம் என்றும் குறிக்கப்பட்டிருக்கும்.

வட இந்தியச் சானங்களில் இன்னும் பல வேறு அப்தங்களும் உபயோகிக்கப்பட்டு வந்துள்ளன. கி. பி. 319-ஆம் ஆண்டில் ஆரம்பமாகும் குப்த ஸம்வத்ஸரம், அதே ஆண்டில் ஆரம்பமாகும் வல்லபி ஸம்வத்ஸரம் (இவ்விரண்டும் ஒரே அப்தமாகும் எனவும் கொள்வர்), கி. பி. 248-ஆம் ஆண்டு ஆரம்பமாவதாகக் கணக்கிடப்படும் சேதி அப்தம் அல்லது கலசூரி அப்தம், அதே காலத்தில் ஆரம்பிக்கும் திரைகூட-

ஆபிர ஸம்வத்ஸரம் (குப்த-வல்லபி ஸம்வத்ஸரத்தைப் போலவே இவ்விரண்டும் ஓரே அப்தத்தைக் குறிக்கும் என்று கூறுவர் ஆராய்ச்சியாளர்), கி. பி. 606-7-ஆம் ஆண்டு ஆரம்பமாகும் ஹர்ஷவர்ஷம், கி. பி. 879-ஆம் ஆண்டை முதல் வருஷமாகக் கொண்டுள்ள நேவார் அப்தம், கி. பி. 1179-ஆம் வருஷம் ஆரம்பமாகி வங்காளத்தில் பெரு வழக்கில் காணும் லக்ஷ்மண ஸேன அப்தம், கி. பி. 496-ஆம் ஆண்டு துவங்கும் கலிங்கநாட்டுக் கங்க மன்னர்கள் அனுஷ்டித்த கங்க அப்தம் ஆகியவை முக்கியமானவை.

இன்னும் இதேபோல எத்தனையே அப்தங்கள் உள்ளன. ஜைன தீர்த்தங்கரரான மஹாவீரர் நிர்வாணம் ஆன நாளிலிருந்து கணக்கிடப்பட்ட மஹாவீர அப்தம் அல்லது வீர நிர்வாண அப்தம் ஒன்று வழங்குகிறது. இது பெரும்பாலும் ஜைனர்களால் சுவடிகளிலே காலம் குறிப்பிடுவதற்குத் தான் உபயோகிக்கப்பட்டு வந்தது. அம்மாதிரியே புத்த பகவான் நிர்வாணம் ஆன நாளிலிருந்து கணக்கிடப்படும் அப்தமும் உண்டு. அது அந்த மதத்தினரால் பெரிதும் கையாளப்பட்டு வந்தது. இன்றைக்கும் இலங்கை, பர்மா போன்ற நாடுகளில் இந்த ஆண்டுக் கணக்கு வழக்கில் உள்ளது.

இந்த அப்தங்கள் பலவற்றின் ஆரம்பகாலம் சந்தேகத்துக்கு இடமின்றித் தீர்மானிக்கப்பட்டு விட்டதென்று சொல்லமுடியாது. சிலவற்றின் ஆரம்ப காலத்தைப்பற்றி ஆசிரியர்களுக்குள்ளே அபிப்பிராய பேதம் இருந்து வருகிறது. வேறு சில அப்தங்கள் எவ்விதம் யாரால் தோற்றுவிக்கப்பட்டன வென்பதைப் பற்றியும் ஆசிரியர்கள் மாறுபட்ட கருத்தைக் கொள்வர். உதாரணமாகப் பெருவழக்கில் உள்ள சகாப்தத்தை யார் நிறுவினர் என்பது இன்னும் உறுதியாகவில்லை. பலர் பலவிதமாகக் கூறுவர். இந்த அப்தங்களைப் பற்றிய ஆராய்ச்சியே தனி நூலாக விரியும்.

## எழுத்துக்களுக்கு எண் மதிப்பிடும் முறை

சாசனங்களிலே சில சமயங்களில் ஆண்டை எண்ணைக் கொடுக்காமலும் எழுத்தால் எழுதாமலும் சில குறிப்பிட்ட எழுத்துக்களைக் கொண்டோ சொற்களைக் கொண்டோ தெரிவிக்கும் பழக்கமும் காணப்படுகிறது.

எழுத்துக்களுக்கு எண்மதிப்பிட்டுக் குறிப்பதில் கடபயாதி, ஸித்தமாத்திரிகை என்று இரண்டு முறைகள் உண்டு. இவ்விரண்டு

வகைகளும் தென்னிந்தியாவுக்கே உரியன என்று கூறுவர் டாக்டர் பர்ணல். (தென்னிந்தியப் பிராசீனலிபி, பக்கம் 79).

கடபயாதி முறையில் ஸம்ஸ்கிருத நெடுங்கணக்கில் உள்ள மெய்யெழுத்து ஒவ்வொன்றுக்கும் பின்வருமாறு எண் மதிப்பிட்டு உபயோகிப்பர்.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 0 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 𑌕 | 𑌖 | 𑌗 | 𑌘 | 𑌙 | 𑌚 | 𑌛 | 𑌜 | 𑌝 | 𑌞 |
| 𑌟 | 𑌠 | 𑌡 | 𑌢 | 𑌣 | 𑌤 | 𑌥 | 𑌦 | 𑌧 | 𑌨 |
| 𑌪 | 𑌫 | 𑌬 | 𑌭 | 𑌮 | .... | ... | .... | ... | .... |
| 𑌯 | 𑌰 | 𑌲 | 𑌵 | 𑌶 | 𑌷 | 𑌸 | 𑌹 | 𑌳 | .... |

இந்த முறையில் காலத்தைக் குறிப்பிடுவதற்கு வேண்டிய எழுத்துக்களைக் கொண்டு ஏற்ற சொல்லை அமைத்து அந்தச் சொல் மூலமாகக் காலத்தைத் தெரிவிப்பர். பெரும்பாலும் அது சுலோக வடிவிலே தான் இருக்கும். அவ்விதம் செய்யும்போது எண் மதிப்பு வாய்ந்த மெய்யெழுத்துக்களை மட்டும் கொண்டு அந்தச் சொல்லை அமைக்க முடியாது. மொழி வழக்கையொட்டி அதிகப்படியான எழுத்துக்களை உபயோகிக்கநேரிடும். அதனால் அவ்விதம் அமைந்த சொல்லில் வரும் உயிர் எழுத்துக்களுக்கும் கூட்டெழுத்துக்களில் முன்னால் உள்ளவற்றுக்கும் மதிப்பு இல்லை. மெய்யெழுத்துக்களுக்கு மட்டுமே, அதுவும் கூட்டெழுத்துக்களாயின், பின்னால் வருவனவற்றுக்கு மட்டுமே எண்மதிப்பு உண்டு. பல சமயங்களில் அவ்விதம் அமைக்கப்படும் சொல்லுக்கும் காலத்தைத் தெரிவிக்கவேண்டிய விஷயத்துக்கும் பொருள் தொடர்பும் இருக்கக் காணலாம்.

காஞ்சீபுரம் வரதராஜர் கோயிலில் உள்ள சாசனம் ஒன்று (இந்தத் தொகுப்பில் 1290 நெ.) சகாப்தம் 1536-ஆம் ஆண்டில் லக்ஷ்மீகுமார தாதாசாரியார் அந்தக் கோயிலில் கல்யாணகோடி விமானத்தைக் கட்டி முடித்தார் என்பதைத் தெரிவிக்கிறது. சுலோக ரூபமாக அமைந்திருக்கு அது சகாப்தத்தைத் தெரிவிக்கும்போது,

தல்லக்ஷ்மீட்யே சகாப்தே
6 3 5 1

என்று கூறுகிறது. கடபயாதி முறையில் கணக்கிடும்போது அந்த வருஷம் 1536 ஆகும்.

இந்தமுறையிலும், இதேபோன்ற மற்றொன்றான பூதசங்கியை என்பதிலும், கொடுக்கப்படும் எண்களில் ஒன்றாவது ஸ்தானம் முதலிலும் பத்தாவது ஸ்தானம் அதற்கு அடுத்தபடியாகவும் நூறாவது ஸ்தானம் அதை அடுத்து மூன்றாவதாகவும், மற்ற ஸ்தானங்களும் இவ்விதமே தொடர்ச்சியாகவும் கொடுக்கப்பட்டிருக்கும். அதனால் அந்த எண்களை இப்போது உள்ள முறையில் கணிக்க வலத்திலிருந்து இடமாகக் கொள்ளவேண்டும்.

ஸித்தமாத்திரிகை என்னும் மற்றொருமுறை பாராக்கடி என்றும், துவாதசாக்ஷரீ என்றும்கூடக் குறிக்கப்பெறும். அதிலே வடமொழி உயிர் எழுத்துக்களில் ஜ, ஜ3, ஊ, ஊ3 ஆகிய நான்கையும் நீக்கி மற்றப் பன்னிரண்டுக்கும் பின்வருமாறு ஒன்று முதல் பன்னிரண்டு வரையில் எண் மதிப்பிட்டு வழங்குவர்.

| க | கூ | ஐ | ௦ஈ௦ | உ | ஊ | வ | வெ | ஒ | ஒள | க௦ | கஃ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |

சுவடிகளின் ஏடுகளை எண்ணிடுவதற்கே இம்முறை உபயோகிக்கப்பட்டுவந்தது. இன்றைக்கும் இலங்கை, பர்மா, தாய்லந்து போன்ற நாடுகளில் வழக்கில் உள்ளது. இம்முறையில் எண்களைக் குறிக்கும்போது உயிர் எழுத்துக்கள் முடிந்தவுடன் உயிர் ஏறிய மெய்யெழுத்துக்களை உபயோகிப்பார். ஆகவே க முதல் கஃ வரையில் உள்ள பன்னிரண்டு எழுத்துக்களுக்கும் 13 முதல் 24 வரையில் மதிப்பு; வ முதல் வஃ வரையில் உள்ளவை 25 முதல் 36 வரையில் மதிப்பு அடையும். இவ்விதமே மற்ற எழுத்துக்களுக்கும் ஆகும்.

பர்மாவிலிருந்து கிடைத்துள்ள ஒரு சுவடியில் ஏடுகளுக்கு இடப்பட்டிருக்கும் எண் உயிர் எழுத்துக்களைக் கொண்டு ஆரம்பிக்காமல், மெய்யெழுத்துக்களைக் கொண்டே ஆரம்பிக்கப்பட்டுள்ளது. அதிலே ஜ, ஜ3, ஊ, ஊ3 ஆகிய நான்கையும் விலக்காமல் சேர்த்துக்கொண்டு பதினாறு எழுத்துக்களாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. ஆகவே க முதல் கஃ வரையில் உள்ள எழுத்துக்களுக்கு 1 முதல் 16 வரையில் மதிப்பு ஆகும். அதற்கு அடுத்த எழுத்தான வ அப்பால் உபயோகிக்கப்படும். இவ்விதம் எல்லா எழுத்துக்களும் ஒரு முறை உபயோகித்த பிறகும் வேண்டியிருந்தால் உக, உகா என்ற வரிசையில் ஆரம்பிக்கப்படும்.

தாய்லந்தில் கிடைக்கும் சுவடிகளில் ஏடுகளை எண்ணிடப் பர்மாவில் காணும் முறையே கையாளப்பட்டிருக்கிறதாம்.

## பூதசங்கியை

எண்ணைச் சில குறிப்பிட்ட சொற்களால் உணர்த்தும் முறை மற்றொன்று. உலகம் மூன்று என்பதையும் வேதம் நான்கு என்பதையும் யாவரும் அறிவர். அதனால் மூன்று, நான்கு என்னும் எண்களை முறையே லோகம், வேதம் என்ற சொற்களால் குறிப்பிடுவது இம் முறை. இவைபோல மற்ற எண்களுக்கும் உண்டு. இது பூதசங்கியை எனப் பெறும்.

இவ்விதம் எண்களைச் சொற்களால் உணர்த்தும் பழக்கம் பழைய நூல்களிலும் காணப்படுகிறது. காத்யாயனர், லாட்யாயனர் போன்றோர் எழுதிய சிரௌத ஸூத்திரங்களில் இம்முறை குறிக்கப்பட்டுள்ளது. பூதசங்கியையால் எண்ணை உணர்த்துவனவாகக் காண்பதிலே சிரௌத சூத்திரங்களே மிகவும் பழமையானவை என்பர். இன்னும் இம்முறை வேதாங்கஜோதிஷத்திலும் உபயோகிக்கப்பட்டுள்ளது. வராஹமிஹிரர் எழுதிய 'பஞ்சசித்தாந்திகை', பக்ஷாலி கணிதச்சுவடி ஆகியவற்றிலும் காணப்படுகிறது. அரபு யாத்திரிகரான அப்பெரூநீ இம்முறையில் பூஜ்யம் முதல் நாற்பத்தொன்பது வரையில் உள்ள எண்களை எந்த எந்தச் சொற்களைக் கொண்டு குறிப்பர் என்பதை விவரமாகக் குறித் திருக்கிறார்.

சாசனங்களிலும் காலம் குறிப்பிடுவதற்கு இந்த முறை பயிலப் பட்டு வந்திருக்கிறது. ஸ்ரீரங்கத்திலே சகாப்தம் 1461-ஆம் ஆண்டு கொண்டதாக விஜயநகரவேந்தன் அச்சுததேவராயனுடைய சாசனம் ஒன்று கிடைத்துள்ளது. அரசன், ஹம்பியிலே போலும், நடத்திய துலாபாரத்தைப் பற்றிக் கூறும் அந்தச் சாசனத்திலே அவன் தேவி யான திருமலாம்பா இயற்றிய இரண்டு ஸம்ஸ்கிருத சுலோகங்களும் உள்ளன. (எபி. இந்திகா, இருபத்துநான்காம் வால்யூம், 270 பக்கம்). அதிலே ஒரு சுலோகத்தில் அவள் சகாப்தம் 1461 என்பதைச் 'சாகே சந்த்ர ரஸா மரேந்திர கணிதே' என்று குறிக்கிறாள். சந்திரன் என்பது ஒன்று ஆகும். ரஸம் ஆறு. அமரேந்திரர், அதாவது இந்திரர், பதினான்கு. இவ்விதம் குறித்த எண்ணை வலமிருந்து இடமாக வாசித் தால் 1461 ஆகும்.

கடபயாதியைப் போலவே இம்முறையிலும் ஒன்றாம் ஸ்தானத்தை முதலிலும், பத்தாம் ஸ்தானத்தை அடுத்தபடியாகவும், இவ்விதமே மற்ற ஸ்தானங்களையும் பின்னால் சேர்த்துக் கொடுப்பர். அதனால் இலக்கத்தின் மதிப்பை அறிய வலத்திலிருந்து இடமாக வாசிக்க வேண்டும்.

இம்முறையில் ஒன்று முதல் பன்னிரண்டு வரையில் உள்ள எண்களுக்கு உபயோகிக்கும் சொற்களில் முக்கியமானவை பின்வருமாறு. பலசமயங்களில் இவற்றின் பொருளைக் கொடுக்கும் வேறு சொற்களும் காணப்படுவது உண்டு.

0(பூஜ்யம்). சூன்யம்; அம்பரம், ஆகாசம்; அனந்தம் (முடிவு இல்லாதது).

1. இந்து, சசி (சந்திரன்); பூ, மஹீ; ஆதி; பிதாமகன் (பிரம்மா); ரூபம், தனு (தேகம்); நாயகன் (தலைவன்).

2. நயனம் (கண்கள்); கர்ணம்(காதுகள்); பாஹு; கரம்; பக்ஷம்; யமம், யமளம் (இரட்டை); அச்வின், தஸ்ரர் (அசுவினி தேவர்கள்); ரவி சந்த்ரௌ (சூரிய சந்திரர்); குடும்பம்.

3. அக்நி, ஹோத்ரு (மூன்று வேள்வித் தீ); ராமா: (மூன்று ராமர்கள்); குணம், திரிகுணம்; லோகம், திரிஜகத் (சுவர்க்கம், பூமி, பாதாளம்); காலம், திரிகாலம் (இறந்த காலம், நிகழ்காலம், எதிர் காலம்); சகோதரன்.

4. வேதம், சுருதி; திசை; வர்ணம்; அப்தி, ஜலதி (சமுத்திரம்); அயம், கிருதம் (பகடைக்காய்); பந்து, கோஷ்டம்.

5. பாண்டவர், இந்திரியம் (மெய், வாய், கண், மூக்கு, செவி); அர்த்தம், விஷயம்; பூதம் (நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி); இஷு, பாணம் (காமன் கணைகள்); பிராணன்; ரத்நம்; சுதன்,புத்திரன்

6. ரஸம் (அறுசுவை); ருது; அங்கம் (வேதாங்கம்); தர்சனம் (அறுசமயம்) காயம்; ராகம் (இசைப் பண்கள்); அரி, சத்துரு.

7. ரிஷி (சில சமயங்களில் ஏழு முனிவர்களில் முதல்வரான அத்திரி என்றே குறிக்கப் பெறுவதும் உண்டு); அசுவம் (சூரியனுடைய ஏழு குதிரைகள்); அகம் (மலைகள்); தாது; சந்தஸ்; களத்திரம்.

8. வசு (அஷ்ட வசுக்கள்); அஹி (எட்டுவகைப் பாம்புகள்); கஜம் (அஷ்ட திக்குக் கஜங்கள்); ஸித்தி (அஷ்டமாசித்தி); மங்களம்.

9. அங்கம் (தசாம்ச கணிதம்); நந்தர் (நவநந்தர்கள்); கோ, கிரகம் (நக்கிரகங்கள்); சித்ரம், துவாரம் (உடலின் நவத்துவாரங்கள்); நிதி (குபேரனுடைய நவநிதி); பவனம்; பாக்கியம்,

**10.** அவதாரம் (விஷ்ணுவின் பத்து அவதாரங்கள்); ராவண சிரசு; கர்மா; கேந்து (க்க + இந்து, அதாவது ஆகாசமும் (0) சந்திரனும் (1) அல்லது (10).

**11.** ருத்திரர் (சில சமயங்களில் ஏகாதச ருத்திரர்களில் முதல்வரான ஈசன் அல்லது சிவன் என்றே குறிப்பர்); அக்ஷௌஹிணி; (போர்ப்படை); இலாபம் (வரவு).

**12.** ஆதித்தியர், அர்க்கர் (பன்னிரண்டு சூரியர்கள்); வியயம் (செலவு).

ஜோதிஷத்தில், ஜாதகத்தைக் கொண்டு பலன்காணும் பிரிவிலே, பன்னிரண்டு இராசிகளில் முதல் வீட்டைத் தேகம் என்றும், இரண்டாவதைக் குடும்பம் என்றும், மூன்றாவதைச் சகோதரர் என்றும், நான்காவதைப் பந்து என்றும், ஐந்தைப் புத்திரஸ்தானம் என்றும், ஆறாவதைச் சத்துரு வீடு என்றும், ஏழாவதைக் களத்திரஸ்தானம் என்றும், எட்டாவது மங்கிலியஸ்தானம் என்றும், ஒன்பதாவது பாக்கியஸ்தானம் என்றும், பத்தாவது கர்மஸ்தானம் என்றும், பதினொன்றை லாபம் எனவும், பன்னிரண்டை வியயஸ்தானம் என்றும் குறிப்பிடுவார்கள்.

சாசனங்களிலே காலத்தைக் குறிப்பிடும்போது சில சமயங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட முறைகளைக் கலந்துவிடுவார்கள். உதாரணமாக ஒரு சாசனத்தில் மூவாயிரத்து எண்ணூறு என்னும் எண் 'ஸஹஸ்ரத்ரதய வஸு சதை:' என்று கொடுக்கப்பட்டுள்ளது.

## 12. சில சாசன வழக்காறுகள்

இதுகாறும் கல்லிலும் செம்பிலும் கிடைத்துள்ள சாசனங்களில் பழமையானவை எளியனவாகவும் சுருக்கமாகவும் எழுதப்பட்டுள்ளன. வாசக அமைப்பிலோ நடையிலோ சம்பிரதாயங்கள் அப்போது ஏதும் ஏற்பட்டு விடவில்லை. அந்தச் சம்பிரதாயங்கள் காலக்கிரமத்திலே உண்டாயின. குறிப்பிட்ட சொற்றொடர்கள் சிருஷ்டிக்கப்பட்டு வந்தன. இவை யெல்லாம் நாட்டுக்கு நாடு, காலத்துக்குக் காலம் வேறுபட்டுக் காண்கின்றன. உதாரணமாக, மேடு பள்ளம் எல்லாவற்றையும் அவற்றின் பலன் உள்பட அனுபவிப்பதைக் குறிக்கப் பல்லவ சாசனங்களில் 'உடும்போடி ஆமை தவழ்த வெல்லாம்' என்று குறிப்பிட்டனர். அதையே பிற்காலத்தில் 'மேல்நோக்கிய மரமும் கீழ்நோக்கிய கிணறும்' என்று குறித்து வந்தார்கள். பிறிதொருகாலத்தில் 'புற்றும் தெற்றி

'யும்' என்றனர். இதேபோல் கொங்கு நாட்டுச் சாசனங்களில் அரச னுடைய ஆட்சி ஆண்டைக் குறிப்பிடும்போது, 'திருவெழுத்திட்டுச் செல்லா நின்ற திருநல்லியாண்டு' என்று எழுதப்பட்டுள்ளது. பிற் காலத்துச் சாசனங்களில் 'ஸர்வமானியம்' என்று வருவதைப் பழைய தமிழ்ச் சாசனங்களில் முற்றூட்டு என்று குறிப்பிடுவார்கள். இவ்விதம் சாசன வழக்கில் காணும் சொற்களையும் சொற்றொடர்களையும் ஆராய்ந் தால் ரசமான பல புதிய விஷயங்கள் தெரியவரும்.

மத்திய காலத்தில் சில கோயில்களிலே ஒரு சம்பிரதாயம் வழக்கில் இருந்தது. கோயில்களுக்கு அளிக்கப்பெறும் தானங்கள் போன்றவற் றுக்கு அரசன் பெயரிலோ அந்தத் தானங்களை அளித்தவர்களின் பெயரிலோ சாசனங்கள் எழுதப்படமாட்டா. அந்தக் கோயிலில் எழுந் தருளியிருக்கும் எம்பெருமான் அளித்தனவாக அவர் பெயராலேயே சாசனங்கள் காணப்படும். 'நான்', 'எனது' என்ற எண்ணத்தையும் ஆசையையும் ஒழிக்கவேண்டும் என்று வேதாந்த நூல்கள் கூறுகின்றன. அதைக்கொண்டே இந்தச் சம்பிரதாயம் ஏற்பட்டிருக்கலாம்.

இராமநாதபுரம் ஜில்லா ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து (கி. பி. 1454) சகாப்தம் 1375 கொண்டதாகக் கிடைக்கும் பாணர் தலைவன் உறங்கா வில்லிதாசனுன மகாபலி வாணதிராயன் காலத்துச் சாசனம் இந்த வழக்காறுக்குச் சிறந்த உதாரணமாகும். (மடைப்பள்ளிச் செலவுக்காக) அடுக்களைப்புறமாகத் திடியனை திருவரங்க நல்லூரை அளித்த செய் தியைத் தெரிவிக்கும் அந்தச் சாசனம் (இந்தத் தொகுப்பில் 138, 139 எண்கள் கொண்டது) புதுவை விஷ்ணு சித்தர் மகளான கோதைக்கு (அதாவது ஸ்ரீவில்லிபுத்தூரில் பிறந்த வைஷ்ணவ ஆழ்வாரான பெரி யாழ்வார் மகள் ஆண்டாளுக்கு) அரங்கநாதர் எழுதிய பிரணயபத்திரிகை உருவில் அமைந்திருக்கிறது. சூடிக்கொடுத்த நாச்சியார் எம்பெருமான் மீது கொண்டிருந்த ஆருக்காதலை எடுத்துக் கூறுவதாக ஆரம்பிக்கும் அந்தச் சாசனம் நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் சேர்ந்துள்ள திருப் பாவை, நாச்சியார் திருமொழி ஆகியவற்றில் காணும் அவள் வாக் காகவே உள்ள செய்யுட்களைக் கொண்டு புனையப்பட்டிருக்கிறது. முழுப் பாடல்களும் அரைப் பாடல்களும் இன்னும் அழகிய தொடர்களும் அங் கங்கே விரவிக் காணப்படுகின்றன. இவ்விதம் அவள் கொண்ட காதலால் அகமகிழ்ந்த எம்பெருமான் அரங்கநாதர் தமக்கு நடக்கும் உபசாரங்கள் அனைத்தும் அவளுக்கும் நடைபெறவேண்டு மென்று உத்தரவிட்டு அதற்காக உறங்காவில்லிதாசன் சீமையில் உள்ள திடியன் என்னும் கிராமத்தை அடுக்களைப்புறமாகக் குறிப்பிட்ட அந்த நாளிலே அருளிச் செய்தாராம். இவ்விதம் சாசனம் கூறுகிறது.

இதுபோல, கோயிலில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே அருளிச் செய்தனவாகக் காணும் சாசனங்கள் வேறு பலவும் கிடைத்துள்ளன. இந்தப் பழக்கம் இதற்கும் முன்னதாகவே இருந்துவந்ததென்று தெரிகிறது. தஞ்சாவூர் ஜில்லா திருவாரூர்க் கோயிலில் கிடைக்கும் விக்கிரம சோழனுடைய ஐந்தாம் ஆண்டுச் சாசனம் ஒன்றும் இதே மாதிரி காணப்படுகிறது. பாலையூர் உடையான் சந்திரசேகரன் ஆதிவிடங்கனை குலோத்துங்கச்சோழ மஹாபலி வாணாதராயனுக்கு ஒரு மாளிகை வழங்கப்பட்ட செய்தியைக் குறிக்கும் அந்தச் சாசனத்திலே அவ்வூரிலிருந்து அரசாண்ட சோழமன்னன் மநுநீதிச் சோழனுடைய வரலாறு கூறப்பட்டிருக்கிறது. (வாணாதராயன் குல முன்னோனை) பாலையூர் உடையான் உபயகுலாமலன் என்பான் மநுநீதிச் சோழனுக்கு மந்திரியாக இருந்தானாம். தன் கன்றின் மீது அரசகுமாரன் தேரைச் செலுத்தி அதைக் கொன்றதால் மனம் உடைந்து முறையிட்ட பசுவுக்கு நீதிவழங்க மன்னன் தன் மகன்மீதே தேரைச் செலுத்துமாறு மந்திரியான உபயகுலாமலனுக்கு உத்தரவிட்டான். அரசன் ஆணையை நிறைவேற்ற மனமில்லாமலும் அதைப்புறக்கணிக்க முடியாமலும் தவித்த மந்திரி அந்த உத்தரவைக் கேட்ட தன் காதையே குடைந்துகொண்டு இறந்தான். அதனை அறிந்த மன்னன் தானே அதை நிறைவேற்றப் புகுந்தான். அதனால் மகிழ்ந்த எம்பெருமான் அரசகுமாரனோடு மந்திரி உபயகுலாமலனையும் உயிர்ப்பித்தாராம். அப்போது மன்னன் மந்திரிக்குவழங்கிய மாளிகை வழக்கொழிந்து கிலமாகி வேறு கைக்கு மாறிவிட்டது. அதன்மீது இப்போது அந்த உபயகுலாமலன் வமிசத்தில்வந்த பாலையூர் உடையான் வாணாதராயனுக்கு அந்த மாளிகையைத் திரும்பவும் அளித்த செய்தியைத் தெரிவிப்பதே அந்தச் சாசனம். (தெ. இ. சாசனங்கள், ஐந்தாம் வால்யூம், 456 செ.)

சித்திரித்த எழுத்து: சாசனங்கள் எளிதில் படிக்கக்கூடியனவாகவும் பார்வைக்கு அழகாகவும் இருப்பதற்காக அவற்றை வெட்டுவதற்குத் திறமைவாய்ந்த கல்தச்சர்கள் இருந்தார்கள் என்பதை முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். உண்மையில் சில சமயங்களிலே அவர்கள் மிகுந்த திறமைசாலிகளாக இருந்திருக்கிறார்கள். அதனால் அவர்கள் தங்கள் கைத்திறனிலே பெருமிதம் அடைந்ததையும் காணலாம். கீழைச் சாளுக்கிய மன்னனான நரேந்திர மிருகராஜனுடைய சாசனம் ஒன்றைப் பொறித்த லிபிகாரன் அக்ஷர லலிதாசாரியன் (அழகிய எழுத்துக்களின் ஆசாரியன்) என்று புகழப்படுகிறான். (தெ. இ. சாசனங்கள், முதல் வால்யூம், பக்கம் 36). ஒரிஸ்ஸா ராஜபத்துப் புவனேசுவரத்திலிருந்து கிடைத்த ஒரு சாசனத்திலே அவ் வெழுத்துக்கள் பொன்னில் இழைத்த மணியும் முத்தும்போல் ஒளிர்கின்றன என்று கூறப்பட்டுள்

ளது. (எபி. இந்திகா, ஆரும் வால்யூம், பக்கம் 202). மற்றொரு சாசனம் எழுத்துக்களை வானத்தில் காணும் தாரகைகளுக்கு ஒப்பிடுகிறது. (ஷை இரண்டாம் வால்யூம், பக்கம் 13). ஒரு லேககன் தன்னைச் சித்திரகுப்தனோடு ஒப்பிட்டுக் கூறிக்கொள்கிறான். (ஷை எட்டாம் வால்யூம், பக்கம் 153). மற்றொருவன் தன்னுடைய எழுத்துக்களைச் சரஸ்வதி தேவியாகவே காண்கிறான். (ஷை ஒன்பதாம் வால்யூம், பக்கம் 254). இவற்றைக் கவனிக்கும்போது சிற்பிகள் தாங்கள் எழுதுவதை மிகுந்த சிரத்தையுடனும் கலையுணர்ச்சியுடனும் செய்து முடித்தனர் என்று கொள்ளலாம். ஒரு சிற்பி காதலியின் உருவத்தைப் பல வர்ணங்களால் தீட்டும் அழகிய ஓவியனுக்கு ஒப்பாகத் தன்னைக் கூறிக் கொள்கிறான். (ஷை பதின்மூன்றும் வால்யூம், பக்கம் 292). இவை வெறும் புகழ்ச்சியல்ல. இதை விளக்கிக்காட்டப் பல சாசனங்கள் அழகாக எழுதப்பட்டுக் காண்கின்றன. தங்கள் எழுத்துக்களுக்கு அழகு ஊட்டச் சிற்பிகள் பல சமயங்களில் அவற்றுக்குக் கொடி முதலிய வேலைப்பாடுகளையும் சேர்த்திருக்கிறார்கள். ஒரு கன்னட சாசனத்திலே அதன் சிற்பி பின்வருமாறு புகழப்படுகிறான்: "எழுத்துக்களின் நடுவே ஒளிரக்கூடிய விதம் யானை, சிங்கம், கிளி, இன்னும் எத்தனையோ உருவங்களையும் பிணைத்து எழுதக்கூடிய லேககன் ஸோவராசியுடன் யார்தான் பைத்தியக்காரத்தனமாகப் போட்டியிட முற்படுவர்?" (எபி. கர்நாடிகா, பதினோராம் வால்யூம், சிதல்துர்க்கம் 47).

இவ்விதம் சித்திரித்து அழகாகச் செய்யப்பட்ட சாசனங்கள் தமிழ் நாட்டிலும் கிடைத்துள்ளன. காஞ்சீபுரம் கைலாசநாதர் கோயிலை எழுப்பிய பல்லவ வேந்தனை இராஜஸிம்ஹன் அதன் அடிப்படையில் தன்னைப்புகழ்ந்து உரைக்கும் சாசனத்தை வெட்டியிருக்கிறான். அந்தச் சாசனம் நான்கு வகை எழுத்துக்களில் நான்கு தடவையாக வெட்டப்பட்டிருக்கிறது. ஒவ்வொருவகையும் ஒவ்வொருவிதம் அழகு பெற்றுக் காணப்படும்.

வடக்கே ராஜிம் என்னும் இடத்தில் உள்ள ராஜீவ லோசனர் ஆலயத்துத் தூண் ஒன்றிலே 'ஸ்ரீ பூர்ணாதித்யன்' பெயர் வெட்டப்பட்டிருக்கிறது. (கன்னிங்ஹாம் எழுதிய புதைபொருள் ஆராய்ச்சி அறிக்கை, பதினேழாம் வால்யூம், படம் 10.) மேலும் கீழும் கொடி போன்ற கோடுகள் செல்ல எழுத்துக்களையே மறைக்கும் கொடிச் சித்திரம்போல அது காணப்படுகிறது. அதைச் சுலபமாக வாசிக்க முடியாது. அந்தச் சித்திரத்தின் பக்கத்தில் அவன் பெயரை அங்காளில் வழங்கிய சாதாரண எழுத்தில் பொறித்த உருவத்தையும் கன்னிங்ஹாம் கொடுத்திருப்பதைக் கொண்டே அதை வாசிக்க வேண்டும்.

மேலைச் சாளுக்கிய அரசனான நான்காம் ஸோமேசுவரனுடைய குறுகோட்டுச் சாசனத்தில் (இ. ஆ., பதினைந்தாம் வால்யூம், பக்கம் 364) வரும் அநுஸ்வாரங்கள் எழுத்துக்களின் மீது நக்ஷத்திரங்கள் போல அமைக்கப்பட்டுள்ளன. அன்றி எழுத்துக்களும் மிருகங்கள் பக்ஷிகளின் உருவங்களில் சித்திரிக்கப்பட்டுள்ளன. ஓர் எழுத்து அன்னப் பறவையின் உருவத்தில் அமைந்துள்ளது. மற்றொன்று மயில் போலக் காணப்படுகிறது.

மத்திய இந்தியச் சாசனங்கள் சிலவற்றில் காணும் 'சிப்பி எழுத்துக்கள்' சித்திர எழுத்துக்களிலே மற்றொருவகை. அவற்றைச் சுலபமாக வாசிக்க முடியாது. (பீகார் ஒரிஸ்ஸா ரிஸர்ச் ஸொஸைட்டி பத்திரிகை, இருபதாம் வால்யூம், 10-12 பக்கங்கள்). இத்தகைய 'சிப்பி எழுத்துக்கள்' கடல்கடந்த பிரதேசமான ஜாவாவிலும் கிடைத்துள்ளன. (எபி. இந்திகா, இருபதாம் வால்யூம்).

மொழி :—நம் நாட்டிலே வழங்கும் பல மொழிகளிலும் அந்த அந்த மொழியின் வளர்ச்சியை நன்கு அறிவதற்கு இலக்கியங்களே யன்றி, அந்த மொழியில் உள்ள சாசனங்களும் முக்கியமானவை. உண்மையில் தமிழ் இலக்கண நூல்களில் காணும் விதிகள் சிலவற்றுக்கு இலக்கியங்களிலே உதாரணம் காட்டமுடியாது. ஆனால் சாசனங்களிலே அந்த வழக்குகளைக் காண்கிறோம்.

சாசனங்களில் காணும் பிரசஸ்திகளைப் புனைந்தவர்கள் பல சமயங்களில் சிறந்த கவிஞர்களாக இருந்திருக்கிறார்கள். இதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். மேலைச் சாளுக்கிய மன்னனான இரண்டாம் புலிகேசியின் ஐஹொளே சாசனத்தை இயற்றிய கவியான ரவிகீர்த்தி, "தன்னுடைய கவிதாசக்தியால் காளிதாசன் பாரவி ஆகியோர்களுடைய புகழை எய்திவிட்டான்" என்று அந்தச் சாசனத்தில் புகழப்பட்டிருக்கிறான். (எபி. இந்திகா, ஆறாம் வால்யூம்). பல சமயங்களில் சாசனங்களிலே சிறந்த காவியங்களிலிருந்து சுலோகங்களை அப்படியே எடுத்தாண்டிருப்பதைக் காணலாம். மேலைச் சாளுக்கிய வேந்தனான ஆறாம் விக்கிரமாதித்தியனுடைய ஹூளிச் சாசனம் (எபி. இந்திகா, பதினெட்டாம் வால்யூம்) ஒன்றிலே காளிதாசன் எழுதிய ரகுவமிசத்தின் முதல் சுலோகம் கடவுள் வணக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளது. அதே போல இராஜபுதனத்திலிருந்து கிடைக்கும் சாசனம் ஒன்றிலே காளிதாசனுடைய நாடகமான அபிஜ்ஞான சாகுந்தலத்தின் மங்கல சுலோகம் கடவுள் வணக்கமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. (ஷை பதினோராம் வால்யூம், 65-பக்கம்).

இராமநாதபுரம் ஜில்லா ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து கிடைக்கும் உறங்காவில்லிதாசன் மகாபலி வாணாதிராயன் அளித்த சாசனம் ஒன்றிலே நாலாயிர திவ்வியப் பிரபந்தத்திலிருந்து பாடல்கள் அப்படியே எடுத்தாளப்பட்டுள்ளன வென்பதை நாம் மேலே கண்டோம். திருச்சிராப்பள்ளி ஜில்லா திருமழுவாடியிலிருந்து கிடைத்த செப்பேடு ஒன்றிலே அதேபோலத் தேவாரத்திலிருந்து எடுத்தாளப்பட்டுள்ள பாடல்களைக் காணலாம். (இந்தத் தொகுப்பின் 693 நெ. சாசனம்),

சாசனங்கள் பொதுவாக அந்தப் பிரதேசத்தில் வழங்கிய மொழியிலோ ஸம்ஸ்கிருதத்திலோ அல்லது இரண்டு மொழியும் கலந்தோ எழுதப்பட்டிருக்கும் என்பதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். எனினும் பிறமொழிகளில் வழங்கிய. சாசனங்களையும் காண்கிறோம். ஸ்ரீரங்கத்திலே முதற் குலோத்துங்கசோழனுடைய ஆட்சியின் இருபத்தொன்பதாம் ஆண்டு கொண்டதாகக் கன்னட சாசனம் ஒன்று கிடைத்திருக்கிறது. அந்தச் சாசனம் மேலைச் சாளுக்கிய அரசனை ஆறும் விக்கிரமாதித்தியனுடைய அதிகாரிகளுள் ஒருவனை கன்னட சந்திவிக்கிரகி தண்டநாயகன் அந்தக்கோயிலிலே இரண்டுவிளக்கு எரிக்கச்செய்த ஏற்பாட்டைத்தெரிவிக்கிறது. அவனே அந்தக்கோயிலில் விஷ்வக்ஸேநர் சந்நிதியைச் செங்கல் சுண்ணும்பு கொண்டு எழுப்பியவன் என்றும் தெரிகிறது. தமிழ் நாட்டில் சோழ அரசன் ஆட்சியில் அளிக்கப்பட்டதாயினும் சாசனம் வழங்கியவன் கன்னடதேசத்து மந்திரியானபடியால் அவனுடைய மொழியான கன்னடத்திலே அவன் சாசனம் காணப்படுகிறது. (1942-ஆம் ஆண்டு 204 நெ.) தமிழ்நாட்டில் விஜயநகர ஸாம்ராஜ்யம் வேரூன்றிய பிறகு இந்தப் பழக்கம் அதிகமாகிவிட்டது. அந்நாளில் வழங்கிய சில சாசனங்கள் தெலுங்கு கன்னடமொழிகளில் உள்ளன. தஞ்சாவூர் பிரகதீசுவரர் கோயிலிலே அவ்வூரைத் தலைநகராகக் கொண்டு அரசு செலுத்திய மராட்டிய மன்னன் சரபோஜியின் சாசனங்கள் மராட்டிய மொழியில் பொறிக்கப்பட்டிருப்பதையும் நாம் மேலே (௨௮௨-௬ பக்கங்கள்) கண்டோம். இவைகளைக் கவனித்தால் அத்தகைய சாசனங்களையோ சாசனங்களில் உள்ள தானங்களையோ வழங்கியவர்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பதும், அந்த நாட்டு அரசுமுறையிலே அவர்கள் பெற்றிருந்த உயர்ந்த பதவியும் தெளிவாக விளங்கும்.

சில சமயங்களில் ஒரு மொழியில் உள்ள சாசனம் மற்றொரு மொழியின் எழுத்துக்களிலே பொறிக்கப்பட்டிருப்பதையும் காணலாம். காஞ்சீபுரத்துக்குப் பக்கத்தில் உள்ள திருப்பருத்திக்குன்றத்திலிருந்து கிடைக்கும் விஜயநகர வேந்தனை கிருஷ்ணதேவராயனுடைய ஆட்சிக்

காலத்துச் சாசனம் ஒன்று (இந்தத் தொகுப்பிலே 458-ெந. கொண்டது) கன்னடமொழியில் உள்ளது.எனினும் தமிழ் எழுத்துக்களிலே பொறிக் கப்பட்டிருக்கிறது. அநந்தபுரம் ஜில்லாவில் கொத்தசிவாத்திலிருந்து முதலாம் இராஜேந்திர சோழனுடைய ஆட்சிக் காலத்துச் சாசனம் ஒன்று அவனுடைய சேனாபதியான அரையன் இராஜராஜனை விக்கிரம சோழச் சோழிய வரையன் அவ்வூரிலே கோயில் மண்டபம் எழுப்பியதைக் கூறுகிறது. (தெ. இ. சாசனங்கள், ஒன்பதாம் வால்யூம், 300 ெந.). ஆயினும் தமிழ் மொழியிலே உள்ள அந்தச் சாசனம் கன்னட எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளது. ஸ்ரீரங்கத்திலேயே தமிழ்மொழியில் உள்ள சாசனம் ஒன்று நாகரி எழுத்தில் பொறிக்கப் பட்டிருக்கிறது. ஆந்திரப் பிரதேசத்தில் உள்ள ஏலேச்வரத்தில் காகதீய மன்னனான கணபதி தேவனுடைய சாசனம் ஒன்று தெலுங்கு மொழி யில் உள்ளது. எனினும் அது தெலுங்கு எழுத்தில் இல்லாமல் கிரந்த எழுத்தில் பொறிக்கப்பட்டிருக்கிறது. அதேபோல் மங்களூருக்குப் பக்கத்தில் உள்ள கதிரி என்னும் ஊரில் மஞ்சுநாதர் கோயிலில் உள்ள லோகேச்வரருடைய விக்கிரகத்தின் பீடத்தில் துளுநாட்டை ஆண்டு வந்த ஆளுப அரசன் குந்தவர்மனுடைய சாசனம் காணப்படுகிறது. (ஷை ஏழாம் வால்யூம், 191 ெந.). கி. பி. 968-ஆம் ஆண்டு கொண்ட அந்தச் சாசனம் கிரந்த எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. இதேபோல நாட்டின் இதர பாகங்களிலும் வேறு சாசனங்கள் கிடைக்கின்றன.

தமிழ் மன்னர்கள் பேரரசர்களாக ஆதிக்கியம் செலுத்தி அரசாண்ட நாளில் தமிழ்நாட்டு எல்லையையும் தாண்டி வெகுதூரத்துக்கு அப் பாலும் தமிழ்ச் சாசனங்கள் கிடைக்கின்றன. அவற்றால் அந்நாளிலே தமிழ் மக்களின் செல்வாக்கு எவ்வளவு உந்நதநிலையில் இருந்ததென் பது தெரியவரும். ஓரிஸ்ஸா ராஜ்யத்தில் புவனேச்வரத்திலே கலிங்க நாட்டுக் கஜபதி வேந்தனான (நான்காம்) நரஸிம்ஹன் ஆட்சிக் காலத்தின் பன்னிரண்டாம் ஆண்டு கொண்ட தமிழ்ச் சாசனம் ஒன்று கிடைத் திருக்கிறது. (வங்காளத்து ஏஷ்யாடிக் ஸொஸைட்டி பத்திரிகை, 1924. இந்தச் சாசனம் ஓரியா மொழியிலும் அதே கல்லில் கொடுக்கப்பட் டுள்ளது. சாசனத்தின் பதிப்பு மிகவும் தவறாக உள்ளது. தமிழ்ப்பகுதி சரியாக வாசிக்கவும்பெறவில்லை; மொழி பெயர்ப்பும் சரியில்லை. அதன் திருத்தமான பாடத்தை நான்கு ஆண்டுகளுக்கு முன்பு அமுதசுரபி பத்திரிகையில் நான் வெளியிட்டிருக்கிறேன்).

கி. பி. பத்தாம் நூற்றாண்டு எழுத்துக்களில் பொறிக்கப்பட்ட தமிழ்ச் சாசனம் ஒன்று கடல்கடந்த பிரதேசமான சயாம் (தாய்லந்து) நாட்டிலும் கிடைத்துள்ளது. (ராயல் ஏஷ்யாடிக் ஸொஸைட்டி பத் திரிகை, 1913; எபி. இத்திகா, பதினெட்டாம் வால்யூம்).

முடிவுரை: இதுகாறும் கூறியவாற்ருல், சாசனங்கள்,—அவை அரசாங்கத்தார் அளித்தனவாயினும் சரி, தனிமனிதர் விவகாரங்களை உரைப்பனவாயினும் சரி, இன்னும் அவை எந்த விஷயத்தைத் தெரிவிப்பனவாயினும் சரி—நம் நாட்டுச் சரித்திரத்தைப் பல துறைகளிலும் ஆராய்ந்து நிர்ணயிப்பதற்கு எவ்வளவு முக்கியமானவை என்பது தெரியவரும். எனினும் பல சாசனங்கள் சிதைந்தும் மறைந்தும் போயின. வேண்டுமென்றே அழிந்தவை பல. தெரிந்தும் தெரியாமலும் அழிந்தவை வேறு. நல்லெண்ணத்தால் மறைந்தனவும் உண்டு. ஐம்பது ஆண்டுகளுக்குமுன் தஞ்சாவூர் ஜில்லா திருவிடைமருதூரில் உள்ள மகாலிங்க சுவாமியின் கோயில் ஜீர்ணோத்தாரணம் செய்து புதுப்பிக்கப்பட்டது. அப்போது அதன் மதில்களிலும் மண்டபங்களிலும் தூண்களிலும் பொறிக்கப்பட்டிருந்த சாசனங்கள் எல்லாம் அழிந்து போய் விட்டன. கர்ப்பகிரகத்தின் சுவர்களில் பொறிக்கப்பட்டிருந்தவை மட்டும் பிரதிசெய்யப்பெற்றன. பின்னால் அந்தச்சாசனங்களும் அழிந்து போயின. இப்போது அந்தக் கோயிலில் பழையசாசனம் ஏதும் இல்லை. புண்ணியம் சம்பாதிக்கத் தரும சிந்தனையுடன் செய்த திருப்பணிதான். எனினும் சாசனங்கள் அழிந்துவிட்டன. வடக்கே, சாசனம்பொறிக்கப்பட்ட ஸ்தம்பம் ஒன்றைத் தெய்வபக்தியுடைய பெரியார் ஒருவர் ஏரண் என்னும் இடத்தில் சிவலிங்கமாக மாற்றிவிட்டார். சாசனங்களின் அருமை தெரியாமல் அவற்றை அழித்து விடுவதற்கு இவை சிறந்த உதாரணங்களாகும் அன்ருே?

இன்னும் பண்டரிபுரத்தில் 'சோராஸி சிலா' என்ற கல்லில் பொறிக்கப்பட்டிருந்த சாசனம் ஒன்று இப்போது தேய்ந்துபோய் உருத் தெரியாமல் ஆகிவிட்டது. அவ்விடம் செல்லும் யாத்திரிகர்களில் ஒவ்வொருவரும் அதிலே தங்கள் முதுகைத் தேய்த்துக்கொள்வதாலேயே அது அவ்விதம் ஆயிற்று. அவ்விதம் தேய்த்துக்கொள்வதால், எண்பத்து நான்கு லக்ஷம் மறுபிறப்பினின்றும் தாங்கள் விடுபடுவோம் என்ற நம்பிக்கையாலேயே அவர்கள் அவ்விதம் செய்து வருகிருர்கள். அதில் உள்ள சாசனத்தை அறிந்தோ, அதற்கு ஊறு விளைவிக்க வேண்டுமென்ருே அவர்கள் அவ்விதம் செய்யவில்லை. எனினும் அது பெருத்த நஷ்டத்தை உண்டாக்கிவிட்டது. இத்தகைய தவறுகள் மேலும்நேராமல் சாசனங்களைப் பாதுகாக்க வேண்டியது மிகவும் அவசியமானதாகும்.

---

## NOTE ON TRANSLITERATION, ETC.

The system of transliteration adopted by the Epigraphy Department has been followed in this publication. The Sanskrit vowel ' ṛi ' is not distinguished. The Tamil consonant 'ṉa' (ன) is distinguished very rarely, as the absence of it will not handicap a Tamil reader, while the use of it will be unintelligible to a non-Tamilian.

The number, like (No. 109 of 1904), at the beginning of the introduction to a record represents the number and year of the Epigraphical collection.

The equivalent of the dates of the inscriptions having astronomical details, in the Christian era have been calculated with the help of the *Indian Ephemeris* by L. D. Swamikannu Pillai.

The number, like D-3657, at the right-hand top of each record represents the accession number of the orginal in the Government Oriental Manuscripts Library, Madras, used for this edition.

# குறிப்பு

சாசனங்களின் பாடம் மூலப்பிரதிகளில் கண்டவாறே பின்கண்ட குறியீடுகளுடன் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

( ) இவ்விரு குறிகளுக்குள் அகப்பட்ட எழுத்துக்கள் தவறாகவோ அதிகப்படியாகவோ காணப்பெறுகின்றன. அவற்றை நீக்கி விட்டு வாசிக்க வேண்டும்.

[ ] இவ்விதம் இருதலைப் பகரங்களுக்குள் காணும் எழுத்துக்கள் அவ்விடம் இருக்கவேண்டியவை. மூலத்தில் அவை சிதைந்தோ அல்லது சரியாக எழுதப்பெறாமலோ உள்ளன. ஒன்றுக்கு மேற்பட்ட பிரதிகள் உள்ள சாசனங்களில் மூலப்பிரதியில் சிதைந்துபோய் வேறு பிரதியில் காணப்பெறும் பகுதியையும் இது குறிக்கும்.

[ * ] இவ்விதம் இருதலைப் பகரங்களுக்குள் உடுக்குறியிட்டுக் காட்டப்பெறும் எழுத்துக்கள் இவ்விடத்தில் இருக்கவேண்டியவை ; ஆனால் மூலப்பிரதியில் காணவில்லை. சாசனங்களின் வாசகத்தைச் சரியாக உணர்ந்து கொள்வதற்காகப் பதிப்பாசிரியரால் சேர்க்கப்பட்டுள்ளன.

.......... விடுபட்டுப்போன பகுதியைக் குறிப்பது. கல் சிதிலமாகி வாசிக்க முடியாமல் விடப்பட்ட பகுதியை மட்டுமல்லாமல் பிரதிசெய்யப்பெற்றும் ஏடு சிதைந்து போனதால் இப்போது பூர்த்தி செய்யமுடியாமல் உள்ள பகுதியையும் குறிக்கும். சாசனங்களைப் பதிப்பிக்கும் போது விடுபட்டுப்போன பகுதியில் ஓர் எழுத்துக்கு ஒரு புள்ளி என்று இடுவது சம்பிரதாயம். அதை இவ்விடம் அனுசரிக்கவில்லை. ஆகவே விடுபட்டுப்போனது ஓர் எழுத்தாகவும் இருக்கலாம் ; பல வரிகளாகவும் இருக்கலாம்.

[........] மூலத்திலே இடைவெளி எதுவும் இல்லாமல் தொடர்ச்சியாக எழுதப்பட்டிருப்பினும், அவ்விடத்திலே ஒரு பகுதி விடுபட்டுப் போயிருப்பதாகப் பதிப்பாசிரியர் கருதுவது இவ்விதம் குறிக்கப்பெற்றுள்ளது.

ஒவ்வொரு சாசனத்தின் தலைப்பிலும் வலது புறத்தில் D. 3657 என்பது போலக் கொடுக்கப்பட்டுள்ள எண், அந்தச் சாசனத்திற்கு மூலமாக ஓலைச்சுவடி நிலயத்திலே உள்ள பிரதியின் குறிப்பு எண் ஆகும்.

கீழ்க்குறிப்புகளில் சாசன இலாகாவினர் வேறு விதமாக வாசித்திருப்பதாகக் காட்டுவது அவர்களுடைய ஆண்டு அறிக்கையைக் கொண்டேயாகும்.

# கோயிற் சாசனங்கள்

## (மூன்றும் பாகம்—2-ம் பகுதி.)

—:—

**கண்டியூர்** **Kaṇḍiyūr**

*இவ்வூர் தஞ்சாவூர் ஜில்லாவில் தஞ்சாவூர்த் தாலுகாவில் உள்ளது. இவ்விடத்திலிருந்து கிடைத்த சாசனம் ஒன்று இரண்டாம் பாகத்தில் வெளியிடப் பட்டுள்ளது.*

**The village is in the Tañjāvūr taluk of the Tañjāvūr district and one inscription copied from this place has been published in Vol. II.**

**சாசனம் — 1265]** **[D. 2744-சமஉ**

*பிரம்மசிரக் கண்டீச்வரர் என்னும் வீரட்டானேச்வரர் கோவிலின் கர்ப்ப கிருகத்தில் உள்ளது.*

On the walls of the central shrine in the temple of Vīraṭṭānēśvara, otherwise known as Brahmaśiraḥ-khaṇḍīśvara in the village. Record dated in the 10th year in the reign of the Chōḷa king **Parakesarivarman** (copied as Kō-Pa dēvar by mistake) registering the gift of ninety-six sheep by a resident of Pāmbuṇi-kūṟṟam for burning a perpetual lamp in front of god Mahādēva.

This is one of the records in which portions have been copied in the same script as found on the stone instead of being transcribed.

ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] கோ ப தேவர்க்கு யாண்டு ய-ஆவது கருபதெத மஹாசெவ[ர்*]க்கு அநுராசிதவ........நிசதி உழக்கு தெம வூால இரவும் பலு....... ம நாங்கலக்கு பாம்புணி கூற்றதெு பாம்பணி சவனப்பாடியாள திருவடி ராகா ந கு கக ஆடு தொண்றூபரு ஹா ரு பக்மாஹெஸ்வரூ உ. உ

[இந்தச் சாசனத்தின் சில பகுதிகள் பெயர்த்து எழுதப்படாமல் கல்லில் கண்ட உருவத்திலேயே பிரதி செய்யப்பட்டுள்ளன. இதன் திருத்தமான பாடம் பின்வருமாறு இருத்தல் கூடும்.]

ஸ்வஸ்தி ஸ்ரீ [।।*] கோப் பரகேசரி வர்மர்க்கு யாண்டு ம-ஆவது: திருக்கண்டியூர் மஹாதேவர்க்கு அநு ராசித்தவல் நிசதி உழக்கு நெய்யால் இரவும் பகலும் நொந்தா விளக்கு எரிக்கப் பாம்பு ணிக் கூற்றத்துப் பாம்புணி சங்கரப் பாடியான திருவடி...... வைத்த ஆடு தொண்ணூற்று. இது பன்மாஹேஸ்வர ரக்ஷை [।।*]

சாசனம் — 1266] [D. 2744-சமந.

அதே இடத்தில் காண்பது.

At the same place. Record dated in the 11th year in the reign of the Chōḷa king **Rajakesarivarman**. Seems to be incomplete and mentions Ārkkāḍu-kūṟṟam, Brahmadēyam Tirukkaṇḍiyūr, Bālāsiriyan Havyadēvan (?) and Nakkanpāḍi. Probably it registers the gift of a lamp.

ஸ்வஸ்தி ஸ்ரீ [।*] கொ ராஜ கெஸரி உகநதுக்கு[1] யாண்டு மக-வது ஆர்[க்*]காட்[டுக்*] கூட்டத்துக்கு[2] ப்ரஹ்மதெய ஷிருக் கண்டியுர் பாலாசிரியன் ஹவ்ய (ஹவ்ய ?)தெவன் நக்கன்பாடி [பரெத புலிநகவுரவாயெ தெயாக்கதொர். உ][3]

[சாசனம் பூர்த்தியாக இல்லை. தானப் பகுதி பிரதி செய்யப்பெற்றதாகக் காணவில்லை. சில எழுத்துக்கள் கல்லில் கண்ட வடிவத்திலே எழுதப் பெற்றுள்ளன.]

## ஸ்ரீரங்கம் Śrīraṅgam

இது திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் உள்ள பிரபல வைஷ்ணவ ஸ்தலம். இவ்விடத்திலிருந்து கிடைத்த சாசனங்கள் இரண்டாம் பாகத்தில் வெளியாகி யுள்ளன. பின் வருபவை மக்கென்ஸியின் சாசனப் பட்டியலில் காணப் பெறவில்லை. உத்தம நம்பி கூடஸ்தர்களுடைய வமிச பரம்பரையைத் தெரி விக்கும் வரலாற்றில் காணப்படுவது.

---

1. கோ ராஜகேசரி வர்மர்க்கு என்று வாசிக்க.
2. 'ஆர்க்காட்டுக் கூற்றத்து' என வாசிக்க.
3. இந்தப் பகுதி விளங்கவில்லை.

The place, a great Vaishnavite centre, is in the Tiruchirappalli district and inscriptions copied from this place have been published in Vol. II. The following records are not found included in the *List of Inscriptions copied from the Southern Districts* prepared by the assistants of Col. Mackenzie, but are included in the manuscript giving the history of the family of Uttama-Nambi.

சாசனம்—1267] [D. 3776-க

[ரங்கநாதர் கோயிலின் இரண்டாம் பிராகாரத்துத் தென்புற மதிலில் காணப்படுவது.]

[On the south wall of the second prākāra in the Raṅganātha temple.]

This record consists of two Sanskrit verses. The first of them, registered as No. 58 of 1939 in the Madras Epigraphical collection and dated in Śaka 1350 (given in chronogram), Kīlaka, ba. dvādaśi, Wednesday and Uttiram, corresponding to A.D. 1428, October 6, the month being Tulā, registers the gift of a gold *kalaśa* to god Periya-perumāḷ, by the brother, whose name is not given, of Chakrarāja, referred to also as Chakrarāya.

The donor is evidently Uttama-Nambi. The manuscript gives also the genealogy of the family of Chakrarāja, therein stated as a branch of the Uttama-Nambi family.

It is also stated therein that this family was descended from Periyāḻvār, the famous Vaishṇava saint and father of Āṇḍāḷ, otherwise known as S'ūḍikkoḍutta-Nāchchiyār.

ஆத்மாலோகே ஶகாப்தவதே
ஹாயநே கீலகாக்யே
க்ருஷ்ணபக்ஷே ஹரிவாஸரதிநே
ஶ்ரீதியாஸ்ஞோத்தரர்க்ஷே ।
ப்ராதாத்ஸஹஸ்ர்யா பெரிய பெருமாளே
ரங்கிணே ஹேமகும்பம்
ப்ராதா யஸ்ய ப்ரஸித்தயஶஸா
(ரா)[ஜா]த்த ஶ்ச(க்க)[க்ர]ராஜ[:*] ॥ [1]

1. இதன் தமிழ் மொழிபெயர்ப்பு :

ஆத்மாலோகம் என்ற கணக்கையுடைய சகாப்தம் (அதாவது 1350) கீலக வருஷம், [துலா மாதம்*] கிருஷ்ணபக்ஷத்துத[் துவாதசி], புதன்கிழமை,

The next verse, though written in continuation of the above, seems to belong to the next record which is registered as No. 60 of 1939 by the Epigraphical Department. It registers the consecration of the Garuḍa image by Chakrarāja on Sunday, Rēvati in the month of Jyēshṭha in the cyclic year Manmatha.

> ஶாகே மந்மதவர்ஷே ஜ்யேஷ்டே
> ரவிவாரே ரேவதீ தாரே ।
> ஸ்ரீ சக்ரராஜ விஹிதா ஸ்ரீக[ரு*]ட
> மஹாபிம்ப: ப்ரதிஷ்டிதோ ஹரிசைத்யே ॥ [1]
>
> ஸ்ரீ உத்தம நம்பி

சாசனம் — 1268] [D.3776-உ

[சுவது தலைமுறையில் ராஜாவினால் கொடுக்கப்பெற்ற விருதுக்கு விவரம்; சிலாலிகிதம்.]

(No. 60 of 1939). At the same place. Record in Sanskrit verse stating that Uttama-Nambi was the recipient of several honours such as a pearl-umbrella, a big *kāhaḷa*, two lamps, a *bhadrāsana* and similar royal emblems from the Vijayanagara king **Devaraya.**

*Kāhaḷa* figures as one of the objects presented to temples in several inscriptions and a reference to the context shows that it should be a musical instrument. But what exactly it was is not clear. In the manuscript detailing the history of the family, the

---

உத்தர நக்ஷத்திரம் கொண்ட நாளில் பெரிய பெருமாளான ரங்கநாதருக்கு உத்தமனுன சக்கர ராஜனுடைய சகோதரன் பக்தியுடன் ஒரு பொன் கலசத்தை அளித்தான்.

காணிக்கை அளித்தவன் உத்தம நம்பியே போலும். இந்தச் சாசனம் கொடுக்கப்பட்டுள்ள வரலாற்றின்படி சக்கரராஜர் என்பாரும் உத்தம நம்பி வமிசத்தின் ஒரு கிளையினர் ஆவர். அவர்கள் வைஷ்ணவ ஆழ்வாரான பெரியாழ்வார் வழி வந்தவர்களாம்.

1. இதன் தமிழ் மொழி பெயர்ப்பு:

மன்மத வருஷம், ஜ்யேஷ்ட மாதம், ஞாயிற்றுக்கிழமை பெற்ற ரேவதி நாள் சக்கரராஜர் என்பார் ஸ்ரீகருடனைப் பிரதிஷ்டை செய்தார்.

contents of this record are given in Tamil making the donee as the fourth in descent in the line. Therein the name of the instrument is given as *karṇā*, which we know from a reference to it in the *Rāma-nāṭaka*, as a blowing instrument like the *kombu.*

> ஸ்ம(ா)[ர்]கதாஸ்யபவம்ஸதாஹளதீப யுக்ம
>   ஹஸ்த்யாஸனச்சத்ரஸ்ஸ வாத்ய தேவராஜநாதி
> ஸ்ரீ[தே]வராஜ நரவாஹவராத்யாவாப்ய
>   ஸ்ரீமார்க்கதாஸ்ய பதிரபெத்தம நம்பிநாமா ॥ [1] (க)
>
> மாநஸ்ய மார்க்கதபத்யம் விஜயகாஹளா
>   காஹளஞ்ச தீபத்வயம்
> தீபஸ்தம்பம் த்வயம் ததா
>   சாம்ப பரம்பராவதம்ஸ ।
> அஸ்மாகம் நிர்மலயர்ஹதயாஸ் ஸமயோ
>   தேவராஜயை ராஜாம்
> மாநஸ்[ம்*] ஸ்ரீமார்க்கதாஸ்ய புஷ்பராயிமதவா
>   நகர்ணாபிதாமா ॥ [2] (உ)

---

1. இதன் மொழிபெயர்ப்பு :

'ஸ்ரீமார்க்கதாஸ்யபதி எனப்பெறும் உத்தமநம்பி என்பார் அரசர்களில் சிறந்த ஸ்ரீதேவராஜனிடமிருந்து முத்துக்குடை, பெரிய காஹள வாத்தியம், இரு விளக்குகள் (தீவட்டிகள் ?), பத்ராசனம் போன்ற ராஜ சின்னங்களைப் பெற்றார்.'

2. இந்தச் சுலோகமும் மேலே கண்ட விஷயத்தையே சற்று விரிவாகத் தெரிவிக்கிறது. உத்தம நம்பிக்கு அரசன் அளித்த காஹளம் என்பதன் பெயர் வேறு பல சாசனங்களிலும் காணப்பெறுகிறது. அது ஓர் இசைக் கருவி என்றே தெரிகிறது. இந்தப் பரம்பரை வரலாற்றைக் கூறும் தமிழ்ப் பகுதியிலே இவ் விஷயம் பின்வருமாறு கொடுக்கப்பட்டிருக்கிறது:

" சு-வது அவர் குமாறர் திருமலனுத அய்யன் உத்தம நம்பி ஸ்ரீ ரெங்க ஸ்ரீகாரியங்களெ நெறுவகிக்கையில் மகாறுசவண தெவறுச மகாறுசவுனுலெ முத்துகொடெ கர்ணவாத்தியும் தங்க ஆசனம் யிதுகளெ யெல்லாம் குடுத்தார். "

இதிலிருந்து காஹளம் என்பதே கர்ணவாத்தியம் என்று பிற்காலத்தில் வழங்கப்பட்டதாகும் என்பது விளங்கும். ' கர்ணவொடு சிறந்த கொம்புகள்... முழங்கிவர' என்று வரும் இராம நாடகப் பகுதியிலிருந்து அது கொம்பு போன்ற ஓர் ஊதுகுழல் என்பதும் தெளிவாகும்.

சாசனம் — 1269] [D. 3776-ந

அ௰-ஆவது தலைமுறையில் பண்ணின கைங்கரியத்துக்கு விவரம்.

[Details of the benefactions made by the eightieth descendant in the line.]

It is not known where exactly this record is found engraved in the temple. It is made up of two Sanskrit verses. The first one registers that gold ornaments, utensils, several kinds of maṇḍapas buildings, gōpuras, large gardens, vehicles, endowments for special festivals and broad beautiful streets were furnished to god Raṅga-nātha out of devotion. The name of the donor is given only in the second verse which states that Uttama-Nambi, otherwise known Krishṇaraya kavi, (the descendant of Uttama-Nambi) was protecting Raṅgarāja-nagarī, *i.e.*, Srīraṅgam just like the city of Sakēta (Ayōdhya) was protected by the descendant of Raghu (*i. e.*, Rama) and the city of Mathurā by the descendant of Yadu (*i. e.*, Krishṇa).

ஹேமஷா: காஞ்சநநிர்மிதா: பரிகரா:
நாநாவிதா மண்டபா:
ப்ராஸாதா [ஃ*]விவிதாஶ்ச கோபுராணி
மஹாந்த்யாராமாணி யாநாநி ச ।
ப்ரத்யுத்ஸவா(நி) வைபவாநி ஸுமஹா:
வீ[தி]யஶ்(ச)[ா] விஶாலாந்தரா
யேநாகாரிஷத ப்ர(தி)[ஷ்டி]தமஹா
ஶ்ரீரங்கிண[ஃ*] ப்ரீதயே ॥[1] (க)

1. இதன் தமிழ் மொழிபெயர்ப்பு :

பொன்னால் ஆன ஆபரணங்கள், பாத்திரங்கள், பலவகையான மண்டபங்கள், மாளிகைகள், கோபுரங்கள், பெரிய நந்தவனங்கள், வாகனங்கள், புதிய உற்சவச் சிறப்புகள், அழகிய வீதிகள் ஆகியவற்றை ரங்கநாதரிடத்தில் பக்தி பூண்ட மனத்தினனாகச் செய்தான்.

அவ்விதம் செய்தவன் யார் என்பது இதில் குறிக்கப்பெறவில்லை. எனினும் அடுத்த சுலோகத்திலிருந்து அவன் கிருஷ்ணராய கவி என்ற பெயர் பூண்ட உத்தமநம்பி யாவான் என்பது விளங்கும்.

ஸாகேத நாஉ நமஸீவ ரவு௱ஒஜஹெந
உாநேஹ்ராஃயெந உயு௱ரெவ யஷ௱ஒஜஹெந ।
ஸ்ரீ க்ருஷ்ணராய கவிநோதஉ நம்பிநாநா
ஸ்ரீரஂமராஜநமரீ வரிரக்ஷிதாவிக ॥ [1] (உ)

## சிதம்பரம் — Chidambaram

இது தென் ஆர்க்காடு ஜில்லாவில் உள்ளது; தாலூகாவின் தலைநகர். இவ்விடத்திலிருந்து பிரதி செய்யப்பட்ட கல்வெட்டுக்கள் முதல் பாகத்திலும், மூன்றும் பாகத்தின் முதற் பகுதியிலும் வெளியாகியுள்ளன. இவ்விடம் கொடுக்கப்பட்டுள்ள சாசனங்கள் மக்கென்ஸியின் சாசனப் பட்டியலிற் காணப்பெறாதவை.

This is a taluk head-quarter station in the South Arcot district. Inscriptions copied from this place have been published in Vol. I and in part I of Vol. III above. The inscriptions now given are not included in the *List of Inscriptions copied from the Southern Districts* prepared by the assistants of Col. Mackenzie.

சாசனம் — 1270] [D. 3353-12

நடராஜர் கோவிலின் மூன்றும் மதிலில் காண்பது.

On the third [prakāra] wall in the Naṭarāja temple. Two Sanskrit verses written in the Grantha script, eulogising the victories of the Chōḷa king **Kulottunga I.** The first verse says:

Having subdued the five Pāṇḍyas by an army which discharged numerous arrows, having burnt like straw the fort of Kōṭṭara, just as (Arjuna) the son of Pāṇḍu (had burnt) the Khāṇḍava (forest), (and) having crushed that extremely dense army of the Kēraḷas,— that glorious Kulōttuṅga Chōḷa who resembles a lion in majesty (and) Śakra (Indra) in valour, placed on the shore of the ocean a pillar (commemorative of his) conquest of the three worlds.

ஸ்வஸ்தி ஸ்ரீ [॥*]
வாணஶ்ராஉணெநஜித்வா ப்ருஅ௱ரபரஉ௱ஆ
வஞ்ச வஞா [நந] ஸ்ரீ

---

1. 'வரிரக்ஷிதாஸீக' என்று வாசிக்க.

இதன் தமிழ் மொழிபெயர்ப்பு:

'அயோத்தியை ரகுவமிசத்தில் பிறந்த ராமனும், மதுரா நகரத்தை யது வமிசத்தில் பிறந்த கிருஷ்ணனும் பாதுகாத்ததுபோல ஸ்ரீரங்கராஜ நகரத்தை உத்தம நம்பி என்னும் பெயர் கொண்ட (வமிசத்தில் பிறந்த) கிருஷ்ணராய கவி பாதுகாத்து வருகிறான்.'

ஓ-ஃஷீ^வா கொ[டீ^*]டீாஈ ஓ-ஹ-ஃரூ
(மாஈஓ௦ஜ௦) தூணீவ(ா)ஸ யஸா
வாணூவ௦ வாணூ- ஸஒ௫ூ-ஃ ।
விஷ்^வா தஃ கொஈஸோஹா௦ பழுஉதி
ப[ஹ*]ஸோ௦ [1] ஶ்ரீ க-ஒொத்து௦மஒொஸோ௦
ஶ்ரூ வூதாவ[ঃ*] த்ரூஹ-வஹ விஜய
ஷ்தூ௦ஹஉ௦ஹொயி [தீஓெ॥*][2] (க)

The second verse says:

Having subdued the five Pāṇḍyas by masses of powerful armies that glorius Kulōttuṅga Chōḷa who has scattered (his) enemies (and) whose fame is spontaneously sung on the further shore of the ocean by the young women of the Persians (Pārasi), duly placed on the holy peak of the Sahyādri (mountain) a pillar (which commemorates his) conquest of the three worlds (and) before which the crowd of kings is trembling.

[வ-ணெூ ஸஹூாத்ரூ ஶ்ரூ௦மெ த்ரூஹ-வஹ
விஜய ஷ்தூ௦ஹ உ௦ஹொயி*] வாஒெ
ஷஆ[௦*]ஜெ வாஸிஹாஹுள
ய-வதிஹி ஜீ-ஃயூஒெ [3] யஶூ கீத்தி-ஃ ।
[ஸ*] ஶ்ரீஉாரூ குஷ்த்ரூ ஶ்ரஷ-
வூபழுஹ௦[4] வஹு வாணூாரூ விஜிதா[5]

---

1. ‘பழுஉதிபஹழு௦’ என்று வாசிக்க.

2. இதன் தமிழ் மொழி பெயர்ப்பு வருமாறு :

கம்பீரத்தில் சிங்கத்தையும், பராக்கிரமத்தில் இந்திரனையும் நிகர்க்கும் ஸ்ரீகுலோத்துங்க சோழன் எண்ணற்ற அம்புகளை எய்யும் சேனையால் பாண்டியர் ஐவரை வென்றும், பாண்டவ புத்திரனை அர்ச்சுனன் காண்டவ வனத்தை எரித்ததுபோலக் கோட்டாறுக் (கோட்டையைத்) துரும்பென எரித்தும், செறிந்த கேரளப் படையை நசுக்கியும், மூவுலகத்தையும் வென்றதற்கு அறிகுறியாகக் கடற்கரையில் ஜயஸ்தம்பம் நிறுவினன்.

3. ‘ஷஆ௦வாஸிஹாஹுா-ணய-வதிஹிஹீ-ஃயஒெ’ என வாசிக்க.

4. ‘குஷ்ஶூ த்ரூ- வூபழுபழுஹஒெ.’ என்று வாசிக்க.

5, ‘விஜிதஹீ’ என்று வாசிக்கவேண்டும்,

க்ஷா ஹ்யம்[1] க்ஷாவாரு அக்ரூம்
[ஸ*]வியிக(யி)[ஜ] கஸெரா
ஸ்ரீகா ஜொத்தம்ம (ஹொரஃ ||) [ஹொஷஃ ||][2]

**சாசனம் — 1271, 1272, 1273]** [D. 3353-13, 17, 10

*அதே இடத்தில் காண்பது.*

*மூலத்திலே இந்தச் சாசனம் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பெற்று முன்னும் பின்னுமாகப் பிறழ்ந்து எழுதப்பட்டுள்ளது.* நரலோகவீரன் *என்னும் சோழ சேனுபதி செய்த திருப்பணியின் புகழை* விதந்துகூறும் *இச் சாசனம் மக்கென்ஸியின் உதவியாளர் தயாரித்த* சாசனப் பட்டியலில் *காணப் பெறவில்லை.*

*இந்தச் சாசனம்* தென்னிந்திய சாசனங்கள், *நான்காம் வால்யூம்,* 225 *நெ. ஆக வெளியிடப்பட்டுள்ளது. அது முப்பத்தொரு வடமொழிச் சுலோகங்களையும், வெண்பாவாக அமைந்த முப்பத்தாறு தமிழ்ச் செய்யுட்களையும் கொண்டு இரு பகுதிகளாக அமைந்துள்ளது. மக்கென்ஸியின் உதவியாளர் தமிழ்ப் பகுதியைப் பிரதி செய்யவில்லை. வடமொழிச் சுலோகத்தில் காணும் செய்தியையே தமிழ்ச் செய்யுள் எடுத்துரைப்பதாகக் காண்கிறது.*

At the same place. This record is not found included in the *List of Inscriptions from the Southern Districts.* This has been copied as three fragments and registered as three different inscriptions. It details the various benefactions of the Chōḷa general Naralōkavīra.

This record which contains thirty-one verses in Sanskrit and thirty-six of Tamil in the *veṇbā* metre has been published as No.225 in the **South Indian Inscriptions**(Texts),Vol. IV. Col.Mackenzie's assistants have copied only the Sanskrit portion. The Tamil portion in

---

1. க்ஷா ஹ்யக் *என வாசிக்க.*

2. இதன் *தமிழ் மொழி பெயர்ப்பு :*

*குலோத்துங்க சோழன் பலம் பொருந்திய தன் படைத்திரளால் பாண்டியர் ஐவரை அடிப்படுத்தி, எதிரிகளைச் சிதற அடித்தான். அவன் புகழ் கடலின் எதிர்க்கரையில் உள்ள பாரசீக நாட்டு யுவதிகளாலும் பாடப் பெறுகிறது. மூவலகையும் தான் கொண்ட வெற்றியின் சின்னமாக அவன் ஸஹ்யாத்ரி (மேற்குத் தொடர்ச்சி) மலையில் ஒரு ஜயஸ்தம்பம் நிறுவினுன். அதன் முன்னர் அரசர் குழாம் நடுங்குகின்றது.*

many places repeats and confirms the statements found in the Sanskrit portion.

[13]

The first verse forms a sort of an introduction. It states that to describe the benefactions of Mānāvatāra, another name of Naralōka-vīra, to Sabhāpati performing the (cosmic) dance for the welfare of the three worlds and whose form occupies both the earth and heaven, even hundred faces would be insufficient and requests the reader to hear them leisurely. It is probably implied from this that one hundred verses have been composed. It is possible to read the word *vaktraiḥ* as *patraiḥ* and take it to mean that these verses were written on one hundred copper-plates.

ஸ்வஸ்தி ஸ்ரீ [||*]

அக்ருதேந ஸஹாவதேஸ்த்ரிபுவநக்ஷேமாய ந்ருத்தம் வரம்
குர்வாணஸ்ய ததைகதாநமநஸா மாநாவதாரேண யத் |
தத்தத்புண்யம் ஸாவதாநமதுநா யத்நோ த்ருவாத்ருஷ்ட்வைஷ:
வக்த்ரை: ஸஹஸ்ரத்வத்ரஞ்சி ஸாவஸம் ஶ்ரூயதாம் வாயிவேஶா
ஸ்வரயோ: ||[1] (க)

---

1. இதன் தமிழ் மொழிபெயர்ப்பு :

திரிபுவனங்களின் க்ஷேமத்துக்காக நடனம் புரிபவரும், ஆகாயம் பூமி ஆகிய இரண்டுக்கும் ஒன்றான தேகத்தை உடையவருமான சபாபதிக்கு மாநாவதாரன் என்பான் ஏகாக்கிர சித்தத்துடன் செய்த (திருப்பணி)களை எடுத்துக் கூற நூறு முகங்கள் போதா. அவற்றைச் சாவதானமாக என்னிடம் கேள்.

மாநாவதாரன் என்பது நரலோக வீரனுடைய விருதுகளில் ஒன்றாகும். அவன் புகழைப் பிரபந்த வகையாகப் பாடுவதற்கு இச் செய்யுள் ஒரு முன்னுரையாக அமைந்ததுபோலும். நூறு செய்யுட்கள் இயற்றப்பெற்றனவாகக் கொள்ளலாம். 'வக்த்ரை:' என்பதைப் 'பத்ரை:' என்றும் வாசிக்க முடியும். அவன் புகழை நூறு செப்பேடுகளில் எழுதச் செய்தான் என்று கொள்ளவும் கூடும். தமிழ்ப் பகுதியிலே பின் வரும் பாடல் ஒன்றும் காணப் படுகிறது.

முத்திறத்தா ரீசன் முதற்றிறத்தைப் பாடியவாறு
ஒத்தமைத்த செப்பேட்டி னுள்ளெழுதி—இத்தலத்தின்
எல்லைக் கிரிவா யிசையெழுதி னன்கூத்தன்
தில்லைச்சிற் றம்பலத்தே சென்று.

[illegible]
[illegible]

[illegible]
[illegible]
[illegible] ॥ [1]

Then comes the date of birth of his son Iśvaramuni. It is Kali 3967, Śaka 788, Vyaya, Kumbha, ba. dvitīya, Tuesday, Hasta and Mēsha *lagna*.

The Kali, the Śaka and the cyclic years agree (A.D. 866-7); but the other details are irregular.

[illegible]
[illegible]

[illegible]
[illegible] ॥ [2]

[illegible]

The date of birth of his son Yāmunāchārya, otherwise known as Āḷavandār is then given. He was born in the Kali year 4067, Śaka 888, Akshaya (A.D. 966-7). The traditional date for his birth is Kali 4017, Dhātu, Ādi, Uttirāḍam, Paurṇamī and Tuesday.

---

1. நாதமுனிகளின் அவதாரச் சுலோகங்களுடன் ஆரம்பிக்கிறது இந்த வமிச பரம்பரை விவரம். இந்தச் சுலோகங்கள் மேலே தனியாகவும் கொடுக்கப் பட்டுள்ளன. கடபயாதி சங்கியைக் கொண்டு இந்தப் பாடத்திலிருந்து அவர் பிறந்த சகாப்தம் 745 எனவும் கொள்ளமுடியும். இவ்வமிசத்தில் பிறந்த மற்றவர்களுடைய ஜனன ஆண்டுகளைக் கவனிக்கும்போது, இது காலத்தால் முற்பட்டதாக இருக்குமோ என்று தோன்றுகிறது.

[இந்நாளின் இதர விவரங்களுக்கு மேலே 1291 நெ. பார்க்க.]

2. அடுத்தபடியாக அவருடைய குமாரர் ஈசுவரமுனியின் அவதாரம் கலி 3967, சகாப்தம் 788, வியவருஷம், கும்பமாதம், கிருஷ்ணபக்ஷத்துத் துவிதியை, செவ்வாய்க்கிழமை, ஹஸ்த நக்ஷத்திரம், மேஷ லக்னமாகும். கலிஆண்டு, சகாப்தம், பிரபவாதி வருஷம் ஆகியவை ஒத்துவருகின்றன (கி. பி. 885-7), மற்றப் பஞ்சாங்க விவரங்கள் ஒத்துவரவில்லை.

[illegible] ॥ [1]

யாமுநாசார்ய:

Of his four sons, the first, Iśvarabhaṭṭāḷvar, was born in S'aka 904 (A.D. 982), Chitrabhānu, Chaitra, Ārdra.

[illegible] ॥ [2]

ஈஶ்வரபட்டாழ்வார்

The second son, Gōvindamuni was born in Śaka 906 (A.D. 984), Tāraṇa, Tulā.

[illegible] ॥ [3]

கோவிந்தமுநி:

The third son, Nāthamuni, was born in Śaka 908 (A.D. 986), Jaya.

---

1. அவர் மகன் யாமுநாசார்யரான ஆளவந்தாரின் அவதாரம் கலி 4067, சகாப்தம் 888, அக்ஷய ஆண்டு (கி. பி. 966-7) ஆகும். சம்பிரதாய நூல்களிலே அவர் கலியப்தம் 4017, தாது வருஷம், ஆடிமாதம், உத்திராடத்தில் பிறந்தார் என்று காணப்படுகிறது.

2. அவர் குமாரர் நால்வரில் முதல்வரான ஈச்வரபட்டாழ்வார் சகாப்தம் 904 (கி. பி. 982), சித்திரபானு வருஷம், சித்திரை மாதம், திருவாதிரை நக்ஷத்திரத்தில் பிறந்தார்.

3. இரண்டாம் குமாரரான கோவிந்தமுனி சகாப்தம் 906 (கி.பி. 984), தாரண வருஷம், துலா மாதம் பிறந்தார்.

The Śaka and the cyclic years do not agree. The cyclic year should be Vyaya. If Jaya is intended then the Śaka year would be 916.

𑌜𑌨𑌾𑌯𑌿𑌷𑍍𑌟 . . . 𑌕 𑌵𑌤𑍍𑌸𑌰𑍇 [1]
𑌜𑌯𑍇 𑌕𑌂𑌸𑌹𑍃𑌤𑍍𑌤𑌾𑌰𑌕𑍇 |
𑌤𑍃𑌤𑍀𑌯𑍋 𑌯𑌾𑌮𑍁𑌨𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌯
𑌤𑌨𑌯𑍋𑌽𑌜𑌨𑌿 𑌸𑌿𑌂𑌹𑌗𑍇 || [2]

𑌨𑌾𑌥𑌮𑍁𑌨𑌿

The next verse is incomplete. Only one half of it is found. It is not known to whom the date, Virōdhin (Śaka 911 or A.D. 989-90), Mithuna, Punarvasu is intended. The word *Śaṭhāri-mātraḥ* is given in the original.

𑌵𑌿𑌰𑍋𑌧𑌿𑌵𑌤𑍍𑌸𑌰𑍇 𑌯𑍁𑌗𑍍𑌮𑍇 𑌮𑌾𑌸𑍇 𑌤𑌾𑌰𑍇 𑌪𑍁𑌨𑌰𑍍𑌵𑌸𑍌 | [3]

𑌶𑌠𑌾𑌰𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑌃

Raṅgarāja, the fourth son of Āḷavandār, was born in S'aka 919 (A.D. 997), Hēviḷambi, Mithuna.

𑌯𑌾𑌮𑍁𑌨𑍇𑌯 𑌸𑍁𑌤𑌸𑍍𑌤𑍁𑌰𑍍𑌯𑍋 𑌰𑌙𑍍𑌗𑌰𑌾𑌜𑌾𑌖𑍍𑌯𑌸𑌂𑌜𑍍𑌞𑌕𑍇
𑌯𑌾𑌤𑌿𑌷𑍍𑌠𑍇 𑌹𑍇𑌵𑌿𑌳𑌂𑌬𑌿 𑌮𑌿𑌥𑍁𑌨𑌾𑌪𑌸𑌂𑌵𑌾𑌜𑌨𑌿 || [4]

𑌰𑌙𑍍𑌗𑌰𑌾𑌜𑌃

---

1. ‘𑌶𑌕𑍇𑌵𑌤𑍍𑌸𑌰𑍇’ என்று பூர்த்தி செய்யலாம்.

2. மூன்றாமவரான நாதமுனிகள் சகாப்தம் 908 (கி. பி. 986), ஜய வருஷம் பிறந்தார்.

சகாப்தமும் பிரபவாதி ஆண்டும் ஒத்துவரவில்லை; விய ஆண்டாக இருத்தல் வேண்டும். பிரபவாதி ஆண்டு ஜய என்பதே ஆனால் சகாப்தம் 916-ஆதல் வேண்டும்.

3. அடுத்த சுலோகம் பூர்த்தியாக இல்லை. ஒரு பாதி மட்டுமே கிடைத்துள்ளது. விரோதி ஆண்டு (சகாப்தம் 911) இரட்டை மாதம் (ஆனி), புநர்வசு நாளில் பிறந்த யாரோ ஒருவரைப்பற்றிக் கூறுவது. ‘சடாரி மாத்ர:’ என்ற தொடர் காணப்படுகிறது.

4. நான்காம் குமாரரான ரங்கராஜர் சகாப்தம் 919 (கி. பி. 997), ஹேவிளம்பி வருஷம், ஆனிமாதம் பிறந்தார்.

Tirumalai nambi, otherwise known as Śrīśailapūrṇa, was the son of Gōvindabhaṭṭar. He was born in the Tirumalai, i.e., the Tirupati hills in the Śaka year 923 (A.D. 1001), Plava, Āvaṇi, Anurādhā.

கோவிந்தபட்டர் புத்ரர் திருமலைநம்பி
அவதாரம் திருமலையிலே.

[illegible] ‖ [1]

[illegible]

Tirukkurugaippirān-piḷḷān was the son of Śrīśailapūrṇa or Tirumalainambi. He was born in Śaka 963 (current), Vikrama, Tula, Viśākha. The Christian year would be 1040 A.D.

[illegible] ‖[2]

[illegible]

திருக்குருகைப்பிரான் பிள்ளான்.

Then another date, Śaka 966 (current), Subhānu, Karttigai, Āślēsha for another son of Srīśailapūrṇa, is found. This is evidently the date intended for Rāmānuja, brother of Tirukkurugaippiran piḷḷān.

---

1. கோவிந்தபட்டருடைய குமாரர் திருமலை நம்பி என்னும் ஸ்ரீ சைல பூர்ணர். அவர் திருமலையிலே பிறந்தார். அது சகாப்தம் 923 (கி.பி. 1001), பிலவ ஆண்டு, ஆவணி மாதம், அநுஷ நக்ஷத்திரத்தில் ஆகும்.

2. அவர் குமாரர் திருக்குருகைப் பிரான் பிள்ளான் சகாப்தம் 963, விக்கிரம வருஷம், துலா மாதம், விசாக நக்ஷத்திரத்தில் பிறந்தார்.

ശകെ ദ്വാദ്വായനെ വഷെ-ി
വം-ഹാന്ദള ഉറവി കാർത്തി-കെ |
ക്ലേശൊബ-്നി ജജ്ഞെ ശ്രീ-
ശെഷ്ഠ്വാ-ാണ-ീദ്രബം-ജെ വന: ॥ [1]

ஸ்ரீபெரும்பூதூர் Sriperumbūdūr

இந்தச் சாசனம் எழுதப்பெற்றிருக்கும் ஏடு ஸ்ரீபெரும்பூதூரிலிருந்து கிடைத்ததென்று குறிக்கப்பெற்றுள்ளது. இது மக்கென்ஸியின் உதவியாளர் தயாரித்த பிரதியாகத் தெரியவில்லை. பிற்காலத்தில் சேர்க்கப்பெற்றது போலும். அவ்வூரில் அவதரித்த ஸ்ரீபாஷியகாரர் என்னும் இராமாநுஜருடைய ஆலயத்தைச் சேர்ந்தது போலும்.

The palm leaf on which the following document is written is said to have been obtained from Śrīperumbūdūr. This does not appear to belong to the original collection of Col. Mackenzie, but seems to have been added to it later. Evidently this belongs to the shrine of Rāmanuja, otherwise known as *Śrī Bhāshyakāra* and as *Uḍaiyavar*, at the place.

சாசனம் — 1298] [D. 1175-t

This record registers the rights and privileges of the agent (*purushakāri*) of the person whose name is not clear but who was responsible for the purchase of landed property to the shrine, in conducting the affairs of the shrine and the management of the landed property.

........மாநுஜாயநம:[2] [॥*] ஸ்ரீ சுவிஸ்தி ஸ்ரீ ஸஹாண ஜயகாரா யெழுந்தருளியிருக்குற ஸ்ரீ பெரும்பூ[தூ*]ர் ஸ்ரீயதிபதியான ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் திரு ....................[3] [அ]வர்

---

1. திருமலை நம்பியின் மற்றொரு குமாரர் பிறந்த நாளைத் தெரிவிப்பது இந்தச் சுலோகம். சகாப்தம் 966, சுபானு வருஷம், கார்த்திகை மாதம், ஆயில்ய நக்ஷத்திரத்தில் பிறந்த அவர் இராமாநுஜர் என்னும் இரண்டாம் குமாரரே போலும்.

2. 'ஸ்ரீமதே ராமாநுஜாய நம:' என்று பூர்த்தி செய்க.

3. 'திருவடிகளுக்கும்' என்று பூர்த்தி செய்க.

திருவடிகளிலே 'சென்றால் குடையா' மித்யாதிப்படியெ ஶேஷஶேஷ[1] கைங்கர்யைகநிரூபணாய திருவநந்தாழ்வானுடைய திருவவதார விஶேஷமாய் ஸர்வாதாரம் பர்யங்கா........[2] மூந்தருளியிருக்குற வெம்பெருமான் திருவடித் தாமரைகளுக்கும் ஶாஸ்வதமான அநந்த கொத்து அதிகாரமும் ஸமஸ்த ஸாமவதாராயுத கைங்கர்யநிரூப[ண*]ராயி உடையவர் ஸ[ந்நி].............நாதிதமான[3] ஸநாதநாசாரங்கள்[4] அவிச்சிந்நமாக நடக்கவெணுமென்று [பஹுஸ்ரு] ஸம்ஸ்திதி உண்டாக்கிவிக்கிற வய்பவம் முன் வச்ச கால் பின்வாங்.............
..............டாக்கி[5] வித்த நிலைநின்ற ஸாமவதர்களான யின்நின்றாரிஞருக்குரான[6] உங்களுக்கு ஞங்கள் அனவரும் ஸாக்ஷமாக யிருந்து எழுதிக் குடுத்த மர்யாதைசெயும் அதிகாரமும் என்னமென்றால்:..............வருமாய் ஸந்நிதியிலெ வரப்பட்ட யாத்ரமாவது ரொக்கமாவது உங்கள் பரீக்ஷகாரிஸ்வமாயெ நடப்பிக்[க] வெண்டியது. அந்த பரீக்ஷகாரி வரவுக்கும் சிலவுக்கும் விவரம் திருக்.............[க்]குலெ எழுதிவிக்கிறது. அதிலெ தாழ்வு கண்டால் திருக்கெ[ா*]வில் வாணத்திலெ தெண்டிக்கப்படும். கைங்கர்ய பராவகர்களிலெ ஆராவது யிந்த த்ரவ்யத்துக்கு தெ..........[7] அந்த ஜீவசியை வாங்கிப் புக[ட்டு] வெறெ யொக்யமான ஜீவசி [ய*]வக்கப்படும். யிந்த த்ரவ்யத்தை யின்னபடி செய்கிறதென்கைக்கி யிந்த கைங்கர்ய பராவகர்கள்..........வராயளுடனெ............ [கைங்கர்யம்]..............
..................வெறெ யொருவர்க்கு சிலவிட அதிகாரம் கூடாது. கொவிலாரும் பரீக்ஷகாரியு முள்கெயார்யிருந்து.......... கைங்கர்ய பராவகர்களும் பரீக்ஷகாரியும் உள்க்கையா

---

1. 'ஶேஷஶேஷி' என்று வாசிக்க.

2. 'பிரஸந்நரா யெழுந்தருளி' என்று பூர்த்தி செய்யலாம்.

3. 'ஸந்நிதியிலெ நடக்க காலொசிதமாந' என வாசிக்க.

4. 'ஸம்ப்ரதாயாசாரங்கள்' என்று வாசிக்க.

5. 'பின் வாங்காமல் பூஸ்திதி உண்டாக்கி' என்று பூர்த்திசெய்யலாம்.

6. பாகவதர்களின் பெயர் சரியாக விளங்கவில்லை.

7. 'த்ரோகம் செய்தால்' எனப் பூர்த்தி செய்யலாம்.

யிருந்து த்ரோஹம் பண்ணினால் திருக்கோயிலதிகாரிகளாலே தெண்டிக்கப்பட்டும் ஸம்ஹஷ்டிக்கி ஏற்பட்டத்தின் மணியக் ............த்ரோ[ர*]ஹம் கண்டால் வர்த்தமானாதிகாரி விசாரணை பண்ண அதிகாரமுண்டு. யிந்த கைங்கர்ய ஸ்தாவகர்களுக்கு ஸாசிலஷ்மியில் அருளப்பாடு ஸ்தலங்கள் தெறும். யிவர்க.......டுப் பரியட்டம்[1] திருமாலை ஸ்ரீசடகோபம் மரியாதை நடப்பிக்கப் படும். அன்றன்றுளும் கைங்கர்ய வஸ்துக்களை வர்த்தமானகாரி யானவன் அளந்தும் நிறுத்து[ம்*]...........ஷிக்கப்படும்[||*]

## கதிரி Kadiri

இவ்வூர் மதுரை ஜில்லாவில் திண்டுக்கல் தாலூகாவில் பழைய கன்னிவாடி ஜமீனில் அடங்கியதாக இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. கதிரி என்ற பெயர்கொண்ட ஊர்கள் வேறு சிலவும் தமிழ்நாட்டில் உள்ளன. ஆந்திர ராஜ்யத்திலே அனந்தப்பூர் ஜில்லாவிலே கதிரி என்ற ஓர் ஊர் இருக்கிறது. அவ்வூரில் உள்ள நரசிம்மஸ்வாமியின் ஆலயம் பிரசித்தமானது. அதைப் பின்பற்றியே தமிழ்நாட்டில் இக்கோயில் ஏற்பட்டதுபோலும்.

The place should be situated in the Dindigul Taluk,(included in the old Kannivaḍi Zamin) in the Madurai District. There are also some other villages in the Tamil country with this name. The place and the temple are evidently replicas in the South of the famous Narasimha temple at Kadiri in the Anantapur District of the Andhra State.

### சாசனம்—1299] [D. 3240

Record dated in Kali 4[9*]05, S'aka 1726, Raktākshi, Āvaṇi 21, registering the grant of the *kāṇiyātchi* rights of service as *dāsi* (i.e., dancing girl attached to the temple) in the first (*kottu*) batch in the temple of Kadiri Narasimha-p-perumāḷ together with some lands, both wet and dry, as *mānya* for the same, to Annam, daughter of Periya Kamu who was enjoying the rights of service for a long time previously by Malaiyāṇḍi Appaya Nāyakkar, the chief of Kannivaḍi. The grant is very modern, the year being 1804 A.D.

சொஸ்தி ஸ்ரீ [||*] விசையாற்புதய சாலீவாகன சகாற்த் தம் ௲௭௱௨௰௬ கலியுக சகாற்த்தம் ௪[௯*]௱௫ யிதின் மெல்ச் செல்லா நின்ற ரத்தாட்சி௵ ஆவணிமீ ௨௰௧௨ ஸ்ரீமது

1. 'இவர்களுக்குப் பட்டுப்பரிவட்டம்' என்று இருத்தல் வேண்டும்.

கன்னிவாடிக் கதிபதியாகிய மகாராச மானிய ராச ஸ்ரீ மலை யாண்டி அப்பய நாயக்க[1]ரவர்கள் ஸ்ரீ கதிரி நரசிங்கப் பெரு மாள் கோவில்த் தாசி முத[ல்*]க் கொத்துப் பெரிய காமு மகள் அன்னத்துக்குக் காணியாச்சிப் பட்டயமெழுதிக் குடுத் தபடி காணியாச்சிப் பட்டயமாவது :

தனக்கு முன் னெடுகலும் புரு தனமாயி ஸ்ரீ கதிரி நரசிம் மப் பெருமாள் கொவில் முத[ல்*]க் கொ(டு)த்துக்காக நஞ்சை புஞ்சை மானியம் விட்டு நடந்து வந்த காரியமாகச்செ யிப் பொது தனக்கு கிரைக்காட்டுக் கிராமத்துப் புலத்தில் புஞ்சை விரை கூ மீ தெத்துக் குளம் புரவில் நஞ்சை உ ா விரைப் புரவு மானியம் விட்டிருப்பதால் இந்த மானியமும் கொவிலில் முத[ல்*] கொத்துக்கு நடக்குர சம்பளமும் வாங்கிக் கொண்டு பெரிய மெளம் சங்கீத மெளம் தன் செவுகமா[க*]ச்செ அதற் குண்டாகிய சம்பளமும் கொவிலில் வாங்கிக் கொண்டு அந்த செவுகமுஞ் செவிச்சுக்கொண்டு சுகமெ இருக்கவும். இந்தப் பிரகாரம் தனக்குக் கொவிலில் முத[ல்*]க் கொத்துக்காக கொவிலில் சம்பளமும் நஞ்சை புஞ்சை நிலமும் விட்டுக் கொடுத்திருப்பதினலெ யென்றென்றைக்கும் ஆசந்திரார்க்க மாயி புத்திர பைத்திர[2] பாரம்பரையாயி கல்லுங் காவெரியும் புல்லும் பூமியும் உள்ள வரைக்கும் ஆண்டு அனுபவித்துக் கொண்டு சுகமெ யிருக்கவும்.

ஸ்ரீ ராமா வென்னும் மலையாண்டி அப்பய நாயக்கரவர் களென்னும் ஒப்பம்.

---

மூன்றும் பாகம் இரண்டாம் பகுதி முற்றும்.

---

1. 'ணை' என்பது போன்ற ஒரு குறியீட்டினல் எழுதப்பட்டிருக் கிறது.

2. 'பௌத்திர' என்று வாசிக்க.

## APPENDIX—I—பிற்சேர்க்கை

பின்வரும் மூன்று சாசனங்களுக்கும் கர்னல் மக்கென்ஸியின் உதவியாளர் எடுத்திருந்த பிரதி கிடைக்கவில்லை யென்று தெரிவித்து இவற்றின் சுருக்கம் மட்டுமே மூன்றும் பாகம் முதல் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. ஆயினும் பிறகு இந்தச் சாசனங்களின் பிரதிகள் கிடைத்தன. அவை இவ்விடம் கொடுக்கப்பட்டுள்ளன.

The text of the following three inscripitions prepared by the assistants of Col. Mackenzie were not available previously and hence summaries alone were given in Part I of Vol. III. The texts have since been traced and are given hereunder.

---

சாசனம் — 1256] [D. 2944-சா

[தேவாங்க பாதாள மடத்துக்குச் சிலாசாசனம் எழுதியிருக்கிறதுக்கு விபரம்.]

Stone inscription relating to the Dēvāṅga-pātāḷa-*maṭha*.

Record dated in Śaka 1[4*]64, Plava, Vaikāśi 10, in the reign of the Vijayanagara king **Achyutadeva Maharaya** registering the sale of land by Maruḷa Siddhayya, evidently a *vīraśaiva* of Pāmbūr in Jayaṅkoṇḍaśōḷamaṇḍalam to Dēvāṅga Pattar, a religious head of the Vīraśaivas. It stops with the preamble. Particulars of the sale are not found.

The S'aka year was current and so the intended date would be Saturday, May 7th, A.D. 1541, though not verifiable. The mention of Jayaṅkoṇḍaśōḷa maṇḍalam, the other name of Toṇḍaimaṇḍalam would suggest that the seller was a native of that area, even though no village with the name of Pāmbūr is known in that area.

The name of the religious head may also be read as Śāraṅgadēva *alias* Dēvāṅga Pattar. There is a Vīraśaiva maṭha, the head of which is known as Śāraṅgadēva, in the Kannaḍa country.

சுவத்தி ஸ்ரீ[1] [।।*] சமஸ்த்த திருபுவன பவன வினுத விபு
தன மெருவக்கண்ட பாகபற்த்தலண்டம் ஸ்ரீமதுங்களாம்பா
தெவற் ஸ்ரீ சண்டணி தெவி னவலித ஸ்ரீ பாதபாம்சாறங்க
தவனென தெவாங்க பத்தருக்கு[2].

சொவஸ்தி[।।*] ஸ்ரீமன் மகா மண்டலெசுவறன் பாஷைக்
கித் தப்பவருயகண்டன் மூவருய கண்டன் புறுவ திஷண பஷி
உத்திற சதுற் சமுத்திரதிபதி ஸ்ரீ யச்சுதப்ப தேவ மகாராயற்
பிறுதிவி ரூச்சியம் பண்ணி அறுளா நிண்ட சாலியவாகன
சிகாப்தம் ௲ ௲[ச*]ாசுமிச யிதின் மெல் செல்லா நிண்ட
ப்லவ(வ்) ௵ வைய்யாசி மீ ௰ ௨ செயங்கொண்ட சொழ மண்
டலத்துக்கு பாம்பூர் பிறந்தனுன மறுள சித்தய்யா தெவாங்க
பத்தற்களுக்கு விலெப்பிறமாணம் குடிப்பிவிப்பத்தது [।।*][3]

சாசனம் — 1257] [D. 2944-எ

[சாசனம் எவ்விடத்திலிருந்து பிரதி செய்யப் பட்டதென்பது குறிக்கப் படவில்லை. சாசனத்தில் தலைப்பிலே 'தாம்ர சாசன நகல்' என்று தெலுங் கில் எழுதப்பட்டுள்ளது.]

Record dated in Kali 4517, Śaka 1349, Plava, Māśi, 21, Wednesday, Śu. pañchamī and Rōhiṇī in the reign of the Vijayanagara ruler **Vira Singaraya Deva Maharayar** registering the sale of one half of the village of Veḷḷōḍai, adjoining Kummaṅgalam, otherwise known as Chaturvēdimaṅgalam, which was a *Tiruviḍaiyāṭṭam* village of Tiruvēṅkaṭam-uḍaiyān, i.e., Śrī Vēṅkaṭēśa of Tirupati, to the south of the Āraṇi river in the Paiyyur-kōṭṭam, a division of the Chandragiri rājya, comprised in the Toṇḍaimaṇḍalam *alias* Jayaṅkoṇḍaśōḷamaṇḍalam by

---

1. 'ஸ்வஸ்தி ஸ்ரீ' என்று வாசிக்க.

2. இந்தப் பகுதி வீர சைவர்களுடைய குருக்களான தேவாங்க பத்தருடைய பிரசஸ்தியைக் கொண்டுள்ளது. மிகவும் பிழைபடப் பிரதி செய்யப் பட்டிருக்கிறது. குருக்களுடைய பெயரைச் 'சாரங்கதேவராகிய தேவாங்கப் பக்தர்' என்றும் வாசிக்கமுடியும். கன்னட தேசத்திலே 'சாரங்கதேவ மடம்' என்னும் வீரசைவ மடம் ஒன்று இருப்பதாகவும் தெரிகிறது.

3. சாசனம் இதனோடு நின்றுவிடுகிறது பூர்த்தியாக இல்லை. விலைப் பிரமாணத்தின் விவரம் கிடைக்கவில்லை.

Muttu Nāyakkan, son of Āṇḍiyappa Nāyakkan of Vanniyarāya-*gōtram* and others to Kōṭṭai Periya Bommu Cheṭṭi, a *vaiśya* of Uppa-ḷagam of the same nāḍu, Kōṭṭam and Maṇḍalam for 125 new Paḷa-vēṟkāḍu (Pulicat) *varāhan.*

The original copper plate is now deposited in the Government Museum at Madras having been received from the Collector of Chingle-put and registered as **Private Grant No. 4** in the *Catalogue of the Copper-plate grants.* The cyclic year was Plavaṅga, equivalent to A.D. 1427-8. The other details are irregular.

சுப[॥*][1] ஸ்ரீமன் மகா மண்டலெசுவர அரிராயல விபாடன் பாஷக்குத் தப்புவராய கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு கொடாதொன் உத்திர தெஷ்சன பச்சமி பூற்வ சத்த சமுத்திராதிபதி[2] ராச ராச பறமெஸ்பர ராசமார்த் தாண்ட ராச கெம்பிற ராச குல திலக துலுக்க தள விபாடன் துலுக்க மொகரந் தாவுத்தொன்[3] அசுர தள விபாடன்(க்) க(ஞை)டக சூறகாறன் கல்லியான பூறுவராதிசுவரன் எக[ா*]ங்க வீரன் [வீர][4]விஜைதன் வீர வல்லாள தெவன் தலை குண்டு கண்டவன் திருபுவ[ன*]னாராயண அஷ்ட்ட திக்கு மஜைபயங்க ரன் அசுவபதி கெசபத சத்தாங்க[5] வயிரி பதிநெட்டு வன்னியர் கள் தலை(க்)குண்டுகண்டன் ஞகலொக பாலகன் பூலொக புறந் தரன் எம்மண்டலமுங் கொண்ட ராசமாற்த்தாண்டன் வீற லக்ஷ்மி விசைய லக்ஷ்மி வரபுத்திரன் ஸ்ரீ வீரசிங்கராயர் தேவ மகாராயர் பிறிதிவி ராச்சியம் பண்ணி அருளாயி நின்ற கலியு காந்தம் ௫௲ சதுருாமஎ சாலிவாகன சகார்த்தம் ௲ தநாசமகூ-க்கு மெல் செல்லாயி நின்ற ப்லவ[6] ௵ மாசி மாசம்

---

1. 'ஸ்வஸ்தி' என்று வாசிக்க.

2. 'உத்தர, தக்ஷிண, பச்சிம, பூர்வ சதுஸ் ஸமுத்திராபதி' என்று வாசிக்க.

3. 'தவிர்த்தோன்' என வாசிக்க.

4. இருதலைப் பகரங்களுக்குள் அடங்கிய எழுத்து மூலத்திலே 'ஷா' என்பது போலவும் தோன்றுகிறது.

5. 'கெசபதி சத்திரபதி' என்பதே இவ்விதம் எழுதப்பட்டிருப்பது போலும்.

6. இது 'பிலவங்க' என்று இருக்கவேண்டும்.

உ௰க வ புதன் கிழமையும் பூர்வபக்ஷ பஞ்சமியும் ரோகணி நக்ஷத்திரமும் பெத்தயித்தனுள் எழுதிய விலையாவன[1] கையி எழுத்து: செயங்கொண்ட [சொழ மண்டலமான*] தொண் [டை*]ட மண்டலத்தில் சந்தரகிரி ரூச்சியத்தில் கிழ்க்கரையான மெய்க்குன்ற வளனுடான பைய்யூர் கொட்டத்தில் ஆறணி ஆத்தின் தென் கரையான[2] திருவெங்கடமுடையான் திருவிளை யாட்டு கிரு[ம*]மான சதுர்வெத மங்கலத்துக்கு பிறிதிமை மான கும்மங்கலத்துக்கு அடுத்த வெள்ளொடையிலிருக்கும் வன்னியருய கொத்திர ஆண்டியப்ப நுயக்கன் குமாறன் முத்து நுயக்கன் உள்ளிட்டானவரும்லூம்.[3] எங்கள் காணி காக்ஷ[4] கிருமமான வெள்ளொடை பாதி கிருமம் கொள்வாரு வெண்று மொரை கூற யிம்மொழி கெட்டு யிதற்க் கெதிர் மொழி குடுத்தொன் யிம் மண்டலத்தில் யிக் கொணத்தில் யின்ன[ர*]ட்டில் உப்பளகத்தலிருக்கும் வயிசியரில் கொட்டை பெரிய பொம்மு செட்டி உள்ளிட்டார்லூம் நுங்கள் கொள் வொமென்று பிற் கூர முரைகூறிய முத்து நுயக்கன் உள் ளிட்டாருனுவரும் பி(னை)ர் கூரிய கொட்டை பெரிய பொம்மு செட்டி யிவை யிருதிரவரும்[5] எம்மிலிசைந்து தம்மிலப் பொ....ந் திருமங்கலம் மன்னு மணக்களவா முன்பாக யி...லையாக நிற்ச் செற்த[6] பாசிப்படாத பழவெர்க்காட்டு புது [வறுகன்][7] ௱உ௰ரு. யிந்த வறுகன் னூத்து யிருவத்து அஞ்சுக்கும் ௲௰உ-அடி கொலால் குழி ௲ஆ௱ரு௰-க்கு பாதிக்கி குழி ௲௲௱உ௰ரு-க்கு கரை கபழுர் விலையாக வித்து பொருள் கையிக் கொண்டொம்.

---

1. 'விலையாவணம்' என்று வாசிக்க.

2. மூலத்தில் 'கரையனா' என்று எழுதியிருப்பதுபோல் தோற்று கிறது.

3. 'உள்ளிட்டா ரனைவரோம்' எனக் கொள்க.

4. 'காணியாட்சி' என்று வாசிக்க.

5. 'இவ்விருதரத்தவரும்' என வாசிக்க.

6. 'எம்மில் இசைந்து தம்மில் பொருந்திக் கும்மங்கலம் ஆவணக்களரி முன்பாக இதுவே விலையாக நிச்சயித்த' என்று கொள்ளவேண்டும்.

7. வராகன் என்பது 'வில' என்ற குறியீட்டால் எழுதப்பட்டிருக் கிறது.

யிதுவெ விலையாவதாகவும். யிதுவெ விலைபிறமாணமதாகவும். யிரு(க்)காலாவது முக்காலாவது யிதுவெ விலையாவதாகவும். யிந்த காணிகாவுஷயெ[1] தாங்களெ சந்திறாதித்தவரைக்கும் தாங்களெ அனுபவித்துக்கொள்ளக்கடவுறாகவும். யிப் பிரம[ா]ணத்துக்கு யிந்த காணிகாஷ்ஷக்கி யாதொரு கல்லுமில்லெ.[2] கலனுளதாயி தொத்தபட்டால் நாங்களெ முன்னின்று கலன் தி[ர்*]த்து குடுக்க கடவொமாகவும். யிப்படிக்கு சம்மதித்து எங்கள் காணிகாஷ்ஷ[3] கிறைய சாதனம் பண்ணி கொடுத்தொம் கொட்டை பெரிய பொம்மு செட்டிக்கு(ம்) முத்து னுயக்கன் உள்ளிட்டாரும்லூம். யிவை கைமண்டாங்கலம் முத்து னுயக்கன் கையி எழுத்து.

யிதுக்கு சாஷ்ஷ[4] கும்மங்கலம் முத்தியப்ப னுயக்கன்.

சின்னகாமணம் மன்ன நெட்டி முதலியார்.

பெரிய காமணம் னயிணியப்ப முதலியார்.

பொன்னகரி பல்லவ வெங்கிட்ட முதலியார்.

யிவர்கள் சொல்ல எழுதின நன்மைக்கி ஊற் கணக்கு சின்னநயினுப்பிள்ளெ எழுதின சட்டம். யிந்தச்சட்டபடிக்கு சயனபரம் தானப்பாசாரி. பொட்ட வெட்டு முத்தியப்ப ந[ா*]யக்கன் கையி எழுத்து.

மன்னநெட்டி முதலியார்[5] கையி எழுத்து.

தறணியப்ப முதலியார் கயி எழுத்து.

பல்லவ வெங்கட்ட முதலியார் கையி எழுத்து.

பகயி மனடாங்கம் முத்து னுயக்கன் கையி எழுத்து. உ

சாசனம் — 1258] [D. 2944-14

[இதுவும் ஒரு தாம்ர சாசன நகல் என்று தெலுங்கு எழுத்தில் தலைப்பிலே குறிக்கப்பட்டுள்ளது.]

---

1. 'காணியாட்சியை' என வாசிக்க.
2. 'கலனும் இல்லை' என்று வாசிக்க.
3. 'காணியாட்சி' என்பதே இவ்விதம் எழுதப்பட்டிருப்பது.
4. 'சாட்சி' என்று கொள்க.
5. 'ஸூயார்' என்று எழுதப்பட்டுள்ளது.

Record dated in Kali 4519, Śaka 1351, Vikari, Sittirai 21, Monday, Su. pañchamī, Rōhiṇī in the reign of the Vijayanagara ruler **Vira Singaraya Raya Deva Maharaya** registering the sale of one half of Krishṇan-ōḍai, adjoining Kummaṅgalam, otherwise known as Chaturvēdimaṅgalam, which was a *Tiruviḍaiyāṭṭam* village of Tiruvēṅkaṭam-uḍaiyan, i.e., S'rī Vēṅkaṭēśa of Tirupati, to the south of the Āraṇi river in the Paiyyūr-Kōṭṭam, otherwise known as Meykkunṟa-vaḷanāḍu [a division] in the eastern *karai* of the Chandragiri-rājya, comprised in in the Jayaṅkoṇḍaśōḷa maṇḍalam *alias* Toṇḍaimaṇḍalam by Munniyappa Nāyakkan, son of Mūkka Nāyakkan of Vanniyarāya gōtram, and others to Āraṇi Seṭṭiyappa Śeṭṭi, a *vaiśya* of chinna-Kāvaṇa-maṅgalam of the same nāḍu, kōṭṭam and maṇḍalam for 115 *Paḷavēṟkāḍu-puḍu-varāhan*.

The original copper-plate is now deposited in the Government Museum at Madras, having been received from the Collector of Chingleput in the year 1858 and registered as **Private No. 5** in the *Catalogue of the Copper-plate grants.* The Śaka equivalent of the cyclic year Vikarin would be 1341 and the Kali 4520. The other details of the date are irregular.

சுப[1] [||*] ஸ்ரீமன் மஹா மண்டலெஸ்ப[ர]ன் அரியறுயல விபாடன் பாஷக்கு தப்புவறுயர கண்டன் கண்ட ஞடு கொ ண்டு கொண்டஞடு கொடாதொன் உத்திர தெஷ்ஷின பச்சமி பூர்வ சற்ற சமுற்றிரருதிபதி றுசறுச பறமெஸ்பற றுசமாற்த் தாண்ட றுச கெம்பிர றுச குலத் திலக துலுக்க தளவிபாடன் துலுக்க மொகரந் தவுத்தொன் அசுர தளவிபாடன் கடக குறைக்காரன் கலியாண பூருவறுதிசுவரன் எக[ர*]ங்க வீரன் விறவிஞெதன் விற வல்லாள தெவன் தலை குண்டு கண்ட வன் திரிபுவன றுயன் அஷ்ட்ட திக்கு மஞெ பயங்கரன் அசுவபதி கெசபதி சத்தாங்க வாயிரி பதினெட்டு வன்னியர் கள் தலைகுண்டு கண்டன் ஞகலொக பாலகன் பூலொக புரந் திரன் எம்மண்டலமுங் கொண்ட றுசமாற்த்தாண்டன் விற லஷ்ஷிமி[2] விசைய லஷ்ஷிமி[3] வரபுத்திரன் ஸ்ரீவிறசிங்கறுய றுயர் தேவமகாறுயர் பிறிதிவி றுச்சியம் பண்ணி அருளாய்

---

1. 'ஸ்வஸ்தி' என்று வாசிக்க.
2. 'வீரலக்ஷ்மி' என்று வாசிக்க.
3. 'விசைய லக்ஷ்மி' எனக் கொள்க.

நின்ற கலியுகாந்தம் ௮௯ சகூநாய௧௬ சாலிவாகண சகார்த்தம் ௯ கூ௬௱௭௰௧-கு மெல் செல்லாயி நின்ற விகாரி ௵ சித்திரை மீ௳ உ௰சவ் சொம வாரமும் பூருவ பஷ்ஷ பஞ்சமியும் ரொகணி நஷ்ஷத்திரமும் பெற்ற யித்தனுள் எழுதிய விலையா வணக் கை எழுத்து. செயங்கொண்ட [சொழ மண்டலமான*] தொண்ட மண்டலத்தில் சந்திரகிரி ருச்சியத்தில் கிழ்க்கரை யான மெய்க்குண்ற வளனுடான பையூர் கொட்டத்தில் ஆறணி ஆத்தின் தென் கரையான திருவெங்கடமுடையான் திருவிளையாட்டு கிருமமான சதுர்வெத மங்கலத்துக்கு பிறிதி னுமமான கும்மங்கலத்துக்கு அடுத்த கி[ரு*]ஷ்ணன் ஒடையில் யிருக்கும் வன்னயருய கொத்திரம் முக்கா னுயக்கன் குமா ரன் முன்னியப்ப னுயக்கன் உள்ளிட்டாரநவரும்ஓம். எங்கள் காணிகாஷ்ஷி[1] கிருமமான கி[ரு*]ஷ்ணன் ஒடை கிருமம் பாதி கொள்ளுவாரெ வென்று முறை கூர யம்மொழி கெட்டு யிதற் கெதிர்மொழி கொடுத்தொன் யிம் மண்டலத் தில் யிக் கொணத்தில் யின் நாட்டில் சின்ன காவண மங்க லத்திலிருக்கும் வயிசியரில் ஆறணி செட்டியப்ப செட்டி உள் ளிட்டார்ஓம் னுங்கள் கொள்ளுவொமென்று பிற் கூற முறை குறிய மு[க்*]கா னுயக்கன் குமாரன் முத்தியப்ப னுயக்கன் பி(ை)ற் கூறிய செட்டியப்ப செட்டியும் யிவை யிருதரவரும் எம்மிலி[ை*]சந்து தம்மில் பொரிந்தி கும்மங்கலம் மண்ணுமனக் கற்.......ஊர்முன்பாக விலையாக நிர்ச்செய்த பாசி படாத பழ வெர்க்காட்டு புது ௨ (வராகன்) ௱௰௫. யிந்த விருகன் னுத்து பதினஞ்சுக்கும் ௩௰௨ அடிக் கொலால் [குழி][2] சகூ-க்கு பாதி [குழி] உகூ-க்கு கரை க௰ ப௲ கூ௰-ம் கிழ[ை*]ரயும் விலையாக வித்து பொறுள் கைக்கொண்டொம். யிதுவெ விலையாவதாகவும். யிதுவெ விலைப்பிரமாணமதாகவும். யிரு(க்) காலாவது முக்காலாவது யிதுவெ விலையாவதாகவும். யிந்த காணிகாஷ்ஷியை[1] தாங்களெ சந்திராதித்தவரைக்கும் அனுப வித்துக்கொள்ளக் கடவிருகவும். யிப்புரமானத்துக்கு[3] யிந்த காணிகாஷ்ஷிக்கி யாதொரு கலனும் யில்லை. கலனுள்ளதாய்

---

1. 'காணியாட்சி' என வாசிக்க.

2. குழி என்பது மூலத்தில் 'து' என்பதுபோன்ற குறியீட்டால் எழுதப்பட்டிருக்கிறது.

3. 'இப் பிரமாணத்துக்கு' என்று வாசிக்க,

தொத்தப்பட்டால் நுங்களை முன் நின்று கலந் தித்து குடுக்கக் கடவொமாகவும். யிப்படிக்கி சம்மதித்து எங்கள் காணிகாஷ்ஷி கிரைய சாதனம் பண்ணி கொடுத்தொம் ஆரணி செட்டியப்ப செட்டிக்கு(ம்) முத்துநாயக்கன் உள்ளிட் டாரு(க்கு)ம் ஓம். இவை நாகமண்...ரங்கம் முத்து நாயக்கன் குமாரன் முத்தியப்ப நாயக்கன் எழுத்து. உ

யிதுக்கு சாஷ்ஷீ கும்மங்கலம் வெள்ளை ரெட்டி நாயக்கன்.

பொன்னபரி முத்தியப்ப முதலியார்.

சின்னகாவனம் மன்ன முத்தியப்ப முதலியார்.

பெரியகாமணம் வெங்கட்ட முதலியார்.

யிவர்கள் சொல்ல ஊர்க்கணக்கு பெரிய நயினா பிள்ளை யெழுதின சட்டம் ச[ய]னவாம மூர்த்தியாசாரி.

பொட்ட வெட்டு வெள்ளை ரெட்டி நாயக்கன் கையி எழுத்து. உ

பல்லவ முத்தியப்ப முதலியார் கையி எழுத்து. உ

பண்ண முத்தியப்ப முதலியார் கையி எழுத்து. உ

வெங்கிட்ட முதலியார் கையி எழுத்து. உ

யிந்த ச்யிகை மாண்டங்கம் முத்தியப்ப நாயக்கன் கை எழுத்து. உ

---

# APPENDIX II

## ADDITIONS AND CORRECTIONS

While checking the inscriptions in the first two volumes of the work with those in the *List of Inscriptions from the Southern Districts* compiled by the assistants of Col. Mackenzie some differences in the details of the records were found between the two. Some of the important differences are given below.

**113.** This inscription is said to be found on the western side of the stair on the northern steps of the spire 'Vallāḷa-Rāya *gōpuram*' in the temple.

**133.** The Śaka date is given 1409.

**148.** The Śaka year is given as 1504.

**160.** The date of the inscription is given as the 37th regnal year of Rājarājadēva.

**195.** The Śaka year is given as 1431.

**229.** The record as per the text published is undated. But the date regnal year 20 is found in the *List*.

**251.** The record is stated to have been engraved on a stone in the *Mahāmaṇḍapa* in front of the Saundaranāyaki amman shrine in the temple [of Tiruppāṇḍikkoḍumuḍi Āḷuḍaiya-Nāyanār] and dated in the 2nd regnal year of 'Sundara Pāṇḍya Kēsarivarma Dēvar,' evidently a Koṅgu Pāṇḍya king **Sundara Pandya.**

**264.** The Śaka year is given as 1427.

**280.** The Śaka year is given as 1625, while that found in the published text is [126]5.

**281.** The Śaka year is given as 1627.

**302.** The Kali year is given as 4632.

**558 (ஆ)** The Śaka year is given as 1193.

**559.** The *List* gives the Śaka date as 1299.

**612.** It is stated that this inscription is dated in the 21st regnal year of the king and registers the grant of some land to god Mahādēvar for the lamp (ceremony).

**614.** The regnal year of the king is found as the 24th.

**701.** It is mentioned that the record belongs to the time of **Chokkalinga Nayakkar**, the ruler (*Svāmi Karttākkaḷ*) of Madurai.

**721.** This inscription is said to be found in the village of Talaiyūr.

**805.** The inscription is said to be of the reign of [the Vijayanagara ruler] **Hariyappa Udaiyar** (Aureyapa Vadeyar) and the cyclic year Sādhāraṇa.

**884.** The Śaka year is given as 1611.

**908.** The regnal year of the king is given as the 8th.

**976.** It is stated that the record was found in the village of Chumpika.

**989.** The Śaka year is given as 1514 though it is not found in the text as printed.

Page **718.** Renumber the inscriptions 770 and 771 as **771** and **772**

**473.** This appears to have been copied by the Epigraphy Department and registered as No. 60 of 1909.

**1900.** 10-ஆம் வரியில் 'தலெநீர் பாடுகால்' என்று இருப்பதை 'தலைநீர் பாடு கால்' என்று வாசிக்க.

## சாசனச்சொல் அகராதி

[சாசனங்கள் பெரும்பாலும் முன்னாளிலே நடந்த தான தருமங்கள், நில விக்கிரயங்கள் ஆகியவற்றின் ஆதார பத்திரங்கள் ஆகும். ஆகவே, அவற்றில் காணும் சொற்கள் பழைய வழக்குக்களையும் அந்நாளிலே அந்த அந்தச் சொற்களுக்கு ஏற்பட்டிருந்த குறிப்பிட்ட பொருளையும் உணர்த்துவன. அவற்றுள் பெரும்பாலானவை இப்போது வழக்கு ஒழிந்து விட்டன. வழக்கில் உள்ள சிலவற்றுக்கும் பொருள் மாறி இருக்கும். முன்னாளில் அவை வழங்கி வந்த பொருளிலேயே இன்றும் வழங்கவில்லை. ஆகவே, சாசனங்களில் காணும் விஷயங்களைச் சரியாக அறிந்துகொள்வதற்கு அத்தகைய சொற்களின் பொருளை விளக்கிக் கூறும் தனி அகராதி ஒன்று அவசியமாகும்.

இந்நூலின் இரண்டாம் பாகத்தில் சில சொற்களை—பெரும்பாலும் அவை அந்நாளில் வழங்கிய வரிகளைப் பற்றியவை—அவற்றின் பொருள் விளக்கத்தோடு அவ்விதம் கொடுத்திருந்தேன். அது ஆராய்ச்சியாளர்களுடைய கவனத்தை மட்டுமேயல்லாமல் வேறு துறையில் உள்ள சிலருடைய கவனத்தையும் ஈர்த்ததாகத் தெரிகிறது.

சாசனங்களில் காணும் சொற்களைக் கூர்ந்து ஆராய்ந்தால், நம் முன்னோர்கள் நடத்தி வந்த வாழ்க்கை, அவர்கள் நாளில் அரசியல் அமைந்திருந்த முறை, அது வளர்ந்த வரலாறு, செயலாற்றிய விதம் முதலிய பலவும் நன்கு விளங்கும். நம் நாட்டு மொழியிலே அரசியல் நடந்து வந்த அந்நாளில் நிர்வாகத் துறையில் வழங்கிவந்த சொற்களும் தொடர்களும் தமிழையே அரசாங்க மொழியாகக்கொண்டு நம் ராஜ்யத்தின் நிர்வாகத்தை அம்மொழியிலேயே நடத்த வேண்டுமென்று விரும்பும் இந்நாளில் பெரிதும் உதவி புரியும்.

இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ள சாசனச்சொல் அகராதி, "சாசன வழக்கில் கிடைக்கக்கூடிய எல்லாச் சொற்களையும் தொடர்களையும் தொகுத்து அவற்றின் பொருள் விளக்கத்தோடு ஒரு பிற்சேர்க்கையாக" இந்நூலிலே

கொடுக்க வேண்டுமென்று சென்னை அரசாங்கத்தார் 3—8—1954உ யுள்ள தங்கள் எம். எஸ். நெ. 1082 (எடுகேஷன்) உத்தரவில் தெரிவித்திருந்த விருப்பத்திற்கிணங்கத் தயாரித்துக் கொடுக்கப் பெற்றதாகும்.

சாசன வழக்கில் உள்ள எல்லாச் சொற்களையும் இவ்விடம் தொகுத்துக் கொடுத்திருப்பதாகச் சொல்லமுடியாது. அன்றி, இவ்விடம் கொடுக்கப்பட்டுள்ள பொருள் விளக்கத்தையும் முடிந்த முடிபாகக் கொள்ளமுடியாது. 1904-ஆம் ஆண்டு முதல் இதுவரையில் பிரதி செய்யப்பெற்ற சாசனங்களின் பெரும்பகுதி—ஏன், முழுவதும். என்றே கூறலாம்—இன்னும் வெளியாகவில்லை. அவை வெளியிடப்பெற்றால் எத்தனையோ புதிய விஷயங்கள் தெரியவரும். இப்போது அறிந்திருக்கும் விஷயங்களில் சில புதிய விளக்கம் பெறும். நாம் தவருகக் கொண்டிருக்கும் விஷயங்கள் சிலவும் திருத்தம் அடையும். அந்த நிலையில் தயாரிக்கப்பெறும் சாசனச் சொல் அகராதியே பூர்ணமானதாகவும் நிர்ணயமானதாகவும் இருக்கமுடியும். ஆனால் அவ்விதம் நடப்பதற்கு நீண்ட காலம் பிடிக்கும்; சமீப காலத்தில் நிறைவேறக் கூடியதாகத் தோற்றவில்லை.

எனினும், இப்போது உள்ள நிலையிலும் அத்தகைய அகராதி ஒன்று தேவை என்பது மிகையாது. சாசன வழக்குகளை விளக்கிக் காட்டுவதில் அது ஓர் அளவாவது பயன்படும். அந்த நோக்கத்துடனேயே இந்த அகராதி கூடிய அளவு முக்கியமான சொற்களைத் தொகுத்துத் தயாரிக்கப்பட்டுள்ளது.

இவ்விடம் கொடுக்கப்பட்டுள்ள அகராதியிலே சொற்களுக்குச் சாசன வழக்கிலே காணப்பெறும் பொருள்கள் மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளன; அவற்றுள்ளும் பெரும்பாலானவை இலக்கிய வழக்குகளில் இல்லாமல் சாசன வழக்கில் மட்டுமே காண்பவை. அவ்விதம் அன்றி எல்லாச் சொற்களையும் சேர்ப்பதாக இருந்தால் மிகவும் விரிந்துவிடும்.]

## சாசனச்சொல் அகராதி

அக்கசாலை : நாணய சாலை

அக்கசாலை வரி : [நாணயங்களை அச்சிடுவதற்காக] நாணய சாலைக்கு இறுக்கும் வரி

அக்கம் : முன்னாளிலே வழங்கிவந்த ஒரு நாணயம் ; நாணய சாலையை யும் குறிக்கும்

அக்கன் : தமக்கையைக் குறிக்கும் மரியாதைச் சொல்

அக்காரவடிசில் : சர்க்கரைப் பொங்கல்

அக்காளி, அக்காளிப் பிரசாதம் : கோயில் பிரசாத வகை ; அக்கார வடிசிலே போலும்

அக்கிரசாலை : பிராமணர்களுக்குச் சோறுபோடும் இடம்

அக்கிரம் : கோயிலில் மூர்த்திக்கு நிவேதனப் பொருள் ; அக்காரவடி சிலே இவ்விதம் குறிக்கப்படுகிறது போலும்

அக்கினிஷ்டை : விறகு

அக்ரமகாதேவி : பட்டமகிஷிகளுள் மூத்தவள்

அக்ரமண்டபம் : கோயிலில் முன் மண்டபம் ; முக மண்டபம்

அகச்சுற்று : கோயிலின் உட்பிராகாரம்

அகநாழிகையார் : கோயில் கர்ப்பகிருகத்தை நிர்வகிப்பவர்

அகப்பரிவாரம் : அரண்மனையிலே பணி செய்யும் பரிவாரம்

அகம்படி : குடும்பம்; குடும்பத்தைச்சேர்ந்தது; உள் துறை; அந்தப்புரம்

அகம்படி உடையான் : குடி, குடிமக்கள் அல்லது குடும்பி

அகம்படிமுதலிகள் : அரண்மனை அந்தப்புரத்தைச் சேர்ந்த அதிகாரி கள் (அகம்படி மற முதலிகள்........மூவேந்த வேளார்)

அகம்படிப்பெண்டுகள் : அரண்மனை அந்தப்புரத்தில் பணிபுரியும் பெண்கள்

அகமார்க்கம் : முக்குணம்பற்றி வரும் மெய்க்கூத்து ; கோயில்களில் ஆடப்பெறும் நாட்டிய வகை ; தெய்வ சம்பந்தம் கொண்டது போலும்

அகரப்பற்று : பிராமணர்களுக்கு இறையிலியாக வழங்கப்பெற்ற நிலம்; அகரத்துக்குச் சொந்தமான நிலங்கள்

அகரப் பிரம்மதேயம் : பிராமணர் குடியிருப்புக்காகப் பெரும்பாலும் வரியில்லாமல் விடப்பெற்ற கிராமம் ; அவ்வூர்ச் சபையையும் குறிக்கும்

அகரம் : அக்கிரகாரம் என்பதன் வேறு வடிவம்; அகரப்பிரம்மதேயம் பார்க்க.

அகவினை : இடையூறு

அகழி : சிறு பள்ளம்

அகழிதிருத்துதல் : சிறு பள்ளங்களைத் தூர்த்துச் சமமாக்குதல் (புஞ்சைத்திடல் கல்லி அகழி திருத்தி)

அகிதம் : கேடு ; இடையூறு ; தீமை ; தீங்கு; சில சமயங்களில் அகுதம் எனவும் காணப்படும்

அகை வாய்க்கால் : கிராமங்களில் நிலங்களுக்குத் தண்ணீர் பாயும் சிறு கால்

அகோவனம் : பாழ்பூமி ; தரிசுநிலம்

அங்கசாலை : நடனசாலை

அங்கதேவதை : பரிவார தேவதை

அங்கமணி : மணப் பெண்ணுக்குக் கொடுக்கும் சீதனப் பொருள்

அங்கமணி திரவியம் : சீதனப் பணம்

அங்கரங்க வைபவம், அங்கரங்க வைபோகம் : சகல உபசாரங்களும் கூடிய பூசை ; சோடச உபசார பூசை ; ராஜோபசாரம்

அங்கரக்ஷகன் : மெய்காவலன்

அங்கவயிச்சியர் : (அங்க + வைத்தியன்) ஆயுள்வேத வைத்தியர்

அங்காடிக்கூலி ; அங்காடிப்பாட்டம் : கடைகளுக்காக இறுக்கும் வரி

அச்சதறி : அச்சுத்தறியே போலும்

அச்சு : முன்னாளில் வழங்கிவந்த ஒரு நாணயம்

அச்சுத்தறி : தறிவகை; அதற்கு இறுக்கவேண்டிய வரி

அச்சுவரி : பொன்வரி என்பர். பொன்னை நாணயமாக அச்சிட இறுக்கும் வரிபோலும்

அச்சை : வேதவாக்கியம்

அஞ்சஷ்ட சத்துச் சபை : (அஞ்சு + அஷ்டம் + சத்து + சபை) கிராமச் சபை வகை ; ஐந்து, எட்டு உறுப்பினர்களைக் கொண்டவை (ஐம் பெருங் குழு, எண்பேராயம் என்பனவே போலும்)

அஞ்ஞாழிக்கால் : ஐந்து நாழிகை அளவு கொண்ட படி

அஞ்சினான் புகலிடம் : துன்புறுவோருக்குப் பாதுகாப்பு அளிக்கும் இடம் ; அடைக்கலம் புகும் இடம். அபயம் எனவும் பெறும்

அஞ்சுபஞ்சாலத்தார் : பஞ்ச கம்மாளர்; கம்மாளர் வகுப்பு ஐந்தைச் சேர்ந்தவர்

அஞ்சுவண்ணம் : பஞ்ச கம்மாளர் ; அவர்களுடைய சபை ; கன்னடத்திலே ஹஞ்ஜமந எனப் பெறும்

அட்டவணை : அரசாங்கத்து வருவாயான தீர்வைகளை நிர்ணயித்து வசூலிக்கும் பிரிவு ; நிலவரி இலாகா ; அந்தத் துறையின் அதிகாரிகள்

அட்டிற்பேறு : கோயிற் பணியாளரின் விநியோகத்துக்குரிய பிரசாதக்கட்டளை

அட்டிற்பேறு : நீர்வார்த்துத் தானம் செய்யப்பெறுவது

அட்டிமுதல் : தானம் கொடுக்கப்பெற்ற சொத்து ; அதன் வருமானத்தை மட்டுமே உபயோகித்தல் வேண்டும்

அட்டுக்கிறை: தர்மத்துக்கு அளிப்பவற்றின்மீது விதிக்கும் வரிபோலும்

அடக்கிராவி : நெல் வகை

அட[ர்*]ந்தேற்றம் : மொத்தமாக நிர்ணயிக்கப் பெற்ற வரி

அடவி : போர்ப்படை

அடவிமார், அடவுசெய்வார் : நெய்வோருள் ஒரு பிரிவினர்

அடவோலை : அடையோலை பார்க்க (அடைவோலையின் திரிபேபோலும்)

அடிக்காசு : சந்தையில் கடைக்காரர்களிடமிருந்து வசூலிக்கப்பெறும் வரி

அடிகள்மார் : (பக்தர்கள்) கோயிலில் நடனம் ஆடும் பெண்டிர்

அடிமைக்காசு : கோயில் ஊழியர்களிடம் வசூலிக்கும் வரி

அடியாள் : வேலைக்காரி

அடியுறை : பாத காணிக்கை ; அடியிறை, அடியறை என்பன போன்ற வடிவங்களும் காணப்படுகின்றன

அடுக்களைப்புறம் : கோயில் மடைப்பள்ளிச் செலவுக்காக விடப்படும் மானியம்

அடுத்தூண் : ஒரு மாதச் செலவுக்கு வேண்டும் பணம்

அடைகுடி : பயிரிடுங்குடி

அடைகுத்துதல் : அடைமானம் வைத்தல்

அடை கொள்ளுதல் : ஒற்றியாகப் பெறுதல்

அடைதறி : கூலிக்கு வேலை செய்யும் தறி

அடைப்படி : அடைமானம் ; அடைமானச்சீட்டு

அடைப்பம் : வெற்றிலைச் செல்லம் ; வெற்றிலைச் செல்லத்தை ஏந்தியிருப்பவன்; ராஜ சபையிலே அரசர்க்குப் பக்கத்தில் வெற்றிலைத் தட்டு முதலியவற்றைக்கொண்டு உடன் இருக்கும் அதிகாரி ; அடைப்பு எனவும் அடைப்பக் காரன் எனவும் பெறும்

அடைப்பு : அடைமானம் பெற்றுள்ள நிலம்

அடைப்புமுதலிகள் : சபையின் காரிய நிர்வாகிகள் ; நில அடைப்பைக் கவனிப்பவர் போலும்

அடை முதல் பற்று : குடிகட்குப் பற்றாக அடைக்கப்பட்ட நிலம்

அடைக்காயமுது : பாக்கு; அடையமுது எனவும் பெறும்

அடையாள் : வேலைக்காரன் (அடையாளம் கொண்டவன்)

அடையெழுதுதல் : கணக்கில் எழுதுதல்

அடையோலை : அடைமானச் சீட்டு

அண்ணுவி, அண்ணுழ்வி : தமையன்

அணுக்கர், அணுக்கியர் : அரசர் முதலியோரிடம் நெருங்கிப் பணிபுரிவோர்; அந்தரங்க ஊழியர்

அணுக்கச் சேவகம் : அணுக்கராகச் சேவை செய்வது

அணுக்க விளக்கு : கோயிலில் மூர்த்திக்குப் பக்கத்தில் எரியும் திருவிளக்கு

அத்தியயன விருத்தி : கோயிலில் சுவாமி சந்நிதியில் வேதம் ஓதுவதற்கு விடப்பெற்ற மானியம் : அத்தியயனுங்கம் எனவும் பெறும்

அதராஞ் செய்தல் : தடைசெய்தல்

அதிகரண தண்டம் : அதிகரணம் என்னும் நியாயசபை விதிக்கும் தண்டம் ; அபராதம்

அதிகரணம் : நியாயசபை வகை : பிரதானமான சபையேபோலும்

அதிகாரப்போன் : பொன்னுகை இறுக்கும் வரிவகை ; அதிகாரவர்த்தனையே போலும்

அதிகாரவர்த்தனை: அதிகாரிகளுக்கு வழங்கும் காணிக்கை

அர்த்தஜாமப்புறம் : கோயிலில் அர்த்த ஜாமப் பூசை செய்வதற்காக விடப்பெற்ற மானியம்

அறையோலை : பறையறைந்து பிரகடனப் படுத்தவேண்டிய உத்தரவு

அவனிவேதனம் : பாடி காவல் ; ஊர்காவல்

அதிகாரிச்சி : அதிகாரியின் மனைவி; பெண்களிலே அதிகாரப் பதவி வகிப்பவரையும் குறிக்கும் போலும்

அதிகாரப் பேறு : அதிகாரிகளுக்கு வழங்கும் காணிக்கை; அதிகாரவர்த்தனை பார்க்க

அதிகார மேலெழுத்து : கீழ் அதிகாரிகள் இட்ட கட்டளையை மாற்றி மேலிடத்தார் அளிக்கும் உத்தரவு

அதிர்காணி : (கிராம நிலங்களில்) காணியாட்சி உரிமை

அதிஷ்டானம் : இருக்கை ; ஆசனம் ; கோயில் விமானத்தின் அடிப்பகுதி

அந்தர வினியோகம் : உள்வரி வகையில் நீக்கப்பெற்ற தொகையை ஏற்றுக் கொடுப்பதில் வரும் பங்கு

அந்தராயக் காசு, அந்தராயப் பாட்டம் : அந்தராயம் பார்க்க

அந்தராயம் : உள்வரி ; உள்வருமானம் ; ஊர்ச்சபை, நாட்டவர் போன்ற ஸ்தாபனங்களுக்கு இறுக்கும் வரி

அந்தராள மண்டபம் : அர்த்த மண்டபம்; கோயிலில் முகமண்டபத்துக்கும் கர்ப்ப கிருகத்துக்கும் இடைப்பட்ட பகுதி

அந்திக் காப்பு : கோயிலில் கடவுளுக்கு மாலைக்காலத்தில் செய்யும் பூசை

அபய சாசனம் : புகலிடமும் பாதுகாப்பும் அளிப்பதாகத் தெரிவிக்கும் பத்திரம்

அபயம் : பாதுகாப்பு அளித்தல்; புகலிடம்

அபிஷேகக்காணி : அபிஷேகக் காணிக்கை பார்க்க

அபிஷேகக் காணிக்கை : மகுடாபிஷேகம் ஆனதும் அரசனை நேரில் கண்டு விசுவாசத்தைத் தெரிவித்துச் செலுத்தும் காணிக்கை

அபிஷேக நாமம் : பட்டம் கட்டப்பெறும் காலத்தில் தரிக்கும் பெயர்

அபிஷேகம் : தலையணி வகை; கிரீடம்

அபிஷேக மண்டபம் : திருமஞ்சன சாலை; குளிக்கும் இடம் என்றும் வழங்கப்பெறும்

அபூரி, அபூர்வி : வேதம் வல்லவர்; பெரும்பாலும் தலயாத்திரை செய்யும் பிராமணரை குறிக்கும்; மீமாம்சகரைக் குறிக்கும்போலும்

அபோஹனம் : பாழ் நிலம், தரிசு நிலம் (அகோவனம் போலும்)

அம்பலத்தார் : கிராமப் பொதுச் சபையார்

அம்பலம் : சபை; கிராமச் சபை கூடும் இடம்; சிவபெருமான் கோயில்

அம்பலப் புறம் : சிவன் கோயிலுக்கு விடப்பெற்ற நிலம்; தேவதானம்

அம்புமுதுபாடன், அம்புமுதுவரை : முத்து வகை

அமஞ்சி : கூலி இல்லாமல் வேலை செய்வது

அமரபக்ஷம் : அபரபக்ஷம்; தேய்பிறை

அமரம் : உயர்தர அதிகாரிகளின் நிர்வாகத்தில் விடப்படும் நிலப்பகுதி. அதிலே அவர்கள் வரி வசூல் செய்து படை திரட்டி வேண்டும் போது அரசனுக்குச் சேவைபுரியத் தயாராக இருத்தல் வேண்டும். அரசாங்கத்துக்குத் திறைப்பணமும் செலுத்தவேண்டும். சிற்றரசுப் பதவி போன்றது

அமரநாயகம் : அமரப்பதவி

அமரமாகாணி : அமரநாயக்கனுக்கு அளிக்கப்பெற்ற நிலப் பகுதி

அமிர்த கணத்தார் : ஊர் நிர்வாகம் செய்யும் கணப்பெருமக்கள்; கோயில் ரொக்க வருமானங்களைக் கணக்கிடும் சபையார்

அமுது(ப்)படி : அமுதுபடைத்தல்; நைவேத்தியம்

அர்ச்சனா போகம், அர்ச்சனா விருத்தி : கோயிலில் அர்ச்சனை நடைபெறுவதன் செலவுக்காக விடப்பெற்ற நிலம்

அர்ச்சனுவிபவகாணி : கோயிற் பூசகர்களுக்கு விடப்பட்ட இறையிலி நிலம்

அர்த்த சந்திரன் : (பாதி சந்திரன்) திருவாசியின் ஒரு பாகம்; ஓர் ஆபரண வகையையும் குறிக்கும்

அர்த்தாங்கி : மனைவி

அரக்கல் : அரசாங்கத்துக்குச் செலுத்தும் இறையைச் சிறு பகுதிகளாகக் கட்டுவதற்கான தவணை

அரசு : காவல் சுதந்தரம்

அரசுப் பேறு : நாட்டுக் காவலுக்காக வசூலிக்கப்பெறும் வரி [மஹாராஜப் பிரயோசனம் என்று தெலுங்கு நாட்டுச் சாசனங்களில் காணப்பெறுவது இதுவேயாக இருத்தலும் கூடும்.]

அரிகரு : மாசூல்; விளைவு

அரிகூலி : நெற்கதிர் அறுவடையின்போது அரியாகக் கொடுக்கும் கூலி

அரிகோழி, அரிசித் துண்டம் : பழைய வரி வகை

அரிசிக் காணம் : அரிசி குத்துவதற்காக இறுக்கும் வரி; கூற்றரிசி எனவும் வழங்கப்படுவது

அரிப்புச்சரி : தொங்கல் ஆபரண வகை

அரிவாணம் : செப்புத் தாலம்

அருந்தோடு : (அருந்து + ஓடு) சாப்பிடும் தட்டுக் கணக்கின்மீது இறுக்கும் வரி

அரையன் : பழைய நாளில் மன்னர் அளித்துவந்த பட்டம்

அல்பமிறை : தானியமாகச் செலுத்தும் ஒரு வரி; சிறுவரி போலும்

அவசரம் : அரசன் பக்கத்திலே இருந்து அவ்வப்போது விஷயங்களை அரசனுக்கு அறிவிக்கும் அரசாங்க உத்தியோகங்களுள் ஒன்று

அவசரவர்த்தனை : அவசரம் என்னும் அதிகாரிக்குச் செலுத்தப் பெறும் காணிக்கை

அவதானம் : அவசானம், முடிவு

அவலமுதுப்புறம் : (அவல் அமுது + புறம்) அவல் நிவேதனத்துக்காகக் கோயிலுக்கு விட்ட இறையிலி நிலம்

அவிக்கிணறு : கோயில் சுவரிலே காற்றோட்டத்துக்காக இடும் துவாரம்

அவிரோதம் : விரோதம் இன்மை; நட்பு

அழகச்சு : ஒரு நாணயம் (அழகன் பெயரால் வழங்கிய அச்சு)

அழகெருது, அழகெருத்து காட்சிக் காசு : நல்லெருது பார்க்க

அழிவு : பயிருக்கு நேரிடும் சேதம்

அழிவு : செலவு

அழிவு செய்வான் : வரவு செலவுகளை நிர்வகிப்பவன்

அழிவு பிழை : உரியகாலத்தில் செலுத்தாதற்காகக் கொடுக்கவேண்டிய தண்டம்

அழுகல் சரக்கு : குப்பை கூளங்களைச் சேகரித்து [எருவாக்குதல் போன்ற] உரிமை போலும்

அள்ளாயம் : சந்தையில் விற்பனைக்கு வரும் சரக்குகளில் ஒரு பிடி அல்லது ஒரு குறிப்பிட்ட அளவு எடுத்துக்கொள்ளும் உரிமை; அள்ளு எனப் பெறுவதும் இதுவே போலும்

அளவர் : உழும் குடிகளுள் ஒரு வகையினர்; உப்பளத்தில் வேலை செய்வோர்

அளவு : நில அளவு, 'ஸர்வே'

அளு : சந்தையிலிருந்து பெறும் வரிவகைகளில் ஒன்று; அள்ளு, அள்ளாயம் என்பவை இதுவே போலும்

அற : முற்றும், முழுவதும்

அறங்காவல் : கோயில் முதலிய தர்ம ஸ்தாபனங்களைப் பாதுகாத்தல்

அறச் சாலா போகம் : அன்னசாலைக்காக வரியில்லாமல் விடப்பட்ட நிலம்; சாலாபோகம் என்றும் குறிக்கப்படும்

அறதேயன் : தர்மங்களைப் பாதுகாத்து நடத்துவோன்

அறவோலை : தர்ம சாசனம்

அறுதிமுறி : தீர்ந்துபோன கணக்குச் சீட்டு

அறுமுறி : உடன்படிக்கைப் பத்திரம் (அறுதிமுறி?)

அறை காவல் : கோயிலில் உக்கிராணத்தின் நிர்வாகப் பொறுப்புள்ள அதிகாரி

அறையோலை : யாவரும் அறிவதற்காகப் பிரகடனப்படுத்தப் பெறும் ஓலை

அன்றாடு நற்காசு : வழக்கில் உள்ளதும் மாற்றுக் குறையாததுமான காசு?

அன்றுள் கோ : அந்தந்தக் காலத்தில் அரசுபுரியும் மன்னன்

அன்வயத்தார் : அந்த வமிசத்தில் பிறந்தவர்

அன்னிய நாமகரணம் : இரவல் பெயரில் காரியம் செய்வது (அன்னிய நாமகரணத் தீட்டுக் கொடுத்த பரிசாவது)

அனாதிபாழ் : நெடுங்காலமாகப் பாழாகக் கிடந்த இடம்

அனுசிதம் : கெடுதி

அனுதாரம் : காப்பு; போஷணை

அனுபந்தம் : உதவி

அனுபோகப் பற்றெழுத்து : சொத்துக்கு உரிய மூலபத்திரங்களை அனுபோகத்தை ஒட்டிப் புதுப்பித்தல்

அனுவர்த்தனை : வர்த்தனை என்ற வகையைச்சேர்ந்த சிறு வரிகள்
அஷ்டபரிபாலனம் : அஷ்ட திக்குப் பாலகர்கள்
அஸ்திகடை : கடும்போர்
அஷ்டபோகம் : நிலத்திலே அனுபவிக்கும் எட்டுவகை உரிமை : விக்கிரயம், தானம், வினிமயம், ஜலம், தரு, பாஷாணம், நிதி, நிக்ஷேபம் என்பன. மற்றொரு சாரார் அக்ஷிணி, ஆகாமி, ஜலாமிருதம், பாஷாணம், நிதி, நிக்ஷேபம், சித்தம், சாத்தியம் ஆகிய எட்டும் என்பர் [பெண், ஆடை, அணிகலன், போசனம், தாம்பூலம், பரிமளம், பாட்டு, பூவமளி ஆகிய எட்டு என்ற வகையும் உண்டு.]
அன்னியாயவாவ தண்ட இறை : உரிமை இல்லாத ஒரு லாபத்தை அடைந்ததற்காகத் தண்டம் விதித்து இறுக்கப்பெறும் வரி
அஷ்டவித பக்தி கிரியை : அர்ச்சனை, வந்தனம், ஸ்மரணம், பாத சேவை, ஸ்தவம், பிரதக்ஷிணம், சக்யம், ஆத்ம நிவேதனம் அல்லது ஆத்மார்ப்பணம் ஆகிய எட்டும் கொண்ட பூசை
அஷ்டவிதார்ச்சனை : நீர், வாசனைப் பொருள், புஷ்பம், தானியம், தூபம், தீபம், நைவேத்தியம், தாம்பூலம் ஆகிய எட்டு வகைகளால் பூசிப்பது.
அக்ஷிணி : அஷ்டபோகங்களுள் ஒன்று; இப்போது கிடைப்பவற்றை குறிக்கும்

ஆக்கம் : செல்வம் ; வருமானம்
ஆக்கப் பெருக்கம் : சீர்திருத்தம் செய்து அதனால் மேலும் உண்டான வருமானம்
ஆகாமி : சுவர்ணதாயம்; அஷ்டபோகங்களுள் ஒன்று; இனிமேல் கிடைக்கப் போவதைக் குறிக்கும்
ஆச்சன் : தகப்பன்
ஆசந்திரதாரகம் : சந்திரன், நக்ஷத்திரங்கள் உள்ளவரையில்; என்றென்றைக்கும்
ஆசந்திரார்க்கம் : சூரிய சந்திரர் உள்ளவரையில்; என்றென்றைக்கும்
ஆசாரியபூசனை : குருக்களுக்கு உரிய சம்பாவனை
ஆசிரியக்கல் : தன்னைக் காத்து உதவும்படி பிறருக்கு எழுதி வைக்கும் சிலாசாசனம்
ஆசிரியப் பிரமாணம் : தன்னைக் காத்து உதவும்படி பிறருக்கு எழுதிக் கொடுக்கும் சீட்டு
ஆசிரியம் : ஆசிரியக்கல் பார்க்க
ஆசீவகக் காசு : ஆஜீவக மதத்தினர் முன்னுளில் செலுத்தவேண்டிய வரி ; ஆசீவக்காசு எனவும் பெறும்
ஆசுகவிகள் காசு, ஆசுவக்கடமை : ஆசீவகக்காசு பார்க்க

ஆசுவடிமக்கள் : ஆசீவகப் பொது மக்கள்

ஆட்சிப் பாட்டம் : வரி வகை

ஆட்டாண்டு : ஒவ்வோர் ஆண்டும்

ஆட்டுக்கிறை, ஆட்டுவரி : ஆட்டின்மீது விதிக்கப்படும் வரி

ஆட்டைக் காணிக்கை : வருஷந்தோறும் செலுத்த வேண்டிய காணிக்கை ; ஆட்டைச் சம்மாதம் என்பதும் இதுவே போலும்

ஆட்டைக்கோள் : ஆண்டுதோறும் செலுத்த வேண்டிய தொகை

ஆட்டைச் சம்மாதம் : ஆட்டைக் காணிக்கை பார்க்க

ஆட்டைப் பாழ் : வருஷம் முழுதும் தரிசாகக் கிடந்த நிலம்

ஆட்டை வாரியர் : சம்வத்சர வாரியர்; கிராம நிர்வாகத்திலே சில காரியங்களைக் கவனிப்பதற்காக அந்த அந்த ஆண்டு அமைக்கப்படும் சபையார்

ஆடிப்பச்சை : கார்த்திகைப் பச்சை என்பதுடன் சேர்ந்தே காணப்படும். ஆடிநவிரை என்றும் உள்ளது (நவிரை - நெல்வகை ஒன்று); ஆடிக்குறுவையும் உண்டு. ஆகவே ஆடி மாதத்தில் நெல் அறுவடையாகும் காலத்தில் தானியமாகச் செய்யும் செலவுபோலும்

ஆண்டார் : அடியார் ; பக்தர்

ஆண்டுகள்ளடவு : வருஷ வருமானம்

ஆண்டேழுத்துத் தேவை : ஆட்டைச் சம்மாதமே போலும்

ஆணத்தி : அரசன் உத்தரவை நிறைவேற்றுவோர் (ஆஜ்ஞப்தி என்ற வடமொழிச் சொல்லின் வடிவம்) ; அரசன் உத்தரவையும் குறிக்கும்

ஆணியம் : நாள்படி ; தினக்கூலி

ஆணெல் : ஆள் நெல்லு பார்க்க

ஆணை : உத்தரவு

ஆணை வாசல் : பிரதான வாசல்; அரண்மனை வாசல்

ஆணைவிலை : அரசன் உத்தரவின்படி செய்த விற்பனை ; ஆக்ஞாகிரயம் எனவும் பெறும்

ஆத்திறைப் பாட்டம் : கால்நடை வரி

ஆதிக்கப் பேறு : அதிகாரவர்த்தனையே போலும்

ஆதிதாசர் : சண்டேசுவரர்

ஆதிர சாலை : ஆதுலர் சாலை பார்க்க

ஆதிரைப் பிள்ளையார் நோன்பு : திருவாதிரை, பிள்ளையார் சதுர்த்தி முதலிய உற்சவங்களுக்கான செலவுக்கு இறுக்கும் தொகை

ஆதிறைப் பாட்டம் : கால்நடைகளின் மீது விதிக்கும் வரி

ஆதுலர்சாலை : வைத்தியசாலை

ஆமை தவழ் : ஆமை தவழும் நிலம் ; ஆழமான கிணறு

ஆயகம் : ஊர்ச் சபைகளுக்குப் பதிலாகக் கிராம உத்தியோகஸ்தர்கள் சிலரைக் கொண்டு கிராம நிர்வாகத்தை நடத்தும் முறை. அந்த அதிகாரிகள் ஆயகார் எனப்பெறுவர்

ஆயப்பாடி : கிருஷ்ணன் கோயில்: கோகுலம் எனவும் பெறும்

ஆயம் : வரிகளைப் பொதுவாகக் குறிக்கும் சொல்

ஆயிரத்தளி : அரண்மனை (ஆயிரம் தளிகொண்ட இடம். தளி - அறை)

ஆயோகவர் : கைக்கோளரில் ஒரு பிரிவினர்

ஆரகுடம் : பித்தளை

ஆராட்சி : ஆராய்ச்சி பார்க்க

ஆராய்ச்சி : மேற்பார்வை ; கணக்குப் பரிசோதனை ; அவற்றைச் செய்யும் அதிகாரி ; அதற்காக இறுக்கும் சிறுவரி ; காரிய ஆராய்ச்சி என்றும் குறிக்கப்பெறும்

ஆராய்ச்சியார் : கணக்குப் பரிசோதனை செய்வோர்

ஆலேபனம் : பூசுதல், மேற்பூச்சு

ஆலை : மண்டபம் (உள்ளாலை : உள் மண்டபம்)

ஆவணம் : பத்திரம் ; சீட்டு ; கிரய பத்திரம் ; விலையாவணம் எனவும் ஆகும்

ஆவணக்களரி : பத்திரங்களைப் பதிவுசெய்யும் இடம்

ஆவரணம் : மறைப்பு ; மதிட்சுவர் ; சுற்றாலை

ஆழ்வார், ஆழ்வி : தலைவன் ; தலைவி ; மரியாதைக்குரியவரைக் குறிக்கும் சொல்.

ஆள் அமஞ்சி : கூலி இல்லாமல் கடமையாக வேலை செய்வது ; குடி மராமத்து

ஆள்நெல்லு : நெல்லாக இறுக்கும் வரி வகை

ஆள்வரி : தலை(க்கட்டு)வரி ; மகன்மை

ஆளும்கணம், ஆளும் கணத்தார் : கிராம காரியங்களை நிர்வகிக்கும் சபை ; அதன் உறுப்பினர்கள்

ஆற்றங்கரைத் தேவை : ஆற்றங்கரை உடையாமல் பாதுகாக்கும் பொறுப்பும் அதற்கான செலவும்

ஆற்றுக்கால் அமஞ்சி : கிராம மக்களைக்கொண்டே ஆற்றுக் கால்களைத் திருத்துவது ; கூலி இல்லாமல் அவ்வேலையைச் செய்யும் ஆள்

ஆறிடு படுகை : ஆற்று வண்டல் படிந்து புதிதாக உண்டாகும் படுகை நிலம்

ஆற்றுக் குலை : ஆற்றின் கரை ; ஆற்றங்கரைத்தேவையே போலும்

ஆற்றுப் பாட்டம் : ஆற்றங்கரைத்தேவை பார்க்க

ஆனஞ்சு : பஞ்சகவ்யம் ; பசுவின் பால், தயிர், நெய், சாணி, சிறுநீர் ஆகிய ஐந்தும் கலந்தது

ஆனவாள் : கோயில் காரியங்களை நடத்தி வைக்கும் அரசாங்க உத்தி யோகஸ்தர்
ஆனைச்சாலை : யானைகள் கட்டும் இடம்; அதன் பராமரிப்புக்காக வசூலிக்கப்பெறும் வரியையும் குறிக்கும்
ஆனையாட்கள் : யானைப் படையினர்

இதுத்துவித்தல் : மடையடைத்தல்
இசைக்கிடாய் : [இது கொங்கு நாட்டுச் சாசனங்களிலேதான் காணப் படுவது] நல்லெருது, நல்பசு என்பனபோல நற்கிடா என்பதே போலும்
இசைகேடு : (இசைவு கேடு) கெடுதி
இசையின் செல்வி : புகழ் மகள் ; கலைமகளையும் குறிக்கும்
இசையோலை : ஒப்பந்தச் சீட்டு
இசைவுதீட்டு : உடன்படிக்கைப் பத்திரம்
இடங்கசாலை : (டங்கசாலை) அக்கசாலை; நாணயம் அச்சிடும் இடம்
இடங்கை : இடங்கைச் சாதிகள்
இடங்கைவரி : இடங்கைச் சாதியார் செலுத்தவேண்டிய வரி
இடதுறை : சுவர்ணதய வகை ; இடைத்துறை எனவும் பெறும் ; எதைக் குறிப்பதென்று தெளிவாகத் தெரியவில்லை
இடபத் தளியிலார் : கோயிலில் ஊழியம் புரியும் மகளிர்
இடிஞ்சில் : அகல் விளக்குத் தகழி ; மண் அகல்
இடை நாழிகை : கோயிலில் அர்த்த மண்டபத்துக்கும் மகா மண்டபத்துக்கும் இடைப்பட்ட பகுதி
இடைப்பாட்டம் : இடையர் வரி ; இடைப் பூட்சி எனவும் ஆகும்
இடையர் வரி : மாடு மேய்ப்பவர் இறுக்கும் வரி
இடையீடு : அரசாங்க உரிமையாயிருந்து பிறருக்கு மாற்றப்பட்ட நிலம்
இடையீடு : பயிரிடும் உரிமை
இடைவட்டை : நடுவில் உள்ளது ; வருஷநடுவில் செலுத்தவேண்டிய பொருள் ; இடை வெட்டு என்பதும் இதுவே போலும்
இண்டை : தலையைச் சுற்றி அணியும் சிறு வட்டமான பூமாலை
இதடக்கு : அணியுறுப்பு வகை ; ஓர் ஆபரணம்
இயக்குதல் : நடத்தி வருதல்
இயற்றண்டம் : (இயல் தண்டம்) சாதாரண அபராதம்
இரத்தக் காணிக்கை : போரில் வீழ்ந்த வீரருடைய வழியினர்க்கு அளித்த மானியம்

இரத்த மானியம் : இரத்தக் காணிக்கை பார்க்க ; உதிரப்பட்டி, நீத்தார் பட்டி, நீத்தார் கோடை என்ற பெயர்களாலும் வழங்கப்பெறும்
இரவுச் சோறு : எச்சோறு பார்க்க
இரவை : இரவு (இரவைக்கு - இராப்பொழுதுக்கு)
இராசகரம் : அரசாங்கம் ; அரண்மனை ; ராஜக்ருஹம் என்பதன் திரிபு
இராசகரகாணிக்கை : அரண்மனைக்கு அந்த அந்தக் காலங்களில் செலுத்தவேண்டிய காணிக்கைப் பொருள்
இராசபோகம் : அரசர்க்கு உரிய பாதுகாவல் வரி
இராசிப்பொன் : கலப்பற்ற சுத்தமான தங்கம்
இராசிபாளயம் புள்ளிப்பணம் : பழையநாள் நாணயம்
இராமாநுஜகூடம் : வைஷ்ணவ யாத்திரிகர்கள் தங்கும் சாவடி
இராயசம் : ஆணைப்பத்திரம் ; இராயச வேலையைக் கவனிக்கும் ஓலை நாயகம் போன்ற அரசாங்க அதிகாரி
இராயச வர்த்தனை : இராயச அதிகாரிகளுக்குக் கொடுக்கும் வர்த்தனை
இரு(க்)கால் : இரண்டு தரம்
இருட்கண்டம் : கழுத்தணி வகை (நீலகண்டம் ?)
இருப்புக் கட்டி : (இரும்புக்கட்டி) பூமியிலிருந்து இரும்பைத் தோண்டி எடுத்து உருக்கி வார்க்கும் தொழிலுக்கான வரி; அன்றி இருப்பைக் கட்டி (இலுப்பைக்கட்டி) யெனக் கொண்டால் இலுப்பைப் பிண்ணாக்கு வியாபாரத்துக்கான வரி
இருபூ : இருபோக சாகுபடி
இல்லரி, இல்வரி : மனைவரியே போலும்
இலக்கை : இருப்பிடம் ; குடியிருப்பு
இலக்கை : ஆடை ; மாதச் சம்பளம்
இலாஞ்சனைப் பேறு : அரசனுடைய முத்திரையைப் பொறிப்பதற்குச் செலுத்தவேண்டிய கட்டணம் ; லாஞ்சினைப் பேறு, இலச்சினைப் பேறு எனவும் குறிக்கப்பெறும்
இலைசுனி : மாணிக்கத்தின் குணங்களுள் ஒன்று
இலைச்செப்பு, இலைத்தட்டு : பூசைப் பாத்திரவகை
இலையமுது : வெற்றிலை
இலைவாணியப் பாட்டம் : வெற்றிலை வாணிகம் செய்வோர் இறுக்கும் வரி
இலைவாணியர் : வெற்றிலை வாணிகம் செய்யும் குடி
இழிக்க : (கிணறு) ஆழமாகத் தோண்ட
இழிச்சு : நீக்கி ; (வரி) தள்ளிக் கொடுத்து ; இழித்து என்றும் காணப் பெறும்

இளங்கூறு : இளைய பிரிவு ; இளவரசன்

இளங்கோயில் : பாலாலயம் ; கோயிலைப் புதுப்பிக்கும் காலத்தில் விக்கிரகங்களை வைத்திருக்கும் தனி இடம்
[பழைய நாளில் கட்டப்பெற்று வந்த கோயில் கட்டடங்களில் ஒரு வகையையும் குறிக்கும்]

இளஞ்சிங்கவீரர் : நானாதேசிகள் என்னும் வியாபாரக் குழுவினரின் உட்பிரிவு ; படைத் தொழிலில் ஈடுபட்டவர் போலும்

இளவட்டம் : காளைப் பருவத்தினர்

இளைய நயினார் : (இளைய நாயனார்) முருகக் கடவுள்

இளைய வகை : தாயாதிகளில் இளைய பரம்பரை

இறங்கல் : வரி தவிர்த்தல் [அரசாங்கத்தார்க்குச் செலுத்தவேண்டிய வரியைத் தவிர்த்தலை நீங்கல் என்றும், அவ்விதம் அல்லாமல் அந்த வரியை ஊர்ச்சபை, நகரம் போன்ற ஸ்தாபனங்கள் ஏற்றுக் கொள்வதை இறங்கல் என்றும் கொள்வர்]

இறங்குசாத்து : இறக்குமதி ; இறக்குமதி வியாபாரத்தில் ஈடுபட்டுள்ள வியாபாரிகள்

இறங்குசாத்து : (துவஜ அவரோஹணம்) கொடியிறக்கம் ; அதுசமயம் கோயிலில் நடத்தும் விசேஷம்; இறங்குகையில் செலுத்தும் மரியாதை

இறுப்பு : வரி, தண்டம் முதலியவை செலுத்தல்

இறை : அரசாங்கத்துக்கு இறுக்கும் வரியைப் பொதுவாக உணர்த்தும் சொல்

இறைக்கடன் : நிலவரி

இறை காவல் : பின்னால் செலுத்தவேண்டிய வரிக்காக மொத்தமாகச் செலுத்தும் பணம் ; தலையாரிக்கு உரிய வரி என்றும் கூறுவர்

இறைச் சோறு : எச்சோறு போலும்

இறை திரவியம் : பின்னால் ஆண்டுதோறும் இறுக்க வேண்டிய வரிகளுக்காக மொத்தமாகச் சேர்த்து முன்னதாகவே செலுத்தும் பணம்

இறைப் புணைப் படுதல் : ஒருவன் செலுத்தவேண்டிய வரிக்காக மற்றொருவன் புணை கொடுத்தல்

இறைப் பொருள் : இறைத் திரவியம் பார்க்க

இறைபோகம் : நிலத்தில் வசூலாகும் வரியைமட்டும், அதாவது மேல்வாரத்தை மட்டும் அனுபவிப்பது

இறையிலி : வரி இல்லாத நிலம்

இறையிலிக்காசு : நிலவரி இல்லாத நிலங்களுக்காக இறுக்கும் சிறு இறை போன்றவை ; ஊர்ச் சபையால் இறையிலியாக்கப்பெற்ற நிலங்களின் வரியை ஏற்று ஊரார் கொடுக்கும் பங்கும் ஆகும்

இறையிழித்து: வரி நீக்கி; இறையிழிச்சு என்றும் எழுதப்பட்டிருக்கும்

இறையிறுக்கும் கோல்: வரி விதிப்பதற்காக நிலத்தை அளக்க உபயோகிக்கும் அளவு கோல்

இறைவிழுத்து: இறையிழித்து பார்க்க

இனவரி, இனவரிக்காசு: அந்த அந்தச் சாதியினர் செலுத்தும் வரி; ஜாதி ஸித்தாயம் என்று தெலுங்குச் சாசனங்களில் வருவதையும் காண்க

ஈக்காலாணி: ஆபாணத்திக்கு இடும் சிறு ஆணி

ஈச்சோப்பி: ஈயோட்டி

ஈட்டம்: கூட்டம்

ஈரங்கோல்லி, ஈரங்கோள்ளி: வண்ணான்; அவன் செய்யும் தொழிலுக்கான வரி

ஈழக்காசு, ஈழக் கருங்காசு: முன்னாளில் வழக்கில் இருந்த நாணய வகை; இலங்கையில் வழங்கிவந்தது; கருங்காசு எனவும் பெறும்

ஈழக்கையர்: ஈழவருடைய பெண்டிர்

ஈழச்சேரி: கள்ளிறக்குவோர் வாழும் இடம்

ஈழம்புஞ்சை: கள் இறக்குவோர் வரி

ஈழம்பூட்சி: கள் இறக்குவதற்கு விதிக்கும் வரி

ஈழவர்: கள் இறக்குவோர்

ஈழற்கடிவரி: ஈழம் புஞ்சை பார்க்க

உகப்பார்போன்: கல்யாணம் போன்ற சந்தோஷ காரியங்களுக்குச் செலுத்தும் வரி; கண்ணாலக்காணம் என்பதும் இதுவே போலும்

உகவை: உகப்பார் பொன் பார்க்க

உகிர்ப்புறவன்: நகத்தின்மேல் அணியும் அணிவகை

உச்சம்போழ்து: நடுப்பகல்

உச்சி சந்தி: கோயிலில் நண்பகலில் நடக்கும் பூசை

உசாவடி: சாவடி என்பதன் வேறு வடிவம்; கோட்டம், கூற்றம் என்பன போல முன்னாளில் வழங்கிய ராஜ்யப் பகுதியின் பெயர்

உட்கோள்ளுதல்: வரி முதலியன வசூலித்தல்

உட்கோயில்: கோயில் கர்ப்பகிருகம்

உட்கோள்: வரி வசூலிப்பதற்காகும் செலவு போலும்

உட்சேவகம்: கிராமச் சேவகம்; அதற்காகும் செலவு

உட்புரவு: சபை, நாடு முதலிய ஸ்தல ஸ்தாபனங்களால் இறை நீக்கப்பெற்ற நிலம்

உடல்: வருமானத்தை மட்டும் உபயோகிக்கும் நிபந்தனையுடன் இட்ட முதல்

உடன்கூட்டம்: அரசனோடு கூடவே செல்லும் மந்திரிகள்போன்ற உயர்தர அதிகாரிகள்

உடன்கூட்டத்ததிகாரி: அரசன் பக்கத்தில் இருக்கும் பரிவாரமான உடன் கூட்டத்து அதிகாரி

உடன் பாடுவான்: சேர்ந்து பாடுகிறவன்

உடன்வாரம்: மேல்வாரம் குடிவாரமாகப் பிரிக்கப்படாத மொத்த மகசூல்

உடனிலைக் குதிரைச்சேவகர்: குதிரையேறிய மெய்காவலர்

உடைகுளம்: கரை இடிந்து உடைந்து நீர் நில்லாத குளம்

உடைப் படை: நிலைப் படை

உடையார்: அரசன்; உரியவன்; கோயிலில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்

உடையார் சாலை: கோயிலைச் சேர்ந்த சோற்றுச் சாலை

உண்டழிவு: உணவு அளிப்பதற்காகும் செலவு

உண்டி யச்சு: நாணய வகை

உண்ணாழிகை: கர்ப்ப கிருகம்

உண்ணாழிகை உடையார், உண்ணாழிகையார்: கர்ப்ப கிருகத்தில் உள்ள கடவுள்; கர்ப்ப கிருகத்தில் சேவை புரிவோர்

உண்ணாழிகை வாரியம்: கர்ப்பகிருக நிர்வாகத்தைக் கவனிக்கும் சபை

உண்ணிலம்: உள்ளே அடங்கிய நிலம்

உத்தமதானி: பிரதிப்பிரயோஜனம் எதிர்பார்க்காமல் தானம் செய்வது; தானங்களுள் சிறந்தது

உத்தரமந்திரி: முக்கியமான மந்திரி; பிரதான மந்திரி

உத்தாரம்: உத்தரவாதம்

உத்தானத் துவாதசி: கார்த்திகை மாதத்துச் சுக்கில பக்ஷத்துத் துவாதசி

உதகதாரை: நீரைத் தாரையாக வார்த்துத் தானம் செய்தல்; உதகம் பண்ணி, உதகஞ்செய்து என்றும் குறிக்கப் பெறும்.

உதக பூர்வம் செய்தல்: தானம் கொடுக்கும்போது நீர் வார்த்துக் கொடுத்தல்

உதாசீனவாரியம்: விருப்பு வெறுப்பு இல்லாமல் இரு தரப்புக்கும் பொதுவாக நின்று பணிபுரியும் குழு; மத்தியஸ்தர் அடங்கிய சபை

உதிரப்பட்டி : போரில் இறந்துபட்டவர்களின் வழிவந்தோர்க்கு வழங்கும் நிலம்; இரத்தக் காணிக்கை
உப்பாயம் : உப்பு வரி
உப்பிஞ்சி : இஞ்சி வகை
உப்புக் காசு : உப்புவரி
உப்புக் கோச்செய்கை : உப்பு உண்டாக்கி எடுக்கும் அரசாங்க உரிமை
உபத்திரகம் : உபத்திரவம்
உபயநாணுதேசி : நாணுதேசி என்னும் வியாபாரிகளுடைய குழுவின் இரண்டு பெரும் பிரிவுகள்
உபய-பலிசை : (ரொக்கம், தானியம் ஆகிய) இருவகையாகவும் கிடைக்கும் வட்டி
உபயம் : பழைய சுவர்ணுதாய வகை; உபய மார்க்கம் என்பதும் இதுவே போலும்; அவ்விதமாயின் பெருவழிப் போக்குவரத்திலே இறுக்கும் சுங்கமாகக் கொள்ளலாம்
உபயராணுவம் : இரண்டு பிரிவுகள் கொண்ட சேனை
உபாதி : கடமை; இறுக்க வேண்டிய வரி முதலியன; ஒபாதி என்றும் காணப் பெறும்
உபாயம் : சாதனம், வழி ; உபயம் என்பதே போலும்
உபானம் : கோபுர விமானத்தின் அதிஷ்டானத்தின் அடிப்படை ; உபானவரி எனவும் பெறும்
உம்பளிகை : மானியம்; சேவைக்காக விடப்பெற்ற மானிய நிலம்
உரல் வரி : நெல் குற்றும் உரலுக்கு இறுக்கும் வரி
உரிமை : மனைவி
உருத்திர கணம் : சிவனடியார்
உருத்திர கணிகை : சிவன் கோயில் தாசி
உருத்திரர் : சிவனையே பரதெய்வமாக வழிபடுவோர்; சைவர்
உல்கு : சுங்கம்
உல்கூட்டுச் சரக்கு : சுங்கம் வசூலிக்கக்கூடிய பண்டம்
உல்லியக் கூலி : கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்துப் பாய்ச்சும் நிலத்துக்கு இறுக்கும் வரி
உலகளவு : நாட்டின் நில அளவு
உலகுடைய பெருமாள் : அரசன்
உலவி பொன் : சுத்தமான தங்கம்
உலாவு காட்சி : வரி வகை
உவ்வி : தலை; வரி வகை ; தலைவரி போலும்
உவச்சக்காணி : கோயிலில் (மத்தளம்) கொட்டும் ஊழியத்துக்கு விடப்படும் மானியம்

உவச்ச வரி : (கோயில் பூசை செய்யும்) உவச்சர் கொடுக்கவேண்டிய வரி
உவச்சன் : கோயிலில் (மத்தளம்) கொட்டுவான் ; பூசாரி
உவச்சு : மத்தளத்தின் ஒரு வகை
உவன்றி : நீர்நிலை
உவா : அமாவாசை, பௌர்ணமி ஆகிய இரு தினங்களும்
உழத்தல் : வருந்துதல் ; உழைத்தல்
உழத்தல் : மயங்குதல் ; திகைத்தல்
உழவு காணி : நிலத்தை உழுது பயிரிடுதல்
உழவுகாணியாட்சி : நிலத்தை உழுது பயிர் செய்யும் உரிமை
உழப்பம் : வேலை
உழவுகுடி, உழுகுடி : பயிரிடுங் குடி
உழுதான்குடி : பயிரிடுங்குடி இறுக்க வேண்டிய வரி
உள் பாடன் : கோயில் உத்தியோகங்களுள் ஒன்று
உள்வரி : அந்தராயம்; ஸ்தல ஸ்தாபனங்களுக்கு இறுக்கும் வரி; அவ் விதம் செலுத்தவேண்டிய வரிகளை நிச்சயித்து அரசாங்கம் விடுக்கும் ஓலை
உள்ளாலை : உள் மண்டபம் ; உள் பகுதி
உள்ளிட்டம் : நஷ்டம்
உள்ளிட்டார் : [பெயர் குறிக்கப்பெற்றவர்கள்] உள்பட அனைவரும் ; அந்த வமிசத்தவர்கள்
உள்ளிருப்பு : எதிர்பாராத செலவுகளுக்கெனச் சேமித்து வைத்துள்ள நிதி ; க்ஷேம நிதி
உருவொற்றி : திரும்ப மீட்க முடியாத ஒற்றி (அடைமானம்)
உறுபாதை : சிதைவுறும் சிறுபாதைகளைச் சீர்செய்யும் பொறுப்பு
உறைநாழி : முகத்தல் அளவையில் (அறுபது மரக்கால்போன்ற அளவையான) ஒவ்வோர் உறைக்கும் ஒரு நாழி என்று கூலியாகப் பெறுவது

ஊசிவாசி : தையற்காரர்கள் இறுக்கும் வரி போலும்
ஊடுபோக்கு : ஒரு பயிர்செய்யும் போது அதன் இடையிலே செய்யும் வேறு பயிர் ; அவ்விதம் செய்வதற்கான வரி
ஊத்தைப்பாட்டம் : குளத்திலிருந்து வண்டல் முதலியவற்றை வாரி எடுத்தலால் கிடைக்கும் வருவாய்
ஊத்தையட்டுதல் : ஊனமுறுதல் ; தோற்று அவமானப்படுதல்
ஊர் : வேளாண் மக்கள் குடியிருப்பான கிராமம்; அவ்வூருக்கு அமைந்த சபை
ஊர்க்கடமை : ஊர்ச்சபையினர்க்குச் செலுத்தவேண்டிய கடமை வரி

ஊர்க்கணக்கர் ஜீவிதம் : கிராமக் கணக்கு வேலைபார்ப்போர் வாழ் நாளில் அனுபவிக்க விட்ட மானியம்

ஊர்க்கமைஞ்சு : ஊருக்கு அமைந்த ; ஊருக்குப் பொறுப்பான

ஊர்க்கலனை : கிராமத்தின் சிறுதன அதிகாரிகள்

ஊர்க்கழஞ்சு : ஊர்ப் பொதுவாக வைக்கப்பெற்றிருக்கும் நிர்ணயிக் கப் பட்டுள்ள எடை ; அதுபற்றிய வரியையும் குறிக்கும்

ஊர்க்கற் செம்மை : ஊர்ப் பொதுவாக உள்ள நிறைக்கும் உரைகல் மாற்றுக்கும் சமமானது (பொன்)

ஊர்க்கீழ் இறையிலி : ஊர்ச்சபையாரால் வரி நீக்கப்பெற்றதும், அரசாங்கத்துக்கு உரிய அதன் தீர்வையை ஊர்ச்சபையாரே ஏற்று இறுப்பதுமான நிலம்

ஊர்காவல் : கிராமத் தலையாரி

ஊர்ச்சரிகை : ஊர்க்கூட்டம்

ஊர்வாரியம் : கிராமக் காரியங்களைக் கவனிக்க நிறுவப்பெறும் சபை

ஊரமை, ஊராண்மை : ஊர்ப்பொதுக் காரியங்களை நிர்வகித்தல்

ஊரவர் : ஊராக அமைந்த ஊர்ச்சபை ; அதன் உறுப்பினர்

ஊராட்சி : கிராம காரியங்களை நிர்வகித்தல்

ஊராளர் : கிராமத்தை ஆளும் அதிகாரி

ஊரிருக்கை : ஊரைச்சார்ந்த இடம்

ஊரிடு வரிப்பாடு : கிராமச் சபையான ஊர் விதிக்கும் வரி

ஊரேட்டு : வரி வகை ; எண்பேராயம் என்பதன் தொடர்பு கொண்டதாக இருத்தல் வேண்டும்

ஊரோம் : ஊர் என்னும் கிராமச்சபையாக அமைந்த நாங்கள்

ஊழியம் : பொதுக் காரியங்களுக்கும் அரசாங்க அதிகாரிகளுக்கும் சம்பளம்பெறுமல் (அமஞ்சி போல்) செய்யும் ஊழியம்

எக்கடமை : ஏர்க்கடமை போலும்

எக்காளம் : பவனியில் முன்னே ஊதும் காளம் போன்றது

எச்சோற்றுக் கூற்றுநெல், எற்சோற்றுக் கூற்றரிசி : நெல் குத்துபவர்களுக்கு இரவில் சோறு இடும் கடமைபோலும்

எச்சோறு : கிராம ஊழியர்களுக்கு இரவில் சோறும் போடும் கடமை ; எற்சோறு எனவும் பெறும்

எடுத்துக்கட்டி : சுவர்த் தலைவரிக் கட்டு ; கைப்பிடிச்சுவர்

எடுத்துக்கோட்டி : நெல்லாய வகை ; விவரம் விளங்கவில்லை

எடைவரி : நிறைமேல் விதிக்கப் பெறும் வரி (இடைவரியின் தவமுன வடிவமா?)

எண்ணெய் (எண்ணை) : எண்ணெய் வியாபாரத்தின்மீது வரி; எண்ணெய் அட்டவேண்டிய நிபந்தனையையும் குறிக்கும்போலும்

எண்ணெய்ப் பந்தம் : இரவில் நடக்கும் கிராமப் பொதுக்காரியங்களுக்கு வாணியன் விளக்கெரிக்க எண்ணெய் கொடுப்பது

எதிரடையோலை : அடையோலை எழுதித் தருவோர்க்குக் கொடுக்கும் ஆதாரவுச் சீட்டு

எதிராமாண்டு : அடுத்துவரும் வருஷம்

எயில் : கோட்டையாக அமைந்துள்ள ஊர்

எர்க்காடி : ஏர்க்காடி பார்க்க

எரிகரும்பு : அடுப்பு விறகு

எரிமருந்தன் : வெடிமருந்து செய்பவன்

எரிமருந்து : வெடிமருந்து

எருமைப் பொன் : எருமைகளின்மீது விதிக்கப்படும் வரி; காசாகக் கொடுக்க வேண்டியது

எல்கை : எல்லை என்பதன் வேறு வடிவம்

எலவை : (ஏல்வை எனவும் வாசிக்கப் பெறும்) சாவுக்கான வரி; பிணத்தை இடுக்காட்டில் அடக்கம் செய்வதற்கு இறுக்கும் கடமை; துக்கப்புடைவை என்பதும் இதைப்பற்றியதே போலும்

எழுத்து வினியோகம் : கணக்கெழுதும் அதிகாரிகளுக்கு வர்த்தனையாக அளிக்கும் வரி வகை

எழுந்தருளுந் திருமேனி : உற்சவ மூர்த்தி

எறிவீரப் பட்டணம் : எறிவீரர்களுடைய நகரம்

எறிவீரர் : அய்யாவழியைத் தலைநகராகக் கொண்ட நானாதேசி என்னும் வியாபாரக் கூட்டத்தாரின் ஒரு பகுதியினர்; போர்ப்படைப் பிரிவைச் சேர்ந்தவர் போலும்

ஏகபோக இறையிலி : வரி இல்லாமல் உள்ள ஏகபோகக் கிராமம்

ஏகபோகம் : ஒரு கிராமத்தைப் பிறருடைய கூட்டு இல்லாமல் தனி மனிதர் ஒருவரே அனுபவிப்பது

ஏகபோகம் : ஓரே சாகுபடியும் ஆகும்; ஒருபூ

ஏகாங்கி : குடும்பமின்றித் தனித்து வாழும் வைஷ்ணவ அடியார்; விஷ்ணு கோயில் நிர்வாகத்தைக் கவனிப்பவர்

ஏகாவலி, ஏகாவல்லி : ஒற்றைச்சரம் உள்ள மாலை

ஏணிக்காணம் : ஏணியின்மீது விதிக்கப்பட்ட வரி; கள் இறக்குவோர் போன்ற மரமேறிகள் செலுத்தவேண்டியது போலும்

ஏத்தம்புலம், ஏத்த பாடம்: (ஏற்றம் புலம், ஏற்ற பாடம்) ஏற்றம் போட்டுத் தண்ணீர் இறைத்துப் பயிர் செய்யும் நிலம்

ஏந்தல்: பயிர் செய்வதற்கான நீர்பாயும் ஏரி

ஏர்க்கடமை: உழும் ஏரின்மீது விதிக்கப்பெறும் வரி

ஏர்க்காடி: ஒவ்வோர் ஏருக்கும் ஒரு காடி நெல்லாக இறுக்கவேண்டிய வரி; ஏர்க்காணிக்கை எனவும் பெறும்

ஏர்ப்பொன்: ஒவ்வோர் ஏருக்கும் இறுக்கவேண்டிய காசாயவர்க்க வரி

ஏரி ஆயம்: நீர் நிலைகளிலிருந்து மீன்விலை போல் கிடைக்கும் வருவாய்

ஏரி ஈவு: ஏரியின் பராமரிப்புச் செலவுக்காக அதன் நீர் பாயும் நிலத்தைப் பயிரிடுவோர் கொடுக்கவேண்டிய பங்கு

ஏரிக்காடி: ஏரியின் நீர் பாய்ச்சும் நிலம் ஒன்றுக்குக் காடி நெல்வீதம் இறுக்கும் வரி

ஏரிக்கோப்பு: வெள்ளம் வந்த காலத்தில் நீர் நிறைந்து மூழ்கியும் மற்ற நாட்களில் சாகுபடிக்கு ஏற்புடையதுமாக ஏரியின் உள்வாயில் உள்ள நிலம்; ஏரிநீர்க்கோப்பு எனவும் பெறும்

ஏரிப்பட்டி: ஏரியின் பராமரிப்புச் செலவுக்காக விடப்பெற்ற நிலம்; ஏரி மானியம் எனவும் பெறும்

ஏரிமீன் காசு: நீர் நிலைகளின் மீன் விற்பனையால் கிடைக்கும் வருவாய்

ஏரிமீன் பாட்டம்: ஏரிமீன் காசு பார்க்க

ஏரிமீன் விலைப்பாட்டம்: ஏரிமீன் காசு பார்க்க

ஏரிமுதல்: வைக்கப்பட்ட நிலத்தையோ பொருளையோ தொடாமல் அதன் வருமானத்தைக்கொண்டே ஏரியின் பராமரிப்பைச் செய்ய வேண்டிய முதல்

ஏரிவாய்: ஏரியின் வடிகால் பக்கத்தில் புறவாயில் ஏரிக்கோப்புபோல் அமைந்த நிலம்

ஏரிவாரியம்: ஏரியின் பராமரிப்புக்காக நிறுவப்பட்ட சபை

ஏலவரிசி: ஏலக்காயின் உள்ளே இருக்கும் அரிசி

ஏற்றம்: அதிகப்படி, மிகுதி

ஏற்றக் குறைத்தல்: மிகுதியும் குறைவும்; உயர்வும் தாழ்வும்

ஏற்றுதல்: குடியேற்றுதல்; ஸ்தாபித்தல்

ஏற்றுதல்: அதிகப்படுத்தல்; மேற்கொள்ளுதல்; கூட்டுதல்

ஏறுசாத்து: கோயில் உற்சவ காலத்தில் கொடி ஏற்றிச் செய்யும் விசேஷ பூசை; துவஜாரோஹணம்; வாகனத்தில் ஏறும்போது செய்யும் மரியாதை

ஏறுசாத்து; ஏற்றுமதிச் சரக்கு; ஏற்றுமதி வியாபாரத்தில் ஈடுபடுவோர்

ஐஞ்சுகணத்தார் : ஐம் பெருங் குழுவே போலும்
ஐந்தலை மணி : ஐந்து தனி மணிகளுடைய கொத்துமணி
ஐயன்பாத்தி : ஐயனார் கோயிலுக்கு விட்ட மானியம்

ஒட்டு : ஒப்புக் கொள்ளுதல் ; உடன்படிக்கை
ஒட்டுக்காசு : ஒப்புக் கொண்ட காசு ; உடன்படிக்கையின்படி செலுத்த வேண்டிய தொகை
ஒடம்படி : உடன்படிக்கை
ஒடுக்குதல் : பண்டாரத்தில் சேர்த்தல்
ஒப்புமுத்து : நல்ல உருவம் அமைந்த முத்து
ஒருதுடை : ஒருதடவை ; ஒருதரம்
ஒரு பூ : ஒரு போகம்
ஒளிவண்ணாற் பாறை : துணி வெளுப்போர் இறுக்கும் வரி
ஒழிவின்றி : நீக்கல் இன்றி, உட்பட
ஒழுக்கவி : கோயிலில் நாள்தோறும் படைக்கும் சமைத்த உணவு
ஒழுகு : நிலத்தின் வரலாறு குறிக்கும் கணக்கு

ஓடாணி : ஆபரணத்திலே மாட்டுவதற்கான ஆணி
ஓடு : செங்கல் ; சாப்பிடுவதற்கான மண்பாண்டம்
ஓத்து : அதிகாரம் ; உரிமை
ஓரணி : இரட்டை
ஓலக்கம் : அத்தாணிக் காட்சி சபை கூடுதல்
ஓலக்க மண்டபம் : அத்தாணி மண்டபம் ; சபா மண்டபம்
ஓலை : உத்தரவு ; அரசன் உத்தரவு
ஓலைச்சட்டம், ஓலைச்சம்பளம், ஓலைச்சம்மாதம் : ஓலை எழுதும் அதிகாரிகளுக்குக் கொடுக்கவேண்டிய வர்த்தனை
ஓலைச் சாதனம் : ஓலையில் எழுதிய பத்திரம்
ஓலை நாயகம் : அரசன் இடும் உத்தரவுகளை உரியவர்களுக்கு எழுத்து மூலம் அறிவிக்கும் அரசாங்கத்துறையின் தலைமை அதிகாரி
ஓலையெழுத்து : இராயசம்

கங்காணி : கண்காணி பார்க்க
கங்கில் : காளத்தின் ஓர் உறுப்பு
கச்சாத்து : கைச்சாத்து பார்க்க
கச்சுகோரம் : பாத்திர வகை ; கச்சோலம், கைச்சோலம் எனப்பெறுவனவும் அதுவே போலும்

கசரை : காலேயரைக்கால் பலம்

கசு : கால் பலம்

கட்டணம் : குறிப்பிட்ட வகுப்பினர் சிலர் அவ்வப்போது செலுத்தும் வரிபோன்றது

கட்டளை : கோயிலில் ஒரு விசேஷம் குறித்து ஏற்படுத்தப் பெறும் தர்மம்

கட்டாயம் : (கட்டு + ஆயம்) மொத்தமாக நிர்ணயிக்கப்பெற்ற வரி; அன்றி, நிர்ப்பந்தத்தால் இறுக்கவேண்டிய வரியைக் குறிப்பதாகவும் கொள்வர்

கட்டியாணம் : முன்னாளில் வழங்கிவந்த ஒரு நாணயம்; வராகனுக்குச் சமம் என்பர்

கட்டில் : ஆசனம்; (அரசுக்கட்டில்) சிங்காதனம்; படுக்கை

கட்டிலெய்துதல், கட்டிலேறுதல் : சிங்காதனம் ஏறுதல்; மணவினை

கட்டுக்குத்தகை : மொத்தமாக இறுக்கவேண்டிய குத்தகை; பெரும் பாலும் நீண்ட காலம் நீடிக்கும்

கட்டுமுக்கை : கோயிலுக்கு உரிய கடமைகளில் ஒன்று; அறுவடை யிலே கட்டுக்கு மூன்று கை வீதம் அரிகளை கொடுப்பதுபோலும்; அரிமுக்கை எனப் பெறுவதும் இதுவே எனலாம்

கட்டுவாங்கம் : மழு; பல்லவர்களுடைய கொடியில் காணும் இலச்சினை

கடகம் : படைவீடு; அரண்வலி கொண்ட கோட்டை

கடமை : அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டிய வரிகளைப் பொது வாகக் குறிக்கும் சொல்

கடமை காரியம் : அரசாங்கத்தின் நிர்வாக அலுவல்

கடமைக்கால் : அரசாங்கத்தார் நிர்ணயித்த அளவு மரக்கால்

கடமைப்பற்று : மேல்வாரத்தை உரியவர்க்குப் பணமாகச் செலுத் தும் கிராமம்

கடவ : கடமையாவதாகவும்

கடவன் : கடமைப்பட்டவன்

கடிகை : பூர்வாங்கக் கல்வி பெற்றவர்களுக்கு மேலும் கல்வி புகட்டும் உயர்தர வித்தியாஸ்தானம்

கடிகை மத்தியஸ்தன் : கடிகையிலே பயிற்சிபெற்று அங்கீகாரம் பெற்ற மத்தியஸ்தன்; பெரும்பாலும் ஊர்ச்சபைத் தலைவன்

கடிகை மாராயன் : தலைமை வாத்தியக் காரன்; முன்னாளில் அரசர் வழங்கிவந்த பட்டம்

கடிகையார் : கடிகை என்னும் நிலயத்தைச் சேர்ந்தவர்

கடிகையார் : அரசன் ஆணையைப் பறையறைந்து அறிவிப்போர்.

கடைக்காட்சி : கண்காணித்தல்

கடைக் கூட்டல் : முடிவுகட்டி வசூலித்தல் (பொலியூட்டுப் பொன் கடைக்கூட்ட வந்தார்க்கு நிசதி இரண்டு சோறு கொடுப்போமானோம்)

கடைக்கூட்டு : காரிய நிருவாகம்

கடைக்கூட்டிலக்கை : கடைக்கூட்டுவார் வசிப்பதற்கான இடம்

கடைக் கூட்டுத் தானத்தார் : கோயில் அதிகாரிகள்

கடை கூட்டு[த்*] தானத்தார் : நானாதேசி வியாபாரிகளைக் குறிப்பிடும் பெயர்களுள் ஒன்று; அவர்களிலே ஒரு பிரிவினர்போலும்

கடைத் தொழில் : பதக்கத்தில் ஒருபாகம், கடைசல் பிடிக்கப்பட்டது போலும்

கடைநீர் : கடைசியாக உள்ள நிலத்துக்குப் பாயும் தண்ணீர்

கடைப்பாட்டம் : அங்காடிப் பாட்டம் எனக் கொள்வர்; கடைசித் தரமான வரியையும் குறிக்கும்; கடைப்பூ எனவும் ஆகும்

கடைப் பூ : கடைசியான மூன்றும் போகம்

கடையடைக்காய் : விற்பனைக்குக் கொணர்ந்த பாக்கின் மீது இறுக்கும் வரி போலும்

கடையிறை : கடைசித்தரமான, அதாவது மிகவும் குறைவான வரி; (வருஷ) முடிவாகக் கொடுக்கும் வரியையும் குறிக்கும் போலும்; கடைப்பாட்டம் எனவும் கொள்வர்

கடையீடு : அரசனது முடிவான உத்தரவு; கீழ் அதிகாரிகளின் உத்தரவும் ஆகும்

கடையூறு : முடிவாக வரும் தடை; முடியாத தடை

கண் காட்டுவான் : குருடருக்கு வழிகாட்டுபவன்

கண்காணி : மேற்பார்வை; மேல் விசாரணை செய்வோன்; மேற்பார்வை செய்வதற்காக இறுக்கும் வரி

கண்காணிக் கணக்கர் முதல் : கண் காணிப்போர் செலவுக்காக இடும் முதல்

கண்காணி நாயகம் : மேற்பார்வை யிடுவோர் தலைமை உத்தியோகம்

கண்காணிமாநெல்லு: மேற்பார்வையிடுவோருக்கு நெல்லாக இறுப்பது

கண்டகம் : வேலி, 'ஏக்கரா' போன்ற நில அளவு

கண்டகசோதனை : துஷ்ட நிக்கிரகம்; குற்றம் புரிபவர்களைத் தண்டித்தல் (ஜடிலவர்மன் பராந்தக பாண்டியனுடைய ஆனைமங்கலம் செப்பேடுகளையும் கௌடில்யரது அர்த்த சாஸ்திரத்தையும் பார்க்க)

கண்டத்துடர், கண்டநாண் : கழுத்தணிவகை
கண்டன் : வீரம் மிகுந்தவன்
கண்டப்படை : கட்டடத்தின் அதிஷ்டானத்தில் அடிப்படை
கண்டம் : முகமண்டபப் பகுதி ; அதிஷ்டானத்தின் ஒரு பாகம்
கண்டழிவு : எதிர்பாராத செலவு
கண்டு : கழுத்தணியான மாலையில் பதக்கம் போன்ற ஓர் உறுப்பு
கண்டுழவு : அரசனது சொந்த நிலம்
கண்ணாலக் காணம் : கல்யாணத்துக்காகச் செலுத்தும் வரி; கல்லாணக் காணம், கல்லால காணம் எனவும் குறிக்கப் பெறும்
கண்ணாடி : முகம் பார்க்கும் கண்ணாடிக்கான வரி ; முகம் பார்வை என்றும் காண்பது; பரத்தையரிடமிருந்து வசூலிக்கப் பெற்றது போலும் ; கன்னட சாசனங்களில் பெதபினுகு (அதாவது மேனி மினுக்குபவள்) என்று காணப் பெறுவதை ஒப்புநோக்குக
கண்ணாறு : பாசன வாய்க்கால்
கண்ணிட்டுக்காணம் : கண்காணிப்போருக்குக் கொடுக்க வேண்டிய தொகைபோலும் (கரிசலாங்கண்ணி என்னும் மருந்துச்செடியைப் பயிரிடுவதற்காகச் செலுத்தும் வரியெனவும் இதைக் கொள்வர்)
கண்மலர் : விக்கிரகங்களுக்கு அணியும் விழிமலர் போன்ற ஆபரணம்
கண்மாளர் : கம்மாளர்
கணக்கக்காணி : கிராமக் கணக்கர்களுக்கு விடும் மானிய நிலம்
கணக்கப்பேறு : கிராமக் கணக்கருக்கு நெல்லாக இறுப்பது
கணகன் : கணக்குப் பிள்ளை
கணப்பெருமக்கள் : ஊர்க்காரிய நிர்வாகிகள்
கணபோகம் : அவர் அவர் தனித் தனிப் பகுதிகளை அனுபவிக்காமல் முழுவதையும் கூட்டாக அனுபவித்து மொத்தத்தில் அவர் அவருக்கு உரிய பங்கைப் பெறுதல்.
கணாசாரம் : பிச்சை ஏற்போர் இறுக்கும் வரி
கணிமுற்றூட்டு : கணத்தார் அனுவிப்பதாற்காக ஸர்வமானியமாக விடப்பெற்ற கிராமம் ; கணபோகத்தில் உள்ள முற்றூட்டுக் கிராமம் ; (ஜோஸ்யர்களுக்கு விடும் மானியமாகக் கருதுவர் சிலர்)
கத்திக்காணம் : ஆயுத வரி ; ஆயுதம் தரிப்பதற்கா அல்லது தயாரிப்பதற்கா என்பது விளங்கவில்லை
கதலிகை : ஓட்டியாணம் போன்ற ஆபரணத்தின் ஓர் உறுப்பு
கதிர்க்காணம் : கதிராகக் கொடுக்கும் வரி
கந்மி (கருமி) : அதிகாரி ; பணியாட்களுக்கு மேற்பட்ட பதவி கொண்டவர்

கப்பம் : தொழிலாளர்கள் சிலர் அவ்வக்காலங்களில் செலுத்துவது
கம்பி : காதணிவகை
கம்மாணர் : கம்மாளர்
கர்ணம் : நாட்டு நிர்வாகத்திலே உள்ள குற்றங்குறைகளைக் காணும் பெரிய அதிகாரி (விஜயநகர ஆட்சிக் காலத்தில் வழக்கில் இருந்தது)
கர்த்தாக்கள் : மதுரை நாயக்க மன்னர்களைக் குறிப்பிட்ட பட்டப் பெயர்
கர்ப்பூரவிலை : கோவில் நிலங்களைப் பயிரிட்டு அனுபவிப்பதற்காக அவற்றின் வரியையும் சேர்ந்து மொத்தமாகக் கொடுக்கும் பணம்.
கரகிராமம் : அரசாங்கத்துக்கு வரி செலுத்தும் (ரயத்துவாரி) தனிக் கிராமம்
கரடிகை : ஓர் ஆபரண உறுப்பு
கரடு : ஒருவகை முத்து
கரண்டிகை : மகுடத்தின் ஒருவகை ; மகுடத்தின் ஒருபாகம்
கரண்டிகைச்சேப்பு : சுண்ணும்புச் செப்பு
கரணம் : பத்திரம் ; சீட்டு ; கணக்கன்
கரணம் : வழக்குகளை விசாரிக்கும் நியாய சபைகளுள் ஒருவகை ; அதிகரணம் என்பதற்குத் தாழ்ந்தது என்பர்
கரணத்தார் : கரணம் என்னும் நியாய சபையின் உறுப்பினர்
கரணிக்கசோடி : கணக்கர் வரி
கரக்ஷேத்திரம் : வீடு கட்டக் கூடிய மனை
கரி : பயிர் தீய்ந்து போனது
கரிவி (கருவி) : நாவிதர் கத்தி
கரு : மண்மேடு
கருக்கு : தங்கம் வெள்ளி முதலிய பாத்திரங்களில் பொறித்த சித்திரம்
கருஞ்சேய் : புன்செய் நிலத்திலே முன்னால் பயிரிடாத நிலம் ; கழனிப் புன்செயினின்றும் வேறான காட்டுப் புன்சேய்
கருஞ்சேய் : நன்செய் எனவும் கொள்வர்
கருவி பணம் : ஆயுதங்களின் மீது வரி ; நாவிதர் செலுத்த வேண்டியது போலும்
கருவூலவரி : பொக்கிஷத்தின் காவலுக்கும் விலையுயர்ந்த பொருளை அதிலே வைத்துப் பாதுகாத்தற்கும் இறுக்கும் வரி
கரை : பங்கு, விகிதாசாரம்
கரைக்கூறு செய்வார் : கிராமங்களிலே அவர் அவர் அனுபவிக்க வேண்டிய நிலங்களைப் பிரித்துக் கொடுக்கும் பொறுப்பு வாய்ந்தவர்

கரைநிலம் : அவ்வப்போது ஊராரிடம் மாற்றி மாற்றி அனுபோகத்துக்கு கூறுபோட்டு ஒப்படைக்கப்படும் நிலம்

கரையீடு : அடைமானம்

கல்லறை : பொக்கிஷங்களை வைப்பதற்குப் பூமியின்கீழ்க் கட்டப்பெற்றுள்ள இரகசிய அறை

கல்லாணக் காணம், கல்லாலகாணம் : கண்ணாலக் காணம் பார்க்க

கல்யாணத் திருமேனியாதல் : அரோகதிடகாத்திர ராதல்

கல்லித்திருத்துதல் : மேடான நிலத்தை வெட்டித்திருத்துதல்

கல்லூரி : கோயிலில் சுற்றுத் தாழ்வாரம்; திருச்சுற்றுலை

கலசப்பானை : தூப கலசம் : தூபக் கால்

கலசமாட்டுதல் : கலசத்தால் திருமஞ்சனம் செய்வித்தல்; கும்பாபிஷேகம்

கலபை, கலாபம் : கலகம்

கலம் : சாப்பிடும் பாத்திரம்

கலம் : பத்திரம்; ஆதாவுச் சீட்டு

கலம், கலன் : வில்லங்கம்

கலனை : தொழிலாளர்கள்; அவர்களுடைய சங்கம்

கலிங்கவாரியம் : கலிங்கு, அணை போன்றவற்றைக் கவனிப்பதற்காகக் கிராமச் சபையாரால் அமைக்கப்பட்ட குழு

கவர் : ஆற்றுக் காலில் பிரியும் கிளை

கழஞ்சு : முன்னாளில் வழங்கிய பொன்நாணயம்; அதன் எடையையும் குறிக்கும்

கழனிக்குளம் : நன்செய் நடுவில் உள்ள குளம்

கழனிப் புன்செய் : காட்டுப் புன்செயினின்றும் வேறான புன்செய் நிலம்

கழனிவாரியம், கழனிவாரியப் பெருமக்கள் : விவசாயத்தைக் கவனிக்கும் ஊர்ச் சபையார்

கழைந்து : கழஞ்சு என்பதன் வேறு வடிவம்

களர்ப்பாழ் : உப்புப் படிந்த பாழ் நிலம்

களரி : விசாரணை ஸ்தலம்; சபை; கச்சேரி

களாவம் : இடையணி; ஒட்டியாணம் போன்றது

கற்கவி : கதவுநிலையின் மேலே இடப்பட்டிருக்கும் பாவுகல்

கற்காரம் : கருங்கல்லால் ஆன கட்டடம்

கற்கிடை : கல்லால் ஆன வட்டம்; செங்கல் சூளை

கற்படுத்தல் : கல்லால் தளம் போடுதல்

கற்பதித்தான் : சிலாசாசனம் செய்தவன்

கரணதண்டம்: கரணம் என்னும் நியாய சபையால் விதிக்கப் பெற்று அதற்குச் செலுத்தவேண்டிய அபராதத் தொகை

கற்பற்று: மாணிக்கத்தின் குற்றம்

கற்பித்தல்: பிரதிஷ்டை செய்தல்

கற்றளி: கற் கோயில்

கன்று மேய் பாழ்: கிராமத்தில் கால்நடை மேய்வதற்கான நிலம்

கன்னக்காணன்: கன்னன்

கன்ன புஷ்பம்: மலர் போன்றதும் காதில் அணிவதுமான ஆபரணம்

கன்னடு, கல்நாடு: இறந்தவர் ஞாபகார்த்தமாகக் கல் எழுப்புதல்

கன்னரிறை: கன்னரத் தொழில் செய்வோர் செலுத்தும் வரி

காகபிந்து: கரும்புள்ளி

காகவிருந்தம்: வைரத்தின் வகை

காசாயக்குடி: ஊர்ப்பொதுவேலை செய்வதென்னும் நிபந்தனையின் மேல் கிராம மனைக்கட்டில் குடியிருக்கும் குடிமக்கள்

காசாயம்: காசாக இறுக்கும் வரிவகைகளின் பொதுப்பெயர்; காசாய வர்க்கம் என்றும், காசு வர்க்கம் என்றும் குறிக்கப்பெறும்

காசுகடமை: ரொக்கமாக இறுக்கும் வரி

காசுகல்: தங்கம் முதலியவற்றை நிறுக்கும் எடை

காசுகொள்ளா இறையிலி: ஒருவகை வரியும் இல்லாமல் அளிக்கப் பெற்ற நிலம்; வரிநீக்கிய நிலத்துக்குப் பின்னால் இறுக்கவேண்டிய வரிக்காக மொத்தமாகச்சேர்த்து முதல் கொள்ளாத நிலத்தையும் குறிக்கும்

காசு கொள்ளா ஊர்க்கீழ் இறையிலி: எந்த வரியும் இல்லாமல் அளிக்கப் பெற்ற நிலம்; அந்த வரியை அரசாங்கம் நீக்காமல் கிராமசபையே இழித்து அந்த வரிக்குறையைச் சபையாரே ஏற்பதாகும்

காட்சி: காணிக்கை; கையுறை

காட்சி எருதுக் காசு: நல்லெருது பார்க்க

காட்டப் பெறுதல்: ஆதாரமாக எடுத்துக்காட்டுவது; பாத்தியதை கொண்டாடுதல்

காட்டாள் காசு: முன்னாளில் வழங்கிய வரிவகை; காடுகாவல் என்று வழங்கியது இதுவேபோலும்

காடுகாவல்: காடுகளைப் பராமரிப்பதற்காக இறுக்கும் வரி [காடு என்னும் சொல் இடுகாட்டையும் குறிக்கும்]

காடுகோள்: விளைநிலம் காடுமண்டிப்போதல்

காடுதரிசு: செடிகள் முளைத்த தரிசு நிலம்

காணம் : முன்னாளில் வழங்கிய நிறை; ஒரு நாணயம்; பாகம் அல்லது பங்கு
காணி : பரம்பரை உரிமை; அநுபவிக்கும் உரிமை; காணியாட்சி பார்க்க
காணி : ஒரு நிறை
காணிக்கடன் : நிலவரி; காணிக்கூலி என்பதும் இதுவே போலும்
காணிக்கை : அரசனுக்கும் சில அதிகாரிகளுக்கும் செலுத்தவேண்டிய கையுறை
காணிப்பற்று : ஒருவருக்கு உரிமை உள்ள கிராமம் அல்லது நிலம்
காணிப்பிடிபாடு : நிலச்சாகுபடிக்கான உரிமைப் பத்திரம்
காணிமாறுதல் : உரிமை நிலத்தை இழத்தல்
காணியாண்மை, காணியாட்சி : பரம்பரையாக அநுபவிக்கும் உரிமை
காணிவிலை : உரிமையை விற்றுக் கொடுத்தல்
காணிவெட்டி : முன்னாளில் வழங்கி வந்த வரிவகைகளுள் ஒன்று; வெட்டி என்பதன் ஒரு பிரிவு போலும்; விளை நிலங்களிலே குழி வெட்டுவது போன்றதாக இருக்கலாம்
காந்தருவி : பாடுபவள்
காமக்காட்டம் : சிவன் கோயிலில் பார்வதிக்கெனத் தனியாக அமைந்துள்ள அம்மன் சந்நிதி
காமம் : கிராமம்; காமக்காணி, காமக்கிழான் போன்று சேர்ந்துவருவதிலே காண்க
கார் : ஐப்பசி-கார்த்திகையில் அறுவடையாகும் நெல்; மழைக்காலத்தில் பயிர் செய்யும் நெல்; அதன் அறுவடைக்காலம்
கார்த்திகைக்காசு, கார்த்திகைக்காணிக்கை, கார்த்திகைப்பச்சை, கார்த்திகையரிசி : கார்த்திகையில் அறுவடைக் காலத்தில் அளிப்பது; ஆடிப்பச்சை பார்க்க
கார்மறு நிலம் : இருபோக சாகுபடி உள்ள நிலம்
காரணவன் : கணக்கன்; காரணிகன், கரணத்தான் எனவும் பெறுவன்
காரளத்தல் : நெல் அளத்தல்
காராண்கிழமை, காராண்மை : பயிரிடும் உரிமை; அதற்கான வரி
காரணிக்கஜோடி : கணக்கர் செலுத்தும் குறைந்த வரி
காரிய கர்த்தா, காரியத்துக்குக் கடவர் : ஒருவருக்காகக் காரியத்தை நிர்வகிப்போர்; 'ஏஜண்ட்'
காரியவாராய்ச்சி, காரிய வாராய்ச்சிப்பேறு : தணிக்கையாளர்க்கு இறுக்கும் வரி; ஆராய்ச்சி பார்க்க

**கால்படை :** *சுவரின் அடிப்பகுதி*

**கால்வடம் :** *கால்அணி வகை*

**காலத்தேவை :** *முன்னாளில் வழங்கிவந்த வரிவகைகளுள் ஒன்று; என்னவென்பது விளங்கவில்லை*

**காலப் பொல்லாங்கு :** கெட்டகாலம்; காலதோஷம் எனவும் பெறும்

**கால் அளவு கூலி, காலளவுப்பாட்டம் :** *நிறுத்தல் அளவுக்கு விதித்து வந்த வரி*

**கால்அளவு கோல் கூலி :** *நில அளவுக்கு விதித்துவந்த வரி*

**காலுக்கழுத்து :** *கணைக்கால்*

**காவணம் :** *சோலை ; நந்தவனம்*

**காவல் கட்டணம் :** *தலையாரி வரி*

**காவிதி :** *முன்னாளில் அரசர் அளித்துவந்த ஒரு பட்டம்; கணக்கர்*

**காவிதிமை :** *கணக்கு வேலை*

**காளி கணத்தார் :** *காளிகோயில் நிர்வாகத்தைக் கவனிக்கும் சபையார்*

**காஹளம், காஹளி :** *எக்காளம் போன்ற வாத்தியம்*

**கிடாரம் :** *கொப்பரை*

**கிடை :** *வேதம் ஓதும் குழாம் ; வேத பாடசாலை*

**கிடைப்புறம் :** *வேதம் ஓதுவிப்பதற்காக விட்டப்பட்ட நிலம் அல்லது கிராமம்*

**கிம்புரிமுகம் :** *ஆபரண முகப்பின் ஓர் உறுப்பு*

**கிரமவித்தன் :** *வேதத்தின் கிரமபாடத்தில் வல்ல பிராமணன்*

**கிராம கண்டகர் :** *கிராமத்தின் நலனுக்கு விரோதிகள்* ; கிராமத் துரோகிகள் எனவும் பெறுவர்

**கிருகுலம் :** *சில்லறையாக விற்பனை செய்யும் பொருள்களின் மீது இறுக்கும் வரி அல்லது சுங்கம்*; கிருகூல விசேஷம் *எனவும் பெறும்*; கூலம் என்பதையும் பார்க்க

**கிளிக்கத்தி :** *கத்திவகை*

**கீழ்க்கலனை :** *கிராமத்தொழிலாளி*

**கீழ்க்குமிழி :** *ஒரு வாய்க்காலின் நீர் அதன் குறுக்கே செல்லும் மற்றொரு வாய்க்காலின் கீழாகச் செல்லும்படி அமைந்த கட்டடவேலை*

**கீழ்ப்பாதி :** *குடிவாரம்*

**கீழிறை :** *சிறு வரிகள் ; கடைசித் தரங்களில் இறுக்கும் வரிகளும் ஆகும்*

**கீழிறைப்பாட்டம் :** *மீன்பாட்டம் போன்ற சிறு வரிகள்*

கீழீடு : கீழ்க்குத்தகை ; சார்ந்து நிற்றல் ; மற்றொன்றுக்குக் கீழ்ப் பட்டது

கீற்றுவரி : கீற்று வேய்ந்த குடிசைகளுக்கான வரி

குகை : துறவிகள் வாழும் மடம்

குச்சி : குச்சில், தர்ப்பை போலும் (குடமும் குச்சியும் கொண்டு கோயில் புகுவான்)

குசக்காணம் : குயவர் தாங்கள் செய்யும் பானைகளுக்குக் கொடுக்க வேண்டிய தொழில் வரி ; திரிகைஆயம் பார்க்க

குடதேவர் : அகஸ்தியர்

குடநாழி : ஒரு குடத்துக்கு ஒரு நாழி விதம் இறுக்கும் வரி

குடப்படை : உட்கோயிலின் அடி மட்டத்தில் உள்ள கட்டடப்பகுதி

குடமுழா : குடம் போன்ற வடிவுடையதாக உள்ள பெரிய முழவு வாத்தியம்

குடவர் : விஷ்ணு கோயிலில் பணி புரிவோருள் ஒரு பிரிவினர் ; கிருஷ் ணனை வழிபடுவோர் போலும் ; மாடு மேய்ப்பவராகவும் இருத்தல் கூடும்; கோடவர் எனவும் பெறுவர்

குடவறை : நிலவறை ; கோபுரத்தில் உள்ள சிற்றறை

குடவிளக்கு : பூசை வேளையில் குடம் போன்ற விளக்கு எடுத்து நாட்டியம் ஆடிக்கொண்டே உருத்திர கணிகையர் காட்டுவது

குடவோலை : குடத்தில் இட்ட ஓலைச்சீட்டு ; அவ்விதம் இட்டுச் சபையா ரைத் தேர்ந்தெடுத்தல்

குடிக்காசு : குடிமக்கள் கொடுக்கும் வரி ; குடிக்காணம் ; குடிப்பணம் என்பனவும் இதுவே போலும்

குடிஞைக்கல் : நிர்ணயமான எடைக்கல் ; குடிநற்கல் எனவும்படும்

குடிநீங்கா இறையிலி : ஏற்கெனவே உள்ள குடிகளையும் அவர் களுடைய உரிமையையும் நீக்காமல், மேல் வாரத்தை மட்டும் அநுப விப்பதாக வரி நீக்கிக் கொடுக்கப்பட்ட கிராமம் அல்லது நிலம்

குடிநீங்காத் திருவிடையாட்டம் : ஏற்கெனவே உள்ள குடிகளை நீக்கா மல் விஷ்ணு கோயிலுக்கு அளிக்கப்பெற்ற கிராமம்

குடிநீங்காத் தேவதானம் : ஏற்கெனவே உள்ள குடிகளை நீக்காமல் கோயிலுக்கு அளிக்கப்பெற்ற கிராமம்

குடிநீங்கி(ய)தேவதானம் : பழங்குடிகளை நீக்கிக் கோயிலுக்கு அளித்த நிலம் அல்லது கிராமம் ; இதனால் கோயிலே மேல்வாரம் கீழ்வாரம் ஆகிய இரண்டையும் அநுபவிக்கமுடியும்

**குடிமை :** நிலவரி நீங்கலாக, அரசாங்கத்துக்கு இறுக்கும் மற்ற வரிகளைப் பொதுவாகக் குறிக்கும் சொல் [நாட்டின் குடியாக வாழ்வதற்கு இறுக்கும் வரிப்பணம்]

**குடிமைப்பாடு :** ஊழியம்; ஊர்ப்பொதுவேலை

**குடியிருக்கை :** கிராமத்தில் குடிகள் வாழும் இடம்

**குடியிலார் :** குடிகள்

**குடிலை :** குடி நற்கல்; நிர்ணயிக்கப்பெற்ற நிறையையுடைய எடைக் கல்

**குடும்பு :** ஊரின் பகுதி; அதனால் குடும்பு வாரியம்: ஊரிலே அந்த அந்தப் பகுதிக்கான சபைக்குழாம்

**குண்டு :** உருண்டையான பொன் மணி

**குண்டு :** குதிரை

**குண்டிகைக்கல் :** சமணர் கோயில்களுக்குச் சொந்தமான பள்ளிச் சந்த நிலங்களின் எல்லையைக் குறிக்கக் கமண்டலத்தின் உருப் பொறித்து நாட்டும் கல்

**குணவியது :** மேன்மையானது

**குணவியன் :** மாணிக்க வகைகளுள் ஒன்று

**குத்தலரிசி :** குற்றித்தீட்டிய அரிசி

**குத்துக்கால் :** தடை

**குதம்பை :** காதணி வகை

**குதிரைச் சேவகன் :** குதிரை வீரன்

**குதிரைப்பந்தி :** குதிரை கட்டும் இடம்; அதற்கான வரி; குதிரை வரி, குதிரைமாற்று, குதிரைவிலாடம் எனவும் பெறும்

**குதிரைமாற்றம் :** முன்னாளில் வழங்கிவந்த ஒரு நாணயம்; குதிரை உருவம் பொறிக்கப்பட்டது போலும்

**குப்பி வயிரம் :** வைர வகை

**குமரகச்சாணம் :** முன்னாளில் வழங்கி வந்த வரிவகை; முருகக் கடவுளின் கோயிலுக்காக இறுக்கவேண்டிய (ஒரு கட்டியாணம்) பொன் வரி எனக் கொள்ளலாம்

**குமிழி :** நீர் ஊற்று; மதகு; ஒரு வாய்க்காலின் நீர் அதன் குறுக்கே செல்லும் மற்றொரு காலின் கீழாகச் செல்லும்படி அமைந்த கட்டிடவேலை

**குமாரவர்க்கம் :** அரசாளும் ராஜகுடும்பத்துக் குமாரர்களாகத் தங்களைக் கருதும் சிற்றரசர்கள்

**குமுதப்படை :** கர்ப்பகிருக மதிலின் அடிப்பாகம்

**குரத்திகள் :** சமண மதத்திலே ஆசாரிய பதவி வகிக்கும் பெண்

குரவடிகள் : சமண மதத்தின் ஆசாரியர்
குரப்பு வெட்டி : பழையநாள் வரிவகை ; வெட்டி என்னும் இனத்தைச் சேர்ந்தது ; பாசனக்கால்களை அணைத்து நீர் திருப்பும் வெட்டிவேலை போலும்
குரால் பசு, குராற் பசு : கபிலை நிறப் பசு
குலை : எழுப்பிய கரை; வரம்பு
குலைவெட்டி : நீர்க்கால்களின் கரைகளை வெட்டிச் சீர்செய்வது
குழிவரியேற்றுதல் : நிலத்துக்கு வரி விதித்தல்
குழிவு : மாணிக்கக் குற்றங்களுள் ஒன்று
குளக்கீழ் : அந்தக் குளத்தின் பாய்ச்சலில் உள்ள பூமி
குளப்பிரமாணம் : குளம், அதனை அநுபவிக்கும் உரிமை ஆகியவற்றின் விற்பனை
குளவடை : ஏரி குளங்களை அனுபவிக்கும் உரிமை ; அவற்றிலிருந்து கிடைக்கும் வருவாய்களையும் குறிக்கும்
குளிக்கும் இடம் : அபிஷேக மண்டபம் பார்க்க
குளிகை : முன்னாளில் வழங்கி வந்த நாணயம் ; கோளகை எனவும் பெறும் ; உருவத்தைக் கொண்டு பெயரிடப்பட்டதுபோலும்
குளிர்ந்த நீர் : இரத்தினங்களிலுள்ள நீரோட்டம்
குற்றத்தண்டம் : செய்த குற்றத்துக்குரிய தண்டனை ; அதற்காகச் செலுத்தும் பணம்
குற்றுநெல் : நெல் குற்றுவதற்கு உரிய கடமை
குற்றேற்றம் : சிறு ஏற்றம்
குறங்கு : சிறு வாய்க்கால்
குறி : கிராமச்சபை
குறு கூலி : நெல் குத்துவதற்கான கூலி
குறுணிப்பாடு : குறுணி நெல் விதைப்பாடுள்ள நிலம்
குறுமடல் : விபூதி வைக்கும் சிறிய மடல்
குறைவறுப்பு : அரண்மனைக்கு உபசாரமாக அனுப்பும் பண்டச்சுமை
குன்றி : குன்றுமணி, பொன் நிறுக்கும் எடை
குனிப்பம் : நாட்டிய வகை ; சந்திக்குனிப்பம் பார்க்க

கூத்தம்பலம் : அரண்மனை அல்லது கோயிலில் உள்ள நாடக அரங்கம்
கூலம் : தானிய வியாபாரம் ; தானியங்களுக்கு விதிக்கும் வரி
கூலிச்சேவகன் : கூலிப்படையாளன்
கூற்றரிசி : குற்றுநெல் பார்க்க ; கூற்று நெல்லு எனவும் பெறும்

**கூற்றன்வாய் :** *தலைமதகு*
**கூற்றுநெல்லு :** *கூற்றரிசி பார்க்க*
**கூறடைத்தல் :** *பகுதி பகுதியாகப் பிரித்து ஒப்படைத்தல்*
**கூறுசெய்வான் :** *காரியங்களை வகைசெய்து நிர்வகிப்பவன்*
**கூறுதல் :** *விலை கூறுதல் ; ஒருவன் தன் பொருளுக்கு நிச்சயித்த விலையைத் தெரிவிப்பதை முற்கூறுதல் என்றும், அதை வாங்குபவன் ஏற்றுக்கொள்வதைப் பிற்கூறுதல் என்றும் கொள்வர்*
**கூன் :** *பெரும்பாத்திரம் ; அதில் சமைத்த நிவேதனப் பொருள்*

**கெடுபாதை :** *சீர்கேடு அடைந்த பாதைகளைச் செப்பனிட்டு நல்ல நிலைமையில் வைத்திருக்கவேண்டிய கடமை*

**கேட்போர் :** *பாடம் கேட்போர் ; பாடம் சொல்லுவோர் ;* **சாத்திரர்** *பார்க்க*
**கேள்வி :** *அரசன் வாய்மொழியாக இடும் உத்தரவுகளைக்கேட்டு உரியவர்களுக்கு அனுப்பும் அதிகாரி ; நிர்வாக அதிகாரி*
**கேள்விமுதலி :** *அரசன் உத்தரவைப்பெறும் பொறுப்பு வாய்ந்த அரண்மனை அதிகாரி*
**கேள்விவரி :** *அரசன் உத்தரவுகளை எழுதும் வரிப் புத்தகம்*

**கைக் கணக்குமுதல் :** *விவரம் விளங்க வில்லை*
**கைக்கழுத்து :** *முன் கை ; மணிக்கட்டு*
**கைக்காறை :** *ஒரு வகைக் கையணி*
**கைக்கோள்ளுதல் :** *ஏற்று நிர்வாகித்தல்*
**கைக்கூலி :** *லஞ்சம்*
**கைக்கோளமுதலி :** *கைக்கோளரின் தலைவர்*
**கைக்கோளர் :** *தோள் வலி மிகுந்த காலாட்படையினர் ; கோயில் ஊழியர்களுள் ஒரு வகையினர் ; நெய்வோர் [அடவி என்ற சொல்லும் போர்ப் படையினரையும் நெய்வோரையும் குறிக்கும். போர் வீரர்களுக்கும் நெசவாளிக்கும் என்ன தொடர்பு என்பது விளங்க வில்லை. கைக்கோளர் என்ற சொல் கையால் உழைப்பவர் என்று பொருள்படும்]*
**கைங்கரியபரர் :** *கோயிலில் பணி விடை செய்வோர் ; உபயகாரர்*
**கைச்சாத்து :** *கையெழுத்திட்ட ரசீது*
**கைத்தடி :** *ஒப்பம் இடுவதற்குக் கையெழுத்துப் போடாமல் இடும் குறி ; தற்குறி*
**கைத்தீட்டு :** *கையெழுத்திட்ட உடன்படிக்கை ; சிறுகுறிப்பு*

கைப்போட்டு : கையில் அணியும் ஓர் ஆபரணம்
கைபிடி : கையிற்பெற்றுக்கொண்ட பொருள்
கைம்மாட்டாங்கு : தற்குறி; கைத்தடி பார்க்க
கையாளித்தல் : ஒப்படைத்தல்
கையாறு : கண்ணி வாய்க்கால்
கையீடு : பணம் செலுத்திய ரசீது
கையுருவிச்சுவர் : கைப்பிடிச்சுவர்
கையுறை : பெரியோர்களைக் காணச் செல்லும்போது அவர்களுக்கு அளிக்கும் காணிக்கை
கையெழுத்து : தீர்மானித்து எழுதிக் கொடுத்த பத்திரம்
கையெழுத்தோலை : எழுதிக்கொடுத்த பத்திரம் ; கடன் சீட்டு
கையேற்பு : பிச்சைக்காரர் வரி ; தெலுங்குச் சாசனங்களிலே காணு சாரம் என்று காண்பது ; முட்டி என்பதையும் பார்க்க
கைவட்டகை : பாத்திரவகை
கைவளர : பரவ
கைவாசி : சந்தை விற்பனைக்கு வந்த நெல் போன்ற பண்டங்களில் ஒரு கையெனக் கொள்ளும் உரிமை ; அள்ளு என்பதைப் பார்க்க
கைவிலை : அப்போதை விலை
கைவினைக்குடி : கைத்தொழில் செய்து வாழ்வோர் [கைஜீதம் என்னும் சொல் தெலுங்கு நாட்டுச் சாசனங்களிலே கூலிப்படையைக் குறிக்கும்]

கோக்குவாய் : ஆபரணத்திற் செருகும் பூட்டு
கோட்டகாரம் : நெல்களஞ்சியம் ; கொட்டாரம்
கோட்டி மத்தளம் : பெரிய மத்தளம்
கோட்டைக்கூலி : கொட்டையை ஆமணக்கு விதையெனக் கொள்ளலாம் ; ஆயினும் இது கோட்டைக்கூலியே போலும்
கோடவர் : கோயிற் கொத்துக்களுள் ஒரு பகுதியார் ; குடவர் எனவும் காணப்பெறும்
கோடி : அரைஞாண்
கோடிக்கடமை : கொடிவேலி என்றும் சித்திர மூலம் என்றும் வழங்கப் பெறும் மருந்துச் சரக்கைப் பயிரிடுவதற்கான வரியாகக் கொள்வர் ; எனினும் இது கோடிக்கடமையே யாகும் போலும் ; செங்கோடிக்காணம் என்பதையும் பார்க்க
கோடுக்கன் : மகன் (கொடுகு என்னும் தெலுங்குச் சொல் பார்க்க)
கோத்து : பிரிவு ; ஊழியர் வகை
கோதி : பிரசாதம் ; கோயிலில் நிவேதனத்துக்கான சோறு

கொழு : ஏர்க்கொழுவின் மீது இறுக்கும் வரி

கொழுந்து : மருக்கொழுந்து

கொழுவாரம் : பயிரிடுவோனுக்கு உரிய வாரம்

கொள் : சிறு நிறையளவு

கொள்கை : பாத்திரவகை; கொள்கலம் என்பதே போலும்

கொள்கை : விக்கிரகங்களுக்கு இடும் கவசம்

கொள்முறைப்பாடு : காணிக்கைபோல் கிரமமாகக் கொள்ளும் வரி

கொள்வரி : நெல்லாய வகை; வசூல் செய்வதற்கான செலவைச் சரிக்கட்டுவதற்குப்போலும்

கொற்றிலக்கை : கொற்றும் இலக்கையும்; அதாவது சோறும் தங்கும் இடமும்

கொற்று : உணவு

கோட்டகம் : பரந்து ஆழமான நீர்நிலை

கோட்டைக்கூலி : கோட்டையின் பராமரிப்புக்காக வசூலிக்கப்பெறும் வரி; கோட்டை மகமை எனவும் பெறும்

கோடம் : சிகரமாகச் செய்யப்பெற்ற கிரீடத்தின் பாகம்

கோப்பதவாரம் : அரசர்க்கு உரிய இறை

கோமளம் : மாணிக்க வகை

கோமுகம் : பசுவின் முகம்போல் செய்யப்பெற்ற நீர்விழும் வாய்

கோமுறை : அரசிறை

கோயில் கேள்வி : கோயில் காரியங்களை நிர்வகிப்பவன்

கோயில் வாசி : அரண்மனைக்கு உரிய சில் இறை

கோயில் வாரியம் : கோயில் காரியத்தை நிர்வகிப்பதற்காக ஊர்ச்சபையினர் அமைக்கும் குழு

கோயிற்கொத்து : அரண்மனை அல்லது கோயில் பணியாட்கள்

கோல் கூலி : அளவு கோலுக்கான வரி

கோல் நிறை கூலி : கோலால் நிறுத்து விற்கும் பொருள்கள் மீது வரி

கோவணவர் : கோயிலில், முக்கியமாக விஷ்ணு கோயிலில், ஊழியம் புரிந்தவர்களுள் ஒருவகையினர்; துறவிகள் போலும்

கோவிக்கல் : அரண்மனை

கோவை : முன்னாளில் வழங்கிய பொன் நாணயம்

கோளகை : குளிகை பார்க்க

கோனோலை : அரசன் உத்தரவு

**சக்கத்து :** முத்துவகை

**சக்கரக்கல் :** ஆழிக்கல் பார்க்க

**சக்கரக் குளிகை :** முன்னாளில் வழங்கிவந்த ஒரு நாணயம்; சக்கரப் பணம் என்பதும் இதுவே போலும்

**சக்கரகாணிக்கை :** குயவர் இறுக்கும் வரி; திரிகை ஆயம் எனவும் பெறும்

**சக்கரம் :** ஆஞ்ஞா சக்கரம்; அரசன் ஆணை; அந்த ஆணையை நிறைவேற்றும் அதிகாரி (சோழன சக்கரம்)

**சக்கரவாளம் :** உலகத்தைச் சூழ்ந்திருப்பதாகக் கருதப்படும் மலை

**சகரையாண்டு :** சகாப்தம்

**சங்கரப்பாடியார் :** செக்கார்; எண்ணெய் வியாபாரம் செய்வார்

**சஞ்சீவராயர் :** அனுமார்

**சட்டப்பெருமக்கள் :** சட்டர்களுக்குள்ளே நிறுவப்பெற்ற சபையின் உறுப்பினர்கள்

**சட்டம் :** மாணிக்க வகை

**சட்டர் :** பிரம்மசாரிகள் : கோயில், அதன் அங்கமான சாலை ஆகியவற்றை நிர்வகிப்போர்; சாத்திரர் என்பதையும் பார்க்க

**சட்டிச்சோறு :** கோயில் வேலைக்காரர்களுக்குக் கொடுக்கும் உரிமைப் பிரசாதம்

**சடங்கவி :** வேதத்துக்கு உரிய ஆறு அங்கங்களையும் அறிந்தவன்

**சண்டப்பிரசண்டர் :** விஷ்ணு கோயிலில் உள்ள துவாரபாலகர் இருவர்

**சண்டாளப்பேறு :** பழைய நாளில் வழங்கி வந்த கடமை வகை; சண்டாளர்களிடமிருந்தோ அவர்களுக்காகவோ வசூலிக்கப்பட்டது போலும்

**சண்டேசுரப் பெருவிலை :** சிவன் கோயில் நிலங்களை விற்கும்போது கொடுக்கப்படும் நிலவிலை; சிவனுடைய ஆதிதாசர் ஆன சண்டேசுரப்பெருமான் பெயரால் விற்கப்படுவது

**சண்டை :** செண்டை என்னும் வாத்திய வகை

**சண்பங்காறை :** தாலியின் உருவகை

**சத்திமுகம் :** அரசனது ஆணைப்பத்திரம்

**சத்தியஞான தரிசனிகள் :** சைவசமயத்தின் ஒரு பிரிவைச் சார்ந்தவர்; மெய்கண்டார் சந்தானத்தாரே போலும்

**சத்திமுற்றம் :** ஊரிலே சக்தியாகிய துர்க்கை போன்ற பெண் தெய்வத்துக்குத் தனியாக எழுப்பப்பெற்ற கோயில்

**சதாசேர்வை, சதாசேவை :** நித்திய ஊழியம்

**சதிரம் :** சதுரம் என்பதன் வேறு வடிவம்

**சதிரவாசகன் :** கெட்டிக்காரத்தனமாக, சதுரமாகப் பேசுபவன்

**சதுப்பேதிமங்கலம், சருப்பேதிமங்கலம், சதுர்வேதிமங்கலம் :** (நாலு) வேதம் தெரிந்த பிராமணர்களின் குடியிருப்பான கிராமம்; பெரும் பாலும் இறையிலியாக வழங்கப்பட்டிருக்கும்

**சதுர்வேதி பட்டத் தானப் பெருமக்கள் :** பிராமணர் குடியிருப்புக் கிரா மங்களில் வேதம் வல்லார்களைக் கொண்ட சபை

**சதுராலை :** ஊரிலே சபை கூடும் இடம்; நாலுகால் மண்டபம்

**சந்தானம் :** சந்ததி; சிஷ்ய பரம்பரை

**சந்ததிப்பிரவேசம் :** தலைமுறை வழியாக

**சந்தானச்சாபம் :** சந்ததி இல்லாமல் போகும்படி இடும் சாபம்

**சந்தானிக சைவாசாரியர் :** (சந்தான குரவர்) சிஷ்ய மரபில் வந்த சைவா சாரியர்

**சந்தி :** காலையிலும் மாலையிலும் கோயிற்கால பூசை; குறிப்பிட்ட சிலர் வைத்த நிவந்தங்களுக்காக அவர்கள் பேரில் நடக்கும் பூசைக்கட்டளை

**சந்திக் குனிப்பம் :** கோயிலில் பூசை நேரத்தில் தேவரடியார் ஆடும் நடன வகை; குனிப்பம், சந்திக்கூத்து ஆகியவை பார்க்க

**சந்திக்கூத்து :** கோயிலில் சுவாமி முன்பாகத் தேவடியார் ஆடும் கூத்து; சாந்திக்கூத்து, சந்திக்குனிப்பம் என்பனவும் இதுவே போலும்

**சந்தியா தீபம் :** பகலும் இரவும் கூடும் வேளையில் கோயிலிலே ஏற்றப் பெறும் விளக்கு; பெரும்பாலும் மாலையிலே தான் ஏற்றப்படுவது; காலையில் போடுவதும் உண்டு

**சந்திராதித்தவல், சந்திராதித்தவற், சந்திராதித்தவத் :** சந்திர சூரியர் உள்ளவரையில்

**சந்திவிக்கிரகப் பேறு :** கிராம மத்தியஸ்தனுக்குக் கொடுக்கும் கட்ட ணம்; பத்திரம் எழுதுவோர்களுக்குக் கொடுக்கப்பெறுவதாகவும் கொள்வது உண்டு

**சந்திவிக்கிரகி :** சண்டை, சமாதானம் ஆகியவற்றைக் கவனிக்கும் அர சாங்க அதிகாரி; மந்திரி; பத்திரம் எழுதுவோரையும் குறிக்கும்

**சந்திவிளக்கு :** சந்தியா தீபம் பார்க்க

**சந்தை முதல் :** சந்தையில் வியாபாரிகளிடமிருந்து கொள்ளும் வரி

**சப்த சந்தானம் :** மகனைப் பெறுவதால் அடையக்கூடிய பயனை அளிப் பனவாகக் கருதப்பெறும் ஏழு நற்காரியங்கள்: அவை, குளம் தோண்டுதல், தன நிக்ஷேபம், அக்கிரகாரம் அளித்தல், கோயில் எழுப்பு தல், நந்தவனம் அமைத்தல், கவிஞரைக்கொண்டு நூல் இயற்றுதல்,

சத்திரம் ஏற்படுத்தல் ஆகிய ஏழுமாம் என்பர் ஒரு சாரார்; மறு வகையில் ஒருவன் தன் வாழ்நாளிலே வழிவழியே தன் புகழை நிலை பெறச்செய்ய இயற்றவேண்டிய ஏழு நற்காரியங்கள் எனக் காணப் படுகிறது; அவை, மகப்பேறு, நூல் இயற்றல், பொருள் திரட்டல், நந்தவனம் அமைத்தல், கன்னியாதானம், கோயில் நிர்மாணம், குளம் தோண்டுவது ஆகிய ஏழுமாம்; சப்தசந்ததி எனவும் பெறும்

**சப்பத்தி**: தட்டை முத்து; சப்படி என்பதும் இதுவே போலும்

**சபாமஞ்சிக்கம்**: சபையாருக்கு உரிய தரிசு நிலம்; சபைப்போது, ஊர்ப்போது, ஊர்மஞ்சிக்கம், சபாமத்யமம் எனவும் பெறும்

**சபாமாற்றம்**: சபையின் உத்தரவு; சபையின் பதில்

**சபாமாற்றம் சொல்லுதல்**: சபையார் தீர்மானத்தைத் தெரிவித்தல்

**சபாவிலை, சபைவிலை**: சபையின் உத்தரவால் பகிரங்கமாக நடக்கும் விற்பனை; ஊர்ச்சபையார் நடத்தும் விற்பனைக்கு நிச்சயித்த விலைப் பொருள்

**சபாவினியோகம்**: கிராமச் சபையினால் இறை நீக்கப்பெற்ற நிலங் களின் வரிப்பணத்தை ஊரார் ஏற்று இறுப்பதிலே வரும் பங்கு; சபையார் செலவுக்கான பணத்துக்கு இறுக்கும் பங்கு

**சபை**: அகரம், பிரம்மதேயம், சதுர்வேதி மங்கலம் போன்ற பிரா மணர் குடியிருப்புக் கிராமங்களுக்கு அமைந்த சபை; குறி என்று குறிக்கப்பெறுவதும் இதுவே

**சம்படம்**: வழிநடை உணவு; சம்பளம், சம்மாதம் எனவும் வரும்; ஓலைச்சம்படம் என்பதுபோல் காணப்பெறும்; சம்மாதநியோகம் பார்க்க

**சம்பிரதி**: தலைமைக் கணக்கன்; கோயில் நிர்வாகி

**சம்பிராத்தி**: பிராப்தி; பேறு; அடையத்தக்கது

**சம்மாதநியோகம்**: ஓலைச்சம்மாதமே யாகும்

**சம்வத்சரவாரியம்**: ஆண்டுதோறும் தெரிந்தெடுக்கப்படும் கிராம நிர் வாக சபை; சம்வத்சர கிராம காரியம் எனவும் பெறும்

**சமஞ்சஸம்**: ஒப்பு; ஒத்திருத்தல்

**சமஞ்சிதன்**: கிராமம் அல்லது கிராம சபையின் கணக்கன்; கோயில் வேலைக்காரன்

**சமயதர்மம்**: அவர் அவர் தொழிலுக்கு உரிய தர்மம்; முக்கியமாக நானாதேசி, சித்திரமேழி ஆகிய குழுவினர்களுடைய சாசனங்களில் காண்பது

**சமய பத்திரம்:** உடன்படிக்கைப் பத்திரம்

**சமய முதலி:** சமயத் தலைவர்; மக்களின் சமய ஒழுக்கத்தைக் கண்காணித்து அவர்களுடைய பிழைகளை எடுத்துக் காட்டித் தண்டிக்கும் அதிகாரம் பெற்ற தர்மத்தின் காவலர்

**சமயாசாரர்:** மக்களின் சமய ஒழுக்கத்தைக் கண்காணிப்பவர்; சிவ சமயத்தைச் சார்ந்தவர்

**சமர்:** பட்சபாதம் இல்லாத நடுநிலை

**சமரமுத்திரன்:** போரில் காட்டிய வீரத்துக்காக முன்னாளில் அரசர் வழங்கிய பட்டப்பெயர்

**சமுதாயத் திருமுகம்:** அரசன் முதலியோர் பல வகுப்பினர்க்கும் பொதுவாக விடுக்கும் உத்தரவு

**சமுதாயப் பிராத்தி, சமுதாயப் பிராப்தி:** குடிகள் பொதுவாக அனுபவிக்கும் நிலங்களிலிருந்து கிடைக்கும் வருவாய்; அதேபோல ஊர்ப் பொதுவில் செய்யும் செலவு; இவற்றில் அவர் அவர் பங்கு

**சமுதாயம்:** கணபோகம் வாய்ந்த கிராமம்

**சமுதாயம்:** கிராமப் பொது; கோயில் நிர்வாகம் செய்வார் கூட்டம்

**சமைதல்:** அமைதல்; சேர்தல்

**சமைப்பு:** தர்மத்துக்காகத் தானம் அளிக்கப்பட்டது

**சய பத்திரம், ஜய பத்திரம்:** விவாதத்தின் முடிவில் தீர்ப்பாக அளிக்கப் பெறும் வெற்றிப் பத்திரம்

**சர்வசிரப் பிரதானி:** மற்றவர்களுக்கு மேலான தலைமைப் பிரதானி

**சர்வ நாயகர்:** ராஜாங்கக் காரியங்களை நிர்வகிக்கும் பிரதம அதிகாரி; பிரதான மந்திரி

**சர்வமானியம்:** எந்தவிதமான தீர்வையும் இல்லாமல் அனுபவிக்கப் பெறும் நிலம்; முற்றூட்டு

**சர்வாதிகாரி:** அரசாங்கத்தின் எல்லாக் காரியங்களையும் நிர்வகிக்கும் பிரதான மந்திரி

**சரணத்தார்:** வேதத்தின் அந்த அந்தச் சாகையை ஓதுபவர்

**சர விளக்கு:** ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கித் தொங்கவிடப்படும் கோயில் விளக்கு

**சரஸ்வதி பண்டாரம்:** புத்தகசாலை

**சரிகை:** கூடுதல் (ஊர்ச்சரிகை: ஊர்க்கூட்டம்); சாரிகை என்றும் காணப்படும்

**சரிவாரம்:** விளைபொருளிலே மேல்வாரம் கீழ்வாரம் இரண்டையும் சமமாகக் கொள்வது

சரீரம் : ஆள் ; தனிநபர்

சருகூடை : (சருகு கூடை) கிராமப் பொது நிலங்களிலிருந்து உலர்ந்த சருகுகளை அரிக்கும் உரிமை

சலகை : ஒரு தானிய அளவு ; அந்த அளவு விதைப்பாடுள்ள நிலம்

சலாகை : முன்னாளில் வழங்கிய நாணய வகை ; சலாகையச்சு, பழஞ் சலாகை யச்சு, ஸ்ரீயக்கி பழஞ்சலாகை யச்சு எனவும் பெறும்

சலாபம் : முத்துக் குளித்தல்

சலாவணம் : (ஆவண சலாவணம்) சிராவணம் பார்க்க

சவக்கம் : சதுர வடிவம் உள்ள வைரம்

சவர்ண விருத்தி : பத்திரம் எழுதும் தொழில்

சவி : சரமணிக்கோவை

சவைக் கடமை : கிராம சபையாருக்கு இறுக்கவேண்டிய வரிகள்

சவைக் கணக்கு : கிராம சபையின் கணக்கர்

சல்லேகனை : சமண மதத்தவர் பட்டினிநோன்பு இருந்து உயிர் துறத்தல்

சவையார் : கிராம சபையார்

சவைவாரியர் : சபாவாரியர் ; கிராம சபையின் நிர்வாகக் குழுவினர்

சாங்கம் : முழுதும் ; பத்திரமாய்

சாக்கைக் கூத்து : சாக்கையர் ஆடும் கூத்து

சாகா மூவாப் பேருரு : இறத்தலும் மூப்பும் இல்லாமல் நிரந்தரமாக இருக்கவேண்டிக் கோயிலுக்கு விட்ட கால்நடை ; சாவா மூவாப் பேராடு பார்க்க

சாக்கைக்காணி : கோயிலில் பூசையின்போது கூத்து நடத்தும் சாக்கையருக்கு அளித்த மானியம் ; நிருத்தியபோகம் எனவும் படும்

சாசன பத்தர் : அரசன் வழங்கிய சாசனத்துக்குக் கட்டுப்பட்டவர் ; சாசனம் பெற்றவர்கள்

சாசுவதியம் : சாசுவதம்

சாட்டு வரி : மேய்ச்சல் பூமிக்கான வரிபோலும்

சாத்த கணத்தார் : ஐயனார் கோயில் காரியங்களை நிர்வகிப்பவர்

சாத்தண்டம் : கொலை செய்ததற்கு விதிக்கும் தண்டனை

சாத்தியம் : அஷ்டபோகங்களுள் ஒன்று ; விளைபொருளை அனுபவிக்கும் உரிமை

சாத்திர மாணி : சாத்திரனாகிய மாணவப் பிரம்மசாரி

சாத்திரர் : சட்டர் பார்க்க

சாத்துக்கூறை : திருப்பரிவட்டம்; விக்கிரகங்களுக்கு அணியும் ஆடை

**சாத்துப்படி:** கோயில் விக்கிரகங்களுக்குச் செய்யும் அலங்காரம்

**சாத்விக தானம்:** பிரதிப் பிரயோஜனத்தை எதிர்பார்க்காமல் அளிக்கப்பெறும் தானம்; அதனால் நீரோடு அட்டிக் கொடுக்கப்பெறாமல் அளிக்கப்படுவது

**சாதகக் குடி:** ஆயுள் முழுவதும் ஊழியம் புரிவதாக ஏற்றுக்கொண்ட குடிமக்கள்

**சாதி சித்தாயம்:** இனவரி பார்க்க

**சாந்திக்காரன்:** (மலைநாட்டு வழக்கிலே) கோயில் பூசை செய்வோர்; சாந்திசெய்வான், சாந்தியடிகள் எனவும் பெறுவர்

**சாந்திக்கூத்தன்:** கோயிலில் சாந்திக்கூத்து ஆடுபவன்

**சாம்போகன்:** கணக்கன்; சேனைபோகம் பார்க்க

**சாமந்தன்:** மந்திரி; சிற்றரசன்

**சாமி:** சுவாமி; அரசன்

**சாரடை:** [குளவடை என்பதனோடு சேர்ந்தே காணப்படும்] பொது நிலங்களை அனுபவிக்கும் உரிமையைக் குறிப்பது போலும்; சரவடை என்று குறிக்கப்பெறுவதும் இதுவே. மாவடை, மரவடை ஆகிய சொற்களையும் கவனிக்க

**சாரிகை:** கூட்டம்; சரிகை பார்க்க

**சாலாபோகம்:** அன்ன சாலைக்காக வரியில்லாமல் விடப்பெற்ற நிலம் அல்லது கிராமம்; அறச்சாலாபோகம் என்றும் குறிக்கப்பெறும்

**சாலிகைத்தறி, சாலியத்தறி:** சாலியர் உபயோகித்த தறி; அதற்கான வரியையும் குறிக்கும்

**சாலியநகரத்தார்:** சாலிய வியாபாரிகளுக்காக அமைந்த சபையார்

**சாலியர்:** துணி நெய்வோருள் ஒரு வகையார்

**சாலை:** உணவு அளிக்கும் அறச்சாலை: அதனோடு இணைந்துள்ள பாடசாலையையும் குறிக்கும்

**சாவடி:** உசாவடி பார்க்க

**சாவாமூவாப்பேராடு:** இறத்தலும் மூப்பும் இல்லாமல் நிரந்தரமாக நிலைத்திருக்கும் ஆடு; கோயில்களுக்கு அளிக்கும் ஆடுகளையே இவ்விதம் குறிப்பர்; [சாவினாலோ மூப்பினாலோ ஆடுகளின் தொகை குறையும்போது குட்டிகளைக்கொண்டு குறையை நிறைத்து, கோயிலுக்குச் செலுத்த வேண்டிய நெய் முதலியவற்றை முட்டாமல் செலுத்தவேண்டியதற்கு உதவும்]

**சாவி:** மணி பிடிக்காமல் பழுதான பயிர்

**சாவேறு:** பகையரசனைச் சூழ்ந்து காக்கும் படைமீது ஊட்டறுத்துச் செல்ல முபன்று அங்கிலேயில் உயிர்துறத்தலையே விரதமாகக் கொண்ட வீரர்

**சாற்றுப்படி:** சாத்துப்படி பார்க்க

**சாற்றுவரி:** (சாறு - பதனீர்) கள் இறக்கும் மரங்களிலிருந்து கள்ளோ பதனீரோ இறக்குவதற்கான வரி

**சான்றார்:** கள் இறக்குவோர்

**சானி:** மனைவி ; பிராமண ஸ்திரீகளின் பட்டப்பெயர்

**சிகரம்:** கோபுர விமானங்களின் உச்சி

**சிங்கபாதம்:** சிங்கத்தின் பாதம் போல அமைக்கப்பட்டிருக்கும் பாத்திரத்தின் பாதம்

**சிங்காரத் தோப்பு:** உத்தியான வனம்

**சிடுக்கு:** மகளிர் ஆபரண வகை

**சித்தம், சித்தி:** நில அனுபோகத்தில் அஷ்டபோகங்களுள் ஒன்று ; நிலத்தில் விவசாயம் செய்யும் உரிமை

**சித்தாந்தம்:** சைவ சமயம்

**சித்தாயம்:** நிர்ணயித்து அறுதியிட்ட வரி [விஜயநகர மன்னர்களின் ஆட்சிக்காலத்தில் இது பொன்னாக இறுத்துவந்த சிறு வரிகளைக் குறித்து வந்தது]

**சித்திரமேழி:** உழவுத்தொழில் பூண்ட வேளாண் மக்களுடைய பெருஞ் சபை; அவர்களுடைய சின்னமான கலப்பை; அந்தச் சின்னம் பொறிக்கப்பட்ட எல்லைக்கல்

**சித்திரைக்கார்:** சித்திரை மாதத்தில் அறுவடையாகும் நெல்வகை

**சிதாரி:** கோயிலில் தூபம் இடுவதற்கு உபயோகமாகும் ஒருவகைப் பண்டம்

**சிப்பம்:** சிறு மூட்டை

**சிமயம்:** இமயமலை

**சிரத்தாமந்தர்:** அபிமானத்தால் கோயில் தருமங்களைச் சிரத்தையோடு பார்ப்பவர்

**சிரப் பிரதானி:** தலைமைப் பிரதானி

**சிராவணம், சிராவணை:** ஆவணம், நிலக்கிரயபத்திரம்; சிராவணபத்திரம் எனவும் பெறும்

**சிரியக்கி பழஞ்சலாகையச்சு:** சலாகை பார்க்க ; சிரியக்கியச்சு எனவும் பெறும் (ஸ்ரீயக்ஷி பழஞ்சலாகை அச்சு)

சிரிவயிஷ்ணவர், சிரிவயிஷ்ணவர் : ஸ்ரீவைஷ்ணவர்

சிரீமுகம் : ஸ்ரீமுகம் ; திருமுகம்

சிரோவர்த்தனை : சிவலிங்கத்தின் உச்சிப்பகுதி

சில்குடிமை : ஊர்ச்சபை போன்ற ஸ்தல ஸ்தாபனங்களுக்கு இறுக்கும் சிறு வரிகள்

சிலந்தி : கோமேதக வகை

சில்லந்தராயம் : உள்வரிப் பிரிவைச் சேர்ந்த சிறு வரிகள்

சில்லாயம், சில்லிறை, சில்வரி : சில்லறை வரிகள்

சிலாலேகை : கல்வெட்டு ; கல்லில் பொறித்த எழுத்து

சிவந்தநீர் : முத்தின் சிவந்த நீரோட்டம்

சிவப்பிராமணர் : சிவன் கோயிலில் பூசை செய்யும் பிராமணர் ; ஆதிசைவர்

சிவப்புச்சிலை : கெம்பு ; சிவப்பு ரத்தினம்

சிவப்புத் தோய்ப்பார் : துணிகளுக்குச் சாயம் இடுவோர்

சிவபண்டாரி : சிவன் கோயில் பொக்கிஷத்து அதிகாரி

சிவயோகி : சிவனடியார்

சிவன் : சிவ பக்தருக்கு வழங்கிய பட்டப்பெயர்

சிவிகைப்புறம் : (கோயிலில்) பல்லக்குச் சேவைக்கான செலவுக்கு விடப்பட்ட நிலம்

சிற்றாயம் : சிறு வரிகள்

சிறகு : தெருவின் ஒரு பக்கத்தில் உள்ள வீடுகளின் ஒழுங்கு ; தெருப் பக்கம்

சிறப்பு : கோயிலில் நடக்கும் விசேஷ பூசை

சிறப்புக்கட்டளை : கோயிலில் ஏற்படுத்தப்பட்ட நைவேத்தியப் படித்தரம்

சிறு அபராதம் : சிறு குற்றங்களுக்கு விதிக்கும் தண்டனை

சிறுகாலைச்சந்தி : கோயிலில் உதய காலத்தில் செய்யும் பூசை

சிறுகாலைச்சிறப்பு : கோயிலில் விடியற்காலையில் நடக்கும் பூசை சமயம் செய்யும் நைவேத்தியம்

சிறுகுடிவாரம் : நிலத்தை உழுது பயிரிடுவதில் உழவனுக்குக் கிடைக்கும் பங்கு

சிறுசுங்கம் : தலைச்சுமைபோன்ற சிறு சுமைகளுக்கு வசூலிக்கும் சுங்கம் போலும்

சிறுதரம் : அரசாங்க அதிகாரிகளில் சிறிய தரத்தில் உள்ளவர்கள்

**சிறுதனம் :** அரசாங்க அதிகாரிகளுள் சிறுதரம் வகிப்போர் [சோழர் களுடைய ஆட்சிக்காலத்தில் அரசாங்க அதிகாரிகள் **பெருந்தனம்,** **சிறுதனம்** என இரு பிரிவுகளாக இருந்தனர். ஒவ்வொரு பிரிவும் பெருந்தரம் சிறுதரம் என மறுபடியும் பிரிக்கப்பட்டிருந்தது. இம் முறை சிறுதனத்துப் பெருந்தரம் என்று ஓர் அதிகாரி குறிக்கப் படுவதிலிருந்து விளங்கும்]

**சிறுதனம் :** சொந்தப்பணம் ; தனக்கே உரிமையான நிதி ; சிறுவாடு

**சிறுப்பிள்ளை :** அரண்மனை ஊழியன் ; வேலையாள்

**சிறுபடுகண் :** ஆபரண உறுப்பில் தொங்கும் வகை

**சிறுபாடிகாவல் :** [பெரும்பாடிகாவலினின்றும் வேறானது] ஊர்க் காவல்

**சிறுபாடு :** சிறிய உபயம்

**சிறுமுறி :** செய்தி அறிவிக்கும் லிகிதம் ; சிறு மதிப்புள்ள சில்லறைப் பத்திரம்

**சிறுமுறிக்காசு :** சிறு பத்திரங்களுக்காக இறுக்கும் காசு

**சிறுவேட்டை :** கிராமப் புறங்களில் சிறு துஷ்டமிருகங்களை ஒழிக்க வேட்டை ஆடுவது

**சின்னப்பிள்ளையாண்டான் :** அடைப்பம் என்னும் அரசனுடைய அதி காரியின் கீழ் ஊழியம் செய்பவன் ; அரண்மனை ஊழியன்

**சின்னம் :** திருச்சின்னம்; காளம் போன்ற வாத்தியம்

**சின்னம் :** ஒரு நாணய அளவு ; மிகவும் குறைவானது போலும்

**சின்னம் :** சில்வானம் ; சொச்சம்

**சினகரம் :** சைனக்கோயில்

**சீகாரியம் :** ஸ்ரீகாரியம் ; கோயில் காரிய நிர்வாகம்

**சீகாரியக் கண்காணி :** கோயில் நிர்வாகத்தை மேற்பார்ப்போர்

**சீகாரியப் பேறு :** காரிய நிர்வாகம் செய்வாருக்குக் கொடுக்கப்பெறுவது

**சீதனக்காணி :** சீதனமாகப்பெற்ற நிலம்

**சீபண்டாரம் :** ஸ்ரீபண்டாரம் ; கோயில் பொக்கிஷம்

**சீபலி :** ஸ்ரீபலி ; கோயிலில் நாள்தோறும் சோற்றால் இடும் பலி [ஹவிர்பலி எனவும் படும் ; தீயேறிசோறு என்பதும் இதுவே] ; பலி பூசைக்காகக் கோயிலிலே சுற்றி எழுந்தருளச்செய்யும் சிறு விக்கிரகம் ; பலி இடும்போது கோயிலைச் சுற்றி விக்கிரகத்தோடு வலம் வருதல்; ஸ்ரீபலி நடத்த இறுக்கும் வரி

சீபலி கொட்டுவார் : கோயிலில் தினசரி பலி பூசையின்போது இசைக் கருவிகளை வாசிப்போர்

சீபலிபோகம் : கோயிலில் ஸ்ரீபலி நடத்தும் செலவுக்காக விடப்பட்ட நிலம்; சீபலிப்பட்டி எனவும் பெறும்

சீபாதந்தாங்கிகள் : கோயிலில் விக்கிரகங்களை வாகனத்தோடு கட்டித் தாங்கிச் செல்பவர்; சீபாதம் எனவும் பெறுவர்

சீமாவிவாதம், சீமைவிவாதம் : (நாட்டின்) எல்லையைப்பற்றிய வழக்கு

சீமுகம் : ஸ்ரீமுகம்; அரசனிடமிருந்து வந்த ஓலை

சீயர் : ஜீயர்; விஷ்ணுகோயில் நிர்வாகப் பொறுப்பு வகித்த வைஷ்ணவ சந்நியாசி

சீர்மை : சீமை; நாட்டின் பகுதி

சீருத்திரர் : ஸ்ரீருத்திரர்; சிவனடியார்; சிவன் கோயில் நிர்வாகக் குழுவின் பகுதி

சீவனசேஷம் : ஜீவனத்துக்கு உரியது

சீவிதம், சீவிதப்பற்று, சீவியம் : ஜீவிதம் பார்க்க

சுங்கசாலை : சுங்கம் வசூலிக்கும் இடம்

சுங்கம் : 'கலத்தினும் காலினும் வரும் பண்டங்கட்கு இறை'

சுட்டிட்டிகை : (சுட்ட இட்டிகை) சுட்ட ஓடு; செங்கல்; சுட்டோடு என்பதும் இதுவேயாகும்

சுடர்நிலை : விளக்குத் தண்டு; விளக்கைத் தாங்கி நிற்கும் கட்டை

சுடுகாட்டுப்பாட்டம் : பிணங்களை எரிப்பதற்கான மயான வரி

சுடு : சும்மாடு

சுப்பிரம் : முத்துக்குற்றத்துள் ஒன்று

சுப்பிரயோகம் : ஒரு நதியின் பெயர்; வடபெண்ணை என்பர்

சுமை : தலையில் சுமந்து விற்போர் இறுக்கும் வரி

சுரம் : காடு [சுரம்போக்கி : காட்டுக்குத் துரத்தி; சுரம் இறக்கி எனவும் பெறும்]

சுரி : ஆபரணத்தின் உறுப்பு

சுருட்டிக்காரன் : அரசர் பவனியில் சுருட்டி என்னும் சாமரம் போன்ற எடுபிடி விருது எடுத்துச்செல்பவன்

சுருதிமான் : மக்களின் சமூகம் பற்றிய காரிய நிர்வாகம் செய்வோர்; கேள்வி என்பாரின் வேறு பெயர்

சுருளமுது : தாம்பூலம்

**சுரோத்திரியம் :** சுருதி அதாவது வேதம் வல்ல பிராமணர்களுக்கு வரியில்லாமல் அளித்த நிலம் அல்லது கிராமம்

**சுவந்திரம் :** சுதந்திரம்; கிராமத் தொழிலாளர்க்குச் சேரவேண்டிய நெல், சோறு போன்ற உரிமை

**சுவர்ணுதாயம் :** காசாக, பொன்னுக இறுக்கும் வரி வகைகள்

**சுவாமி :** அரசன்; உரியவன்

**சுவாமியம் :** சொத்துரிமை

**சுவாமிவாரம் :** மேல் வாரம்; சொந்தக்காரனுக்கு உரிய பங்கு

**சுவாஸ்தியம் :** பரம்பரையாக அனுபவிக்கும் உரிமை

**சுற்று :** சுற்று வட்டம்; சுற்றளவு

**சுற்றுக்கல்லூரி :** கோயிலில் கர்ப்ப கிருகத்தைச் சுற்றிப் பிராகாரம் போல் அமைக்கப்பட்ட கட்டடம்

**சுற்றுப் பேழை :** சுருள் அடுக்காக அமைந்த பேழை

**சுனை :** மலைகளின் பிளவுகளில் தங்கும் நீர்நிலை

**சூலக்கல் :** சிவன் கோயிலின் நிலத்து எல்லையைக் குறிக்க நடும் சூல உருவம் பொறித்த கல்

**சூலக்கால் :** சூலக்குறி பொறிக்கப்பெற்ற சிவன் கோயில் அளவை மரக்கால்

**சூலத்தாபனம் :** சிவன்கோயில் நிலத்து எல்லையைக் குறிக்கச் சூல உருவம் தாங்கிய கல்லை நடுவது

**சூலவரி :** சிவன் கோயிலுக்காக இறுக்கப்பெறும் வரிபோலும்

**சூளைத்திறை :** பரத்தையர் செலுத்திய வரி [கன்னடக் கல்வெட்டு களிலே இந்தப் பொருள்களில்தான் வழங்குகின்றது]

**சேக்காயம் :** எண்ணெய் ஆடும் செக்கு வரி; சேக்கிறை, சேக்குக் கடமை எனவும் பெறும்

**சேக்குமன்றுடி :** முன்னுளில் வழங்கிவந்த ஒரு வரி வகை; செக்கு சம்பந்தப்பட்டதாக இருத்தல் வேண்டும்

**சேக்குவாணிகர் :** செக்காடும் வாணிகர்

**செங்கோடிக்காணம் :** செங்கொடி என்றும் கொடிவேலி என்றும் சித்திரமூலம் என்றும் வழங்கும் மருந்துச்செடிக்கான வரி எனக் கொள்வர்; **கோடிக்காணம்** என்பதைக் காண்க

**செங்கோல் :** செம்பொன்; சுத்தமான தங்கம்

**சேட்டியார் மகமை :** வியாபாரிகள் இறுக்கும் மகமை

**சேட்டியிறை :** வியாபாரிகள் இறுக்கும் வரி ; **சேட்டிறை** எனவும் பெறும்

**சேண்பகக்குளிகை :** முன்னுளில் வழங்கிவந்த நாணய வகை ; சம்புவ ராயர் அச்சிட்டு வழங்கியது போலும்

**சேந்நீர் :** தெளிந்த நீர்

**சேந்நீர் போதிவி :** நல்ல நீர் ஓடும் கால்

**சேப்புக்கால் திருச்சிற்றம்பலமுடையான் :** திருச்சிற்றம்பலமுடையான் என்ற பெயர் கொண்டதும், செம்பினுல் ஆனதுமான அளக்கும் பாத்திரம்

**சேப்புத் திருமேனி :** செம்பினுலாகிய விக்கிரகம்

**சேப்புப்பத்திரம், சேப்புப் பட்டயம் :** செப்பேடு ; தாம்ர சாசனம்

**சேம்பாதி :** சரிபாதி

**சேம்மருதர் :** நல்ல விவசாயிகள்

**சேம்மை :** சமம் ; ஒப்பு ; சுத்தம்

**சேம்மை பண்டாரக்கல் :** சரியான எடை கொண்டதாகக் கஜானுவில் உள்ள நிறைக்கல்

**சேய்தார் போன் :** சுத்தமான தங்கம்

**சேய்யும்படி :** உத்தரவு ; ஆணை

**சேயல் :** ஆபரணத்தில் மணிவைத்துச் செய்யும் இழைப்படவேலை

**சேருவாடி :** சிறுவாடு ; சிறுகச் சிறுகச் சேர்த்த பணம்

**சேல்ல :** முடிய

**சேவ்வரியாடு, சேவரியாடு :** ஆடு வகை ; செம்மறியாடு என்பதே போலும்

**சேவ்வாரம் :** சம வாரம் ; பாதி வாரம்

**சேவிடு :** ஆழாக்கில் ஐந்தில் ஒரு பாகமாகிய அளவு

**சேறுவு :** செறு ; வயல்

**சேன்னடை :** கோயிலில் நித்தியப் படித்தரம்

**சேன்னீர் வேட்டி :** நீரோடும் கால்வாயை அவ்வப்போது வெட்டிச் சீர் செய்ய வேண்டிய கடமை ; சேன்னீரமஞ்சி என்பதும் இதுவே போலும்

**சேகண்டி :** சேமக்கலம்

**சேணியர் :** நெய்வோருள் ஒரு வகையார் ; தொழிற் குழுவினர்

சேர்வை : ஊழியம்; ஊழியர்களுக்கு வரியில்லாமல் விடப்பட்ட நிலம் ; ஊழியர் மானியம்

சேரி : ஊரில் ஜனங்கள் வாழும் இடம் ; பார்ப்பனச்சேரிபோல் வருவது காண்க

சேவகக்காசு : போர் வீரர்களின் செலவுக்கும் பராமரிப்புக்குமாக இறுக்கும் காசு ; போர் வீரர்களிடமிருந்து வசூலிப்பதும் ஆகும்

சேவகத்தேவை : அரசனோ உயர்தர அதிகாரிகளோ கிராமங்களுக்கு விஜயம் செய்யும்போது அவர்களுக்குச் சேவகம் செய்வதற்காக ஆட்களை அனுப்புவதும், அந்தச் செலவுக்கான வரிப்பணத்தையும் குறிக்கும்

சேவகன் : போர் வீரன்

சேனகணம் : சமண மதத்தினருள் ஒரு குழுவினர் ; சேனன்வயர் எனவும் பெறுவர்

சேனபதியாழ்வார் : சேனை முதலியார் ; விஷ்வக்சேனர்

சேனபதிப் பெருவிலை: விஷ்ணு கோயில் நிலங்களை விஷ்வக்சேனர் பெயரால் கிரயம் செய்வது; அதற்கான விலைப்பொருள்

சேனபோவன், சேனைபோகம் : கணக்குப்பிள்ளை

சேனையங்காடிகள் : வியாபாரிகளுள் படையோடு செல்லும் ஒருவகையினர் ; துணி வியாபாரிகளுள் ஒரு பிரிவினர்

சைவாசாரிய க்ஷேத்திரம் : சைவாசாரியர்களுக்கு வரியில்லாமல் அளிக்கப்பட்ட நிலம்

சைவகலாலய சக்கரவர்த்தி, சைவசக்கரவர்த்தி, சைவசூளாமணி, சைவாதிராயர் : சைவ ஆசாரியர்களுள் சிலருக்கு முன்னாளில் அரசர் வழங்கிய பட்டப்பெயர்கள்

சோக்கத்தளியிலார் : சிவன் கோயிலைச் சார்ந்த தேவரடியாரில் ஒருவகையார் ; சொக்கம் என்னும் ஆட்டத்தை ஆடுபவரே போலும்

சோக்கம் : சுத்த நிருத்தம் எனப்படும் நாட்டிய வகை

சோர்க்கஸ்தராதல் : இறந்து போதல்

சோருவம் : ஸ்வரூபம் ; மலையாளத்து நம்பூதிரிகள் அரசர் முதலியோரின் ஸ்தாவர சொத்து

சோனவரி : சுவர்ணவரி என்பதன் வேறு வடிவம் ; சுவர்ணாதாயம் ஆகும்

**சோசியார் திருவடி:** *அரசாங்க உத்தியோகஸ்தருள் ஒருவர்; அரசாங்க ஜோதிஷரே போலும்*

**சோடி:** *மிகக் குறைந்த விகிதத்தில் வரி இறுப்பதாக அளிக்கப்பெற்றுள்ள இனும் வகை; ஜோடி பார்க்க*

**சோபானம்:** *படிக்கட்டு ; கோயில் கட்டடத்தின் அடிப்படை*

**சோம சித்தாந்தம்:** *சைவ சமயத்தின் உட்பிரிவுகளுள் ஒன்று*

**சோமாசி, சோமயாஜி:** *சோமயாகம் செய்தவன்*

**சோழியக்காசு:** *முன்னாளில் வழங்கி வந்த ஒரு காசு ; ஒரு பணத்தின் நூற்றில் ஒரு பாகம் எனக் கருதப்படுவது*

**சோற்றடைப்பு:** *அன்னதானக் கட்டளை*

**சோறு மாட்டு:** *எச்சோறு பார்க்க ;* **சோறுமாட்டம், சோறுமாடு** *எனவும் குறிக்கப்பெறும்*

**சோனகச்சிடுக்கு:** *முன்னாளில் பெண்கள் அணிந்துவந்த ஓர் ஆபரணம்*

**சௌஸ்தி:** *தருமக்கொடை (ஸ்வஸ்தி என்று ஆரம்பிக்கும் சாசனம் என்பதன் திரிபேபோலும்)*

**ஞாடு:** *நாடு என்பதன் வேறு வடிவம்*

**ஞாபகம்:** *நினைப்பூட்டுவதற்காக எழுதிவைத்த குறிப்பு*

**ஞாயிறு:** *மாதம் ; சௌரமானக் கணக்கின்படி கொள்ளும் மாதம்*

**ஞாழி:** *நாழி என்பதன் வேறு வடிவம்*

**ட்ங்க சாலை:** *தங்க சாலை ; நாணய சாலை*

**தகட்டுக்குழை:** *கழுத்தணி வகை*

**தச்சத்துலாம்:** *ஏற்ற வகைக்கு வழங்கிவந்த வரிபோலும்*

**தச்சாசாரியம்:** *தச்சர்களிடையே தலைமைப் பதவி ; ஸ்தபதி, சிற்பாசாரியர் போன்ற பதவி*

**தச்சாசாரியக்காணி:** *கோயிலில் தச்சாசாரியர் கவனிக்கவேண்டிய வேலைகளுக்கான உரிமை; அதற்கான மானியம்*

**தசக்கிரியை:** *கோயிலில் பழுதுபார்ப்பது முதலிய வேலைகளைச் சிற்பாசாரியார்கள் கவனிப்பது*

**தசபந்தம்:** *வரியிலே பத்தில் ஒரு பங்கைக் குளம் வெட்டுவது போன்ற பொதுக் காரியங்களுக்காக ஒதுக்குவது; அந்தத் தொகைக்கு ஈடான வருவாயைக் கொடுக்கும் நிலத்தைத் தனியாக ஒதுக்குவது; குளம் முதலிய நீர்நிலைகளை வெட்டுவோர் அதன் ஆயக்கட்டில் பத்*

திலே ஒரு பங்கை அனுபவிப்பதுமாகும்; தசவந்தம் எனவும் பெறும்

தட்டடவு: (தட்டு அடைவு) அவ்வப்போது கிடைக்கும் வருவாய் போலும்

தட்டம்: உண்கலம், தாம்பாளம்

தட்டழி: சேமக்கலம் போன்ற ஒருவகை வாத்தியம்; தத்தளி என்பது இதுவே போலும்; தட்டாழி எனவும் பெறும்

தட்டாழி கொட்டி: கோயிலில் ஸ்ரீபலி நடக்கும்போது சேமக்கலம் போன்ற வாத்தியத்தில் இசையெழுப்புவோர்

தட்டார் பாட்டம்: (பொற் கொல்லர்கள்) தட்டார்கள் இறுக்கும் வரி; தட்டாரப் பாட்டம் எனவும் ஆகும்

தட்டுக்காயம்: (தட்டுக்கு ஆயம்) தட்டொலி என்பதே போலும்; தட்டுக்காணம் என்பதும் இதுவேபோலும்

தட்டுப் புழுகு: புனுகு சட்டம்

தட்டோலி: (தட்டார்பாட்டம் என்பதோடு சேர்ந்தே காணப்படும்) கம்மாளரிலே வேறு வகையினரான கொல்லர் போன்றவர் பட்டறை வைத்து வேலை செய்வதற்கு இறுக்கும் வரி போலும்

தட்டோளி: உலோகத் தட்டால் ஆன முகம் பார்க்கும் கண்ணாடி

தடவிக் கட்டுதல்: இரத்தினத்தைப் பொன்னில் பதிக்கும் வேலைப்பாடு

தடி: நெல்வயல்; விளைநிலப் பகுதி

தடி: கையெழுத்துப் போடத் தெரியாதவன் அதற்குப்பதிலாக இடும் அடையாளம்

தடிப்பதக்கு: தடி நிலத்துக்குப் பதக்கு வீதம் நெல்லாக இறுப்பது

தண்டக்காணம்: தண்டம் என்பதேபோலும்

தண்டக் குற்றம், தண்டங் குற்றம்: தண்டம், குற்றம் ஆகிய இரண்டும்; குற்றம் என்பது இழைத்த குற்றத்துக்குச் செலுத்தும் அபராத தொகை; தண்டம் இதர வகையான அபராதத் தொகை; தண்ட கூற்றம் எனவும் காணப்பெறும்

தண்டநாயகம்: படைத் தலைமையாகிய உத்தியோகம்; அந்தப் பதவி வகிப்பவன் தண்டநாயகன்

தண்டப் படுதல்: அபராதம் விதிக்கப் பெறுதல்

தண்டப் பொருள்: அபராதமாக வாங்கும் பொருள்

தண்டம்: அபராதமாக விதிக்கப்பட்ட வரி

தண்டல்மேனி: வரி வசூலிப்பவன்; தானியமாக வரி வசூலிக்கும் போது அதில் ஏற்படக்கூடிய குறைவுக்காகச் சேர்த்துக் கொடுப்பதும் ஆகும்

தடிமாறும் குதிரைச் சேவகன் : அரசன் போர்ப்படையைச் சேர்ந்த தற்குறி அல்லது முத்திரையிடும் குதிரை வீரன்

தண்டலிலக்கை : வரி வசூலிக்க வருவோர் தங்கியிருத்தல்

தண்டவாணி : பொன் மாற்று அறிய உதவும் ஆணி; உரைகல்

தண்டற் கடமை, தண்டலிற் கடமை : வரி தண்டுவோர்க்கு இறுக்கும் கடமை; வரி தண்டுவோர் இறுக்கும் வரியாகவும் கொள்வர்

தண்டாளர் முதல் : வரி வசூலிப்பவர் தங்கள் வசூலுக்கு வைத்திருக்கும் கணக்கு

தண்டிகை, தண்டு : பல்லக்கு

தண்டிகை ஜீவிதம் : பல்லக்குச் சுமப்பவர்களுக்காக வரியில்லாமல் விட்ட நிலம்

தண்டு : போர்ப்படை; படையெடுத்துச் செல்லல்

தண்டு : கோயில் வாகனம் பல்லக்கு முதலியவற்றைக் கட்டித் தூக்குவதற்கான கோல்; வாரை

தண்டுதல் : வசூலித்தல்; தண்டல் எனவும் காணப்பெறும்

தண்டேடுப்பார் : பல்லக்குச் சுமப்பவர்

தண்டேறுதல் : பல்லக்கில் ஏறுதல்

தண்டேசுரப் பெருவிலை : சண்டேசுரப் பெருவிலை பார்க்க

தண்டேசுரன், தண்டீசுரன் : சண்டேசுரன்

தண்ணீர்க்காணம் : தண்ணீர் வரி என்பதேயாகும்

தண்ணீர்ப்பட்டி : தண்ணீர்ப் பந்தல் தர்மத்துக்கு விடப்பெற்ற நிலம்

தந்ததி : சந்ததி; பரம்பரை

தந்திரபாலன் : சேனைத் தலைவன்

தந்திரம் : படை (காலாட்கள் கொண்டது)

தந்திரி : படைத்தலைவன்; கோயில் அர்ச்சகர்

தந்திரிமார் : போர்ப்படையைச் சேர்ந்தவர்; படைக்கானவர் எனவும் பெறுவர்; கோயில் அர்ச்சகர்களையும் குறிக்கும்

தந்மி, தர்மி : கோயில் காரியங்களை நிர்வகிப்போர்

தந்மி எழுதி, தந்மி ஊதி : ஊர்ச்சபையின் பெருங்கூட்டம் கூடுவதைக் காளம் ஊதி அறிவிப்பது

தபசி : தவம்புரிவோர்; துறவிகள்; தவசி எனவும் குறிக்கப்பெறுவர்

தம்பம் : விளக்குத் தண்டு

தம்பிராட்டி : தலைவி ; அரசன் தேவி

தம்மம் : திரமம் என்னும் நாணயம்

தய்யான், தையான் : தையற்காரன்

தயித்திரியக் கிடைப்புறம் : வேதத்தில் தைத்திரீய சாகை ஓதுவார்க்கு அளித்த மானிய நிலம்

தயிரமுது, தயிரமிர்து, தயிரமுர்து : கடவுளுக்குப் படைக்கும் தயிர்

தர்மதானம் : புண்ணியம் பயக்கும் கொடை

தர்மபத்தர்: (தர்மத்துக்குக் கட்டுப்பட்டவர்) தருமவிசாரணை செய்வோர்

தர்ம வாணியர், தன்ம வாணியர் : நியாயமான விலைக்கு வியாபாரம் செய்வோர்

தர்மாசனம் : தரும சபை : நியாய விசாரணை ஸ்தானம்

தரகு, தரகுபாட்டம் : தரகரிடமிருந்து கொள்ளும் வரி

தரமிலிநிலம் : தீர்வைத்தரம் நிர்ணயிக்கப் பெறாத நிலம்

தரவிடு நெல் : (கூலியாகக்) கொடுக்கும் நெல்

தரவு : உத்தரவு ; கட்டளை ; நிர்ப்பந்தித்து வசூலித்தல்

தரவு கோள்ளுதல் : ரசீது பெறுதல் ; வரி முதலியவற்றின் நிர்ப்பந்த வசூல்

தரவுசாத்து : சோழர் ஆட்சியில் தரவு இடும் அரசாங்க அதிகாரி

தரா : எட்டுப் பாகம் செம்பும் ஐந்து பாகம் காரீயமும் கலந்து செய்யப்படும் உலோகம் ; பித்தளை

தரிசனகாணிக்கை : பெரியோரைக் காண்கையில் அளிக்கும் காணிக்கை

தரிஸாபள்ளி : கிறிஸ்தவர் கோயில் ; மாதாக் கோயில்

தரிப்பறுதி : (கிராமத்தில்) தங்காமல் துறந்து செல்லல்

தருப்பு : குறைந்த மதிப்பு உள்ள ஒரு வகை வெள்ளைக்கல்

தருமாசனத்தார் : நீதி வழங்குவோர்

தலக்காவல் : ஸ்தலம் காவல் புரிவது ; ஊர்க்காவல்

தலத்தார் : கோயில் அதிகாரிகள் ; கோயில் அர்ச்சகர்கள்

தலவகாரம் : சாம வேத சாகைகளுள் ஒன்று; தலவகார சாமம் எனவும் பெறும்

தலைக்கரை : வயலையோ ஏரிகுளங்களின் கரையையோ அடுத்துள்ள நிலம்

தலைக்கோலி : ஆடி முதிர்ந்த கணிகை

தலைச்சம்மாடு : தலைப்பாரம் ; தலைச்சும்மாடு ; பொறுப்பு

தலைநீர் : முதல் மடைப் பாய்ச்சல்

தலைப்பிறை: சுக்கில பக்ஷத்துப் பிரதமை

தலைப்பேழை: ஏரி அல்லது வாய்க்காலின் தலைப்பு மதகு

தலைமாறு: பரிவர்த்தனை

தலையாரிக்கம்: கிராமத் தலையாரிக் காவலுக்குச் செலுத்தும் வரி; தலையாரிக்காணம் என்பதும் இதுவே போலும்

தலையீடு: தலைப்பில் உள்ளது; ஆரம்பத்தில் இருப்பது

தலைவாய்: பிரதான வாசல்; முகப்பில் உள்ள மதகு

தலைவாய்ச்சேரி: முகப்பில் உள்ள ஊர்ப்பகுதி

தவளைவாய்: ஆபரண வகை

தவனசேட்டி: செட்டி வகையினர்

தவனம், தவனகம்: மருக்கொழுந்து

தவிர்த்து: நீக்கி; இல்லாமற்செய்து

தவுக்கை: தட்டு வகை

தழையிடுவார்: கோயிலில் வில்வம் திருத்துழாய் முதலிய பச்சிலைத் திருப்பணி செய்வார்

தள அதிகாரி: தளவாய்; படை அதிகாரி

தளபாடம்: சேனை; சேனைக்கு வேண்டிய உபகரணங்கள்

தளவாய்: படைத்தலைவன்

தளவிசை: தளவரிசை; கல் பரப்பு

தளவிருத்தி: கோயில்களின் பராமரிப்புக்காக விடப்பெற்ற நிலம்

தளி: கோயில்

தளிகை: உண் கலம்; ஓர் அளவு கொண்ட நைவேத்தியப் பிரசாதம்

தளிகைச் சிறப்பு: கோயிலில் செய்யும் விசேஷ நைவேத்தியம்

தளிச்சேரி: கோயிலைச்சேர்ந்த தேவரடியார் வசிக்கும் தெரு

தளிச்சேரிப் பெண்டுகள்: தளிச்சேரியில் வசிக்கும் தேவதாசிகள்

தளித்தல்: நீர் தெளித்தல்

தளிப்பரிவாரம்: கோயில் சிப்பந்திகள்; கோயில் பரிவாரம்

தளியிலார்: தேவரடியார்; கோயில் ஊழியம் செய்யும் பெண்டிர்

தளைக்காணம்: மரம் ஏறுவோர் உபயோகிக்கும் தளைக்கான வரி

தற்குறிமாட்டேறிதல்: கையெழுத்துப் போடத் தெரியாதவன் தன் அடையாளம் இடுதல்; அதற்குச் சாட்சி போடுதல்

தறிக்கடமை, தறியிறை: துணி நெய்வோர் தறிக்காக இறுக்கும் வரி

தறிதளை: தறிக்கடமை பார்க்க; தளைக்காணமாகவும் இருக்கலாம்

தறிப் புடவை: தறி செய்வோன் புடவையாக இறுக்கும் வரி; தறிக் கூறை என்பதும் இதுவேயாகும்

தன்ம சாதனம்: தருமத்துக்கு அளித்த நிலத்தின் பத்திரம்

தன்மதாவளர்: தன்மவாரியப் பெருமக்கள் பார்க்க; தன்ம வாணிகர் எனவும் கொள்வர்

தன்மப் பலிசை: நியாய வட்டி

தன்ம வாணிகர்: நெறிதவறாமல் நியாயமாக வாணிகம் செய்பவர்

தன்மவாரியப் பெருமக்கள்: அறநிலயங்களை மேற்பார்க்கும் சபையோர்

தன்மி எழுதுதல், தன்மி ஊதுதல், தர்மி எழுதுதல்: கிராமச் சபைக் கூடத்தைக் கூட்டுவதற்குக் காளம் ஊதி அறிவித்தல் (தம்-ஒலியெழுப்பு என்னும் வடமொழிச் சொல்லடியாகப் பிறந்தது)

தன்னேற்றம்: தன்னைச் சேர்ந்த இனத்தார்

தனிச் செய்கை: பிறருடன் சேராமல் தான் ஒருவனாகவே செய்யும் விவசாயம்

தனிசு: கடன்

தனிநகர், தனிநகரம்: நிர்வாக விஷயத்தில் தனி உறுப்பாக விளங்கும் பெரிய வியாபார ஸ்தலம்

தனியாள்: மேற்பார்வை இடுபவராகக் கொள்ளலாம்; அதனால் தனியாட்பேறு என்பது அத்தகையாருக்கு உரிய வருவாய் ஆகும்

தனியூர்: நிர்வாகத்திலே தனி உறுப்பாக விளங்கும் பெரிய ஊர்

தக்ஷிணபுஜம்: வலது கை; நம்பிக்கை வாய்ந்த அதிகாரி

தாக்கி: சாட்சியின் வேறுவடிவம்

தாங்கல்: பாசனத்துக்கு உபயோகமாகும் குளம்போன்ற நீர்நிலை

தாசரி: மக்களின் சமய ஒழுக்கத்தைக் கண்காணிப்போர்; வைஷ்ணவ சமயத்தைச் சார்ந்தவர்

தாடிப்படை: மதிலின் மேல்பகுதியில் உள்ள பாகம்

தாமம்: பூமாலை; தொங்கல் எனவும் பெறும்

தாரம்: பித்தளை; தரா என்பதன் வேறு வடிவம்

தாராதத்தம்: நீரைத் தாரை வார்த்துத் தானம் கொடுத்தது

தாரைத்தாள் வட்டில்: ஒருவகைப் பாத்திரம்

தாலம்: பண்டாரம், கஜானா

தாலச்செம்மைபோன்: கஜானாவினால் நிர்ணயிக்கப்பெற்ற மாற்றுடைய சுத்தமான தங்கம்

தாலிமணிவடம்: தாலியோடு மணிகள் சேர்ந்த மங்கிலியக்கொடி

தாழக் கூட்டுக் கம்பி: ஆபரண வகை

தாளிம்பம்: நெற்றியில் அணியும் ஓர் ஆபரணம்

தான இறையிலி: வரி நீக்கித் தானம் செய்யப்பெற்ற நிலம் அல்லது கிராமம்

தானத்தார்: கோயில் அதிகாரிகள்; கோயிலில் பூசை செய்வோர்

தானம்: தேவஸ்தானத்தின் சுருக்கமான ஸ்தானம்; கோயில்

தானமானம்: ஸ்தானத்தினால் ஏற்படும் பெருமை

தானமானியம்: மானியமாக விட்ட நிலத்தின்மீது வசூலிக்கப்பெறும் வரி

தானிகர்: ஸ்தானீகர்; கோயிற்காரியங்களைக் கண்காணிப்பவர்; பூசை செய்வோர்

தானிகராயர்: கோயில் ஸ்தானீகர்; பூசை செய்வாருள் தலைவர்

தானியவர்க்கம்: தானியமாக இறுக்கப்பெறும் வரிவகைகள்

தானைத் திருப்பட்டிகை: விக்கிரகத்தின் அரையாடை (முன்தானை)யின் மேல் அணியும் ஆபரணம்

தானைத் தூக்கம்: திருப்பட்டிகை அணியின் உறுப்பினுள் ஒன்று

திங்கட் காசு: மாதம் தோறும் தண்டிவந்த ஒரு பழைய வரி; திங்கட் சோறு, திங்கள் மோகம், திங்கள் நெய் என்று காணப்படுவனவும் இவ்விதமே யாகும்; மாதப்படி என்பதையும் பார்க்க

திடர்: திட்டு

திணைக்களம்: இலாகா; நிர்வாகத் துறை

திநாரம்: முன்னாளில் வழங்கிவந்த ஒரு வகைப் பொன் நாணயம்; யவனர்கள் நாட்டிலிருந்து முதலில் வந்தது

திரங்கல்: முத்துக் குற்றவகை

திரமம்: முன்னாளில் வழங்கி வந்த ஒரு நாணயம்; கிரேக்க நாட்டிலிருந்து முதலில் வந்தது

திரள் மணிவடம்: ஒருவகை மாலை

திராசம்: மாணிக்கக் குற்றங்களுள் ஒன்று

திரிகாலம்: காலை, உச்சி, மாலை என்ற மூன்று வேளை

திரிகை: குயவன் மண்பாண்டம் செய்யும் சக்கரம்

திரிகை ஆயம்: குயவர் திரிகையின் மீது இறுக்கும் வரி

திரிசூலக்கல்: சிவன் கோயில் நிலத்து எல்லையைக் குறிக்கத் திரிசூலம் பொறித்து இடும் எல்லைக் கல்

திரிசூலக் காசு: கோயிலுக்கு இறுக்கும் வரி; சூலவரி என்பதும் இதுவே

திரு: சோதிடம் கூறுவான்

திரு: மாங்கலியம்

திருக்கண்டவாணி: கழுத்து அணி வகை

திருக்கண்ணமடை: அரிசி, சர்க்கரை, வாழைப் பழங்களால் ஆக்கப் பட்ட இனிய உணவு; சர்க்கரைப் பொங்கல் வகை

திருக்கண்ணேக்கு: சுவாமியின் விக்கிரகத்தை மண்டபப் படிக்கு எடுத்துச் செல்லுதல்

திருக் கலச முடித்தல்: கும்பாபிஷேகம்

திருக்காவணக்கால்: உரிமைப் பத்திரம்; ஆதாவுச் சீட்டு; தோரண ஸ்தம்பம் எனவும் ஆகும்

திருக் குகை: துறவிகள் வாழும் இடம்; மடம்

திருக் கேட்டைக் கிழத்தி: மூதேவி; ஜ்யேஷ்டாதேவி

திருக்கைக் கோட்டி, திருக்கையோட்டி: கோயிலில் திருமுறை ஓதும் மண்டபம்; அங்கே திருமுறை ஓதுவார் திருக்கைக் கோட்டி யோது வார் எனப் பெறுவர்

திருக்கை வழக்கம்: கோயில் நித்தியப் படித்தரம்; பிரசாத வினியோக மும் ஆகும்

திருக்கோசகம்: கோயிலில் அம்மன் விக்கிரகத்துக்குச் சாத்தும் கொய் சகம் போன்ற அணிவகை

திருக்கோடுக்கு: ஆபரணவகை

திருக்கோள்கை: ஆபரணம்; விக்கிரகத்துக்கு இடும் கவசமும் ஆகும்

திருக் கொற்ற வாய்தல்: அரண்மனை

திருச்சந்தம்: அணிவகை

திருச்சரி: அணி வகை

திருச்சுற்றாலயம்: கோயில் பிரகாரத்தில் உள்ள நடைமண்டபம் அல்லது பரிவார தேவதைகளின் ஆலயத் தொகுதி

திருச்சுற்றாலை, திருச்சுற்று மண்டபம், திருச்சுற்று மாளிகை, திருச்சுற்று மாலை: கர்ப்ப கிருகத்தைச் சுற்றிப் பிராகாரமாக அமைந்துள்ள கட்டடம்

திருச்சேந்நடை: கோயிலில் அமுதுபடித்தரம்

திருச் செந்நெல் நடை: கோயிலில் சிவப்பு அரிசி (சம்பா)ச்சாதம் நிவேதிக்கும் நடப்புச் செலவு

திருஞானப்புறம்: தேவாரம் முதலியவை ஓதுவதற்கு விட்ட நிலம்

திருஞானம் : கோயிலின் சந்நிதியில் ஓதும் தேவாரம் போன்ற பாடல்
திருஞானம் பெற்ற பிள்ளையார் : திருஞானசம்பந்த நாயனார்
திருத்து : காடு திருத்திச் சாகுபடிக்குக் கொணர்ந்த நிலம்
திருத்துதல் : மேற்பார்த்தல்
திருத்தோப்பு : கோயிலுக்கு உரிய நந்தவனம் ; திருநந்தவனம் எனவும் பெறும்
திருநட்டக் கணப் பெருமக்கள் : கோயில் அதிகாரிகளுள் ஒரு சாரார்; கோயில் ஊழியம் புரியும் இசைவல்லார் குழுவின் சபையார்
திருநடைமாளிகை : கோயில் பிரகாரத்தைச் சுற்றியுள்ள மண்டபம்.
திருநமனிகை : கோயிலில் மூர்த்திக்குச் செய்யும் அபிஷேகம்
திருநயனம் : கோயில் மூர்த்திக்கு அணிவிக்கும் கண்மலர்
திருநல்லியாண்டு : சுபகரமான ஆட்சி வருஷம் ; திருநலியாண்டு எனவும் பெறும்
திருநக்ஷத்திரம் : பிறந்த நக்ஷத்திரம் ; ஆண்டு
திருநாமக்காணி, திருநாமத்துக்காணி : சிவன் கோயிலுக்கான தேவஸ்தான நிலம் ; கோயிலின் பெயரில் உள்ள நிலம்
திருநாள் தேவை : திருவிழாச் செலவு; திருநாள் காணிக்கை என்பதும் இதுவே போலும்
திருநாற்கட்டிற்கால் : மஞ்சம் ; கட்டில்
திருநிறஞ்செய்தல் : கோயில் மூர்த்திக்குப் பொன்முலாம் இடுதல்
திருநெற்றித்திரணை : கோயில் விக்கிரகத்தின் நெற்றியில் இடும் ஆபரணம்
திருப்பட்டம் : திருமுடி ; கோயில் மூர்த்தியின் நெற்றியில் இடும் ஆபரணம்
திருபட்டிகை : விக்கிரகத்துக்கு அணியும் அரைப்பட்டிகை வகை
திருப்படிக்கரகம் : திருமஞ்சன நீர் வைக்கும் பாத்திரம்
திருப்பரிசட்டம் : விக்கிரகத்துக்குச் சாத்தும் ஆடை ; பரிவட்டம்
திருப்படிமாற்று : கோயில் மூர்த்திகளுக்கு நிவேதிப்பதற்கான பொருளைத் தயாரிக்க வேண்டிய அரிசி முதலிய பண்டங்கள்
திருப்படிமாறுதல் : நிவேதனத்தைத் தயாரித்தல்
திருப்படைவீடு : கடவுள் கோயில் கொண்டுள்ள இடம்
திருப்பணி : கோயிற் கைங்கரியம்
திருப்பதியம் : திருப்பதிகம்
திருப்பள்ளிக் கட்டில் : சிங்காதனம்
திருப்பள்ளித் தாமம், திருப்பள்ளித் தொங்கல் ; கோயில் மூர்த்திகளுக்குச் சாத்தப்படும் மாலை

திருப்பாவாடை: ஆடைமேல் கோயில் மூர்த்திக்குப் படைக்கும் நிவேதனம்; அவ்விதம் படைக்கும் ஆடையையும் குறிக்கும்; அரசன் முதலியோருக்கு மரியாதையாக அளிக்கும் எடுபிடி

திருப்பிறை: சிவபெருமான் விக்கிரகத்துக்குத் தலையில் சூட்டும் பிறை போன்ற ஆபரணம்

திருப்புகை: கோயிலில் இடும் தூபம்

திருப்புதியது, திருப்புதிது: குடிமக்கள் முதல் விளைவைக் கோயிலுக்குக் கடமையாகச் செலுத்துவது

திருப்புறக்குடை: சுவாமிக்குப் பின்புறமாகப் பிடிக்கும் குடை

திருப்புறக்கோடை: பின்பக்கத்து முற்றம்

திருப்பூமண்டபம்: கோயிலில் மாலை தொடுக்கும் இடம்

திருப்போனகம்: சுவாமிக்கு நிவேதனம் செய்யும் அமுது

திருமஞ்சன சாலை: கோயிலில் விக்கிரகத்தை வைத்து அபிஷேகம் செய்யும் மண்டபம்

திருமடவளாகம்; திருமடை விளாகம்: கோயிலைச் சுற்றியுள்ள இடம்

திருமதில்: கோயிலின் சுற்று மதில்

திருமந்திரக்கோடி: கோயில் உற்சவகாலத்தில் உபயோகிக்கப் பெறும் கொடிச் சீலை

திருமந்திரம்: கோயில்

திருமந்திரபோனகம்: நிவேதனம்

திருமந்திர போனப் புறம்: கோயில் நைவேத்தியத்துக்காக விடப்பெற்ற நிலம் அல்லது கிராமம்; மடைப்பள்ளிப்புறம் என்பதும் இதுவே

திருமந்திரவோலை: அரசன் உத்தரவுகளை உரிய துறைகளுக்கு ஓலைமூலம் அனுப்பும் அதிகாரி; கடிதப் போக்குவரத்தைக் கவனிக்கும் அதிகாரி

திருமந்திரவோலை நாயகம்: அரசாங்கத்தின் ஓலை யெழுதும் துறையின் தலைமை அதிகாரி

திருமலை: சிவன் கோயில் கர்ப்பகிருகம்; விமானம்

திருமாளிகைச் சுற்று: திருச்சுற்றுமாலை பார்க்க; திருநடைமாளிகை

திருமாளிகைப் பத்தி: கோயில் திருமதிலை ஒட்டி உட்புறமாக அமைந்துள்ள கட்டடங்கள்; மண்டபம்; சுற்றுக் கோயில்கள்

திருமாளிகைப்பிள்ளை: கோயில் காரியங்களை நிர்வகிப்பவன்

திருமாளிகைப் பிள்ளையார்: சண்டேசுவரர்

**திருமுகக்காணம்:** அரசன் முதலியோரிடமிருந்து வரும் திருமுகங்களைச் சுமந்து வருவோர்க்குக் கொடுக்கும் வரி

**திருமுகத் தேவை:** திருமுகக் காணம் பார்க்க

**திருமுகம்:** ஸ்ரீமுகம்; அரசன் முதலியோரிடமிருந்து வரும் செய்தி; அரசாணை

**திருமெய்காப்பான், திருமெய்காப்பு:** கோவில் மெய்காவல்; கோயில் காப்பான்

**திருமெய்ப்பூச்சு:** கோயில் மூர்த்திகளின் மேல் பூசும் வாசனைப்பூச்சு

**திருமெழுக்கு:** கோயிலை மெழுகுதல்

**திருமேற்கட்டி:** கோயில் மூர்த்தி எழுந்தருளியிருக்கும் இடத்தில் கட்டியிருக்கும் மேல்விதானம்

**திருமேற்கோயில்:** ஊருக்கு மேற்கே அமைந்துள்ள விஷ்ணு ஆலயம்

**திருமேற்பூச்சு:** திருமெய்ப்பூச்சு பார்க்க

**திருமேனி:** விக்கிரகம்

**திருமேனிகாவல்:** கோயில் காவல்

**திருவக்கிரம்:** நிவேதனம்

**திருவட்டமணி, திருவட்டமணிவடம்:** கழுத்தணி; மாலை வகை

**திருவடி:** முனிவர்; திருவாங்கூர் அரசன்

**திருவடிக்காறை:** காலணி வகை

**திருவடிதேசம்:** திருவாங்கூர்ச் சீமை; திருவடி ராஜ்யம் என்பதும் இதுவே

**திருவடிநிலை:** விக்கிரகபீடம்

**திருவடிபிடித்தல்:** கோயில் பூசை செய்தல்

**திருவடிபிடிப்பான்:** கோயில் அர்ச்சகர்

**திருவடிமார்:** மலை நாட்டிலே அரசர், பிராமண அதிகாரிகள், மடத்தலைவர், கோயில் அர்ச்சகர் முதலியோருக்கு வழங்கிய சிறப்புப் பெயர்

**திருவணுக்க வாசல்:** கர்ப்பகிருகத்தின் வாசல்

**திருவமுது:** நிவேதன உணவு

**திருவரங்கிருந்த பெண்டுகள்:** கோயிலில் நடனம் ஆடும் தேவரடியார்

**திருவரங்கு:** கோயிலில் உள்ள பிரதான மண்டபம்; ரங்க மண்டபம்

**திருவாண்டெழுத்திடுதல்:** அரசன் முடிசூடிய காலம் தொட்டு வருஷக் கணக்கிட்டுச் சாசனங்களில் எழுதுதல்

**திருவாணை:** அரசன் ஆணை

**திருவாய்க்கேள்வி:** அரசன் வாய்மொழியாக இடும் உத்தரவுகளைக் கேட்டு உரியவர்களுக்கு எழுத்துமூலம் அனுப்பும் அதிகாரி; அரசன் ஆணையையும் குறிக்கும்

திருவாய்ப்பாடி : கிருஷ்ணன் கோயில்; கோகுலம் எனவும் காணப் பெறும்

திருவாராதனை : திருவாராதனம்; கடவுள் பூசை

திருவாழிக்கல் : விஷ்ணுகோயில் நிலங்களின் எல்லையைக் குறிக்க நடும் சக்கர முத்திரை கொண்ட கல்

திருவானிலை : கருவூர்ச் சிவலாயம்

திருவிடையாட்டம் : விஷ்ணுகோயில்களுக்கு அளிக்கப்பெற்ற தேவ தான நிலம் அல்லது கிராமம்; விஷ்ணுகோயில் ஸ்ரீகாரியம்

திருவிடு : தானசாசனம்

திருவிடைப்பற்று : திருவிடையாட்டம் பார்க்க

திருவிருப்பு : கோயில் அமைந்துள்ள இடம்; கோயில் கட்டடம்

திருவிரையாக்கலி : சிவபெருமான் பெயரால் இடும் ஆணை

திருவிழாப்புறம் : கோயில் உற்சவங்களுக்காக விடப்பெற்ற நிலம்

திருவிளக்குடையார் : கோயிலில் விளக்கு ஏற்றுவோர்

திருவிளக்குக்குடி : கோயிலில் விளக்கு எரிக்கும் கடமை ஏற்று அதற் கான மானிய நிலத்தை அனுபவிக்கும் குடிமக்கள்

திருவீதி நாயகர் : உற்சவ மூர்த்தி

திருவீதிப்பந்தம் : சுவாமி புறப்பட்டு வீதிவலம் வரும்போது பிடிக் கும் தீவட்டி

திருவுடம்பு : திருமேனி; விக்கிரகம்

திருவுண்ணாழி, திருவுண்ணாழிகை, திருவண்ணாழிகை: கர்ப்பகிருகம்; உண்ணாழிகை பார்க்க

திருவுலகளத்தல் : நிலத்தை அளந்து கணக்கிடுதல்

திருவுழுத்து : அணி வகை

திருவெழுத்துச்சாத்துதல் : கையெழுத்து இடுதல்

திரைக்காசு : முன்னாளில் வழங்கிவந்த வரிவகை

தியதி : தேதி; நாள்

திறம் : எண்பது ஆடு, எண்பது பசு, எண்பது எருமை கொண்ட மந்தை

தீட்டு : கையெழுத்திட்ட சீட்டு; எழுதிக்கொடுத்த ஓலை

தீட்டுக்குறி : எழுதிக்கொடுத்த ஓலைச்சீட்டு

தீண்டல் : வயல்

தீண்டாச்சேரி : தொடக்கூடாத சாதி மக்கள் வாழும் இடம்

தீப்போக்குச்செம்பொன் : புடமிடப்பெற்ற சுத்தமான தங்கம்

தீபமாலை : சரவிளக்கு

**தீயேறிசோறு :** ஹவிர்பலி ; கோயிலில் அக்கினி வளர்த்து, அன்னத்தை ஓமம் செய்து இடும்பலி ; அதற்காக வசூலிக்கும் வரி

**தீர்க்கமானியம் :** கோயில் மூர்த்தியை நீராட்டுவதற்காக அளித்த மானியம் ; நீண்டகாலம் நிலைநிற்க வேண்டிய மானியம் என்றும் கொள்வது

**தீவுகரிவு :** பயிர் முதலியன தீய்ந்து போய்க் கேடுறுதல்

**துக்கை :** துர்க்கை

**துஞ்சிய :** உயிர் துறந்த

**துடவு :** ஒரு முகத்தல் அளவு

**துடவை :** விளைநிலம் ; வயல்

**துண்டகவிஷயம் :** தண்டகாரணியம் ; தொண்டை மண்டலம்

**தர்வாயகம் :** வசவு ; இழிசொல்

**துரவு :** பாசனத்துக்கு உதவும் பெரிய கிணறு

**துரு :** வேதம் முதலியவற்றைத் திருப்பிக்கூறும் சந்தை வகை

**துரைமின்னற்பொன் :** ஒரு நாணய வகை

**துல்லியம் :** சரியானது என்று ஒப்புக்கொள்ளப்பட்டது ; சரியான பிரதி

**துலாக்கூலி :** நிறுத்து எடைபோடுவதற்கான வரி; துலாபார வரியும் ஆகும்

**துலாபாரம் :** அரசர் போன்றவர் தராசில் ஒரு தட்டில் ஏறி நின்று மறு தட்டில் அவர் எடைக்குச் சமமான பொன்னையும் மணியையும் இட்டு நிறுத்து, அந்தப் பொன்னையும் மணியையும் தர்மத்துக்கு வழங்கல்

**துலாபாரவரி :** அரசர் துலாபாரம் ஏறுவதற்காக இறுக்கும் வரி

**துளைநிறை, துளைநிறை செம்பொன், துளைநிறை பொன் :** சுத்தமான பொன்

**தூக்கம் :** நிறை ; நிறுத்தல்

**தூக்கம் :** தொங்கலைக்கொண்டு முன்னாளில் வழங்கிவந்த ஓர் ஆபரணம்

**தூக்குத்தலரிசி :** நன்றாகக் குத்திச் சுத்தம் செய்த அரிசி

**தூசிப்படை :** கொடிப்படை; போர்ப்படையில் முன்னதாகச்செல்வது; தூசுப்படை எனவும் பெறும்

**தூசகத்தறி :** பாசறைக்கு வேண்டிய கூடாரத் துணி முதலியவற்றை நெய்யும் தறி ; அதற்கான வரி

**தூபி :** ஸ்தூபி ; கோயில் விமானத்தின் உச்சி

**தூம்பு :** மதகு ; வாய்க்கால் ; நீரோடும் கணவாய்

**தூம்பு :** ஒரு முகத்தல் அளவு

தெண்டகுற்றம், தெண்டந்தீர்வை : *அபராதமாக விதிக்கும் வரி*
தெற்றி : *மேட்டிடம்*
தெற்றியம்பலம் : *கிராமசபை கூடும் மேட்டிடம்*
தென்னம்பழம் : *தேங்காய் நெற்று*

தேசகாலம் : *வேளை ; பொழுது*
தேசவாளி : *கிராமம் முதலியவற்றை, தேசத்தை ஆளும் அதிகாரி*
தேவகர்மி, தேவகன்மி, தேவர்கன்மி : *கோயிலில் சுவாமி காரியம் பார்ப்போர்*
தேவகுடிமை : *கோயிலின் ஆதிக்கியத்தில் வாழும் குடி*
தேவகுலம் : *கோயில்*
தேவதானம் : *கோயிலுக்கு விடப்பட்ட இறையிலி நிலம்*
தேவடிமை : *தேவரடியார், வேலைக்காரி*
தேவரடியார் : *மாகேசுவர சைவர்*
தேவரடியார் : *கோயிலில் பணிபுரியும் பெண்டிர்*
தேவாரதேவர் : *ஆன்மார்த்த பூசைக்கு உரிய மூர்த்தி*
தேவாரம் : *கோயில்*
தேவை : *காரியம் ;*
தேன்பயில் போதும்பு : *தேன் கூடுகட்டியிருக்கும் மரப் பொந்து*
தேஜமானியம் : *அஷ்டபோகம் உள்ளிட்ட நிலத்தின் பூர்ண உரிமை ; தேஜஸ்வாமியம் எனவும் பெறும்*

தைஞ்சை : *தஞ்சை ; தஞ்சாவூர்*
தைப்புமுத்து : *முத்து வகை*
தைவியம் : *தெய்வச்செயல்*

தொக்கைக்குன்றி : *சாகுபடி நஷ்டம்*
தொடையல் : *தோளில் அணியும் பூமாலை*
தொண்டர்சீர் பரவுவார் : *திருத்தொண்டத் தொகையின் ஆசிரியரான சுந்தரமூர்த்தி சுவாமிகள் ; பெரிய புராண ஆசிரியரான சேக்கிழார்*
தொண்டு : *அடிமைத்தனம்*
தொழிற்பட்டிகை : *மகளிர் அரையில் அணியும் பட்டிகை என்னும் ஆபரண வகை, கடைசல் தொழில் கொண்டது*
தொறு : *அடிமையாள்*
தொறு : *பசுக்கூட்டம்*
தொறுநிலை : *பசுக்கள் கட்டும் கொட்டம்*

**தோட்டக்கூறு:** தோட்டத்துக்குத் தகுதியான நிலம்

**தோட்டப்புரவு:** தோட்டக்கால் நிலத்தின்மீது இறுக்கும் வரி

**தோட்டவாரியப் பெருமக்கள்:** தோட்டங்களைக் கண்காணிக்கும் சபையினர்

**தோணிக்கடமை:** தோணிக்கு வாங்கும் வரி

**தோரணக்கால்:** திருவாசிக்கால்

**தோரை:** நான்கு விரல் உள்ள நீட்டல் அளவு

**தோரணகாணிக்கை:** வீதிகளில் தோரணமிட்டு அலங்கரிப்பதற்கான செலவு

**தோலோட்டு:** முன்னாள் வரிகை; உலர்ந்த தோல் பற்றியது போலும்

**தோளாச்செவியர்:** தோளில் இடிக்கும்படியாக வடிந்த காதையுடைய ஒருவகை மக்கள்; லம்பகர்ணர் என்பார் இவரே போலும்

**நக்கன்:** சிவன் கோயிலில் நாட்டியம் ஆடும் தேவடியார் (நக்னமாக நடனம் செய்ய வேண்டியவள்)

**நகரக்கல்:** வியாபாரிகளின் சபையார் வைத்திருக்கும் எடைக்குச் சரியான எடைக்கல்

**நகரங்களிலார்:** வியாபாரிகளின் சபையைச் சேர்ந்தவர்கள்

**நகரசுவாமி:** வியாபாரிகள் தலைவன்; அவர்களுடைய சபைக்குத் தலைமைப் பதவி வகிப்பவன்

**நகரத்தார்:** வியாபாரிகள்; அவர்களுடைய சபையைச் சேர்ந்த நிர்வாகிகள்

**நகரம்:** வியாபாரிகளின் சபை

**நகரவனுச்சை:** நகரத்தாருடைய உத்தரவு

**நங்கை:** ஒட்டியாணம் போன்ற ஆபரணத்தின் ஓர் உறுப்பு

**நட்டவக்காணி:** நட்டுவக்காணி பார்க்க

**நட்டவம்:** நட்டுவம் என்பதன் வேறு வடிவம்; மாணவர்களுக்கு நாட்டியம் கற்றுக் கொடுத்து அவர்கள் நடனமாடுவதை மேற்பார்த்தல்

**நட்டுப் பாழ்:** நாற்று நட்டபிறகு பயிர் பாழான நிலம்

**நட்டுவக்காணி:** கோயிலில் நட்டுவம் பார்ப்போருக்கு அளிக்கப் பெற்ற இறையிலி நிலம்

**நட்டுவத் துரவு:** நட்டுவத் தொழில்

**நடவல்:** பிடுங்கி நடப்பெற்ற நாற்று

**நடை:** கோயில்; கோயிலில் நடக்கும் தினசரி பூசை

**நடைமாளிகை:** கோயிற் பிராகாரம்; திருச்சுற்றுலை

**நடைமாளிகை மண்டபம்:** கோயிலிலே கர்ப்ப கிருகத்தைச் சுற்றி அமைக்கப்பட்டுள்ள கட்டடம்

நத்தம் : கிராமத்தில் குடியிருப்புக்கான இடம்

நத்தப் பாழ் : மக்கள் குடியிருப்பு இல்லாத கிராமம் ; குடியிருப்புப் பாழ் அடைந்த கிராமம்

நந்தாவிளக்கு : இடையறாமல் எப்போதும் எரியும் விளக்கு ; நுந்தா விளக்கு, நொந்தா விளக்கு எனவும் பெறும்

நந்துதல் : பழுதடைதல் ; அழிந்து போதல் ; குறைவடைதல்

நம்பி : கோயில் பூசை செய்பவர்

நம்பிராட்டியார் : அரசன் தேவி

நம்பு : கோயிலில் பூசை செய்யும் தொழில் ; ஆகவே நம்புசெய்வார் : கோயில் பூசை செய்பவர்

நமன மண்டபம், நபன மண்டபம் : (ஸ்நபன மண்டபம்) கோயிலில் அபிஷேக மண்டபம் ; திருமஞ்சன சாலை

நயினர் : நாயனர் ; பெரியோர் ; மரியாதை தெரிவிக்கும் ஒரு சொல்

நரபதி : [மானிடர் தலைவன்] சோழ மன்னர்களும், விஜயநகர அரசர்களும் தரித்திருந்த விருது ; அவர்களுடைய காலாட்படையின் பெருக்கத்தைக் குறிப்பதாக ஏற்பட்டது போலும் (அசுவபதி, கஜபதி என்பன போன்ற விருதுகளை ஒப்பு நோக்குக)

நரவாகன சக்கரவர்த்தி : விஜயநகர மன்னர்களின் விருதுகளுள் ஒன்று; நரபதி என்பதை ஒட்டி எழுந்தது போலும் (நரவாகனன் என்பான் உதயண குமாரனை ஒரு காவிய புருஷனும் ஆவான்)

நல்கிடா, நற்கிடா : கிராமத்திலே காட்சியாக வைக்கப்பட்டுள்ள கிடாவின் பராமரிப்புச் செலவுக்கான வரி

நல்பசு, நற்பசு : கிராமத்தில் காட்சியாக வைக்கப்பெற்றுள்ள பசுவின் பராமரிப்புக்கான வரி ; நல்லாவு, நல்லா எனவும் பெறும்

நல்லெருது : கிராமத்தில் காட்சிக்காக வைத்திருந்த எருது ; பொலி எருதாகவும் பயன்பட்டது போலும் ; அதன் பராமரிப்புக்கான செலவு : அழகெருதுக் காசு, காட்சி எருதுக் காசு என்பனவும் இதுவே

நல்லெருமை : கிராமத்திலே காட்சியாக வைத்திருந்த எருமையின் பராமரிப்புச் செலவுக்கான வரி

நவகருமம் : ஜீர்ணோத்தாரணம் ; புதுப்பித்தல்

நவரை, நவிரை : ஒருவகை நெல், ஆடிமாதத்தில் அறுவடையாவது போலும் ; ஆடிநவிரை என்று காணப்படுவது

நாகு : பசு முதலியவற்றின் கிடாரிக்கன்று

நாட்டாமை, நாட்டாண்மை : தலைமைப் பதவி ; நாட்டின் நிர்வாகத் தலைமை

**நாட்டுக் கணக்கு வரி :** நாடு என்னும் பகுதியின் தீர்வைக் கணக்குகளை எழுதுவதற்கான செலவுக்கு இறுக்கும் வரி ; நாடு என்னும் பகுதிக் கெனக் கொள்ளாமல் இராஜ்யம் முழுவதுக்குமே கொள்வதும் உண்டு

**நாட்டுக் காணிக்கை :** நாடு என்னும் சபையாருக்குச் செலுத்த வேண்டிய காணிக்கை ; அந்தச் சபையார் அரசாங்கத்தாருக்குச் செலுத்தும் காணிக்கையும் ஆகும்

**நாட்டிருவமுது :** (நாள் திருவமுது) கோயிலில் காலையில் நடக்கும் பூஜை நைவேத்தியம்

**நாட்டு நீங்கல் :** அரசாங்கத்தின் வரிப் புத்தகத்திலிருந்து நீக்கி நாடு என்னும் பிரிவுக்கான சபையாரின் வரிப் புத்தகத்துக்கு மாற்றப் பட்டது ; அதனால் அந்த வரியை நாட்டுச் சபையார் உபயோகித்துக் கொள்ளலாம்

**நாட்டுப் பண்டாரம் :** ஜில்லா கஜானு

**நாட்டுபாதி :** (நாடு உபாதி) நாடு என்னும் பகுதிக்கு அமைந்த சபைக் குச் செலுத்தவேண்டிய கடமைகள்

**நாட்டு வினியோகம் :** நாடு என்னும் பிரிவின் சபையார் செலவுக்காக அந்தப் பகுதியில் வாழ்வோர் விகிதாசாரப்படி இறுக்கவேண்டிய தொகை

**நாடன் மஞ்சள் :** மஞ்சளில் ஒருவகை ; சமையலுக்கு உபயோகப் படும் கறிமஞ்சள்

**நாடாட்சி :** நாட்டின் நிர்வாகம்

**நாடு :** இறந்தவர் பொருட்டு கல் நடுவது

**நாடு :** நாட்டின் ஒருபாகம், கோட்டம் கூற்றம் போன்றது ; அதன் நிர்வாகத்தைக் கவனிப்பதற்காக அமைந்த சபையையும் குறிக்கும்

**நாடு கண்காட்சி :** நாடு என்னும் பிரிவின் நிர்வாகத்தைக் கண் காணித்தல்

**நாடு காவல் :** கிராமக் காவலினின்றும் வேறானதாக நாடு என்னும் பிரிவின் காவலை மேற்கொள்வது ; அதற்கான வரியையும் குறிக்கும்

**நாடுகூறு :** நாட்டின் விளைநிலங்களைத் தரம் பிரித்து நிர்ணயிக்கும் அதிகாரி

**நாடு தலையாரிக்கம் :** நாடு காவல் என்பதே ; நாடு என்னும் பிரிவின் காவலைச் செய்வதற்கான வரி

**நாடுவகை :** நாட்டை அளந்து வரி விதிப்பதற்காக அதில் உள்ள பயிரிடும் நிலங்களின் தரத்தை நிர்ணயித்தல்

நாடு வாரியம்: நாடு என்னும் பிரிவின் நிர்வாகத்தைக் கவனிக்க அமைக்கப்பெற்ற சபைக் குழு; நாட்டுவாரியம் எனவும் பெறும்

நாமடந்தை, நாமகள்: சரஸ்வதி தேவி

நாயகத்தனம்: நாட்டின் தலைமை நிர்வாகப் பதவி; அமரநாயகம் என்னும் பதவி; அமரம் என்பதும் இதுவே

நாராச நாழி: முன்னாளில் கோயிலில் வழங்கிவந்த அளவு நாழி; இரும்பால் செய்யப்பட்டது போலும்; நாராய நாழி எனவும் பெறும்

நாவிசம்: நாவிதத் தொழில்; ஆகவே நாவிசன்: நாவிதன்

நாளதினுலே: அந்த நாளிலே

நாற்காலி: நான்கு கால்களைக் கொண்ட ஆசனம்

நானுதேசி: வியாபாரிகளின் பெரிய சங்கம்; அய்யாவழியைத் தலைமையிடமாகக் கொண்டு தென்னுடு முழுவதுமட்டு மல்லாமல் கடல் கடந்த பிரதேசங்களிலும் வாணிகம் செய்துவந்த கூட்டத்தார்

நிசதம், நிசதி: நாள்தோறும்

நிசீதிகை: சமண மதத்தார் பட்டினி நோன்பு பூண்டு உயிர் துறத்தல்; அத்தகையோருக்கு எழுப்பிய ஞாபகச் சின்னத்தையும் குறிக்கும்

நித்தநிமந்தம், நித்தநிவந்தம்: கோயிலில் நாள்தோறும் பூசை நடத்துவதற்கான திட்டம்

நித்தியல்: நாள்தோறும்

நிதி: அஷ்டபோகத்தில் ஒன்று; நிலத்தின் செல்வத்தை அநுபவிக்கும் உரிமை

நிமந்தக்காரர்: கோயில் ஊழியர்கள்; உபயகாரரும் ஆவர்

நிமந்தப்புறம்; கோயிலில் குறிப்பிட்ட கட்டளையை நடத்துவதற்காக விட்ட நிலம் அல்லது கிராமம்

நிமந்தம், நிபந்தம், நிவந்தம்: கோயில் நிர்வாகத்திற்கான திட்டம்

நியதி: நிசதி என்பதன் வேறு வடிவம்; நாள்தோறும்; சிற்சில சமயங்களில் எப்போதும் எனவும் பொருள்படும்

நியாயங்களிலார்: நியாய சபை உறுப்பினர்

நியாயத்தார்: நியாய சபையார்

நியாயத்தார்: நியாயம் வழங்கும் சபையார்

நியாயம்: ஒரே வகையான தொழிலை மேற்கொண்டவர்களுடைய சபை

நியோகம்: அரசன் உத்தரவு; அதனைத் தாங்கிச்செல்லும் அதிகாரி

நிர்த்தமாராயன் : நடனத்தில் வல்லவனுக்கு முன்னாளில் அரசன் அளித்த பட்டம்

நிர்வாக சபை : காரியத்தை நடத்தும் குழுவினர்

நிருத்திய போகம் : கோயிலில் நடனமாடுவோருக்கு விட்ட மானிய நிலம்

நிருபச்சம்மாதம் : ஓலைச்சம்படம் பார்க்க

நிருபம் : ஓலை; அரசன் அல்லது அவன் அதிகாரியிடமிருந்து எழுத்து மூலம் வந்த உத்தரவு

நிலக்கூலி : சந்தையில் விற்பனைக்கு வரும் சரக்குகளுக்கு ஒவ்வொரு பொதிக்கும் வசூலிக்கும் அரிசி

நிலச்சீவிதம் : ஊழியர்களுக்குச் சம்பளத்துக்குப் பதிலாக ஜீவிதமாக அநுபோகத்துக்கு நிலம் அளித்தல்

நிலம் அளவுபடிப் பெருமக்கள் : நிலம் அளவு செய்யும் (ஸர்வே செய்யும்) அதிகாரிகள்

நிலமகள், நிலமடந்தை, நிலமங்கை நாச்சியார் : பூமிதேவி

நிலமடக்குதல் : பயிரிடும் நிலத்தைத் தரவாரியாகப் பிரித்தல்

நிலமுதல் : பயிரிடும் நிலத்தைப் பற்றிய விவரம் அடங்கிய கணக்கு

நிலை : தூண் ; விளக்கின் தண்டு ; தீபக்கால்

நிலைக்களம் : வரி வசூல் செய்யும் கச்சேரி

நிலைப்படை : நிரந்தரமான, ஸ்திரமான சைனியம்

நிலைப்பந்தம் : தெருக்கோடி போன்ற குறிப்பிட்ட இடங்களில் இரவு நேரத்தில் வெளிச்சம் கொடுப்பதற்கென நிரந்தரமாக அமைக்கப் பட்ட பந்தம்

நிலைப்பொலியூட்டு : நிரந்தரமாகக் கிடைக்கும் வட்டி ; நிலத்தின் மீது கடன் கொடுத்தோ ஆற்றுக்கால் தோண்டுவது போன்ற வேறு வேலைகளில் செலவிட்டோ ஆண்டுதோறும் நிலையான வருவாய் கிடைக்குமாறு முதலை உபயோகித்தல்

நிலைமைத்தீட்டு : அரசர்கள் செய்துகொள்ளும் ராஜீய உடன்படிக்கை

நிலையாணி : ஆபாணத்தின் ஆணி ; ஓடாணியினின்றும் வேறானது

நிலையாள் : நிரந்தரமான வேலைக்காரன்

நிலையிறை : ஒரே விதமான மாறாத வரி

நிவந்தம் : கோயில் ஊழியர்களில் அவர் அவர்க்கு உரிய பணி; கோயில் தினசரி செலவுத் திட்டமும் ஆகும்

நிறைச்சளவு : குறைவில்லாமல் சரியாக நிறைந்த அளவு

நிறையெடுத்தல் : நிறுத்தல்

நின்றயம் : நிர்ணயம் என்பதன் வேறு வடிவம்

நின்ற நாழி : நிர்ணய நாழி ; முத்திரை நாழி

நினைப்பு : ஞாபகக் குறிப்பு

நிக்ஷேபம் : அஷ்டபோகத்துள் ஒன்று ; புதையலை எடுத்து அனுபவிக்கும் உரிமை

நீங்கல் : பொதுவாக இறை நீக்குவதைக் குறிக்கும் ; எனினும் இது அரசாங்க வரிப்புத்தகத்திலிருந்து நீக்கப்பெறினும், நாடு போன்ற இதர ஸ்தாபனங்களின் வரிப் புத்தகத்துக்கு மாற்றப்பட்டதாகும் ; அவ்விதம் மாற்றல் பெற்ற ஸ்தாபனங்களின் செலவுக்குப் போவது

நீர்க்காணம் : பாசன நீருக்கான வரி ; நீர்விலை என்பதும் அதுவே போலும்

நீர்க்கோவை : நீர்க்கோப்பு ; ஏரிநீர்க்கோப்பு பார்க்க

நீர்தெளித்தல் : கோயில் கட்டிக் கும்பாபிஷேகம் செய்தல்

நீர் நிலம் : கொல்லை நிலத்தினின்றும் வேறானது ; நன்செய்ப் பயிர் செய்யும் நிலம்

நீர்நி(லை)லக்காசு : ஏரி குளம் போன்றவற்றின் பராமரிப்புக்கான வரி

நீராணிக்கம் : கிராமத்தில் பாசனத்துக்கு நீரை முறையாக விடும் பொறுப்பு ; அதை மேற்பார்வையிடும் அதிகாரி

நீராணிக்கவரி : நீராணிக்கத்துக்காக இறுக்கும் வரி ; நீராணி வரி எனவும் பெறும்

நீர்வியார் : நானாதேசி என்னும் வியாபாரிகளில் ஒரு குழுவினர் ; ராஜராஜப்பெருநீராவியார் என்பது போன்ற பெயருடன் விளங்கியவர்; கடல்கடந்து வியாபாரம் செய்தவர் போலும்

நீர்விலை : தண்ணீர் வரி

நூலாயம் : துணி நெய்வதற்கான நூல் மீது இறுக்கும் வரி

நூலேற்றம் : கோயிலில் நடக்கும் துவஜாரோஹணம்

நெட்டாள் : வெட்டி என்பதனோடு தொடர்பு கொண்டது ; கிராமப் பொது வேலைக்கு அது முடியும் வரையில் வரையறையில்லாமல் ஆள் அனுப்பி முடிக்கவேண்டிய கடமை ; அந்த ஆளுக்கான செலவும் ஆகும்

நெய் : நெய் வியாபாரிகள் இறுக்கும் வரி ; நெய்விலை என்பதும் இதுவே ; எண்ணெய் என்பதையும் பார்க்க

நெய்தாங்கி : தீபஸ்தம்பம்

நெய்யாடுதல் : கோயிலில் உள்ள விக்கிரகத்துக்கு நெய்க்காப்பு இடுதல்

நெல்முதல் : வரிக்காக இறுக்கப்பெறும் நெல் ; அதன் விவரம் அடங்கிய கணக்கு ; இன்னும் வட்டி பெறுவதற்கு நெல்லாக விடப் பெற்ற முதலையும் குறிக்கும்

நெல்லாயம் : நெல்லாகவே இறுக்கும் வரிவகை ; நெற்கடமை எனவும் பெறும்

நெல்லிக்காய் முத்து : ஒருவகை மாலை

நெல்லூர் மாடை : முன்னாளில் நெல்லூரிலிருந்து வழங்கப்பெற்ற ஒரு நாணயம் ; நெல்லூர்ப் புதுமாடை என்றும் காணப்பெறும் ; கண்ட கோபாலன் மாடை என்பதும் இதுவேயாகும்

நெற்கூறுசாலை : நெல் குத்தும் இடம்

நெற்பொலிசை : நெல்லாக இறுக்கும் வட்டி

நொந்தா விளக்கு : நந்தா விளக்கு பார்க்க

நோக்கிமாடை : முன்னாளில் வழங்கிவந்த நாணயம்

நோக்குதல் : கண்காணித்தல் ; மேற்பார்வை

நாயகவாடி : அரசாங்கத்தாராலோ, நிலத்தின் சொந்தக்காரராலோ அறுவடைக்குச் சிறிது முன்னதாகப் பயிரைக் காக்க அனுப்பப் பெறும் காவல்காரன் ; அவனுக்குச் சம்பளமாக விடப்பெறும் நிலம் காக்குநாயக விளாகம் எனப்பெறும்

நடுவிருக்கை : அரசாங்கத்துக்கும் குடி மக்களுக்கும் நடுவில் இருந்து உதவிசெய்யும் அதிகாரிகள் ; பொதுநலத்தொடர்பு அதிகாரிகள் ; மத்தியஸ்தரும் ஆகும்

பக்க வாத்தியர் : வாய்ப்பாட்டுக்குத் துணையாக நிற்கும் இசைக்கருவியாளர்

பக்கிணம் : பக்ஷணம் ; பணியாரம்

பக்கிழம் : பக்ஷம் ; பட்சம்

பக்தாதாயம் : நெல்லாக இறுக்கும் தீர்வை ; நெல் வருவாய்

பகலிருக்கை : நாளோலக்க மண்டபம் ; அரசன் சபா மண்டபம்

பகுற்றுதல் : சமமாகப் பங்கிடுதல் ; சரியாகப் பிரித்தல்

பங்களப்படை : பதர்போன்ற கூட்டுப்படை, புதிதாக நிறுவியது

பச்சை : இறை ; காணிக்கை ; நன்கொடை ; சாமான்களாகக் கொடுக்கப்பெறுவது

பச்சைப் பணம் : சாமான்களாகக் கொடுக்கும் பச்சையைப் பணமாக அளிப்பது ; பச்சைப் பாட்டம் என்பதும் இதுவே

**பசலை மரம் :** பயன் தரும் மரம்

**பசான், பசானம் :** சித்திரை மாசம் அறுவடையாகும் நெல்; இவ்வகை நெல்லின் அறுவடைக் காலம்

**பசித்து வாழ்தல் :** ஏழையாக வாழ்க்கை நடத்தல்

**பசுங்கூட்டு :** சுண்ணும்புச் சாந்து

**பஞ்சக்கம் :** ஐவர் கூடிச்செய்த முடிவு

**பஞ்சகம்மாளர் :** தட்டார், கன்னர், சிற்பி, தச்சர், கொல்லர் என்ற ஐவகைக் கம்மாளர்

**பஞ்சகவ்வியம் :** ஆனஞ்சு பார்க்க

**பஞ்சபத்திரம் :** சுவாமிக்குப் படைக்கும் நைவேத்திய வகை; பஞ்ச பக்ஷியம் என்பதே போலும்

**பஞ்சமாசத்தம், பஞ்சமஹாசப்தம் :** சிற்றரசர் போன்றவர்களுக்கு உரிமையுள்ள ஐவகைப் பறை.[செண்டை, திமிலை, சேகண்டி, கைத் தாளம், காளம் என்னும் ஐவகையாகக் கொள்வர். தத்தளி, மத் தளி, கரடிகை, தாளம், காஹளம் என்னும் ஐவகை என்பர் மற்ருெரு சாரார்]

**பஞ்ச திரவியம் :** கோயிலில் அபிஷேகத்துக்கான ஐந்து பொருள்கள்

**பஞ்சரம் :** விமானத்தின் சுவரில் காணும் மாடம்; கூடு எனவும் பெறும்

**பஞ்சரத் திருவிளக்கு :** கோயிலில் ஏற்றும் விளக்கு வகை; பஞ்சரம் அல்லது கூடுபோல் அமைந்துள்ள சரவிளக்கு

**பஞ்சவமுது :** பஞ்சாமிர்தம்

**பஞ்சவர் :** பாண்டியர்

**பஞ்சவாரம் :** பஞ்சவாரவாரியம் எனவும் ஆகும்

**பஞ்சவாரம் :** அரசாங்கத்துக்குச் சேரவேண்டியதான, விளைவிலே ஐந் தில் ஒரு பங்கு எனவும் கொள்வர்

**பஞ்சவாரவாரியம் :** கிராம காரியத்தைக் கவனிக்கச் சபையால் நியமிக் கப்பெறும் ஐந்து குழு

**பஞ்சவார வூரிடு வரி :** கிராமச் சபையின் நிர்வாகக் குழுவான பஞ்ச வாரவாரியத்தாரால் விதிக்கப்பெற்ற கிராம வரி

**பஞ்சாசாரியர் :** சிவன் கோயிலில் பூசை செய்வோர்

**பஞ்சாமிர்தம் :** வாழைப்பழம், திராக்ஷை, சர்க்கரை, தேன், நெய் ஆகிய ஐந்தும் சேர்ந்த அபிஷேகப் பண்டம்

**பஞ்சால அச்சு :** முன்னாளில் வழங்கிய நாணயம்; பஞ்சாலத்தார் அடித்து வழங்கியது போலும் பஞ்ச சலாகை அச்சு என்று காணப் பெறுவதும் இதுவே

**பஞ்சாளர், பஞ்சலத்தார், பஞ்சாளத்தார் :** பஞ்ச கம்மாளர்

பஞ்சுப் பீலி: பஞ்சின்மீது இறுக்கும் வரி; பஞ்சுபிலி எனவும் பெறும்

பட்டசாலியன்: நெய்வோருள் ஒரு பிரிவினர்; பட்டு நெய்வோர் போலும்

பட்டடை வரி: நெல் பட்டடைக்காக, நெல் அடிக்கும் களத்துக்காக இறுக்கும் வரி

பட்டணஸ்வாமி: நானாதேசி எனப்படும் வியாபாரக் குழுவின் நகரத் தலைவன்; அவனுக்கு வழங்கிய பட்டப் பெயர்

பட்டப்பாழ்: சாகுபடியில்லாத நிலம்

பட்டம்: நெற்றியில் அணியும் பொன் தகடு

பட்டமார்: கோயில் பூசை செய்வோர்

பட்டயகாணிக்கை: தாமிர சாசனம் பெறுவதற்கு இறுக்கும் காணிக்கை

பட்டயம்: தாமிர சாசனம்

பட்டவிருத்தி: கல்வி வல்ல பிராமணர்க்கு இறையிலியாக விடப்பெற்ற நிலம்; பட்டவிருத்தி மானியம் எனவும் பெறும்

பட்டாடை ஆயம்: பட்டுத்துணியின்மீது இறுக்கும் வரி

பட்டாடை நூலாயம்: பட்டு நூலின்மீது இறுக்கும் வரி

பட்டாரகர்: கடவுள்; ஞான குரு

பட்டாரிகை: துர்க்கை

பட்டாவளப்பட்டு: பட்டுவகை

பட்டாவளி: பட்டம்பெற்ற குருமாரின் தலைமுறை வரிசை

பட்டிக்காடி: ஒரு பட்டி நிலத்துக்கு ஒரு காடி வீதம் இறுக்க வேண்டியது போலும்; பட்டிக்கால், பட்டிப்பொன் என்பனவும் இவ்விதமே ஆகும்போலும்

பட்டிகை: மேகலை

பட்டிகைக்காணம்: ஒரு பட்டிகைக்கு ஒரு காணம் வீதம் இறுப்பதாகலாம்; பட்டயக் காணிக்கை என்பதாகவும் கொள்ளலாம்

பட்டித்தண்டம்: கிராமத்தார் இறுக்கவேண்டிய தண்டப்பணம் போலும்

பட்டிறைப்படுதல்: வரிபோன்றவை செலுத்தப்படாமல் பாக்கி விழுதல்

பட்டோலைக் காசு: திருமுகக் காசு பார்க்க

படகம்: ஒரு நில அளவு

படங்கழி: முன்னாளில் வழங்கிய வரிவகை; எதைக் குறிப்பதென்பது தெரியவில்லை

**படப்பு :** வீட்டின் புழைக்கடை ; வீட்டின் பக்கத்துள்ள இடம் (மனை யும் மனைப் படப்பும்)

**படர் :** சொந்தச் சேவகன் ; போர் வீரன்

**பட்லிகை :** ஓர் அளவு

**படாகை :** உட்கிடை கிராமம்

**படிக்கம் :** அபிஷேக நீர் முதலியவற்றை ஏந்தும் பாத்திரம்

**படித்தரம், படித்தனம் :** கோயிலின் தினசரி செலவுக் கட்டளை

**படிவிஞ்சனம் :** கோயில் நித்தியப் படித்தரத்தில் வியஞ்சனப்பொருள்

**படுகலம் :** கடன் பட்டதற்கு எழுதிக் கொடுக்கும் பத்திரம்

**படைக்கலம் :** போர் புரியும் ஆயுதங்கள்

**படைநாயகம் :** சேனைத் தலைமை

**படை நிலை :** படைகள் தங்கியிருக்கும் இடம்

**படைப்பணம் :** சேனையின் பராமரிப்புக்காக இறுக்கும் வரி ; தண்டமாக இறுப்பதுபோலும் ; போர்ப்படையினர் இறுப்பதாகவும் கொள்ளலாம் ;

**படைப்பற்று :** படையின் அனுபோகத்தில் உள்ள நிலம் ; பாளையம் ; நாட்டின் காவலுக்கான படைகள் தங்கியிருக்கும் இடமும் ஆகும்

**படையழிவு :** பயிர்களுக்குப் படைவீரர்களால் நேரிடும் சேதம்

**பண் :** வயல் ; பயிரிடும் நிலம்

**பண்குறுணி :** ஒரு வயலுக்குக் குறுணி வீதம் இறுக்கும் வரி

**பண்ட வேட்டி :** வெட்டி வகை ; கோயில் நிலத்துக்கானதுபோலும்

**பண்டாடு பழநடை :** நீண்ட காலமாக நடந்து வரும் வழக்கம்

**பண்டாரக் கண்காணி :** கஜானா அதிகாரி ; பொக்கிஷத்து அதிகாரி

**பண்டாரக்கல் :** அரசாங்கப் பொக்கிஷத்தில் உபயோகிக்கும் நிறை

**பண்டாரவாடை :** அரசனுக்குச் சொந்தமான கிராமம் அல்லது நிலம்

**பண்டாரவாரியம் :** கோயில் விசாரணைச் சபையார்

**பண்டாரி :** கஜானா அதிகாரி

**பண்ணிக்கக் கூலி :** செய்து முடித்த காரியத்துக்கான கூலி

**பணம் :** வீரபாஞ்சாலத்தார் என்னும் தொழிற் சபையின் உறுப்புக்களான தனிக் குழாம்

**பணவர்க்கம் :** காசாகச் செலுத்த வேண்டிய வரிகள்

**பணவாசி :** பணத்தின் தேய்வு கழிவுக்காக இறுப்பதுபோலும்

**பணிக்கோத்து :** கிராம ஊழியர்கள் ; அவர்களுக்காக வசூலிக்கும் வரி

பணிமகன் : வேலையாள்

பத்திரகடம் : பூர்ண கும்பம்

பத்தெட்டுக் குத்தரிசி : நன்கு குத்தித் தீட்டிய அரிசி

பதிபாதமூலம், பதிபாதமூலத்தார், பதிபாதமூலப்பட்டுடையார், பதிபாத மூலப்பஞ்சாசாரியர் : சிவன் கோயிலை நிர்வகிப்பதற்காகப் பூசை செய்வோரைக் கொண்ட சபை ; மூலபரிஷத் என்பதும் இதுவே போலும்

பதியார் : கோயிலைச் சேர்ந்த ஊழியர் ; பதியிலாரே போலும்

பதியிலார் : கோயிலைச்சேர்ந்த கணிகையர்

பதினறுமார் : பதினறு பேர் கொண்ட கோயில் விசாரணைச் சபை

பதுவாரம் : நிலப் பரிவர்த்தனைக்காக அளிக்கப்பெறும் வரி ; மாறுதலுக்கான வரி ; பதவாரம் எனவும் பெறும்

பயரப்பெறுதல் : அரசாங்கத்தாரால் திரும்ப எடுத்துக்கொள்ளப் பெறுதல்

பயிற்றுதல் : நிலத்தைச் சாகுபடிக்கு ஏற்பத் திருத்திப் பண்படுத்தல்

பயிரேற்றி : பயிர் செய்து; விளைவித்து

பரக்கூலி : சுமை கூலி

பரதேசி : வெளியார் ; வெளிநாட்டார் ; நானாதேசி என்னும் வியாபாரக் குழுவில் ஒரு பிரிவினர் ; வெளிநாட்டு வியாபாரம் செய்வோர்

பரப்பு : வரிக்கணக்கு ; பரம்பு எனவும் படும்

பரம்பர் : உழவர் குடிவகை

பரம்பு : வரிக் கணக்கு ; பரப்பு எனவும் படும்

பரமக்கன்கல் : உடன் கட்டை ஏறியவளுக்காக நட்ட கல்

பராவிவைத்தல் : நேர்த்திக் கடனாக அளித்தல்

பரிக்கிரகத்துப் பெண்டுகள் : கோயில் பணிப் பெண்கள்

பரிகரம் : உபகரணம் ; தேவையானவை ; பரிவாரம்

பரிகாரம், பரிஹாரம் : விலக்கு

பரிகாரன் : வேலைக்காரன்

பரிசட்டம் : பரிவட்டம் பார்க்க

பரிசு : வகை, விவரம் ; பரிது எனவும் பெறும்

பரிமாறுகிற : வழக்கில் இருக்கிற ; நடமாட்டத்தில் உள்ள (பணம்)

பரிவட்டம் : ஆடை ; விக்கிரகத்துக்குச் சாத்தும் கூறை ; கோயிலில் தரிசிப்போர் தலையில் மரியாதையாகக் கட்டும் கடவுள் ஆடை; பரியட்டம் எனவும் பெறும்

பரிவாரக் கோத்து, பரிவாரக் கோந்தம் : கோயிற் பணியாளர்கள்

பரும்புடவை : ஆடை வகை

பருமுளைவராகன் : முன்னாளில் வழங்கிய நாணய வகை

பலகாயம் : மிளகு, கடுகு போன்று கறிக்கு உதவும் பண்டங்கள்

பலதளி : பல மூர்த்திகளுக்கும் சந்நிதிகள் கொண்ட கோயில்

பலவரவை : பல வழியில் சில்லறையாகச் சேர்ந்தது

பலி : கோயில் பூசையின்போது தீ வளர்த்துச் சோற்றை ஓமம் செய்வது

பலிசை : வட்டி; பொலிசை எனவும் காணப்பெறும்

பலித்தாலம் : ஸ்ரீபலி நடத்துவதற்கு உபயோகிக்கும் தட்டு

பவிழிய சரணத்தார் : ரிக் வேதத்தைச் சேர்ந்தவர்; பௌழிய சரணத்தார் எனவும் பெறுவர்

பவிஷ்யக்கிடைப்புறம் : ஒருவர் கிராமத்திலேயே வசித்துப் பாடம் சொல்லுவதற்காக வரியில்லாமல் அளிக்கப்பட்ட நிலம்

பழம்புள்ளி மாடை : முன்னாளில் வழங்கிவந்த நாணய வகை

பழமுதல் கண்காணி : கோயில் மேற்பார்வையாளன்

பள்ளி : சமணர் கோயில்; பௌத்தர் கோயில்

பள்ளிச் சந்தம் : சமணர் பௌத்தர் கோயில்களுக்காக வரியில்லாமல் விடப்பெற்ற நிலம் அல்லது கிராமம்

பள்ளித்தாமம், பல்ளித்தொங்கல் : கோயில் மூர்த்திக்கு அணிவிக்கும் பூமாலை

பள்ளிப்பீடம் : ஆசனம்; சிங்காதனம்

பள்ளிச் சிவிகை : கோயில் உற்சவத்தில் மூர்த்தி எழுந்தருளும் பல்லக்கு

பள்ளி விளாகம் : சமணர் பௌத்தர் கோயிலைச் சுற்றியுள்ள குடியிருப்புப் பகுதி

பளிக்கு வயிரம் : வைர வகை; பளிங்கு என்பதே போலும்

பளிங்கு : புஷ்பராகம்

பற்றடை : தொழிற்சாலை

பற்றுமுறி : ரசீது; பெற்றுக்கொண்டதற்கு ஒப்பம்

பறைத்தறி : துணி நெய்யும் தறிவகை; அதற்கான வரியையும் குறிக்கும்

பறைத்துடைவை : பறையர்க்கு விட்ட மானியம்; பறைமை என்பதும் இதுவே போலும்

பறையிறை: முன்னாளில் காசாக இறுத்து வந்த வரி; பறையரிட மிருந்து வசூலிக்கப்பெற்றதுபோலும்; அவர்களுக்காக இறுக்கப் பெற்றதாகவும் கொள்ளலாம்

பன்றியாழ்வார்: விஷ்ணுவின் வராஹாவதாரம்

பனம் பற்று: பனந் தோப்பு

பனிநீர்: பன்னீர்

பஸ்தி: சமணர் கோயில்; ஜைனர் ஆலயம்

பாக்கம்: சிறுமூட்டை

பாகவதநம்பி: வைஷ்ணவ அடியார்

பாகுவலயம்: தோள்வளை

பாசனம்: (பாஜனம்) சாப்பிடும் பாத்திரம்

பாசி: ஏரி, குளம் முதலிய நீர்நிலைகளிலிருந்து மீன் முதலிய வரு வாய் வகைகள்; மச்ச மாசூல்

பாசிப்படை: திடீரென்று தாக்கும் பலம் வாய்ந்த சேனை

பாசிப்பாட்டம்: மீன் பிடிப்பதால் கிடைக்கும் வருவாய்; மீன்பாட்டம் எனவும் ஆகும்

பாட்டநெல்: ஒப்பந்தப்படி குத்தகைக்காரனால் சொந்தக்காரருக்கு அளக்கப்படவேண்டிய நெல்

பாட்டம்: வரி; தொழில் வரிபோலும்

பாட்டமாளன்: வரி வசூலிக்கும் அதிகாரி; உழவுப் பாத்தியதை உடையவன்

பாட்ட விருத்தி: பாட்டமீமாம்ஸையின் பிரவசனத்துக்காக விடப் பெற்ற நிலம்; பட்டவிருத்தி எனவும் கொள்வர்

பாட்டிமை: பிரதமை திதி

பாடகம்: மகளிர் காலில் இடும் ஆபரணம்

பாடகம்: வயலின் தளை; விளைநிலப் பகுதி

பாடவரி: உலோகத்தால் ஆன முகம் பார்க்கும் கண்ணாடிக்கு இறுக் கும் வரி

பாடவியம்: ஒருவகை வாத்தியம்

பாடன்: இரத்தினம், உலோகத்தகடு முதலியவற்றின் ஒளி

பாடி(க்)காவல்: கிராமக் காவல்; அதற்கான வரியையும் குறிக்கும்

பாடிவேட்டை: கோயில் உற்சவங்களுள் ஒன்று; பாரிவேட்டை எனவும் பெறும்

பாடு தாங்குதல்: துணை நிற்றல்

பாண்டிவரி : மாடு கட்டி ஓட்டும் வண்டிக்கான வரிபோலும்
பாணிச்சாய் : கள் போன்ற முத்து நிறம்
பாத சாலம் : காலணி வகை
பாதபாசம் : காலணி வகை
பாத புஷ்பம் : பாத காணிக்கை
பாதவக்காணி : கோயில் வேலைக்காரர்களுக்கு உரிய படித்தர நிலம்
பார்க்கோல் : கட்டியக்காரன் ஏந்திவரும் தடி ; கட்டியத் தடி
பார்ப்பனச் சேரி : பிராமணர் குடியிருப்புப் பகுதி
பாரக்கூலி : சாமானை எடுத்துப் போவதற்கான கூலி
பாரசிவன் : பாரசவன் என்பது போலும் ; ஆயுதம் தரித்தவன் ; போர்வீரன்
பாரதப்புறம், பாரதவிருத்தி : மகாபாரதம் படித்துக் கதை சொல்லுவதற்காக விட்ட நிலம்
பாரதவர் : மீன் பிடிப்போர் ; பரதவரே போலும்
பாரதாயன் : பாரத்வாஜ கோத்திரத்தைச் சேர்ந்தவன்
பாரிசஞ் செய்தல் : பொறுப்பாக்குதல் ; ஒப்படைத்தல்
பாருபத்தியம் : நிர்வாகம்
பாவாடை : திருப்பாவாடை பார்க்க
பாழி : ஜைனர் கோயில் ; பள்ளி ; மலைக்குகை
பாற்படுத்தல் : நேர்மையாக நடத்திவைத்தல் ; கிரமமாக நிர்வகித்தல்; ஒழுங்கு செய்தல்
பாறைக்காணம் : வண்ணான் தோய்க்கும் கல்லுக்காக இறுக்கும் வரி; வண்ணான்பாறை எனவும் பெறும் ; பாறையை உடைத்துச் சல்லிக்கல் செய்வதற்கான வரியாகவும் கொள்வர்
பாஷாணம் : அஷ்டபோகத்துள் ஒன்று ; பாறை நிலமும் அதனால் கிடைக்கும் பொருளும் ஆகும்
பாஷிய விருத்தி : ஸ்ரீபாஷ்யம் எனப்படுவதும் வேதாந்த சூத்திரத்துக்கு இராமாநுஜர் எழுதியதுமான விசிஷ்டாத்துவைத பாஷியம் விளக்கிச் சொல்லுவாருக்கு விட்ட மானிய நிலம்

பிங்காளம் : உலோகத்தால் ஆன ஒருவகைப் பாத்திரம்
பிஞ்சு : ஆபரணத்தில் பிஞ்சுபோன்ற உருவத்தில் அமைந்துள்ள உறுப்பு
பிச்சதேவர் : சிவபெருமான் ; பிக்ஷாடன மூர்த்தி ஆகும் ; பித்தன் எனவும் கொள்ளலாம்

பிடாகை: படாகை; உட்கிடை கிராமம்

பிடாநாழி: புதாநாழி பார்க்க

பிடாரர்: பட்டாரகர்; சிவபெருமான்; குருவையும் குறிக்கும்

பிடாரிப்பட்டி: பிடாரி கோயிலுக்காக விடப்பட்ட நிலம்; பிடாரி விளாகம் எனவும் குறிக்கப்பெறும்

பிடி சூழ்ந்து: பெண் யானை சுற்றி வர; தானம் அளிக்கப்பெற்ற கிராமம் அல்லது நிலத்தின் எல்லையைச் சுற்றி வந்து நிர்ணயிப்பது

பிடிபாடு: ஆதாரச் சீட்டு; ஆதரவு

பிடிவிளக்கு: கைப்பிடி கொண்ட தீபம்

பியர்: பெயர் என்பதன் வேறு வடிவம்

பிரசண்ட காணிக்கை: (பிரசண்டம்—கடுமையான, பயங்கரமான) படைப் பணம் என்பதனுடன் சேர்ந்து காணப்படுகிறது; படை வரியில் ஒரு வகை

பிரசத்தி: பிரசித்தி; பிரகடனம் செய்தல்; பறையறைந்து அறிவித்தல்

பிரசாதப்படுதல்: அனுக்கிரஹம் செய்ததைப் பெற்றுக்கொள்ளுதல்; அளித்ததை ஏற்றல்; அரசன் ஆணையை ஏற்றல்

பிரசாதம் செய்தல்: அனுக்கிரகித்தல்; அளித்தல்; அரசாணை

பிரசிஷ்யன்: சிஷ்யனுடைய சிஷ்யன்; சிஷ்ய பரம்பரையையும் குறிக்கும்

பிரட்டன்: பிரஷ்டன்; நெறியினின்றும் வழுவியவன்

பிரதானி ஜோடி: குறைந்த விகிதத் தீர்வையில் மந்திரிகளுக்கு அளிக்கப்பெற்ற இனும் கிராமம்

பிரதிகிரகம்: தானம் அளிப்பதை ஏற்றுக்கொள்வது

பிரபாவளி, பிரபை: திருவாசி

பிரமதானம்: பிராமணர்களுக்கு வழங்கிய தானம்

பிரமதேயம்: பிராமணர்களுக்குத் தானமாக வழங்கப்பெற்ற கிராமம்; அகரப்பிரமதேயம் எனவும் பெறும் (அகரம்—வரியில்லாதது)

பிரமதேயக் கிழவர்: பிரமதேயக் கிராமங்களின் சொந்தக்காரர்; அத்தகைய கிராமங்களின் அதிகாரி எனச் சிலர் கொள்வர்

பிரம மாராயன்: பிராமண மந்திரிக்கு அளிக்கப்பெற்ற பட்டப்பெயர்

பிரம மேதம்: புனிதமானவர்களுக்கு நடைபெறும் ஈமச்சடங்கு வகை

பிரமாணம்: பத்திரம்; ஆதரவுச்சீட்டு

பிரமாதம் விளைதல்: உயிர் போதல்; இறத்தல்

பிரம்மாதி ராஜர், பிரம்மாதி ராயர், பிரம்மராயர் : மந்திரிகளிலே பிராமணர்களாக உள்ளவர்களுக்கு அளிக்கப்பட்டு வந்த சிறப்புப் பெயர்

பிரவேசகம் : நுழைவு

பிரஹாரம் : மாணிக்கக் குற்றங்களுள் ஒன்று

பிராணாந்திகம் : ஆயுள் முடியும் வரையில்

பிராப்தி : அடைவது; பேறு; பிராத்தி, ப்ராப்தி எனவும் காணப் பெறும்

பிராமண ராசக்காணம் : பிராமண புரோகிதர்கள் அரசருக்கு இறுக்க வேண்டிய வரி;

பிரீதிப் பிரமாணம் : அன்பினால் அளிக்கும் நிலத்துக்கு உரிய பத்திரம்

பிரும்மத்தானம், பிரம ஸ்தானம் : ஊரில் பிராமணர்கள் குடியிருக்கும் பகுதி; ஊர்ச்சபை கூடும் இடம்

பிரும்மபுரி, பிரமபுரி : அகரப் பிரமதேயமே போலும்

பிள்ளைகள் தனம் : இராஜ குடும்பத்து இளைய பரம்பரையைச்சேர்ந்தவர்களைக் கொண்டு உருவாகிய அதிகார வர்க்கம்

பிள்ளையார் நோன்பு : விநாயக சதுர்த்தி; கோயிலில் அந்த உற்சவத்தை நடத்தி வைப்பதற்காக விடப்பெற்ற மானியம் அல்லது இறுக்கப்பெறும் பணம்; பிள்ளையார் நோன்புத் தேவை, பிள்ளையார் நோன்புப்பச்சை எனவும் குறிக்கப்பெறும்

பிள்ளை வரி : குமாரர் அல்லது பிள்ளைகள் (இராஜகுமாரர்) என்று குறிக்கப்பெறும் சிற்றரசர் (அதிகாரி) வர்க்கத்தாருக்காக இறுக்கும் வரி; குமார கச்சாணம் என்பதும் இதுவே போலும்; (கல்யாணபுரத்திலிருந்து அரசாண்ட மேலைச் சாளுக்கிய சாசனங்களில் காணும் குமார விருத்தி என்பதை ஒப்பிட்டுக் காண்க)

பிற்கூறுதல் : முற்கூறியதை ஏற்றுச்சொல்லுதல்; ஆமோதித்தல்; ஒப்புக்கொண்டதைத் தெரிவித்தல்

பின்தோன்றல் : தம்பி

பீடிலிகைவாரி : கோயில் அதிகாரிகளுள் ஒருவர்; நிர்மாலியத்தை அகற்றும் பொறுப்பு வாய்ந்தவர் போலும்

புக்தி : அனுபவித்தல்; புத்தி எனவும் எழுதப்பெறும்

புட்டகம் : ஆடை, சீலை

புட்டக வரி : சீலை விற்போர் செலுத்தவேண்டிய வரி

புடவை, புடைவை : ஆடை ; துணி

புண்ணிய கணப்பெருமக்கள் : தர்மங்களையும் அவற்றின் நிலங்களையும் நிர்வகிக்கும் சபையார்

புணை : பிணை ; ஆள் ஜாமீன்

புதாழி : புதாநாழி பார்க்க

புதாநாழி : முன்னாளில் வழங்கிவந்த வரி வகை; ஒவ்வொரு வீட்டு வாசல் நிலையைக் கணக்கிட்டு நாழிநெல்லாக வசூலிக்கப்பெற்றது போலும்

புதியது, புதியிது : அறுவடையானதும் புதுநெல்லைக் கடவுளுக்குப் படைப்பது

புதுவது : புதியது

புதுவரி : புதியதாக ஏற்படுத்தப்பெற்ற வரி

புரட்டன் : ஏமாற்றுபவன் ; பொய்யன்

புரவரியார் : அரசிறைக் கணக்கர்

புரவு : நிலவரி; அரசிறை ; இக் கணக்கு அடங்கிய புத்தகம்

புரவுவரி, புரவரி : அரசாங்கத்து வரிக்கணக்கு ; அதை நிர்வகிக்கும் அதிகாரி

புரவு நெல் : நெல்லாக இறுக்கும் வரிவகை ; அவ்விதம் வசூலிக்கப் பெற்ற நெல்லையும் குறிக்கும்

புரவு பொன் : பொன்னாக இறுக்கும் வரி; அவ்விதம் வசூலித்த பொன்னையும் குறிக்கும்

புருஷாகாரம் : மானிட உருவம்

புரையிடம் : தோப்பு

புரோகிதக்காணியாட்சி : புரோகிதராக இருக்கும் பாம்பரை உரிமை

புல்லந்தி : மேய்ச்சல் தரையில் மேயும் மாடுகளைப் பற்றியதுபோலும் ; திருட்டு மேய்ச்சலுக்கு வசூலிக்கும் தண்டமாக இருக்கலாம்

புலவரி : (புலம்+வரி) நிலத்தின் வரி எனப் பொருள்படும் ; ஆயினும் புல்வரி என்றே வாசிக்க வேண்டும் எனத் தோன்றுகிறது

புலிமானியம் : புலியைக்கொன்ற ஒருவனுக்கு விட்ட மானிய நிலம்

புழுகு கடமை : கோயில் மூர்த்திக்குப் புனுகுசட்டம் இடுவதற்காகும் செலவுக்கு இறுக்கும் பணம் ; புழுகுவரி எனவும் பெறும்

புழுதிபாடு : தரிசு நிலம்

புள்ளடிக்கல் : எல்லைக்கல்

புள்ளி : நபர் ; குறிப்பிட்டவன்

புள்ளிக்குளிகை வராகன் : முன்னாளில் வழங்கிய நாணய வகை

புள்ளிச்சோறு : சோறு ஊட்டவேண்டிய கடமை

புளியிட்டடும் கறி : புளிங்கறி ; புளி சேர்த்துச் செய்யும் கறி

புறக்கடமை : தர்மத்துக்காக விடப்பட்ட நிலங்களின் மீது இறுக்கும் வரி ; உள்வரியினின்றும் வேறானது ; புறவரி எனவும் ஆகும்.

புறக்கடித்தல் : வெளியேற்றுதல்

புறக்கலனையார் : வேறு கிராமத்தில் தொழில் நடத்துவார்

புறக்கழனியார் : வெளியூரில் நிலம் உள்ளவர்; உழுது பயிரிடும் நிலம் ஓர் ஊரில் இருக்க வேறு ஊரில் வாழ்வார்

புறக்குடி : பண்ணையாள் அல்லாத குடியானவன் ; தர்மத்துக்கான நிலத்தைப் பயிரிடுபவன் ; வெளியூர் சென்று சாகுபடி செய்பவன்

புறக்கோடை : கோயிலின் வெளிப்புறம்

புறக்கோயில் : வெளியே உள்ள கோயில் ; பரிவார தேவதைகளின் ஆலயம் ; சுற்றுக்கோயில்

புறணி நாடு : எல்லைப்புறமாக உள்ள நாடு

புறத்தடியார் : (அகத்தடியாரினின்றும் வேறானவர்) கோயில் முதலியவற்றின் அடியார் ; தேவரடியார்

புறம் : ஒரு குறிப்பிட்ட தர்மத்துக்காகப் பெரும்பாலும் வரியில்லாமல் விடப்பட்ட நிலம் அல்லது கிராமம்

புறம்படி : நகரின் புறப்பகுதி

புறம்பு : புறக்கடமையே போலும்

புறவாயம் : புறவரி ; பெரும்பாலும் காசாக இறுக்கப்படுவது

புறவெட்டி : கிராமத்து நலனுக்காக அதன் எல்லைக்குவெளியே செய்ய வேண்டிய பொது மாராமத்து வெட்டி வேலை

புன்பயிர் : புன்செய் நிலத்தில் சாகுபடி செய்வதற்கு ஏற்ற பயிர் ; நெல் நீங்கலாக மற்றவகைப் பயிர்

புன்னீர் : கழிவு நீர்

புனக்குளம் : மழைத் தண்ணீர் தேங்கி நிற்கும் குட்டை

புஷ்கரப்பத்திமடல் : திருநீறு வைக்கும் மடல்

புஷ்பத் தளிகை : கோயில் வழிபாட்டில் மலரைச் சமர்ப்பித்தல் ; மலர்த்தட்டம்

புஷ்யராகம் : புஷ்பராகக் கல்

பூச்சியாளுதல் : இலை முதலியவற்றை அரிக்கும் பூச்சிகள் மிகுத்திருத்தல்

பூசகன் : பூஜகன் ; கோயில் பூசை செய்வோன்

பூட்சி : வரி

பூட்டைக்கிணறு : நீர் பாய்ச்சுவதற்கான ஏற்றம் அமைத்த கிணறு

பூமகள் : லக்ஷ்மி ; பூமிதேவி

பூமிப்பிராட்டி : பூமிதேவி

பூமிபுத்திரர் : வேளாண் மக்கள் ; சித்திரமேழிப் பெரிய நாட்டவர் என்னும் சபையைச் சேர்ந்தவர்

பூர்வாசாரம் : முன்னுள் வழக்கம்

பூரிக்குத்தலரிசி : நன்கு குற்றித் தீட்டிய அரிசி

பூரிச்சேரல் : நெல் வகை ; பூரிநெல் என்பதும் இதுவே போலும்

பூவிடுவான் : கோயிலுக்குப் பூப்பறித்துக் கொடுப்பவன்

பூஜாவிருத்தி : கோயில் பூசை செலவுக்காக மானியமாக விடப்பட்ட நிலம்

பெண்டாட்டி : பெண்மகள் ; ஸ்திரீ ; வேலைக்காரி

பெண்டுகள் : பெண்மக்கள்

பெண்பள்ளி : பெண்துறவிகள் தங்குமிடம்

பெத்திரி வீடு : பண்டகசாலை, கிடங்கு (தொழிற்சாலை என்று பொருள்படும் Factory என்பதன் வேற்று வடிவம் போலும் : உலாந்தாக்காரருக்குத் தஞ்சை மன்னன் எக்கோஜி அளித்த செப்புப்பட்டயம்)

பெரிய தேவர் : சோழர் ஆட்சியில் இறந்துபோன அரசரை அவருக்குப் பின் வந்தவர்கள் இவ்விதம் குறிப்பது வழக்கம் ; பெரிய பெருமாள் எனவும் பெறுவர்

பெரிய பெருமாள் : பெரியதேவர் பார்க்க ; அரசர்களுக்கு மேல் அரசனை பேர் அரசன் அல்லது சக்கரவர்த்தியாகவும் கொள்வர்

பெருங்குறி, பெருங்குறிச் சபை, பெருங்குறி மகாசபை : அகரப்பிரமதேயக் கிராமத்துச் சபையின் பொதுக்கூட்டம்; மகாஜன சபை என்னலாம்

பெருந்தரம், பெருந்தனம் : அரசாங்க அதிகாரங்களில் உயர்ந்த தரத்தார் ; சிறுதரம் பார்க்க

பெருந்திணை : நல்ல வமிசத்தில் பிறந்தவர் ; சோழர்கள் ஆட்சியில் நாட்டின் பிரமுகர்களுக்கு அரசன் வழங்கிய பட்டப்பெயர்

பெருந்திருவமிர்து : கடவுளுக்குப் பெரிய அளவில் படைக்கும் நிவேதனம்

பெருநகரத்தார் : வணிகர்

பெருநான்கெல்லை : கிராமம் அல்லது பெரிய நிலத்தாக்கின் எல்லை ; சிறுநான்கெல்லையினின்றும் வேறானது

பெரும்படி : உத்தேசமாக இடும் மதிப்பு

பெரும்பத்து, பெரும்பற்று : சர்க்காருக்கு உரிமையான நிலம்

பெரும் பாடிகாவல் : (சிறு பாடிகாவலினின்றும் வேறானது) நாடு முதலிய பெரிய பகுதியின் காவல்

பெரும்பூ : முக்கியமான பயிர் ; பெரும் போகம் ; அதனின்று கிடைக்கும் வருமானம்

பெருமக்கள் : முதியோர் ; ஒரு சபை அல்லது நிர்வாகக் குழுவின் உறுப்பினர்கள்

பெருமானடிகள் : முன்னாளிலே தெய்வத்தையும் அரசரையும் குறித்து வந்த மரியாதைச் சொல்

பெருமுதியன் : கோயில் அதிகாரிகளுள் ஒருவன்

பெருவளவாய் : நீர்பாயும் பெரிய ஆற்றுக்கால்

பெருவாயன் : கூடை

பெருவாயில் : பிரதானவாசல் ; கோபுரம்

பெருமுறி : சம்பளம்

பேதை பாதம் : விக்கிரகத்தின் காலில் அணியும் ஆபரணம்

பேர்க்கடமை : தலைவரிபோலும் ; ஆள்வரி, பேர்வாசி என்பனவும் இதுவே

பேரப்பன் : பெரிய தகப்பன் ; தகப்பனுக்கு அண்ணன்

பேரி : முரசு, நகரா போன்ற பறை வாத்தியம்

பேரிளமையார் : நானாதேசி வியாபாரக் குழுவினரில் ஒரு சாரார் ; கோயிலில் தேவகாரியம் பார்க்கும் மகளிர் ; தேவரடியார்

பேறு : பதவிக்கு உரிய காணிக்கைபோன்ற வருவாய் ; சம்பளத்துக்குப் பதிலாக அளிக்கப்பெறும் நிலம்

பைங்கிணறு : குட்டை

பைசாரம் : பிரதேசம்

போக்கிசம் : கஜானா ; கோயில் பொக்கிஷத்து அதிகாரி

போத்ரகம் : புத்தகம் ; வரிப்புத்தகம் ; வரிக்கணக்கு

போதிகூலி : தலைச்சுமை எடுத்துவரும் கூலி

போதுவாள் : கோயில் நிர்வாகம் செய்பவன்

போல்லாப்பு : ஆக்ஷேபணை ; எதிரிடை

போலிகை, போலிசை : பலிசை, வட்டி

போலிசையூட்டு : வட்டிக்கு விடுதல், வட்டி கொடுத்தல் ; பொலியூட்டு பார்க்க

போலிமுறை நாகு: சினைப்படுவதற்கு ஏற்ற நிலையில் உள்ள கிடாரிக் கன்று

போலியூட்டு: பொலிசையூட்டு; நிரந்தரமான வருவாயை அளிப்பதற்காக ஸ்தாவர சொத்துக்கள் மீது கடன் கொடுத்தோ, வாய்க்கால் குளம் போன்ற நீர்நிலைகளைச் செப்பனிட்டோ முதலை வட்டிக்கு விடுவது

போற்பூ: ஸ்வர்ண புஷ்பம்; சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் பள்ளி மாணவர்கள் தேர்ச்சி பெற்றதைக் குறிக்க அளிப்பது; கோயில் பூசையிலும் உபயோகிப்பது

போற்றை: சிறுமலை; கற்பாறை; சிறுகாடு; புதர்

போன்: முன்னுளில் வழங்கிய தங்க நாணயம்; மாடை எனவும் பெறும்; கழஞ்சு என்பதும் இதுவே என்பர்

போன்பண்டாரம்: கோயிலில் நகை முதலியவற்றைப் பாதுகாக்கும் கஜானு

போன்பண்டாரவாசல்: கஜானு

போன்மாளிகை: அரசன் வாசம் செய்யும் அரண்மனை; முக்கியமாகக் காஞ்சீபுரத்தில் இருந்த அரண்மனை

போன்வர்க்கம்: பொன்னுக, காசாக இறுக்கவேண்டிய வரிவகை

போன்வரி: பொன்னுக இறுக்கும் வரி; பொன்னை நாணயமாக அச்சிடுவதற்கான வரியும் ஆகும்; போன்வரி மாடை என்பதும் இதுவே

போன்னூல்: பொன்னுலாகிய நூல்; விக்கிரகத்துக்கு இடும் பொன்னுல் ஆன பூணூல் போலும்

போகஆயகம்: அனுபோகத்துடன் கூடிய நில அடைமானம்

போகபத்திரம்: அனுபோக அடைமான பத்திரம்; அது தீர்ந்த பிறகு விடுதலை எழுதிக்கொடுப்பதும் ஆகும்

போகம்: குறிப்பிட்ட சில ஊழியம் செய்வோருக்குச் சம்பளத்திற்குப் பதிலாக அனுபோகத்துக்கு அளிக்கும் நில மானியம்

போகியார்: காதற்கிழத்தி; (மனைவியைக் குறிப்பதாகவும் கொள்வர்)

போசர்: (போஜகர்) அனுபோக உரிமை வாய்ந்தவர்; சொந்தக்காரர்

போதுதல், போதுகிறது: போதல், போகிறது என்பவற்றின் பழைய வடிவங்கள்

போர்த்தனிப்பூவை: போர்ச் சயப்பாவை; போர்மகள்; வீரலக்ஷ்மி, விஜயலக்ஷ்மி

போனகக் குருத்து : கடவுளுக்குப் படைக்கும் நிவேதனத்துக்கு இடும் வாழை நுனி இலை ; தலைவாழையிலை

போனகம் : கடவுளுக்குப் படைக்கும் உணவு

மக்கட் சேவகம் : ஊழியம் ; அதைச் செய்வோன் மக்கட்சேவகன் ; அவனுக்கு அளிக்கப்பட்ட மானிய நிலம் மக்கட் சேவகப் பேறு எனப்பெறும்

மக்கட்பேறு : புத்திரரைப் பெறுதல்; அதற்கான வரியையும் குறிக்கும்; குடிமக்கள் என்ற நிலையின் கடமையைக் குறிப்பதாகவும் கொள்ள லாம் ; மக்கட் சேவகப்பேறு எனவும் ஆகும் போலும்

மக்கணுயனுர் : (மக்கள் நாயனுர்) அரசனுடைய மகன்

மகதாகம் : மிகுந்த தாகம் ; இறந்தபின் ஆன்மா கடந்து செல்ல வேண்டிய நரகவகைகளுள் ஒன்று

மகப்படி : கோயில் செலவுத் திட்டத்தில் ஒன்று ; மக நக்ஷத்திரத்தில் நடத்தும் உற்சவச் செலவுபோலும்

மகமை, மகன்மை, மகண்மை : வியாபாரச் சரக்குகளின் விலை அளவு ஆகியவற்றுக்கு ஒரு விகிதாசாரம் வைத்து வியாபாரிகள் தாமாகவே கோயில் சத்திரம் போன்ற தர்ம ஸ்தாபனங்களின் செலவுக்காக அளிக்கும் வரி

மகரசங்கிரமணம், மகரசங்கிராந்தி : தைமாதப் பிறப்பு

மகரம் : மகர வடிவில் உள்ள குழை ; காதணி ; மகர குண்டலம்

மகன்மை : ஆண்மக்கள் வரி

மகாசபை : கிராமத்தின் எல்லா மக்களும் சேர்ந்து நடத்தும் கூட்டம் ; மஹாஜன சபை

மகாசாகை : மரத்தின் முக்கியமான கிளை

மகாசாமந்தன் : சிற்றரசுப்பதவியில் உள்ள மந்திரி

மகாதந்திரம் : சேனையின் நிர்வாக சபை

மகாதேவி : பட்டத்தரசி

மகாதோரணம் : கோயிலில் அலங்காரமாக ஏற்றும் தீபவகை; மகர தோரணம் என்பதே போலும்

மகாநகரம் : பெரிய வியாபார ஸ்தலம்; அவ்வூரின் வியாபாரிகள் சபை

மகாநாடு : வியாபாரிகளின் கூட்டம்

மகாநியோகம் : அரசன் ஆணை ; அதனைத் தாங்கிச்செல்லும் அதிகாரி

மகாப்பிரதாணன் : பிரதானிகளின் தலைவன் ; சேனைத்தலைவன்; மஹாப் பிரதானி எனவும் குறிக்கப் பெறுவன்

மகாப்பிரபு : பெரிய தனவந்தன் ; வியாபாரிகளின் தலைவன்

மகாபாரதவிருத்தி : மகாபாரதம் வாசித்து விளக்கிக் கூறுபவர் அனு பவிக்க விட்ட மானியம்

மகாபூதகடதானம் : தானவகையில் ஒன்று

மகாமண்டபம் : கோயிலில் அர்த்த மண்டபத்தை யடுத்துள்ள பெரிய மண்டபம்

மகாமண்டலேச்வரன் : ராஜ்யப் பகுதியை நிர்வகிக்கும் சிற்றரசன் ; மகாமண்டலிகன் எனவும் பெறுவன்

மகாமாத்திரர் : முதன் மந்திரி

மகாவட்டவியவஹாரி : வியாபாரிகள் தலைவன் ; பண லேவாதேவிக் காரன் ; வட்டிக்குப் பணம் கொடுப்போர் தலைவன்

மகாவிரதன், மகாவிரதி, மாவிரதி : சைவசமயத்துள் ஒரு பிரிவான மாவிரதம் என்பதைச் சார்ந்த அடியார்

மகாவிவஸ்தை : மகாசபை செய்த விவஸ்தைபோலும்,

மகாஜனம் : கிராம மக்கள் அனைவரும் சேர்ந்த கூட்டம்

மகேச்வரர், மாஹேச்வரர் : சிவனடியார் ; கோயில் நிர்வாகத்தில் பொறுப்புள்ள சிவனடியார் சபை

மகேச்வரபெருந்தனத்தார் : சிவனடியார் ; பாசுபதர்போலும்

மங்கலம் : சதுர்வேதி மங்கலம் என்பதன் குறுகிய வடிவம்; பிராமணர் குடியிருப்புக்காகப் பெரும்பாலும் வரியில்லாமல் விடப்பெற்றகிராமம்

மங்கிலியம் : தாலி

மச்சாழ்வி : மைத்துனன் என்பதன் வேறு வடிவம் ; மனைவியின் சகோதரன் ; சகோதரி கணவனும் ஆகும்

மஞ்சள்காப்பு : கோயில் மூர்த்திகளுக்கு மஞ்சளை அரைத்து விழுதைச் சாத்துவது

மஞ்சாடி : இரண்டு குன்றுமணிகள் கொண்ட எடை ; அந்த எடை யுள்ள பொன்

மஞ்சிக்கம் : ஊர்ப்பொதுவில் பயிரிடாமல் உள்ள தரிசு நிலம்

மட்டத்தாரை : கூர்மையில்லாத விளம்பு கொண்டது

மட்டத்தாரைச்சப்படி : மழுங்கிய விளிம்புகொண்ட தட்டை வைரம் ; மட்டத்தாரைச் சவக்கம் என்பதும் இதுவேபோலும்

மட்டம் : சிறியது

மட்டப்பூ : அணி உறுப்புகளுள் ஒன்று, தொங்கும் வகை

மடப்புறம் : மடத்துக்கு விடப்பெற்ற இறையிலி நிலம்

மடம் : பிரமசாரிகளும் துறவிகளும் வாழும் இடம் ; துறவிகளுக்கும் தவசிகளுக்கும் உணவு இடும் சத்திரம்

மடவளாகம், மடைவிளாகம் : கோயிலைச் சூழ்ந்துள்ளதும், கோயில் பரிவாரத்தார் குடியிருப்பதுமான இடம்

மடாபத்தியம் : மடத்தின் அதிபதிப் பொறுப்பு ; மடத்தின் நிர்வாகம்

மடை : சமைத்த சோறு ; நைவேத்தியம்

மடைப்பள்ளி : கோயிலில் சமையல் செய்யும் இடம்

மடைப்பள்ளிப் புறம் : கோயில் அடுக்களைச் செலவுக்காக விடப்பெற்ற நிலம் அல்லது கிராமம்

மடைப்போக்கு : மதகிலிருந்து நீர் பாய்வது

மண்டகம் : மண்டபம்

மண்டபக்கோத்து : கோயில் பரிவார வகை

மண்டலம் : நாட்டின் பெரும்பகுதி (சோழமண்டலம்)

மண்டலமுதன்மை : மண்டல நிர்வாகத்தின் தலைமைப்பதவி ; அதை வகிப்பவர் மண்டல முதலியார் எனப்பெறுவர்

மண்டல முதன்மைப்பேறு : மண்டலாதிபதியின் அனுபோகத்துக்கு விடும் நிலம், அல்லது அவனுக்காக இறுக்கும் வரி

மண்டலிகன் : மண்டலத்தை ஆளுவோன் ; மண்டலேச்வரன் எனவும் பெறுவன்

மண்டையவியன் : மாண்டவிய கோத்திரத்தைச் சேர்ந்தவன்

மண்ணான் : ஹரிஜனங்களின் வண்ணான்

மண்பாடு : மண்ணால் எழுப்பிய வரம்பு ; மண்ணால் ஆன கரை

மண்மதில் : மண்ணால் எழுப்பிய கோட்டைச்சுவர் ; அதன் பாதுகாப்புக்காக இறுக்கும் வரியும் ஆகும்

மணவாட்டி : மனைவி

மணாட்டி : மாணவி ; பெண் சிஷ்யை

மணிக்கலம் : கல் வைத்து இழைத்த ஆபரணம்

மணிக்கிராமம் : வியாபாரிகளின் குழுவில் ஒருவகை; அவர்கள் வாழும் நகரம்

மணியம்பலம் : ஓலக்க மண்டபம் ; ராஜ சபை

மத்தியக்கன், மத்தியஸ்தன் : நடுநிலை வகிப்பவன் ; பெரும்பாலும் கிராமத்தலைவன்

மதலை : மகன்

மந்தவாடை : இளவாடைக் காற்று

மந்திர போனகம் : நிவேதன உணவு

மந்தைகண்டேற்றம் : மந்தையின் மேய்ச்சலுக்கான பூமியும் அதனைச் சார்ந்த இடமும் ; அவற்றை உண்டாக்குவது போலும்

மந்தைப் பணம் : கிராமங்களில் கால்நடைகளின் மேய்ச்சல் பூமிக்காக இறுக்கும் வரி

மயிலாப்பில், மயிலார்ப்பில் : மயிலாப்பூரின் பழைய பெயர்

மரக்கடமை : மரங்களின் மீது இறுக்கும் வரி

மரமச்சாதி விலை : மரம், மீன் முதலியவற்றால் கிடைக்கும் வருவாய்

மரமஞ்சாடி : பயன்தரும் மரத்துக்கு மஞ்சாடி வீதம் இறுப்பது

மரவடை : பயன் தரும் மரங்கள் ; அவற்றை அனுபவிக்கும் உரிமை; மரவிடை எனவும் பெறும்

மரியாதி : எல்லை ; வரம்பு ; வீதம்; மர்ஜாதி, மரிசாதி, மருசாதி என்பன போன்ற வடிவங்களிலும் காணப்படும்

மரு : மருக்கொழுந்து ; கொழுந்து எனவும் பெறும்

மருத்துவப்பேறு : கிராம வைத்தியனுக்கு வரியில்லாமல் விட்ட மானிய நிலம்

மல்லாயி மகமை : முன்னாளில் வழங்கி வந்த வரிவகை ; பொருள் விளங்கவில்லை ; சந்தை மகமை போலும்

மலர் : ஆயுதம் முதலியவற்றின் தலையில் உள்ள குமிழ்

மலைகுனிய நின்றான் : திருப்பதியில் உள்ள வேங்கடேசப்பெருமான்; அவன் கோயிலில் வழங்கும் எடை அளவு முதலியன

மலையாண் விளக்கு : கோயிலில் ஏற்றும் விளக்கு வகை

மலையாள முதலி : மலைவாழ் மக்கள் தலைவன்

மழு : பழுக்கக் காய்ச்சிய இரும்பை ஏந்தி நிரூபிக்கும் முறை

மறமாணிக்கர் : பொன் அமராவதியைச் சுற்றியுள்ள பிரதேசத்தில் வாழும் வீரர் வகுப்பார்

மறு, மறுவு : இரண்டாம் போகம்; மறுபடியும் சாகுபடி செய்வது

மறுகால் தலை : வடிகால் மதகு

மன்றம் : மன்று பார்க்க

மன்றாடி : இடையர்

மன்றாடி வாரியம் : கோயில் காரியங்களை நிர்வகிக்கும் சபை (மன்றாடி-அம்பலக்கூத்தாடும் சிவபெருமான்)

மன்று : சபை ; நியாய சபை ; ஊர்ப்பொதுவிடம்

மன்றுதல் : தண்டம் விதித்தல்

மன்றுபாடு : நியாய விசாரணை சபைக்கு இறுக்கும் அபராதப் பணம்

மன்னனார் : விஷ்ணு

மனிச்சம் : மனிதன்

மனைக்கடையான் : மனையிலேயே கடை வைத்து வியாபாரம் செய்பவன

**மனைப்படப்பு** : மனையைச் சுற்றியுள்ள இடம் ; மனைப்படப்பை எனவும் பெறும்

**மனைப்பணம்** : வீட்டு வரி ; மனைவரி எனவும் படும்

**மனையிறை** : வீட்டு வரி

**மனைவாணீளம்** : மனையின் நீண்ட வால்வீச்சு

**மனுவாறு** : மனுநீதி வழியே

**மா** : இருபதில் ஒரு பாகம் ; நில அளவு, நிறுத்தல் அளவு

**மாங்காய் நாண்** : மாங்காய் மாலை

**மாசாத்துநாயன்** : வியாபாரிகள் தலைவன் ; முன்னாளில் வெளிநாட்டு வியாபாரம் செய்துவந்த பெரிய வியாபாரிகளுக்கு அரசன் அளித்த பட்டப்பெயர்

**மாசுமறு** : குற்றம் ; மாசும் மறுவும்

**மாட்டறிதல்** : கையெழுத்துக்குச் சாட்சி போடுதல்

**மாட்டு** : இணைந்த, உரிய, சேர்ந்த

**மாட்டுக்கறை** : மாடுகள் மீது இறுக்கும் வரிபோலும்

**மாடக்கோயில்** : மேட்டிடம், கட்டுமலை, உயர்ந்த உபபீடம் ஆகியவற்றின் மீது கட்டப்பெற்ற சிவன் கோயில் ; ஒன்றுக்கு மேற்பட்ட தளங்களையுடையதாகவும், குறுகிய வழியுள்ளதாகவும் இருக்கும் எனக் கொள்வர்

**மாடவீதி** : கோயிலைச் சுற்றியுள்ள வீதி

**மாடாபத்தியம்** : மடாபத்தியம் பார்க்க

**மாடுகாணிக்கை** : ஊருக்கு விஜயம் செய்யும் அதிகாரிகள் முதலானோர் உபயோகத்துக்கு மாடு அளிக்கும் கடமை

**மாடை** : முன்னாளில் வழங்கிய பொன் நாணயம் ; கழஞ்சு எனவாம்

**மாடைக்கூலி** : பொன்னை நாணயமாக அச்சடிப்பதற்கான கூலி

**மாணி** : மாணவன் ; பிரமசாரி ; கோயில் காரியம் பார்க்கும் பிரமசாரி

**மாணிக்கத்தார்** : கோயிலைச்சேர்ந்த பெண்கள் ; தேவரடியார்

**மாணிக்கப்பண்டாரம் காப்பான்** : கோயிலின் ரத்தினம், நகை முதலியவற்றைக் காக்கும் அதிகாரி

**மாத்தால்** : மா ஒன்றுக்கு இவ்வளவு என்று

**மாதப்படி** : மாத மாதம் இறுக்கும் வரிவகை ; மாதம், மாதாரிக்கம் மாதாரிக்கை எனவும் பெறும் ; திங்கள்சோறு பார்க்க

**மாந்தோட்டுப் பச்சை** : பச்சைக்கல் வகை

**மாப்பட்டை :** முன்னாளில் வழங்கிவந்த காசாய வகை; கிராமங்களில் மந்தைக்கான வரியாக இருக்கலாம்; மரப்பட்டை எனக் கொண்டால் மரங்களை விற்கும் தொழிற்சாலையாகக் கொள்ளலாம்

**மாப்பணம் :** முன்னாளில் வழங்கிய ஒரு நாணயம்; மாவுக்குப் பணம் வீதம் அளிப்பதையும் குறிக்கும்

**மாப்பதக்கு :** மாவுக்குப் பதக்கு வீதம் அளிப்பது

**மாமகம் :** முன்னாளில் வழங்கிவந்த வரிவகை; மகாமகவரி எனக் கொள்வர்; மார்க்கம் என்பதே தவறாக எழுதப்பட்டிருப்பது போலும்

**மாமடி :** மாமனைக் குறிக்கும் மரியாதைச் சொல்

**மாமூலாதாயம் :** மாமூலாக அடையவேண்டிய வருவாய்

**மாயிலட்டி :** சோழர் ஆட்சியிலே அந்தப்புரப் பெண்களுக்கு வழங்கிய மரியாதைச் சொல்

**மார்க்காதாயம் :** சாலைவழியே செல்லும் சரக்குக்கு இறுக்கும் சுங்கம்; வழி ஆயம் எனவும் படும்

**மாராயன் :** தலைவன் என்பதைக் குறிக்க முன்னாளில் அரசன் வழங்கிய பட்டப்பெயர்

**மாவடை, மாவிடை :** கிராமத்தில் கால்நடை அடையும் இடம்; அதனை உபயோகிக்கும் உரிமை

**மாவிறை :** அரசனுக்கு உரிய வரி; மாவிந்தக்கடமை என்பதும் இதுவேபோலும்

**மாளிகைக்கோல் :** அரண்மனை அங்கீகாரம் பெற்ற அளவுகோல்

**மாளிகை நாயகம் :** அரண்மனை விசாரணை உத்தியோகத் தலைமை

**மாற்றம் :** பதில்; உத்தரவு; தீர்மானம் (சபாமாற்றம்)

**மாறி :** பொன் மாற்று

**மானதண்டம் :** மானதண்டு; அளவைக்கோல்

**மானபோகம் :** மானிய நிலங்களை அனுபவித்தல்

**மானவட்டில் :** முகத்தல் அளவுக்கான பாத்திரம்

**மிலாடு :** மலையமான் நாடு; மலாடு எனவும் பெறும்

**மிளகுத்தரகு :** மிளகு வியாபாரத்தின் தரகாக இறுக்கும் வரி

**மீகை :** (மேல்கை) மேலோங்கியகை; மேலெடுத்தகை

**மீயாட்சி :** நிலம் முதலியவற்றின் மேல் அதிகாரம்; மேல்வார உரிமை; காராண்மையினின்றும் வேறானது

மீயாளுங்கணம்: மேலதிகாரம் செய்யும் குழு; அதன் உறுப்பினர் மீயாளுங்கணத்தார் எனப்பெறுவர்

மீன்கடமை: மீன் பிடித்தற்கு உரிய வரி; மீன்பாட்டம் எனவும் பெறும்

மீன்பயில் பள்ளம்: மீன் உள்ளதான நீர்நிலை

முக்கால்வட்டம்: கோயில்

முக்குடைக்கல்: சமணர் ஆலயத்துக்குச் சொந்தமான நிலத்தின் எல்லையைக் குறிக்க நடும் மூன்று குடையின் உருவம் பொறித்த எல்லைக்கல்

முக்கை: மூன்றுகை; அரிமுக்கை என்பதுபோல் வருவதைக் காண்க

முக்தியார்: பிறருக்காகக் காரியங்களை நிர்வகிப்பவன்; காரியகர்த்தா

முககட்டணம்: கட்டட முகப்பு

முகட்டுக்கால்: மேட்டுமடையின் கால்

முகந்துடைத்தல்: முகத்தை க்ஷவரம் செய்தல்

முகம்பார்வை: கண்ணாடி; அதற்காக இறுக்கும் வரி

முகமண்டபம்: முன்மண்டபம்; கோயிலின் முன் மண்டபம்

முகவெட்டி: சோழர் ஆட்சிக்காலத்திலே அரசாங்கத்துறைத் தலைவன்; அந்த அந்தத் துறையின் ஓலைகளை நிர்வகிப்பவன் போலும்

முட்டாவாள்: இடையறாமல் தொடர்ந்து பொதுவேலை நடப்பதற்கு ஆள் அளிக்கும் கடமை; அதற்கான செலவையும் குறிக்கும்

முட்டி: முட்டாவாள் என்பதே போலும்

முட்டி: முஷ்டி; கைப்பிடியில் அடங்குவது; பிச்சை; கையேற்பு என்பதே போலும்; விஷம் தீர்க்கும் மந்திர சிகித்சை வகையும் ஆகும்

முட்டுதல்: தடைப்படுதல்

முட்டையாள்: முட்டாவாள் பார்க்க

முடங்கு: நிலத்தின் ஒரு மூலையில் நீண்டிருக்கும் பாகம்

முத்தாவணம்: முன்னாள் விற்பனை வரி

முத்திராவதாரம்: காதில் இடும் ஆபரணவகை

முத்திரை கர்த்தா: அரசாங்கம் அல்லது கோயில் முத்திரை வைத்திருக்கும் அதிகாரி; காரியகர்த்தா; நிர்வாகி

முத்திரைச் சங்கு: சங்கின்வகை; முத்திரை பொறிக்கப்பட்ட சங்கு

முத்திரைவாங்கி: முத்திரைகளைப் பரிசோதிப்பவன்; நிலவரி இலாக்காவில் எல்லைக் கற்களைப் பரிசோதிக்கும் ஓர் அதிகாரி

முத்துவட்டம் : உருண்டையான முத்துவகை

முதல் : பத்திரம்; ஆதாரவுச் சீட்டு

முதல் : மூலதனம் ; வட்டியை மட்டும் உபயோகித்துக் கொள்வதற்காக இட்ட பொருள் ; சேமிக்கும் பொருள்

முதல்தீர்த்தம் : கோயிலில் சேவிப்போர் கோஷ்டியில் முதல் முதலாகத் தீர்த்தம் பெறும் மரியாதை உரிமை

முதல் பாவாடை : வெளியே செல்லும்போது முன்னே துணிவிரித்துச் செய்யும் மரியாதை ; அதைச் செய்யும் வேலைக்காரத் தலைவன்

முதல் மரியாதை : கோஷ்டியினரில் முதலில் மரியாதை பெறும் உரிமை ; முன்மரியாதை எனவும் பெறும்

முதலி(யார்) : தலைவன் ; பெரியோர்

முதலிப்பிள்ளை : தலைமை முதலிப்பதவியில் உள்ளவனுக்கு அடுத்த படியாக உள்ளவன் போலும்

முதற்படைக் கலனையார் : நானாதேசி என்னும் வியாபாரக்குழுவினரின் ஒருவகையார் ; வியாபாரப் பண்டங்களைக் காக்கச்செல்லும் படையினர், அதிலும் முன்னணிப் படையைச் சேர்ந்தவர் போலும்

முதற்பாவாடை : தலைமை வேலைக்காரன்; முதல்பாவாடை பார்க்க

முதற்றிரமம் : (முதல்திரமம்) ; காசாக இறுக்க வேண்டிய வரிவகை; எதைக் குறிப்பதென்று விளங்கவில்லை ; திரமம் என்பது ஒரு நாணயவகை

முதுக்கள் : முன்னோர்

முதுகண் : காப்பாளன் ; பாதுகாப்பு அளிப்பவன்

முதுதறை : பாழ் நிலம் ; அனாதி தரிசு

முப்பாடு வட்டம் : முக்கால் வட்டமே போலும்

முலைவிலை : பரிசப்பணம் ; மணப் பெண்ணுக்குக் குழந்தைப் பருவத்திலே தாய்ப்பாலூட்டி வளர்த்ததற்காகத் திருமணத்தின் போது அவள் தாய்க்கு மணமகன் கொடுக்கும் பணம்

முழுவரிசை : முழு விகிதம்

முள்ளடி சின்னம் : முன்னாளில் வழங்கிவந்த வரிவகை ; துப்புக் கொடுப்பதற்காக அளிப்பது போலும்

முளைப்பயறு : முளையுடன் கூடிய பயறு ; ஒருவகைப் பணிகாரம்

முற்காவலுடைய பாடிகாப்பான் : காவல்புரிவோருள் ஓர் அதிகாரி

முற்கூறுதல் : முதலில் சொல்லுதல் ; விலையை நிச்சயித்துக் கூறுதல்; பிரேரணை செய்தல்

முற்றூட்டு : ஸர்வ மானியம்; எந்தவரியும் இல்லாமல் அளிக்கப்பட்டது

முறி : பத்திரம்; கையெழுத் திட்ட சீட்டு

முறிவு: வைரக் குற்றத்துள் ஒன்று

முன்பிலாண்டு: முன் சென்ற வருஷம்; கடந்த ஆண்டு

முன்மாலை: கோஷ்டியில் முதல்மாலை அணிவிக்கும் மரியாதைக்கான உரிமை

முன்னிடும் பணம்: பின்னால் வசூல் செய்துகொள்வதாக முதலில் கொடுக்கும் பணம்; முன்பணம்

முனைவீரக்கோடியார்: நானாதேசிகளுள் ஒருவகையார்; போர்த் தொழிலைக் கொண்டவர்; வியாபாரப் பண்டங்களைக் காக்கச்செல் லும் படைப்பகுதியினர்

முன்னேடுக்கு: முன்னாலே செலுத்தியது

மூக்கு: பாத்திரத்தின் வாயில் மூக்குப்போல் உள்ள உறுப்பு

மூக்குவட்டகை: மூக்குப்போன்ற விளிம்பு கொண்ட கிண்ணம்

மூங்கில்வரி: மூங்கில்மீது இறுக்கும் வரி

மூத்ததிகாரம்: தலைமை அதிகாரம்

மூலத்தானம்: கோயில் கர்ப்ப கிருகம்

மூலபருடை, மூலபரிஷத்: சிவன் கோயில் நிர்வாகத்தை நடத்தி வந்த முக்கிய சபை; மூலபரடை, மூலபருஷை, மூலபரிஷை எனப் பல விதமாக எழுதப்பெறும்

மூலபிருத்தியர்: சிவபெருமானுடைய முக்கிய ஊழியரான ஆதிசண்டே சுவரர்; சண்டேசுர நாயனர்

மூலம்: ஆதாரபத்திரம்; ஆதாரவுச் சீட்டு

மெய்க்காட்டு: நேரில் வந்திருத்தல்

மெய்காவல்: பாதுகாப்பாளன்

மெய்தாங்கி: ஆசனம்

மெய்மட்டு: நட்டுவத்துக்கு மிருதங்கம் அடிக்கும் உரிமை; மெய் மட்டுக் காணி எனவும் பெறும்

மெய்யாட்சி: மீயாட்சி என்பதன் வேறு வடிவம்

மெய்வேறு: தனித்தனியாய்

மெழுக்கடிகள்: கோயிலை மெழுகிச் சுத்தம் செய்யும் அடியார்

மெழுக்கு: கோயிலை மெழுகிச் சுத்தம் செய்தல்; கோயில் மூர்த்திக்குச் சந்தனம் புனுகு முதலியவற்றைச் சாத்துதல்

மெழுக்குப்புறம்: கோயில் மூர்த்திக்குப் புனுகுசட்டம் சாத்தும் செலவுக்காக விட்ட மானியம்; கோயிலை மெழுகுவதற்கு விடப் பெற்ற இறையிலி நிலம் எனவும் கொள்வர்

மேட்டுநிலம் : உயர்வான பூமி; மேடேற்றம் என்பதும் இதுவே

மேடுகல்லுதல் : மேட்டு நிலத்தை வெட்டிச் சமமாக்குதல்

மேய்ப்பான் : அடக்கியாளுபவன் ; கண்காணிப்பவர் போலும் ; மனை மேய்ப்பான் கோள்ளும் இறை என்பது கட்டடங்களைப் பார்வையிடும் அதிகாரிக்கான வரி அல்லது உரிமை என ஆகும்

மேர்வை : மேரை பார்க்க

மேராழி : முன்னாளில் வழங்கிய வரிவகை ; மேரை என்பதேபோலும்

மேரை : அறுவடையான மாசூலில் கிராம அதிகாரி ஊழியர்களுக்காகக் களத்தில் பிரித்துக்கொடுக்கும் பங்கு

மேல்சாந்தி : கோயிலின் தலைமைப் பூஜகர்

மேல்வாரம் : நிலத்தின் விளைவில் சொந்தக்காரனுக்கு உரிய பங்கு

மேல்வெட்டப்பேறு : பல கிராமங்கள் கொண்டதான நாட்டின் பெரும் பகுதிக்கு வேண்டிய பொது வேலைகளின் செலவுக்காக விடப்பெற்ற மானிய நிலம் அல்லது கிராமம்

மேலடி : தானியமாகச் செலுத்தும் இறை

மேலெழுத்து : தலைமை ராயச அதிகாரி ; கீழ் அதிகாரியின் உத்தரவை அங்கீகரித்து மேல் அதிகாரி இடும் கையெழுத்து ; தலைமைக் கணக்கர் ; தணிக்கையிடும் அதிகாரி

மேலோடி : மேல் வாரம்

மேற்கோயில் : ஊருக்கு மேற்கே அமைந்திருக்கும் கோயில் ஆன விஷ்ணு கோயில்

மேற்பாடிகாவல் : பாடிகாவலுக்கு மேற்பட்டதான நாடு காவல் ; பாடிகாவலின் தலைமை அதிகாரி

மேற்பாதி : மேல்வாரம்

மேனடைநீர் : அதிகப்படியாக உள்ள நீர்

மேனிப்போன் : ஆள் வரி போலும்

மேனீர் : மழைத் தண்ணீர்

மைச்சுனன் : மைத்துனன் என்பதன் வேறு வடிவம்

மோக்கிழம் : மோட்சம்

மோர்வியம் : முகவீணை

மோனம்பாட்டம் : முன்னாளில் வழங்கி வந்த வரி வகை ; எது என்ற விவரம் தெரியவில்லை

[illegible]க்கிஅச்சு : பழைய நாளிலே கொங்கு நாட்டில் வழங்கிய நாணயம் ; யக்ஷியின் உருவம் கொண்டதுபோலும் ; ஸ்ரீயக்கி பழஞ்சலாகை யச்சு என்பது போன்ற பலவிதமான பெயர்களில் குறிப்பிடப்படும்

யக்கிப்பட்டி : யக்ஷி தேவதையின் வழிபாட்டுக்காக இறையிலியாக அளிக்கப்பட்ட நிலம்; பள்ளிச்சந்தவகை

யந்திரம் : அணைகட்டி நீரைத் திருப்புவது போன்றவற்றுக்கு அமைக்கும் சாதனம்

யாகசாலை, யாகமண்டபம் : கோயிலில் வேள்விநடத்தும் மண்டபம்

யாத்திராதானம் : அரசன் போர்மீது செல்வதற்குமுன் வெற்றி கிட்ட வேண்டி அளிக்கும் தானம்

யாதவராயன்பணம் : முன்னாளில் வழங்கிவந்த நாணயம்; யாதவராய வமிசத்தார் அச்சிட்டது

யாழ்வல்லான் : யாழ் என்னும் இசைக் கருவியில் வல்லவனுக்கு முன்னாளில் அரசர் வழங்கிய பட்டப்பெயர்

யாளிக்கால் : யாளி உருவத்தில் அமைத்த பாத்திரத்தின் பாதம்

யானைச்சாலை : யானைகட்டும் இடம்; அதன் பராமரிப்புக்கான செலவுக்கு இறுக்கும் வரி; ஆனைச்சாலை பார்க்க

ரங்கமண்டபம் : கோயிலின் உள் மண்டபம்

ரத்தக்காணிக்கை : இரத்தக்காணிக்கை பார்க்க

ரத்தமானியம் : இரத்தமானியம் பார்க்க

ரதகாரர் : சிற்பாசாரிகள்; அவர்களுடைய சபையும் ஆகும்

ரக்ஷகர் : பாதுகாவலர்; ஊர்க்காவலர்

ரக்ஷாபோகம் : விளைவிலிருந்து ஊர்க்காவலுக்காகக் கொடுக்கவேண்டிய பங்கு

ராகுத்தராயன் : குதிரை வீரர்களின் தலைவன்

ராசகர உபாதி : அரண்மனைக்கு இறுக்க வேண்டியவை

ராசகரம், ராஜகரம் : இராசகரம் பார்க்க

ராசகரநிறை முறைமை : அரசாங்கத்துக்குச் செலுத்தவேண்டிய பல வகை வரிகள்

ராசகாரியபண்டாரம் : ராஜ்ய நிர்வாகச் செலவுக்கான கஜானா; ராஜ்ய நிர்வாகத்துக்கான சபையாகவும் கொள்வர்

ராசகாரியம் : அரசாங்க ஊழியம்

ராசகுலம் காணிப்பற்று : ராஜகுடும்பத்தைச் சேர்ந்தோர் அனுபோகத்தில் உள்ள நிலம் அல்லது கிராமம் (தேவதானம், பிரமதேயம், பள்ளிச்சந்தம் ஆகியவற்றுடன் சேர்ந்து காணப்படுவது)

ராசிப்பொன் : கலப்பற்ற சுத்தமான தங்கம்

ராமாநுஜ கூடம் : வைஷ்ணவ யாத்திரிகர்கள் தங்கும் சாவடி

ராயசம் : எழுதுவது ; ஆணைப்பத்திரம் ; இராயச வேலையைக் கவனிக்கும் ஓலை நாயகம் போன்ற அரசாங்க அதிகாரி

ராயசஸ்வாமி : இராயசர்களின் தலைவன்

ராயசவர்த்தனை : இராயச அதிகாரிக்கான வர்த்தனை

ராஜ்யம் : மண்டலம்போன்ற நிலப்பகுதி

ராஜத்ரோஹம் : அரசாங்கத்துக்கு விரோதமாக நடக்கும் குற்றம்

ராஜபண்டாரம் : அரசாங்கத்தின் கஜானா

ராஜவேச்யபுஜங்கர் : எதிரிகளின் நாட்டைக் கைப்பற்றிய அரசன் கொண்ட விருது

ராஜன்யர் : அரசாங்க அதிகாரிகள்

ராஜஸ்வம் : அரசனுக்கு உரியது

ராஜாவர்த்தம் : ஒருவகை ரத்தினம்

ரிஷபத்தளியிலார் : சிவன் கோயில் தேவரடியாருள் ஒரு பிரிவினர்

ரிஷிசமுதாய(த்தார்) : சமணர்களிலே துறவிகளாக உள்ளோர்

ருத்திரகணம் : உருத்திரகணம் பார்க்க

ருத்திரகணிகை : சிவன்கோயில் தேவரடியார் ; உருத்திர கணிகை பார்க்க

ருத்திரமாகேச்வரர் : ருத்திரர் மாஹேசுவரர் என்று குறிக்கப் பெறும் இருவகைச் சிவனடியார்கள் ; சிவன் கோயில் நிர்வாகத்தைக் கண் காணிக்கும் குழுவினர்

ருத்திரர் : உருத்திரர் பார்க்க

ரேகை : முன்னாளில் வழக்கில் இருந்த பொன் நாணயம்

ரேகைப்பொன் : சுத்தமான தங்கம்

லட்சணம் : பத்திரம்

லாஞ்சினைப்பேறு : இலாஞ்சனைப்பேறு பார்க்க

வக்காணிக்கு மண்டபம் : சாஸ்திரம் புராணம் முதலியவை விரித்து உரைக்கப்படும் மண்டபம்

வக்காணித்தல் : சாஸ்திரம், புராணம் முதலியவற்றை விரித்து உரைத் தல்

வகை செய்கிறவர், வகை செய்வார் : நிலத்தின் தரம் அளவு முதலி யவற்றை ஒழுங்கு செய்து தீர்வை விதிக்கும் அதிகாரி

**வகைசெய்தல் :** *நிலத்தின் தரத்தை நிர்ணயித்து வரி விதித்தல்*

**வகைந்த காசு :** *நிலத்தை வகைசெய்வதற்கான தீர்வை ; நிலத்தைப் பிரித்து அளவிடுவதற்கான வரி ; வழக்கு முடிப்பதற்கான கட்டணமும் ஆகும்*

**வகைப் பேறு :** *நிலம்வகை செய்வார்க்குக் கொடுக்கவேண்டியவை*

**வகையறுத்தல் :** *வழக்குத் தீர்த்தல் ; நிலத்தின் தரத்தை அறுதியிடுதல்*

**வங்கிசம், வங்கிஷம் :** *வம்சம் ; வங்சம் எனவும் காணப்பெறும்*

**வச்சிரப்படை :** *கோபுரத்தின் அடிநிலைக் கட்டடம்*

**வசந்த மண்டபம் :** *தோட்டத்தின் நடுவில் உள்ள மண்டபம் ; வஸந்த உற்சவம் கொண்டாடும் இடம்*

**வட்டம், வட்டன் :** *தோறும் (ஆட்டை வட்டம் : ஆண்டுதோறும்)*

**வட்டம் :** *முத்துவகை, உருண்டையாக உள்ளது ; ஓர் ஆபரணம்*

**வட்டம் :** *நாணயமாற்றம் செய்வதற்குக் கூலி ; தரகு தள்ளுபடி*

**வட்ட வியவஹாரி :** *நானாதேசிக் குழுவின் முக்கியஸ்தன் ; பணத்தை வட்டிக்குக் கொடுப்பவன் ; ரொக்க லேவாதேவிக்காரன் ; நாணய செட்டி*

**வட்டிநாழி :** *முன்னாளில் வழங்கிவந்த வரிவகை ; நாழிகை வட்டில் எனக் கொள்ளமுடியுமா ? நிலத்துக்கு நீர் பாய்வதற்கான நாழிகையைக் கணக்கிட்டு அதன்படி செய்வதற்குக் கொடுக்கும் வரியாக இருக்கலாம்*

**வடக்குவாசல் செல்வி :** *ஊரின் வடபுறத்து எல்லைத் தெய்வமான காளி*

**வடம் :** *மாலையின் சரம் ; மணிவடம் ; தேர் இழுக்கும் கயிறு*

**வடுகவழி, வடுகப்பெருவழி :** *ஆந்திர தேசம் ; ஆந்திராபதம் என்பதன் மொழி பெயர்ப்பு ; வடக்கு நோக்கிச் செல்லும் சாலையாகக் கொள்வர் (தக்ஷிணாபதம், உத்தராபதம் என்பவை நோக்குக)*

**வடுகவாளி :** *காதில் அணியும் ஆபரணம்*

**வண்ணாரப்பாறை, வண்ணான்வரி :** *துணி வெளுப்போர் இறுக்கும் வரி*

**வண்ணாக்கும்பிட்டார் :** *சேரமான் பெருமாள் நாயனார்*

**வணிதம் :** *கூற்றம், நாடுபோன்ற ராஜ்யப் பிரிவு (விஜயநகர ஆட்சியில் வழக்கில் இருந்தது) ; [illegible] எனவும் காணப்பெறும்*

**வத்தன், வத்தராயன் :** *வத்சராஜன்*

**வத்தினை :** *வர்த்தனையின் வேறு வடிவம்*

வதி : வழி, வீதி

வயக்கால் : ஆற்றுக்காலிலிருந்து வயலுக்கு நீர் பாயும் சிறு கால்

வயிராவி, வயிராகி : சிவன்கோயிலில் ஊழியம் புரியும் துறவி (காலக் கிரமத்தில் சிவன்கோயில் காவலாளனைக் குறிப்பது)

வயித்தியவிருத்தி : வைத்தியனுக்கு விட்ட மானிய நிலம்

வர்த்தனை : குறிப்பிட்ட அதிகாரிகள் ஊழியர் முதலியோருக்கு மானியமாக அளிக்கப் பெறுவது

வரகிராமம் : கோயில், மடம், பிராமணர் முதலியோருக்குத் தர்மத்துக் காக அளிக்கப்பெற்ற கிராமம்

வரக்கூலி : நெல் முதலியவற்றை எடுத்து வருவதற்கான வண்டிச் சத்தம், சுமைகூலி

வரத்து : எல்லை

வரத்து : எழுதிவந்த ஓலை ; உத்தரவு

வரத்து : வருவாய்; வரிமுதலியவை தண்டல்

வரணம் : சபையின் உறுப்பினராக நியமனம் ; தேர்ந்தெடுத்தல்

வரவை : வசூல் செய்தது ; வரி ; வருவாய்

வராகப்பணம் : வராக உருவம் பொறித்த பணம்

வராஹன்புள்ளிக்குளிகை : முன்னாளில் வழங்கிய நாணயம்

வராகமுத்திரை : அரசாங்கச் சின்னமான வராஹம் (பன்றி) உருவம் பொறித்த எல்லைக்கல்

வராகன் : முன்னாளில் வழங்கிய பொன் நாணயம்; வராஹ உருவம் பொறித்தது

வராச்சின்னம் : ஒரு பின்ன அளவு

வரி : தீர்வை ; அரசிறை; தீர்வைக் கணக்கு; தீர்வை நிர்ணயித்து எழுதிவரும் ஓலை

வரிக்கற்றை : கூரை வேய்வதற்கு உதவும் புல், வைக்கோல் கற்றை

வரிக்கூறுசெய்வார், வரிக்குக்கூறுசெய்வார் : தீர்வையை நிர்ணயித்து விதிக்கும் அதிகாரிகள்

வரிக்கோலம் : கோயிலில் ஆடும் ஒருவகைக் கூத்து (மகளிர் மார்பில் சந்தனத்தால் இடும் கோலமான தொய்யிலின் பகுதி; மகளிரை அழகுபடுத்துவதை நடனமாடி எடுத்துக் காட்டுவதாக இருக்கலாம்)

வரிசை : ராஜசபை, கோயில் முதலிய இடங்களில் அளிக்கப்பெறும் சிறப்பு ; மரியாதை

வரிசை : நிலத்தைப் பயிரிடும் குடிகளுக்கு உரிய பங்கு

வரிசை : கிராம சபை முதலியவற்றின் கட்டணம் ; தீர்வைக் கணக்கு

வரிசையிலிட்டபடி : வரிக்கணக்கில் கண்டபடி; தீர்வைத் தரத்தின் பிரகாரம்

வரிசோறு : சோறிடும் கடமை

வரிப்பாடு : வரிவிதித்தல்; தீர்வைகள்

வரிப்புள்ளி : வரிக்கணக்கு வகை

வரிப்பொத்தக நாயகம் : அரசாங்க வரிக்கணக்கை நிர்வகிக்கும் துறை; அதன் தலைமை அதிகாரி

வரிப்பொத்தகம் : அரசிறைக் கணக்கு; அதை எழுதும் அதிகாரி

வரியிலார் : வரிக் கூறுசெய்வார் பார்க்க

வரியிலிடுதல் : அரசிறைக் கணக்கில் எழுதுதல்

வரியிலீடு : அரசிறைக் கணக்கில் ஏற்றுதல்

வரியோலை : தீர்வையை நிர்ணயித்து இடும் ஓலை; செலுத்த வேண்டிய தீர்வைக்கு அனுப்பும் ஓலை; ஒப்பந்தச் சீட்டு

வருஷகாணிக்கை : ஆண்டுதோறும் செலுத்த வேண்டிய காணிக்கை

வரூதினி : சேனை

வரை : முத்துக் குற்றங்களுள் ஒன்று; கோடு விழுந்தது

வலங்கை : வலங்கைச் சாதியார்

வலங்கை இடங்கை மகன்மை : வலங்கை இடங்கைச் சாதியார் கொடுக்கவேண்டிய தீர்வை; அவர்களில் படைக்கலம் ஏந்தக்கூடிய ஒவ்வோர் ஆண்மகனும் செலுத்தவேண்டியது போலும்

வலத்துக்கை : வலங்கைச் சாதியார்

வழக்குமுறி : பிராது

வழிக்கண்ணூர் : வழிவந்தோர்; சந்ததியார்

வழிச்சேவ்வை : சாலை; நன்றாக உள்ள பாதை

வழிநடைக்கிடும் பணம் : சாலை, வழி முதலியவற்றைச் செப்பனிடுவதற்கான வரி

வழிபாட்டுப்புறம் : கோயில் நித்திய பூசை செலவுக்காக விட்ட மானிய நிலம் அல்லது கிராமம்

வழியாயம் : சாலையில் செல்லும் சரக்குகளுக்கு வசூலிக்கும் சுங்கம்; மார்க்காதாயம் என்பதும் இதுவே

வழியிலார் : சந்ததிகள்

வழியெச்சமறுதல் : வமிசம் அற்றுப்போதல்; சந்ததி அற்றுப்போதல்

வழுதியச்சுவர்க்கம் : பாண்டிய நாட்டு நாணயத்தால் இறுக்கவேண்டிய வரி வகைகள்

வழுவாத நாழி: சரியான அளவு கொண்ட படி
வழுவுதல்: குறைதல்
வள்ளான் வகை: வெள்ளான் வகை பார்க்க
வளஞ்சியர்: நானாதேசிக் குழுவின் பகுதியார்; வியாபாரிகள்; பணிஜிகர் எனவும் பெறுவர்
வளாகம்: இடம்; பிரதேசம்; விளாகம் எனவும் எழுதப்பெறும்
வளிதம்: வணிதம் பார்க்க
வறட்சாவி: மழையில்லாமையால் பயிருக்கு ஏற்பட்ட கேடு
வன்பாட்டம்: தீய்வு கரிவு காலத்திலும் குறையாமல் அளக்கவேண்டிய குத்தகை நெல்
வன்னியப்பற்று: படைப்பற்று; படை வீரர் அனுபோகத்தில் உள்ள நிலம்

வாச்சியம்: வாத்தியம்; இசைக்கருவி
வாச்சியமாராயன்: வாத்திய சங்கீதத்தில் வல்லவனுக்கு முன்னாளில் அரசர் வழங்கிய பட்டப்பெயர்; கோயில் மேளகாரர் தலைவன்
வாசல்: அரண்மனை வாசல்; அதன் பொறுப்பை வகிக்கும் அதிகாரி
வாசல்: ராஜ சபை; அரசன் ஆஸ்தானம்
வாசல் கணக்கன், வாசல் கரணிகம்: அரண்மனைக் கணக்கன்
வாசல் காணிக்கை: அரண்மனைக்குச் செலுத்தும் காணிக்கை; வாசல் என்னும் உத்தியோகஸ்தனுக்குச் செலுத்துவதும் ஆகும்
வாசல்காரியம், வாசல் நிர்வாஹம்: வாசல் என்னும் அரண்மனை உத்தியோகம்; அதை வகிப்பவன் வாசல் முதலி எனவும் பெறுவன்
வாசல் குழிப்பணம்: முன்னாளில் வழங்கிய வரிவகை; வீட்டு வாசலைக் கொண்டு கணக்கிட்டது போலும்
வாசல்திரமம்: வீட்டுவாசல் வரி; வாசல் பணம் என்பதும் இதுவே போலும்
வாசலில்போந்த குடிமை: அரண்மனைக்கு, நிலவரி நீங்கலாக, இறுக்க வேண்டிய இதர வரிகள்
வாசல்வினியோகம்: வாசல் என்னும் அதிகாரிக்குக் கொடுக்க வேண்டிய வர்த்தனை; கட்டணம்
வாசி: வீதம்; நாணயவட்டம்; தேய்வு காய்ச்சல் முதலியவற்றால் ஏற்படும் குறைவு
வாடாக்கடமை: திட்டமான, மாறாத வரி; நிரந்தரமான வருவாய்
வாடாக்கடன்: நிரந்தரமாக உள்ள கடன்

**வாடிகா :** ஒரு நில அளவு ; வேலிநிலம் போன்றது

**வாத்தி :** பள்ளிக்கூட வாத்தியார்

**வாமனக்கல் :** தர்மத்துக்கு அளித்த நிலத்தின் எல்லையைக் குறிக்க நடும் எல்லைக்கல்

**வாமனமுத்திரை :** விஷ்ணுகோயில் நிலத்தின் எல்லையைக் குறிக்க இடும் சங்கு சக்கர உருவம் பொறித்த எல்லைக்கல்

**வாய்க்கால் பாட்டம் :** வாய்க்காலை நல்ல நிலைமையில் வைத்திருப்பதற்காக வெட்டிவேலை முதலியவற்றுக்காக இறுப்பது

**வாய்க்கேள்வி, வாய்க்கேள்வியார், வாய்க்கேட்பார் :** அரசன் வாய்மொழியாக இடும் உத்தரவைக் கேட்டு அதை உரியவர்களுக்கு எழுத்துமூலம் அனுப்பும் அதிகாரி

**வாய்த்தலை :** வாய்க்காலின் தலைப்பு மதகு ; தொடங்கும் இடம்

**வாய்த்தலைப்படி குலையரையர்கள் :** வாய்க்கால் தலைப்பு, மதகு, கரை முதலியவற்றை நிர்வகிக்கும் குழுவைச் சேர்ந்தவர்கள்

**வாய்தல் :** வாசல்

**வாயினம் :** வாணிகம் ; வியாபாரம்

**வாரககாணம் :** விவசாயத்துக்கு முன்பணம் கொடுப்பதற்காகப் பின்னால் வட்டியாகச் சேர்த்து வசூலிப்பது

**வாரம் :** வேதத்தை ஓதும் வகை

**வாரம் :** தீர்வை

**வாரம் :** விளைவில் பங்கு

**வாராவைகள் :** வசூலாகாதவை என்று தள்ளிப் பின்னால் வசூல் ஆனவை

**வாரியப்பெருமக்கள் :** கிராம நிர்வாகத்துக்கு அமைக்கப்பட்ட சபையின் சிறுகுழாம் ; அதன் உறுப்பினர்கள்

**வாரியம் :** கிராமச் சபையின் குழாம் ; அதை நடத்துவோர் வாரியம் செய்வார் எனப்படுவர்

**வாரியன் :** மேற்பார்வையாளர்

**வாலக்காணம் :** மனையின் வால்வீச்சுக் கணக்கில் இடும் கட்டணம் ; வாலவரி, வாலமஞ்சாடி என்பனவும் இதுவே போலும்

**வாள்பேற்ற கைக்கோளர் :** கைக்கோளப் படையின் வாள் வீரர்கள்

**வாளகம் :** வெட்டிவேர்

**வாளகிரி :** சக்கரவாளகிரி

**வாளால்வழிதிறந்தான்குளிகை :** வாளால் வழிதிறந்தான் என்னும் சிறப்புப் பெயர் தாங்கிய முதலாம் ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் என்பவன் வழங்கிய நாணயம்

வர்ளிலார் : வாள் வீரர்

வான்பயிர் : நன்செய், புன்செய்ப் பயிரில்லாத கொடிக்கால் வாழை கரும்பு முதலிய தோட்டப்பயிர்

வானவாரி : மழைத் தண்ணீர்

வாஸ்துகிருத்தியம் : கட்டடவேலை

வாஸ்துபரிவாரம் : மனைக்கொல்லை ; மனைப்படப்பு

விக்கிரமத்தொழில் : போர்த்தொழில்; பராக்கிரமம்

விக்ஞப்தி : அரசனிடம் ஒன்றை மரியாதையோடு தெரிவித்தல் ; அரச னிடம் விண்ணப்பங்களை எடுத்துரைக்கும் அதிகாரி

விகாரி : விசாரி ; புரோஹிதர்

விச்சாத்தி : வித்யார்த்தி ; மாணவன்

விச்சாதரன், விச்சாதிரன் : வித்தியாதரன்

விசக்காணம் : கிராமவிளைவில் வியவன் ஆன கிராமத்தலைவனுக்கு உரிய பங்கு

விசம், விசதம் : விகிதம்

விசம் : செலவு

விசிகை : ரவிக்கை, மார்க்கச்சு

விசேஷாயம், விசேஷாதாயம் : அதிகமான இலாபம் ; பிரத்தியேகமான வரித் தொகுதி

விஞ்சனம் : வெஞ்சனம் பார்க்க

விட்டவன்விழுக்காடு : கோயிலில் பூசைக்கட்டளை ஏற்படுத்தியவனுக்கு நிவேதனப்பொருளில் உரிய பங்கு ; அவன்சார்பாக வேறு ஒரு வருக்கோ பலருக்கோ அளிக்கப்பெறுவதையும் குறிக்கும் ; விட்ட விழுக்காடு எனவும் பெறும்

விடங்கு : அரைப்பட்டிகை முதலிய ஆபரணங்களின் உறுப்பு

விடுதல் : கொடுத்தல், அளித்தல், தானம் பண்ணுதல்

விடுதீட்டு : தானபத்திரம்

விடுபேறு : பிறர்க்குத் தானமாக விடப்பெற்ற நிலம்

விடேல்விடுகு : பல்லவ அரசன் சிறப்புப் பெயர் ; பல்லவ அரசன் ஆணையையும் குறிக்கும்

விடைப்பேர், விடைப்பேறு : கால்நடைச் செல்வம் ; அதற்கான வரி யெனவும் கொள்வர் ; அரசன் உத்தரவு பெறுவதற்கு அளிக்கவேண்டி யவை

விடைபோர் : கால்நடையைக் கவர்வதற்காக நடத்தும்போர் ; ஆனிரை கவர்தல்

விடையதிகாரி(கள்), விடையில் அதிகாரி(கள்): *அரசன் உத்தரவுகளை விடுக்கும் அதிகாரிகள்*

விண்ணகரம்: *விஷ்ணுகிருகம்; விஷ்ணு ஆலயம்*

விண்ணப்பம்: *அரசன் முன் பணிந்து கூறும் அறிவிப்பு; கடவுள் முன் பாசுரம் ஓதுதல்*

வித்தியாஸ்தானம்: *வித்தியாசாலை*

வித்தியாநுபோகம்: *பாடசாலைக்காக விட்ட மானியம்*

வித்துப்பாடு: *ஓரளவு விதை விதைப்பதற்குத் தேவையான நிலம்*

வித்துவசனம், வித்துவஜ்ஜனம்: *புலவர் கூட்டம்; வித்துவான்கள் அடங்கிய சபை*

விதம்: *மாதிரி; வகை*

விதரம்: *இரத்தினவகையில் ஒன்று*

விப்ரவிநோதி: *மாயாஜால வித்தைபுரியும் பிராமண வகுப்பினர்*

விப்ரவிநோதிவரி: *விப்ரவிநோதிகள் பராமரிப்புக்காக விதிக்கும் வரி*

விபூதி, விபூதிகாணிக்கை: *சிவன்கோயிலில் சுவாமி தரிசனத்தின் போது பக்தர்கள் விபூதிமடலில் இடும் காணிக்கை; பின்னாளில் இது அரசுக்கு உரிய வரியாக மாறியது*

விமானம்: *கர்ப்பகிருகம்; கர்ப்பகிருகம் உள்ளிட்ட கோயில்*

வியாக்யானவிருத்தி: *சாஸ்திரம் புராணம் முதலியவற்றை விரித்து உரைப்பார் வாழ்க்கைச் செலவுக்காக விட்ட மானியம்*

வியாகரணதான மண்டபம்: *திருவொற்றியூர்க் கோயிலில் உள்ளது; வியாகரணத்தைச் சிவபெருமானே உண்டாக்கினர் என்பதற்காக அதை விரித்துரைக்கும் சிவன்கோயில் மண்டபம்*

வியாபாரிநகரத்தார்: *வாணிகர் சபை*

வியாழம், வியாழவட்டம்: *குருவின் சாரத்தைக்கொண்டு கணக்கிடும் பன்னிரண்டு வருஷ வட்டம்; அந்த அந்த இராசியில் குரு இருப்பது மேஷவியாழம் என்பதுபோல் குறிக்கப் பெறும்*

விரக்தன்: *தீவிரமான சைவமதத்தை மேற்கொண்டுள்ள துறவி*

விரதம்: *சங்கற்பம்; தீர்மானம்*

விரவுநிலம்: *கலப்பு நிலம்*

விருத்தி: *ஜீவனத்துக்காக விடப்பட்ட மானிய நிலம்*

விருத்துப்பட்டிகை: *விருத்தியாக அளிக்கப்பட்ட நிலமேபோலும்; அவ்விதம் நிலம் அளிக்கப்பெறாத சமயம் அதன் வருவாய்க்குச் சமமாக வசூலிக்கப்பெறும் கட்டணம்*

விருந்தம், விருந்தனை: *உறவினர்; மனைவி*

**விருந்தூட்டு :** சோறிடும் கடமை

**வில்பணம் :** வில் அம்பு முதலியவற்றுக்காக இறுக்கும் வரி; விற்பனை வரியாகவும் கொள்ளலாம்; விற்பணம் என்றும் எழுதப்பெறும்; வில்வரி என்பதும் இதுவே

**வில்லவர் :** வில்வீரர்; சேரர்

**வில்லாளிகள் :** வில் வீரர்கள்

**விலக்குவான் :** தடுப்பவன்; மாற்றுபவன்

**விலைகூறுதல், விலைகூவுதல் :** கிரயம் செய்வதாக விலையையும் பகிரங்கமாகத் தெரிவித்தல்; ஏலம் கூறுதல்

**விலைசிராவணை :** விலையாவணம் என்பதே

**விலைத்தண்டம் :** விற்பனையை ஒட்டி இறுக்கப் பெறும் தண்டம்

**விலைத்தரவு :** கிரய சாசனம்

**விலைத்திரவியம் :** விலைப் பொருள்

**விலைப்பிரமாண இசைவுதீட்டு :** விற்பனைக்காக இருதரப்பாரும் ஒப்புக்கொண்டு எழுதிய சீட்டு

**விலைப்பிரமாணக்கச்சாத்து :** விற்பனைக்கான கிரயசாசனத்தில் பணம் பெற்றுக் கொண்டதாகக் கையெழுத்திடுவது; கிரயசாசனம்

**விலைப்பிரமாணம் :** விலையாவணம்; கிரயசாசனம்

**விலைப்பொருள் :** விலையாக நிச்சயித்த கிரயப் பொருள்

**விலையாவணக்களரி :** கிரயசாசனங்களைப் பதிவுசெய்யும் அரசாங்கக் கச்சேரி

**விலையாவணம் :** கிரய சாசனம்; விலையோலை என்பதும் இதுவே

**விவஸ்தை, வியவஸ்தை :** முடிவு; ஒழுங்குமுறை

**விவாகப்பணம் :** கல்யாணத்துக்காக இறுக்கும் வரி; கண்ணாலக்காணம் பார்க்க

**விழாப்புறம் :** கோயிலில் திருவிழா நடத்துவதற்காக விட்ட மானிய நிலம்

**விழுதல் :** கழிதல்

**விழு :** விஷு; சித்திரை ஐப்பசி மாதப் பிறப்புகள்

**விழுக்காடு :** வீதம்; பங்கு

**விளக்குக்குடிமக்கள் :** கோயில் விளக்கு ஏற்றும் பணியைக் கொண்டு அதற்கான மானியத்தை அனுபவிக்கும் குடிமக்கள்

**விளக்குதல் :** ஆபரணத்தில் உள்ளது போலப் பொடிவைத்துப் பற்ற வைத்தல்

விளக்குமாடம்: விளக்கு வைக்கும் சுவர் புரை; கோயிலில் விளக்கு ஏற்றும் இடம்
விற்கண்டம்: கட்டடத்தில் வில் போல் வளைவாக உள்ள பாகம்
விற்காயம்: வில்பணம் என்பதன் வேறு பெயரே போலும்
விற்பிடி: கிரய சாசனம்; அதற்கான குறிப்பு
விணுப்போக்குதல்: கேள்வி கேட்டல்
வினியோகம்: உபயோகம்; செலவு; அதற்கான கட்டணம்
விஜயஸ்தம்பம்: வெற்றித் தூண்
விஜயாபிஷேகம்: வெற்றிவீரனுக நடத்தும் மகுடாபிஷேகம்
விஷ்ணுகிருகம்: விஷ்ணு ஆலயம்
விஷயம்: நாட்டின் நிர்வாகப் பகுதி, மண்டலம் போன்றது
விஷவிருத்தி: விஷவைத்தியனுக்காக விட்ட மானியநிலம்; விஷஹர போகம் என்பதும் இதுவே

வீசக்கணக்கு: கணக்கு வகை; பீஜகணிதம் போலும்
வீட்டுத்தேவை: நாட்டுத் தேவையினின்றும் வேருனது; ஊர்ச்சபைக் குரிய வரிவகை
வீட்டோடுங் கூட்டோடும்: வீடுமுழுவதும்; வீட்டாரும் சுற்றத்தாரும்
வீடாயிருத்தல்: தங்கியிருத்தல்
வீணைக்காணி: கோயிலில் பூசைவேளையில் வீணைவாசிக்கும் உரிமை; அதற்கான மானியம்
வீர(க்)கல்: இறந்துபட்ட வீரர்க்கு எழுப்பிய கல்; நடுகல் பார்க்க
வீரக்கொடியார்: நானுதேசிகளில் ஒருவகையார்; படைத்தொழிலில் ஈடுபட்டவர்
வீரகணத்தார்: வீரர் சமூகம்; ஜைனரில் ஒரு பிரிவையும் குறிக்கும்
வீரசம்பன்குளிகை: சம்புவராயர் அச்சிட்டு வழங்கிய நாணயம்
வீர சாசனம்: வீரர்க்கு அளிக்கும் நிலமானியம்
வீரசேஷை: வீரக்கல்லுக்காக இறுக்கும் வரி போலும்; இறந்த வீரரின் வமிசத்தார் வாழ்க்கைக்கு விட்ட மானியம்
வீரணுக்கன்: அரசனுக்குப் பக்கத்தில் இருந்து தொண்டு செய்யும் வீரன்
வீரபஞ்சரன் காசு: முன்னுளில் வழங்கிய நாணய வகை
வீரபட்டணம்: நானுதேசிகளில் ஒரு பிரிவினர் வாழும் நகரம்
வீரபட்டம்: வெற்றிக்கு அறிகுறியாக நெற்றியில் அணியும் பொன் தகடு

**வீரபணஜிகர் :** வீரவளஞ்சியர் பார்க்க

**வீரபாஞ்சாலர் :** பதினெட்டுவகைத் தொழிலாளர்; அவர்களுடைய மகாசபை

**வீரபோகம் :** வீரர்களுடைய அனுபோகத்துக்கு விட்ட மானியம்

**வீரமாலை :** ஒருவனுடைய வெற்றியைப் புகழ்ந்து பாடும் பாமாலை; அவ்வகைப் பாடல்கள் வெண்பாவாக அமைந்தால் வீரவெண்பா மாலை எனப்பெறும்

**வீரமுடி :** வீரனாக அபிஷேகம் செய்யும்போது தரிக்கும் கிரீடம்

**வீரவளஞ்சியர் :** துணிவுடன் வாணிகம் நடத்தும் வளஞ்சியர்

**வீராபிஷேகம் :** வெற்றியின் முடிவில் வீரனாக நடக்கும் மகுடாபிஷேகம்

**வெச்சமுது :** சமைத்த உணவு

**வெஞ்சனபண்டாரம், வெஞ்சனம் :** சமைத்த கறியுணவு; கறிக்கு உதவும் பண்டம்

**வெட்டாள் :** வெட்டியே போலும்

**வெட்டி :** வழி, பாதை

**வெட்டி :** ஊரிலே பொதுக் காரியங்களுக்கு, பொது மராமத்து வேலைகளுக்குக் கூலி இல்லாமல் செய்யும் ஊழியம்; அதுபற்றி ஊர்ச் சபைக்கு இறுக்கும் கடமையும் ஆகும்

**வெட்டிக்காசு :** வேதனை பார்க்க; வெட்டிப்பாட்டம் என்பதும் இதுவே போலும்

**வெட்டிச்சோறு :** கிராமத்தின் வெட்டிவேலை செய்பவர்களுக்குச் சோறிடும் கடமை

**வெட்டித்தனியாள் :** வெட்டிவேலை மேற்பார்வை இடுபவன்போலும்

**வெட்டிநிலை :** வாய்க்கால் வெட்டு, வழியைச் செப்பனிடுதல் போன்ற கிராமப் பொது வேலைகளுக்குக் கூலியில்லாமல் செய்யும் வேலை

**வெட்டிப்புடவை :** வெட்டிக்கு ஆண்டுதோறும் அளிக்கும் ஆடை

**வெட்டிப்பேறு :** வெட்டிவேலை செய்பவருக்கு உரிய பேறு

**வெட்டியாள் :** வெட்டி பார்க்க

**வெட்டிமுட்டாவாள், வெட்டிமுட்டையாள் :** கிராமத்தின் பொது வேலைக்கு அது முடிவடையும் வரையில் இடையறுமல் (முட்டாமல்) வேலை செய்வதற்கு அனுப்பப் பெறும் ஆள்

**வெட்டிவரி :** வெட்டிக்காசு பார்க்க

**வெட்டிவேதனை, வெட்டிவேதினை :** வேதனை பார்க்க

வெண்ணெய்க்கூத்தன் : கிருஷ்ணபகவான்

வேள்ளாட்டி : பணிப்பெண்; வேலைக்காரி (பின்னாளில் ஆசைக் கிழத்தியான வைப்பாட்டியையும் குறிக்கும்)

வெள்ளான் : உழுது பயிரிடுவோன்

வெள்ளான் இறை : பயிர் இடுவதற்கான வரி

வெள்ளான்வகை : வேளாண் மக்களுக்கு உரிய நிலம், கிராமம் முதலியன ; ரயத்துவாரி வகையைச் சேர்ந்தது

வெள்ளான்வெட்டி : வயலில் குழி வெட்டுவது போன்ற வெட்டி வேலை

வெள்ளிலைப்பற்று : வெற்றிலைக் கட்டு

வெள்ளிலையமுது, வெற்றிலையமுது : கடவுளுக்குப் படைக்கும் தாம்பூலம்

வெளிச்சப்பாடு : ஆவேசம் வந்து குறி சொல்லுவது

வெளுங்கு : ஒருவகை மரம்

வெள்ளைவாசி : கெடுவட்டி, சாதாரண வட்டி

வெள்ளைவாரி : (நிலம் வெள்ளைவாரி எனவும் காணப்படும்) வெள்ளம் போன்ற காலங்களில் நிலத்தில் வண்டல் படிந்து மேடிட்டுப் போவதை பின்னால் வாரிச் சமன் செய்வது ; அதற்கான வரியையும் குறிக்கும்

வென்றநாமங்கொடுத்தல் : போரில் தோற்றவனுக்கு வெற்றியடைந்த அரசன் பெயரைச் சூட்டுதல்

வெஜ்ஜம் : மாணிக்கக் குற்றத்துள் ஒன்று, துவாரமுள்ளது போலும்

வேகாரி : வெட்டி என்பதனுடன் சேர்ந்தே காணப்படும் ; கட்டாயமாகச் செய்யவேண்டிய ஊழியம் ; வேசாரி, வேசாலி என்ற உருவங்களிலும் காணப்படும்

வேட்கோன் : குயவன்

வேண்டுகோள் : அரசனுக்கோ அரசாங்க அதிகாரிகளுக்கோ அனுப்பும் விண்ணப்பம் ; மனு ; அதற்காகச் செலுத்தும் வரி வேண்டுகோள் வரி எனவும் பெறும்

வேணாட்டடிகள் : வேணாடு என்னும் பகுதியின் அரசன்

வேதவிருத்தி : வேதம் ஓதுவதற்கான செலவுக்கு விட்ட மானிய நிலம்

வேதனம், வேதனை, வேதினை : (பெரும்பாலும் வெட்டி என்பதனுடன் சேர்ந்தே காணப்படும்) கூலி, சம்பளம்

வேதினை : வேதினை என்றே வாசிக்க வேண்டும் போலும்

**வேய்நெல்(லு) :** மூங்கில் அரிசி; அதைச் சேகரித்தல்; அரசருக்கு அதைக் காணிக்கையாக அளித்தல்

**வேயதிகாணம் :** கூரை வேய்ந்த வீட்டிற்கான வரி போலும்; மாடி வீட்டிற்கான வரி என்றும் கொள்ளலாம்

**வேர்வாளி :** முன்னாளில் வழங்கிவந்த காதணி வகை

**வேலாதுர்க்கபாலர் :** கடல் துறைமுக அதிகாரி

**வேலிக்காசு :** முன்னாளில் வழங்கிவந்த வரிவகை; வேலி நிலத்துக்கு எனக் கொடுக்கவேண்டியது போலும்; வேலிப்பயறு என்பதும் இதுபற்றியதே

**வேலிக்குழிப்பணம் :** வேலிக் காசே போலும்

**வேலிநாயகம் :** கிராமத்திலே பயிரிடும் நிலங்களைக் கண்காணிக்கும் அதிகாரி

**வேள்புலம் :** சாளுக்கிய தேசம்

**வேளம் :** அரண்மனையின் அந்தப்புரம்; பட்டமகிஷிகள் அல்லாத அரசனுடைய மற்றத் தேவிகள் இருக்குமிடம்; அந்தப்புர ஊழியம்; அவ்விதம் பணிபுரிவோர்

**வேளார்படை :** வேளாருடைய படை; வேளைக்காரரோடு ஏதோ ஒரு வகையில் தொடர்பு உள்ளது போலும்

**வேளான்(ர்) :** முன்னாளிலே அரசியல் அதிகாரிகளுக்குச் சோழமன்னர்கள் வழங்கிய சிறப்புப் பெயர்; அவர்கள் ஆதியில் வேளத்தைச் சேர்ந்தவர்கள் போலும்; பெரும்பாலும் அவர்கள் திறமைவாய்ந்த அதிகாரிகளாகவே காணப்படுவர்

**வேளைக்காரர் :** அரசருக்கு வேளைப்படி உரிய பணியைச் செய்வதாக ஏற்றுக்கொண்டு அவ்விதம் செய்ய இயலாதபோது உயிரை மாய்த்துக் கொள்வதாக விரதம் பூண்டவர்; வீரமும் விசுவாசமும் நிறைந்தபடை

**வைகல் :** தங்குதல்

**வைச்சமுது :** வெச்சமுது பார்க்க

**வைச்சமுது மண்டபம் :** கோயில் மடைப்பள்ளி

**வைசியவாணிய நகரத்தார் :** வணிகர்களுள் ஒரு பிரிவினரின் சபை

**வைத்தியபாகம், வைத்தியபோகம் :** ஊரிலே நிரந்தரமாகத் தங்கி வைத்தியம் செய்பவருக்காக ஒதுக்கப்பட்ட மானிய நிலம்; வைத்திய விருத்தி எனவும் பெறும்

**வைத்தியபுரந்தரன் :** வைத்தியம் வல்லானுக்கு முன்னாளில் அரசர் வழங்கிய பட்டப்பெயர்

ஜைப்பு : வேம்பு

வையகத்தார்கல் : நிர்ணய எடை உள்ளதும் ஊர்ச்சபையின் பராமரிப்பில் இருப்பதுமான எடைக்கல்

ஜகதீ, ஜகதிப்படை : கோயில் கருங்கல் கட்டடத்தில் அஸ்திவாரத்தின் மேற்பகுதி

ஜங்கமன் : வீரசைவரிடையே ஆசாரியப் பதவி வகிப்பவர்

ஜயபத்திரம் : விவாதத்தில் வெற்றியைக் குறிக்கும் பத்திரம்; விவாதத் தீர்ப்பு; வழக்கின் முடிவு; ஜயரேகைப்பத்திரம் எனவும் பெறும்

ஜயபாலர் : வாணிகருள் ஒருவகையினர்

ஜயஸ்தம்பம் : வெற்றித்தூண்

ஜலபவித்திரம் : அபிஷேக காலத்தில் விக்கிரகத்துக்கு அணியும் ஆடை

ஜலயந்திரம் : யந்திரம் பார்க்க

ஜன்மக்காணி : பிறப்புரிமை; ஜன்மபூமி பார்க்க

ஜன்மபூமி : தானம் அளிக்கப் பெற்ற நிலம்; பெரும்பாலும் ஜீவதசை உள்ளவரையில் அனுபவிப்பதற்காக அளிக்கப் பெறுவது

ஜனப்பிரதானி : நாட்டை ஆளும் மந்திரி

ஜாதகக்குடி : தங்கள் வாழ்நாள் முழுவதும் கோயில்போன்ற இடத்தில் ஊழியம் செய்வதாக ஏற்றுக்கொண்ட குடிமக்கள்

ஜாதகதக்ஷிணை : கிருஷ்ணன் பிறந்த நாளில் வித்துவான்களுக்குத் தக்ஷிணையாக வழங்கும் சம்மானம்

ஜானி : சானி என்பதன் வேறு வடிவம்

ஜிஷ்ணு : விஷ்ணு

ஜீயங்கார், ஜீயர் : வைஷ்ணவத் துறவி; பெரும்பாலும் கோயில் நிர்வாகத்தை மேற்கொண்டிருப்பவர்

ஜீவனம் : வாழ்க்கை நடத்துவதற்குத் தேவையானது; ஜீவனோபாயம்; அதற்காக அளித்த நிலம்; ஜீவனசேஷம் எனவும் பெறும்

ஜீவிதக்காரர் : ஜீவிதப் பற்று நிலத்தை அனுபவிப்பவர்

ஜீவிதம் : சில குறிப்பிட்ட ஊழியங்களுக்குச் சம்பளத்துக்குப் பதில் அனுபோக பாத்தியதை மட்டும் உள்ளதாக அளிக்கப்பெற்ற நிலம்; ஜீவியம் எனவும் பெறும்

ஜீவிதப்பற்று : ஜீவிதமாக அடைந்து அனுபவிக்கப் பெறும் நிலம்

ஜோடி : குறைந்த விகிதத் தீர்வையில் அளிக்கப்பட்ட மானிய நிலம்

ஜோனகன் : முகம்மதியன்

ஶ்ரமணன் : ஜைன சந்நியாசி; பௌத்த பிக்ஷு

ஸ்ரீகாரியக் கண்காணி : சீகாரியக் கண்காணி பார்க்க
ஸ்ரீகாரியம் : சீகாரியம் பார்க்க
ஸ்ரீகோயில் : கர்ப்பகிருகம்; கோயிலைப் பக்தியுடன் தெரிவிப்பதும் ஆகும்
ஸ்ரீசந்தம் : நகைவகை
ஸ்ரீபண்டாரம் : சீபண்டாரம் பார்க்க
ஸ்ரீபண்டாரி : கோயில் பொக்கிஷத்தை நிர்வகிக்கும் அதிகாரி
ஸ்ரீபலிப்பட்டி : கோயிலில் பலிபூஜை நடத்துவதற்காகவிட்ட மானிய நிலம் அல்லது கிராமம்
ஸ்ரீபாதங்கள் : துறவிகளைக் குறிக்கும் மரியாதைச்சொல்
ஸ்ரீபாதந்தாங்கி : சீபாதம்தாங்கி பார்க்க
ஸ்ரீபீடம் : கோயில் விக்கிரகங்களின் பீடம்
ஸ்ரீமாஹேச்வரர் : சிவனடியார்; கோயில் நிர்வாகத்தில் பங்கு உள்ள குழுவினர்
ஸ்ரீயக்கி பழஞ்சலாகை யச்சு : சலாகை பார்க்க
ஸ்ரீயாஞ்ஜை : அரசன் ஆணை
ஸ்ரீருத்திரர் : சீருத்திரர் பார்க்க
ஸ்ரீவிமானம் : கர்ப்பகிருகம்; விமானம் பார்க்க

ஶ்ருதிமான் : கேள்வி வல்லார்; சமூகத் தலைவர்

ஷட்காலம் : விடியல், காலை, உச்சி, சந்தி, ராத்திரி, அர்த்த சாமம் ஆகிய ஆறு கால(ங்களில் நடக்கும் கோயில் பூஜை)
ஷஹர் : (பாரசீகச் சொல்) நகரம்

ஸ்கந்தாவாரம் : விஜயஸ்கந்தாவாரம் எனவும் படும்; வெற்றியோடு அரசன் பாடி இறங்கியிருக்கும் இடம்
ஸ்தலக்காவல் : தலக்காவல் பார்க்க
ஸ்தானீகன் : தானிகர் பார்க்க
ஸ்தூபிக்குடம் : விமானத்தின் உச்சியில் வைக்கும் கலசம்
ஸ்நபனம் : திருமஞ்சனம்; அபிஷேகம்; நமன மண்டபம் பார்க்க
ஸ்வர்ணதயம் : சுவர்ணதாயம் பார்க்க
ஸ்வஸ்திஸ்ரீ : சாசனத் துவக்கத்தில் உள்ள மங்கலச் சொல்
ஸ்வாமிவாரம் : சுவாமிவாரம் பார்க்க

ஸததம்: எப்போதும்
ஸந்ததி ப்ரவேசம்: சந்ததிப் பிரவேசம் பார்க்க
ஸந்தியா தீபம்: சந்தியாதீபம் பார்க்க
ஸமஸ்த ப்ராபதி: எல்லா வருவாய்களும்
ஸமிஞ்ஞை: (அடையாளம்) கையெழுத்து
ஸமுதாயம்: கோயில் காரியத்தை நிர்வகிக்கும் சபை; சமுதாயம் பார்க்க
ஸமுதாயத் தானம்: கோயில் காரியத்தை நிர்வகிக்கும் சபையின் உறுப்பினர் பதவி
ஸர்வமான்யம்: சர்வமானியம் பார்க்க
ஸர்வஸ்வம்: எல்லாப் பொருள்களும்
ஸர்வஸ்வஹரணம்: சொத்து முழுவதையும் பறிமுதல் செய்தல்
ஸவர்ண விருத்தி: பத்திரம் எழுதும் தொழில்

ஸாதனம்: சாசனம்; ஆதாரம்
ஸாமந்தன்: சாமந்தர் பார்க்க

ஸித்தாந்தம்: (முடிந்த முடிவு) சைவ மதம்; ஜைன மதத்தையும் குறிக்கும்

ஸேனபதி: சேனபதியாழ்வார் பார்க்க
ஸேனபதிப் பெருவிலை: சேனபதிப் பெருவிலை பார்க்க
ஸோபானம்: படி: கோயில் கட்டடத்தின் அடிப்பாகம்

ஹரிதினம்: சனிக்கிழமை; ஏகாதசியையும் குறிக்கும்
ஹவிர்பலி: சீபலி பார்க்க
ஹளாஹளம்: மாணிக்க வகை

ஹூதஞ் செய்தல்: ஆஹூதி செய்தல்; ஹோமம் செய்தல்

க்ஷேத்திரபாலர்: கிராமதேவதை; ஊரைக் காக்கும் தெய்வம்

---

**பிற்குறிப்பு:**

எச்சோறு: சோறு இடும் கடமையைக் குறிப்பதாகக் கல் வெட்டுக்களிலே புள்ளிச்சோறு, திங்கட்சோறு, வெட்டிச்சோறு, வரிச்சோறு என்பவைபோல் பலவகைச் சொற்கள் காணப்படுகின்றன. ஆகவே இச் சொல் 'எவ்வகையான சோறும்' என்றே பொருள்படுமோ வென்று எண்ணத் தோன்றுகிறது.

---

# THE TAMIL PALAEOGRAPHY

## I. INTRODUCTORY

There are many languages in our country and each language has its own script. In South India alone, we have four languages, *viz.*, Tamiḻ, Telugu, Malaiyāḷam and Kannaḍa with their respective scripts. Besides, we have the Grantha script, a variety of Tamiḻ, used in the Tamiḻ-nāḍu for writing Sanskrit. In addition, to these there is also another language, Tuḷu, with no script of its own, but using the Kannaḍa script.[1] All these scripts attained their present shape and form only some three centuries ago, after the introduction of printing. The present forms of these five scripts are given in the table below.

| Roman | Tamiḻ | Grantha | Malayāḷam | Telugu | Kannaḍa |
|---|---|---|---|---|---|
| a | அ | 𑌅 | അ | అ | ಅ |
| ā | ஆ | 𑌆 | ആ | ఆ | ಆ |
| i | இ | 𑌇 | ഇ | ఇ | ಇ |
| ī | ஈ | 𑌈 | ഈ | ఈ | ಈ |
| u | உ | 𑌉 | ഉ | ఉ | ಉ |
| ū | ஊ | 𑌊 | ഊ | ఊ | ಊ |
| ṛ | ... | 𑌋 | ഋ | ఋ | ಋ |
| ṝ | ... | 𑍠 | ൠ | ౠ | ೠ |
| ḷ | ... | 𑌌 | ഌ | ఌ | ಌ |
| ḹ | ... | 𑍡 | ൡ | ౡ | ೡ |
| e | எ | ... | എ | ఎ | ಎ |
| ε | ஏ | 𑌏 | ഏ | ఏ | ಏ |
| ai | ஐ | 𑌐 | ഐ | ఐ | ಐ |
| o | ஒ | .... | ഒ | ఒ | ಒ |
| ō | ஓ | 𑌓 | .... | ఓ | ಓ |
| au | ஔ | 𑌔 | ഔ | ఔ | ಔ |
| k | ஃ | ... | .... | ... | .... |
| ḥ | .... | 𑌃 | ഃ | ః | ಃ |

1. A variety of script derived from the Grantha and known as Tuḷu is sometimes used in the area, to write Sanskrit works; but no book in the Tuḷu language is found in that script.

| Roman | Tamil | Grantha | Malayāḷam | Telugu | Kannaḍa |
|---|---|---|---|---|---|
| k | க | 𑌕 | ക | క | ಕ |
| kh | ... | 𑌖 | ഖ | ఖ | ಖ |
| g | ... | 𑌗 | ഗ | గ | ಗ |
| gh | ... | 𑌘 | ഘ | ఘ | ಘ |
| ṅ | ங | 𑌙 | ങ | ఙ | ಙ |
| c | ச | 𑌚 | ച | చ | ಚ |
| ch | ... | 𑌛 | ഛ | ఛ | ಛ |
| j | .... | 𑌜 | ജ | జ | ಜ |
| jh | .... | 𑌝 | ഝ | ఝ | ಝ |
| ñ | ஞ | 𑌞 | ഞ | ఞ | ಞ |
| ṭ | ட | 𑌟 | ട | ట | ಟ |
| ṭh | .... | 𑌠 | ഠ | ఠ | ಠ |
| ḍ | .... | 𑌡 | ഡ | డ | ಡ |
| ḍh | .... | 𑌢 | ഢ | ఢ | ಢ |
| ṇ | ண | 𑌣 | ണ | ణ | ಣ |
| t | த | 𑌤 | ത | త | ತ |
| th | ... | 𑌥 | ഥ | థ | ಥ |
| d | .... | 𑌦 | ദ | ద | ದ |
| dh | .... | 𑌧 | ധ | ధ | ಧ |
| n | ந | 𑌨 | ന | న | ನ |
| p | ப | 𑌪 | പ | ప | ಪ |
| ph | .... | 𑌫 | ഫ | ఫ | ಫ |
| b | .... | 𑌬 | ബ | బ | ಬ |
| bh | .... | 𑌭 | ഭ | భ | ಭ |
| m | ம | 𑌮 | മ | మ | ಮ |
| y | ய | 𑌯 | യ | య | ಯ |
| r | ர | 𑌰 | ര | ర | ರ |
| l | ல | 𑌲 | ല | ల | ಲ |
| v | வ | 𑌵 | വ | వ | ವ |
| ś | .... | 𑌶 | ശ | శ | ಶ |
| ṣ | .... | 𑌷 | ഷ | ష | ಷ |
| s | ... | 𑌸 | സ | స | ಸ |
| h | ... | 𑌹 | ഹ | హ | ಹ |
| ḷ | ள | 𑌳 | ള | ళ | ಳ |
| ḻ | ழ | ... | ഴ | ... | .... |
| ṟ | ற | .... | റ | ఱ | ಱ |
| ṉ | ன | .... | .... | ... | .... |

Though apparently each script appears different from the others, all these five have close affinities.

In general appearance, the Grantha and the Tamil scripts appear alike. The characters for *u, ū, ka, ṇa, ta, na, ya* and *va* are common to both of them, while the differences between the characters for *a, ā, ī, o, au, ṭa, ra, la,* and *ḷa* in both of them are very little.

Between the Grantha and the Malaiyāḷam scripts, there is no real difference, excepting that the straight lines and angles in the characters of the former are smoothened and written cursively in those of the latter.

The Telugu and the Kannaḍa scripts are practically identical. It is only the *talai-k-kaṭṭu* or the top-line that distinguishes one from the other. The *talai-k-kaṭṭu* of the Kannaḍa script is a horizontal line with a small hook at the right turning upwards, while that of the Telugu script is an angular stroke with the vertex downwards. If this *talai-k-kaṭṭu* is removed, the similarity between the Grantha and the Malaiyāḷam scripts on one hand and the Telugu and Kannaḍa scripts on the other will become easily apparent.[1]

A closer comparison will reveal that the forms of the letters *i, o, ya, ra, la* and *va* are almost the same in all these five scripts.[2] The form of *ai* in both the Telugu and the Kannaḍa scripts closely resembles that of the Tamiḻ script.

It will thus be seen that the similarity between the several scripts now prevalent in Southern India is traceable even in their present form. In the earlier inscriptions, this affinity

---

1 The Tamiḻ form of the vowel letter *a* is similar to that of the *Nāgari* script (अ) and this will be more visible if the top-line of the Nāgari letter is removed.

2 A word of caution is necessary here. In comparing the letters of one script with those of another, the forms should not be mutilated to the dictates of fancy. If this is carried too far, any script can be derived or made to look similar to any other. (*Proceedings of the Fourth All-India Oriental Conference,* vol. II, p. 626, n. 2)

is much more clear. It may therefore be concluded that one was derived from another or that all of them were derived from a common source and that they developed independently. In fact, a single script which was in use throughout India in those far off days was developed in different parts of India into different kinds of scripts after undergoing various changes.

The early inscriptions of India are found in two scripts, Brāhmī and Kharōṣṭhī. Brāhmī was usually written from left to right,[1] while Kharōṣṭhī was written from right to left. These two scripts differ not only in the directions in which they are written, but also in various other ways, as in their forms, etc. Further Kharōṣṭhī was in use in a portion of North-Western India and that too during the period anterior to the fifth century A.D., after which it disappeared. Brāhmī was in use throughout India including the region, where Kharōṣṭhī was also used simultaneously.[2]

It is this Brāhmī that is the parent of all the present Indian scripts.

Before proceeding to a systematic treatment of the evolution of the script, it is necessary for us to understand the reasons for the various changes in the different stages of the evolution. The quickness of the hand and the aesthetic instinct of the scribe as also the materials on which the records were written are the three forces which largely influenced the evolution.

Inscriptions were, in ancient days, incised on stone and copper. But palm-leaves also were largely used for writing. It is

---

1 Brāhmī inscriptions written in the reverse direction and also in the "boustrophedon" style, i.e., one line from left to right and the other from right to left have also been discovered though rarely. But the generality of the Brāhmī inscriptions are from left to right.

2 Of the inscriptions found in North-Western India, the area now included in Pakistan, anterior to the fourth century A.D. some are in Brāhmī and some in Kharōṣṭhī.

